ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# ஸ்ரீமத் கம்பராமாயணம்.

# அயோத்தியாகாண்டம்.

மூலமும் - உரையும்.



இஃது,

ம-ா-ா-ஸ்ரீ, தி. க. சோடசாவதானம்,

## சுப்பராய செட்டியார்

அவர்களால் உரையெழுதப்பட்டு,

தக்கோலம்,

## இராமசாமி நாயுடு

அவர்களால் தமது

ஸ்ரீலட்சுமிநாராயணவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

நெ. 18. தொட்டிக்கலே குமரப்பமுதலி வீதி, ஜூனி போஸ்டு, மதராஸ்.



1904.

இதன் விலை ரூபா 3 8 0. காப்பிகள்-1000.

இ-ள். கூன்உம்சிறியகோதாய்உம்கொடுமை இழைப்ப—கூனியாகிய மந்தரையும்சிற்றன்னையாகிய கைகேசியன்னையும்வஞ்சிக்க, கோல்துறந்து—அரசியலையிழந்து, கான்உம்கடல்உம்கடந்து—காட்டையுங்கடலையுங்கடந்து சென்று, இமையோர் இடுக்கண்காத்த—தேவர்கள் துன்பத்தைப்பரிகரித்த, கழல்வேந்தனை-வீரகண்டைகட்டிய அரசகுலத்திற்பிறந்த ஸ்ரீராமமூர்த்தியை, வான்நின்று இழிந்து-பரமாகாயத்தினின்றுதோன்றி, வரம்புஇகந்ததாதத்து இன்வைப்புஎங்கும்உம்—எல்லையில்லாதபரந்தமகாபூதங்களாகிய ஆகாயம், தேயு, வாயு, அப்பு, பிருதிவியென்னும்பொருள்களிலெல்விடத்திலும், ஊன்உம் உயிர்உம் உணர்உம்போல்—உடலும் உயிரும் இவ்விரண்டுங்கூடி யுணரும் அறிவுமாகியமாய்நிற்றல்போல, உள்உம்புறத்துஉம்உளன்என்ப—அகத்தும் புறத்தும் நிறைந்துளனென்று அறிவுடையோர்கூறுவார்.

தன்னிடத்துநின்றுபிரபஞ்சந்தோன்றுதலால் வானின்றிழிந்தெனவும், எங்கும்பரந்திருத்தலால் மாபூதம்எனவும், தானும்பிரபஞ்சமும் அநந்நியமாய்நி ற்றலால் ஊனுமுயிரு முணர்வும்போல்எனவும், முற்றுமுணர் தற்றன்மையா லுள்ளும் புறத்துமுளன் எனவுங்கூறினர். கொடுமையிழைப்ப ஒருசொல். இமையோரிடுக்கணாவது இராவணாதிமுதலியோரால் தேவர்களுக்குவந்த துன்பம். கோலாகியகாரணத்தால் அரசியலாகிய காரியத்தையுபசரித்தலால் உபசாரவழக்கு. ஊன்காரியமாகிய உடல்மேல் நிற்றலால் காரணவாகுபெயர். கூன்பண்பியாகிய கூனிமேல்நிற்றலால் பண்பாகுபெயர். இகந்த,காத்த இறந்தகாலவினையெச்சங்கள் இக, காபகுதிகள். இதனாற்காப்பியத்தலைவன்வாழ்த்துக்கூறினர், இக்காப்பியத்தில் நிகழ்ந்தசெய்தி அவராலாதலால்.

கலிவிருத்தம்.

மண்ணுறுமுரசினமழையினார்ப்புறப்
பண்ணுறுபடர்சினப்பருமயானையான்
கண்ணுறுகவரியின் கற்றைசுற்றுற
எண்ணுறுசூழ்ச்சியினிருக்கையெய்தினன்.

இ-ள். பண்உறு—அலங்காரமமைந்த,படர்சினம் பருமம் யானையான்—மதத்தான்மிக்க கோபத்தையுங் கவசத்தையு முடைய யானைச்சேனையையுடைய தசரதச்சக்கரவர்த்தி, மண்உறும் முரசு இனம்—ஒப்பனையமைந்த முரசின்கூட்டங்கள், மழையின் ஆர்ப்புஉற—மேகத்தைப்போல ஒலிக்கவும், கண்ணுறு—யாவராலுங் கருதப்படும், கவரியின் கற்றைசுற்றுற—கற்றையாயுள்ள சாமரைகள்சூழவும், எண்ணுறு சூழ்ச்சியின் இருக்கையெய்தினன்—ஆலோசிக்கும் ஆலோசனை மண்டபத்தை யடைந்தனர்.

ஆர்ப்புற, சுற்றுற, கண்ணுறு, எண்ணுறு ஒருமொழிகள். கவரியின்கற்றை இன்வேண்டாவழிச்சாரியை. (1)

புக்கபின்னிருபம்பொருவில்சுற்றமும்
பக்கமும்பெயர்கெனப்பரிவினீக்கினன்
ஒக்கநின்றுலகளித்தியோகினெய்திய
சக்கரத்தவனைத்தமியனாயினன்.

இ-ள். புக்கபின்—அடைந்தபின்பு, நிருபர்உம் பொருவுஇல் சுற்றம் உம் பக்கம்உம்—அரசர்களும் ஒப்பில்லாதசுற்றத்தாரும் அவரொழிந்தஅயலி னரும், பெயர்கஎனபரிவு இன்நீக்கினன்—இங்குநின்று நீங்கக்கடவீரென்று அன்போடு அவர்களை நீக்கி, உலகுஒக்கநின்றுஅளித்து—உயிர்களோடுகூடநி ன்றுபாதுகாத்து, யோகுஇன் எய்தியசக்கரத்தவன் என்ன—(சம்மாரகாலத் தில்வைகளைத்திருவுதரத்திலடக்கி) அறிதுயிலமர்ந்ததிருமால்போல, தனியன் ஆயினன்—தசரதச்சக்கரவர்த்திதான் தனியனாயிருந்தனன்.

பக்கம்என்றதை மந்திரிகளென்பாரும்உளர். ஆலோசனை மண்டபத்தை யடைந்தவன் மந்திரிகளை விலக்கவேண்டாமைகாண்க. சுற்றம்சூழ்தல் என நிற்றலால் தொழிலாகுபெயர். பக்கம் அயலினர்மேல்நிற்றலால்இடவாகுபெ யர். நீக்கினன் முற்றெச்சம் யோகம்யோகுகடைக்குறை. ஒக்க இடைச் சொல்லடியாகப்பிறந்த நிகழ்காலவினையெச்சம் ஒ பகுதி. கு சாரியை, ககரத் தோற்றமும் உகரக்கேடும்சந்தி, அ எச்சவிகுதி. யோகினெய்தியசக்கரத்தவ னெனத் தனியனாயினன் என்றகுறிப்பால் இராமமூர்த்தியைப் பிரிதல்மேல் நிற்றல்காண்க. பெயர்கவியங்கோளீறுதொக்கது. (2)

சந்திரற்குவமைசெய்தரளவெண்குடை
அந்தரத்தளவுநின்றளிக்குமாணையான்
இந்திரற்கிமையவர்குருவையேய்ந்ததன்
மந்திரக்கிழவரைவருகென்றேவினான்.

இ-ள். சந்திரற்கு உவமைசெய்தரளம் வெண்குடை—சந்திரனுக்கு உவமையாக்கிக்கூறும் முத்தாலமைந்த தவளக்குடை, அந்தரத்து அளவுஉம் நின்றுஅளிக்கும் ஆணையான்—விண்ணுலகளவும் நிலைபெறப்பாதுகாக்கும் ஆக்கினையையுடைய தசரதச்சக்கரவர்த்தி, இந்திரற்கு இமையவர்குருவை ஏய் ந்ததன் மந்திரம்கிழவரை—தேவேந்திரனுக்கு அமைச்சியல்பூண்டவியாழனை யொத்த தன்மந்திரிகளை, வருகஎன்றுஏவினான்—வரக்கடவீரென்று தூதுவ ரையனுப்பினான்.

இமையவர் குருதேவகுரு. மந்திரக்கிழவர் இரகசிய ஆலோசனைக்குஉரி யவர். நின்றுசெயவெனச்சத்திரிபு. ஏய்ந்த உவமவுருபிடைச்சொல்லடியா கப்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம். ஏய் பகுதி. நகர மெய்சந்தி, தகரமெ ய்இடைநிலை, அ விகுதி. நிலவுலகன்றி விண்ணுலகுக்கும் நிழல்செய்வோன் என்பார்வெண்குடை அந்தரத்தளவுநின்றுஎன்றார். இதனால்இந்திரன்பகைவ னாகிய சம்பராசுரனையொறுத்துக்காத்ததைக்கூறினார். மேற்றொட்டேஉவமை யாய்வருவதனைப் பொருளாக்கிப் பொருளாய்வருவதனையுவமையாக்கிச் சந் திரற்குவமைசெய்தரள வெண்குடைஎன்றது விபரீதவுவமையணி. இதனைவ டநூலார் பிரதீபாலங்காரம் என்பர். (3)

பூவருபொலன்கழற்பொருவின்மன்னவன்
காவலினனையின்கடவுளாமெனத்
தேவருமுனிவருமுணருந்தேவர்கள்
மூவரினல்வராமுனிவர்தெய்தினான்.

இ-ள். பூவருபொலன்கழல் பொருவு இல்மன்னவன் காவலின்—பொலிவமைந்த பொன்னாற்செய்த வீரகண்டைகட்டிய ஒப்பிலாத தசரதச்சக்கரவர்த்தியின் காவலிற்பட்ட, ஆணைகடவுள் ஆம்என்ன—ஆக்கினைதெய்வமென்றுசொல்ல, தேவரும்முனிவரும் உணரும் தேவர்கள்மூவர்இன்—தேவர்களுமுனிவர்களுமாராய்ந்துதுதிக்கும் பிரமன் விஷ்ணுஉருத்திரன் என்னு மூவர்களோடு, நால்வர் ஆம்முனிவன்வந்து எய்தினன்— (இவரும் ஒருவர் என்றெண்ணப்படுதலால்) நால்வராகிய வசிட்டமுனிவர் வந்தடைந்தனர்.

அரசனாணை இவனால் நடப்பதென்பார் ஆணையின் கடவுளாமெனவும், அருளால்ளித்தலும் வெகுளியாலழித்தலு முடையவனென்பார் நால்வராமுனியெனவுங்கூறினார். ஆணையின்கடவுள். இன்வேண்டா வழிச்சாரியைபொன்என்னுஞ்சொல். ஈற்றெழுத்துக் கெட லகரமும்மகரமும் பெற்றுப்பொலம் எனநின்றது, இது இறுதிநிலைப்போலியாய்ப்பொலன் எனவந்தது "பொன்னென்கிளவியீறுகெடமுறையின்—முன்னர்த்தோன்றும் லகாரம்மகாரம் செய்யுண்மருங்கிற் றொடரியலான" என்பதுதொல்காப்பியச்சூத்திரம். (4)

குலமுதற்றொன்மையுங்கலையின்குப்பையும்
பலமுதற்கேள்வியும்பயனுமெய்தினார்
நலமுதனலியினும்நடுவுநோக்குவார்
சலமுதலறுத்தருந்தருமந்தாங்கினார்.

இ-ள். குலம்முதல்தொன்மைஉம்—நல்லகுலத்திற்பிறத்தல் முதலாகியபழமையையும், கலைஇன்குப்பைஉம்—மநுநூலாராய்ச்சியின் மிகுதியையும், முதல் பலகேள்விஉம்—முதன்மையாகிய பலநூல்கேள்வியையும், பயன்உம் எய்தினார்—அந்நூற்கேள்வியால்வரும் பயனையும் பொருந்தினவரும், நலம்முதல்நலியினும்; தமக்குவரும் பயன்முதலியகெட்டாலும், நடுவுநோக்குவார்—நடுநிலைமைமேற் கண்ணோடுவாரும், சலம்முதல்அறுத்து—தீயதொழில்முதலியவற்றையொழித்து, அருந்தருமம்தாங்கினார்—பெறுதற்கரிய தருமநெறியைமேற் கொண்டவரும்.

மந்திரிகள் அமைச்சியல்பூணற்குரியகுலத்தினராயிருக்கவேண்டுதலால் குலமுதற்றொன்மையும் எனவும், மநுநூல்களைக்கற்றறியவேண்டுதலால்கலையின்குப்பையும் எனவும், கேள்வியால் பலவற்றையும் அறிதலால் பலமுதற்கேள்வியும் எனவும். தமக்குக்கேடுவரினும் அரசர்க்கு உறுதிசூழவேண்டுதலால் நலமுதல் நலியினும் நடுவுநோக்குவார் எனவும், மந்திரிகள் தீவினைகளைத்தவிர்த்து நல்வினைகளைச் செய்யவேண்டுதலால் சலமுதலறுத்தருந் தருமந்தாங்கினார் எனவுங்கூறினார். (5)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

உற்றதுகொண்டுமேல்வந்துறுபொருளுணருங்கோளார்
மற்றதுவினையின்வந்ததாயினும்மாற்றலாற்றும்
பெற்றியர்பிறப்பின்மேன்மைப்பெரியவரரியநூலுங்
கற்றவர்மானநோக்கிற்கவரிமாவனையநீரார்.

இ-ள். உற்றதுகொண்டு—(தமதுதொழிலால்) வந்தபயனைமுன்னே யறிந்து, மேல்வந்துஉறுபொருள் உணரும்கோளார்—இனி அத்தொழிலால் வரும்பயனையாராய்ந்துசெய்யுங்கொள்கையையுடையவரும், மற்றுஅதுவினை யின்வந்தது ஆயின்உம்—அவ்வாறன்றி அத்தொழிலால் வரும்பயன் ஊழால் வந்ததானாலும், மாற்றல் ஆற்றும் பெற்றியர்—(விடாமுயற்சியால்) அதனைப் போக்குந்தன்மையையுடையவரும், பிறப்பின்மேன்மைபெரியவர்—நற்குடி யிற்பிறந்தபெரியோரும், அரியநூலும் கற்றவர்—நுண்ணியபொருளமைந்த நூல்களைக்கற்றுணர்ந்தவரும், மானம்நோக்கில் கவரிமா அனையநீரார்—தாங் கொண்டமானத்தைக் காத்தலைநோக்கில் கவரிமானையொத்த தன்மையை யுடையவரும்.

மற்று வினைமாற்றுப்பொருளில்வந்த இடைச்சொல். ஊழ் ஒருகாலாக இருகாலாக அல்லது விலக்காமையால் பலகால் ஒருதொழிலை ஆலோசனை யாலும் பிறர் வலிமுதலியன அறியுநுண்ணறிவாலும் பலகால் முயலுதலின் மாற்றலாற்றும்பெற்றியர்எனவும், கவரிமான்தன்னுயிரினும் தன்மயிர்த்திரள் சிறந்ததாக அதனைக்காத்தலும் அதிலொருமயிர் நீங்குங்காலம்வரில் உயிர்விடு லும்போல எல்லாநற்குணங்களினு மானஞ்சிறந்ததென அதனைக் காத்தலும் அதற்குக் கெடுதிவருங்காலவரி னுயிர்விடுதலுமுடைமையால் மானநோக்கிற் கவரிமாவனைநீரார் எனவுங்கூறினர் இந்த எடுத்துக்காட்டுவமையணி அவர் க்கு இயல்பென்பதை யுணர்த்திநின்றது "மயிர்நீப்பின் வாழாக்கவரிமாவன் னார்—உயிர்நீப்பர்மானம்வரின்" என்னுந்திருக்குறளாலறிக. மாற்றலாற்றும் ஒருசொல், உற்றதுசெயப்படு பொருள்மேல் நிற்றலால்வினைமுற்றுப்பெயர் உம்மை இரண்டனுள்முன்னது சிறுபான்மைமேலும், பின்னது உயர்வுசிற ப்பின்மேலு நின்றன. (௬)

காலமுமிடனுமேற்றகருவியுந்தெரியக்கற்ற
நாலுறநோக்கித்தெய்வநுணித்தறங்குணித்தமேலோர்
சீலமும்புகழ்க்குவேண்டுஞ்செய்கையுந்தெரிந்துகொண்டு
பால்வருமுறுதியாவுந்தலைவற்குப்பயக்குநீரார்.

இ-ள். காலம்உம்—தமக்காகும் காலமும் பகைவர்க்காகுங் காலமும், இடம்உம்—தாம்வெல்லுமிடமும் பகைவர்வெல்லுமிடமும், ஏற்றகருவிஉம்— அதற்கேற்றபொருளழிவும் பொருளாக்கமுமாகிய இவைகளை; கற்றநூல்— தாங்கற்றபொருள்நூலால், உறதெரியநோக்கி—மிகவும்புலப்படவாராய்ந்து, தெய்வம்நுணித்து—இது தெய்வத்தால்வந்ததோ; மக்களால்வந்ததோவென் றுமுன்பு நுண்ணறிவாலறிந்து, அறம்குணித்தமேலோர்—(தெய்வத்தால்வந் ததாயிற் சாந்தியாலும் மக்களால்வந்ததாயிற் சாமபேத தானதண்டங்களாலு மவற்றை நீக்குதற்கு) தருமநூலின்வழியையவரையறுத்தபெரியோரும், சீலம் உன்புகழ்க்குவேண்டும் செய்கையும் (தம்மரசனுக்குமறுமைக்கு) நல்லொழு க்கத்தையும் (இம்மைக்குப்) புகழைப்பெருக்குதற்கு வேண்டிய தொழிலை யும், தெரிந்துகொண்டு—ஆராய்ந்து, பால்வரும் உறுதியாஉம்—அப்பகுதிக ளால்வரும் இருமைப்பயன்களையெல்லாம், தலைவர்க்குப்பயக்கும் நீரார்—த மது அரசனுக்கு அடைவிக்குந் தன்மையையுடையவரும்.

அறம் தானியாகுபெயராய் நூலின்மேல் நின்றது. உறுதிதொழிலாகு பெயராய்ப்பொருள்மேல்நின்றது. உறுபகுதி, தி விகுதி. யா என்னும்வினை விடைச்சொல் எல்லாமென்னும்பொருள்மேல்நின்றது. நுணித்துபண்படியா கப்பிறந்த இறந்தகாலவினையெச்சம் நுணிபகுதி. தகரமெய் இடைநிலை தகர மெய்சந்தி, உ எச்சவிகுதி. குணித்த இறந்தகாலப்பெயரெச்சம் குணி பகுதி. இதுமேலோர் என்னும் வினைமுதற்பொருள்கொண்டது. (7)

தம்முயிர்க்குறுதியெண்ணார் தலைமகன்வெகுண்டபோதும்
வெம்மையைத்தாங்கிநீதிவிடாதுநின்றுரைக்கும்வீரர்
செம்மையிற்றிறம்பல்செல்லாத்தேற்றத்தார்தெரியுங்காலம்
மும்மையுமுணரவல்லாரொருமையேமொழியுநீரார்.

இ-ள். தலைமகன் வெகுண்டபோதும்—தமதரசன் கோபித்த காலத்தும். தம்உயிர்க்குஉறுதிஎண்ணார்—தமதுயிர்க்குறுதிகருதாது, வெம்மையை தாங்கி—அவனதுகோபத்தை மேற்கொண்டு, நீதிவிடாது நின்றுஉரைக்கும் வீரர்—அவனுக்குறுதிதரும் நீதியைக்கைவிடாதருகில் நின்றுகூறும்வீரரும், செம்மையில் திறம்பல் செல்லாததேற்றத்தார்—நடுநிலையில் நின்றுதிறம்பாத துணிவுடையவரும், தெரியுங்காலம் மும்மையும் உணரவல்லார்—ஆராயும்மூன்றுகாலங்களினு நிகழும் பொருள்களையுணர வல்லவரும், ஒருமைமொழியும் நீரார்—(தமதரசனுக்குப் பலப்படக்கூறுது) துணிந்தொழுகுமொரு செயலையே சொல்லுந்தன்மையையுடையவரும்.

விரைந்துகோபிக்குந் தன்மையரென்பார் தலைமகன் வெகுண்டபோதுமெனவும், அவன்கோபத்திற்கஞ்சி யகலாதிருக்க வேண்டும் என்பார் தம்முயிர்க்குறுதியெண்ணார் வெம்மையைத்தாங்கி எனவும், பலதரம்நெருங்கி அரசனுக்கு உறுதி கூறவேண்டுதலால் நீதிவிடாதுரைக்கும் எனவும். தம்முயிர்க்குவருங்கெடுதியை நோக்கிப்பின்னிடாமையால் வீரர் எனவும், தம்மரசனுக்குஉறுதிமொழிசொல்லுங்கால் பலபடக்கூறுது சுருக்கிக்கூறவேண்டுதலால் ஒருமையே மொழியுநீரார் எனவுங்கூறினர். எண்ணார்முற்றெச்சம். உறுதி தொழிலாகுபெயராய்ப் பயன்மேல்நின்றது. மும்மை, ஒருமை யென்னும் பண்புகள் பண்பிகள்மேல் நிற்றலால் மரபுவழுவமைதி. திறம்பல்செல்லாத ஒருமொழி தெரிந்துகொண்டு தற்பொருட்டுப் பொருளில்வந்த இறந்தகால வினையெச்சம் தெரி பகுதி, து சாரியை, நகரமெய்சந்தி கொள்தற்பொருட்டுப்பொருளில்வந்த விகுதி, அனைத்தும் ஒருபகுதி. பகுதியல்லாதனவெல்லாம் இடைச்சொல்லாதலின் "இடையுரிவடசொலின்" என்றசூல் நகர மெய்த்தோற்றம்வந்தது. [8]

கலிவிருத்தம்.

நல்லவுந்தீயவுநாடிநாயகற்
கெல்லையின்மருத்துவனியல்பினெண்ணுவார்
ஒல்லைவந்துறுவனவுற்றபெற்றியின்
தொல்லைநல்வினையெனவுதவுஞ்சூழ்ச்சியார்

இ-ள். எல்லையின்மருத்துவன் இயல்புஇன்— (மக்கட்குநோய்வந்த) காலத்தில் வயித்தியன்கருதுந்தன்மையைப்போல, நாயகற்கு நல்லவும் தீயவு ம்நாடிஎண்ணுவார்—தமது அரசனுக்குவந்தநல்லகாரியங்களையுந்தீயகாரியங்க ளையுமுன்னேயாராய்ந்து எண்ணுவார் (தீயகாரியங்களைக்களைய)கருதுவோ ரும், ஒல்லைவந்து உறுவன—அவனுக்குவிரைந்துவந்தடையுந்தீயகாரியங்களை, உற்றபெற்றிஇன்—அவைவந்தடைந்த தன்மையைப்போலக்கருதி, தொல்லை நல்வினைஎன்ன உதவும்சூழ்ச்சியார்—பழையநல் வினைப்பயன்வந்து கைதரல் போலஅரசனுக்குஊன்றுகோல்போலுதவும்ஆலோசனையையுடையவருமாகிய.

வயித்தியன் நோயாளிக்குவந்த நோயையும், நோய்வந்ததற்குகாரணத் தையும். அதுநீங்க உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய செயல்களைச் செய்யுமுபாயங்களையும் கருதுதல்போலத் தெய்வங்களாலாவது மக்களாலா வது தீயனவந்தால் அவைநீக்குதற்குச் சாந்தியையும் சாமமுதலியஉபாயங்க ளையுஞ்செய்யக் கருதுதலால் எண்ணுவார் எனவும் இனிஅவனுக்கு வருவன வற்றை உற்பாதத்தால்வந்தனபோலக்கருதி அவைவாராமற் காத்து உதவுத லால் உதவுஞ் சூழ்ச்சியார் எனவுங்கூறினார். இதனால் தமது அரசனுக்குவந்த தீங்கைக்களைதலும் வருவனவற்றை முன்னறிந்து காத்தலையுங் கூறப்பட் டன. உறுவன்செயப்படுபொருள்மேல் நிற்றலால் அஃறிணைப்பலவின்பாற்ப டர்க்கை வினைமுற்றுப்பெயர். இன் உருபு ஒப்புப்பொருட்டு. ஒல்லைவினை யெச்சப்பொருளில்வந்த இடைச்சொல். குலமுதல் என்னுஞ்செய்யுள்முதல் அடியில்வரும் அறுபதினாயிரர் என்னுஞ்செய்யுள்காறும் ஒருதொடராய்நின் றகுளகம் ஆதலால் ஆகிய என்பது சொல்லெச்சமாய்நின்றது. (9)

அறுபதினாயிரமென்னுமாண்டகைக்
குறுதியில்லான்றிவூர்குணர்வென்றுன்னலாம்
பெறலருஞ்சூழ்ச்சியர்திருவின்பெட்பினர்
மறிதிரைக்கடலெனவந்துசுற்றினர்.

இ-ள். அறுபதினாயிரர் என்னும்—அறுபதினாயிரவரென்று மிலக்கத் தையுடைய, ஆண்டகைக்குஉறுதிஇல்—ஆண்தன்மையையுடையதசரதச்சக் கரவர்த்திக்கு, உறுதிஇல்—மறுமைப்பயன்தருவதில்.இவற்குஒன்றுஉணர்வு என்று உன்னல்ஆம்பெறல் அருஞ்சூழ்சியர்—இச்சக்கரவர்த்திக்கு அறிவெ ன்றுகருதத்தக்க அடைதற்கரியஆலோசனையையுடையவரும் திருஇன்பெட் பினர்— [தமது அரசனுக்குவந்தடையும்] பெருஞ்செல்வத்தில்விருப்புடைய வருமாகிய மந்திரிகள், மறிதிரைகடல் என்னவந்துசுற்றினர்—மடங்கிவரும் அணைகளையுடைய கடலைப்போலவந்து சூழ்ந்தார்கள்

அறுபதினாயிரரென்னுஞ் சூழ்ச்சியர் எனமுடிக்க ஆண்டகைக்குறுதி யில்லொன்றிவற் குணர்வென்றுன்னலாம் பெறலரு என்றது இடைப்பிறவரல். பெட்பினர். தொழிலடியாகப்பிறந்த பெயர்ச்சொல் பெட்பு பகுதி, இன்சா ரியை, அர் பலர்பால்விகுதி, உகரக்கேடுசந்தி. இதுபேண் என்னும் பகுதி யடியாகவந்தது. இம்மைக்கு மறுமைக்கும் தமதரசனுக்கு உயிர்க்குறுதி தரு வோர் மந்திரிகளாதலால் இவற்குணர்வென்றுன்னலாம் பெறலருஞ்சூழ்ச்சி யர்என்றார். இதுநேருதரு தேற்றவுவமையணி. [10]

முறைமையினெய்தினர்முந்தியந்தமில்
அறிவினைவணங்கித்தம்மரசைக்கைதொழு
திறையிடைவரன்முறையேறியேற்றசொற்
றுறையறிபெருமையானருளுஞ்சூடினார்.

இ-ள். முறைமையின் எய்தினர்—முறையாகச்சென்று, அந்தம் இல் அறிவினைமுந்திவணங்கி—அளவில்லாத பேரறிவினையுடையவசிட்டனைமுற்பட்டுவணங்கி, தம் அரசைகைதொழுது—தமதரசனைக்கை கூப்பிவணங்கி, இறைஇடை வரன்முறைஏறி—அவன் சமுகத்தில் முறையாகப்போய், ஏற்றசொல்துறை அறிபெருமையான் அருள்உம்சூடினார்—மறைநூல் வழியியைந்தசொற்களின்பகுதிகளையறிந்த பெருமையையுடைய அச்சக்கரவர்த்தியின் கருணையை மேற்கொண்டார்கள்.

மந்திரிகள்தலை, இடை, கடையென மூவகைப்படுதலால் முறைமையினெய்தினர் வரன்முறையேறி யெனவும், செஞ்சொல் ஆக்கச்சொல், குறிப்புச்சொல் எனமந்திரிகள் கூறுஞ்சொற்கள் மூவகைப்படுதலால்சொற்றுறையறியெனவுங்கூறினார். இவற்றைவிரிக்கிற்பெருகுமாதலால் விட்டனம். எய்தினர் முற்றெச்சம். முந்தி இறந்தகாலவினையெச்சம். இறைதுறை தொழிலாகுபெயர்களாய்ப் பொருள்மேல் நின்றன, நடுநிற்றல், அடைதல் என்னும் பொருள்மேல் நிற்றலால். இறு (நிற்றல்) பகுதி, உகரக்கேடுசந்தி, ஐ விகுதி. துறு (அடைதல்) உகரக்கேடு சந்தி, ஐ விகுதி. [11]

அன்னவரருளமைந்திருந்தவாண்டையில்
மன்னவனவர்முகமரபினோக்கினான்
உன்னியதரும்பெறலுறுதியொன்றுள
தென்னுணர்வனையநீரினிதுகேட்கென.

இ-ள். அன்னவர் அருள் அமைந்து இருந்த ஆண்டை இல்—அம் மந்திரிகள் தமதருள்பெற்று இருந்தஅப்பொழுதில்,மன்னவன் அவர்முகம்மரபு இன்நோக்கினான்—தசரதச்சக்கரவர்த்தி யவர்கள்முகத்தை முறையாகப்பார்த்து, உன்னியது அரும்பெறல் உறுதிஒன்றுஉளது—நாம்கருதியதுபெறுதற்கரிய உயிர்க்கு உறுதிதருவதாகஒருசெய்தியுள்ளது,என்உணர்வுஅனைய நீர் இனிதுகேட்க என்று—என்னறிவினையொத்த நீங்களினிதாகக்கேட்பீராகவென்று,

நோக்கினான் முற்றெச்சம். என்னுணர்வு ஒற்றுமைக்கிழமைப் பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர் கேட்க என்னும் வியங்கோளீறு தொக்கது. எனசெய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம் என் இடைச்சொற்பகுதி. ஆ எச்சவிகுதி. ஆண்டை ஆண்டுமென்றொடர்க்குற்றியலுகரம் ஐகாரச்சாரியைபெற்றது "ஐயீற்றுடைக்குற்று காரகமுமுளவே" என்றதால். (12)

வெய்யவன்குலமுதல்வேந்தர்மேலவர்
செய்கையினொருமுறைதிறம்பலின்றியே

வையம்யானுண்டவாண்டுங்கண்மாட்சியால்
ஐயமிலறுபதினாயிரம்மரோ.

இ-ள். வெய்யவன்குலம் முதல்வேந்தர் மேலவர் செய்கையின்—சூரியகுலத்திற்றோன்றிய மநுமுதலிய அரசர்களாகிய மேலோரது அரசியலைப்போல, ஒருமுறைதிறம்பல் இன்றி—முறைசிறிது மாறுபடாமல், உங்கள் மாட்சி ஆலவையம்யான் ஆண்டஆண்டு—உங்கள்பெருந்தகைமையால் உலகினையாண்டவருடம், ஐயம்இல்அறுபதினாயிரம்—ஐயமில்லாமலறுபதினாயிர வருடமாம்.

அறுபதினாயிரவருடத்தில் சிறிதுங் குறையில்லையென்பான் ஐயமில் எனவும், சிறிதும் என்பான் ஒரு எனவுங்கூறினான். (13)

கன்னியர்க்கமைவருங்கற்பின்மாநிலம்
தன்னையித்தகைதரத்தருமங்கைதர
மன்னுயிர்க்குருவதேசெய்துவைகினேன்
என்னுயிர்க்குறுவதுஞ்செய்யவெண்ணினேன்.

இ-ள். கன்னியர்க்கு அமைவரும் கற்புஇன்—கன்னிப்பெண்களுக்கு அமைந்த கற்பினைப்போல, மாநிலம்தன்னை—பெரியநிலவுலகினை, இதகைதர—இத்தன்மையாக என்வழிப்படுத்தி, தருமம்கைதர—மநுநூலிற்கூறிய தருமங்கைகூட, மன்உயிர்க்கு உறுவதுஎ செய்துவைகினேன்—ஆக்கத்தையுடைய உயிர்களுக்குத் தக்கபயனையேதேடி இதுகாறும் இருந்தேன், என் உயிர்க்கு உறுவதுஉம் செய்ய எண்ணினேன் — இனியெனதுயிர்க்கு வேண்டுமறுமைப்பயனையுந்தேடக் கருதினேன்.

கணவன்வழிப்பட்டுநடத்தலே, பெண்கள் கற்புக்கு இலக்கணமாதலால் என்வழிப்படுத்தி யென்னுஞ்சொல் பொருளுக்கு வருவிக்கப்பட்டது. என்னுயிர் ஒற்றுமைக்கிழமைப்பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். (14)

விரும்பியமூப்பெனும்வீடுகண்டயான்
இரும்பியலநந்தனுமிசைந்யானையும்
பெரும்பெயர்கிரிகளும்பொறத்தாங்கிய
அருமபொறையினிச்சிறிதாற்றவாற்றலேன்.

இ-ள். விரும்பியமூப்பு என்னும் வீடுகண்டயான்—என்னைவிரும்பி வந்தடைந்த மூப்பென்னுந்துறவினைக்கண்டநான், இரும்பியல் அநந்தன்உம் இசைந்தயானைஉம் பெரும்பெயர் கிரிகள்உம்—பெரியபிடரையுடைய ஆதிசேடனும் வலிமைபொருந்திய அஷ்டகசங்களும்பெரியபுகழவாய்ந்த அஷ்டகுலபர்வதங்களும், பெயரதாங்கியஅரும்பொறை—நிலைதளரச்சுமந்த சுமத்தற்கரிய பூபாரத்தை, இனிசிறிதுஆற்ற ஆற்றலேன் — இனிச்சிறிதேனுஞ் சுமக்கவல்லமையில்லேன்.

அஷ்டகுலபர்வதங்களின் பெயர்களாவன கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம், மூப்புக்காலத்து எல்லாப்பொருளும் தாமேநீங்குதலால் மூப்பெனும்வீடு எனவும், உடலிற்குரியபரு

வங்களுளொன்றாதலால் விரும்பிய மூப்பெனவுங்கூறினர். மூப்பு பண்படியாகப்பிறந்த தொழிற்பெயர் முதுமைபகுதி, ஈறுகெடுதலும் முதல்நீளுதலும் பகரத்தோற்றமுஞ்சந்தி, பு விகுதி வீடுவிடு என்னு முதனிலைதிரிந்த தொழிற்பெயர். (15)

நங்குலக்குரவர்கணவையினீங்கினர்
தங்குலப்புதல்வரேதரணிதாங்கப்போய்
வெங்குலப்புலன்கெடவீடுநண்ணினர்
எங்குலப்புறுவரென்றெண்ணிநோக்குகேன்.

இ-ள். நம்குலக்குரவர்கள் தம்குலம்புதல்வர்ஏ தரணிதாங்க—நமது சூரியன்மரபிற்றோன்றிய மநுமுதலிய மூதாதையர்கள் நமது குலத்தில் தோன்றிய புத்திரர்களே பூபாரத்தைச்சுமக்க, போய்நவையின்நீங்கினர்—துறவிற்சென்று துன்பத்தினின்றுநீங்கி, வெம்குலன்புலன்கெட வீடுநண்ணினர்—கொடியபஞ்சேந்திரியங்களும் தத்தநிலை கெடப்பரமபதத்தையடைந்தார்கள், எங்கு உலப்பு உறுவர்என்று எண்ணி நோக்குகேன்—எவ்வாறு அளவிலடங்குவாரென்றெண்ணிப்பார்ப்பேன் (அடங்கார் என்றபடி)

நீங்கினர் முற்றெச்சம். இன் உருபுநீக்கப்பொருட்டு. உலப்புறுவர் ஒருசொல். ஏகாரம் தேற்றப்பொருட்டு.

வெள்ளநீருலகினில்விண்ணினாகரில்
தள்ளரும்பகையெலாந்தவிர்த்துநின்றயான்
கள்ளரிற்கரந்துறைகாமமாதியா
உள்ளுறைபகைஞருக்கொதுங்கிவாழ்வெனோ.

இ-ள். வெள்ளம்நீர் உலகின்இல் விண்இல் நாகர்இல்—கடல்சூழ்ந்த நிலவுலகிலும் வானுலகிலும் நாகருலகிலும், தள் அரும்பகை எல்லாம் தவிர்த்துநின்றயான்—பிறரால ஒழித்தற்கரிய பகைகளையெல்லாம் ஒழித்துநின்ற நான், கள்ளர் இல் கரந்து உறைகாமம் ஆதியாக உள் உறைபகைஞருக்கு—கள்வரைப்போல ஒளித்துவாசஞ்செய்யுங் காமமுதலாக உள்ளே வசிக்கும் பகைவர்களுக்கு, ஒதுங்கிவாழ்வென்ஓ—ஒளித்தொதுங்கி யுயிர்வாழ்வேனோ (வாழேன் என்றபடி)

காமமுதலாக உள்ளுறைபகைஞர் என்றது காமமுதலிய ஆறும் உட்பகையாதலால். அவையாவன காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம். காமமுதலிய அஃறிணைப்பொருள்களை உயர்திணைப்பொருள்களாக உருவகஞ்செய்தது திணைமயக்கு. மனமுதலிய அந்தக்கரணங்களில் நிகழ்வதாதலால் கள்வரிற்கரந்துறை என்றார். ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. ஆதியாக ஈறுதொகுதல் (சாவவென்மொழியீற்றுயிர்மெய்சாதலும்விதி) என்றகு—இன் உபலக்கணத்தால். (17)

பஞ்சிமென்றளிரடிப்பாவைகோல்கொள
வெஞ்சினத்தவுணர்தேர்பத்தும்வென்றவேற்
கெஞ்சலில்மனமெனுமிழுதையேறிய
அஞ்சுதேர்வெல்லுமீதருமையாவதோ.

இ—ள். பஞ்சிமெல்தளிர் அடிபாவை கோல்கொள்ள—செம்பஞ்சுக்குழம்பூட்டிய மெல்லிய தளிர்போன்ற பாதங்களையுடைய பதுமைபோன்ற கைகேசியன்னைமுட்கோல் கையிலேந்த, வெம்சினத்து அவுணர்தேர் பத்தும்வென்றுளேற்கு—வெய்யகோபத்தையுடையசம்பராசுரன்முதலிய அசுரர்களது பத்துத்தேரையும்வென்ற எனக்கு; எஞ்சில்இல் மனம்என்னும் இழுதைஎறிய—(விடயங்களிற்செல்லுதலில்) குறைதலில்லாத மனமென்னுமறிவில்லானேறிச் செலுத்திய, அஞ்சுதேர்வெல்லும் ஈது அருமைஆவதுஓ—பஞ்சேந்திரியங்களாகிய ஐந்துதேர்களை வெல்லுமிச்செயல் எனக்கு ஓரருமையாயுள்ளதா (இல்லை என்றபடி)

சம்பராசுரன்முதலிய அசுரர்களிந்திரனரசியலைக் கவர்ந்துகொள்ள அதனையிழந்த அவன்வேண்டுகோளால்அவ்வசுரர்களோடுபோர்செய்யவைஜயந்தமென்னும் அவ்வசுரனகரிற்சென்று கைகேசியன்னை தேர்நடத்த அவர்கள்மாயையில்வல்லபத்துத்தேர்களையும்வென்றனன் என்பதுவரலாறு. மனமெனுமிழுதையேறிய என்ற குறிப்பால் அஞ்சுதேர் என்றதை இந்திரியங்களாகிய தேர்கள் எனக்கொள்ளப்பட்டது, அவற்றின் வழிமனஞ்செல்லுதலால் இதுகுறிநிலையணி. மென்றளிர் இது உரிச்சொற்றொடராதலால் (இடையுயிர்வடசொலின்) என்றகுஆல்நிலைமொழியீற்றுலகரம்னகரமாகத்திரிந்தது. பாவைஉவமையாகுபெயர். ஐந்துஅஞ்சுமரூஉ. ஓகாரம்எதிர்மறைப்பொருட்டு

ஒட்டியபகைஞர்வந்துருத்தபோரிடைப்
பட்டவரல்லரேற்பரமஞானம்போய்த்
தெட்டவரல்லரேற்செல்வமீண்டென
விட்டவரல்லரேல்யாவர்வீடுளார்.

இ—ள். ஒட்டியபகைஞர்வந்து—(காலம்வாய்க்கு மளவும் புறத்தில்,சிநேகித்த பகைவர்கள் (காலம்வாய்த்தபின்) எதிர்த்து, உருத்தபோர் இடைபட்டவர் அல்லரேல்—கோபித்துச்செய்த போர்க்களத்தில் மாண்டவரன்றி, பரமஞானம்போய் தெட்டவர் அல்லரேல்—உண்மைஞானத்திற்சென்றழுந்தினவரன்றி, செல்வம்ஈண்டு என்னவிட்டவர் அல்லரேல்—செல்வம் இந்நிலவுலகிற்கேயன்றி மறுமைக்கில்லையென்று துறந்தவரன்றி, வீடு உள்ளார் யாவர்—முத்தியடைவோர்யார் (இல்லையென்றபடி)

சுவர்க்கபதமு முத்தியாதலால் முத்தியெனப் பொதுப்படக்கூறினும் அல்லர்என்னு முற்றுஎல்என்னும் வினையெச்சத்தையேற்று ஒருசொல்லாய் நிற்றலால் வினையெச்சத்தின்மேல்நின்றது எல்என்னும் எச்சவிகுதி, வினையெச்சத்தைக்குறிப்பாலுணர்த்திநின்றது. பகைஞர்பொருட்பெயர்ச்சொல்பகைபகுதி, ஞகரம் பெயரிடைநிலை, அர்பலர்பால்விகுதி. உருத்த உரிச்சொல்லடியாகப்பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம் உருபகுதி, தகரமெய்சந்தி, தகரமெய் இடைநிலை, அவிகுதி. வீடுளார்யாவர் என்றபதார்த்தால் துறவரத்தையடைகலைச் சொல்வதால் தொடர்நிலைச்செய்யுட்குறியணி. இதனை வடநூலார் காவியலிங்காரம்என்பர்.

இறப்பெனுமெய்ம்மையையிம்மையாவர்க்கும்
மறப்பெனுமதனின்மேற்கேடுமற்றுண்டோ
துறப்பெனுந்தெப்பமேதுணைசெயாவிடில்
பிறப்பெனும்பெருங்கடல்பிழைக்கலாகுமோ.

இ-ள். இம்மை யாவர்க்குஉம்—இப்பிறப்பில் எவர்க்கும், இறப்பு என்னும் மெய்மைஐ—மரணமென்னும் உண்மையை, மறுப்புஎன்னும் அதன் இல்மேல்— (இம்மைக்குரியனவற்றால்) மறத்தலென்னு மச்செய்கைக்கு மேல், கேடுமற்றுஉண்டுஒ—கெடுதிவேறுளதா, துறப்புஎன்னும் தெப்பம் ஏதுணைசெய்யாதுவிடில் — துறவறமென்னும் புணையையே துணையாகக் கொள்ளாதுவிட்டால், பிறப்புஎன்னும் பெருங்கடல்—பிறவியென்னும் பெரியகடலை, பிழைக்கல்ஆகும்ஓ—கடத்தல் கூடுமா (கூடாதென்றபடி)

என்னும் என்பது ஆகியவென்னும் பண்புருபு. இம்மை அடையடுத்த இருமடியாகுபெயர் மைகருமை இருபண்பாகுபெயராய் ஆணவமலத்தின் மேலும். அதுகருவியாகுபெயராய்ப் பிறப்பின்மேலும் நிற்றலால். செய்யா ஈறுதொக்க எதிர்மறைவினையெச்சம் ஏகாரம்பிரிநிலைப்பொருட்டு. ஓகாரம் இரண்டும் எதிர்மறைப்பொருளன. முன்னரும் வாங்கியங்களால்பிறப்பினை க்கடத்தல் சாதிக்கப்படுதலால் இதுவும் அவ்வணி. (20)

அருஞ்சிறப்பமைவருந்துறவுமவ்வழி
தெரிஞ்சுறவெனமிகுந்தெளிவுமாய்வரும்
பெருஞ்சிறகுளவெனிற்பிறவியென்னுமிவ்
விருஞ்சிறைகடத்தலினியதியாவதே.

இ-ள். அருஞ்சிறப்பு அமைவரும்துறவும் — பெறுதற்கரியசிறப்பமைந்ததுறவறமும், அவழி—அந்நெறியையினின்று, தெரிஞ்சுறவு என்னமிகும் தெளிவுஉம் ஆய்வரும்—ஆராய்ந்து(பரமபதத்தை)அடைதலென்றுசொல்லப் பட்டமிக்க தேர்ச்சியுமாகியமைந்த. பெருஞ்சிறகு உள்ளஎன்னில்—பெரிய சிறகுகள் ஒருவனுக்கு உள்ளனவானல் (கடத்தல்கூடும்) பிறவிஎன்னும்இ இருஞ்சிறைகடத்தல்இன் — பிறப்பென்றுசொல்லப்படும் இந்தப்பெரியசிறையினையவ்வாறுகடத்தலைபார்க்கிலும் இனியதுயாவது—இன்பந்தருவதாயுள்ளது எது (ஒன்றுமில்லை என்றபடி.)

கடத்தல்கூடும் சொல்லெச்சம் தெரிந்து தெரிஞ்சுமரூஉ. உறவுதொழிற்பெயர் உருபகுதி. உவிகுதி உகரக்கேடும் வகரத்தோற்றமும்சந்தி. பிறப்பென்னுஞ் சிறையைக் கடத்திற்குத் துறவும் தேர்ச்சியும் என்னும்இரண்டினைச்சிறைகளாக உருவகஞ்செய்தலால் இயைபுருகவணி. (21)

இனியதுபோலுமிவ்வரசையெண்ணுமோ
துனிவருநலனெனத்தொடர்ந்துதோற்கலா
நனிவரும்பெரும்பகை நவையினீங்கியித்
தனியரசாட்சியிற் றுழுமுள்ளமே.

இ-ள். துனிவு அரும்நலன் என்னதொடர்ந்து—துன்பமில்லாத இன்பம்போல உள்ளே தொடர்ந்து தோற்கலாத—தன்றாக்கும் புறங்கெடாத

கனிவரும் பெரும்பகைநவையின் நீங்கி—மிக்கபெரியகாமமுதலிய பகையெ ன்னுங் குற்றத்தினின்று நீங்கி, அதனி அரசாட்சிஞ் தாழும்உள்ளம் — அந்த ஒப்பில்லாத துறவென்னு மரசாட்சியில் நிலைத்தமனமானது, இஅரசை இனி யதுபோலும் எண்ணும்ஓ—இந்த அரசியலையினியதுபோலுமென்று கரு துமா.

பகையென்ற குறிப்பால் காமமுதலிய ஆறெனவும், அதிகாரம் துறவா தலால் அகரச்சுட்டிற்குத் துறவெனவுங்கொள்ளப்பட்டன. துணிவு பெயர டியாகப்பிறந்ததொழிற்பெயர் துனிபகுதி, உவிகுதி பகுதியல்லாதனவெல் லாமிடைச்சொல்லாதலால்வந்த வகரமெய்சசந்தி. இன் உருபு நீக்கப்பொரு ட்டு. தோற்கலா ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம் தோல்பகுதி, கு அல இரண்டுஞ்சாரியை லகரத்திரிபும் உகரக்கேடுஞ்சந்தி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, துசாரியை, உகரக்கேடுசந்தி, அவிகுதி. (22)

உம்மையானுடைமையினுலகம்யாவையும்
செம்மையினோம்பிநல்லறமுஞ்செய்தனென்
இம்மையினுதவிநல்லிசைநடாயநீர்
அம்மையுமுதவுதற்கமையவேண்டுமால.

இ—ள். உம்மையான் உடமையின்—உங்களைநான் பெருந்துணையாக வுடைத்தாயிருத்தலால், உலகம்யாவைஉம் செம்மையின் ஓம்பி—நிலவுலக முற்று நீதிதிறம்பாதுகாத்து, நல்அறம்உம் செய்தனென்—நல்லயாகமுதலி யதருமங்களையுஞ்செய்துமுடித்தேன். இம்மையின் உதவிநல் இசைநடாயநீர் —இப்பிறப்பில இவ்வாறுதவிசெய்து நல்லபுகழையெனக்கு நிறுத்திய நீங் கள் அம்மைஉம் உதவுதற்கு அமையவேண்டும்—மறுபிறப்பிற்கும் உதவிசெ ய்தற்குத் துணையாயிருத்தல் வேண்டும்.

செம்மைநடுநிலைமை. செய்தனென் தன்மையொருமை யிறந்தகால வி னைமுற்று செய்பகுதி தகரமெய் இடைநிலை, அன்சாரியை, என்விகுதி. நடாய இறந்தகாலப்பெயரெச்சம் நடபகுதி, முதனீளல் விகாரம், யகரமெய் இடைநிலை, அவிகுதி. அம்மை, இம்மையென்றதற்குக் கூரியவிதிகொள்க. உடைமைசெயப்படுபொருள் குன்றுதொழிற்பெயர் உடைமைப்பகுதி, ஈறு கெடுதல்சந்தி, மைவிகுதி. (23)

இழைத்ததீவினையையுங்கடக்கவெண்ணுதல்
தழைத்தபேரருளுடைத்தவனுருமேல்
குழைத்ததோரமுதுடைக்கோரநீக்கிவே
றழைத்ததீவிடத்தினையருந்தலாகுமோ.

இ—ள். இழைத்ததீவினையைஉம் கடக்கஎண்ணுதல்—முன்செய்த வினைப்பயனையுங்கடக்கக்கருதுதல், தழைத்தபேர் அருள்வுடைய தவத்தினஆ குல்எல்—(உயிர்கள்மேல்)மிக்கபெரிய கருணையையுடைய தவத்தாலாகுமா யின், குழைந்தது ஓர் அமுதுஉடையகோரம்நீங்கி—சுவைகனிந்த ஒப்பில் லாத அமுதினையுடைய வட்டிலைநீக்கி, வேறுஅழைத்த தீவிடத்தின்ஐ அரு ந்தல் ஆகும்ஓ—வேறாகத்தேடிய கொடியவிஷத்தினை யுண்ணுதல்கூடுமோ (கூடாது என்றபடி)

உயிர்க்குஉறுதி தருவதென்பார் குழைத்ததோராமுது எனவும், உயிர்க்குத்தீங்குதருவதுஎன்பார் வேறழைத்ததீவிடம் எனவுங்கூறினர். புகழ்பொருளாகிய தவத்தினையொழிந்து அரசவின்பத்தை நுகர்தலைக்குறித் துணர்தற்குத் தகுதியானபொருளைச்சொல்லுதலால் இதுகுறிநிலையணி. இதனைவடநூலார் முத்திராலங்காரம் என்பார். தீவினையால் வரும்பயனைத்தீவினையெனஉபசரித்தார். ஆகுமேல் ஒருசொல். குழைத்தது வலித்தல்விகாரம். உடையனென்னுங் குறிப்பு வினைப்பெயரெச்சத்தி னீறுதொக்கது. ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. (24).

கச்சையங்கடகரிக்கழுத்தின் கண்ணுறப்
பிச்சமுங்கவிகையும்பெய்யுமின்னிழல்
நிச்சயமன்றெனினெடிதுநாளுண்ட
எச்சிலைநுகருவதின்பமாகுமோ.

இ-ள். கச்சைஅம் கடகரிகழுத்து இன்கண்—கவசத்தையணிந்த அழகியமதத்தையுடைய யானையின்பிடரில், பிச்சம்உம் கவிகைஉம் உறபெய்யுழ இன்நிழல்—பீலிக்குடையும் வெள்ளைக்குடையுமிகவுந் தருமினிய நிழலானது, நிச்சயம் அன்றுஎன்னின்—நிலைபெறுஞ்செல்வமல்லவானால், நெடிதுநாள்உண்ட எச்சிலைநுகருவது இன்பம்ஆகும்ஓ—பலநாளும்நுகர்தலால் எச்சிற்பட்ட இன்பத்தைப்பின்னும்நுகருவது இன்பமாகுமா (ஆகாதென்றபடி)

பலநாளும் நுகர்ந்துவருமின்பத்தை மீட்டும்நுகர்தல் எச்சில் என்பார் நெடிதுநாளுண்ட எச்சில்என்றார். எச்சில்தொழிற்பெயர் எஞ்சுபகுதி, மெல்லெழுத்து வல்லெழுத்தாதல்விகாரம், உகரக்கேடுசந்தி, இல்விகுதி. எச்சல் சேடம். முன்புள்ளது அழிவுபட்டில் தாதலைக்கூறுதலால் அழிவுபாட்டாவணி. 25

மைந்தரையின்மையில்வரம்பில்காலமும்
நொந்தனனிராமனென்னோவைநீக்குவான்
வந்தனனியவன்வருந்தயான்பிழைத்
துய்ந்தனன்போவதோருறுதியெண்ணினேன்.

இ-ள். மைந்தர்ஐ இன்மையில்—புத்திரரை இல்லாமையால், வரம்பு இல் காலம்உம் நொந்தனன்—அளவில்லாத காலங்களெல்லாம் வருந்தினேன், என்நோவை நீக்குவான் இராமன் வந்தனன்—எனது வருத்தத்தைநீக்க இராமமூர்த்தியவதரித்தனர். இனி அவன்வருந்தயான்பிழைத்து உய்ந்தனன்போவது—இனியவ்விராமமூர்த்தி வருந்தநான்பிழைத்துக் கடைத்தேறிப் போகும், ஓர் உறுதி எண்ணினேன்—ஒருபயனைக்கருதினேன்.

இராமமூர்த்தி பூபாரத்தால்வருந்த நான்துறவுபூண்டு தவத்திற்செல்லுதலைக்கருதினேன் என்னுஞ்சொற்கள் இராமமூர்த்தி வனத்திற்சென்றுவருந்தவும் தான் தேகத்தைவிட்டுப் பரமபதத்தை யடைதலையுங் குறிப்பித்து நிற்றலால்குறிப்பணி. இராமன் யாவரையும் சந்தோஷிப்பிக்கிறவன். மைந்தர்காரணப்பெயரமைந்து [வலிமை] உகரக்கேடுசந்தி, அர்பலர்பால் விகுதி நொந்தனன் என்னும் வினைமுற்றில் நொபகுதி. நோவு என்னுந் தொழிற்

பெயரில் கொடகுதி, முதல் நீளல்விகாரம் எனக்கொள்க. உய்ந்தனன் முற்றெச்சம்.

(27) இறந்திலன்செருக்களத்திராமன்றாதைதான்
அறந்தலைநிரம்பமூப்படைந்தபின்னரும்
துறந்திலனென்பதோர்சொல்லுண்டானபின்
பிறந்திலனென்பதிற்பிறிதுண்டாகுமோ.

இ-ள். இராமன்றாதைதான்—இராமமூர்த்தியின் தந்தையாகிய தசரதச்சக்கரவர்த்தி, செருக்களத்து இறந்திலன்—போர்க்களத்திற்புறங்கொடாமலுயிர்விட்டிலன் அறம்தலைநிரம்பமூப்பு அடைந்தபின்னரும் — தருமந்தலையெடுக்க முதுமைப் பருவமடைந்தபின்னும், துறந்திலன் என்பது ஓர் சொல் உண்டானபின்—துறவுபூண்டிலனென்னும் ஒருபழிச்சொல்வந்தபின், பிறந்திலன் என்பது இல்பிறிது உண்டாகுமோ—(மானிடப்பிறப்படைந்தும்) அப்பிறப் படைந்திலன் என்னும் பழிச் சொலல்லாமல் வேறுண்டாகுமா இல்லை யென்றபடி.

வீரனுள்ளவன் போர்களத்தி லுயிர்விடுதலும் மக்கட்பிறப்பினர் முதுமைப்பருவத்தில் துறவுபூணுதலும் உயிர்க்குஉறுதி தருங்கடன் என்பார் இறந்திலன் என்பதோர்சொல்எனவும், அக்கடனைப்பெறுவிடில் மக்கட்பிறப்பினராய்ப் பிறந்துவைத்தும் விலங்கில்வைத்தெண்ணப்படுவாரென்பார்; உண்டானபின் பிறந்திலன் என்பதிற்பிறிதுண்டாகுமோவெனவும் எதிர்மறைமுகத்தாற்கூறினர். உண்டானபின் உண்டாயின் எனவினையெச்சமாகக்கொள்ளினும் அமையும். உண்டான கூட்டுவினைப்பெயரெச்சம் உண்டாகும் கூட்டுவினைவினைமுற்று. ஓ எதிர்மறைப்பொருட்டு.

பெருமகனென்வயிற்பிறக்கச்சீதையாம்
திருமகள்மணவினைதெரியக்கண்டயான்
அருமகள்நிறைகுணத்தவனிமாதெனும்
ஒருமகள்மணமுங்கண்டுவப்பதாயினேன்.

இ-ள். பெருமகன் என் வயின் பிறக்க—பெருங்குணமமைந்த இராமமூர்த்தி யென்னிடத்திற்பிறக்க, சீதை ஆம் திருமகள்மணம்வினை தெரியக் கண்டயான்—சீதாபிராட்டியாகிய திருமாதின் மணக்கோலத்தைக்கண் பெற்ற பயனடையப் பார்த்த நான், அருமகள் நிறைகுணத்து அவனிமாதுஎன்னும் ஒருமகள் மணம்உம்கண்டு—அடைதற்கரிய மாதாகிய நிறைந்தகுணத்தையுடையபூதேவியென்னும் ஒருமாதின் மணக்கோலத்தையும் பார்த்து, உவப்பது ஆயினேன்—மகிழ்கூரத்தொடங்கினேன்.

பெருமகன்என்பதற்குத் தலைமகனெனக்கூறலும் ஒன்று என்தவப்பயனாற் பிறந்தனர் என்பார் என்வயிற்பிறக்கவெனவும் பொருமைக்குணம்உள்ளது என்பார் நிறைகுணத்து எனவுங்கூறினர். (28)

நிவப்புறுநிலனெனுநிரம்புநங்கையுஞ்
செவப்புறுமலர்மிசைச்சிறந்தசெல்வியும்

உவப்புறுகண்வனையுயிரினெய்திய
தவப்பயன்தாழ்ப்பதுதருமமன்ரோ.

இ-ள். நிவப்புஉறு நிலன் என்னும் நிரம்புமங்கைஉம்—மேம்பாடமை ந்த பூதேவியென்னும் செல்வம் அமைந்த பெண்ணிற்சிறந்தவளும், செவப்புறு மலர்மிசை சிறந்தசெல்விஉம்—செவந்த தாமரையில்வசிக்குந் தெய்வமாதரில் மேம்பட்ட திருமகளும் ஆகிய இருவரும், உவப்புறு கணவனை—மகிழ்கூரு மணவாளனாகிய இராமமூர்த்தியை உயிர் இன் எய்திய தவப்பயன் தாழ்பது தருமம் அன்று—தமதுஉயிர்போலக்கருதி அவர்களடையச் செய்த தவப்பல னையான் உடனே கூட்டி முடிக்காது காலந்தாழ்ப்பது அறநெறியல்ல.

நிலவுரிமை யுடையோனுக்குச் செல்வம் தானே வந்தடைதலால் நில னெனுநங்கையும் மலர்மிசைச் செல்வியும் என்றார் இன் உருபு ஒப்புப்பொரு ட்டு. (29)

ஆதலாலிராமனுக்கரசைநல்கியிப்
பேதைமைத்தாய்வரும்பிறப்பைநீக்குவான்
மாதவந்தொடங்கியவனத்தைநண்ணுறுவேற்
கியாதுநுங்கருத்தெனவினையகூறினன்.

இ-ள். ஆதல்ஆல்—ஆகையால், இராமனுக்கு அரசுஐநல்கி—இராம மூர்த்திக்கு அரசியலைத்தந்து, இப்பேதைமைத்து ஆய்வருபிறப்புஐ நீக்குவா ன்—இந்த அவிச்சையுடைமையாலிடைவிடாது வரும்பிறப்பைநீக்க, மாதவ ம்தொடங்கிய—பெருமைய்மைந்ததவத்தைச்செய்ய, வனத்தைநண்ணுவேற் கு—தவவனத்தையடையக்கருதுமெனக்கு, நும்கருத்துயாதுஎன்ன இனைய கூறினன்—உமதுகருத்துயாதென்று இத்தனமையுடையசெய்திகளைத் தசர சச்சக்கரவர்த்தி வினவினன்.

பேதைமைத்து பகுதிப்பொருள்விகுதி அவிச்சைபிறப் பிற்கு முதற் காரணமாதலால் பேதைமையெனவும், பிறவி இடைவிடாது நிற்றலால் ஆய் வரும் எனவுங்கூறினர். தொடங்கிய செய்யியவென்னும் வினையெச்சம் கன் னியர்க்கமைவருங்கற்புமுதல், ஆதலால் என்பதுகாறும் ஒருதொடராதலால் . குளகம் (30)

கலி நிலைத் துறை

திரண்டதோளினனிப்படிச்செப்பலுஞ்சிந்தை
புரண்டுமீதிடப்பொங்கியுவகையராங்கே
வெருண்டுமன்னவன்பிரிவெனும்விம்முறுநிலையால்
இரண்டுகன்றினுக்கிரங்கு மோராவெனவிருந்தார்.

இ-ள். திரண்டதோளினன் இப்படிசெப்பலும்—தூண்போலத்திரண் டதோளையுடையதசரதச்சக்கரவர்த்தியிவ்வாறுசொல்ல, சிந்தைபுரண்டுமீதிட பொங்கிய உவகையர்—தமதுமனதிற் கரைகடந்து வழியப்பொங்கியெழுந் தமகிழ்ச்சியையுடைய அமைச்சர்கள், ஆங்குஎவெருண்டு—கேட்டஅப்பொழு தேமதிமயங்கி, மன்னவன்பிரிவு என்னும் விம்முறுநிலைஆல்—அச்சக்கரவர் த்திதம்மினின்றுப் பிரிதலென்னும் துன்பமிக்கநிலைமையால் இரண்டுகன்றி

னுக்கு இரங்கும்ஓர் ஆஎன்ன இருந்தார்—தமது இரண்டு கன்றுகளுக்குமனங் கசிந்துவருந்தும் ஒருபசுவைப்போலவுளனா இருந்தனர்கள்.

இராமமூர்த்திக்கு மகுடஞ்சூட்டுதல் கேட்டமையால் பொங்கியவுவகை யர் எனவும், அதனால் தசரதச்சக்கரவர்த்தி தவமேற்செல்லுதலால்பிரிவெனு ம்விம்முறு நிலையால்எனவும், இவ்விரண்டும்தம்முன்மாறுபட்டுத்தம்மனத்திற் குடிகொள்ளுதலால் இரண்டுகன்றினுக் கிரங்குமோராவெனவும், இவற் றால் வாய்திறவாமையால் இருந்தார்எனவுங்கூறினர். வெருண்டு, புரண்டு இறந்தகாலவினையெச்சங்கள், வெருள், புரள் பகுதிகள். இரண்டுகன்றுபன் மையொருமைமயக்கம். இரண்டுகன்றினுக்கிரங்குமோராவென, என இல்லெ தனையுவமையாக்கிக்கூறுதலால் இல்பொருளுவமையணி. (31)

அன்னராயினுமரசனுக்கதுவலதுறுதி
பின்னரில்லெனக்கருதியும்பெருநிலவரைப்பில்
மன்னுமின்னுயிர்க்கிராமனின்மன்னவரில்லை
என்னவுன்னியும்விதியதுவலியினுமிசைந்தார்.

இ—ள். அன்னர் ஆயின்உம்—இன்பமொருபாலும் துன்பமொருபாலு முடையவராயினும், அரசனுக்கு அது அல்லது உறுதிபின்னர்இல் எனக்கரு தியும்—தசரதச்சக்கரவர்த்திக்கு அந்தத் தவமல்லாமல் பின்னேயுயிர்க்குறுதி தருவதுவேறில்லையென்றுநினைத்தும், பெருநிலம்வரைப்புஇல்மன்னும்இன் உயிர்க்குஇராமன்இல்மன்னவர்இல்லைஎன்னஉன்னியும்—பெரியநிலவுலகில் நிலைபெற்ற உயிர்களுக்குஇராமனைப்பார்க்கிலுமரசர்களில்லையென்று கருதி யும் விதிஅது வலியின்உம் இசைந்தார்—ஊழின்வலிமையாலு முடன்பட்ட னர்கள்.

இதனால் தசரதச்சக்கரவர்த்தி யுயிர்விடவும் இராமமூர்த்திவனம்புகவும் ஊழ்மூண்டமையால் விதியதும் வலியினும் எனவுங்கூறினர் அது பகுதிப் பொருள்விகுதி உன்னி இறந்தகாலவினையெச்சம் உன் பகுதி, னகரமெய் சந்தி, இ எச்சவிகுதி. (32)

இருந்தமந்திரக்கிழவரதெண்ணமுந்தன்பால்
பரிந்தசிந்தையன்மன்னவன்கருதியபயனும்
பொருந்துமன்னுயிர்க்குறுதியும்பொதுவுறநோக்கித்
தெரிந்துநான்மறைத்திசைமுகன்திருமகன்செப்பும்.

இ—ள். நான்மறைதிசைமுகன் திருமகன்—நான்குவேதங்களையுந் தந் தபிரமன் புத்திரராகிய வசிட்டர், இருந்தமந்திரக்கிழவர்அது எண்ணம்உம்— வாளாஇருந்த மந்திரிகளது கருத்தையும், தன்பால்பரிந்தசிந்தை அமன்னவ ன்கருதிய பயன்உம்—தன்னிடத்து அன்புகூர்ந்தமனத்தையுடைய அத்தசர தச்சக்கரவர்த்தி நினைத்தபயனையும், பொருந்து மன்உயிர்க்குஉறுதிஉம்—உ லகில் நிலைபெற்ற உயிர்களுக்குவருமுறுதியையும், பொதுவுறநோக்கிதெரிந் துசெப்பும்—பொதுவாகஆராய்ந்துகூறுவார்.

பின்னிகழுஞ் செய்தியையெல்லாம் உணர்ந்தனராயினும் உலகியல்நோ க்கிக்கூறினமையால் பொதுவுறநோக்கித் தெரிந்து என்றார்.

பரிந்த இறந்தகாலப் பெயரெச்சம் பரி பகுதி. (33)

நிருப நின்குலமன்னவர்நேமிபண்டுருட்டிப்
பெருமையெய்தினர்யாவரேயிராமனைப்பெற்றார்
கருமமேயிதுகற்றுணர்ந்தோய்க்கிதுகடவ
தருமமும்மிதுதக்கதேநினைத்தனைதகவோய்.

இ-ள். தகவோய்—நடுநிலைமையை யுடையாய், நிருப—அரசர்க்கரசனே, நின்குலமன்னவர்—உனதுகுலத்தில் தோன்றிய அரசருள்,பண்டுநேமி உருட்டிபெருமை எய்தினர்—முன்பு ஆக்கினைசக்கரத்தைச்செலுத்திப்பெருமையடைந்தவருள், இராமன் ஐ பெற்றார்யாவர் — இராமமூர்த்திபோன்ற புத்திரரைப்பெற்று மறுமைப்பயனையடைந்தவரெவர், கற்றுஉணர்தோய்க்கு இதுகருமம்ஏ—எல்லாநூலையுங்கற்றுணர்ந்த உனக்குஇதனைக்கருதுவதுகருமமே, இதுகடவது—கருதியபடி இதுசெய்யத்தக்ககடமையே, தருமம் உம் இது—தருமமுமிதுவே, தக்கது ஏ நினைத்தனை —நீதக்க காரியத்தையே நினைத்தாய். (34)

கடவது என்பதில் துவ்விகுதிதொகுத்தல்.

புண்ணியந்தொடர்வேள்விகள்யாவையும்புரிந்த
அண்ணலேயினியருந்தவமியற்றவுமடுக்கும்
வண்ணமேகலைநிலமகள்மற்றுனைப்பிரிந்து
கண்ணிழந்திலளெனச்செயுநீதந்தகழலோன்.

இ-ள். புண்ணியம்தொடர்வேள்விகள்யாவைஉம்புரிந்தஅண்ணலே—புண்ணியமிக்க யாகங்களெல்லாவற்றையுஞ் செய்தபெருமையிற்சிறந்தோய், இனிஅருந்தவம் இயற்றஉம் அடுக்கும்—இனிநீசெய்தற்கரிய தவத்தினைச் செய்தலும் அடுக்கும், நீதந்தகழலோன்—உன்னாற்பெறப்பட்ட வீரகண்டை கட்டிய இராமமூர்த்தி, வண்ணம்மேகலை நிலமகள்—கடலைநிறமமைந்தமேகலையாகச்சூழ்ந்த பூதேவி, உன்னைப்பிரிந்துகண் இழந்திலள்என்ன செய்யும்—உன்னைப்பிரிதலால்கண்களையிழந்திலளென்றுபிறர்கூறப்பா[illegible]காப்பான்

வேள்விகளைச்செய்து பயனடைந்தவனுக்கு இனித்தவத்தைச்செய்து பயனடைதலுந்தக்கதுஎன்பார் இனியருந்தவ மியற்றவுமடுக்கும்எனவும்மநுநீதிவழுவாது பூபாரந்தாங்கிய அரசன் அந்நிலவுலகில்வாழும்உயிர்களுக்குஇரண்டுகண்களாதலால் நின்னைப்போல நின்புத்திரனுந்தாங்குவான்என்பார்நிலமகள் மற்றுனைப்பிரிந்து கண்ணிழந்திலளெனச்செயு நீதந்தகழலோன் எனவுங்கூறினர். பிரிந்து காரணகாரியப் பொருளில்வந்த இறந்தகால வினையெச்சம். (35)

புறத்துநாமொருபொருளினிப்புகல்கின்றதெவனோ
அறத்தின்மூர்த்திவந்தவரித்தானென்பதல்லால்
பிறத்துயாவையுங்காத்தவைபின்னுறத்துடைக்கும்
திறத்துமூவருந்திருத்தியதிருத்துமத்திறலோன்.

இ-ள். யாவைஉம் பிறத்துகாத்து—எல்லாவுயிர்களையும் படைத்துக் காத்து, அவைபின் உறதுடைக்கும் திறத்துமூவர்உம் திருத்தியதிருத்தும் அதிறலோன்—அவற்றைப்பின்னுலழிக்கும் பகுதியையுடையசங்கரிடணன்

முதலியமூவருந் திருத்தியபடைப்புமுதலிய முத்தொழில்களையுந்திருத்திய அத்திருமாலாகிய, அறத்து இன்மூர்த்திவந்து அவதரித்தான் என்பது அல்லாமல்—தருமமூர்த்திவந்து இராமனுயவதரித்தனனென்று சொல்லப்படுவதல்லாமல், புறத்துநாம் ஒருபொருள் இனிபுகல்கின்றதுஎவன்—புறத்தில் நாம்வேறொருபொருளை இனியெடுத்துச்சொல்வது என்ன இருந்தது.

மூவராவர் சங்கரிடணன். பிரத்தியும்நன், அநிருத்தன். இவர்கள்படைப்புமுதலிய முத்தொழில்களாற் பிரமன்முதலிய பெயரைப்பொருந்துவார் ஆதலால் பிறத்துயாவையுங் காத்தவைபின்னுறத்துடைக்குந்-திறத்துமூவரும் எனவும் அவர்கள் படைப்புமுதலிய முத்தொழில்களும் தமது சந்நிதிவீட்சணத்தால் நிகழ்வதாதலால் திருத்திய திருத்தும் எனவும், தருமசொரூபியாதலால் அறத்தின்மூர்த்தியெனவுங்கூறினர். பிறத்து பிறக்கச்செய்து என்னும்பிறவினை வினையெச்சப்பொருள்மேல் நிற்றலால்படைத்துஎன்றும் பிற பகுதி. தன்வினையிற்பிறந்து எனவரும். திருத்திய அஃறிணைப்பலவின் பாற்படர்க்கை யிறந்தகாலப்பிறவினை வினை முற்றுப்பெயர். திருத்து பிறவினைப்பகுதி. (36)

பொன்னுயிர்த்தபூமடந்தையும்புவியெனுந்திருவும்
இன்னுயிர்த்துணையிவனென நினைக்கின்றவிராமன்
தன்னுயிர்க்கென்கைபுல்லிது தற்பயந்தெடுத்த
உன்னுயிர்க்கெனநல்லன் மன்னுயிர்க்கெலாமுரவோய்.

இ-ள். உரவோய் — பெருமையிற்சிறந்த தசரதச் சக்கிரவர்த்தியே, பொன்உயிர்த்த பூமடந்தைஉம் புவிஎன்னும் திருஉம்—அழகுமிக்க ஸ்ரீதேவியும்பூதேவியும். இவன்இன் உயிர் துணைவன் என்னநினைக்கின்ற இராமன்—இவன் தமது இனிய உயிர்க்கு ஒருதுணைவனென்று நினைக்கின்ற இராமமூர்த்தி, தன்உயிர்க்குநல்லன் என்கைபுல்லிது—தனதுயிரோம்புதற்கு நல்லனெனச்சொல்லுதல்புன்மைதரும், தன் பயந்து எடுத்த உன்உயிர்க்கு என்ன மன் உயிர்க்கு எல்லாம் நல்லன்—தன்னைப்பெற்றெடுத்த உன்னுயிர்க்கு நல்லனுதல்போல ஆக்கத்தையுடைய வெல்லாவுயிர்களுக்கு நல்லனுவான்.

என்கை இடைச்சொல்லடியாகப்பிறந்த தொழிற்பெயர்ச்சொல். என்று பகுதி, கை விகுதி, புல்லிது ஒன்றன்பாற் படர்க்கைக்குறிப்பு வினைமுற்று புன்மை பகுதி, ஈறுகெடுதலும் லகரத்தோற்றமும்சந்தி இ சாரியை து விகுதி நல்லன் ஆக்கச்சொல்தொக்குவந்த ஆக்கவினைக்குறிப்புமுற்று. இது இடையில்நின்று ஏனையிடங்களிற் செல்லுதலால் இடைநிலைத்தீவகவணி. (37)

வாரமென்னினிப்பகர்வதுவைகலுமனையான்
பேரினுல்வருமிடையுறுபெயர்கின்றபயத்தால்
வீரநின்குலமைந்தனைவேதியர்முதலோர்
யாருமியாஞ்செய்தநல்லறப்பயனெனவிருப்பார்.

இ-ள். வீர—தசரதச்சக்கிரவர்த்தியே, வாரம் இனி பகர்வதுஎன்-பக்ஷபாதமாக இனிநான்எடுத்துச்சொல்வது என்னவிருந்தது, வைகல்உம்அனையான்பேரில் ஆல்வரும் இடையுறுபெயர்கின்றபயத்துஆல்—எந்நாளும் அந்த

இராமமூர்த்தியின் திருப்பெயரால் தமக்குவரும் இடையூறுகள் நீங்குகின்ற பயனால், நின்குலம் மைந்தனை—உனது குலத்திற்றோன்றிய அந்த இராம மூர்த்தியை, வேதியர்முதலோர்யார்உம்—அந்தணர்முதலிய எல்லாவருணத் தோரும், யாம்செய்த நல்வினைபயன் என்ன இருப்பார்—நாஞ்செய்த நல்வி னைப்பயனே யிவ்வுருக்கொண்டுவந்ததெனக்கருதியிருக்கின்றனர்.

நடுநிலையில்நின்று சொல்லுகின்றோம் என்பார் வரமென்னினிப் பகர்வது என்றார். இடையுறு இதுமுதனிலைத்தொழிற்பெயராய் நின்றது; முதனிலைதிரிந்துவரும் தொழிற்பெயராய்வரில் இடையூறு எனவரும் எவன் என்னும் வினாவினைக்குறிப்பு வினைமுற்று என்னெனவந்தது. (38)

மண்ணினுநல்லள்மலர்மகள்கலைமகள்கலையூர்
பெண்ணினுநல்லள்பெரும்புகழ்ச்சனகியோநல்லள்
கண்ணினும்நல்லன்கற்றவர்கற்றிலாதவரும்
உண்ணுநீரினுமுயிரினுமவனையேயுவப்பார்.

இ-ள் மண்ணின்உம் நல்லள்—பூதேவியைப்பார்க்கிலும் நல்லவளும், மலர்மகள் கலைமகள் கலையூர் பெண் இன்உம் நல்லள்—இலக்குமி சரஸ்வதி வீரலட்சுமியுமாகியமாதரைப்பார்க்கிலும் நல்லவளாகிய பெரும்புகழ்சனகிஓ நல்லள்—கற்பாற்பெரியபுகழ்வாய்ந்த சீதாபிராட்டியோ நல்லவளாயிருக்கின்றாள், கண்ணின்உம் நல்லன்—[ஆதலால் அவளைப்போல யாவர்க்கும் எல்லாவுறுப்பிலுஞ்சிறந்த] கண்ணைப்போலும் நல்லவனாயிருத்தலால், கற்றவர் கற்றிலாதவர்உம்—கற்றவரும் கல்லாதவரும், உண்ணும் நீரின்உம் உயிரின் உம்—தாமுண்ணும் நீரைப்பார்க்கிலும் தமதுயிரைப்பார்க்கிலும், அவனை உவப்பார்—அந்த இராமமூர்த்தியே பெறுதற்கரிய பொருளாகக்கொண்டு மகிழ்வார்கள்.

இருவரும்ஒரேதன்மையர்என்பார்சனகியோ நல்லள்கண்ணினு நல்லன் எனவும், உலகியல் நிகழ்தற்கு இன்றியமையாப்பொருள் நீரும் இந்திரியமுதலாகியதத்துவங்கள் தத்தம்செயல்களை நிகழ்த்துவதற்கு இன்றிமையாப்பொருள் உயிரும் ஆதல்போல அவனின்றியுலகுநிகழாதென்பார் உண்ணு நீரினு முயிரினும் அவனையேயுவப்பார் எனவுங்கூறினர். கண் இன் என்பதில் நின்றஇன் உருபு ஒப்புப்பொருட்டு. ஏனை யிடங்களில உயர்வு குறித்தலில்வந்த எல்லைப்பொருட்டு. சனகன்புத்திரி சனகி இது தத்திதாந்தபதம். மண்ணினும் நல்லள் என்றது பொறுமைமேல்நின்றது. நல்லள் என்னுஞ்சொல்லே பலவிடத்தும்வந்துபொருள்படுதலால் இதுசொற்பொருட்பின்வருநிலையணி உம்மை உயர்வு சிறப்புப்பொருட்டு. (39)

மனிதர்வானவர்மற்றுளாரறங்கள்காத்தளிப்பார்
இனியிம்மன்னுயிர்க்கிராமனிற்சிறந்தவரில்லை
அனையனாதலினரசநிற்குறுபொருளறியில்
புனிதமாதவமல்லதொன்றில்லெனப்புகன்றான்.

இ-ள். அரச—தசரதச்சக்கிரவர்த்தியே, மனிதர் வானவர் மற்றுஉள்ளார்—நிலவுலகினருள்ளும் வானுலகினருள்ளும் நாகலோகத்தினருள்ளும்

அறங்கள்காத்து அளிப்பார்—தருமங்களைப் பாதுகாத்து ஓம்புவாரில், இமன் உயிர்க்கு—இந்த ஆக்கத்தையுடைய வுயிர்களுக்கு இனிஇராமன்இல் சிறந்தவர்இல்லை—இனி இராமமூர்த்தியைப்போலச்சிறந்தவர்களொருவருமில்லை, அனையன் ஆதல்இன்—அவன் அத்தன்மையனாதலால், நிற்கு உறுபொருள் அறியில்—உனக்கு உயிர்க்கு உறுதிதரும் பொருளையுணரில் புனிதம்மாதவம் அல்லது ஒன்றுஇல் எனபுகன்றான்—களங்கமில்லாத பெரியதவமன்றி மற்றொன்றில்லையென முனிவர் கூறினர்.

அனையதாதலின் எனப்பாடம்உண்டு. அது உயர்திணைப் பொருள்மேற் செல்லாமையறிக. அவர் அத்தன்மையராதலால் அக்கவலையொழிந்து தவத்தின்மேற் செல்லுதல்தக்கது என்பார் அனையனாதலிற் புனிதமாதவமல்லதொன்றிலதெனப் புகன்றான் என்றார். கூட்டிப்பிரித்தற் பொருளில்வந்த வழுவுருபு இரண்டிடத்துந்தொக்கது. "நின்னீறிய ஃபாமுறவே" என்றவிதியால் உருபேற்றவிடத்துநின்னீறு இயல்பாகாதுதிரிதல் "ஒற்றுயிர்முதலீற்றுருபுகள்" என்னுஞ் சூ—இல் "மன்" என்றமிகையால். (40)

மற்றவன்சொன்னவாசகங்கேட்டலுமகனைப்
பெற்றவன்றினும்பிஞ்ஞகன்பிடித்தவப்பெருவில்
இற்றவன்றினுமெறிமழுவாளவனிழுக்கம்
உற்றவன்றினும்பெரியதோருவகையனானான்.

இ-ள். அவன்சொன்ன வாசகம்கேட்டலும்—அத்தசரதச்சக்கரவர்த்தி அவ்வசிட்டமுனிவராருளிய வார்த்தையைக்கேட்ட வப்பொழுதே, மகனைபெற்றஅன்றுஇன்உம்—இராமமூர்த்தியைப்பெற்ற அக்காலத்திலும்,பிஞ்ஞகன் பிடித்த அபெருவில்இற்ற அன்றின்உம்—உருத்திரமூர்த்திபிடித்த பெரியவில் முறிந்தகாலத்திலும், எறிமழுவாளவன் இழுக்கம்உற்ற அன்றின்உம்—கொல்லுமழுவாயுதத்தையேந்திய பரசிராமர்தோற்படைந்தகாலத்திலும், பெரியது ஓர் உவகையன் ஆனான்—மிக்க ஒப்பில்லாத மகிழ்ச்சியை யுடையவனாயினான்.

தக்கன்வேள்வியை உமாதேவியார்பொருட்டுஅழித்தற்கு உருத்திரமூர்த்தி யவ்வேள்விச்சாலையையடைந்தபொழுது தேவர்கள்நடுங்கி யோடுதலைக் கண்டுகோபமாறித்தாம் ஏந்திவந்தவில்லைச்சனகமகாராசாவின் குலத்திற்றோன்றியஒருஅரசன்கையிற்கொடுத்துச்சென்றனர்,இச்சீதையின்திருமணத்தை விரும்பிவந்தோர்யாரோஅவர்களிந்தவில்லைமுறித்தால்கொடுப்போமென்பது சபதமாதலால் இராமமூர்த்தி தம்முன்கொண்டுவந்தவில்லையெடுத்துநாணேற்றிமுறித்தனர் என்பதும், மலையில்தவஞ்செய்து கொண்டிருந்த பரசிராமர், வில்முறிபட்ட ஓசையைக்கேட்டு அங்குநின்றுவந்தவர், திருமண முடித்து அயோத்திக்குச்செல்லும் அந்த இராமமூர்த்தியைவழியிற்கண்டு முறிந்தவில்லைமுறித்தது ஒருவன்மையன்றுநாமேந்தியவில்லைநாணேற்றுவையாயில் நீவலிமையையுடையாயென்றுநீட்ட, அந்தவில்லைவாங்கிநாணேற்றி, அவர்தவத்தைக் கொள்ளைகொண்டனர் என்பதும் இந்நூல்வரலாறு. இற்றமுதனிலை திரியாதுவந்த பிறவினைப்பெயரெச்சம் முதனிலைதிரிந்துவரில் இறுத்தனைப் பிறவினைக்குரிய உருபு ஏற்றுவரும். பிஞ்ஞகன் தலைக்கோலமுடையவன். ()

அனையதாகியவுவகையன் கண்கணீ ரரும்ப
முனிவன் மாமலர்ப்பா தங்கண்முறைமையினிறைஞ்சி
இனியசொல்லினையெம்பெருமானருள்விழியின்
தனியனானிலந்தாங்கியதவற்கது தகாதோ

இ-ள். அனையது ஆகிய உவகையன்—அத்தன்மையையுடைய ஆரா மகிழ்ச்சிவாய்ந்த தசரதச்சக்கிரவர்த்தி, கண்கள் நீர் அரும்ப—கண்களில் நீர்த தும்ப, முனிவன் மாமலர்பாதங்கள் முறைமையின் இறைஞ்சி—வசிட்டமு னிவரது தாமரைமலர்போன்ற திருவடிகளை முறைபடிவணங்கி, எம்பெரு மான் இனியசொல்லினை—எமதுபெருமானே யினியசொற்களையருளினாய், அருள்விழி இன் தனியன்நானிலம்தாங்கியது—தேவரீர் கிருபாநோக்கத்தால் தனியனாகியநான் இந்நிலவுலகைப் பாதுகாத்தது அவற்குஉம் இதுதகாதுஓ- அவ்விராமமூர்த்திக்கு மிக்க கிருபாநோக்கம் வாய்க்காதோ (வாய்க்கும் என்றபடி

முறைமையின்என்றது அட்டாங்கம்பஞ்சாங்கமென்றமுறையால். ஓகா ரவினா. கொளற்பொருட்டு. அவற்கு என்பதனிறுதியில் உயர்வு சிறப்பும்மை தொகுத்தல். (42)

எந்தைநீயுவந்திதஞ்சொலவெங்குலத்தரசர்
அந்தமில்லரும்பெரும்புகழவனியினிறுவி
முந்துவேள்வியுமுடித்துத்தம்மிருவினைமுடித்தார்
வந்ததவ்வருளெனக்குமென்றுரைசெய்துமகிழ்ந்தான்.

இ-ள். எந்தை—எமது தந்தையே, நீ உவந்து இதம்சொல—நீமகிழ் கூர்ந்து உயிர்க்குறுதி தருமின்சொற்களைக்கூற, எம்குலத்துஅரசர்—எமது குலத்தில் தோன்றியமுன்னோர், அந்தம்இல் அரும்பெரும்புகழ்—முடிவில் லாத பெறுதற்கரியபெரியபுகழை, அவனிஇல்நிறுவி முந்துவேள்விஉம்முடி த்து-உலகில்நிலைபெறச்செய்துமுற்பட்டயாகங்களையுமுடித்து, தம்இருவினை முடித்தார்-தமது இருவினைப்பயனும்தம்முளொக்கத்துறவறத்திற்சென்றனர், அ அருள்எனக்கு உம்வந்தது என்றுஉரைசெய்துமகிழ்ந்தான்-அக்கருணையெ னக்கு எனக்குங் கைகூடியதென்றுகூறி மகிழ்கூர்ந்தான்.

இருவினைமுடித்தார் என்றதால் இருவினையொப்புவாய்த்தற்குத் துறவ றம் ஏதுவாதலால் இருவினைப்பயன்களும்தம்முள்ஒக்கத்துறவறத்திற் சென் றனர்என்றும். நல்வினையும்பொன்விலங்குபோலுதலால் இருவினையென்றார். நிறுவிமுடித்துஎன்னும்இறந்தகாலவினையெச்சங்கள்ஒன்றனையொன்றுகொ ண்டுமுடிந்துமுடித்தார் என்னும்வினைமுற்றின் முதனிலைகொண்டன. (43)

பழுதில்மாதவன்பின்னொன்றும்பணித்திலனிருந்தான்
முழுதுமெண்ணுறுமந்திரக்கிழவர்தம்முகநீதால்
எழுதிநீட்டியவிங்கிதமிறைமகற்கேறத்
தொழுதகையினன்சுமந்திரன்முன்னின்றுசொல்லும்.

இ-ள். பழுது இல்மாதவன் மற்றுஒன்றுஉம் பணித்திலன் இருந்தான்- குற்றமில்லாத பெரியதவத்தினையுடைய வசிட்டமுனிவர் வேறொன்றும்அரு

ளாதுவாளாவிருந்தனர், முழுதுஉம் எண்ணுறும்மந்திரக்கிழவர்—(தம்மரசனுக்கு) நிகழ்காலத்திலும் வருங்காலத்திலும் நிகழும் நன்மை தீமைகளையெல்லாம் கருதும்மந்திரிகள், தம்முகத்துஆல் எழுதிநீட்டிய இங்கிதம்—தமதுமுகத்தால் மனத்திற் கருதியவற்றைக் குறிப்பித்தகுறிப்புகள், இறைமகற்குஎற-தசரதச்சக்கரவர்த்திக்குப் பொருந்த, சுமந்திரன் தொழுதகையினன் முன்நின்றுசொல்லும்—சுமந்திரனென்னு முதலமைச்சன் கூப்பியகைகளையுடையவனாய் முன்னின்றுகூறுவான்.

ஒருவனுள்ளக்கிடையைக் குறிப்பிப்பதுமுகமாதலால் எழுதிநீட்டிய இங்கிதம் என்றார். இங்கிதம் குறிப்பு. (44)

உறத்தகும்மரசிராமற்கென்றுவக்கின்றமனத்தைத்
துறத்திநீயெனுஞ்சொற்சுடும்நின்குலத்தொல்லோர்
மறத்தல்செய்கிலாத்தருமத்தைமறப்பதும்வழக்கன்
றறத்தினாஉங்கினிக்கொடிதெனலாவதொன்றியாதே.

இ-ள். உறதகும்அரசுஇராமற்குஎஎன்று உவக்கின்றமனத்துஐ—நன்மைபொருந்தத்தக்க அரசியலிராமமூர்த்திக்கேயென்று மகிழ்கூர்கின்ற உன் கருத்தினை, நீதுறத்திஎன்னும்சொல்சுடும்(நான்பிரிவாற்றாமையால்)நீகைவிடுவாயென்று கூறுஞ்சொல் அறமல்லவாதலால் என்னைவருத்தும், நின்குலம் தொல்லோர் மறத்தலசெய்கிலாத தருமத்துஐ—உமதுகுலத்தில் தோன்றிய முன்னோர் முதுமையில் மறவாததுறவறத்தை, மறப்பதுஉம்வழக்குஅன்று—இப்போதுநீமறந்து கைவிடுதலும்வழக்கலல, அறத்துஇன் ஊங்குகொடிது எனல் ஆவதுஒன்றுஇனியாது—(இவ்விருவகையும் எங்களுக்குத் துன்பந்தருதலால் தருமத்தைப்பார்க்கிலு மிகவுங்கொடியது என்றுசொல்லப்படுவது வேறியாது (அறமேகொடிது என்றபடி)

இராமமூர்த்திக்கு அரசியல்தருதலையும் தவஞ்செய்யக் காட்டிற்குச் செல்லுதலையுந் தவிர்கவென்பது அறம்அன்று, அந்தஅறத்தின்வழியான் நிற்றலால எனக்குப்பிரிவாற்றாமையால் பெருந்துன்பம்விளையாநின்றதுஎன்பான் அறத்தினாஉங்கினிக்கொடி தெனலாவதொன்றியாதே என்றானென்றார்.

துறத்தி முன்னிலையொருமையெதிர்காலவினைமுற்று துற பகுதி, த சாரியை, தகரத்தோற்றமும் உகரக்கேடும்சந்தி, இ விகுதி. (45)

புரைசைமாக்கரிநிருபர்க்கும்புறத்துறைவோர்க்கும்
உரைசெய்மந்திரக்கிழவர்க்குமுனிவர்க்குமுள்ளய
முரைசமர்ப்பநின்முதன்மணிப்புதல்வனைமுறையால்
அரைசனாக்கிப்பின்னைப்புறத்தடுத்தது புரிவாய்.

இ-ள். புரைசைமாகரி நிருபர்க்குஉம் புரத்துஉறைவோர்க்குஉம்—கழுத்திடுகயிறுவாய்ந்த பெரிய யானைச்சேனையையுடைய அரசர்க்கும் நகரத்தில் வசிப்பவர்க்கும், உரைசெய் மந்திரக்கிழவர்க்குஉம் முனிவர்க்குஉம்—(தம்மரசனுக்குப் பயன்தருமொழிகளை கூறுமந்திரிகளுக்குமுனிவர்களுக்கும்,உள்ளம்முரசம்ஆர்ப்பம் - ளம்குதுகலிக்க, நின்முதல்மணிப்புதல்வனை—இரத்தினம்போன்ற உனதுமுதற்புத்திரனை, முறைஆல் அரசன்ஆக்கி—வேதவிதிப்படி

திவனத்திற்குச்சென்று இராவணனுதியரைக்களைவரென்றதேற்றத்தால் இமையவரெங்கள் குறைமுடிந்ததென்றூர்த்திட வெனவுங்கூறினர். இறைகழன்ற கைவிரலின்கண் இறை உண்மையாலவிடா தஇலக்கணே. (51)

பணைநிரைந்தனபாட்டொலிநிரைந்தனவநங்கன்
கணைநிரைந்தனநாணொலிகறங்கினநிறைப்பேர்
அணைநிரைந்தனவறிவெனும்பெரும்புனலனையார்
பிணைநிரைந்தெனப்பரந்தனர்நாணமும்பிரிந்தார்.

இ-ள். பணைநிரைந்தன—வாச்சியங்கள் வரிசைப்பட் டொலித்தன, பாட்டு ஒலிநிரைந்தன—மங்களப்பாட்டிஞெலிவரிசைப்பட் டொலித்தன, அநங்கன்கணைநிரைந்தன—மன்மதனது மலர்ப்பாணங்கள் வரிசைப்பட்டுநின்றன, நாண்ஒலிகறங்கின—அவன்வில்லிலேற்றியகுணத்தொனிகோஷித்தன, அறிவுஎன்னும்பெரும்புனல்நிறைபேர் அணைநிரைந்தன—கற்புடைமடவாரது அறிவென்னும் பெருவெள்ளம்அவர்க்குரியகற்பென்னும்பெரியஅணையில் வரிசைப்பட்டுநின்றன. அனையார்பிணைநிரைந்தால் என்னபரந்தனர்—அக்கற்புடைமாதர் மான்கள்வரிசைப்பட்டு நின்றாற்போலப் பரவிநின்றனர், நாணம் உம்பிரிந்தார்—மற்றைப்பெண்கள் நாணத்தினின்றும் நீங்கினார்கள்.

பெண்கள்வெளிப்பட்டபொழுது மன்மதனும் வெளிப்படுதலால் கணைநிரைந்தன நாணொலிகறங்கினஎனவும்,கற்புடைமடவார்மனங்களை இராமமூர்த்தியினழகுகொள்ளைகொண்டாலும் அவர்கள்தங்கள் நிலையினின்றும்பிறழ்ந்திலராதலால் அறிவெனும்பெரும்புனல்அணைநிரைந்தனஎனவும்கூறினர். 52

நீளெழுத்தொடர்வாயினுங்குழையொடுநெகிழ்ந்த
ஆளகத்திரேடரமியத்தலத்தினுமலர்ந்த
வாளரத்தவேல்வண்டொடுகெண்டைகண்மயங்கச்
சாளரத்தினும்பூத்தனதாமரைமலர்கள்

இ-ள். நீள்எழுதொடர் வாயின்உம்—நீண்ட தூண்கள் தொடர்ந்தவாயிலும். அரமியத்தலத்தினஉம்—நிலாமுற்றத்திலும், சாளரத்தின்உம்—சாளரங்களிலும், குழைஒடுநெகிழ்ந்த அளகத்திரேடு—குண்டலத்தோடு சரிந்த அளகபாரத்தோடு, மலர்ந்தவாள் அரத்தம்வேல்வண்டு கெண்டைகள்மயங்க—ஒளிபரந்தவாளும் உதிரந்தோய்ந்த வேலும்வண்டும் கெண்டைகளும் தம்மிடத்துமயங்க, தாமரைமலர்கள்பூத்தன—தாமரைமலர்கள்மலர்ந்தன.

குழையோடு நெகிழ்ந்த அளகம்என்றதில் வந்த ஒடு வுருபு "தொடியொடு தொல்கவின் வாடியதோள்" என்றாற்போல வேறுவினையுடனிகழ்ச்சிப்பொருட்டு, ஒடுஎண்ணுப்பொருட்டு. வாள், வேல், வண்டு, கெண்டைகள் கண்கள், தாமரைமலர்கள் முகங்கள், உபமேயமாகிய கண்களையு முகங்களையு மவ்வவற்றிற் சொற்களாற்கூறாது உவமானச்சொற்களால் இலக்கணையாகக் கூறுதலால் உருவகவுயர்வு நவிற் சியணி. (53)

மண்டலந்தருமதிகெழுமழைமுகிலனைய
அண்டர்நாயகன்வரைபுரையகலத்துளலங்கல்

தொண்டைவாய்ச்சியர்நிறையொடும்நாணொடுந்தொடர்ந்த
கெண்டையும்முளகிளைபயில்வண்டொடுங்கிடந்த.

இ-ள். மண்டலம் தரும்மதிசெழு மழைமுகில் அனைய அண்டர்நாயன்—நிலவுலகில்வந்த சந்திரனைப்பொருந்திய மேகத்தையொத்த இராமமூர்த்தியின், உரைபுரை அகலத்துஉள் அலங்கல்—மலையையொத்த மார்பிலுள்ள மாலைகள். தொண்டைவாய்ச்சியர் நிறையொடும் நாணொடும்—கோவைக்கனிபோன்றவாயையுடைய பெண்களது கற்பினோடும் நாணத்தினோடும், தொடர்ந்தகெண்டையும் உள்ளகிளைபயில் வண்டொடும்கிடந்த—நெருங்கிய சேலும் தமக்குள்ள பெண்வண்டு ஒடு ஆண்வண்டுகளுந் தொடர்க்குண்டு கிடந்தன.

இராமமூர்த்தியின் திருமார்பிலணிந்தமாலையில் பெண்கள்மனமும் கட்பார்வையும் பதிந்து கிடத்தலால் நிறையொடு நாணொடும்கெண்டையும் வண்டொடுங்கிடந்த என்றார். மண்டலந்தரு மதிசெழு மழை முகிலனைய அண்டர்நாயகன்என்றது இல்பொருளுவமையணியும். கெண்டைவண்டு உருவகவுயர்வு நவிற்சியணியுங் கலந்துவருதலாற் கலவையணி. வரைகொள்ளல் எல்லாவளங்களையுமுடைமையால்மலைமேல் வருதல் முதனிலைத்தொழிலாகு பெயர். கிளைபோலத்தொடர்ந்து நிற்றலால் கிளையென்றது உவமையாகுபெயர். (54)

சரிந்தபூவுளமழையொடுகலையுறந்தாழ்வ
பரிந்தபூவுளபனிக்கடைமுத்தினம்படைப்ப
எரிந்தபூவுளவிளமுலையிழையிடைநுழைய
விரிந்தபூவுளமீனுடையவானின்றும்வீழ்வ.

இ-ள். மழைஒடுகலை உறதாழ்வ—(அப்பெண்கள்கூட்டத்தில்) மேகம்போன்ற கூந்தலோடுமே கலையுமிகவுஞ்சரிதலால்,சரிந்தபூஉள்ள—அக்கூந்தலினின்று சரிந்தமலர்களுமுள்ளன, பரிந்தபூவுள்ள—சிந்தியமலர்களுமுள்ளன, பனிகடைமுத்து இனம்படைப்ப—குளிர்ந்த கடைக்கண்ணீர்த்துளியின் கூட்டத்தையடைவன, இளமுலை இடை இழைநுழைய—முதிராத தனங்களினிடையில் நூலிழைநுழையும்படி, எரிந்தபூஉள்ள—எரிந்து கரிந்தமலர்களுமுள்ளன, மீன்உடையவான்நின்றும்வீழ்வவிரிந்த பூஉள்ள—நட்சத்திரங்களையுடைய ஆகாயத்தினின்றும்வீழும் மலர்ந்தகற்பகமலர்களுமுள்ளன.

தாழ்வஎன்னும்அஃறிணைப்பலவின் பாற்படர்க்கைவினைமுற்றினின்று பிரிந்த தாழ்தலென்னுந் தொழிற்பெயர் மூன்றனுருபேற்றுச்சரிந்த என்னும் பெயரெச்சத்தைக்கொண்டது, வீழ்வ என்னும் வினைமுற்றுப்பெயரெச்சத்தில்வந்தது. (55)

வள்ளுறைகழித்தொளிர்வணவாணிமிர்மதியம்
தள்ளுறச்சுமந்தெழுதருந்தமனியக்கொம்பில்
புள்ளிநுண்பனிபொடிப்பனபொன்னிடைப்பொதிந்த
எள்ளுநடைப்பொரிவிரவினவுளசிலவிளநீர்.

இ-ள். வாள்வள் உறைகழித்து ஒளிர்வன—(கூடிய பெண்களுக்கு) கண்களிமைகொட்டாதவிளங்காநின்றன, நிமிர்மதியம்தன்னுறைகமர்ந்து எழுதரும் தமனியம் கொம்புஇல் புள்ளிநுண்பொடி பொடிப்பன—கலைநிறைந்த சந்திரனை யிருள் நீங்கச்சுமந்துதோன்றிய பொற்கொம்பில்புள்ளியாக நுண்ணியவெயர்வரும்பின, சிலஇளநீர்—சில இளநீர்கள், பொன் இடைபொதிந்த என் உடைய பொரிவிரவின உள—பொன்னுலமைந்த எள்ளினது பொரிபோன்ற தேமலைக்கலந்துள்ளன.

வள்உறை. வள்ளுறை ஒருபொருட்பன்மொழி. உறைபுருவம் வாள்கண், மதியம்முகம், பொற்கொம்புமேனி, பனிவேர்வை. பொரிதேமல், இளநீர்தனம் இவற்றின்மேல் நிற்றலால் உருவகவுயர்வு நவிற்சியணி. (56)

ஆயதவ்வழிநிகழ்தரவாடவரெல்லாம்
தாயைமுன்னியகன்றெனநின்றுயிர்தளிர்ப்பத்
தூயதம்பியுந்தானுமச்சுமந்திரன்றேர்மேல்
போயகங்குளிர்புரவலனிருந்துழிபுக்கான்.

இ-ள். ஆயது அவ்வழிநிகழ்தர—இவ்வாறனசெய்தி அப்பெண்கள்கூட்டத்தில் நடக்கவும், ஆடவர் எல்லாம் தாயை முன்னியகன்று என்னநின்று உயிர்தளிர்ப்ப—புருடர்களெல்லாந் தாயைக்கருதிய கன்றைப்போல நின்று உயிர்தழைக்கவும், தூயதம்பிஉம் தான்உம்—களங்கமில்லாததம்பியுந்தானும், அசுமந்திரன்தேர்மேல்போய்—அந்தச்சுமந்திரனதுதேரின்மேற்போய், அகம் குளிர்புரவலன் இருந்த உழிபுக்கான்—மனங்குளிர்ந்த தசரதச்சக்கிரவர்த்தி திருக்கோயிலிற்புகுந்தனன்.

இருந்த என்னும்பெயரெச்சத்தின் அகரவீறுதொக்கது. தம்பியுந்தானும்புக்கான் எனவிரவர்தெண்ணிச் சிறப்பிறுல்ஒருமுடிபேற்றது "சொற்றொறுமிற்றிதன்பெற்றி" என்றபுறனடைச் சூ—ஆல். அகங்குளிர் புரவலன் உயர் திணையொடு சார்ந்த அஃறிணையுயர்திணை முடிபேற்றல் திணைவழுவமைதி "உயர்திணைதொடர்ந்த" என்னும் சூ—ஆல் (57)

மாதவன்றனைவரன்முறைவணங்கிவாளுழவன்
பாதபங்கயம்பணிந்தனன்பணிதலுமனையான்
காதல்பொங்கிடக்கண்பனியுகுத்திடக்கனிவாய்ச்
சீதைகொண்கனைத்திருவுறைமார்பகஞ்சேர்த்தான்.

இ-ள். மாதவன்தனைவரன்முறைவணங்கி-வசிட்டமுனிவரை வரன்முறைப்படிவணங்கி, வாள்உழவன் பாதபங்கயம்பணிந்தனன்—தசரதச்சக்கிரவர்த்தியின் திருவடித்தாமரையைவணங்கினன், பணிதலும்அனையான்—(அவர்) வணங்க அத்தசரதச்சக்கிரவர்த்தி, காதல்பொங்கிட—ஆசைமீதூர, கண்பனி உகுத்திட—கண்கள் நீர்சிந்த, கனிவாய் சீதைகொண்கனை—கோவைக்கனி போன்ற வாயையுடைய சீதாப்பிராட்டியின்கணவராகிய இராமமூர்த்தியை, திருஉறைமார்பு அகம்சேர்த்தான்—இலட்சுமிவசிக்குந் தனது மார்பில்பொருந்தத்தழுவினன்.

வாளுழவன். வாளாகிய ஏரால்பகைவராகிய நிலத்தையுழுகிறவன் எனப்பொருள் படுதலால் ஏதுவுருவகவணி. (58)

நலங்கொண்மைந்தனைத்தழுவினனென்பதென்னளிநீர்
நிலங்கடாங்குறுநிலையினைநிலையிடநினைந்தான்
விலங்கலன்னதிண்டோளையுமெய்த்திருவிருக்கும்
அலங்கன்மார்பையுந்தனதுதோண்மார்புகொண்டளந்தான்

இ-ள். நலம்கொள்மைந்தனைதழுவினன் என்பதுஎன்—அழகமைந்த இராமமூர்த்தியைத் தசரதச்சக்கிரவர்த்தி புல்லினன் என்றெடுத்துக்கூறுவது ஒருசொல்லோ, களிநீர்நிலங்கள் தாங்குறும் நிலையினை—பெரியகடல்சூழ்ந்த நிலவுலகைத்தாங்கும் நிலையை, நிலையிடநினைந்தனன்—நிலையிடக்கருதிய தசரதச்சக்கிரவர்த்தி, விலங்கல் அன்னதிண்தோளைஉம்—இராமமூர்த்தியின் மலையையொத்த திண்ணியதோளையும், மெய்திரு இருக்கும் அலங்கல் மார்பைஉம்—உண்மையாக இலட்சுமிவசிக்கும் மாலையணிந்த மார்பினையும், தனதுதோள்மார்புகொண்டு அளந்தான்—தனதுதோளாலுமார்பாலுமளந்தனன்.

மற்றையரசர்மார்பிலிலட்சுமியிருப்பதாகக்கூறுதல்பொய் என்பார்மெய்த்திருவிருக்கு மலங்கல் மார்புஎன்றார். பகைவரைவென்று நிலவுலகைத்தன்னடிபடுத்துவது தோளுமார்பும் ஆதலால் விலங்கலன்ன திண்டோளையுமெய்த்திருவிருக்கும்—அலங்கன்மார்பையுந் தனதுதோள்மார்புகொண்டளந்தான் என்றார். ஒருபொருளைச்சொல்ல மற்றொருபொருள் தோன்றுதலால் தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. இதனை வடநூலார் காவியார்த்தாபத்தியலங்காரமென்பார். நினைந்தனன் வினைமுதல்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். (59)

ஆண்டுதன்மருங்கிரீஇயுவந்தன்புறநோக்கி
பூண்டபோர்மழுவுடையவனெடும்புகழ்குறுக
நீண்டதோளையநிற்பயந்தெடுத்தயானின்னை
வேண்டியெய்திடவிரைவதொன்றுளதெனவிளம்பும்.

இ-ள். ஆண்டு தன்மருங்கு இருவி—அவ்விடத்தில் தன்பக்கத்தில் இராமமூர்த்தியையிருத்தி, உவந்து அன்புஉறநோக்கி—மகிழ்கூர்ந்து அன்புமீதூரப்பார்த்து, போர்பூண்ட மழுஉடையவன் நெடும்புகழ்குறுக நீண்டதோள்ஐய—போர்த்தொழிலை மேற்கொண்ட மழுவாயுதத்தையேந்திய பரசிராமமூர்த்தியின் நெடியபுகழ்தன்னிலையினின்றுகுறுக அவனீட்டிய வில்லிற்கு நிமிர்ந்ததோளையுடைய இராமமூர்த்தியே, நின்பயந்து எடுத்தயான்நின்னைவேண்டி எய்திடவிரைவது என்று உளது என்னவிளம்பும்—உன்னைப்பெற்றெடுத்தயான்—உன்னையிரந்து யானடையவிரைந்துசெய்யுங் காரியமொன்றுண்டென்று கூறுவான்.

இரீஇ சொல்லிசை நிறைத்தலில்வந்த வுயிரளபெடை. குறுகநீண்ட இதுசொன்முரணணி. (60)

ஐயசாலவுமலசினனரும்பெருமூப்பும்
வெய்யதாயறுவியலிடப்பெரும்பரம்விசித்த
தொய்யன்மாநிலச்சுமையுறுசிறைதுறந்தினியான்
உய்யலாவதோர்நெறிபுகவுதவிடவேண்டும்.

இ-ள். ஐய—இராமமூர்த்தியே, சாலவும் அலசினன்—மிகவும் வருந்தினேன், அரும்பெருமூப்புஉம் வெய்யது ஆயது—தாங்கற்கரிய பெரியமூப்புங்கொடியதாய்வந்தது, வியலிடம்பெரும்பரம் விசித்ததொய்யல்-நிலஉலகில் பெரியபாரமாகப்பந்தப்படுத்து மின்பத்தினையும், மாநிலம் சுவை உறுசிறைதுறந்து—பெரியநிலவுலகைத்தாங்குஞ் சுமையாகிய மிக்கசிறையையும் யான் கைவிட்டு, இனியான் உய்யல்ஆவது ஓர்நெறிபுக உதவிடவேண்டும்—இனியான் கடைத்தேறுவதாகிய ஒப்பில்லாத தவநெறியிற்செல்ல எனக்கு உதவிசெய்யவேண்டும்.

விசித்த இறந்தகாலப்பெயரெச்சம் விசி பகுதி. (61)

உரிமைமைந்தரைப்பெறுகின்றதுறுதுயர்நீங்கி
இருமையும்பெறற்கென்பதுபெரியவரியற்கை
தருமமன்னநிற்றந்தயான்றளர்வதுதகவோ
கருமமென்வயிற்செய்யிலென்கட்டுரைகோடி.

இ-ள். உரிமைமைந்தரைபெறுகின்றது—தமக்கு உரியபுத்திரரைப்பெறுதல், உறுதுயர்நீங்கி—மிக்கதுன்பத்தினின்று நீங்கி, இருமைஉம்பெறற்கு என்பது—இம்மையின்பத்தையு மறுமையின்பத்தையும் பெறுதற்பொருட்டேயென்று கூறுதல், பெரியவர் இயற்கை—பெரியோரியல்பு, தருமம் அன்னநின்தந்தயான் தளர்வதுதகவுஒ—தருமக்கடவுளையொத்த நின்னைப்பெற்ற நான் தளர்ச்சிகூடுதல் தக்கதோ, என்வயின்கருமம் செய்யில்—என்னிடத்து என்கடமையை நீசெய்யக்கருதில், என்கட்டுரைகோடி—என்னுறுதிமொழியைக்கொள்வாய்.

பெறற்கு என்பதனிறுதியில் தேற்றேகாரந் தொகுத்தல். கோடி முன்னிலையொருமை யெதிர்காலவினைமுற்று கொள் பகுதி, முதனீளல்விகாரம் டு சாரியை, ளகரவுகரக்கேடும் தகரத்திரிபும் சந்தி, இ விகுதி. (62)

மைந்தநங்குலமரபினின்மணிமுடிவேந்தர்
தந்தமக்களைகடைமுறைநெடுநிலந்தாங்க
ஐந்தொடாகியமுப்பகைமருங்கறவகற்றி
உய்ந்துபோயினரூழிநின்றெண்ணினுமுலவார்.

இ-ள். மைந்த—மைந்தனே நம்குலம் மரபின் இல்—நமதுகுலமரபிற்றோன்றிய, மணிமுடிவேந்தர்—இரத்தினமழுத்திய கிரீடத்தையுடையமுன்னோர்கள், தந்த மக்களை— பெற்றபுத்திரர்களை, கடைமுறை நெடுநிலம்தாங்க—மூப்பில் மநுநூல் முறைப்படி நெடிய நிலவுலகைத்தாங்க, ஐந்து ஒடு ஆகியமுபகை—பஞ்சேந்திரியங்களோடுகூட்டி யெண்ணப்பட்டகாமம்,கோபம், மயக்கமென்னுமுக்குற்றங்களையும், மருங்குஅற அகற்றி—அவ்வற்றின் செயலொழிய வேரோடறுத்து, உய்ந்துபோயினர்—பிழைத்துத்தவநெறியிற்சென்றனர், ஊழிநின்று எண்ணின்உம் உலவார்—(அவர்களைக்கணக்கிட) ஊழிக்காலமளவு நின்று எண்ணினாலும் வரையறைப்படார்.

பலர் என்பார் ஊழிநின்றெண்ணினு முலவார் என்றார். குற்றமும்பகைப்பொருளாதலால் ஐந்தொடாகிய முப்பகை என்றார். (63)

*முன்னையூழ்வினைப்பயத்தினுமுற்றியவேள்வி*
*பின்னையெய்தியநலத்தினுமரிதினிற்பெற்றேன்*
*இன்னும்யானிந்தவரசியலிடும்பையனென்றால்*
*நின்னையீன்றுளபயத்தினினிரம்புவதியாதோ.*

இ-ள். முன்னைஊழ்வினைபயத்து இன்உம்—முற்பிறப்பிற்செய்தநல்வினையின்பயனாலும், பின்னைமுற்றிய வேள்விஎய்திய நலத்தின்உம்—பின்பு இப்பிறப்பில்செய்தற்கரிய யாகங்களைச்செய்து அடைந்தபயனாலும், அரிதின்நின்பெற்றேன்—அரிதாக நின்னைப்பெற்றேன், இன்னம்யான் இந்தஅரசியல் இடும்பையன் என்றால்—இன்னமும் நானிந்த அரசியலாகிய துன்பத்தையுடையவனானால், நின்னைஈன்று உள்ளபயத்து இன்இல்—உன்னையரிதிற்பெற்ற பயனால், நிரம்புவது யாது—யானிரம்பவடையும் பயனென்ன (கூறாய் என்றபடி)

உடம்படுத்தற்பொருட்டுக் கூறு ஆனதலால் நின்னையீன்றுள பயத்தினினிரம்புவதியாதோ என்றான் என்றார். (64)

*ஒருத்தலைப்பரத்தொருத்தலைப்பங்குவிலூர்தி*
*எருத்தினீங்குநின்றியல்வரக்குழைந்திடருழக்கும்*
*வருத்தநீங்கியவ்வரம்பறுதிருவினைமருவும்*
*அருத்தியுண்டெனக்கையவீதருளிடவேண்டும்.*

இ-ள். ஐய—ஐயனே, ஒருதலைபரத்து—சுமையின் ஒருதலையுள்ளபாரத்தைப்போல, ஒருதலை பங்குஇல் ஊர்தி எருத்துஇன்—மற்றொருதலையில் அக்கூறில்லாமல் செல்லும் பொதிஎருதைப்போல, ஈங்குநின்று—இவ்வுலகில்நின்று, இயல்வரகுழைந்து—அவ்வியல்வாய்ப்ப மனம்நெக்குவிட்டு இடர் உழக்கும் வருத்தம்நீங்கி—துன்பத்தால் வருந்தும் வருத்தத்தினின்று நீங்கி, அவரம்பு அறுதிருவினைமருவும்—அந்த எல்லையில்லாத தவஞானச்செல்வத்தையடையும், அருத்தி எனக்கு உண்டு—ஆசையெனக்குள்ளது, ஈது அருளிடவேண்டும்—நீஇது அருளவேண்டும்.

இருதலையிலும் ஒத்தபாரமில்லாமல் ஒருதலையிற் குறைந்துள்ள பொதியைச்சுமக்கும் எருது வருந்தல்போல அரசியலில் ஆசை குறைந்து தவஞ்செய்தலிற் பேராசையுடைமையால் வருந்துகின்றேன் என்பான் ஒருதலைப் பரத்தொருத்தலைப்பங்குவிலூர்தி எருதின் என்றான். இது எடுத்துக்காட்டுவமையணி ஒருதலையென இயல்பாமிடத்துத் தகரமெய்மிகுதல் விரித்தல் விகாரம். இன் ஒப்புப்பொருட்டு. உழக்கும் எதிர்காலப்பெயரெச்சம் உழ பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, உம் விகுதி. ஒருத்தலைப் பரத்தொருத்தலைப்பங்குவிலூர்தி—எனப்பாடம்கொண்டு ஒருபக்கஞ்சுமையையும் ஒருபக்கமுடத்தையுமுடைய எருத்தைப்போல எனப்பொருள்கொண்டு உவமைக்கும் பொருளுக்கும் பொருத்தமில்லாம லிடர்ப்படுவாரும் உண்டு. (65)

*ஆளும்நன்னெறிக்கமைவருமமைவினனாகி*
*நாளும்நங்குலநாயகனைத்தவிரிகமலத்*

தாளினல்கியகங்கையைத்தந்துதந்தையரை
மீள்விலின்னுலகேற்றினானொருமகன்மேனாள்.

இ—ள்: மேல்நாள் ஒருமகன்—முன்னாளில் நமது மரபிற்றோன்றிய பகீரதனென்னு மொருபுத்திரன், ஆளும் நல்நெறிக்கு அமைவரும் அமைவினன் ஆகி—பெரியோர்கைக்கொள்ளுந் தவத்தைச்செய்தற்கமைந்த சமைவுடையவனாகி, நாளும் நம்குலம்நாயகன்—எந்நாளும் நமதுகுலதெய்வமாயுள்ள திருமாலுடைய, நறைவிரிகமலம் தாளின்நல்கிய கங்கையை—மணமொடுமலர்ந்த தாமரைமலர்போன்ற திருவடியால்தந்த கங்கையை தந்து தந்தையரை மீள்வுஇல் இன்உலகு ஏற்றினான்—இவ்வுலகிற்குக்கொண்டுவந்து தமது மூதாதையர்களைப் பிறப்பொழிதற்குக் காரணமான பரமபதத்திற்செலுத்தினான் (அதனைநீ யறிவாய்)

திரிவிக்கிரமமூர்த்தத்தில் உலகினையளந்த திருவடிமீதுசெல்லப்பிரமன் தன்கமண்டலத்திலுள்ள கங்கையைக்கொண்டு திருமஞ்சனஞ்செய்தானென்று கூறுதலால் தாளினல்கிய கங்கையெனவும், பாதலத்தில் வடகிழக்குத்திசையில் தவஞ்செய்துக்கொண்டிருந்த கபிலமுனிவர் கோபத்தால்சாம்பலான அறுபதினாயிரம் சகரரையும் வசிட்டமுனிவரனுஞையால் தவஞ்செய்து சிவபெருமானருளாற் கொண்டுவந்த கங்கையால் பரமபதத்திற் செலுத்தினானதலால் தந்தையரை மீள்விலின்னுலகேற்றினான் எனவுங்கூறினார். இன் உருபு ஏதுப்பொருட்டு. நாளும் உம்மை இனைத்தென வறிபொருளில்வந்த முற்றுப்பொருட்டு. • (66)

மன்னரானவரல்லர்மேல்வானவர்க்கரசாம்
பொன்னின்வார்கழற்புரந்தரன்போலியரல்லர்
பின்னுமாதவந்தொடங்கிநோன்பிழைத்தவர்பிறரார்
சொன்மறாமகற்பெற்றவரருந்துயர்றந்தார்.

இ-ள். அருந்துயர் துறந்தார்—அடைதற்கரியபிறவித்துன்பத்தினின்றுநீங்கினவர், மன்னர் ஆனவர் அல்லர்—அரசரானவர்களு மல்லர், மேல்—விண்ணுலகிலுள்ள, வானவர்க்கு அரசு ஆம்—தேவர்களுக்கரசனாகிய, பொன்இன்வார்கழல் புரந்தரன்போலியர் அல்லர்—பொன்னாற்செய்த நீண்டவீரகண்டைகட்டிய இந்திரனும் அவனையொத்த ஏனையோர்களுமல்லர், பின்னும் மாதவம்தொடங்கி நோன்பு இழைத்தவர்—இடைவிடாது பெரியதவத்தைத்தொடங்கி யத்தவத்தைச்செய்து முடித்தவரும், சொல்மறாத மகன்பெற்றவர்—தமதுசொல்லை மறுக்காத புத்திரனைபெற்றவருமே, பிறர்ஆர்—வேறுள்ளோர்யாவர்?

தவமும் புத்திரப்பேறும் ஒருதன்மைய ஆதலால் நோன்பிழைத்தவர்மகற்பெற்றவர் என்றார். நோன்பு பண்படியாகப்பிறந்த தொழிற்பெயர், நோன்மை பகுதி, ஈறுகெடுதல் சந்தி, பு விகுதி, பகுதியல்லாதன இடைச்சொல்லாதலால் லகரத்திரிபுசந்தி. (67)

அனையதாதலினருந்துயர்ப்பெரும்பரமாசன
வினையினென்வயினவைத்தனனெனக்கொளவேண்டாம்

புனையுமாமுடிபுனைந்திந்நல்லறம்புரக்க
நினையல்வேண்டும்யானின்வயிற்பெறுவதீதென்றான்.

இ-ள். அனையது ஆதலின்—அத்தன்மையதாதலால், அருந்துயர்பெரும்பாரம்—அடைதற்கரிய துன்பத்தைவிளைவிக்கும் பெரியபூபாரத்தை, அரசன் வினையின்—அரசனானவன் தவவினையால், என்வயின்வைத்தனன் என்னகொள்ளவேண்டாம்—என்னிடத்து வைத்தானென்று மனத்திற்கொள்ளவேண்டாம், புனையும் மாமுடிபுனைந்து—நீசூடுதற்குரிய பெரியமகுடத்தைச்சூடி, இந்நல் அறம்புரக்க நினையல்வேண்டும்—இந்த நல்லறத்தைப்பாதுகாக்க நினைத்தல்வேண்டும், நின்வயின் யான்பெறுவது ஈதுஎன்றான்—உன்னிடத்து நான்பெறும் வரமிதுவென்று தசரதச்சக்கிரவர்த்தி இராமமூர்த்தியை நோக்கிக்கூறினான்.

புரக்க எதிர்கால வினையெச்சம் புர பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, அ விகுதி. நினையல் தொழிற்பெயர் நினை பகுதி, யகரமெய் சந்தி, அல் விகுதி. (68)

தாதையப்பரிசுரைசெயத்தாமரைக்கண்ணன்
காதலுற்றிலனிகழ்ந்திலன்கடனிதென்றுணர்ந்தும்
யாதுகொற்றவனேவியததுசெயலன்றோ
நீதியெற்கெனநினைந்துமப்பணிதலைநின்றான்.

இ-ள். தாமரைக்கண்ணன்—தாமரை மலர்போன்ற கண்களையுடைய இராமமூர்த்தி, தாதைஅபரிசு உரைசெய்ய—தமதுபிதாவாகிய தசரதச்சக்கிரவர்த்தி யத்தன்மையையுடைய சொல்லைக்கூற, இதுகடன்என்று உணர்ந்துஉம்—முடிசூடுதல் நமது கடனென்றறிந்தும், காதலுற்றிலன் இகழ்ந்திலன்—அதனை விரும்பிலர் வெறுத்திலர், கொற்றவன் ஏவியதுயாது அதுசெயல் அன்று ஓ—அரசனே வியதெதுவோ அதனைச்செய்தலல்லவா, எற்கு நீதி என்னநினைந்து—எனக்கு நீதியென்று கருதி, அபணிதலை நின்றான்—அவனருளியவழியிலமைந்து நின்றனர்.

இயல்பாகவே வினைச்சமத்துவமுடையவராதலாற் காதலுற்றிலனிகழ்ந்திலன்என்றார். உம்மை அசைநிலை. (69)

குரிசில்சிந்தையைமனக்கொண்ட கொற்றவெண்குடையான்
தருதியிவ்வரமெனச்சொலியுயிருறத்தழுவி
சுருதியன்னதன்மந்திரச்சுற்றமுஞ்சுற்ற
பொருவின்மேருவும்பொருவருங்கோயில்போய்ப்புக்கான்.

இ-ள். குரிசில் சிந்தையைமனக்கொண்ட—இராமமூர்த்தியின் கருத்தைத் தன்மனத்தாலளந்த, கொற்றம் வெண்குடையான்—வெற்றிவாய்ந்த தவளசத்திரத்தையுடைய தசரதச்சக்கரவர்த்தி, இவரம்தருதி என்னசொல்லி—இந்த வரத்தைத் தாராயென்றுகூறி, உயிர்உற தழுவி—தமதுயிரோடு பொருந்த இறுகப்புல்லி, சுருதி அன்னதன்மந்திரம் சுற்றம்உம்சுற்ற—வேதத்தையொத்த தன்மந்திரிகள் சூழ்ந்துவர, பொருவுஇல்மேருஉம்—ஒப்பில்

லாத மகமேருவும், பொருவு அருங்கோயில் போய்புக்கான்—தனக்கு ஒப்பி ல்லாத தன் கோயிலிற்சென்று புகுந்தான்.

உயர்ச்சியில் தனக்கொப்பில்லாத மூலையென்பார் பொருவில் மேருவும் எனவும், அம்மலேயினும் உயர்ந்தது என்பார் மேருவும் பொருவருங்கோயில் எனவுங்கூறினர். இது உயர்வு நவிற்சியணி. உம்மைஉயர்வு சிறப்புப்பொருட்டு. குரிசில் பெருமையிற்சிறந்தோன். (70)

நிவந்தவந்தணர்நெடுந்தகைமன்னவர்நகரத்
துவந்தமைந்தர்கள்மடந்தையருழையர்பின்றொடரச்
சுமந்திரன்றடந்தேர்மிசைச்சுந்திரத்திரடோள்
அமைந்தமைந்தனுந்தன்னெடுங்கோயில்சென்றடைந்தான்.

இ-ள். நிவந்தஅந்தணர் நெடுந்தகைமன்னவர்—(வேதநூலாராச்சியில்) உயர்ந்த மறையவரும் பெருந்தன்மையையுடைய அரசரும், நகரத்து உவந்த மைந்தர்கள் மடந்தையர் உழையர் பின்தொடர—நகரத்திலுள்ள மகிழ்ச்சி கூர்ந்த ஆடவர்களும் பெண்களும் மந்திரிகளும் பின்றொடர்ந்துவர, சுமந்திரன் தடதேர்மிசை — சுமந்திரனது பெரியதேரின்மேல், சுந்திரம் திரள் தோள் அமைந்தமைந்தன்உம்—அழகியதிரண்ட தோளையுடைய இராமமூர்த்தியும், தன்நெடுகோயில்சென்று அடைந்தான்—தமதுநெடிய கோயிலைச் சென்றடைந்தனர்.

உழையர், அருகிலுள்ளவர்மந்திரிகளாதலால்மந்திரிகள் என்றும். அமாத்தியர் என்னும் வடசொல்லுக்குபொருளும் அது. நிவந்த, உவந்தஇறந்தகாலப்பெயரெச்சங்கள். நிவ, உவ பகுதிகள். தடந்தேர்தட உரிச்சொல்லாதலால் "இயல்பினும் விதியினும்" என்றகு—ஆல்வருமொழிமுதல் வல்லெழுத்துமிகாது "இடையுரிவடசொலின்" என்றகு—ஆல் இனவெழுத்துமிகுந்தது.71

வென்றிவேந்தரைவருகவென்றுவணம்வீற்றிருந்து
பொன்றிணிந்ததோட்டரும்பெறலிலச்சினைபோக்கி
நன்றுசித்திரநளிர்முடிகவித்தற்குநல்லீர்
சென்றுவேண்டுவவரன்முறையமைக்கெனச்செப்ப.

இ-ள். வென்றிவேந்தரை வருகஎன்று—வெற்றியமைந்த அரசர்களை இராமமூர்த்திக்கு முடிசூட்டுந் திருகோலங்காண வரக்கடவீரென்று, பொன் திணிந்ததோடு-பொன்னுலமைந்த ஓலையில் எழுதி, உவணம்வீற்றிருந்து—கருடன்வீற்றிருத்தலால், அரும்பெறல் இலச்சினை—பெறுதற்கரிதாயுள்ளமுத்திரையிட்டு, போக்கி—திசைகள்தோறும் அத்திருமுகத்தைப்போகவிட்டு நல்லீர்—வஷிட்டமுனிவரே, சென்று—நீர்போய், நன்றுசித்திரம் நளிர்முடி கவித்ததற்குவேண்டுவ—விதிப்படிப்பலநிறம் வாய்ந்த பெரிமகுடஞ்சூட்டுதற்குவேண்டுவனவற்றை, வரன்முறை அமைக்கஎன்னசெப்ப—நூலிற்கூறிய முறையாக அமைக்கக்கடவீரென்றுகூற.

நவரத்தினங்களு மிழைத்திருத்தலால் சித்திரமுடியென்றார். சித்திரித்த முடியெனப்பொருள் கொள்ளலும் ஒன்று. வீற்றிருந் காரணப்பொருள்

மேல்நிற்றலால் அரிய என்னும் பெயரெச்சங்கொண்டது. ஃ நிணிந்தபண்படியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம் திணிபகுதி. (72)

உரியமாதவனொள்ளிதென்றமைந்தனன்விரைந்தோர்
பொருவில்தேர்மிசையந்தணர்குழாத்தோடும்போக
நிருபர்கேண்மின்களிராமற்குநெறிமுறைமையினால்
திருவும்பூமியுஞ்சிந்தையிற்சிறந்தனவென்றான்.

இ-ள். உரியமாதவன் ஒள்ளிதுஎன்று அமைந்தனன்—தனக்கு உரிமையமைந்த பெரியதவத்தையுடைய வசிட்டமுனிவர் நீகூறியதுதக்கதென்றுசெய்யச்சமைந்து, விரைந்து ஓர்பொருஇல் தேர்மிசை அந்தணர்குழாத்து ஒடுஉம்போக—விரைந்து ஒரு ஒப்பில்லாத தேரின்மேல் மறைவர்கூட்டத்தோடுஞ்செல்ல, நிருபர்—அரசர்களே, கேண்மின்கள்—கேளுங்கள், இராமற்குநெறிமுறையின்ஆல்—இராமமூர்த்திக்கு மநுநெறி முறைப்படி, திருஉம் பூமிஉம்சிந்தையில் சிறந்தனஎன்றான்—அரசச்செல்வமும் நிலவுரிமையுமுங்கள்மனம்போலச்சிறந்துரிமையாயினவென்று தசரதச்சக்கிரவர்த்திகூறினான்.

உங்கள்மனம் இராமமூர்த்தியின் க்ஷேமத்தின்மேலிருந்தது என்பான் சிந்தையிற் சிறந்தனஎனறான் என்றார். (73)

இறைவன்சொல்லெனுமின்னறவருந்தினர்யாரும்
முறையினின்றிலர்முகந்துறுகளியிடைமூழ்கி
நிறையுநெஞ்சிடையுவகைபோய்மயிர்வழிநிமிர
உறையும்விண்ணகமுடலொடுமெய்தினரொத்தார்.

இ-ள். யார்உம் இறைவன் சொல்என்னும் இன்நறவு அருந்தினர்—அதுகேட்ட அரசரெல்லோரும் தமது அரசன்வார்த்தை என்னு மினியமதுவினைப்பருகி, முறையின்நின்றிலர்—தங்கள்முறைப்படிநில்லாதுதலைமயங்கி முகந்துறு களிஇடைமூழ்கிநிறையும் நெஞ்சுஇடை—தம்மைவிழுங்கிய களிப்பில் மூழ்கி நிறைந்தமனத்தில்; உவகைபோய் மயிர்வழிநிமிர—மகிழ்ச்சிமீதூர்ந்து மயிர்க்கால்கடோறு நிறைந்துதோன்ற, உறையும்விண் அகம்உடல் ஒடுஉம் எய்தினர் ஒத்தார்—தேவர்கள்வசிக்கும் வானுலகில் தமதுசரீரத்தோடடைந்தவர் ஆராமகிழ்ச்சியடைதல்போலடைதலால் அவர்களை யொத்தனர்.

அருந்தினர்முற்றெச்சம் உவகைபோய் மயிர்வழிநிமிர என்றது உரோமம்புளகிப்பஎன்பதுமேல் நிற்றலால் உதாரவணியும், முகத்தல்மொள்ளுதல் இதுவிழுங்கல்மேல்நிற்றலால் குணவணியுங்கலந்து வருதலால் கலவையணி.

ஒத்தசிந்தையருவகையரொருவர்க்கங்கொருவர்
தத்தமக்குற்றவரசெனத்தழைக்கின்றமனத்தார்
முத்தவெண்குடைமன்னனைமுறைமுறைதொழுதார்
அத்தநன்றெனவன்பினோடறிவிப்பதானார்.

இ-ள். ஒத்தசிந்தையர் உவகையர் (அதனால்எல்லோரும்) தம்முளொத்த மனமுடைய வருமகிழ்ச்சியுடையவரும், அங்கு ஒருவர்க்கு ஒருவர்தத்தமக்குஉற்ற அரசுஎன்னதழைக்கின்றமனத்தார்—அவ்விடத்திலொருவர்க்கொருவர்தங்களுக்குக்கிடைத்த அரசியல்போலத்தழைக்கின்றமனத்தையுடைய

ராய், முத்தம் வெண்குடை மன்னனைமுறைமுறைதொழுதார்—முத்தங்கோத்த தவளசத்திரத்தையுடைய தசரதச்சக்கிரவர்த்தியை மூன்றுமுறையாகவணங்கி, அத்தநன்று என்ன அன்பின்ஓடு அறிவிப்பது ஆனார்—அரசனே நீ கருதியது நல்லகாரியமென்று அறிவிக்கத்தொடங்கினார்கள்.

தொழுதார் முற்றெச்சம். (75)

கலிவிருத்தம்.

மூவெழுமுறைமையெங்குலங்கண்முற்றறப்
பூவெழுமழுவினாற்பொருதுபோக்கிய
சேவகன்சேவகஞ்செகுத்தசேவகற்
காவவிவ்வுலகமீதறனென்றாரரோ.

இ-ள். மூஎழுமுறை—இருபத்துநான்குதலைமுறைகாறும், எம்குலங்கள்முற்றற—எமதுகுலங்கள்முடிய, பூஎழுமழுவின்ஆல்பொருதுபோக்கிய சேவகன்—கூர்மைவாய்ந்த மழுவாயுதத்தினாற்போர்செய்து களைந்த பரசிராமமூர்த்தியின், சேவகம்செகுத்த சேவகற்கு இ உலகம் ஆவ—வீரத்தைக்களைந்தவீரராகிய இராமமூர்த்திக்கு இவ்வுலகுரிமையாகக்கடவது, ஈது அறன் என்றார்—நீகருதியது மநுநூல்முறையேயென்றுசொன்னார்கள்.

தமது தந்தையைக்கொன்ற சூரியன்மரபிற்றோன்றிய கார்த்தியவீரியார்ச்சுனன்மரபிலுள்ளவரை இருபத்துநான்குதலை முறைகாறுங்கொன்று அவ்வுதிரவெள்ளத்திற்படிந்து தமதுபிதாவின் கடன்கழிக்கமுயன்றார் என்பது புராணவரலாறு. வேறெலாமன்னர் எனப்பின்கூறுதலால் உபசாரமாக எங்குலங்கள் என்றார். ஆவ அகரவீற்றுவியங்கோள் வினைமுற்று ஆ பகுதி, வகரமெய்சந்தி, அ வியங்கொள்விகுதி. வழக்கில்வரஎனவருதல்காண்க. பொருது இறந்தகாலவினையெச்சம் பொருபகுதி, தகரமெய் இடைநிலை உ எச்சவிகுதி. செகுத்த இறந்தகாலப்பெயரெச்சம் செகு பகுதி. (76)

வேறெலாமன்னரும்விரும்பியின்னது
கூறினாரதுமனங்கொண்டகொற்றவன்
ஊறினுவகையையொளிக்குஞ்சிந்தையான்
மாறுமோரளவைசால்வாய்மைகூறினன்.

இ-ள். வேறு எல்லாம் மன்னர்உம்விரும்பி இன்னதுகூறினார். வேறுள்ளஎல்லா அரசர்களும்விரும்பி இத்தன்மையையுடைய சொற்களைகூறினார்கள், அதுமனம்கொண்டகொற்றவன்—அதனைமனத்தில்பதித்த தசரதச்சக்கரவர்த்தி, ஊறினன் உவகையை ஒளிக்கும் சிந்தையான்—மகிழ்ச்சியிலழுந்தி, அம் மகிழ்ச்சிதோன்றாமலதனைமறைக்கு மனத்தையுடையவனாய், மாறும்ஓர் அளவை சால்வாய்மைகூறினன்— மீளவுமோரளவமைந்த வுண்மையைக்கூறுவானாயினன்.

ஊறினன்முற்றெச்சம். சிந்தையான்குறிப்புமுற்றெச்சம்., (77)

மகவயினன்பினன்மயங்கியானிது
புகலகீர்புகன்றவிப்பொம்மல்வாசகம்

உவகையின்மொழிந்ததோவுள்ளநோக்கியோ
தகவெனநினைந்ததோதன்மையென்னென்றான்.

இ-ள். யான்மகவயின் அன்பின் ஆல்மயங்கி இதுபுகல—நான்புத்திரனிடத்துள்ள அன்பான்மனமயங்கி இவ்வார்த்தையைக்கூற, நீர்புகன்ற இ பொம்மல்வாசகம்—நீர்கூறிய இந்தஅன்புமிக்கவார்த்தை, உவகை இன்மொழிந்தது.ஓ—மகிழ்ச்சியாற்கூறியதோ, உள்ளம்நோக்கி ஓ—என்மன நிகழ்ச்சியைகருதியோ, தகவு என்ன நினைந்ததுஓ (இவன்கருதியது) நடுநிலைமையிலமைந்ததென்றுநினைந்தோ, தன்மைஎன் என்றான்—இவற்றுள் உமது தன்மையாதென்று தசரதச்சக்கிரவர்த்தி வினவினான்.

ஓகாரங்கள் வினைப்பொருளன. (78)

இவ்வகையுரைசெயவிருந்தவேந்தவை
செவ்வியநின்றிருமகற்குத்தேர்ந்துளோர்
அவ்வவர்க்கவ்வவராற்றவாற்றும்
எவ்வமிலன்பினையினிதுகேளென.

இ-ள். இவகை உரைசெய—இவ்வாறுகூற, இருந்தவேந்து அவை—இருந்த அரசசபையிலுள்ளோர், செவ்வியநின்திருமகற்கு—நடுநிலைமையினின்றும் வழுவாத உனது செல்வமிக்கபுத்திரனிடத்து, தேர்ந்துளோர்-அறிவால்மிக்கோர், அவ்வவர்க்கு அவ்வவர்—அவரவர்களுக்கு அவரவர்களே, ஆற்ற ஆற்றும் எவ்வம்இல் அன்பினை இனிதுகேள்என்ற—மிகவும்செய்யுங்குற்றமில்லாத அன்பினையினிதாகச்செவிகொடு என்று.

அவ்வவர்க்கு அவ்வவர் என்றது "தனக்குதானேசெய்தான்" என்னும் வழக்குமிகுதிநோக்கி. அவரவர் அவ்வவரெனவந்தது "ஒன்பதொழித்த"என்னும்கு—இல் "நெறி" என்றமிகையால். (79)

தானமுந்தருமமுந்தகவுந்தன்மைசால்
ஞானமும்நல்லவர்ப்பேணுநன்மையும்
மானவவையநின்மகற்குவைகலும்
ஈனமில்செல்வம்வந்தியைகவென்னவே.

இ-ள். மானவ—மநுகுலத்திற் பிறந்தவனே, ஐய—ஐயனே, தானம் உம் தருமம்உம் தகவுஉம்—தானமும்தருமமும் நடுநிலைமையும், தன்மைசால் ஞானம்உம் நல்லவர்பேணும் நன்மைஉம்—உயிர்க்குறுதி மிக்கஞானமும் நல்லவர்களையுபசரிக்கு நன்மையும், ஈனம்இல்செல்வது—குற்றமில்லாதசெல்வமும், வைகலும் நின்மகற்குவந்து இயைகஎன்ன—எந்நாளும் உமது புத்திரனுக்குவந்து பொருந்தக்கடவனவெனவும். 80

ஊருணிநிறையவுமுதவுமாடுயர்
பார்கெழுபழுமரம்பழுத்தற்றாகவும்
கார்மழைபொழியவுங்கழனிபாழ்ந்தி
வார்புனல்பெருகவுமறுக்கின்றார்கள்யார்.

இ-ள். ஊருணிநிறையஉம்—ஊருணிநீரால் நிறையவும், உதவும்மாடுயர்பார்கெழு பழுமரம்பழுத்தற்றுஆகவும்—உதவும் ஊரின்பக்கத்துயர்ந்து

உலகிற்பயன்படுமாலமரம்பழுக்கவும், கார்மழைபொழியஉம்—மேகம்வருஷிக்கவும் கழனிபாய்நதிவார்புனல்பெருகவும்—வயலிற்பாயுநதிமிக்க புனலாற்பெருகிவரவும், மறுக்கின்றார்கள்யார்—நினைக்கின்றவர்களேயன்றி மறுக்கின்றவர்கள் எவர்.

இவ்விரண்டு செய்யுளும் ஒருதொடர் ஆதலால் குளகமாய்மறுக்கின்றார்கள்யார் என்னும்பயனிலைகொண்டன. பழுத்தற்று என்னும் இறந்தகாலவினைமுற்று ஆகஎன்னும் இடைச்சொல்லேற்று எச்சமாய் ஒருசொல்லாய்நின்றன "மொழிந்தனனாக" என்றார்போல, பழு பகுதி தகரமெய் இடைநிலை, தகரமெய்சந்தி, அன்சாரியை, று விகுதி, னகரந்திரிபுசந்தி.

ஊருணி ஊராலுண்ணப்படுவது என்னும்பொருள்மேல்நிற்றலால்செயப்படுபொருளில்வந்த தொழிற்பெயர். 81

பனையவாநெடுங்கரப்பருமயானையாய்
நினையவாந்தன்மையைநினைந்தமன்னுயிர்க்
கெனையவாறன்பினனிராமனீண்டவற்
கனையவாறன்பினவவையுமென்றனர்.

இ-ள். பனைஅவாம் நெடுங்கரம் பருமம்யானையாய்—பனந்துண்டுவிரும்பும் நீண்டதுதிக்கையையும் கவசத்தையுமுடைய யானைச்சேனையையுடையாய், இராமன்—இராமமூர்த்தி, நினைய ஆம்தன்மையைநினைந்த மன்உயிர்க்கு—நினைத்தற்குரிய நன்மைகளைநினைந்த ஆக்கத்தையுடைய வுயிர்களிடத்து எனையஆறு அன்பினன்—எவ்வாறன்பினனோ, ஈண்டு—இவ்வுலகில், அவற்கு—அவ்விராமமூர்த்தியிடத்து, அவைஉம்அனைய ஆறுஅன்பின என்றனர்—அவ்வுயிர்களுக்கு அவ்வாறன்புள்ளனவென்று கூறினார்கள்.

எனைய வினாத்திரிபு. அனையசுட்டுத்திரிபு. ஏழனுருபுநிற்குமிடத்து நான்கனுருபுநிற்றல் உருபுமயக்கம். 82

மொழிந்ததுகேட்டலுமொய்த்துநெஞ்சினைப்
பொழிந்தபேருவகையான்பொங்குகாதலான்
கழிந்ததோரிடரினன்களிக்குஞ்சிந்தையான்
வழிந்தகண்ணீரினன்மன்னன்கூறுவான்.

இ-ள். மொழிந்தது கேட்டலும்—தசரதச்சக்கரவர்த்தி அரசர்கள்கூறியதைக்கேட்ட அப்பொழுதே, நெஞ்சினை மொய்த்துபொழிந்த பேர்உவகையான்—தன்மனத்தினையிடமற நெருங்கிப்பொழிந்த பெருமகிழ்ச்சியையுடையவனும், பொங்குகாதலான்—மீதூர்ந்த காதலையுடையவனும், கழிந்தது ஓர்இடரினன்—துன்பநீங்கினவனும், களிக்கும் சிந்தையான்—களிகூறு மனமுடையவனும், வழிந்தகண்நீரினன்—மகிழ்ச்சியாற்றதும்பிய கண்ணீருடையவனுமாய், கூறுவான்—சொல்லுவானாயினான்.

உவகையான், காதலான், கழிந்ததோரிடரினன், சிந்தையான், கண்ணீரினன்என்னுங்குறிப்புவினைமுற்றுகள்எச்சமாய்கூறுவான் என்னும்வினைமுற்றின்முதனிலையைத்தனித்தனிகொண்டன "உருபுபலவடுக்கினும்வினைவேற

டுக்கினும்'' என்றகு—ஆல், கழிந்ததீஎன்னும் வினைமுற்றுப்பெயரெச்சமாய் இடாரினுன் என்பதிலுள்ள ஆன்விகுதியையேற்றுநின்றது. (83)

செம்மையிற்றருமத்திற்செயலிற்றீங்கின்பால்
வெம்மையிலொழுக்கத்தின் மெய்ம்மைமேவினீர்
என்மகனென்பதென்னெறியினீங்கிவன்
நும்மகன்கையடைநோக்குமென்றுன்.

இ-ள். செம்மையில் தருமத்து இல்செயலில்—நடுநிலைமையிலும் தருமநெறியிலும் நல்லசெயலிலும், தீங்குஇன்பால் வெம்மையில்—தீயசெயலிற் கோபித்தலும், ஒழுக்கத்துஇல் மெய்ம்மைமேவினீர்—நல்லொழுக்கத்திலுமுண்மையாகநின்ற அரசர்களே, ஈங்கு இவன்என்மகன் என்பதுஎன்—இவ்விடத்திலிராமமூர்த்தி என்புத்திரனென்று சொல்லுதலென்ன. நெறியின் நும்மகன்—முறைப்படி யுங்களுடையபுத்திரன், கையடை (ஆதலால்உங்களுக்கே) அடைக்கலம், ஊங்குநோக்கும் என்றுன்—மிகவுஞ் சிந்தைசெய்யுங்களென்று கூறினுன்.

தீங்குஎன்றமையால் செயலென்றது நல்லசெயலென உபலக்கணத்தாற்கொள்ளப்பட்டது. (84)

அரசரைவிடுத்தபின்னுணைமன்னவன்
புரைதபுநாளொடுபொழுது போக்குவான்
உரைதெரிகணிதரையொருங்குகொண்டொரு
வரைபொருமண்டபமருங்குபோயினுன்.

இ-ள். ஆணைமன்னவன் அரசரைவிடுத்தபின்—ஆக்கினைசக்கரத்தையுடைய தசரதச்சக்கிரவர்த்தி அரசருக்குவிடைகொடுத்தபின், புரைதபுநாள் ஒடுபொழுது போக்குவான்—குற்றத்தினின்றுநீங்கிய முகூர்த்தநாள்வருகையோடு காலங்கழிக்கிறவன், உரைதெரிகணிதரை ஒருங்குகொண்டு—நூலாராய்ச்சியையுடைய சோதிடர்களை யொருமிக்கக்கொண்டு, ஒருவரைபொருமண்டபம் மருங்குபோயினுன்—மேருவையொத்த மண்டபத்தினேர்பால் சென்றுன்.

இராமமூர்த்திக்கு மகுடஞ்சூட்டு நாள்என்பார் புரைதபுநாள்எனவும். மேருஎன்பார் ஒருமலையெனவுங்கூறினுர். ஒடுவுருபுவினை யிலுடனிகழ்ச்சிப்பொருட்டு. உரைகருவியாகுபெயராய் நூலின்மேல்நின்றது. (85)

வேறு.

ஆண்டவன்னிலையாகவறிந்தவர்
பூண்டகாதலர்பூட்டவிழ்கொங்கையர்
நீண்டகூந்தலர்நீள்கலைதாங்கலர்
ஈண்டவோடினரிட்டிடையிற்றிலர்.

இ-ள். ஆண்டு அவன் நிலை ஆக—அவ்விடத்தில் அத்தசரதச்சக்கரவர்த்தியி னிலையவ்வாருக, அறிந்தவர்—அறிந்தபுறப்பரிவாரப்பெண்கள், பூண்டகாதலர்பூட்டு அவிழ்கொங்கையர் (பூரிப்பால்) பூட்டவிழ்ந்த தனமுடையவரும், நீண்டகூந்தலர்—சரிந்தகூந்தலையுடையவரும், நீள்கலைதாங்கலர் இட்டி

டை இன்றிலர்—சோர்ந்தநீண்ட ஆடையைத்தாங்காதவரும் தளர்ந்த இடைமுறியாதவருமாய், ஈண்டஓடினர்—நெருங்கவோடினார்கள்.

நீண்டஎன்றமையால் சரிந்தஎன்றும். இடுகிடைஎன்பது இட்டிடைஎனவந்தது. (86)

ஆடுகின்றனர்பண்ணடையின்றியே
பாடுகின்றனர்பார்த்தவர்க்கேகரம்
சூடுகின்றனர்சொல்லுவதோர்கிலர்
மாடுசென்றனர்மங்கையர்நால்வரே.

இ-ள். நடைஇன்றி ஆடுகின்றனர்—கூத்தமைதியில்லாமல் ஆடுகின்றவரும், பண்இன்றிபாடுகின்றனர்-பண்ணமைதியில்லாமல்பாடுகின்றவர்களும், பார்த்தவர்க்கு ஏ கரம்சூடுகின்றனர்—தம்மாற்பார்க்கப்பட்ட எல்லோருக்கு மேகையைக்கூப்புகின்றவர்களும், சொல்லுவதுஓர்கிலர்— (ஆராமகிழ்ச்சியால்) தாஞ்சொல்லுவது இன்னதெனத்தெளியாதவருமாய் மங்கையர்நால்வர்மாடுசென்றனர்—அப்புறப்பரிவாரப்பெண்களுள் நால்வர் கௌசலாதேவியின் கோயிலின்பக்கத்துச்சென்றார்கள்.

செய்யுளாதலாற் பண்ணடையென்று கூறினர். பண்ணடையின்றி ஆடுகின்றனர் பாடுகின்றனர் எனக்கொண்டு பொருள்கூறில் எதிர்நிரனிறைப்பொருள்கோளாகக்கொள்க. (87)

கண்டமாதரைக்காதலினோக்கினாள்
கொண்டல்வண்ணனைநல்கியகோசலை
உண்டுபேருவகைப்பொருளன்னது
தொண்டைவாயினிர்சொல்லுமினென்றாள்.

இ-ள். கொண்டல்வண்ணனை, நல்கியகோசலை—மேகம்போலுங்கரிய நிறமுடைய இராமமூர்த்தியைப்பெற்ற கௌசலாதேவி, அமாதரைகண்டு—அப்பெண்களைப்பார்த்து, காதலின்நோக்கினாள்—அவர்கள்கொண்ட காதலைக்குறிப்பாகநோக்கி, பேர்உவகைபொருள்உண்டு—பெருமகிழ்ச்சியாகியவொருசெய்தியுண்டு, தொண்டைவாயினிர் அன்னதுஈண்டுசொல்லுமின் என்றாள்—கோவைக்கனிபோலுஞ் செவந்த வாயையுடைய பெண்காள் அதனையிப்பொழுதே சொல்லுங்களென்றுவினவினாள்.

மெய்ப்பாடு உவகையாதலால் குறிப்பால் நோக்கினென்றும். நோக்கினாள்முற்றெச்சம். 88

மன்னெடுங்கழல்வந்துவணங்கிடப்
பன்னெடும்பகல்பாரளிப்பாயென
நின்னெடும்புதல்வன்றனைநேமியான்
தொன்னெடும்முடிசூட்டுகின்றானென்றார்.

இ-ள். மன்நெடுங்கழல் வந்துவணங்கிட—தசரதச்சக்கரவர்த்தியினெடியதிருவடியைவந்துவணங்க, பல்நெடும்பகல்பார் அளிப்பாய்என்ன—பல்நாளுமிந்நிலவுலகைப்பாதுகாப்பாயென்று, நின்நெடும்புதல்வன்தன்னை—உனது பெருமையமைந்த புத்திரனாகிய இராமமூர்த்தியை, நேமியான்—ஆஞ்ஞை

சக்கரத்தையுடைய அச்சக்கரவர்த்தி, தொல்லெமுடி சூட்டுகின்றான் என்றார்—தொன்றுதொட்டு வருமகுடஞ்சூட்டத் தொடங்குகின்றானென்றுகூறினார்கள்.

அவன்மரபிலுள்ளோர் வழிவழித்தொன்றுதொட்டுச் சூடிவருமகுடமாதலால் தொன்னெமுடி என்றார். 89

சிறக்குஞ்செல்வமகற்கெனச்சிந்தையில்
பிறக்கும்பேருவகைக்கடல்பெட்பற
வறக்குமாவடவைக்கனலானதால்
துறக்குமன்னவனென்னுந்துணுக்கமே.

இ-ள். சிறக்கும் செல்வம்மகற்குஎஎன்ன—சிறந்த அரசச்செல்வந்தமதுபுத்திரனுக்கேயென்று, சிந்தையில்பிறக்கும் பேர்உவகைகடல் பெட்பு அற—கௌசலாதேவியின் மனத்தில்தோன்றிய ஆராமகிழ்ச்சியென்னுங்கடல்பசையற, வறக்கும்மாவடவைகனல்—வறத்தற்குக்காரணமான பெரியவடவாமுகாக்கினியாக, மன்னவன் துறக்கும் என்னும்துணுக்கம் ஆனது—அரசன்துறவரம் பூண்பானேயென்னும் நடுக்கம்வந்து குடிகொண்டது.

வறக்கும் என்னும் பெயரெச்சம் வடவையென்னுங் கருவிப்பொருள்கொண்டது. சிறக்கும், பிறக்கும், வறக்கும், துறக்கும் என்னும்பெயரெச்சங்களில் சிற, பிற, வற, துற பகுதிகள். இது மிகைகுறைவின்றிச் சமனாகவந்தவொற்றுமையுருவகவணி பிரிநிலை ஏகாரந்தொகுத்தல். 90

அன்னளாயுமரும்பெறலாரமும்
நன்னிதிக்குவையுநனிநல்கித்தன்
துன்னுகாதற்சுமித்திரையோடும்போய்
மின்னுநேமியன்மேவிடமேவினாள்.

இ-ள். அன்னள்ஆய்உம்—கௌசலாதேவி அத்தன்மையுடையவராகியும், அரும்பெறல் ஆரம்உம்—பெருதற்கரிய முத்தாரத்தையும், நல்நிதிகுவை உம் நனிநல்கி—மகிழ்ச்சி தரும்பொருட்குவியலை மிகவுந்தந்து, தன் துன்னுகாதல் சுமித்திரையோடும்போய்—தனது ஆசைமிக்க சுமித்திராதேவியோடுஞ்சென்று, மின்னுநேமியன் மேவுஇடம் மேவினள்—விளங்குஞ் சுதரிசனமென்னுஞ் சக்கரத்தையணிந்த ஆயிரமௌலியாரெழுந்தருளிய திருக்கோயிலையடைந்தார்.. 91

மேவிமென்மலராணிலமாதெனும்
தேவிமாரொடுந்தேவர்களியாவர்க்கும்
ஆவியும்மறிவும்முதலாயவன்
வாவிமாமலர்ப்பாதம்வணங்கினாள்.

இ-ள். மேவி—அடைந்து, மெல்மலராள் நிலமாதுஎன்னும் தேவிமார் ஒடுஉம்—ஸ்ரீதேவிபூதேவியென்னுந் தேவிமார்களோடும், தேவர்கள்யாவர்க்கு உம் ஆவிஉம் அறிவும் முதலாயவன்—தேவர்கள் முதலிய எல்லோர்க்கும் உயிருமுணர்வுமாகிய எல்லாப்பொருளுமாயுள்ள அவ்விறைவனது, வாவி

மாமலர்ப்பாதம்வணங்கினன் — அடியரிதயமாகிய தடாகத்தில்மலர்ந்த தாமரை மலரையொத்த திருவடியைவணங்கினர்.
அடியரிதயம் என்றது சொல்லெச்சம். 92

என்வயிற்றருமைந்தற்கினியருள்
உன்வயிற்றதென்றனளுலகியாவையும்
மன்வயிற்றினடக்கியமாயனைத்
தன்வயிற்றினடக்குந்தவத்தினள்.

இ-ள். உலகுயாவைஉம் மன்வயிறுஇன் அடக்கியமாயனை — எல்லாவுலகங்களையுந்தனது நிலைபெற்ற திருவுதரத்திலடக்கிய இறைவனை, தன்வயிற்றின் அடக்கும் தவத்தினள் — தமது திருவயிற்றிலடக்கும் பெருந்தவத்தையுடைய கௌசலாதேவி, என்வயின்தருமைந்தற்கு — என்வயிற்றில் நீயருளியபுத்திரனுக்கு, இனிஅருள் உன்வயிற்றுஎன்றனள் — இனிக்கருணையுன்னிடத்தது என்றுவணங்கிக்கூறினர்.
வயிற்று இடத்தினடியாகப்பிறந்த உடைமைப்பொருளில்வந்த ஒன்றன்பாற்படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. வயின் பகுதி, று விகுதி, னகரத்திரிபு சந்தி. அது பகுதிப்பொருள்விகுதி. 93

என்றிறைஞ்சியவ்விந்திரைகேள்வனுக்
கொன்றுநான்மறையோதியபூசனை
நன்றிழைத்தவணல்லதவர்க்கெலாங்
கன்றுடைப்பசுவின்கடனல்கினள்.

இ-ள். என்று இறைஞ்சி — என்று துதித்து, அஇந்திரைகேள்வனுக்கு — அவ்விலக்குமிமணவாளனாகிய இறைவனுக்கு, ஒன்றுநான்மறை ஓதியபூசனைநன்று இழைத்து — அங்கமமைந்த நான்குவேதங்களுங்கூறிய நித்தியநைமித்திகங்களைக்குறைவின்றிச்செய்து, அவண்நல்லதவர்க்கு எல்லாம் — அவ்விடத்திலுள்ள நல்லதபோதனர்களுக்கெல்லாம், கன்றுஉடைய பசுஇன்கடன்நல்கினள் — கன்றினையுடைய பசுக்களைமுறையாகக்கொடுத்து.
உடைய என்னுந்தொழிற் பண்படியாகப்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சத்தினீறுதொக்கது. 94

பொன்னுமாமணியும்புனைசாந்தமும்
கன்னிமாரொடுகாசினியீட்டமும்
இன்னயாவையுமீந்தனளந்தணர்க்
கன்னதானமுமாடையுநல்கினள்.

இ-ள். பொன்உம் மாமணிஉம் புனைசாந்தம்உம் — (அவர்க்குப்பின்பு) பொன்னையும்பெரிய இரத்தினங்களையும்பூசுதற்குரிய சந்தனத்தையும், கன்னிமார் ஒடுகாசினி ஈட்டம்உம் — கன்னிப்பெண்களோடு பூமியின் கூட்டங்களையும், இன்னயாவைஉம் ஈந்தனள் — இவைபோன்ற மற்றையெல்லாப்பொருள்களையுங்கொடுத்து, அந்தணர்க்கு அன்னதானம்உம் ஆடைஉம்நல்கினள் — மறையவர்க்கு அன்னதானத்தையும் வஸ்திரதானத்தையுங்கொடுத்தார்.

இவ்விரண்டும் ஒருதொடராதலால் நல்கினன், ஈந்தனனென்று முற்றாக வெச்சமாய்த் தனித்தனிநல்கினள் என்னும்வினைமுற்றின் முதனிலையைக் கொண்டு முடிதலால்குளகம். இன்னஉவமவுருபிடைச்சொல்லடியாகப்பிற ந்தகுறிப்புவினைப்பெயரெச்சம் இன் உவமவுருபிடைச்சொற்பகுதி, னகர மெய்சந்தி, அ எச்சவிகுதி. 95

நல்கிநாயகனுண்மலர்ப்பாதத்தைப்
புல்லிப்போற்றிவணங்கிப்புரையிலா
மல்லன்மாளிகைக்கோயில்வலங்கொளாத்
தொல்லைநோன்புகள்யாவுந்தொடங்கினன்.

இ-ள். நல்கி [இவர்களுக்குஇவ்வாறுகௌசலாதேவி] தந்து, நாயகன் நாண்மலர்பாதத்தை—இறைவனது அன்றலர்ந்த தாமரைமலர்போன்றதிரு வடியை, புல்லிபோற்றிவணங்கி—தழுவித்துதித்துவணங்கி, புரைஇல்லாத மல்லல்மாளிகை கோயில்வலம்கொளா—சிற்பநூல் விதிப்படியமைந்தபொலி வுமிக்க திருமாளிகையமைந்த திருக்கோயிலைவலங்கொண்டு, தொல்லைநோ ன்புகள்யாவும் தொடங்கினள்—தொன்றுதொட்டுள்ள விரதங்களெல்லாவற் றையுஞ்செய்யத்தொடங்கினர்.

புரைஇலாத குற்றமில்லாத என்பதுபொருளாதலால் சிற்பநூல்விதிப்ப டியமைந்தஎன்றும். கொளா செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினை யெச்சம். 96

மந்திரப்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம். 96.

## மந்தரை சூழ்ச்சிப் படலம்.

---

மந்தரையினது ஆலோசனையை யுணர்த்திய சமூகமென மூன்றுசொல் இரண்டுசெந்தியாய்நிற்றலால் முன்னதுதொழிற் பண்புத்தற்கிழமைப்பொரு ளிலும், பின்னது எய்தப்படுபொருளில்வந்த உருபும்பயனும் உடன்றொக்க இரண்டாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடரிலும்வந்தன. மந்தரைசூழ்ச்சி வருமொழி வல்லெழுத்தியல்பாதல் "ஆவியரமுன்வன்மைமிகா" என்றவிதி யாலும், சூழ்ச்சிப்படலம் வருமொழிமுதல் வல்லெழுத்துமிகுதல் "இயல்பி னும் விதியினும்" என்றவிதியாலுங்கொள்க. மந்தரைகூனி.

கடிகமழ்தாரினன்கணிதமாக்களை
முடிவுறநோக்கியோர்முதன்மைகூறிப்பின்
வடிமழுவாளவற்கடந்தமைந்தற்கு
முடிபுனைகடிகைநாண்மொழிமினென்றனன்.

இ-ள். கடிகமழ்தாரினன்—மணங்கமழு மலர்மாலையையணிந்த தசர தச்சக்கரவர்த்தி, கணிதமாக்களை—நாளைக்கணக்கிடுஞ் சோதிடநூல்வல்லோ ரை, முடிவுறநோக்கி ஓர்முதன்மைகூறி—முடியப்பார்த்து ஒரு உபசாரமொழி யினைக்கூறி, பின்வடிமழுவாளவன் கடந்தமைந்தற்கு—பின்புவடித்தமழுவி னையேந்திய பரசிராமமூர்த்தியையவென்ற இராமமூர்த்திக்கு, முடிபுனைகடி

கைநாள் மொழிமின் என்றனன்—மகுடஞ்சூட்டு முகூர்த்தநாளைக் கூறுங்களென்றுவினவினன்.

இராமமூர்த்தியைச் சொல்லுமிடத்துப் பரசிராமனைவென்றது பலவிடங்களிலும் எடுத்துக்கூறுதல் அவர்மரபிலுள்ளோர்க்கு வழிவழிப்பகைமையாயிருத்தல்பற்றியென்க. மக்கள் மாக்கள் நீட்டல்விகாரம். வாளவற்கடந்தநிலைமொழியினீறுதிரிதல் "இயல்பின்விகாரமும்" என்றசூ—த்ரல். 1

பொருந்துநாளைநின்புதல்வற்கென்றனர்
திருந்தினரன்னசொற்கேட்டசெய்கழல்
பெருந்திண்மால்யானையான்பிழைப்பில்செய்தவம்
வருந்தினன்வருகெனவசிட்டனெய்தினன்.

இ-ள். திருந்தினர்—[சோதிடநூலாராய்ச்சியில்] தேர்ச்சியையுடையவல்லோர், நின்புதல்வற்கு பொருந்தும்நாள்நாளை ஏ என்றனர்—உனதுபுதல்வராகிய இராமமூர்த்திக்கு அமைந்த நாள் நாளையேயென்று கூறினார்கள், அன்னசொல்கேட்ட செய்கழல்பெருந்திண்மால் யானையான்—அந்தச்சொல்லைக்கேட்ட பொன்னாற்செய்த வீரகண்டைகட்டியபெரியதிண்ணியமதமயக்கத்தையுடையயானைச்சேனையையுடைய தசரதச்சக்கரவர்த்தி, பிழைப்புஇல் செய்தவம்வருந்தினன் வருகஎன்ன—குற்றமில்லாதசெய்யுந் தவத்தாலுடல்வருந்திய வசிட்டமுனிவர் வருகவென்றுகூற, வசிட்டன் எய்தினன்—அம்முனிவர்வந்தனர்.

வசிட்டன் என்பதின் முதலில் அகரச்சுட்டுத் தொகுத்தல். அன்னசுட்டுத்திரிபு. வருக என்னும் வியங்கோள் வினைமுற்றி னீறுதொக்கது. பிரிநிலை ஏகாரம் தொகுத்தல். 2

நல்லியன்மங்கலநாளும்நாளையவ்
வில்லியல்தோளவற்கீண்டுவேண்டுவ
ஒல்லையினியற்றிநல்லுறுதிவாய்மையும்
சொல்லுதிபெரிதெனத்தொழுதுசொல்லினன்.

இ-ள். அவில்இயல் தோளவற்கு—அந்தவில்லினையேந்திய தோளையுடைய இராமமூர்த்திக்கு, நல்இயல்மங்கலம் நாள்உம் நாளைஏ—[மகுடஞ்சூட்டுதற்கு] நன்மையமைந்த முகூர்த்தநாளும் நாளையே, ஈண்டுவேண்டுவஒல்லையின் இயற்றி—இவ்விடத்து வேண்டுங்காரியங்களை விரைந்துசெய்து, பெரிதுநல் உறுதிவாய்மைஉம் சொல்லுதி என்ன தொழுதுசொல்லினன்—மிகவும் உயிர்க்குறுதிதரும் உண்மைச்சொல்லையும் சொல்லுவாயென்று வணங்கிக்கூறினன்.

நாளைஎன்பதனிறுதியில் தேற்ற ஏ தொகுத்தல். ஒல்லையென்னுமிடைச்சொல் வினையெச்சப்பொருளில்வந்தது. சொல்லுதி முன்னிலையொருமை எதிர்கால வினைமுற்று சொல்லு பகுதி, து சாரியை, உகரக்கேடுசந்தி, இ விகுதி. 3

முனிவனுமுவகையுந்தானுமுந்துவான்
மநுகுலநாயகன்வாயின்முன்னினன்

அனையவன் வரவுகேட்டலங்கல்வீரனும்
இனிதெதிர்கொண்டுதன்னிருக்கையெய்தினான்.

இ-ள். முனிவன்உம்—வசிட்டமுனிவரும், உவகைஉம் தான்உம் மூந்துவான்—சந்தோஷமுந் தானுமுந்திச்செல்லுகின்றவர், மநுகுலம் நாயகன் வாயில் முன்னினான்—மநுகுலத்தில் தோன்றிய இராமமூர்த்தியின் கோயில் வாயிலையடைய, அலங்கல் வீரன்உம் அனையவன் வரவுகேட்டு—மாலையையணிந்த அவ்விராமமூர்த்தியும் அவ்வசிட்டமுனிவர்வருகையைகேட்டு, இனிது எதிர்கொண்டு தன் இருக்கை எய்தினான்—இனிதாக எதிர்கொண்டழைத்துச்சென்று தாமிருக்குமிடத்தை யடைந்தனர்.

உவகையுந்தானும் இதுதிணைவிரவிச்சிறப்பினால் ஆண்பால் முடிபேற்றன. வீரன் என்பதன் முதலில் அகரச்சுட்டுத்தொகுத்தல். முன்னினான்முற்றெச்சம். 4

வேறு.

ஒல்கலில்தவத்துத்தமனோதுநூல்
மல்குகேள்வியவள்ளலைநோக்கினான்
புல்குகாதற்புரவலன்போர்வலாய்
நல்கும்நானிலம்நாளைநினக்கென்றான்.

இ-ள். தவத்து ஒல்கல்இல் உத்தமன்—தவத்தில் தளர்ச்சியில்லாத வசிட்டமுனிவர், ஓதுநூல்வல்ல கேள்வியவள்ளலைநோக்கினான்—கற்றற்குரிய மனுநூலில்வல்ல கேள்வியையுடைய இராமமூர்த்தியைநோக்கி, போர்வலாய்—போர்த்தொழிலில்வல்ல இராமமூர்த்தியே, புல்குகாதல் புரவலன்—நின்மேலிடையறாத விருப்பத்தையுடைய தசரதச்சக்கிரவர்த்தி, நினக்குநானிலம் நாளைநல்கும் என்றான்—உனக்கு இப்பெரிய வுலகுரிமையை நாளைக்கே தருவானென்று கூறினான்.

உலகு—குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகைப்பகுப்பினதாயிருத்தலால் நானிலம் என்றார். நோக்கினான் முற்றெச்சம். கேள்விய தொழிலடியாகப்பிறந்த குறிப்பு வினைப்பெயரெச்சம். 5

என்றுபின்னுமிராமனைநோக்கிநான்
ஒன்றுகூறுவதுண்டுறுதிப்பொருள்
நன்றுகேட்டுக்கடைப்பிடிநன்றெனத்
துன்றுதாரவற்சொல்லுதன்மேயினான்.

இ-ள். என்று—என்றுகூறி, பின்உம் இராமனைநோக்கி—மீளவுமிராமமூர்த்தியைப்பார்த்து, நான்கூறுவது ஒன்றுஉண்டு—நான்சொல்லுங்காரியமொன்றுள்ளது,உறுதிபொருள்—(அதுவோ)உயிர்க்குறுதிதருஞ்செய்தி, நன்றுகேட்டு கடைப்பிடி—அதனைமிகவுங்கேட்டு உறுதியாகக்கொள், நன்றுஎன்ன—(அது) உனக்கு நன்மைதருவதென்று, துன்றுதாரவன் சொல்லுதல்மேயினான்—மலர்நெருங்கிய மாலையையணிந்த இராமமூர்த்திக்கு வசிட்டமுனிவர் கூறத்தொடங்கினர்.

மேயினன் இறந்தகாலவினைமுற்று மே பகுதி, யகரமெய்சந்தி, இன் இறந்தகால விடைநிலை, அன் விகுதி. 6

கரியமாலினுங்கண்ணுதலானினும்
உரியதாமரைமேலுறைவானினும்
விரியும்பூதமொரைந்தினுமெய்யினும்
பெரியரந்தணர்பேணுதி உள்ளத்தால்

இ-ள். கரியமாலின்உம் கண்ணுதலானின்உம் — கரிய நிறத்தையுடைய திருமாலைப்பார்க்கிலு முருத்திரமூர்த்தியைப்பார்க்கிலும், உரியதாமரைமேல் உறைவானின்உம்—தனக்குரிய தாமரைமலர்மேல்வசிக்கும் பிரமனைப்பார்க்கிலும், விரியும்பூதம்ஓர் ஐந்தின்உம் மெய்யின்உம்—பரந்த பஞ்ச பூதங்களைப்பார்க்கிலும் உண்மையைப்பார்க்கிலும், அந்தணர்பெரியர்—முனிவர்கள் பெரியோராவார், உள்ளத்துஆல் பேணுதி—(ஆதலால் அவர்களை) மனத்தாற்பேணி வழிபடுவாய்.

இதுமுதல் ஆவதற்கும் என்னுஞ்செய்யுள்காறும் முனிவர்களை வழிப்பட்டொழுகுதலைக் கூறுகின்றார். ஆக்கல் காத்தல் அழித்தல் என்னுமுத்தொழில்களையுமொருங்கேயுடையராதலாலும், பஞ்சபூதங்களின் பெருமையினுமிக்கபெருமையையுடையராதலாலும், உண்மையை நிறுத்துவோராதலாலும் பெரியர் என்பார். உயர்வு குறித்தலில்வரும் எல்லைப்பொருளைத்தரும் இன்னுருபுதந்தும், மனத்தின் வழிவாக்கும் காயமும் செல்லுதலால் உள்ளத்தாலென்றுங் கூறினர். 7

அந்தணாளர்முனியவுமாங்கவர்
சிந்தையாலருள்செய்யவுந்தேவரில்
நொந்துளாரையுநொய்துயர்ந்தாரையும்
மைந்தவெண்ணவரம்புமுண்டாங்கொலோ.

இ-ள். மைந்த—இராமமூர்த்தியே, அந்தணாளர் முனியஉம்—அம்முனிவர்கள் கோபிக்கவும், அங்கு அவர் சிந்தையால் அருள்செய்யஉம்—அதுபோல அம்முனிவர்கள் தம்மனத்தா லநுக்கிரகஞ்செய்யவும், தேவர்இல்நொந்துளாரைஉம்நொய்து உயர்ந்தாரைஉம்—தேவர்களுள்ளே கெட்டவரையும் விரைந்து வாழ்ந்தவரையும், எண்ணவரம்புஉம்உண்டுஓ—எண்ணிக்கணக்கிட் டுரைஅவுமுண்டா (இல்லை-என்றபடி.)

முனிதலும் அருள்செய்தலு நினைப்பாலாதலால் சிந்தையால் என்றார். ஆம், கொல் இரண்டும் அசைநிலைகள். நொய்து பண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைக்குறிப்பு வினைமுற்றெச்சம் நொய்மை பகுதி, சுதுகெடுதல் சந்தி து விகுதி. 8

அனையபாதகவினையகிவ்வெய்யதீ
வினையினீங்கியமேலவர்தாளினைப்
புனையுஞ்சென்னியையாய்ப்புகழ்தேந்துதி
இனியகூறிநின்றேயினைசெய்தியால்.

இ-ள். ஐய—இராம மூர்த்தியே, அனையர் ஆதலின்—அம்முனிவர் அத்தன்மையராதலால், இவெய்ய தீவினையின் நீங்கிய மேலவர் தாளினை—இந்தக்கொடிய தீவினையினின்று நீங்கிய அம்முனிவராதுதிருவடியை, புனையும் சென்னியை ஆய்புகழ்ந்து எத்துதி—சூடும் சிரசுடையவனாகிப்புகழ்ந்து துதிப்பாய், இனியகூறிநின்று ஏயினசெய்திஆல்—இனியசொற்களைக்கூறிநின்று, அவர்கள் ஏவினவற்றைச்செய்வாய்.

பாசபந்தத்தினின்று நீங்கினவர் என்பார் இவ்வினையினீங்கிய மேலவர் எனவும், இவர்களை மனம் வாக்குக் காயங்களால்வழிபடுவாய் என்பார் எத்துதி இனியகூறிநின்றே யினசெய்தியெனவுங்கூறினார். ஏயினசெயப்படுபொருள்மேல் நிற்றலால் அஃறிணைப்பலவின்பாற் படர்க்கையிறந்தகாலவினைமுற்றுப்பெயர் ஏ பகுதி, இன் இறந்தகாலவிடைநிலை யகரமெய்சந்தி அவிகுதி.

ஆவதற்குமழிவதற்குமவர்
ஏவநிற்கும்விதியுமென்றாலினி
யாவதெப்பொருளிம்மையுமம்மையுந்
தேவரைப்பரவுந்துணைசீர்த்ததே.

இ-ள். ஆவதற்குஉம் அழிவதற்குஉம்—(உயிர்கள்) வாழ்தற்கும் கெடுதற்கும், விதிஉம் அவர் ஏவநிற்கும் என்றால்—ஆகூழ்போகூழென்னும்ஊழும் அம்முனிவர்களேவ அவ்வழியில் நிற்குமானால், இனிஆவதுஎபொருள்—இனி (அவ்வுயிர்களுக்கு)வருவது எந்தப்பொருள், இம்மைஉம் அம்மைஉம்—இப்பிறப்பிலு மறுபிறப்பிலும், தேவரைபரவும் துணைசீர்த்தது—தேவரை வணங்குமளவிலும் (அம்முனிவரை வணங்குதல்) சிறந்தது.

நன்மையுந் தீமையும்வருவது அவர்களாலே என்பார் இனி ஆவதெப்பொருள் என்றார் விதிஊழ். ஆவதற்கும் அழிவதற்கும் என்றமை பால் ஆகூழ், போகூழ் என்றாம். சீர்த்தது பண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற் படர்க்கை இறந்தகாலவினைமுற்று சீர் பகுதி, தகரமெய்சந்தி, தகரமெய். இடைநிலை ஆ சாரியை, து விகுதி. 10

உருளுநேமியுமொண்கவரெஃகமும்
மருளில்வாணியும்வல்லவர்மூவர்க்கும்
தெருளுநல்லறமுமனச்செம்மையும்
அருளுநீத்தபின்னாவதுண்டாகுமோ.

இ-ள். உருளும் நேமிஉம்—உருண்டுசெல்லும் சக்கராயுதமும், ஒண் கவர் எஃகம்உம்—ஒள்ளியபிளவுபட்ட சூலமும், மருள்இல் வாணிஉம்—மயக்கமில்லாத வாக்குமாகிய இவற்றில், வல்லவர் மூவர்க்குஉம்—வல்லவராகிய பிரமன்முதலிய மூவர்க்கும், தெருள்உம் நல் அறம் உம் மனச்செம்மைஉம் அருள்உம் நீத்தபின்—மயக்கமின்மையையும் நல்லதருமச்செய்கையையும் மனம் நடுநிலைமையில் நிற்றலையும் உயிர்கள்மேற் கருணையையும், நீத்தபின் ஆவது உண்டாகும்ஓ—துறந்தபின் அவர்களாலாகும் படைப்புமுதலிய முத்தொழிலும் நிகழுமோ (நிகழா என்றபடி)

இதுமுதல் தூமகேது என்னுஞ் செய்யுள்காறும் அரசிலக்கணங் கூறுகின்றார்.

பிரமன்முதலிய மூவர்க்கும் இவையிருக்கின் அவர்செயல் நிகழும் என்றமையால் ஏனையோர்செயல் நிகழ்தற்குக்காரணங்கூறவேண்டா என்பார் ஆவதுண்டாகுமோ என்றார். உருளும் என்றது சக்கரத்திற்குரியதொழிலடைமருளில் என்றது ஐயம் திரிபில்லாமையை. நீத்த இறந்தகாலப்பெயரெச்சம் நீ பகுதி. 11

சூதுமுந்துறச்சொல்லியமாத்துயர்
நீதிமைந்தநினக்கிலையாயினும்
ஏதமென்பனயாவையுமெய்துதற்
தோதுமூலமதுவெனவோர்தியே.

இ-ள். நீதிமைந்த—நீதியையியல்பாகவுடைய இராமனே, சூதுமுந்துறசொல்லிய மாதுயர்—சூதாடல் துன்பம் விளைக்குஞ்செயல்களை கூறுமிடத்து முற்படச்சொல்லிய பெருந்துன்பத்தை விளைக்குஞ்செயல், நினக்கு இல்லை ஆயின்உம்—உனக்கு அது இல்லையானாலும், ஏதம் என்பனயாவை உம் எய்துதற்கு—கெடுதியென்று சொல்லப்படும் எல்லாத்துன்பங்களையுமடைதற்கு, ஓதுமூலம் அது என்ன ஓர்தி—பெரியோர்கூறுங்காரணம் அதுவென்றறிவாய்.

இதனால் சூதாட்டத்தால்வரும் கெடுதிகூறப்பட்டது. ஓர்தி முன்னிலையொருமை எதிர்காலவினைமுற்று ஓர் பகுதி, து சாரியை, உகரக்கேடுசந்தி, இ விகுதி. 12

யாரொடும்பகைகொள்ளிலனென்றபின்
போரொடுங்கும்புகழொடுங்காதுதன்
தாரொடுங்கல்செல்லாததுதந்தபின்
வேரொடுங்கெடல்வேண்டலுண்டாகுமோ.

இ-ள். யாரொடுஉம் பகைகொள்ளிலன் என்றபின்—தன்னின் வலியாரோடும் மெலியாரோடும் (ஒருவன்) பகைமைகொண்டிலன் என்றால்—போர்ஒடுங்கும் புகழ் ஒடுங்காது—போர்தொழில்குன்றும் கீர்த்திகுன்றாது, தன்தார் ஒடுங்கல்செல்லாது—தனது சேனையுங்குன்றாது, அதுதந்தபின்—அப்போர்த்தொழிலைச்செய்தால், வேரொடுஉம் கெடல்வேண்டலுண்டாகும் ஓ—அவன் வேரோடும் அறக்கெடுதலைவேண்ட வேண்டுமோ (தானேயுண்டாம் என்றபடி)

என்றபின், தந்தபின், பின்வினையெச்சவிகுதியாதலால் எதிர்காலவினையெச்சங்கள். என் இடைச்சொற்பகுதி, றகரமெய்விரித்தல் விகாரம், அ சாரியை பின் விகுதி. தா பகுதி, முதல்குறுகல் விகாரம், து சாரியை, உகரக்கேடுசந்தி, அ சாரியை, பின் விகுதி. ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. 13

கோளுமைம்பொறியுங்குறையப்பொருள்
நாளுங்கண்டுநடுக்குறுநோன்மையின்
ஆளுமவ்வரசேயரசன்னது
வாளின்மேல்வருமாதவமன்னனே.

இ—ள். மன்னவனே-இராமமூர்த்தியே, கோள் உம்(இந்திரியங்களால்) கொள்ளப்படுஞ் சத்தமுதலிய விடயங்களும். ஐம்பொறிஉம்—மெய்முதலிய பஞ்சேந்திரியங்களும், குறைய—தத்தம்செயலிற்குன்ற பொருள் நாள்உம்க ண்டு—பொருள்வருகையை யெந்நாளும்நோக்கி, நடுக்குறும் நோன்மையின் ஆளும் அ அரசு ஏ (தன்பரிசனமுதலியவற்றால் உயிர்களுக்குவரும் இடையூற் றைக்கண்டால்) நடுங்கும் விரதத்தோடு ஆளுமந்த அரசியலே, அரசு—அரசி யலாம், அன்னது வாளின்மேல்வரும் மாதவம் —அவ்வரசியல் தானேந்திய வாட்படைமேல்வரும் பெருந்தவமாம்.

மனங்காரணமாக இந்திரியங்கள் புலன்வழிச்செல்லுகை அரசனுக்குச் சிறிது சுருங்கில்குடிகளுக்கு இன்பம்பெருகு மாதலால் குறையவெனவும், அரசியலுக்குப்பொருள் ஓரங்கமாதலால் பொருள்நாளுங்கண்டு எனவும், தன் பரிசனத்தாலும், பகைவராலும் கள்ராலும், விலங்குமுதலிய மற்றையுயிர்க ளாலும், குடிகளுக்குவரும் இடையூற்றைக்கண்டால் தனக்குவந்ததுபோலக் கருதிப்பரிகரித்தல் அரசனுக்குப் பெருவிரதமாதலால் நடுக்குறுநோன்மையி னெனவும், இதுவாளால் வருதலால் வாளின்மேல்வரு மாதவமெனவுங்கூறி னார். கோள்முதனிலைதிரிந்த தொழிலாகுபெயர். 14

உமைக்குநாதற்குமோங்குபுள்ளூர்திக்கும்
இமைப்பிலாட்டமோரெட்டுடையானுக்கும்
சமைத்ததோள்வலிதாங்கினராயினும்
அமைச்சர்சொல்வழியாற்றுதலாற்றலே.

இ—ள். உமைக்கு நாதற்குஉம்—உமாதேவிக்குநாயகனாகிய உருத்திர மூர்த்திக்கும், ஓங்குபுள்ளூர்திக்குஉம்—தலைமைபெற்ற கருடவாகனனாகிய திருமாலுக்கும். இமைப்புஇல்நாட்டம்ஓர் எட்டுஉடையானுக்குஉம்—இமைப் பில்லாத எட்டுக்கண்களையுடைய பிரமனுக்கும், சமைந்த தோள்வலிதாங்கி னர் ஆயின்உம் — இயல்பாகச் சமைந்த புயவலிமை யமைந்தவரானாலும், அமைச்சர்சொல்வழிஆற்றுதல் ஆற்றல்—மந்திரிகள் சொல்வழியே தத்தமக் குரிய அதிகாரங்களைச்செலுத்துதல் ஒருபோதுங் குன்றாதவன்மையாம்.

சமைந்தசமைத்தவலித்தல் விகாரம். அமைச்சர் அமாத்தியர் என்னும் வடசொற்றிரிபு. அருகிலிருப்பவர் என்பது பொருள். 15

என்புதோலுடையார்க்குமிலார்க்குந்தம்
வன்பகைப்புலன்மாசறமாய்ப்பதென்
முன்புபின்பின்றிமூவுலகத்தினும்
அன்பினல்லதோராக்கமுண்டாகுமோ.

இ—ள். என்புதோல் உடையார்க்குஉம் (விரதத்தாலிளைத்தலால்) எலு ம்புந்தோலுமே தோன்றுமுடலையுடைய முனிவர்களுக்கும், இலார்க்குஉம்— இளைத்தலில்லாத மற்றையோர்க்கும், தம்வன்பகைபுலன்மாசு அறமாய்ப்பது என்—தமக்குவலியபகையாகிய இந்திரியத்தால்வரும் குற்றமற அதனைக்கெ டுத்தலால் வரும்பயன்யாது, முன்பு பின்பு இன்றி—முன்னுள்ள நட்பையும் முன்னுள்ள பகைமையும்நோக்காது நடுநிலைமையாக, மூவுலகத்தின்உம் அன்

புஅல்லது—மூன்றுலகத்திலுமுள்ள உயிர்கள் மேற்கொள்ளும்அன்பன் றி ஓர்ஆக்கம் உண்டாகும்ஓ—ஒருசெல்வம்வேறுண்டோ (அதுவே பெரும்பயன் விளைக்கும்என்றபடி)

துறவறம் இல்லறம் என்னும் இருவகையறமுடையவரும் புலன்களை யொடுக்கி நல்வழிப்படுத்தல் நெறியென்பார் என்புதோலுடையார்க்குமிலார்க்கு மெனவும், அவ்வன்பின் வழிநிற்பது உயிர் ஆதலால் உயிர்களிடத்துக் கொள்ளும் அன்பே பெருந்தவம் என்பார் அன்பினல்லதோராக்கமுண்டாகுமோ எனவுங்கூறினர். இன்வேண்டா வழிச்சாரியை. ஓ எதிர்மறைப் பொருட்டு. தவமுடையோரும் அஃதில்லோருஞ்செய்யும் பெருந்தவம் உயிர்களிடத்துக்கொள்ளும் அன்பே என்பது இதனாற்கூறப்பட்டது. ஆகும் என்றது ஆம்என்னுங்கட்டுரைச்சுவைப்பொருள்படநின்ற ஓரிடைச்சொல். 16

வையமன்னுயிராகவம்மன்னுயிர்
உய்யத்தாங்குமுடலன்னமன்னனுக்
கையமின்றியறங்கடவாதருள்
மெய்யினின்றபின்வேள்வியும்வேண்டுமோ.

இ-ள். வையம்மன் உயிர்ஆக—உலகிலுள்ள உயிரே நிலைபெற்றதன் உயிராக, அமன்உயிர் உய்யதாங்கும் உடல்அன்ன மன்னனுக்கு—அந்தநிலை பெற்ற உயிர்பிழைக்கத்தாங்கும் உடல்தானகிய அரசனுக்கு, ஐயம்இன்றி அறம்கடவாது—(இம்மைமறுமைப் பயன்தனக்கு வருவதில்) ஐயமில்லாமல் அறநெறியினின்றுந்தவறாது, அருள்மெய் இன்நின்றபின்—அருளாகியஉண்மையில் நின்றால், வேள்விஉம் வேண்டும்ஓ—(அவன் மறுமைப்பயன்வேண்டி)யாகஞ்செய்யவேண்டுமோ (வேண்டாம் என்றபடி)

அருள் என்றதுசம்பந்தங்கருதாது எல்லாவுயிர்களிடத்துஞ் செய்யுங்கருணை, இது அன்பின் பயனுதலால் அன்புடைமைக்குப் பின்னர்க் கூறினர் அன்னஎன்றது உருவகத்தில்வந்த வுவமையுருபாதலால் உடல்தானகிய என்றும். இதுஉவமவுருவகவணி. வையம் இடவாகுபெயர், 17

இனியசொல்லினனீகையனெண்ணினன்
வினையன்றூயன்விழுமியன்வென்றியன்
நினையுநீதிநெறிகடவானெனில்
அனையமன்னற்கழிவுமுண்டாங்கொலோ.

இ-ள். இனியசொல்லினன் ஈகையன்—(உயிர்களுக்கு)இன்சொற்சொல்லுவோனும்கொடுப்போனும், எண்ணினன் வினையன்—நல்ல எண்ணமுடையவனும் நல்லசெயலுடையவனும், தூயன் விழுமியன் வென்றியன்—களங்கமில்லாதவனும் மேலானவனும் வெற்றியையுடையவனுமாய், நினையும்நீதிநெறிகடவான் என்னில்—இவ்வாறுகநினைக்கும் நீதிநெறியினின்று கடவானுனில், அனையமன்னற்கு அழிவும்உண்டாம்ஓ—அந்தஅரசனுக்கு எவராலுங்கேடுண்டாகுமா [உண்டாகாதுஎன்றபடி]

உயிர்களுக்குத் தன்பகைவரால்வரும் தீங்கொழித்தலை வென்றியன் எனவும், இவ்வாறுள்ள அரசனுக்குப்பகைவரில்லையாதலால் அழிவுமுண்டாங்

கொலோ எனவுங்கூறினர். இன்சொல்முதலியவையே நீதியாதலால் இவ்வாறாக நினைக்கும் என்றும். 18

சீலமல்லனநீக்கிச்செம்பொற்றுலைத்
தாலமன்னதனிநிலைதாங்கிய
ஞாலமன்னற்குநல்லவர்நோக்கிய
காலமல்லதுகண்ணுமுண்டாகுமோ.

இ-ள். சீலம் அல்லனநீக்கி—நடு நிலைமையல்லாத செயல்களைநீக்கி செம்பொன் துலைதாலம் அன்னதனி நிலைதாங்கிய—செவந்த பொன்னினை நிறுக்கும் தராசின் நாவைப்போல நடுநிலைமையை மேற்கொண்ட, ஞாலம் மன்னற்கு—நிலவுலகையாளும் அரசனுக்கு, நல்லவர்நோக்கியகாலம் அல்லது காலம் உண்டாகும்ஓ—பெரியோர்கடைக்கணித்த அருட்பார்வையன்றி வேறுபார்வையுமுண்டோ [இல்லைஎன்றபடி]

நோக்கியகாலம் என்றமையால் காலத்தைப் பார்வையென்றும். தீவழியைவிலக்கி நல்வழியிற்செலுத்தும் பெரியோர் செய்யும் அருட்பார்வையே அரசனுக்குக்கண்ணுங்கவசமுமாதலால் கண்ணுமுண்டாகுமோஎன்றார். 19

ஓர்வினல்வினையூற்றத்தினருரை
பேர்வில்தொல்விதிபெற்றுளதென்றரோ
தீர்விலன்புசெலுத்தலிற்செவ்வியோர்
ஆர்வமன்னவற்காயுதமாவதே.

இ-ள். ஓர்வின் நல்வினை ஊற்றதினர்உரை — ஆராய்தலையுடைய நல்வினையிற் பரிசயமுடைய பெரியோர் கூறும்வார்த்தை, பேர்வு இல்தொல் விதி பெற்றுளது என்று—கெடுதலில்லாத தொன்றுதொட்டுள்ள விதியிலமைந்துள்ளதென்று, தீர்வுஇல் அன்புசெலுத்தலின்—(அவ்வார்த்தையில்) நீங்காத அன்பினைச்செலுத்துதலால், செவ்வியோர் ஆர்வம்—அப்பெரியோர் தன்னிடத்துக்கொள்ளுமன்பே, மன்னவற்கு ஆயுதம்ஆவது— அரசனுக்குத் தன்பகைவரைவெல்லும் வாளாயுள்ளது.

மானிடர்தேவர்களால் வருங்குற்றங்கள் பெரியோர் சொல்வழிநிற்கும் அரசனுக்குச் சிறிதுமில்லை யாதலால் மன்னவற் காயுதமாவதே என்றார். அரோ அசை. 20

தூமகேதுபுவிக்கெனத்தோன்றிய
வாமமேகலைமங்கையரால்வரும்
காமமில்லையெனிற்கடுங்கேடெனும்
நாமமில்லைநரகமுமில்லையே.

இ-ள். புவிக்கு தூமகேதுஎன்ன—உலகிற்குப்பின்வருந் தீங்கைமுன்னறிவிக்குங்காலக்கோளைப்போல, தோன்றியவாமம் மேகலைமங்கையர்ஆல் வரும்—காணப்பட்ட ஒளியையுடைய மேகலையையணிந்த பெண்களால்வரும், காமம்இல்லைஎன்னில்—காமம் ஒருவனுக்கில்லாதிருந்தால், கடுங்கேடு என்னும் நாமம் இல்லை—கடிய கெடுதிஎன்னும் அச்சமுமில்லை, நரகம்உம் இல்லை—நரகடைதலுமில்லை.

காமத்தால்வருவது இவையென்பார் கேடு, நாகுனைவும்,அதனைவிட்டோர்க்குஅது இல்லையென்பார் இல்லையெனவுங்கூறினர். 21

ஏனைநீதியினியனவையகப்
போனகற்குவிளம்பிப்புலன்கொளீஇ
ஆனவன்னொடுமாயிரமௌலியான்
தானநண்ணினன் தத்துவநண்ணினன்.

இ-ள். தத்துவம்நண்ணினன்—மெய்ப்பொருளின் பயனையுற்ற வசிட்டமுனிவர், இனியனஏனைநீதி—இனியனவாகிய மற்றநீதிகளையும், வையகம் போனகற்குவிளம்பி—நிலவுலகினையுணவாகக்கொண்ட இராமமூர்த்திக்குக் கூறி, புலன்கொளுவி—அறிவுறுத்தி, ஆனவனொடும்—அந்தஇராமமூர்த்தியோடும், ஆயிரமௌலியான் தானம்நண்ணினன்— ஆயிரமௌலியராகிய இறைவரது திருக்கோயிலையடைந்தார்,

கொளுவியென்னும் இறந்தகாலவினையெச்சம் சொல்லிசை நிறைக்குமுயிரளபெடுத்துக்கொளீஇ எனநின்றது. 22

நண்ணிநாகணைவள்ளலைநான்மறைப்
புண்ணியப்புனலாட்டிப்புலமையோர்
எண்ணுநல்வினைமுற்றுவித்தேற்றினன்
வெண்ணிறத்ததருப்பைவிரித்தரோ.

இ-ள். நண்ணி—திருக்கோயிலையடைந்து, நாகணைவள்ளலை—சார்ப்பசயனத்தையுடைய இராமமூர்த்தியை, நான்மறைபுண்ணியம்புனல் ஆட்டி—நான்கென்னும் வரையறைப்பட்டவேதவிதிப்படிப்புண்ணியவடிவமாகிய நீராட்டி, புலமையோர் எண்ணும் நல்வினைமுற்றுவித்து—அறிவுடையோர்கருதுஞ்சடங்குகளைமுடிப்பித்து,வெள்நிறத்ததருப்பைவிரித்துஏற்றினன்—வெள்ளியநிறத்தையுடைய தருப்பையைவிரித்து அதன்மேல்வசிட்டமுனிவர் ஏற்றினர்.

நாகவணை நாகணை யெனப், பெற்றார்தி என்றாற்போலத் தொகுத்தல் விகாரமாயிற்று. 23

வேறு.

ஏற்றிடவாண்டகையினிதிருந்துழி
நூற்றடமார்பனும்நொய்தினெய்தப்போய்
ஆற்றல்சாலரசனுக்கறிவித்தானவன்
சாற்றுகநகரணிசமைக்கவென்றனன்.

இ-ள். ஏற்றிட—முனிவர்தருப்பையிலேற்ற, ஆண்டகைஇனிது இருந்தஉழி—இராமமூர்த்தி மகிழ்கூர்ந்திருந்தவிடத்து, நூல் தடமார்பன்உம்—உபவீதத்தையணிந்த பரந்தமார்பையுடைய அம்முனிவரும், நொய்தின்எய்த போய்—விரைவில்அடையச்சென்று, ஆற்றல்சால்அரசனுக்கு அறிவித்தான்—வலிமைமிக்க தசரதச்சக்கர்வர்த்திக்குத்தெரிவித்தனர், அவன்நகர் அணி சமைக்கசாற்றுகஎன்றனன்—அச்சக்கரவர்த்திநகரினையங்குள்ளாரலங்கரிக்கப்பறையறைகவென்று வள்ளுவர்க்கு அறிவித்தனன்.

இருந்தஎன்னும் பெயரெச்சத்தினீறுதொக்கது. 24.

ஏவினவள்ளுவரிராமனுளையே
பூமகள்கொழுநனுய்ப்புனையுமௌலியிக்
கோநகரணிகெனக்கொட்டும்பேரியத்
தேவருங்களிகொளத்திரிந்துசாற்றினுர்.

இ-ள். ஏவினவள்ளுவர் (தசரதனுல்) ஏவப்பட்ட வள்ளுவர்கள், இராமன்நாளை ஏபூமகள் கொழுநன் ஆய்மௌலிபுனையும்—இராமமூர்த்தி நாளைக்கே பூதேவிக்குமணமகனுய் முடிசூடுவான் (ஆகலால்), இகோநகர் அணிக என்ன—இந்த அரசநகரை யலங்கரிக்கக் கடவீரென்று, கொட்டும்பேரி—கொட்டாநின்றபேரியால், அதேவர்உம் களிகொள்ள திரிந்துசாற்றினுர்—அந்தத்தேவர்களுங் களிகூர எங்குந்திரிந்து தெரிவித்தார்கள்.

இகரச்சுட்டு இந்நிலவுலகு மேலும், அகரச்சுட்டுத்தேவருலகுமேலுநின்றன வள்ளுவர் பறைசாற்றித்தெரிவிப்போர். அணிக என்னும் வியங்கோள்ீறுதொக்கது. 25

கவியமைகீர்த்தியககாளைநாளையே
புவியமைமணிமுடிபுனையுமென்றசொல்
செவியமைநுகர்ச்சியவெனினுந்தேவர்தம்
அவியமுதன்னவந்நகருளார்க்கெலாம்.

இ-ள். கவி அமை கீர்த்தி அகாளை—செய்யுளிலமைந்த கீர்த்தியையுடைய வக்காளைப்பருவத்தையுடைய இராமமூர்த்தி, நாளை ஏபுவி அமைமணிமுடிபுனையும் என்றசொல்—நாளைக்கே யுலகுரிமையமைய இரத்தினமழுத்திய மகுடஞ்சூடுவானென்றசொல், செவி அமைநுகர்ச்சிய என்னின்உம்—காதால் நுகரும் உணவினவாயிருந்தாலும், அநகர் உள்ளார்க்கு எல்லாம்தேவர்தம் அவிஅமுது அன்ன—அந்த அயோத்திநகரி லுள்ளவர்களுக்கெல்லாம் தேவர்கள் வாயாலருந்தும் தேவருணவொத்திருந்தன.

கேள்வி செவியாலருந்தும், உணவாதலால் செவியமைநுகர்ச்சியவென்ருர், அதுசுவைமிகுதியும் பின்புபயன்படுதலும் உடைமையால். இக்கேள்வியால் துன்பமில்லாமையும் ஆராவின்பமுடைமையும் உண்டாதலால் தேவர்தம் அவியமுதன்ன எனக்கூறினுர். அமைஎன்னு முதனிலை பெயரெச்சவினையெச்சங்களில் வந்தது. 26

ஆர்த்தனர்களித்தனராடிப்பாடினர்
வேர்த்தனர்தடித்தனர்சிலிர்த்துமெய்ம்மயிர்
போர்த்தனர்மன்னனைப்புகழ்ந்துவாழ்த்தினர்
தூர்த்தனர்நீணிதிசொல்லினுர்க்கெலாம்.

இ-ள். ஆர்த்தனர்—(அச்சொல்லைக்கேட்டபொழுது) கோஷித்தவர்களாய், களித்தனர் ஆடிபாடினர்—களிகூர்ந்து ஆடிப்பாடி, வேர்த்தனர்தடித்தனர்—வேர்த்து உடல் பூரித்து, மெய்மயிர் சிலிர்த்துபோர்த்தனர்—அவ்வுடல் புளகரும்பிப்போர்த்து, மன்னனைபுகழ்ந்துவாழ்த்தினர்—தசரதச்சக்கிரவர்த்தியைப் புகழ்ந்து வாழ்த்தி, சொல்லினுர்க்கு எல்லாம் நீள்நிதி தூர்த்த

னர்—(இம்மங்களமொழியைத் தம்மிடத்து) சொன்னவர்களுக்கெல்லாமிக் கநிதியைச்சொரிந்தார்கள்

ஆசைபுதைபடக்கொடுத்தலால் தூர்த்தனர் என்றார். ஆர்த்தனர் என்பது முதல் வாழ்த்தினர் என்பதுகாறும் எச்சமாய்த் தூர்த்தனர் என்னும்வினைமுற்றின் முதனிலையைத்தனித்தனி கொண்டன. "வினைவேறுபடுக்கினும் ஒருதம் மெச்சமீறுறமுடியும்" என்ற சூத்திரத்தால். 27

திணிசுடரிரவியைத்திருத்துமாறுமப்
பணியிடைப்பள்ளியான் பரந்தமார்பிடை
மணியினைவேகடம்வருக்குமாறும்போல்
அணிநகரணிந்தனரருந்திமாக்களே.

இ-ள். அருந்திமாக்கள்—அவ்வாறு ஆசைகூர்ந்த அந்நகரிலுள்ள மக்கள், திணிசுடர்இரவியை திருத்தும்ஆறுஉம்—மிக்கஒளியையுடைய சூரியனைத்திருத்தும் வகையையும், அபணிஇடைபள்ளியான் பறந்தமார்பு இடை—அந்த ஆதிசேடனிடத்துப் பள்ளிகொண்ட திருமாலினது பரவியமார்பிலுள்ள, மணியினை வேகடம்வருக்கும் ஆறுஉம்போல—கவுத்துவமணியைப்புதுக்கும் வகையையும்போல அணிநகர் அணிந்தனர்—அழகமைந்த அயோத்திநகரை யலங்கரித்தனர்.

ஆண்பாலும் பெண்பாலும் ஒத்தமகிழ்ச்சியையுடையவராய் அலங்கரித்தனர் என்பதுதோன்ற ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் பொதுச்சொல்லால் அருந்திமாக்கள் அணிந்தனர். விளக்கத்திற்கு விளக்கஞ்செய்தனர் என்பதுபோதரலால் உதாரவணி. வேகடம்வருத்தல் ஒருசொல். 28

வெள்ளியகரியனசெய்யவேறுள
கொள்ளைவான்கொடிநிரைக்குழாங்கள்தோன்றுவ
கள்ளவிழ்கோதையான்செல்வங்காணிய
புள்ளெலாந்திருநகர்புகுந்தபோன்றவே.

இ-ள். வெள்ளியகரியனசெய்ய—வெண்மைநிறமுடையவனும் செந்நிறமுடையனவும், வேறுஉள்ள—மற்றைநிறமுள்ளனவுமாகிய, கொள்ளைவான் கொடிநிரைகுழாங்கள் தோன்றுவ—மிக்கபெரிய கொடிவரிசையின் கூட்டங்கள்தோன்றுகின்ற (அத்தோற்றம்) கள்அவிழ்கோதையான் செல்வம்காணிய—தேனொடுமலர்ந்த மலர்மாலையை யணிந்த இராமமூர்த்தியின் அரசியற்செல்வத்தைக்காண, புள்எல்லாம் திருநகர்புகுந்தபோன்ற—பறவைச்சாதிகளெல்லாம் அழகிய அயோத்திநகரிற் புகுதலையொத்திருந்தன.

நிறத்தொடுகூட்டி வேறுள என்றமையால் பொன்மையையும் பசுமையையுங்கொள்க. தோற்றுவஎன்னும் பலவின்பாற்படர்க்கை வினைமுற்றுனின்று பிரிந்த தோன்றல் என்னும் தொழிற்பெயர் வினைமுதலாய்ப்போன்ற என்னும் பயனிலையையும், புகுந்தவென்னும் பலவின்பாற்படர்க்கை வினைமுற்றினின்று பிரிந்தபுகுதல் என்னுந்தொழிற்பெயர் இரண்டனுருபேற்று அப்பயனிலையையுங்கொண்டன. 29

மங்கையர்குறங்கென வகுத்தவாழைகள்
அங்கவர்கழுத்தெனக்கமுகமார்ந்தன
தங்கொளிமுறுவலிற்றாமநான்றன
கொங்கையைநிகர்த்தனகனககும்பமே.

இ-ள் வாழைகள் மங்கையர் குறங்கு என்னவகுத்த—(அந்நகரத்தில்) வாழைமரங்கள் மங்கைப்பருவப்பெண்கள்தொடைபோல வகுக்கப்பட்டிருக்கின்றன, கமுகம் அங்கு அவர்கழுத்து என்ன ஆர்ந்தன — கமுகமரங்கள் வகுத்தவாழைகளிடத்து அப்பெண்கள்கழுத்தைப்போலநிறைந்துள்ளன, தாமம் ஒளிதங்கு முறுவலில்நான்றன—முல்லைமலராலமைந்தமாலைகள் ஒளியமைந்த அவர்கள் பற்கள் வரிசைபோலத்தொங்கின, கனககும்பம்—அங்குவரிசையாக வைத்த பொற்கலசங்கள், கொங்கை ஐநிகர்த்தன— அவர்கள் தனங்களை யொத்திருந்தன.

நான்றன பலவின்பாற்படர்க்கை யிறந்தகாலவினைமுற்று. நால் பகுதி.

முதிரொளியுயிர்த்தனமுடுகிக்காலையிற்
கதிரவன்வேறொருகவின்கொண்டானென
மதிதொடநிவந்தனமகரதோரணம்
புதியனவலர்ந்தனபுதவராசியே.

இ-ள். மகரதோரணம்—மாணிக்கத்தாலமைந்த மகரதோரணங்கள், முதிர்ஒளி உயிர்த்தன— முறுகியகிரணத்தைவீசுதலால், காலையில்முடுகி—உதயகாலத்தில்விரைந்து, கதிரவன்வேறு ஒருகவின்கொண்டான் என்ன—(சூரியன் இளங்கிரணத்தையொழித்துமுதிர்ந்தகிரணத்தைக்கொள்ளுதலால்) வேறொரு பொலிவைக்கொண்டாற்போல, மதிதொட நிவந்தன—சந்திரமண்டிலத்தை யளாவவுயர்ந்தன, புதவராசி—கதவின்கூட்டங்கள், புதியன அலர்ந்தன—பண்டையவடிவொழிந்து புதியனவாய்விளங்கின.

இளங்கிரணத்தையுடைய சூரியன் தோரணங்களால் முதிர்த்த கிரணத்தைவீசுதலால் கதிரவன் வேறொருகவின்கொண்டானென என்றார். மகரதோரணம்முதிரொளியுயிர்த்தனவாகிமுடுகி மதிதொடநிவந்தனஎனவும், புதவராசிகள் கதிரவன் வேறொருகவின்கொண்டானென்னப்புதியனவலர்ந்தன எனவும் பொருள்கொள்ளுதலும் ஒன்று. உயிர்த்தன என்னும் அஃறிணைப் பலவின்பாற்படர்க்கையிறந்தகால வினைமுற்றினின்று பிரிந்ததொழிற்பெயர் மூன்றனுருபேற்று நிவந்தன என்னும்வினைமுற்றின் முதனிலைகொண்டது -உயிர், நிவ பகுதிகள்.

துனியுறுசெம்மணித்தூணம்நீறுதோய்
வனிதையோர்கூறினன்வடிவுகாட்டின
புனைதுகிலுறைதொறும்பொதிந்துதோன்றின
பனிபொதிகதிரெனப்பவளத்தூண்களே.

இ-ள். துன்னி உறுசெம்மணி தூணம்—மாடங்களில் நெருங்கியமைந்தசெவந்தமாணிக்கத்தாலமைந்த தூணங்கள்,நீறுதோய்வனிதைஓர்கூறினன் வடிவுகாட்டின—விபூதியையணிந்த உமாதேவியை யோர்பாகத்திலுடைய

உருத்திரமூர்த்தியின் திருவுருவத்தைப்புலப்படுத்தின, பவளம் தூண்கள்—பவளத்தாலமைந்த தூண்கள், பனிபொதிகதிர்என்ன—பனியால் மூடுபட்ட சூரியனைப்போல. புனை துகில்உறைதொறும்பொதிந்து தோன்றின—அலங்கரித்த வெள்ளிய ஆடையாலமைந்த உறைகள்தோறும் மூடுபட்டுக் காணப்பட்டன.

துன்னிதுனி தொகுத்தல். 32

முத்தினின்முழுநிலவெறிப்பமொய்மணிப்
பத்தியினிளவெயில்பரப்பநீலத்தின்
தொத்தினமிருள்வரத்தூண்டச்சோதிட
வித்தகர்விரித்தநாளொத்தவீதியே

இ-ள். வீதி—தெருக்கள், முத்தின் இல் முழுநில எறிப்ப—(ஒருபால்) முத்துவடங்களால் சந்திரகிரணத்தை வீசுதலானும், மொய்மணிபத்தியின் இளவெயில் பரப்ப (ஒருபால்)நெருங்கிய மாணிக்கவரிசையால் சூரியகிரணத்தைப்பரப்புதலாலும், நீலத்துதொத்து இனம் இருள்வர தூண்ட(ஒருபால்) நீலமணித்திரட்சியின் கூட்டம் இருள்பரவ ஒளி தூண்டலாலும்,சோதிடவித்தகர் விரித்தநாள் ஒத்த—சோதிடநூல்வல்லோர்விரித்த கிரகங்களையொத்திருந்தன.

சந்திரன், வெள்ளி வெண்ணிறமுடைமையாலும், சூரியன், செவ்வாய் வியாழம், சேது செந்நிறமுடைமையாலும், புதன், சனி இராகு கருநிறமுடைமை யாலும் வித்தகர் விரித்தநாளொத்த என்றார். எறிப்ப பரப்ப, தூண்டவென்னும் வினையெச்சங்கள் காரணப்பொருள்மேல் நிற்றலால் இறந்தகாலத்தில்வந்தன, இன்வேண்டாவழிச்சாரியை. 33

ஆடன்மான்றேர்க்குழாமவனிகாணிய
வீடெனுமுலகின்வீழ்மானம்போன்றன
ஓடைமாக்கடகளிறுதயமால்வரை
தேடருங்கதிரொடுந்திரிவபோன்றவே

இ-ள். அடல்மான் தேர்குழாம் — வெற்றியமைந்த குதிரைபூண்ட தேரின்கூட்டம், அவனிகாணியவீடு என்னும் உலகு இன் வீழ் விமானம்போன்றன—இந்நிலவுலகிலுள்ள அயோத்தியைக்காணவேண்டிச் சுவர்க்கமென்னும் பொன்னுலகினின்றுவீழ்ந்த விமானங்களை யொத்திருந்தன, ஓடைமாகடகளிறு — நெற்றிப்பட்டத்தையணிந்தபெரியமதத்தையுடைய யானைகள், மால் உதயவரை—பெரிய உதயகிரி,தேடு அருங்கதிரொடும் திரிவபோன்ற—தேடுதற்கரிய சூரியனோடுந் திரிதலையொத்திருந்தன.

திரிவ என்னும் அஃறிணைப்பலவின்பாற் படர்க்கை வினைமுற்றினின்று பிரிந்ததொழிற்பெயர் இரண்டனுருபேற்றுப்போன்றஎன்னும்வினைமுற்றின் முதனிலைகொண்டது. ஓடை கதிரையும், களிறு உதயகிரியையும் ஒத்தன் எனநிற்றலாம் ஒப்புமைக்கூட்டவுவமையணி. 34

வளங்கெழுதிருநகர்வைகும்வைகலும்
பளிங்குடைநெடுஞ்சுவரடுத்தபத்தியில்

வளர்ந்தெழுசுடர்மணியிருளேக்கிறலால்
வளர்ந்திலபிறிந்திலசெக்கர்வானமே.

இ-ள். வளம்கெழு திருநகர்வைகும் பளிங்குஉடைய நெடுஞ்சுவர் அடுத்தபத்தியில்—வளமைமிக்க அழகிய அயோத்தியில் நிலைபெற்ற பளிங்காலமைந்த நீண்ட சுவர்த்தலங்கடுத்துள்ள வரிசையில், வைகலும் கிளர்ந்து எழுசுடர்மணி இருளேகிறல் ஆல்—நாள்தோறும் விளங்கியெழுந்த ஒளிமிக்க மாணிக்கங்கள் இருளினையோட்டுதலால், செக்கர்வானம்—செக்கர்வானமானது, வளர்ந்திலது பிறிந்திலது—வளர்வுமில்லை நீங்கவுமில்லைஎக்காலத்தும் ஒரு தன்மைத்தாயிருந்தது.

வளர்ந்திலது, பிரிந்திலது துவ்விகுதி தொகுத்தல். 35

பூமழைபுனன்மழைபுதுமென்சுண்ணத்தின்
தூமழைதரளத்தின்றோமில்வெண்மழை
தாமிழைநெரிதலிற்றகர்ந்தபொன்மழை
மாமழைநிகர்த்தனமாடவீதியே.

இ-ள். மாடம் வீதி—மாடங்கள் நெருங்கிய வீதியில், பூ மழை—மலர் மழையும், புனல்மழை—(தாரைவார்க்கும்) நீர்மழையும், புதுமென்சுண்ணம் தூமழை—புதியமெல்லிய பரிசுத்தமாகிய சுண்ணமழையும், தோம்இல்வெள் தரளம்மழை—குற்றமில்லாத வெள்ளியமுத்தமழையும், இழைதாம் நெரிதல் இல்தகர்ந்த பொன்மழை—ஆபரணங்கள் ஒன்றோடொன்று தாக்குதலால் உடைபட்டுச்சிந்திய பொன்மழையும், (சிந்துதலால்) மாமழைநிகர்த்தன—பெருமழையையொத்திருந்தன.

பூமழை புனல்மழையையும், சுண்ணமழை தரளமழையையும், பொன் மழைமாமழையையு நிகர்த்தனஎனப்பொருள் கொள்ளினும் அமையும். அத்து இன் வேண்டாவழிச்சாரியைகள். தகர்ந்த இறந்தகாலப்பெயரெச்சம் தகர் பகுதி. 36

காரொடுதொடர்மதக்களிறுசென்றன
வாரொடுதொடர்கழன்மைந்தராமெனத்
தாரொடுநடந்தனபிடிகள்தாழ்கலைத்
தேரொடுநடக்குமத்தெரிவைமாரினே.

இ-ள். கார் ஒடு தொடர்மதம் களிறு—மேகத்தோடொத்த மதத்தையுடையயானைகள் வார்ஒடுதொடர்கழல் மைந்தர் என்ன சென்றன—வாரொடு பொருந்திய வீரகண்டைகட்டிய புருடரைப்போலச் செல்லாநின்றன, தார் ஒடுபிடிகள்—கிண்கிணிமாலையோடு பெண்யானைகள், கலைதாழ்தேர்ஒடுநடக்கும் அதெரிவைமார்இன்—மேகலைதாழ்ந்தஅல்குலோடுநடக்குமப்பெண்களைப் போல, நடந்தன—நடக்காநின்றன.

வாரொடு தொடர்கழல் மைந்தரெனக்காரொடு தொடர்மதக்களிறுசென்றனவெனவும், தாழ்கலைத்தேரொடு நடக்குமத்தெரிவைமாரின் தாரொடுபிடிகள்நடந்தன எனக்கொள்ளினும்அமையும்; தேர்எனஉபமேயத்தை இலக்கணை

யாக உபமானத்தாற் கூறுதலால் உருவகவுயர்வுநவிற்சியணி. ஆம்கட்டுரைச் சுவைபடவந்த இடைச்சொல். 37

ஏய்ந்தெழுசெல்வமுமழகுமின்பமுந்
தேய்ந்திலவனையதுதெரிகிலாமையால்
ஆய்ந்தனர்பெருகவுமமரரிம்பரிற்
போந்தவர்போந்திலமென்னும்புந்தியால்.

இ-ள். இம்பர் இல் போந்தவர் அமரர்—(விண்ணுலகில் நின்று இம்ம ண்ணுலகிலயோத்திக்குவந்த தேவர்கள், எய்ந்து எழுசெல்வம் உம் அழகுஉம் இன்பம்உம்தேய்ந்தில—பொருந்தியெழுந்த செல்வமுங்காட்சியும் இன்பமுந் தம்முலகிற்குக்குறைந்தில, அனையதுதெரிகிலாமையால்—அதனால் வேற்று மைதெரியாமல், பெருகஉம் ஆய்ந்தனர்—இதுவிண்ணுலகோ மண்ணுலகோ வென்றுமிகவு மாராய்ந்தனர், போந்திலம் என்னும்புந்தியால்—(நாம்மண்ணு லகில்) வந்திலமென்னும் அறிவால்.

போந்தவர் வினைமுற்றுப் பெயரெச்சமாய் அமரர்என்னும் வினைமுதற் பொருள்கொண்டது. புகு பகுதி உகரம் ஒகாரமாகத் திரிதலும் ஈறுகெடுத லும் நகரத்தோற்றமும்சந்தி, தகரமெய் இறந்தகாலவிடைநிலை, அகரம்சாரி யை, வகரமெய்சந்தி, அர் பலர்பால்விகுதி. போந்திலம் என்னும் எதிர்மறை த்தன்மைப்பன்மைவினைமுற்று இறந்தகாலவிடைநிலைபெற்று வந்தது. ஒப் புமையால் ஒன்றனை இதுவோ வதுவோவென்று சந்தேகித்தால்ஐயவணி. 38

அங்ககரணிவுறுமமலைவானவர்
பொன்னகரியல்பெனப்பொலியுமெல்லையில்
இன்னல்செயிராவணனிழைத்ததீமைபோல்
துன்னருங்கொடுமனக்கூனிதோன்றினாள்.

இ-ள். அநகர்—அந்த அயோத்திநகரம், அணிவுறும் அமலை—அலங்க ரிக்குமாரவாரத்தால், வானவர் பொன்நகர் இயல்பு என்ன—தேவர்களது பொன்னுலகம்போல, பொலியும் எல்லையில்—விளங்குங்காலத்தில், இன் னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்—(உயிர்களுக்கு) துன்பஞ்செ ய்யும் இராவணன்செய்த தீவினைப்பயன்போல, துன்அருங்கொடுமனம்கூனி தோன்றினாள்—நன்மையடைதலில்லாத கொடியமனத்தையுடையகூனியெ ன்பவள் வெளிப்பட்டாள்.

இராமமூர்த்தி யரசியலிழத்தல் இராவணன் அரசியலிழந்துஅழிதற்குக் காரணமாதலால் தீமைபோற் கூனிதோன்றினாள் என்றார். இராவணன் திருக்கயிலையின் கீழ்ப்பட்டமுதலையுடையவன். யாவரும் அழச்செய்பவன் என்று பொருள்கூறுவாருமுண்டு. 39

தோன்றியகூனியுந்துடிக்குநெஞ்சினள்
ஊன்றியவெகுளியாளுலைக்குமுள்ளத்தாள்
கான்றெரிநயனத்தாள்கதிக்குஞ்சொல்லினாள்
மூன்றுலகினுக்குமோரிடுக்கண்மூட்டுவாள்.

இ-ள். தோன்றியகூனிஉம்—(இராமமூர்த்தி முடிசூடுதலைக்கேள்வியுற்று)வெளிப்பட்டமந்தரையும், துடிக்கும்நெஞ்சினள்—பதைக்குமனமுடையவளாய், ஊன்றியவெகுளியாள்—முதிர்ந்தகோபமுடையவளாய், உளைக்கும் உள்ளத்தாள்—வருந்துமனமுடையவளாய், கான்றுஎரிநயனத்தாள்—கோபாக்கினியைக்கக்கியெரியுங் கண்களையுடையவளாய், கதிக்கும்சொல்லினள்—தடித்தசொல்லையுடையவளாய், மூன்றுஉலகினுக்கு உம்—சுவர்க்கமத்தியபாதலமென்னு மூன்றுலகத்திற்கும், ஓர் இடுக்கண் மூட்டுவாள்—ஒருபெருந்துன்பத்தை மூள்விக்கின்றவளாய்.

ஊன்றியஇறந்தகாலப்பெயரெச்சம் ஊன்று பகுதி, கடைக்குறையாய்நின்ற இன் இறந்தகாலவிடைநிலை, யகரமெய்சந்தி, அ எச்சவிகுதி. கான்று இறந்தகாலவினையெச்சம்கால் பகுதி, லகரத்திரிபுசந்தி, றகரமெய் இடைநிலை, உ எச்சவிகுதி. 40

தொண்டைவாய்க்கேகயன்றோகைகோயின்மேன்
மண்டினாள்வெகுளியின்மடித்தவாயினாள்
பண்டைநாளிராகவன்பாணிவில்லுமிழ்
உண்டையுண்டதனைத்தன்னுள்ளத்துள்ளுவாள்.

இ-ள். தொண்டைவாய்கேகயன் தோகைகோயில்மேல்மண்டினாள்—கோவைக்கனிபோலுஞ் செவந்தவாயையுடைய கேகயநாட்டரசன் புத்திரியாகிய கைகேசியன்னையின் கோயில்நோக்கிச்சென்றவளாய், வெகுளியின்மடித்தவாயினாள்—கோபத்தால் மடித்தவாயை யுடையவளாய், பண்டைநாள் இராகவன்பாணிவில் உமிழ்உண்டை உண்டதனைதன் உள்ளத்துஉள்ளுவாள்—முன்னாளில் இராமமூர்த்தி கரத்திலேந்திய கோதண்டமுமிழ்ந்த உண்டையாலடிபட்டதனை மனத்திற்கருதுகின்றவளாய்.

தொண்டை முதலாகுபெயராய்க் கனிமேல்நின்றது. தோகை-மயில் உவமையாகுபெயராய்க் கைகேசிமேல்நின்றது. பண்டைஎன்றொட்டுக்குற்றியலுகரம்ஐகாரச்சாரியையேற்றது. "ஐயீற்றுடையக்குற்றுகரமுமுளவே" என்றசூத்திரத்தால் உள்ளம்நினைத்தலாகிய வினைக்குமுதற்பொருளாய்மனம் நிற்றலால்வினைமுதற்பொருளில்வந்ததொழிற்பெயர்உள்பகுதி, ளகரத்தோற்றம்சந்தி, அம் விகுதி. ராகவன்ரகுமரபிறந்தவன் ராகவன்எனநிற்றலால் தத்திதாந்தபதம். 41

நாற்கடற்படுமணிநளினம்பூத்ததோர்
பாற்கடற்படுதிரைப்பவளவல்லியே
போற்கடைக்கண்ணளிபொழியப்பொங்கணை
மேற்கிடந்தாடனைவிரைவினெய்தினாள்.

இ-ள். நால்கடல் படுமணிநளினம்பூத்தது—நான்கு திசையிலுமுள்ள கடலில்பிறந்த மாணிக்கம்போலுஞ் செந்நிறம்வாய்ந்த தாமரைமலர்பூத்த, ஓர் பாற்கடல்படுதிரைபவளவல்லிபோல்—ஒருபாற்கடலில்பிறந்த அலையிற்படர்ந்தபவளக்கொடிபோல, கடைக்கண் அளிபொழிய—கடைக்கண்கள் அருள்கர

ந்துயெ'ழிய, பொங்கு அணைமேல் கிடந்தாள் தன்னை—விளங்குவெள்ளிய படுக்கையின்மே லுறங்கிய கைகேசியன்னையை, விரைவின்எய்தினள்—விரைந்தடைந்தாள்.

தோன்றிய என்னுஞ்செய்யுள் முதலிச்செய்யுள்காறும் ஒருதொடராய்க் குளகமாய் நிற்றலால் நெஞ்சினள், வெகுளியாள், உள்ளத்தாள், நயனத்தாள், சொல்லினள், வாயினள், உள்ளுவாள் என்னுங் குறிப்புவினை முற்றுகளும் மூட்டுவாள், மண்டினள்என்னுந்தெரிநிலை வினைமுற்றுகளும் "கச்சினன்கழலினன் செச்சைக்கண்ணியன்" என்றாற்போல எச்சங்களாய்த்தனித்தனிஎய்தினள்என்னும்வினைமுற்றின் முதனிலையைக்கொண்டன. கூனியென்பவள் கைகேசியன்னைக்கு உயிர்த்தோழியாய்ப் பண்டுள்ளவளாதலால் பரதாழ்வாருக்கு முடிசூட்டாது இராமமூர்த்திக்குமுடிசூட்டுதற்கு அமைந்தமையாற் பொறாமைகூர்தலின் துடிக்குநெஞ்சினள், மடித்தவாயினள் எனவும், இராமமூர்த்தி இளம்பருவத்தில் விளையாட்டாக மந்தரைகூன்மேல் வில்லாலடித்தலிற் கவலைகூர்ந்து தானொரிடையூறு செய்தற்குச்சமையம்பார்த்திருந்தவளாதலால் வில்லுமிழுண்டையுண்ட தனைத்தன்னுள்ளத்துள்ளுவாள் எனவுங்கூறினர். உள்ளத்துள்ளுவாள்என்றதற்கு இராமமூர்த்தி இளம்பருவத்தில் வில்லுண்டையாலவள் கூன்நிமிர்ந்தமையால் இயல்பாயுள்ளகூனியென்னும் பட்டத்தை வருத்தி யொழித்தமையால் சமையம்வாய்த்தபோது உன்பட்டத்தையொழிப்பேனென்று சபதங்கொண்டதனைக்கருதினளென்றுபொருள்கூறுவாருமுண்டு. பூத்ததுஎன்பது பெயரெச்சமாய்திரைஎன்னும்பெயர்கொண்டது- மாணிக்கத்தாலமைந்தமஞ்சத்தில்வெள்ளியபடுக்கையிலுறங்கினள்என்னும் உபமேயப்பொருள்தோன்ற நளினம்பூத்ததோர் நாற்கடற்படுமணி நளினம்பூத்ததோர்—பாற்கடற்படுதிரைப் பவளவல்லியேபோல் என்றமையால் நளினம்மஞ்சத்திற்கும், அலைபடுக்கைக்கும், பவளவல்லி கைகேசியன்னைக்கும் ஒப்புமையாய்நிற்றலால் ஒப்புமைக்கூட்டவுவமையணியெனவும், நளினம் உபமேயப்பொருளை யிலக்கணையாகக்காட்டிநிற்றலால் உருவகவுயர்வு நவிற்சியணியும், நளினம்பூத்ததோர்திரை இல்பொருளுவமையணியு மாகநிற்றலால் கலவையணி.

42

எய்தியக்கேகயன்மடந்தையேடவிழ்
நொய்தலர்தாமரைநோற்றநோன்பினால்
செய்தபேருவமைசால்செம்பொற்சீறடி
கைகளிற்றீண்டினள்காலக்கோளனாள்.

இ-ள். காலக்கோள் அன்னாள் எய்தி—காலக் கோலையொத்த கூனி விரைந்தடைந்து, அகேகயனமடந்தை ஏடுஅவிழ் நொய்து அலர்தாமரை—அந்தக்கேகயன்புத்திரியாகிய கைகேசியன்னையின் இதழவிழ்ந்துவிரைந்தலர்ந்த தாமரைமலர், நோற்றநோன்பின் ஆல்செய்த பேர்உவமைசால்—நோற்ற தவத்தால் அடைந்த மிகவும் உவமையாக அமைந்த, செம்பொன்சிறுஅடி கைகள் இல்தீண்டினள்—செவந்தபொன்னிறம்வாய்ந்த சிற்றடியைத்தன்துகைகளாற்பரிசித்தாள்.

காலக்கோள் பின்னடக்குந் தீமையைமுன்னுணர்த்தும் ஒருதீக்கோள் சிறுமை அடி "ஈறுபோதல்" என்றதனால் ஈறுகெட்டுவருமொழிமுதல் உயிர் ஆதலால் "ஆதிநீடல்" என்றதனால் முதல்நீண்டது. தாமரைதவஞ்செய்தலில்லாமையால் இல்புலமும், அதனால் உவமையாதற்பலத்தன்மை அத்தியவசயித்தலுமுடைமையாலிது இல்புலப்பயன்றற்குறிப்பணி. 43

நீண்டலுமுணர்ந்தவத்தெய்வக்கற்பினாள்
நீண்டகண்ணனந்தருநீங்குகிற்றிலள்
மூண்டெழுபெரும்பழிமுடிக்கும்வெவ்வினை
தூண்டிடக்கட்டுரைசொல்லன்மேயினாள்.

இ-ள். நீண்டலும் உணர்ந்த அதெய்வக்கற்பினாள்—கூனிகைகளாற் பரிசிக்க அதனால் துயிலுணர்ந்த அந்தத்தெய்வத்தன்மை வாய்ந்த கற்பினையுடைய கைகேசியன்னை, நீண்டகண் அனந்தர் உம் நீங்குகிற்றிலள்—நீக்ககண் துயிலும் நீங்காதாகவும், மூண்டு எழுபெறும் பழிமுடிக்கும் வெம்வினை தூண்டிட—மூண்டெழாநின்ற பெரும்பழியாக வுலகுள்ளளவும் நிலைநிறுத்துந் தீவினை தூண்டலாலெழ, கட்டுரைசொல்லல்மேயினாள்—உறுதிமொழி கூறத்தொடங்கினாள்.

நீண்டலும்என்னுமெச்சம் காரணத்தின்மேல் நிற்றலாலிறந்தகாலத்தில் வந்தது. நீண்டுபகுதி, உகரக்கேடுசந்தி, அல்விரித்தல்விகாரம், உம்எச்சவிகுதி. நீங்குகிற்றிலள் எதிர்மறை முற்றெச்சமாய்நின்றது. நீங்கு பகுதி, கில்லாற்றலுணர்த்தும் விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, து சாரியை, லகரத்திரிபும் உகரக்கேடும் சந்தி, இல் எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒரு பகுதி, அள்விகுதி "உண்ணகிற்றிலேன்" எனவருதல்காண்க "உண்ணகிற்பன்" என்றாற்போல உடன்பாட்டில் நீங்குகிற்பள் எனவரும். 44

அணங்குவாள்விடவராவணுகுமெல்லையுங்
குணங்கெடாதொளிவிரிகுளிர்வெண்டிங்கள்போற்
பிணங்குவான்பேரிடர்பிணிக்கநண்ணவும்
உணங்குவாயல்லைநீயுறங்குவாயென்றாள்.

இ-ள். அணங்குவாள் விடம் அரா—வருத்துமொள்ளிய விஷத்தையுடைய இராகுவென்னும்பாம்பானது, அணுகும்எல்லையும்—(தன்னைவிழுங்க) வருஞ்சமையத்தும், குணங்கெடாது ஒளிவிரிகுளிர் வெண்திங்கள்போல்—தனதுகுணங்குன்றாது ஒளிவீசுங்குளிர்ந்தவெள்ளிய சந்திரனைப்போல, நீபிணங்குவான் பேர் இடர்பிணிக்க நண்ணஉம—நீவருந்தும்படி பெருந்துன்பமானது உன்னை விழுங்கவரவும்; உணங்குவாய் அல்லை உறங்குவாய் என்றாள்—(அன்றும்) வருந்தாது உறங்காநிற்பாய்-இது என்னவென்றுகூறினாள்,

அணங்காவினைத்தொகை நிலைத்தொடர்; வாள்விடம். இடைப்பிறவரல். பிணிக்க எதிர்காலத்தில்வந்த வினையெச்சம் பிணி பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும்சந்தி, அ எச்சவிகுதி. இது எடுத்துக்காட்டுவமையணி. 45

வெவ்விடமனையவள்விளம்பவேற்கணாள்
தெவ்வடுசிலைக்கையென்சிறுவர்செவ்வியர்

யன்னையின் மனத்திலிருத்தலால், மங்கைஉள்ளம்உம்—கைகேசியன்னையின் மனமும், ஆற்றல்சால் கோசலை அறிவும்ஒத்த—கற்பின் வலிமைமிகுந்த கௌசலாதேவியினுணர்வும் வேற்றுமையில்லாதுதம்முளொத்திருந்தன.

இராமமூர்த்திக்கு மகுடஞ்சூட்டுங்கருத்து அரசனுக்கு இருத்தல்போல இவளுக்கும் இருந்ததேதென்பார் வீரன்றாதைபுக்—கேற்றவளிருதயத்திருக்க எனவும், மனமும்உணர்வும் ஒன்றுபட்டிருத்தல்போல இருவர்மனமும் வேற்றுமையின்றியிருந்தனஎன்பார் உள்ளமுமறிவும் ஒத்தஎன்றார். ஏ, கொல், ஆம் கட்டுரைச்சுவைபடநின்ற இடைச்சொற்கள். அஃது இயல்பு. இருக்ககாரணத்தின்மேல்நிற்றலால் இறந்தகாலத்தில் வந்தது. 51

ஆயபேரன்பெனுமளக்கரார்த்தெழந்
தேய்விலாமுகமதிவிளங்கித்தேசுற
தூயவளுவகைபோய்மிகச்சுடர்க்கெலாம்
நாயகமனையதோர்மாலைநல்கினள்.

இ-ள். தூயவள்—மனத்திற்களங்கமில்லாத கைகேசியன்னை, ஆய பேர் அன்புஎன்னும் அளக்கர்ஆர்த்து எழ—அமைந்தபெரிய அன்பென்னுங் கடல் ஆரவாரஞ்செய்யவும், தேய்வுஇல்லாத முகம்மதி விளங்கிதேசுற—நாளுக்குநாள்தேய்தலும் வளர்தலுமில்லாதமுகமாகிய சந்திரன்விளங்கவும், உவகைபோய்மிக—மகிழ்ச்சிமிகைபடவும், சுடர்க்குஎல்லாம் நாயகம்அனையது ஓர் மாலைநல்கினள்—சந்திரசூரியர்களுக்கெல்லாம் நாயகமாயுள்ள ஒருஇரத்தினமாலையைக்கூனிக்குக்கொடுத்தாள்.

அனையது அத்தன்மையது என்னும்பொருள்மேல்நிற்றலால் நாயகமாயுள்ளஎன்றும். சந்திரனுக்குள்ள வளர்ச்சியையும் தேய்வையும்விலக்கி உருவகஞ்செய்தமையால் தேய்விலாமுகமதியென்றது விலக்குருவகவணி. தேய்விலாயென்றமையால் வளர்ச்சியையுங்கொண்டது உபலக்கணம். 52

தெழித்தனளுரப்பினல்சிறுகண்டீயுக
விழித்தனள்வைதனள்வெய்துயிர்த்தனள்
அழித்தனளழுதனளம்பொன்மாலையால்
குழித்தனணிலத்தையக்கொடியகூனியே.

இ-ள். அக்கொடியகூனி—(மகிழ்வாற்கொடுத்த இரத்தினமாலையையேற்ற) அந்தக்கொடியகூனியானவள், தெழித்தனள் உரப்பினள்—கோபித்தாள் அதட்டினாள், சிறுகண் தீஉக விழித்தனள் வைதனள்—சிறுத்தவிலையுடைய கண்களில் கோபாக்கினி சிந்தவிழித்தாள்வைதாள், வெய்துயிர்த்தனள்—பெருமூச்செறிந்தாள், அழிந்தனள் அழுதனள்—மனமழிந்தாள் அழுதாள், நிலத்தை அம்பொன்மாலையால் குழித்தனள்—நிலத்தினையழகிய அப்பொன்மாலையால் குழிசெய்தனள்.

தனித்தனிபயனிலைகளாகக்கொள்ளாது அழுதனள்என்பதுகாறும் எச்சங்களாக்கிக்குழித்தனள் என்பதனோடு முடிக்கினுமமையும். அழித்தனள் வலித்தல்விகாரம். நிலத்தைக்குழிசெய்தலாவது எறிதலால்.

வேதனைக்கூனிபின்வெகுண்டுநோக்கியிப்
பேதையைபித்திநிற்பிறந்தசேயொடும்
நீதுயர்படுகநின்னெடிதுமாற்றவள்
தாதியர்க்காட்செயத்தரிக்கிலேனென்றாள்.

இ-ள். வேதனை கூனிபின் வெகுண்டுநோக்கி—(தன்வஞ்சினமுடியாமையால்) வருத்தத்தையுடைய கூனியானவள் பின்புகோபித்துப்பார்த்து, இபேதையைபித்தி—இந்த அறியாமையையுடையாய் பிச்சினையுடையாய், நீ நின்பிறந்தசேயொடும் துயர்படுக—நீ யுனக்குப்பிறந்த பிள்ளையோடுந் துயரடையக்கடவாய், நின்நெடிது மாற்றவள்தாதியற்கு ஆள்செயதரிக்கிலேன் என்றாள்—உனக்குவழிவழிப்பகையாயுள்ள கௌசலாதேவியின் தாதிமார்களுக்கு அடிமைசெய்யச்சிறிதும் யான் சகியேனென்று கூறினாள்.

தன்வார்த்தை வழிநில்லாதிருத்தலால் நீ துயர்படுகவென்றாள். இவ்வியங்கோள் விகுதிவைதற்பொருளில்வந்தது. பேதை பகுதி, இ முன்னிலை யொருமைவிகுதி. யகரமெய்சந்தி. இதுபண்படியாகப்பிறந்தமுன்னிலையொருமை வினைமுற்று. பேதை அறியாமை. 54

செவந்தவாய்ச்சீதைபுங்கரியசெம்மலும்
நிவந்தவாசனத்தினிதிருப்பநின்மகன்
அவந்தனுய்வெறுநிலத்திருக்கலானபோ
துவந்தவாறென்னிதற்குறுதியாதென்றாள்.

இ-ள். செவந்தவாய் சீதையும் கரிய செம்மலும்—செவந்த வாயையுடைய சீதாப்பிராட்டியும் கரியநிறத்தையுடைய இராமமூர்த்தியும், நிவந்தஆசனத்து இனிது இருப்ப—உயர்ந்த சிம்மாசனத்தில் வீற்றிருக்க, நின்மகன் அவன் ஆய் வெறுநிலத்து இருக்கல் ஆனபோது—உனதுமகன்வறியனாய் வெற்றுத்தரையிலிருக்க ஆனகாலத்தில், உவந்தஆறுஎன்—நீ மகிழ்கூர்ந்தவகைஎன்ன, இதற்கு உறுதியாதுஎன்றாள்—இம்மகிழ்ச்சியால் உனக்கும் உன் மகனுக்கும் வரும்பயன் என்ன சொல்லுவா யென்றுவினவினாள்.

நிவந்த இறந்தகாலப்பெயரெச்சம் நி பகுதி. 55

மறந்திலள்கோசலையுறுதிமைந்தனும்
சிறந்தநற்றிருவினிற்றிருவுமெய்தினான்
இறந்திலனிருந்தனனென்செய்தாற்றுவான்
பிறந்திலன்பரதனீபெற்றதாலென்றாள்.

இ-ள். கோசலை உறுதிமறந்திலள்—கௌசலாதேவி தன்புத்திரப்பேற்றாலடையும் பயனைமறக்கிலள், மைந்தனும்நல்திருவின் இல்சிறந்ததிருவும் எய்தினான்—இராமமூர்த்தியும் பெருஞ்செல்வத்திற்சிறந்தஅரசச்செல்வத்தையடைந்தான், பரதன் இறந்திலன் இருந்தனன்—பரதாழ்வான்உயிர்விட்டிலன் வாளாவிருந்தான், என்செய்துஆற்றுவான்—இனிஎன்னசெய்து உயிர்பிழைப்பானோ, பரதன் நீபெற்றது ஆல்பிறந்திலன்—நீ அவனைப்பெற்றதால்அரசச்செல்வ மடையாமையால் அரசமரபிலவன்பிறக்கவில்லையென்று கூறினாள்.

இறந்திலன் இருந்தனன் எனஎதிர்காலத்தி விறந்தகாலமாகக்கூறியது தெளிவுபற்றிவந்த காலவழுவமைதி. இறந்திலன் பிறந்தனன் இறந்தகாலவிடைநிலை பெற்றுவந்த எதிர்மறைவினைமுற்றுள். இறக்கின்றிலன் இறக்கிலன் என நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும்வரும். 56

சரதமுப்புவியெலாந்தம்பிதன்னொடும்
வரதனேகாக்குமேல்வரம்பில்காலமும்
பரதனுமிள்வலும்பதியினீங்கிப்போய்
விரதமாதவஞ்செயவிடுதனன்றென்றாள்.

இ-ள். வரதன்ஏ—இராமமூர்த்தியே, சரதம்இ புவிஎல்லாம் தம்பிதன் ஒடும்—உண்மையாக இந்நில வுலகினையெல்லாம் இலட்சுமணப்பெருமானோடு, காக்கும்ஏல்—காப்பானாகில், பரதனும் இளவல்உம் பதியின்நீங்கி போய்—பரதாழ்வானும் சத்துருக்கப்பெருமாளும் அயோத்தியினின்று நீங்கிப்போய், வரம்புஇல்காலம்உம் விரதம்மாதவம் செயவிடுதல் நன்றுஎன்றாள்—எந்நாளும்விரதமமைந்த பெரியதவத்தைச்செய்ய அனுப்புதல் மிகவுநல்லது எனவுங் கூனிசொன்னாள்.

இளவல் பண்பாகுபெயராய்த்தம்பிமேல்நின்றது. இளமைபண்புப்பகுதி, அல் பண்புப்பெயர்விகுதி, ஈறுகெடுதலும் வகரத்தோற்றமும் சந்தி. வரம்பு இல் எண்ணுதலில்லாதஎன்னும் பொருள்மேல்நிற்றலால் எந்நாளும்என்றாம்.

பண்ணுறுகடகரிப்பரதன்பார்மகள்
கண்ணுறுகவினராயினிதுகாத்தவம்
மண்ணுறுமுரசுடைமன்னர்மாலையில்
எண்ணுறப்பிறந்திலனிறத்தனன்றென்றாள்.

இ-ள். பண் உறுகடம்கரிபரதன்—அலங்கரித்தலமைந்த மதமொழுகும் யானைச்சேனையையுடைய பரதாழ்வான், பார்மகள் கண்உறுகவினர் ஆய்—பூதேவிக்கு இரண்டுகண்களையுமொத்த பொலியுடையவராய், இனிதுகாத்த அமண்உறு முரசுஉடைய மன்னர்மாலையில்—இனிதாக உயிர்களையோம்பிய ஒப்பனையமைந்த முரசினையுடைய அந்தமநுச்சக்கரவர்த்தி முதலிய அரசர்கள்கோவையில், எண் உறபிலந்திலன்—இவனுமொருவனாக வைத்தெண்ணப்பிறந்திலன்; இறத்தல் நன்றுஎன்றாள்—(இருப்பதிலும்) அவனிறப்பது நல்லதென்றுகூறினாள்.

உயிர்களின்பங்கூர்தலை ஓம்புதல்மேலேற்றிக்கூறினார், காரணகாரியங்கட்கு ஒற்றுமையுண்மையால். 58

பாக்கியம்புரிந்திலாப்பரதன்றன்னைப்பண்
டாக்கியபொலன்கழலரசனுணையால்
தேக்குயர்கல்லதர்கடிதுசேணிடைப்
போக்கியபொருளெனக்கின்றுபோந்ததால்.

இ-ள். பாக்கியம்புரிந்துஇல்லாத பரதன்தன்னை—அரசியற்பேறுடைய முற்பிறப்பில் தவஞ்செய்யாத பரதாழ்வானை, பொலன் ஆக்கியகழல் அரசன் பண்டுஆணையால்—பொன்னாற்செய்த வீரகண்டைகட்டிய தசரதச்சக்கரவர்

த்திமுன்பு தன்னாணையால், தேக்குஉயர்கல்அதர்—தேக்குமரங்களுயர்ந்தகல் வழியில், கடிதுசேண்இடைபோக்கிய பொருள்எனக்கு இன்றுபோந்தது—விரைந்து தூரத்தேசத்திற்செலுத்திய அவ்வரசன்கருத்து எனக்குஇன்றைக்கு வெளிப்பட்டது.

பரதாழ்வானை, அவன் மூதாதையாகிய கேகயநாட்டரசன் பார்க்கவேண்டுமென்னுங் கருத்தினாதலையுணர்ந்து தசரதச்சக்கரவர்த்தி அந்நாட்டிற்குச் செலுத்தினான் என்பதுநூல்வரலாறு. அவ்வரசன்செலுத்தியது இராமமூர்த்திக்கு மகுடஞ்சூட்டுதற்குஎன்று கருதிக்கூறுதலால் இது இலேசவணி, அரசன் கருத்தைப் புலப்படுத்தியது மகுடஞ்சூட்டத் தொடங்கிய தொழிற்குணமாதலால் கடிது ஒன்றன்டார் படர்க்கைக் குறிப்புமுற்று எச்சமாய் நின்றது கடி பகுதி, து விகுதி. 59

மந்தரைபின்னரும்வகைந்துகூறுவாள்
அந்தரந்தீர்ந்துலகளிக்குநீரினால்
தந்தையுங்கொடியனற்றாயுந்தீயளால்
எந்தையேபரதனேயென்செய்வாயென்றாள்.

இ-ள். மந்தரைபின்னர்உம் வகைந்துகூறுவாள் — மந்தரையானவள் யின்னும் வகைசெய்து கூறாநின்றாள், பரதனே—பரதாழ்வானே, அந்தரம்தீர்ந்து—நீ தூரத்தில்நீங்க, உலகுஅளிக்கும் நீரின்ஆல்—அரசியலை இராமமூர்த்திக்குத் தருந்தன்மையால், தந்தைஉம் கொடியன் நல்தாய்உம்தீயள்—உன் பிதாவுங்கெட்டவன் பெற்றதாயுங்கெட்டவள், எந்தையே—என்தந்தையே, என்செய்வாய்என்றாள்—என்னசெய்தாற்றுவா யென்று வருந்திக்கூறினாள்.

வகைந்து இறந்தகால்வினையெச்சம் வகை பகுதி. தீர்ந்துசெயவெனெச்சத்திரிபு. 60

அரைசரிற்பிறந்துபின்னரசரில்வளர்ந்
தரைசரிற்புகுந்துபேரரசியானநீ
கரைசெயற்கருந்துயர்க்கடலில்வீழ்கின்றாய்
உரைசெயக்கேட்கிலையுணர்தியோவென்றாள்.

இ-ள். அரசர் இல்பிறந்து பின் அரசர் இல்வளர்ந்து—அரசர் குடியிற் பிறந்துபின்பு அந்தஅரசாவீட்டிலேவளர்ந்து, அரசர் இல்புகுந்து பேர்அரசி ஆனநீ—அரசர்வீட்டிற்புகுந்து பெரிய அரசியாயுள்ளநீ, கரைசெயற்கு அருந்துயர்கடல் இல்வீழ்கின்றாய்—அளவிடுதற்கரிய துன்பக்கடலில்வீழப்போகின்றாய், உரைசெய்யகேட்கிலை—(நீவிழாதிருக்க)யான்சொல்லுதலையுங்கேட்டிலை, உணர்திஓ என்றாள்—(நீயாகிலும்)தெரிந்து பிழைப்பாயோவென்று கூறினாள்.

துன்பஞ்சிறிது மறியாதவளென்பாள் அரைசரிற்பிறந்து பின்னரைசரில்வளர்ந் தரைசரிற்புகுந்து பேரரசியான நீ என்றாள். வீரமிகுதியைக் கூறுதற்கு "எய்போற்கிடக்கின்றானெந்தை—நுந்தை கண்ணின்றான்" எனப்பிறர் கூறுதலுங் காண்க இது குறிப்பணி. அரசர்அரைசர் எனவந்தது இடைநிலைப்போலி. 61

கல்வியுமிளமையுங்கணக்கிலாற்றலும்
வில்வினையுரிமையுமழகும்வீரமும்
எல்லையில்குணங்களும்பரதற்கேயவை
புல்லிடையுகுத்தமுதேயும்போலென்றாள்.

இ-ள் கல்விஉம் இளமைஉம் கணக்குஇல் ஆற்றல்உம்—(அரசியலுக்குரிய) கல்வியுமிளமைப்பருவமும் அளவிலாத வலிமையும், வில்வினைஉரிமைஉம் அழகுஉம் வீரம்உம்—வில்லாண்மையுரிமையும் அழகும்வீரத்தன்மையும், எலை இல் குணங்கள்உம் பரதற்கு—அளவில்லாதநற் குணங்களும் பரதனுக்கேயுரியன, அவை புல்இடை உகுத்த அமுதுஉம்போல் என்றாள்—அவைகள் பயன்படாமையால் புல்லிற்சிந்திய தேவருணவையும் ஒக்கும்.

நரைதிரை மூப்புகளைப்போக்கும் அமுதினைப்பெற்றவொருவனுண்ணாது புல்லிற்சிந்தியதுபோல, அரசியலுக்குரிய நற்குணங்களைப்பெற்ற பரதாழ்வான் அவ்வரசியலைப்பெறாமையால் அவைபுல்லிடையுகுத்தமுதேயும்போலென்றாள்என்றார். அது என்னும்பாடம் கல்விமுதலியவற்றைச் சுட்டாமை காண்க. உகுத்தஎன்னும் இறந்தகாலப்பெயரெச்சம் ஈறுதொக்கது. ஏஇரண்டனுள் முன்னதுபிரிநிலை, பின்னதுஅசைநிலை. உம்மைஉயர்வு சிறப்புப் பொருட்டு. போல்என்னும் இடைச்சொல்லடியாகப் பிறந்த வினைப்பகுதி வினை முற்றுப்பொருள்மேல்நின்றது. அவை அமுதுபோலும்என்றது பான்மயக்குறழ்ச்சி. 62

சலிநிலைத்துறை.

வாய்கயப்புறமந்தரைவழங்கியவெஞ்சொல்
காய்கனற்றலைநெய்சொரிந்தெனக்கதங்கனற்ற
கேகையர்க்கிறைதிருமகள்கிளரிளவரிகள்
தோய்கயற்கண்கள்செவப்புறநோக்கினள்சொல்லும்.

இ-ள். வாய்கயப்புற மந்தரைவழங்கிய வெஞ்சொல்—வாய்கசக்க மந்தரைகூறியகடுஞ்சொல், காய்கனல்தலைநெய்சொரிந்தால் என்னகதம்கனற்ற—எரியும் நெருப்பில் நெய்யைவார்த்ததுபோலக் கோபத்தைமூட்ட, கேகையர்க்கு இறைதிருமகள் — கேகயநாட்டார்க்கரசன் புத்திரியாகிய கைகேசியன்னை, கிளர்இளவரிகள் தோய்கயல்கண்கள் செவப்புறநோக்கினள் சொல்லும்—விளங்குஞ்சிறிய ரேகைகள்பரந்த கயல்போன்றகண்கள் செவக்கப் பார்த்துச் சொல்லுகின்றாள்.

நோக்கினள் முற்றெச்சம். கயப்புற ஒருசொல். கனற்றஎன்னும் வினையெச்சம் காரணகாரியத்தின்மேல் நிற்றலால் இறந்தகாலத்தில்வந்தது. கனல் பகுதி. இதனடியாகக் கனற்றிய, கனற்றி, கனற்றினான் என வினை விகற்பங்கள்வரும். 63

வெயின்முறைக்குலக்கதிரவன்முதலியமேலோர்
உயிர்முதற்பொருடிறம்பினுமுறைதிறம்பாதோர்
மயின்முறைக்குலத்துரிமையைமனுமுதன்மரபைச்
செயிருறப்புலச்சிந்தையாலென்சொனாய்தீயோய்.

இ-ள். தீயோய்—கொடியவனே, வெயில்குலம் முறைதிசவன் முதலிய மேலோர்—விளங்குங்குலமுறைமையையுடைய சூரியன்முதலிய மேலோர்களாகிய, உயிர்முதல்பொருள் திறம்பினும்—உயிரை முதலாகவுடைய பொருள் தத்தம் நிலையினின்று தவறினும், முறைதிறம்பாதோர்—செங்கோன்முறையினின்று மாறுபடாத மனுச்சக்கரவர்த்திமுதலானவருடைய, மயில் குலத்து முறைஉரிமையை—மயிற்கூட்டத்தின் முறைபோலவருமரசுரிமையை, மனுமுதல்மரபை—அம்மனுச்சக்கரவர்த்தியை முதலாகவுடைய சூரியமரபிலுள்ள ஒழுக்கத்தை, செயிர்உற—(இப்போது) குற்றம்வாய்ப்ப, புலம் சிந்தையால் என்சொன்னாய்—புலலறிவையுடைய மனத்தா லென்னகருதிக் கூறினாய்.

மயில்முறைக்குலத்துரிமையாவது மயில் தான்முதற்பொரித்த குஞ்சுக்குச்சிறைமுளைத்த பின் இரண்டாவதற்குச் சிறைமுளைப்பது. அதுபோல ஸ்ரீராமமூர்த்திக்குப் பட்டங் கட்டியபின் பரதாழ்வானுக்குப் பட்டங்கட்டுதல் முறையென்பாள் புலச்சிந்தையாலென்சொன்னாய் என்றாள் "மூத்தானிருக்க இளையானரசாளக்—கோத்தருமமென்கின்றாய்" எனப்பெருந்தேனார்பாரதத்தில் வருதல்காண்க புலம்அறிவு என்சொன்னாய் என்றதனால் புல்லறிவின்மேல்நின்றது. 64

எனக்குநல்லையுமல்லைநீயென்மகன்பரதன்
தனக்குநல்லையுமல்லையத்தருமமேநோக்கில்
உனக்குநல்லையுமல்லைவந்தூழ்வினைதூண்ட
மனக்குநல்லனசொல்லினைமதியிலாமனத்தோய்

இ-ள். மதிஇல்லாத மனத்தோய் — அறிவில்லாத மனமுடையவளே நீ எனக்கு நல்லைஉம்அல்லை—நீஎனக்கு நல்லவளுமல்லள், என்மகன் பரதன் தனக்குஉம் நல்லைஉம்அல்லை—என்மகனாகிய பரதாழ்வானுக்கும் நல்லவளுமல்லள், அதருமம்நோக்கில் உனக்குஉம் நல்லைஉம்அல்லை—உனக்குள்ளதருமத்தை யாராய்ந்தால் நீஉனக்கு நல்லவளுமல்லள், ஊழ்வினைவந்து தூண்ட மனத்துக்குநல்லனசொல்லினை—தீயூழ்ப்பயன்வந்துஉன்னைத் தூண்டுதலால் உன்மனத்துக்கு இசைந்தன வற்றைச்சொன்னாய்.

அறநெறி யாவர்க்கும் பொதுவாதலால் அத்தருமமேநோக்கில் என்றார். மனத்துக்கு மனக்குசெய்யுள்விகாரம். 65

பிறந்திறந்துபோய்ப்பெறுவதுமிழப்பதும்புகழேல்
நிறந்திறம்பினுநியாயமேதிறம்பினும்நெறியின்
திறந்திறம்பினுஞ்செய்தவந்திறம்பினுஞ்செயிர்தீர்
மறந்திறம்பினுமவரன்முறைதிறம்புதல்வழக்கோ.

இ-ள். பிறந்து இறந்துபோய் பெறுவதுஉம் இழப்பதுஉம்புகழேல்—(ஒருவன்) பிறந்தாயினும் இறந்தாயினும் பெறுதலு மிழத்தலும் புகழானால், நிறம்திறம்பின்உம் நியாயம்திறம்பின்உம்—(இடையில்வந்த) ஒளிகுன்றினு லும் கைக்கொண்டநியாயம் வேறுபட்டாலும், நெறிஇன்திறம் திறம்பின் உம்—நன்னெறியின் கூறுபாடு மாறுபட்டாலும், செய்தவம்திறம்பின்உம்—

செய்யுந் தவத்தினின்று வேறுபட்டாலும், செயிர்தீர்மறம் திறம்பின்உம்—குற்றத்தினின்று நீங்கிய வெற்றிவேறுபட்டாலும், வான்முறைதிறம்புதல் வழக்குஓ—தொன்றுதொட்டுவரும்வான்முறையினின்றுதப்புதல்வழக்காகுமா (அல்லவென்றபடி)

எல்என்னுமெச்சவிகுதி குறிப்பாகவுணர்த்திநின்ற வினையெச்சம் திறம்புதல் என்னுந் தொழிற்பெயர்கொண்டது. திறந்திறம்பினும் என்பதுமுதலாகநின்ற தொடர்கள் நீக்கப் பொருளில்வந்த ஐந்தாம்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர்கள். 66

போதியென்னெதிர்நின்றுநின் புன்பொறிநாவைச்
சேதியாதிதுபொறுத்தனன் புறஞ்சிலரறியின்
நீதியல்லவுநெறிமுறையல்லவுநினைந்தாய்
ஆதியாதலினறிவிலியடங்குதியென்றாள்.

இ-ள். அறிவிலி — அறிவில்லாதவளே, நீதி அல்லஉம் நெறிமுறை அல்லஉம் நினைந்தாய் (எங்கள்மரபின்) நீதியல்லாத காரியங்களையும் தொன்றுதொட்டுவரும் நெறியின்முறைமையல்லாத காரியங்களையும் நீ கருதினாய், புறம் சில அறியின்—புறத்திற்சிலரிதனை யறிவாரானால் பழிப்பார்கள், என்எதிர்நின்றுபோதி—(ஆதலால்) என்னெதிர்நில்லாதுபோவாய், நின்புன்பொறி நாவைசேதியாது இதுபொறுத்தனன்—உனதுபுல்லிய அறிவுவாய்ந்த நாவினையரியாது இவ்வார்த்தையைப் பொறுத்தேன், ஆதிஆதலின்—நீ ஆதியாயுள்ள தோழியாதலால், அடங்குதியென்றாள்—(இனியேனும்) அடங்குவாயென்று கைகேசியன்னை கூறினாள்.

புல்லறிவமைந்த சொல்லாதலால் நாவின்மேலேற்றிப் புன்பொறிநாவென்றாள். பழிப்பார்கள் சொல்லெச்சம். வெயின் முறைக்குலத்துரிமையை என்ற செய்யுள்முதலிதுகாறும் ஒருதொடர்ஆதலால் என்றாள்என்னும்வினைமுற்றுக்கொண்டுமுடிக்க. போதிமுன்னிலை யொருமை யெதிர்காலவினைமுற்று போ பகுதி, து சாரியை, உகரக்கேடுசந்தி, இ விகுதி. 67

அஞ்சிமந்தரையகன்றிலளம்மொழிகேட்டும்
நஞ்சுதீர்க்கினுந்தீர்கிலாதழிநலிந்தென்னத்
தஞ்சமேயுனக்குறுபொருளுணர்த்துகைதவிரேன்
வஞ்சிபோலியென்றடிமிசைவீழ்ந்துரைவழங்கும்.

இ-ள். மந்தரை அமொழிகேட்டும் அஞ்சி அகன்றிலள்—மந்தரையானவளந்தவார்த்தையைக்கேட்டும் அந்தவார்த்தைக்குச் சிறிதும் அச்சங்கூர்ந்து அங்குநின்றும் நீங்கிலள், நஞ்சுதீர்க்கினும் அதுதீர்கிலாது நலிந்தாலென்ன—கொல்லவந்த நஞ்சினையொழித்தாலும் அந்த நஞ்சு ஒழியாது வருத்தினாற்போல, உனக்குதஞ்சமே—உனக்கு நானடைக்கலமே, வஞ்சிபோலி உறுபொருள் உணர்த்துகைதவிரேன் என்று—(ஆதலால்) வஞ்சிக்கொடிபோல் வாய்த்தக்க செய்தியை யுனக்குத் தெரிவித்தலினின்று தவிரேனென்று, அடிமிசைவீழ்ந்து உரைவழங்கும்—(கைகேசியன்னையின்) பாதத்தின்மேல் வீழ்ந்து கூறுவாள்.

நலிந்தென்ன உரைவழங்கும் எனமுடிக்க. இது தொழில்பற்றிவந்தவுவமையணி. நலிந்தென்னவ்தொகுத்தல் விகாரம். நலிந்தால் வினையெச்சவுருமம். 68

மூத்தவற்குரித்தரசெனுமுறைமையினுலகங்
காத்தமன்னனிளையனன்றேகடல்வண்ணன்
ஏத்துநீண்முடிபுனைவதற்கிசைந்தனனென்றால்
மீத்தருஞ்செல்வம்பரதனைவிலக்குமாறெவனோ

இ-ள் அரசுமூத்தவற்கு உரித்து என்னும் முறைமையின்—அரசியல்மூத்தவனுக்கு உரியதென்று நீ கூறுமுறைமையால் உலகம்காத்தமன்னன் இ—உலகினைக்காத்துவந்த தசரதச்சக்கரவர்த்திக்கு, கடல்வண்ணன் இளையன் அன்றுஓ—கடல்போலுங் கரியநிறமுடைய இராமமூர்த்தி யிளையவனல்லவா ஏத்தும் நீள்முடி புனைவதற்கு இசைந்தனன் என்றால்—யாவருந்துதிக்கு நீண்ட மகுடத்தை யவ்விராமமூர்த்தி சூடுதற் கிசைந்தனனானால் மீதரும் செல்வம் பரதனைவிலக்கும் ஆறுஎவன்—மேன்மையமைந்த அந்த அரசச்செல்வம் பரதாழ்வானைமட்டும் விலக்குமுறைமை யெப்படி.

தசரதச்சக்கரவர்த்திக்கு இராமமூர்த்தி இளையனாதலால் போலப்பரதாழ்வும் இளையனாதலால் பரதனைவிலக்குமா றெவனென்றாள். நான்கனுருபுநிற்குமிடத்து இல்என்னும் ஐந்தனுருபு நிற்றலால் உருபுமயக்கம். 69

அறனிரம்பியவருளுடையந்தணரேனும்
பெறலருந்திப்பெற்றபின்சிந்தனைபிறிதாம்
மறநினைந்துமைவலிகிலராயினுமனத்தால்
இறலுறும்படியியற்றுவரிடையறாவின்னல்.

இ-ள். அறன்நிரம்பிய அருள்உடைய அந்தணர்எனும—தருமநிறைந்த கருணையையுடைய முனிவர்களாயினும், பெறல் அருந்திரு பெற்றபின் சிந்தனைபிறிதுஆம்—பெறுதற்கரிய அரசச்செல்வத்தைப் பெற்றபின் அவர்கள் மனமும் வேறுபடும், உம்மைமறம்நினைந்து வலிகிலர் ஆயினும்—உங்களைக்கொல்லுதலைக்கருதிக்கொலைத்தொழிலில் துணியாராயினும், மனத்துஆல் இறலுறும்படி இடையறாத இன்னல் இயற்றுவா—நீங்களே மனத்தால் மங்கும்படி நீங்காத துன்பத்தை யெப்போதுஞ்செய்வார்கள்.

யாவையும் வெறுத்ததுறவிகளாயிருந்தாலும் அரசச்செல்வம் பெற்றாலவர்கள் மனம்வேறுபடும் ஆனால், இவர்கள் மனம்கூறவேண்டாம் என்பாள்சிந்தனைபிறிதாம்எனவும், பரதாழ்வானிருப்பில் தமதரசியலுக்கு இடையூறுமென்றுகருதிக் கொல்லத்துணியாராயினும் ஒருகால் துணிவர்என்பாள் மனத்தாலிறலுறும்படி யியற்றுவரிடையறாவின்னல் எனவுங்கூறினாள். படிவழக்கில் எதிர்காலத்தில்வரும் வினையெச்சவிகுதியாதலால் இறலுறும்படி என்பதனை எதிர்காலவினையெச்சமாகக்கொள்க. இறலுறு பகுதி, உகரக்கேசெந்தி,உம் விரித்தல் விகாரம், படி எச்சவிகுதி. 70

பூரியுந்தன்மகனரசெனிற்பூதலமெல்லாம்
விரியுஞ்சிந்தனைக்கோசலைக்குடைமையாமென்றால்

பரியுநின் குலப்புதல்வற்குமுனக்குமிப்பார்மேல்
உரியதென் னவளுதவியவொருபொருளல்லால்.

இ-ள். தலம்எல்லாம்தன்மகன் வ அரபுரியும்என்னில்—உலகமுற்றும் தனதுபுத்திரனே அரசியக்செலுத்துவானுனல், விரியும்சிந்தனே கோசலைக்கு உடைமையாம்—அதனுல்மகிழ்ச்சிமிக்க கௌசலாதேவிக்கு அவ்வரசச் செல்வமுரியதாம், என்றால், இவ்வாறுனல் பரியும் *நின்குலப்புதல்வற்குஉம் உனக்கும்உம—(அரசியவிழந்து) வருநதும் உனதுமரபிற்றோன்றியபரதாழ் வானுக்கும்உனக்கும், இபார்மேல் அவள்உதவிய ஒருபொருள் அல்லாமல் உரியதுஎன்—இந்நிலவுலகின்மேல் அக்கௌசலாதேவியே மனம்வந்து கொடுத்தஒருபொருள் உங்களுக்கு உரித்தல்லாமல் (உங்களுக்காக) உரியபொருளென்னவிருந்தது.

பூதலமெல்லாம் ஒருமையிற் பன்மைவந்த பால்வழுவமைதி. 71

தூண்டுமின் னலும்வறுமையுந்தொடர்தரத்துயரால்
ஈண்டுவந்துனேயிரந்தவர்க்கிருநிதியவளே
வேண்டியீதியோவெள்குதியோவிம்மனோயால்
மாண்டுபோதியோமறுத்தியோவெங்ஙனம்வாழ்தி.

இ-ள். தூண்டும் இன்னல் வறுமைஉம் தொடர்தர—வருத்தா நின்ற துன்பமும் தரித்திரமும் உன்னைத் தொடர்தலால், துயர் ஆல் ஈண்டுவந்து உன்னை இரந்தவர்க்கு—வறுமைத்துன்பத்தால் இவ்விடத்துவந்து உன்னையிரந்தவர்களுக்கு, இருநிதி—(கொடுக்கும்படி) பெரியதிரவியத்தை, அவளை வேண்டி ஈதி ஓ—அக்கௌசலாதேவியைக் குறையிரந்து கொடுப்பாயோ, வெள்குதிஓ—கேட்க நாணிவாயோ, விம்மல்நோய் ஆல்மாண்டு போதி ஓ—(கொடுத்தற்கு ஒன்றுமில்லையேயென்னும்) துன்பநோயாலிறப்பாயோ, மறுத்தி ஓ—(இரப்பவர்க்கு) இல்லையென்று மறுப்பாயோ, எங்ஙனம வாழ் தி—எவ்வா றுயிர்வாழப்போகின்றாய் (யானறியேன்)

இன்னல் இனிமையல்லாமை யென்னும் பொருள்மேல் நிற்றலால் காரணப்பெயர். தொடர்தர காரணத்தின்மேல் நிற்றலால் இறந்தகாலவினையெச்சம். ஈதி, வெள்குதி முன்னிலையொருமை யெதிர்கால வினைமுற்றுகள் ஈ பகுதி, து சாரியை, உகரக்கேடுசந்தி, இ விகுதி. வெள்கு பகுதி, துசாரியை, உகரக்கேடுசந்தி, இ விகுதி. ஓகாரம் ஐயப்பொருட்டு. 72

சிந்தைசெய்கையிற்றிகைத்தனேயினிச்சிலநாளில்
தந்தமின்மையும்வறுமையுநிற்கொண்டுதவிர்க்க
உந்தையுன்னேயுங்கிளைஞர்மற்றுன்குலத்துள்ளோர்
வந்துகாண்பதுன்மாற்றவர்செல்வமோமதியாய்.

இ-ள். சிந்தைசெய்கையில் திகைத்தனே—உன்எண்ணத்தாலும்அதன் வழிப்பட்ட செய்கையாலுமயங்கினுய், இனி சிலநாள் இல்—இனிச்சிலதினத்தில், உந்தை உன்கிளைஞர் உன்திறத்து உள்ளார்—உன்தந்தையும் உனது உறவினரும் உன்குலத்துள்ளவர்களும், தம் தம் இன்மை [illegible]மை உம் நின்கொண்டு தவிர்க்க—தத்தமக்குரிய இல்லாமையையும் [illegible]மையையுமுன்

னைக்கொண்டு தவிர்க்கும்படி, உன்னைவந்துகாண்பது உன்மாற்றவள்சொல் வம் ஓ—உன்னைவந்து காணுதல் உன்மாற்றவளாகிய கௌசலாதேவியின் செல்வத்தைக் கருதியோ, மதியாய்—நீயேயாலோசித்துப்பாராய்.

உன் மாற்றவளிடத்துக் கேட்டோதருவாய் என்பது உட்கோளாதலால் உன்னை வந்துகாண்பதுன் மாற்றவள் செல்வமோஎன்றாள். கிளைஞர் கிளை போலுந் தொடர்ச்சியையுடையார் என்னும் பொருள்மேல்நிற்றலால் காரண ப்பெயர் கிளை பகுதி, ஞகரம் பெயரிடைநிலை, அர்பலர்பால் விகுதி. மற்று அசைநிலை. அவர்களுக்கு இன்மையும் வறுமையும் பின்னர்க்காண்க. 73

காதலுன் பெருங்கணவனை யஞ்சியக் கனிவாய்ச்
சீதை தந்தையுன் றாதையைத் தெறுகிலன் இராமன்
மாதுலன் னவனுக்கு வாழ்வினி யுண்டோ
பேதை யுன்றுணை யாருளார் பழிபடப் பிறந்தார்.

இ-ள். பேதை—அறிவில்லாதவளே காதல் உன்பெருங்கணவனை அஞ்சி—விருப்பத்தைத்தரும் உனக்குரிய பெருந்தகைமையையுடைய கணவனாகிய தசரதச்சக்கரவர்த்தியை யஞ்சியே, அகனிவாய்சீதைதந்தை உன்தாதையைதெறுகிலன்—கோவைக்கனிபோலும வாயையுடைய அந்தச் சீதாபிராட்டியின் பிதாவாகிய சனகன் உனதுபிதாவைக்கொன்றிலன், அவன் இராமன் மாதுலன்—அச்சநகன் இராமமூர்த்தியின் மாமன், இனிஉந்தைக்குவாழ்வுஉண்டு ஓ—இனி உன்பிதாவுக்கு உயிர்வாழ்தல் எவ்வாறுண்டாகும், பழிபடபிறந்தார் உன்துணையார்உளர்—உனக்கும் உன்பிதாவழியிலுள்ளவர்க்கும் பழிச்சொல் லுண்டாகப்பிறந்தவர் உன்னளவு எவரிருக்கின்றார்கள் (உன்னையன்றியில் லையென்றபடி)

ஓகாரம்எதிர்மறைப்பொருட்டு. அச்சம்என்னுஞ்சொல் இரண்டனுருபு க்கு முடிபாதலால் கணவனையஞ்சி என்றார். 74

மற்றும் நுந்தைக்கு வான்பகை பெரிதுள மறத்தார்
செற்றபோ திவர் சென்றுத வாரெனிற் செருவிற்
கொற்றமென் பதொன் றெவ்வழி யுண்டது கூறாய்
சுற்றமுங் கெடச் சுடுதுயர்க் கடல்விழத் துணிந்தாய்.

இ-ள். மற்றுஉம் நுந்தைக்கு வான்பகைபெரிதுஉள—மீளவும்உனது தந்தைக்குப் பெரியபகைவர் மிகவும் இருக்கின்றார்கள், மறத்தார்செற்றபோது—அப் பகைவர் கோபித்தவனோடெதிர்த்தகாலத்தில், இவர் சென்று உதவார் என்னில்—பரதாழ்வான் முதலியோர் போயுதவாராகில், செரு இல் கொற்றம்என்பது ஒன்று எவழி உண்டு—போர்க்களத்தில் வெற்றியென்னு மொருசெயல் யாரிடத்துள்ளது, அதுகூறாய்—அதனைச்சொல்லாய், சுற்றம் உம் கெடசுடுதுயர்கடல்விழதுணிந்தாய்—உறவினருங்கெட வருத்தும் துன் பக்கடலில்வீழத் துணிந்தனை.

உன்தந்தையிடத்துள்ளதோ பகைவரிடத்துள்ளதோ சொல்லாய் என் பாள் எவ்வழியுண்டதுகூறாய் எனவும், நீ கெடுதலுமன்றியுன் மரபினருங் கெடத் துணிந்தாய் என்பாள் சுற்றமுங்கெடச் சுடுதுயர்க்கடல்விழத் துணிந்

தாய் எனவுங்கூறினாள். நின்றந்தை நுந்தை மரூஉ. அன்றி நும் பகுதி, தைமுறைப்பெயர்விகுதி யெனக்கொள்ளலும் ஒன்று. செற்ற இறந்தகாலப்பெயரெச்சம் செபகுதி, முதனிலையெழுத்தாகத்தோன்றிய றகரமெய் இடைநிலை, உகரக்கேடு சந்தி, அ விகுதி. 75

கெடுத்தொழிந்தனையுனக்கரும்புதல்வனைக்கிளர்நீர்
உடுத்தபாரகமுடையவனொருமகற்கெனவே,
கொடுத்தபேரரசவன்குலக்கோமைந்தர்தமக்கும்
அடுத்ததம்பிக்குமாம்பிறர்க்காகுமோவென்றாள்.

இ-ள். கிளர் நீர் உடுத்தபார் அகம் உடையவன்—விளங்குங்கடல் சூழ்ந்த நிலவுலகத்தை முற்றுமுடைய தசரதச் சக்கரவர்த்தி, ஒரு மகற்கு என்ன கொடுத்தபேர் அரசு—தனது புத்திரனாகிய இராமமூர்த்திக்கேயென்றுகொடுத்தபெரிய அரசியல், அவன் குலம் கோமைந்தர் தமக்கு—அவன் வழியில் வந்த அரசபுத்திரருக்கும், அடுத்ததம்பிக்குஉம் ஆம்—அவனை இடைவிடாதடுத்திருந்த இளையபெருமாளுக்கும் உரியமையாகுமேயன்றி, பிறர்க்கு ஆகுமோ—பரதாழ்வான் முதலியபிறருக்கு ஆகுமாவென்றுகருதாது, உனக்கு அரும்புதல்வனைகெடுத்து ஒழிந்தனை என்றாள்—உனக்கரிய புத்திரனாகிய பரதாழ்வானைக் கெடுத்தா யென்று மந்தரை கூறினாள்.

கெடுத்தொழிந்தனை துணிவுப்பொருளில்வந்த முன்னிலை யொருமையிறந்தகாலவினைமுற்று கெடுபகுதி, தகரமெய்சந்தி, து சாரியை, ஒழி துணிவுப் பொருளில்வந்த விகுதி, அனைத்தும் ஒரு பகுதிநகரமெய்சந்தி, தகரமெய் இடைநிலை, அன்சாரியை, ஐ யிகுதி. தம்பின் என்பது தம்பியெனவந்து மரூஉ. மூத்தவற்கு என்னுஞ் செய்யுள் முதலிதுகாறும் ஒருதொடராதலால் என்றாள் என்னும் வினைமுற்றைத்தந்து முடிக்க. 76

தீயமந்தரையிவ்வுரைசெப்பலுந்தேவி
தூயசிந்தையுந்திரிந்ததுசூழ்ச்சியினிமையோர்
மாயையுமவர்பெற்றநல்வரவுண்மையானும்
ஆயவந்தணரியற்றியவருந்தவத்தானும்

இ-ள். தீயமந்தரை இ உரைசெப்பலும்—கொடியமந்தரையானவளிந்தவார்த்தையைக் கூற, சூழ்ச்சிஇன் இமையோர் மாயைஉம்—ஆலோசனையையுடைய தேவர்கள் செய்த மாயையினாலும், அவர் பெற்ற நல்வரம் உண்மையான்உம்—அவர்கள்பெற்ற நல்லவர மிருத்தலாலும். ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத்து ஆன்உம்—பிரமன் வழிவந்த முனிவர்கள் செய்த தவத்தினாலும், தேவி தூயசிந்தைஉம் திரிந்தது—கைகேசியன்னையின் களங்கமில்லாத மனமும் வேறுபட்டது.

சூழ்ச்சியின் என்றதற்கு மந்தரை ஆலோசனை யாலும் எனப் பொருள் கொள்ளலும் ஒன்று. தேவிவிளையாட்டுடையவளென்பது பொருள் சிந்தையும் என்றதில் உம்மை உயர்வு சிறப்பு, மகமேருவின் சிகரத்தில் பிரமன் முதலிய தேவர்கள் இராவணன் முதலியோர் செய்யுந் துன்பத்திற்கு ஆற்றாதவர்களாய்த் திருமால் வந்தருளுவாராயில் நமக்கெல்லா முண்டென்று கரு

திக் கைகூப்பியிருந்த காலத்தில் அங்கெழுந்தருளித் தசரதசக்கரவர்த்திக்குத் திருமகனாய் வந்து இராவணாதியரை யழிப்போமென்றருளினார் என்பது இந்நூல் வரலாறு. 77

அரக்கர்பாவமுமல்லவரியற்றியவறமுந்
துரக்கநல்லருடுறந்தனடூய்மொழிமடமான்
இரக்கமின்மையன்றோவின்றிவவுலகங்களிராமன்
பரக்குந்தொல்புகழமுதினைப்பருகுகின்றதுவே.

இ-ள். அரக்கர் பாவம்உம் அல்லவர் இயற்றிய அறம்உம் துரக்க— இராவணன் முதலிய அரக்கர்கள் செய்தபாவமும் தேவர்கள் முதலியோர் செய்த புண்ணியமுந் தூண்ட, தூய்மொழிமடமான்—இனியமொழியையுடைய இளமையையுடைய மான்போன்ற கைகேசியன்னை, நல் அருள் துறந்தனள் (இராமமூர்த்தியினிடத்துள்ள) மிக்க கருணையைநீக்கினாள், இரக்கம் இன்மை அன்றோ—அந்த அன்னை கருணையை யொழிந்த தனாலல்லவா, இன்று இ உலகங்கள் இராமன் பரக்கும தொல்புகழ் அமுதினை பருகுகின்றது—இப்பொழுது இந்தச்சுவர்க்க மத்திய பாதலமென்னு மூன்றுலகங்களுமிராமமூர்த்தியின் பரவியதொன்றுதொட்டுள்ள புகழாகிய அமுதத்தைக் காதாகிய வாயால் பருகிவருகிறது.

கைகேசியன்னை யருளுடைய வளாயின் இச்சரித மில்லாமையால்இரக்க மின்மையன்றோ இராமன் புகழமுதினைப்பருகுகின்றது எனக் கூறியது வேற்றுப்பொருள் வைப்பணி "முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்—பின்னொருபொருளி னுலகறிபெற்றி—ஏற்றிவைத்துரைப்பதுவேற்றுப்பொருள் வைப்பே" என்பது சூத்திரம். இதனைவடநூலார் அர்த்தாந்தரந்யாசாலங்காரம் என்பார். முற்றும்மை தொகுத்தல். 78

அனைய நன்மையளாகியகைகயனன்னம்
வினைநிரம்பியகூனியைவிரும்பினணோக்கி
எனையவந்தனையினியையென்மகனுக்குமனையான்
புனையநீண்முடிபெறும்படிபுகலுதியென்றாள்.

இ-ள். அனைய நன்மையள் ஆகிய கைகயன் அன்னம்—இரக்கம் நீங்கிய கேகயநாட்டரசன்பெற்ற அன்னம்போன்ற கைகேசியன்னை, வினைநிரம்பிய கூனியை விரும்பினள் நோக்கி—தீவினையெல்லாங் குடிகொண்ட மந்தரையை விரும்பிப்பார்த்து, என்னை உவந்தனை—என்னைவாழ்விக்கவிரும்பினாய் (ஆதலால்) என்மகனுக்குஉம் இனியை—என்புத்திரனாகிய பரதனுக்குமினியவளானாய், அனையான் புனையும் நீள்முடி பெறும்படி புகலுதி என்றாள்—அப்பரதாழ்வான் சூடுதற்குரிய நீண்ட மகுடத்தைச் சூட ஆலோசனை சொல்லா யென்று கூறினாள்.

புகலுதி முன்னிலை யொருமை யெதிர்காலவினை முற்று புகல் பகுதி, உ, து சாரியை, உகரக்கேடுசந்தி, இ விகுதி. இனியை முன்னிலை யொருமைக்குறிப்பு வினைமுற்று இனிமை பகுதி, ஈறுகெடுதலும் யகரத் தோற்றமும் சந்தி, ஐ முன்னிலையொருமை விகுதி.பெறும்படி எதிர்காலத்தில் வந்த

வினை யெச்சம் பெறு பகுதி, உம்விரித்தல் விகாரம், உகரக்கேடு சந்தி, படி எச்ச விகுதி. 79

மாழையுண்கணியுரைசெயக்கேட்டமந்தரையென்
றோழிவல்லளென் றுணைவல்லளென்றடிதொழுதாள்
தாழுமந்நிலையென் னுரைதலைநிற்பினுலகம்
ஏழுமேழுமுன் னொருமகற்காக்குவெனென்றாள்.

இ-ள். மாழைஉண்கணி உரைசெய்யக்கேட்ட மந்தரை—மாவடுவின் பிளவை வென்ற கண்களையுடைய கைகேசி யன்னை இவ்வாறுகூறக்கேட்டமந்தரை யானவள், என்தோழிவல்லள் என் துணைவல்லள் என்று அடிதொழுதாள்—என்தோழியோ வல்லவள் என் துணைவியோ வல்லவளென்று புகழ்ந்து கூறி அவள் பாதத்தைவணங்கி, தாழும் அ நிலைஎன் உரைதலை நிற்பின்—நீ மனந்தணிந்த அந்த நிலையினின்று எனது வார்த்தை வழிநிற்பாயானல், உலகம் ஏழும் உன் ஒரு மகற்கு ஆக்குவென் என்றாள்—பதினான்குலகங்களையும் உன்னுடைய ஒருமகனுக்கே யுரியன வாகச் செய்வேனென்று சொன்னாள்.

உண் எனச்சொல்வேறுபட்டுப்பொருளுணர்த்துதல் "உண்டற்குரிய வல்லாப்பொருளை—உண்டனபோலக் கூறலுமரபு" என்ற சூத்திரத்தால வந்த வழுவமைதி. தொழுதாள் முற்றெச்சம். ஏழும்ஏழும் எனத் தனித்தனி கூறியது கீழுமேலும் என நிற்றலால். அவள் தாய்வீட்டிலிருந்து சீதனமாகவந்தவளாதலால் என்தோழி என்றாள். 80

நாடியொன் றுனக்குரைசெய்வெனளிர்மணிநகையாய்
தோடிவர்ந்ததார்சசம்பரன் றொலைவுற்றவேலை
ஆடல்வென்றியானருளியவரமவையிரண்டும்
கோடியென்றனளுள்ளமுங்கோடியகொடியாள்.

இ-ள். உள்ளம் உம்கோடிய கொடியாள்—முதுகன்றி மனமும் வளைந்த கொடியவளாகிய மந்தரையானவள், நளிர் மணிநகையாய்—பெருமையமைந்த முத்தினையொத்த பற்களையுடையாய், ஒன்று நாடி உனக்கு உரைசெய்வென் (பயன்தரும்) ஒருகாரியத்தை யாராய்ந்து உனக்குச் சொல்லுவேன் (அது யாதெனில்) தோடுஇவர்ந்ததார் சம்பரன் தொலைவுற்றவேலை—இதழ் பரந்த மாலையையணிந்த சம்பராசுரன் அழிந்தகாலத்தில், அடல்வென்றியான்—மிக்கவெற்றியை யுடையதசரதச்சக்கரவர்த்தி, அருளியவரம்அவை இரண்டு உம் கோடி என்றனள்—கொடுத்தவரங்களிரண்டையும் இப்போது கொள்வாயென்றி கூறினாள்.

. இவர்ந்த இறந்தகாலப்பெயரெச்சம் இவர் பகுதி கோடிமுன்னிலையொருமையெதிர்காலவினைமுற்று கொள் பகுதி, முதல் நீளல் விகாரம். து சாரியை, எகரக்கேடும் தகரத்திரிபும் உகரக்கேடுஞ் சந்தி, இ விகுதி. உள்ளமும் என்றதிலுள்ள உம்மை இறந்தது தழீஇ இயஇழிவு சிறப்புப் பொருட்டு. இரண்டும் என்றதில் நின்ற உம்மை இனைத்தென வறிபொருளில் வந்தமுற்றும் பொருட்டு. ஆடல்நீட்டவிகாரம். 81

இருவரத்தினிலொன்றினலரசுகொண்டிராமன்
பெருவநத்திடையேழிருபருவங்கள்பெயர்ந்து
திரிதரச்செய்தியொன்றினற்செழுநிலமெல்லாம்
ஒருவழிப்படுமுன்மகற்குபாயமீதென்றாள்.

இ-ள். இருவரத்தின் இல்ஒன்றின் ஆல் அரசு கொண்டு—இரண்டு வரங்களிலொருவரத்தால் உன்மகனுக்கு அரசியல் வாங்கி, ஒன்றின் ஆல் இராமன் பெயர்ந்து பெருவநத்து இடை ஏழிருபருவங்கள் திரிதரசெய்தி—ஒருவரத்தால் இராமமூர்த்தி நகரினின்று நீங்கிப் பெரியகாட்டில் பதினான்கு வருடம் சஞ்சரிக்கச் செய்வாய், உன்மகற்கு செழுநிலம் எல்லாம் ஒருவழிப்படும்—உன்மகனுக்கு வளங்குன்றாத நிலவுலகமெல்லாம் ஒரு வழிப்பட்டு அவன் காற்கீழொதுங்கும், இதுஉபாயம் என்றாள்—இதுதான் உபாய மென்றெடுத்துச் சொன்னாள்.

ஒன்று என்னும் வரையறைப்பண்புப்பெயர் வரத்தின்மேல் நிற்றலால் பண்பாகுபெயர், எண்ணெல்லாம் பண்பிலடங்குதலால். ஏழாகியஇரண்டெனநிற்றலால் பண்புத்தொகை நிலைத்தொடர். 82

உரைத்தகூனியையுவந்தனளுயிருறத்தழுவி
நிரைத்தமாமணியாரமுநிதியமுநீட்டி
இரைத்தவேலைசூழுலகமென்னொருமகற்கீந்தாய்
தரைக்குநாயகன்றாயினிநீயெனத்தணியா.

இ-ள். உரைத்த கூனியை உவந்தனள்—இவ்வாறு சொல்லிய மந்தரையை விரும்பி, உயிர்உறதழுவி—உயிரொன்றுபட இறுகப் புல்லி, நிரைத்த மாமணி ஆரம்உம் நிதியம்உம் நீட்டி—பத்திபடப்பதித்த இரத்திநாபரணத்தையும் முத்துவடத்தையும் பொன்னையுங்கொடுத்து, இரைத்த வேலைசூழ் உலகம் என் ஒருமகற்கு ஈந்தாய்—ஒலிக்குங் கடல் சூழ்ந்த நிலவுலகை யென்னுடைய அரிய புதல்வனுக்குக் கொடுத்தாய் (ஆதலால்) இனி நீ யேதரைக்குநாயகன் தாய் என்ன—இனி நீயே யுலகிற்குத் தலைவனாகிய பரதாழ்வானுக்குத் தாயென்று, தனியா (அவள்துன்பத்தை) தணித்து.

அவளையுயிர் போலக் கருதினளாதலால் உயிருறத் தழுவியெனவும், தாய்தன் புதல்வனுக்குச் செய்யு முதவியை அவள் செய்தலாய் தரைக்கு நாயகன்றாயினி நீயெனவும் கூறினாள்.உவந்தனள் முற்றெச்சம்.தணியா செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். 83

நன்றுசொல்லினைநம்பியைநளிர்முடிசூட்டல்
துன்றுகானத்திலிராமனைத்துரத்தலிவ்விரண்டும்
அன்றதாமெனிலரசன்முன்னருயிர்துறந்து
பொன்றிநீங்குதல்புரிவென்யான்போதிநீயென்றாள்.

இ-ள். நன்றுசொல்லினை—நல்லகாரியத்தைச் சொன்னாய், நம்பியை நளிர்முடிசூட்டல்—பரதாழ்வானைப்பெருமையமைந்த முடிசூட்டக்கடவேன், இராமனை துன்றுகானத்துஇல் துரத்தல்—இராமமூர்த்தியை நெருங்கிய காட்டிலோட்டக்கடவேன்,இ இரண்டுஉம் அன்றுஆம்என்னில்—இந்தஇரண்டும்

அல்லவாயின், யான் அரசன்முன் ஆர் உயிர் துறந்து பொன்றிநீங்குதல்புரி வென்—நான் அரசன்முன்னே பெறுதற்கரிய உயிர்விட்டிறந்து நீங்குவேன், நீபோதிஎன்றாள்—நீபோவாயென்று கூறினாள்.

அன்று என்றது உண்டு என்றதுபோல வந்த தாதலால் அல்லவெனப் பொருள்கொண்டாம். அல்லஎன்றது இதுவல்ல மற்றொன்று என்னும்பொருட்டு. சூட்டுல், தூரத்தல் இவ்விரண்டும் உடன்பாட்டு வியங்கோட் பொருளில்வந்த வினைமுற்றுகள் சூட்டு, தூரத்து பகுதிகள், அல் வியங்கோள் விகுதி. 84

கூனிபோனபின் குலமலர்க்குப்பைநின் றிழிந்தாள்
சோனைவார் குழற்கற்றைபிற்சொருகியமாலை
வானவார்மழைநுழைதருமதிபிதிர்ப்பாள்போல்
தேனவாவுறுவண்டினமலமரச்சிதைத்தாள்.

இ-ள். கூனிபோனபின்—மந்தரைபோனபின்பு, குலம்மலர் குப்பை நின்று இழிந்தாள்—ஒருசாதிமலர்க்கூட்டத்தாலமைந்த படுக்கையினின்று மிறங்கி, சோனைவார் குழல்கற்றைஇல் சொருகியமாலை—தேனைச்சோனைப்போலச்சொரியும் நீண்டகூந்தல் நெருக்கில்சொருகிய கண்ணிமாலையை, வானம் வார் மழை நுழைதரு மதி பிதிர்ப்பாள்போல்—ஆகாயத்திற்சஞ்சரிக்கும் பெரியமேகத்தில் நுழையும் சந்திரனைப்பிதிர்க்கின்றவளைப்போல, தேன் அவாவுறு வண்டு இனம் அலமரசிதைத்தாள்—மதுவினைவிரும்பும் வண்டின்கூட்டங்கள் சுழலச்சிந்தினாள்.

இழிந்தாள்முற்றெச்சம். பிதிர்ப்பாள் வினைமுற்றுப்பெயர் பிதிர் பகுதி அலமர எதிர்காலத்தில்வந்த வினையெச்சம் அலமரு பகுதி,உகரக்கேடு சந்தி, அ எச்சவிகுதி. 85

விளையுந்தன்புகழ்வல்லியைவேரறுத்தென்னக்
கிளைகொண்மேகலைசிந்தினள்கிண்கிணியோடும்
வளைதுறந்தனள்மதியில்மறுத்துடைப்பாள்போல்
அளகவாணுதலரும்பெறற்றிலகமுமழித்தாள்.

இ-ள். விளையும் தன்புகழ்வல்லியை வேர்அறுத்தால் என்ன—மேலுமேலும்வளராநின்ற தனதுகீர்த்தியை வேரோடறுத்தாற்போல, கிளைகொள் மேகலை கிண்கிணியோடு உம்சிந்தினள்—கிளைத்தமேகலாபரணத்தைச் சதங்கையணியோடும் அறுத்தாள். வளை துறந்தனள்—வளையலைச்சிந்தினாள், மதியின் இல் மறு துடைப்பாள்போல்—சந்திரனிடத்துள்ள களங்கத்தைத்துடைப்பவளைப்போல, அளகம்வாள் நுதல் அரும்பெறல் திலகம்உம் அழித்தாள்—கூந்தலமைந்த ஒள்ளியநெற்றியிற் பெறுதற்கரிய திலதத்தையு மழித்தனள்.

அறுத்தென்ன தொகுத்தல்விகாரம். இதுவினையெச்ச வுவமம். 86

தூவின்மாமணிக்கலன்மற்றுந்தனித்தனிசிதறி
நாவினன்குழனுனிலந்தைவரப்பரப்பிக்
காவியுண்கண்களஞ்சனங்கான்றிடக்கலுழாப்
பூவுதிர்ந்ததோர்கொம்பெனப்புவிமிசைப்புரண்டாள்.

இ - ள். தாவுஇல்மாமணிகலன்மற்றும்—கெடுதலில்லாத பெருத்த இரத்தினங்க ளழுத்திய ஆபரணங்களையும் மற்றுள்ளனவற்றையும்,தனித்தனி சிதறி—தனித்தனியாகச்சிந்தி,நாவிநல்குழல்நாளிலம்தைவரப்பரப்பி—மிருக மதம்தடவிய இலக்கணமமைந்த கூந்தலை நிலத்திற்றோய விரித்துப்பரப்பி,காவிஉண்கண்கள் அஞ்சனம்கான்றிடகலுழா—நீலோற்பலத்தைவென்ற கண்கள் மையைக்கக்க அழுது, பூஉதிர்ந்தது ஓர்கொம்பு என்னபுவிமிசை புரண்டாள்—பூத்தபூக்களுதிர்ந்த ஒருபூங்கொம்பைப்போலப் பூமியின்மேற்புரண்டு கிடந்தனள்.

தைவர, கான்றிட எதிர்காலத்தில்வந்த வினையெச்சங்கள். தைவரு பகுதி, உகரக்கேடு சந்தி, அ விகுதி,கால் பகுதி,று சாரியை லகரம்தகரம் திரிதலும் உகரக்கேடும்சந்தி, இடுபெகுதிப்பொருள்விகுதி, உகரக்கேடு சந்தி, அ விகுதி.கலுழா செய்யாவென்னும் இறந்தகாலவினையெச்சம் கலுழ் பகுதி ஆவினையெச்சவிகுதி. 87

நவ்வி வீழ்ந்தென நாடகமயில் துயின்றென்னக்
கவ்வைகூர்தரச்சனகியாங்கடிகமழ்கமலத்
தவ்வைநீங்குமென்றயோத்திவந்தடைந்தவம்மடந்தைத்
தவ்வையாமெனக்கிடந்தனள்கைகயன்றனையை.

இ - ள். கைகயன்றனையை—கேகயநாட்டரசன் புத்திரியாகிய கைகேசியன்னை, நவ்விவீழ்ந்தால் என்ன—மான் வீழ்ந்துகிடந்தாற்போலவும், நாடகம்மயில் துயின்றால்என்ன—ஆடுமயில் துயில்கூர்ந்தாற்போலவும், கௌவைகூர்தர—நகரிலுள்ளோர்துன்பங்கூர, சனகிஆம் கடிகமழ்கமலத்து அவ்வைநீங்கும்என்று—சீதாபிராட்டி என்கின்ற மணங்கமழுந்தாமரையில்வசிக்கும்சீதேவிநீங்காநின்றாளென்று,அயோத்திவந்து அடைந்த அ மடந்தைதவ்வை ஆம் என்னகிடந்தனள்—அயோத்திநகரைவந்தடைந்த அச்சிதேவியின் மூத்தாளாகிய மூதேவியைப்போல நிலத்திற்கிடந்தாள்.

வீழ்ந்தாலென்ன, துயின்றாலென்ன தொகுத்தல்விகாரம். சனகன்புத்திரிசானகி இதுதத்திதாந்தபதம்.சனகியென்றது குறுக்கல் நவ்விவீழ்ந்தென மயில் துயின்றென தவ்வையாமெனக் கிடந்தனளென்றது பலபொருளுவமையணி. 88

மந்தரைசூழ்ச்சிப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் கஅசு.

---

## கைகேசிசூழ்வினைப்படலம்.



கைகேசிசூழ்ந்ததீச்செயலினது சமூகமென நான்குசொல் மூன்றுசந்தியாய் முதலிலுள்ளது எழுவாய்த்தொகாநிலைத்தொடரும், இடையிலுள்ளது வினைத்தொகை நிலைத்தொடரும். இறுதியிலுள்ளது ஒன்றன்கூட்டத்தற்கிழமைப்பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத்தொகை நிலைத்தொடருமாகக்கொள்க. கைகேசிசூழ்ந்த வருமொழிமுதல்வல்லெழுத்தியல்பாதல் "ஆவியாமுன்

வன்மைமிகா" என்றவிதியாலும், சூழ்வினைவருமொழி இடையெழுத்தியல்பாதல் 'ஞநமயவக்களியல்பும்' என்றவிதியாலும், வினைப்படலம் வருமொழி முதல் வல்லெழுத்து மிகுதல் "இயல்பினும் விதியினும்" என்றவிதியாலுங் கொள்க.

கலிவிருத்தம்.

நாழிகைகங்குலினள்ளடைந்தபின்றை
யாழிசையஞ்சியவஞ்சொலேழைகோயில்
வாழியவென்றயின்மன்னர்துன்னவந்தான்
ஆழிநெடுங்கைமடங்கலாளியன்னான்.

இ - ள் ஆழிநெடுங்கை மடங்கல் ஆளி அன்னான்—சக்கரத்தையேந்தி யநீண்டகையையுடையவூழித்தீயையும் சிம்மேற்றையுமொத்த தசரதச்சக்ரவர்த்தி, கங்குலின் நாழிகை நள் அடைந்த பின்றை—இரவின்நாழிகை நடுச்சாமமடைந்தபின்பு, யாழிசை அஞ்சிய அம்சொல் ஏழைகோயில்—வீணையினிசையஞ்சுதற்கெல்லையான அழகியசொற்களையுடைய கைகேசியன்னையின்கோயிலில், வாழியவென்று அயில்மன்னர் துன்னவந்தான்—வாழக்கடவாயென்று வேலையேந்திய அரசர்கள் நெருங்கவந்தனன்.

இரவின்நாழிகைநடு அடைதலாவது நடுச்சாமமாதல். பகைவரிடத்து ஊழித்தீயையும் சிம்மேற்றையும்போல விருத்தலால் மடங்கலாளியன்னான் என்றார். அஞ்சியஎன்னும் இறந்தகாலப்பெயரெச்சம் சொல்என்னும் எல்லைப்பொருள்கொண்டது. வாழிய வியங்கோள் வினைமுற்று வாழ் பகுதி, இ சாரியை, ய விகுதி. பின்றை பின் பகுதி. றை பகுதிப்பொருள் விகுதி.

வாயிலின்மன்னர்வணங்கிநிற்பவந்தாங்
கேயினசெய்யுமடந்தைமாரொடேகி
பாயறுறந்தபடைத்தடங்கண்மென்றோள்
ஆயிழைதன்னையடைந்தவாழிமன்னன்.

இ - ள். மன்னர்வணங்கி நிற்பவாயில் இல்வந்து—அரசர்கள் வணங்கி நிற்கக் கைகேசியன்னையின் கோயில்வாயிலில்வந்து, ஆங்குஏயினசெய்யும் மடந்தைமாரொடுஏகி — அவ்விடத்திலேவினவற்றைச் செய்யுந் தோழியர்களோடுசென்று, பாயல் துறந்த படைதடகண்மெல்தோள் ஆயிழைதன்னை—படுக்கையினின்று நீங்கிய வாள்போலப் பரந்தகண்களையும் மெல்லியதோள்களையுமுடைய கைகேசியன்னையை, அடைந்த ஆழிமன்னன்—சேர்ந்த ஆக்கினைச்சக்கரத்தையுடைய தசரதசக்கரவர்த்தி.

தட என்னும் உரிச்சொன்முன்வந்த வல்லெழுத்திற்கு இனவெழுத்துமிகுதல் "இடையுரிவடசொலின்" என்றதனால். ஏயின செயப்படுபொருள் மேல்நிற்றலால் இறந்தகாலவினைமுற்றுப்பெயர் ஏவு பகுதி, இன் இறந்தகால இடைநிலை, ஈறுகெடுதலும் யகரத்தோற்றமும் சந்தி, அ விகுதி. ஈறுகெடுதல் "ஒ ஓதல்வேண்டும்" என்பதனால் உணர்க. 2

அடைந்தவனேக்கியரந்தையென்கொல்வந்து
தொடர்ந்ததெனத்துயர்கொண்டுசோருநெஞ்சன்

மடந்தையைமானையெடுக்குமானேயேபோல்
தடங்கைகள்கொண்டுதழீஇயெடுக்கலுற்ருன்.

இ - ள். அடைந்து அவள்நோக்கி—அங்குவந்து கைகேசியன்னையைப்பார்த்து, என்கொல் அரந்தைவந்து தொடர்ந்ததுஎன—என்ன துன்பம்வந்துநேரிட்டதென்று வினவி, துயர்கொண்டுசோரும் நெஞ்சன்—துன்பங்கொண்டு சோராநின்ற மனதையுடைய அரசன். மடந்தையை மான்ஐ எடுக்கும் மான்ஐபோல்—அக்கைகேசியன்னையைக் கீழேவீழ்ந்த பெண்மானையெடுக்கும் ஆண்மானையொப்ப, தடகைகொண்டு தழுவிஎடுக்கலுற்ருன்—நீண்டகைகளால் தழுவியெடுக்கத் தொடங்கினன்.

மானையெடுக்கும் ஆனைபோல என்றலும்ஒன்று. கொல் அசைநிலை. தழுவியென்னு மிறந்தகாலவினையெச்சம் அளபெடுக்குமிடத்து விகாரப்பட்டுநின்றது. இது இல்பொருளுவமையணி. 3

நின்றுதொடர்ந்தநெடுங்கைதம்மைநீக்கி
மின்றுவள்கின்றதுபோலமண்ணில்வீழ்ந்தாள்
ஒன்றுமியம்பலணீடுயிர்க்கலுற்ருள்
மன்றலருந்தொடைமன்னனுவியன்னுள்.

இ - ள். மன்றல் அருந்தொடை மன்னன் ஆவி அன்னுள்—வாசனையுடைய அரியமாலையையணிந்த தசரதச்சக்கரவர்த்தியினுயிரையொத்த கைகேசியன்னை, நின்றுதொடர்ந்த நெடுங்கைதம்மைநீக்கி—நின்று தழுவியெடுத்த நீண்டகைகளைநீக்கி, மின் துவள்கின்றதுபோல மண் இல் வீழ்ந்தாள்—மின்துவளுதல்போல மண்மேல் வீழ்ந்து, ஒன்றுஉம் இயம்பலள்நீடு உயிர்க்கலுற்ருள்—ஒன்றுங்கூருது பெருமூச்செறிந்தாள்.

வீழ்ந்தாள் இயம்பலள் முற்றெச்சங்கள். அழகிற்சிறந்தவளும் போரிலுதவினவளுமாதலால் ஆவியன்னுள் என்ருர், 4

அன்னதுகண்டவலங்கன்மன்னனஞ்சி
என்னைநிகழ்ந்ததிஞ்ஞாலமேழில்வாழ்வார்
உன்னையிகழ்ந்தவர்மாள்வருற்றதெல்லாம்
சொன்னபின்னென்செயல்காண்டிசொல்லிடென்ருன்.

இ - ள். அன்னதுகண்ட அலங்கல்மன்னன் அஞ்சி—அதனைக்கண்டமாலையையணிந்தஅரசன்பயந்து,நிகழ்ந்ததுஎன்னை—நடந்தசெய்தியென்ன, இஞாலம் எழில்வாழ்வார் உன்னை இகழ்ந்தவர்மாள்வர்— இந்நிலவுலகிலுள்ள எழுதீவிலும் வாழுகின்றவருள் உன்னையிகழ்ந்து பேசினவர்கள் என்கைவாளால் மாள்வார்கள், உற்றதுஎல்லாம் சொன்னபின்—நடந்தசெய்தியையெல்லாஞ்சொன்னபின்பு, என்செயல் காண்டிசொல்லிடு என்ருன்—என்செயல் காண்பாய் சொல்லுவாயென்ருன்.

எழுதீவுகளாவன நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு. உற்றதெல்லாம் ஒருமையிற்பன்மை வந்தபால் வழுவமைதி. 5

வண்டுளர்தாரவன்வாய்மைகேட்டமங்கை
கொண்டநெடுங்கணினுவிகொங்கைகோப்ப

உண்டுகொலாமருளென்கணுங்கணொக்கில்
பண்டையவின்றுபரிந்தளித்தியென்றாள்.

இ-ள். வண்டு உளர்தாரவன் வாய்மைகேட்டமங்கை—வண்டுகள் மகரந்தங்கைக்கிண்டி மலர்மாலையையணிந்த தசரதச்சக்கரவர்த்தியின் உண்மைமொழியைக்கேட்ட கைகேசியன்னை, கொண்டல் நெடுங்கணின் ஆலிகொங்கை கோப்ப—மேகம்போல நெடியகண்களினின்று சிந்துநீர்த்துளி தனத்திற்கோவைசெய்ய, என்கண் அருள் உண்டுகொல்—என்னிடத்திற்கருணையுண்டோ, உன்கண் ஒக்கில்—உன்னிடத்திலொத்த அன்புளதானல், பண்டைய இன்றுபரிந்து அளித்திஎன்றாள்—முன்னுள்ள வரங்களையிப்போது அன்புகூர்ந்தளிப்பாயென்றுகூறினாள்.

கோப்ப காரியத்தின்மேல் நிற்றலால் எதிர்கால வினையெச்சம் கோ பகுதி, பகரமெய் விரித்தல் விகாரம், பகரமெய் சந்தி, அ விகுதி. பரிந்து இறந்த காலவினையெச்சம் பரி பகுதி. 6

கள்ளவிழ்கோதைகருத்துணர்ந்தமன்னன்
வெள்ளநெடுஞ்சுடர்மின்னின்மின்னநக்கான்
உள்ளமுவந்துளசெய்வனொன்றுமுலோபேன்
வள்ளலிராமனுன்மைந்தனணையென்றான்.

இ-ள். கள் அவிழ்கோதை கருத்து உணர்ந்தமன்னன்—தேனொழுமலர்ந்த மலர்மாலையையணிந்த கைகேசியன்னையின் கருத்தினையறிந்த தசரதச்சக்கரவர்த்தி, வெள்ளம் நெடுஞ்சுடர்மின் இன்மின்னநக்கான்—மிக்ககிரணத்தையுடைய மின்னலைப்போலவிளங்க அட்டகாசஞ்செய்து, உள்ளம்உவந்து உள்ளசெய்வன்—உன்மனம் விரும்பினவற்றைச்செய்துமுடிப்பேன், ஒன்று உம்உலோபேன்—சிறிதும்லோபஞ்செய்யமாட்டேன், வள்ளல் இராமன்உன் மைந்தன் ஆணைஎன்றான்—வள்ளலாகிய இராமமூர்த்தியென்னுமுன் புத்திரன்மேலாணையென்று கூறினன்.

தன்வார்த்தையிலவன் மனநிலைத்தற்கு ஆதலால் உன்மைந்தனணையென்றார். வல்லல்யாதுகொடுப்பவன். 7

ஆன்றவனவ்வுரைகூறவையமிலாள்
தோன்றியபேறவலந்துடைத்ததுண்டேல்
சான்றிமையோர்குலமாகமன்னநீயன்
றேன்றவரங்களிரண்டுமீதியென்றாள்.

இ-ள். ஆன்றவன் அ உரைகூற—பெருமையமைந்த தசரதச்சக்கரவர்த்தி அந்தவார்த்தைகூற, ஐயம் இல்லாள்—துணிந்த கைகேசியன்னை, மன்ன—அரசனே, தோன்றியபேர் அவலம் துடைத்தது உண்டேல்—என்னிடத்துத்தோன்றிய பெருந்துன்பத்தைப் போக்குவதுண்டானல், இமையோர் குலம் சான்று ஆக—தேவர்கூட்டஞ்சாட்சியாக, நீ அன்று ஏன்றவரங்கள் இரண்டும் ஈதிஎன்றாள்—நீயப்பொழுது எனக்குவேண்டும்போது கொடுக்கவிசைந்தவரங்களிரண்டையுங் கொடுப்பாயென்றுகூறினன்.

என்ற இறந்தகாலப்பெயரெச்சம் ஏல் பகுதி, இதுசெயலைக்கொண்டது இரண்டுசெயல்மேல் நிற்றலால் பண்பாகுபெயர் வரங்களிரண்டுவரங்களாகிய இரண்டெனநிற்றலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர் ஆன்றவன் ஆல் (மிகுதி) பகுதி, நகரமெய் இடைநிலை, அ சாரியை, லகரத் திரிபும் வகரத்தோற்றமும்சந்தி, அன் விகுதி. புதல்வர்நால்வரில் அவனுயிர் போற் சிறந்த புதல்வரிராமமூர்த்தியாதலால் அவர்மேலாணை யென்றமையின் ஐயமில்லாள் என்றார். 8

வரங்கொளவித்துணைமன்னுமல்லலெய்தி
இரங்கிடல்வேண்டுவதீவனேகொளென்பாற்
பரங்கெடவிப்பொழுதேபகர்ந்திடென்றான்
உரங்கொண்மனத்தவள்வஞ்சமோர்கிலாதான்.

இ-ள். உரம்கொள்மனத்தவள் வஞ்சம் ஓர்கிலாதான்—கடினமமைந்த மனத்தையுடைய கைகேசியின்வினையின் வஞ்சனையையறியாத தசரதச்சக்கரவர்த்தி, வரம்கொள இதுணைமன்னும் அல்லல்எய்தி—(என்னிடத்து) வரம் பெற இவ்வளவு மிக்கதுன்பத்தையடைந்து, இரங்கிடல்—வருந்தாதே, வேண்டுவது ஈவன் ஏ கொள்—நீ வேண்டுவதைநானேகொடுப்பேன் நீகொள், என்பால் பரம்கெட இ பொழுது ஏ பகர்ந்திடுஎன்றான்—என்னிடத்து நீசுமத்திய துன்பமாகிய சுமையைப்போட இப்பொழுதேசொல்லாயென்றுகூறினான்.

இரங்கிடஎனவும்பாடமுண்டு, இரங்கிடவேண்டுவது நீவருந்தவேண்டுமோ எனப்பொருள்கொள்க. இரங்கிடல் முன்னிலையொருமை யெதிர்மறையேவல்வினைமுற்று. இரங்கிடு பகுதி. உகரக்கேடுசந்தி. அல் விகுதி, பாரம் என்றமையாற் சுமையென்றற் கேற்பப்பொருள்கூறினும். 9

ஏயவரங்களிரண்டிலொன்றினலென்
சேயரசாள்வதுசீதைகேள்வனொன்றாற்
போய்வனமாள்வதெனப்புகன்றுநின்றாள்
தீயவையாவையினுஞ்சிறந்ததீயாள்.

இ-ள். தீயவையாவையின்உம் சிறந்ததீயாள்—கெட்டசெயல்களாகிய எல்லாச்செயல்களிலு மேம்பட்டவளாகிய கொடியகைகேசி, ஏயவரங்கள் இரண்டில் ஒன்றினல்—நீகொடுத்த இரண்டுவரங்களி லொருவரத்தால், என் சேய் அரசுஆள்வது—என துபுத்திரனுகிய பரதாழ்வானில மாளக்கடவன், சீதைகேள்வன் ஒன்றால்—சீதாப்பிராட்டியின் மணவாளனுகிய இராமமூர்த்தி யொருவரத்தால், போய்வனம்ஆள்வது எனபுகன்றுநின்றாள்—சென்றுகாளாடக்கடவனென்று சொல்லிநின்றாள்.

ஏய இறந்தகாலப்பெயரெச்சம் ஏவு பகுதி, ஈறுகெடுதல்சந்தி, யகரமெய் இடைநிலை, அ விகுதி. ஆள்வது என்பதில் துவ்விகுதி வியங்கோட்பொருட்டு. வியங்கோள் விகுதியே எதிர்காலத்தைக்காட்டி நிற்றலால், ஆள் பகுதி, வகரமெய் விரித்தல்விகாரம், அ சாரியை, து விகுதி. 10

நாகமெனுங்கொடியாடனுவினீந்து
சோகவிடந்தொடரத்துணுக்கமெய்தா

ஆகமடங்கலும்வெந்தழிந்தாரவின்
வேகமடங்கியவேழமென்னவீழ்ந்தான்.

இ-ள். நாகம்என்னும் கொடியாள்—பாம்பென்னுங்கொடிய கைகேசியானவள், தன்னுஇன் ஈந்தசோகம் விடம்தொடர—தன்னுவிற்கொடுத்தசோகத்தைவிளைக்கும் சொல்லாகியவிஷமானது தொடர்ந்துபற்ற, துணுக்கம் எய்தா—நடுக்கமெய்தி, அராஇன்ஆகம் அடங்கலும் வெந்து அழிந்து—பாம்பின்விடத்தால் சரீரமுழுதும்வெந்தழிந்து, வேகம்அடங்கியவேழம்என்னவீழ்ந்தான்—தன்வேகமழிந்த யானையைப்போலச்சோர்ந்து நிலத்தில் வீழ்ந்தான்.

இன் உருபு எதுப்பொருட்டு. அழிந்தஎன்னுஞ் சினைவினைப்பெயரெச்சம் வேழம் என்னும் வினைமுதற்பொருள்கொண்டது. இது தொழிலுவமையணி. கைகேசியன்னை சம்பராசுரன்போரில் தசரதச்சக்கரவர்த்திக்குச் சோகமாற்றிவென்றகாலையில், அச்சக்கரவர்த்திமகிழ்கூர்ந்து இரண்டுவரந்தருகிறேன்கேளென்ன வேண்டுங்காலையிற் பெற்றுக் கொள்ளுகின்றேனென்றாள் என்பது இந்நூல்வரலாறு. 11

பூதலமுற்றதனிற்புரண்டமன்னன்
மாதுயரத்தினையாவர்சொல்லவல்லார்
வேதனைமுற்றிடவெந்துவெந்துகொல்லன்
ஊதுலையிற்கனலென்னவெய்துயிர்த்தான்.

இ-ள். பூதலம்உற்று அதன்இல் புரண்டமன்னன்—நிலத்தில் வீழ்ந்து அந்நிலத்தின்மேற் சோகத்தாற்புரண்டசக்கரவர்த்தியின், மாதுயரத்தின்ஐ—பெரிய துன்பத்தினை, சொல்லவல்லார்யாவர்—அளவறுத்துச்சொல்லவல்லவர் யாவர், வேதனைமுற்றிட—துன்பமீதூர, வெந்து வெந்து—அதனுற்கருகி, கொல்லன் ஊதுஉலையில் கனல்என்ன வெய்துயிர்த்தான்—கொல்லனது உலைக்களத்திலெழுந்த தீயைப்போலப் பெருமூச்செறிந்தனன்.

வெந்து வெந்து மிகுதிப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். முற்றிடகாரணப்பொருளில் நிற்றலால் இறந்தகாலவினையெச்சம் முற்றுபகுதி, உகரக்கேடு சந்தி, இடு பகுதிப்பொருள் விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, உகரக்கேடு சந்தி, அ எச்சவிகுதி. 12

உலர்ந்ததுநாவுயிரோடலுற்றதுள்ளம்
புலர்ந்ததுகண்கள்பொடித்தபொங்குசோரி
சலந்தலைமிக்கதுதக்கதென்கொலென்றென்
றலந்தலையுற்றவரும்புலன்களைந்தும்.

இ-ள். நா உலர்ந்தது—நாவறண்டது, உயிர் ஓடலுற்றது—உயிர்நீங்கத்தொடங்கியது, உள்ளம் புலர்ந்தது—மனவூக்கமற்றது, கண்கள்பொங்கு சோரிபொடித்த—கண்கள் கோபத்தால் கொழித்தெழுந்து உதிரமரும்பின, தக்கது என்கொல் என்று என்று—இதற்குச் செய்யத்தக்கதென்னவென்று கருதி, சலம் தலைமிக்கது—அவன்மேல் வயிரம்மீதூர்ந்தது, அரும் புலன்கள் ஐந்தும்- அலந்து அலையுற்ற—அரிய ஐம்புலன்களும் வருந்தியலைந்தன.

உலர்ந்தது முதலிய முற்றெச்சங்கள் "பாயுமாரிபோற் புகழ்சிந்தினர்" என்றமுற்றைப்போலச்செயவெனச்சமாகத்திரிந்து அலையுற்றனன் என்னும்வினை முற்றைத் தனித்தனிகொண்டன, அலந்து இறந்தகால வினையெச்சம் அல மரு பகுதி, ஈறுகெடுதலும் நகரத்தோற்றமும் சந்தி, தகரமெய் இடைநிலை, எச்சவிகுதி. 13

மேவி நிலத்திலிருக்கு நிற்கும்வீழும்
ஓவியமொப்பவுயிர்ப்படங்கியோயும்
பாவியையுற்றெதிர் பற்றி யெற்றவெண்ணும்
ஆவி பதைப்பவலக்கணெய்துகின்றான்.

இ-ள். ஆவிபதைப்ப—உயிர்பதைக்க, அலக்கண் எய்துகின்றான்—து ன்பமடைகின்றதசரதச்சக்கரவர்த்தி, நிலத்து இல்மேவி இருக்கும்—வேற்று த்தரையில் தங்கியிருப்பான், நிற்கும் வீழும்—நிற்பான் நிலத்தில் வீழ்வான், ஓவியம் ஒப்ப—சித்திரத்தையொக்க, உயிர்ப்பு அடங்கிஓயும்—மூச்சடங்கியவச மாயிருப்பான், பாவியைஎதிர் உற்று பற்றி—பாவியாகிய கைகேசியை யெ திர்சென்றுபிடித்து, எற்ற எண்ணும்—மோதக்கருதுவான்.

அடைதற்கரிய துன்பமடைதலால் பழிச்செயலையுஞ்செய்யக்கருதினன் என்பார் பாவியையுற்றெதிர் பற்றி யெற்றவெண்ணும் என்றார். இருக்கும், நிற்கும், வீழும், ஓயும் என்னும் திணைபால்கட்குப்பொதுவாகியசெய்யும் என் னும் வினைமுற்று எய்துகின்றான் என்னும் சிறப்புவினையால்பொதுமை நீங் கியாண்பால்மேல்நின்றது "பொதுப்பெயர் வினைகளின்" என்றகு—ஆல்.()

பெண்ணெனவுற்றபெரும்பழிக்குநாணும்
உண்ணிறைவெப்பொடுயிர்த்துலாவும்
கண்ணினினோக்குமயர்க்குமிக்கைவேல்
புண்ணுழைதைக்கவுளைக்குமானைபோல்வான்.

இ-ள். மிக்கைவேல்—விஷந்தோய்ந்த கூறியகைவேல், புண்நுழை தைக்க உளைக்கும் ஆனைபோல் வான்—புண்ணில் நுழைந்து தைக்கவருந் தும் ஆனையையொத்த அரசன், பெண் என்ன—இவள்பெண்ணென்று, உற் றபெரும்பழிக்கு நாணும்—தான் செய்யக்கருதிய கொடுந்தொழிலால்வரும் பெரியபழிக்கு நாணுவான், உள்நிறை வெப்பொடு—மனத்துள் நிறைந்தகோ பிப்போடு, உயிர்த்து உயிர்த்து உலாவும்—பெருமூச்செறிந்து உலாவுவான், கண்ணின் இல்நோக்கும்—கண்களால் புறக்கணித்துப்பார்ப்பான், அயர்க் கும்—இவள்யாரோவென்று சந்தேகிப்பான்.

உற்றெதிர் பற்றியெற்ற வெண்ணும் எனமேலே கூறுதலால் உற்றபெ ரும்பழிக்கு என்றதற்கு இவ்வாறு பொருள் கூறினோம். கண்ணினினோக்கும் என்றது அவளுள்ளக்கருத்தை. உயிர்த்துயிர்த்து அவலப்பொருளில் வந்த அடுக்குத்தொடர். உயிர்த்து இறந்தகாலவினையெச்சம் உயிர் பகுதி. வெப்பு பண்புப்பெயர் வெம்மை பகுதி, ஈறுகெடுதலும் பகரத்தோற்றமும் சந்தி, பு பெயர் விகுதி. 15

கம்பநெடுங்களியானையன்னமன்னன்
வெம்பிவிழுந்தெழும்விம்மல்கண்டுவெய்துற

ஹும்பர்நடுங்கினரூழிபேர்வதொத்த
தம்பனைகண்ணவளுள்ளமன்னதேயாமால்.

இ-ள். கம்பம் நெடுங்க ளி(கண்டோர்க்கு) நடுக்கஞ்செய்யுமிக்கமதச் செருக்கையுடைய, யானைஅன்ன மன்னன்—யானையையொத்த அரசன், வெம்பி விழுந்து எழும்விம்மல்கண்டு—துன்பத்தாற்கன்றி நிலத்தில் மேல் வீழ்ந்து எழா நின்ற பொருமலைக்கண்டு, உம்பர் நெய்துற்று நடுங்கினர்—தேவர்கள்பெருமூச்செறிந்து நடுங்கினார்கள், ஊழிபேர்வது ஒத்தது—ஊழி காலம் நிலைபெயர்ந்து வருதலையொத்தது, அம்பு அன்ன கண்ணவள்—அம்பையொத்த கண்களையுடைய கைகேசியினது, உள்ளம் அன்னது எ ஆம்—மனமட்டும் தன்னிலையினின்றும் பெயரவில்லை.

தேவர்களும் யாதாய் முடியுமோ என்று கருதினர் என்பார் உம்பர் நடுங் கினர் எனவும், மற்றையாவு நிலைகலங்கிய தென்பார் ஊழிபேர்வ தொத்த தெனவும் கூறினர். வெம்பி இறந்த காலவினை யெச்சம் வெம்பு பகுதி. 16

அஞ்சலளையனதல்லலங்கண்டுமுள்ளம்
நஞ்சிலளணிலளென்னநாணமாமால்
வஞ்சனைபண்டுமடந்தைவேடமென்றே
தஞ்செனமாதரையுள்ளலார்கடக்கோர்.

இ-ள். ஐயனது அல்லல் கண்டும்அஞ்சலள்—அரசனது துன்பத்தை ப்பார்த்தும் சிறிதும் அச்சமொழிந்திலள், உள்ளம் நஞ்சிலள்—மனங்கனிந் திலள், நாண் இலல்—சிறிதும் பழிக்குநாணங் கூர்ந்திலள், நாணம் என்ன ஆம்—பெண்களுக்குரிய நாணம் என்ன பயன் படும், தக்கோர்—மேலோர், பண்டு—முன்னமே, மடந்தை வேடம் வஞ்சனைஎன்றஎ—பெண்கள்கோலம் வஞ்சனைவடிவமென்றே, மாதரை தஞ்சனஉள்ள லார்கள்—பெண்கள் தமக் கோராதார மென்று ஒருபொழுதுங்கருதார்கள்.

யாவும் கண்டு நடுங்கின என்று மேலே கூறுதலால் இவள் கன்னெஞ் சன்என்பார் அஞ்சலள்எனவும், தன்கணவன் துன்பத்திற்குச்சிறிதும் இரக்க ங்கூர்ந்திலள்என்பார்உள்ளம்அஞ்சிலள்எனவும், இவற்றிற்குநாணுதலேபெண் கள் நாணம்என்பார் நாணிலளெனவும், பெண்களுக்கு நாண்சிறந்தது என்று நூல்கூறுதல் இவளிடத்தில்லையாதலால் சிறிதும்பயனில்லையென்பார்உலகி ன்மேலேற்றி என்னநாணமாம் எனவுங் கூறினர், நைந்திலள் நஞ்சிலள்போ லி. உள்ளம் வினைமுதற்பொருளில்வந்த தொழிற்பெயர் உள் பகுதி, ளகரத் தோற்றம்சந்தி, அம் விகுதி. இது கவி கூற்றுத்துறை. 17

இந்நிலைநின்றவடன்னைநெய்தநோக்கி
நெய்ந்நிலைவேலவனீதிசைத்ததுண்டோ
பொய்ந்நிலையோர்கள் புணர்த்தவஞ்சமுண்டோ
அந்நிலைசொல்லெனதானையுண்மையென்னுன்.

இ-ள். இந்நிலைநின்றவள் தன்னை—இந்தநிலையிற் பெயராது நின்றகை கேசியை, நெய்ந்நிலைவேலவன்—நெய்பூசிய வேலையேந்திய அரசன், எய்த

நோக்கி ஈது இசைத்து உண்டு ஓ—பொருந்தப்பார்த்து கேட்ட வரங்களி லிவ்வாறு பகுத்துக் கூறிய துண்டோ, பொய்நிலையோர்கள் புணர்த்தவஞ்ச ம்உண்டு ஓ—பொய் யொழுக்க முடையோர்களால் இவ்வாறு முடித்தவஞ் சனையிடையில் வந்து முடிந்ததோ எனது ஆணை—என் மேலாணை, அநிலை உண்மை சொல் என்றான்—அந்த நிலைமையை உண்மையாகச் சொல் என் றுகூறினான்.

நீ இசைத்தது எனப்பிரித்து நீமயங்கிக்கூறியது எனக்கொள்ளலுமொ ன்று. இந்நிலை என்றது ஒருவரத்தால் பரதாழ்வான ரசியலைப் பெறுதலும் மற்றொரு வரத்தால் இராமமூர்த்தி வநம்புகுதலும். எழனுருபுநிற்குமிடத்து ஆறனுருபு நிற்றலாலுருபு மயக்கம். 18

திசைத்ததுமில்லையெனக்குவந்துதீயோர்
இசைத்துமில்லைமுன்னீந்தவிவ்வரங்கள்
குசைப்பரியோய்தரினின்றுகொள்வனன்றேல்
வசைத்திறம்நின்வயின்வைத்துமாள்வெனென்றாள்.

இ-ள். குசைபரியோய்—புறமயிர் வாய்ந்த குதிரைச் சேனையை யு டையோய், திசைத்தது உம் இல்லை—இவ்வாறு நான் மயங்கிக் கூறிய துமில்லை, எனக்கு தீயோர் வந்து இசைத்ததும் இல்லை—எனக்குத் தீயொ ழுக்க முடையவர் வந்து வஞ்சச் சொற்களைக் கூறியது மில்லை, முன்ஈந்த இவரங்கள் தரின் இன்று கொள்வன்—முன்பு நீதந்த இவ் வரங்களைத் தந்தா ல் இப்பொழுது கொள்வேன், அன்று எல்—அல்லையானால், நின்வயின் வ சைத்திறம் வைத்து—நின்னிடத்தில்வசையின் பகுதியைவைத்து, மாள்வெ ன் என்றாள்—உயிர்விடுவே னென்றுகூறினாள்.

நீ இரண்டு வரங்கள் என்னிடத்துப் பெறுவாய் என்றபோது வேண்டு ம்போது பெறுவேன் என்றதன்றி இவ்வாறு கேட்டதில்லை யென்பாள் இ சைத்ததுமில்லைஎன்றாள். திசைத்தல்திசைச்சொல் 19

இந்தநெடுஞ்சொலவ்வேலைகூறுமுன்னே
வெந்தகொடும்புணில்வேனுழைந்தொப்பச்
சிந்தைதிரிந்துதிகைத்தயர்ந்துவீழ்ந்தான்
மைந்தனலாதுயிர்வேறிலாதமன்னன்.

இ-ள். இந்த நெடுஞ்சொல்—இந்தக்கொடுமைமிக்கசொல்லை, அவளை கூறுமுன்எ — அக் கைகேசி சொல்லு முன்னமே, மைந்தன் அல்லாது உயிர் வேறு அல்லாத மன்னன் — இராம மூர்த்தியை யன்றியுயிர் வேறி ல்லாத அரசன், வெந்த கொடும்புண் இல்வேல் நுழைந்தது ஒப்பா—காரத்தா ல்வெந்து அழிந்த புண்ணில்வேல் நுழைந்ததற்கொப்பாக. சிந்தைதிரிந்து— மனந்திரிந்து, திகைத்து அயர்ந்து வீழ்ந்தான்—மயங்கிச் சோர்ந்து நிலத் தின்மேல் விழுந்தான்.

அயர்ந்து இறந்தகாலவினை யெச்சம் அயர் பகுதி. 20

ஆகொடியாயெனுமாவிகாலுமந்தோ
ஓகொடிதேயறமென்னுமுன்மையொன்றும்

சாகவெனுவெழுமெய்தளாடிவீழும்
மாகமுநாகமுமண்ணும்வென்றவாளான்

இ-ள். மாகம்உம் நாகம்உம் மண்உம்—விண்ணுலகையும்நாகரு லகை யும்மண்ணுலகையும், வென்ற வாளான்—வெற்றி கொண்ட வாளை யேந்தி யஅரசன், ஆகொடியாய் என்னும்—ஆமிகவுங் கொடிய ளேயென்றுசொ ல்வான், ஆவிகாலும்—உயிர் சோருவான், அந்தோ—ஐயோ, அறம்ஓ கொ டிதே என்னும்—தருமமென்பதொன்று மிகவுங் கொடியதே யென்பான், உண்மை ஒன்று உம் சாக என்னு எழும்—உண்மையென்பதொரு பொ ருளும் இனியழியக்கடவது என்று எழுவான், மெய்தள்ளாடி வீழும்—சரீர ம்தள்ளாடிவீழ்வான்.

தான் அறம் உண்மையிவற்றின் வழிநிற்றலே இராம மூர்த்தி அரசியலி ழத்தற்கு ஏதுவாயிருத்தலால் ஓ கொடிதேயறமென்னும் என்றும் உண்மைஒ ன்றுஞ் சாகவெனுவெழுமென்றுங்கூறினன், ஆஎன்னுமிடைச்சொல்ஆச்சரி யப்பொருளிலும், ஓ அந்தோ என்னுமிடைசொற்கள்இரக்கப் பொருளிலும் வந்தன. 21

நாரியரில்லையிந்நாலமேழுமென்னக்
கூரியவாள்கொடுகொன்றுநீக்கியானும்
பூரியரெண்ணிடைவீழ்வனென்றுபொங்கும்
வீரியர்வீரம்விழுங்கிநின்றவேலான்.

இ-ள். வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான் — வீரர்களுடைய வீரத்தை விழுங்கிமேம்பட்டு நின்ற வேலை யேந்திய அரசன், இந்நாலம் ஏழு ம்—இவ்வேழுலகிலும், நாரியர் ஏ இல்லைஎன்ன—பெண்களே இல்லையென் றுசொல்ல, கூரியவாள் கொடுகொன்றுநீங்கி—கூர்மையையுடைய வாளைக் கொண்டுகொலைசெய்து வேரோடறுத்து, யான்உம்—நானும், பூரியர் எண் இடைவீழ்வன் என்றுபொங்கும்—கீழ்மக்களோடு வைத்து எண்ணும் எண் ணில் வீழ்வேனென்று கோபிப்பான்

வீரனுயுள்ளான் பெண்களைக் கொலை செய்யானுதலாலும் அவர்களைக் கொல்லுதல் பெரும் பாதகமாதலாலும், இத்தொழிலைமேற்கொள்வோர்க ளைப்பட் டோராதலாலும் யானும் பூரிய ரெண்ணிடைவீழ்வெனென்றான். கூரியகுறிப்புவினைப் பெயரெச்சம். கொண்டு கொடு இடைக்குறை. 22

கையொடுகையைப்புடைக்கும்வாய்கடிக்கும்
பொய்யுரைகுற்றமெனப்புழுங்கிவாடும்
மெய்பெரியுற்றெனநெஞ்சழிந்துசோரும்
வையகமுற்றும்நடந்தவாய்மைமன்னன்,

இ-ள். வையகமுற்றுஉம்நடந்த வாய்மைமன்னன்—நிலவுலகமுழுதும் சென்றுபரந்த உண்மையைப்பூண்ட அரசன், கை ஒடுகையைபுடைக்கும்— ஒருகையோடு மற்றொருகையைத் தாக்குவான், வாய்கடிக்கும்—பற்களைக் கடிப்பான், பொய் உரை — எப்பொழுதும் பொய்யைக் கூறுதல், குற் றம் என்னபுழுங்கி வாடும்—குற்றமென்று மனம்புழுங்கி வாடுவான், மெய்

எரி உற்றால் என்ன—நெய்நெருப்பையடைந்தாற்போல, நெஞ்சு அழிந்து சோரும்—மனமழிந்து சோருவான்.

உண்மைநெறிநின்றோர் ஒருகால்துன்ப மிகுதியால் அந்நெறியைவிட்டுப்பிறழ்ந்து கூறினும் அவர்மனம் நிலைபெறுதல் அந்நெறியிலாதலால் பொய்யுரை குற்றமெனப் புழுங்கிவருந்தும் என்றார். நெய் தீயையடைந்தால் உருகுதல் போலக் கன்றியமனங்கரைதலால் நெய்யெரி யுற்றென. நெஞ்சழிந்து என்றார். உற்றென்ன தொகுத்தல் விகாரம்—புழுங்கி இறந்தகால வினையெச்சம் புழுங்கு பகுதி. 23

ஒறுப்பினுமந்தரமுண்மையென்றுமோவா
மறுப்பினுமந்தரமென்றுவாய்மைமன்னன்
பொறுப்பினுமிந்நிலைபோகிலாளைவாளால்
இறுப்பினுமாவதிரப்பதென்றெழுந்தான்.

இ-ள். வாய்மைமன்னன்—சத்தியத்தை மேற்கொண்ட அரசன், ஒறுப்பின்உம் அந்தரம்—இவளைக்கொல்லினுங்கொடிது, உண்மை ஒன்றுஉம்—உண்மையாகிய ஒருபொருளும், ஓவாமல்மறுப்பின்உம் அந்தரம்என்று—ஒழியாமல் இவள் கேட்டதை மறுத்தாலும் கொடிதென்றுகருதி, பொறுப்பின்உம்—எவ்வாறுபொறுத்தாலும், இந்நிலைப்போகிலாளை—தான்கொண்ட இந்நிலையினின்று பெயராதவளை, வாளால் இறுப்பின்உம்—வாளினாற் கொல்லுதைப்பார்க்கிலும், ஆவது இரப்பதுஏ என்றுஎழுந்தான்—கைகூடுவது இரத்தலேயென்று துணிந்தெழுந்தனன்.

தான்தருவேனென்ற இரண்டுவரங்களும் இப்பொழுது நீ கேட்கும்படியன்று என்றுமறுத்தாலும் தருவேனென்றசொற்கு அதுதவறாதலால் உண்மையொன்றுமோவாமறுப்பினு மந்தரம்எனவும், கொல்லுதலினும் இரந்து தன்கருத்தைமுடித்தலே அறமாதலால் ஆவதிரப்பதுஎனவும் கருதினான்என்றார். ஒறுப்பின், மறுப்பின் எதிர்காலவினையெச்சம். பொறுப்பு, இறுப்புதொழிற்பெயர்கள்ஒறு, மறு பகுதிகள், பகரமெய் விரித்தல் விகாரம், பகரமெய் சந்தி இன் எச்சவிகுதி. பொறு, இறு பகுதிகள், பு புடைபெயர்ச்சி விகுதி, பகரமெய்சந்தி. பிரிநிலை ஏகாரந்தொகுத்தல். நாழிகையென்றசெய்யுள் முதலிதுகாறும் ஐஞ்சீராகக்கொண்டு கலிநிலைத்துறையெனினு மடங்கும். 24

கலிநிலைத்துறை.

கோன்மேற்கொண்டுகுற்றமகற்றிக்குறிகொண்டார்
போன்மேலுற்றதுண்டெனினன்றும்பொறையென்று
கான்மேல்வீழ்ந்தான்கந்துகொல்யானைக்களிமன்னர்
மேன்மேல்வந்துமுந்திவணங்கிமிடைதாளான்.

இ-ள். கந்துகொல் யானைகளிமன்னர்—கட்டுத்தறியை முறிக்கும்யானைச்சேனையுடைய மதக்களிப்பையுடையஅரசர்கள்,மேல்மேல்வந்து—மேலுமேலும் வந்து, முந்திவணங்கி மிடைதாளான்—முற்பட்டுவணங்கி நெருங்கிய காலையுடைய அரசன், கோல்மேற்கொண்டு—செங்கோலையேந்தி, குற்றம்

அகற்றி—உயிர்களுக்குப்பகையாயுள்ள குற்றங்களையொழித்து, குறிகொண்டார்போல்—புகழ்பெற்ற சிபிச்சக்கரவர்த்தி முதலியோர்போல, மேல் உற்றது உண்டு என்னின்—இனி இவளால்வருந் தீமையுளதாயினும், பொறை நன்றாகும் என்று—பொறுமைகூர்தல் நல்லதுஎன்று, கால்மேல் வீழ்ந்தான்—கைகேசியின்கால் மேல் வீழ்ந்துவணங்கினான்.

ஒருபுறவினுயிர் காத்தற்பொருட்டுத்தனதுடலரிந்து தந்தமையால் குறிகொண்டார்போல் என்றார். ஒருகால அவள்கருதிய தீமைதப்பினுந் தப்புமாதலால் உற்றது என்றதுமிகுதி பற்றிவந்த காலவழுவமைதி. அரசர்வணங்குங் காலையுடையோன் தன்மனையாள் கால்மேல் வீழ்ந்தது அவள்கோபந்தீர்தற் பொருட்டின்மேல் நிற்றலால் நட்பவணி. உயிர்களுக்குப்பகை அரசன்முதலியோரால் வரும்பகை. 25

கொள்ளானின்சேயிவ்வரசன்னான்கொண்டாலும்
நள்ளாதிந்நானிலம்ஞாலந்தனிலென்றும்
உள்ளாரெல்லாமோதவுவக்கும்புகள்கொள்ளாய்
எள்ளாநிற்கும்வன்பழிகொண்டென்பயனென்றான.

இ-ள். இ அரசுநின்சேய்கொள்ளான்—இந்த அரசியலை நான்தரினும் உனது புத்திரன் மூத்தவனிருக்கக்கொள்ளான், அன்னான்கொண்டாலும் இந்த நானிலம் நள்ளாது — அப்பரதாழ்வான் கைக்கொண்டாலும். இந்வுலகம் விரும்பாது, ஞாலம்தன்னில், என்று உம் உள்ளார் எல்லாம் ஓத உவக்கும் புகழ் கொள்ளாய் — இவ்வுலகிலுள்ளோர் யாவரும் புகழ்ந்துகூற மகிழ்கூரும் புகழைக்கொள்ளுவாய், எள்ளாநிற்கும்வன்பழிகொண்டு பயன் என் என்றான்—யாவரு மிகழும் மிக்கபழிச்சொல்லைக் கொள்ளுதலால்பயன் யாது என்று அரசன்கூறினான்.

இராமமூர்த்தி முடிசூடுதற் கிசைவாயானல் புகழ்கொள்வாய் அல்லாவிடிற் பழிகொள்வாயென்பான் புகழ்கொள்ளாய், வன்பழிகொண்டென்பயன் என்றுகூறினான். கொள்ளாய் ஏவலில் விதிவினைக்கும் மறைவினைக்கும் பொதுவினையாய் நிற்பினும் இங்கு விதிவினைமேல் நின்றது விதிவினையாகில் கொள் பகுதி, ளகரமெய் சந்தி, ஆய்முன்னிலை யொருமையேவல் விகுதி, மறைவினையில் கொள் பகுதி ளகரமெய் சந்தி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்தும் ஒருபகுதி, ஆய். விகுதி ஆ தொகுத்தல். 26

வானோர்கொள்ளார்மண்ணவருய்யாரினிமற்றென்
ஏனோர்செய்கையாரொடுநீயிவ்வரசாள்வாய்
யானேசொல்லக்கொள்ளவிசைந்தால்முறையாலே
தானேநல்குமுன்மகனுக்குந்தரையென்றான்.

இ-ள். வானோர்கொள்ளார், (உன்மகன் அரசியலைக்கைக்கொண்டால்) தேவர்கள் மதியார், மண்ணவர் உய்யார்—இந்நிலவுலகினர்பிழையார், ஏனோர்செய்கை இனிஎன்—மற்றையோர்செய்கையை இனியெடுத்துக்கூறுதலால்வரும்பயன்யாது, நீயாரொடு இ அரசாள்வாய்—நீயாரொடு இந்த அரசைஆளப்போகின்றாய், யானேசொல்லகொள்ள இசைந்தால்—நானே சொல்லக்

த்தொள்ள உடன்பட்டால் அரசாளக்கூடும், முறையால்—முறைப்படி, உன் மகனுக்கும் தானே தரைநல்கும் என்றான்—உன்மகனுக்கும் இராமமூர்த்தியே நில்வுரிமையைக்கொடுப்பான் என்று கூறினான்.

வினைமாற்றுப் பொருளில்வந்த மற்றென்னுமிடைச்சொல் செய்யுளாதலால் மாறிவந்தது. ஏகாரம் பிரிநிலைப்பொருட்டு. 27

கண்ணேவேண்டுமென்னினுமீயக்கடவேனென்
உண்ணேராவிவேண்டினுமின்றேயுனதன்றோ
பெண்ணேவண்மைக்கையன்மானேபெறுவாயேல்
மண்ணேகொள்நீமற்றையதொன்றும்மறவென்றான்.

இ-ள். பெண் ஏவண்மை கைகயன் மானே — கொடைத்தொழில் பூண்டகேகயன்பெற்றமான் போல்பவளே, கண்ஏவேண்டும் என்னின்உம்— என்கண்ணே வேண்டுமென்று நீசொன்னாலும், ஈயக்கடவேன்—கொடுப்பேன், என்உள்நேர் ஆவிவேண்டின் உம்—எனது உள்ளமைந்த உயிரை விரும்பினாலும், இன்று ஏ—இப்பொழுதே, உனது அன்றுஓ—உனதல்லவோ, பெறுவாய் ஏல்—வரத்தைப்பெறுவாயானால்,மண் ஏகொள்—நீநிலவுலகையே கொள்.மற்றையதுஒன்று உம் மற என்றான்—மற்றொன்றையும் மறந்துவிடு என்று கூறினான்.

தன்மனத்துக்கு இசையாதவளாதலால் வாளா பெண்ணே யெனவும், காட்டிற்கு இராமமூர்த்தி செல்லக்கேட்டது. கூறற்கு இயையாததாதலால் மற்றையதொன்றும் எனவுங் கூறினான். 28

வாய்தந்தேனென்றேனினியானேவதுமாற்றேன்
நோய்தந்தென்னைநோவனசெய்துநுவலாதே
தாய்தந்தென்னத்தன்னையிரந்தாற்றழல்வெங்கட்
பேய்தந்தீயும்நீயிதுதந்தார்பிழையாமோ

இ-ள். வாய்தந்தேன் என்றேன்—இரண்டுவரந் தந்தேனென்றுசொன்னேன், இனியான் ஏ அதுமாற்றேன்—இனிநானே அதனை மாற்றமாட்டேன், நோய்தந்து—துன்பந் தந்து, என்னை நோவனசெய்து நுவலாது—என்னைவருத்துங் காரியங்களைச்செய்து ஒன்றுங்கூறாமல், தாய்தந்தால் என்ன—தாயருள்செய்தாற்போல தன் ஐ இரந்தால்—தன்னையொருவன் வந்திரந்தால், தழல்வெங்கண்பேய்தந்துயீயும்—கோபாக்கினிசிந்தும் கொடியகண்களையுடைய பேயுங்கொடுக்கும், நீ இதுதந்தால் பிழை யாம்ஓ—நீயிவ்வரத்தைக்கொடுத்தால் தவறாமோ?

தந்தென்ன தொகுத்தல்விகாரம்என்வேண்டுகோளுக்குப்பேயுமிரங்குமே நீ இரங்காதகாரணம் என்ன என்பான் நீயிதுதந்தாற்பிழையாமோவென்றான்.

இன்னேயின்னேபன்னியிரந்தானிகல்வேந்தன்
தன்னேரில்லாத்தீயவளுள்ளந்தடுமாறாள்
முன்னேதந்தாயிவ்வரநல்காய்முனிவாயேல்
என்னேமன்னுயருளாவாய்மைக்கினியென்றாள்.

இ-ள். இகல்வேந்தன்—வலிமையையுடைய அரசன், இன்னே இன்னே பன்னி இரந்தான்—இவைபோல் வனவற்றை யிவைபோல் வனவற்றைச் சொல்லியாசகித்தான், தன்நேர் இல்லாதீயவள் உள்ளம்தடுமாறாள்—கொடுமையில் தனக்கொப்பில்லாதவள் தன்மனஞ்சிறிதுமிரங்காது, இவரம் முன்னெதந்தாய்—இந்தவரங்களை முன்னமேகொடுத்தாய், நல்காய்முனிவாய் ஏல்—இப்போது அருளாது கோபஞ்செய்வாயானால், மன்னா—அரசனே, என் ஏ—என்ன, வாய்மைக்கு இனியார் உளர்என்றாள்—உண்மைக்கு இனி யுன்னையன்றியாரிருக்கின்றார்கள்.

என்னேஎன்றது அதிசயத்தில்வந்த இடைச்சொல். தடுமாறாள், நல்காய்முற்றெச்சங்கள். இன்னே இன்னே மிகுதிப்பொருளில்வந்த அடுக்குத் தொடர். 30

அச்சொற்கேளாவாவிபுழுங்காவயர்கின்றான்
பொய்ச்சொற்கேளாவாய்மொழிமன்னன்பொறைகூரா
நச்சுத்தீயேபெண்ணுருவன்றேவெனநாணா
முச்சத்தார்போற்பின்னுமிருந்தேமொழிகின்றான்.

இ-ள். பொய்ச்சொல் கேளாதவாய் மொழிமன்னன்—பொய்மொழியைச்சிறிதுங்கேட்டறியாத மெய்மொழியையுடைய அரசன், அச்சொல்கேளா—அந்தவார்த்தைகளைக்கேட்டு, ஆவிபுழுங்கா—உயிர்சோர்ந்து. அயர்கின்றான்சோர்ந்து, பொறைகூரா—பின்னும்பொறுமைகூர்ந்து, பெண் உருநஞ்சுத்தீ அன்றுஏஎன—பெண்வடிவம் நஞ்சல்லவாவென்று, நாணா—தனக்குள்நாணங்கூர்ந்து, முச்சத்தார்போல்—மனமடங்கிய பெரியோரைப்போல, பின் உம் இருந்து ஏமொழிகின்றான். மீளவுமிருந்து இறந்து சொல்லுகின்றான்.

கேளா, புழுங்கா, கூரா, நாணா செய்யா என்னும் எச்சங்கள். அயர்கின்றான்முற்றெச்சம். முச்சி உச்சி. அது உயர்வின்மேல் நிற்றலால் முச்சத்தார் என்றது உயர்ந்தோர்மேல் நின்றது. 31

நின்மகனாள்வானீயினிதாள்வாய்நிலமெல்லாம்
உன்வயமாமேயாளுதிதந்தேனுரைகுன்றேன்
என்மகனென்கண்ணென்னுயிரெல்லாவுயிர்கட்கும்
நன்மகனிந்நாடிறவாமைநயவென்றான்.

இ-ள். நிலம்எல்லாம் நின்மகன்ஆள்வான்—இந்நிலவுலகை யெல்லாம் உனதுமகனேயாளுவான், நீ இனிதுஆள்வாய்—நீயுமினிதாகஆளாநிற்பாய், உன்வயம்ஆம்—உனதுவசப்பட்டுநடக்கும் தந்தேன்—அரசியல்கொடுத்தேன், ஆளுதி—ஆள்வாய், உரைகுன்றேன்—இவ்வார்த்தையின்று தவறேன், என் மகன்—எனக்கினியபுதல்வனும், என்கண்—எனதுகண்போல்வானும், என் உயிர்—எனதுயிராயுள்ளவனும், எல்லாவுயிர்கட்கு நல்மகன்—எல்லாவுயிர்களுக்கு நன்மைகருதும் குணவானுமாகிய இராமமூர்த்தி, இந்நாடு இறவாமை நயஎன்றான்—இந்த நாட்டைவிட்டுக் கடவாமையை விரும்பியருள்வாயென் றிரந்தனன்.

என்னுயிர் ஒற்றுமைக்கிழமைப்பொருளில்வந்த ஆறாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். ஆளுதிமுன்னிலையொருமை எதிர்காலவினைமுற்று ஆள் பகுதி, து சாரியை, உகரக்கேடு சந்தி இ விகுதி. 32

மெய்யேயென்றன் வேரறநாறும்வினை நோக்கி
நையாநின்றே னுவுமுலர்ந்தேனளினம்போற்
கையானின்றே னென்கண் ணெதிர்நின்றுங்கழிவானேல்
உய்யேனங்காயுன்னபயம்மென்னுயிரென்றான்.

இ-ள். நங்காய்—கைகேசியே, மெய்யே—உண்மையாக, என்தன்வே ர் அறநாறும்வினைநோக்கி நையாநின்றேன்—என்னை அடியோடறக்கெடு க்கும் உன் தீச்செயலைப்பார்த்து வருந்தாநின்றேன், நாஉம்உலர்ந்தேன்—நாவு ம்புலர்ந்தேன், நளினம்போல்கையான்—தாமரைமலரைப்போலுங் கையையு டைய இராமமூர்த்தி, இன்றுஎன்கண் எதிர்நின்றும்கழிவானேல்—இப்பொ ழுதுஎன்கண்களுக்கு எதிர்நின்றுங்கழிவானாகில், உய்யேன்—உயிர்பிழை யேன், என்உயிர்உன் அபயம்என்றான்—எனதுயிர்உனக்கடைக்கலமென்று கூறினான்.

நாஉம் என்றதினும்மை உடம்பும் என்றதின்மேல்நிற்றலால் எதிரதுத ழீஇயஎச்சப்பொருட்டு. நாவுமுலர்ந்தேன் உயர்திணையொடுசார்ந்த அஃறி ணைஉயர்திணைமுடிபேற்றலால் திணைவழுவமைதி. 33

இரந்தான்சொல்லுமின்னுரைகொள்ளாள்முனிவெஞ்சாள்
மரந்தானென்னுநெஞ்சினணாணாள்வசைபாராள்
சரந்தாவில்லாய்தந்தவரத்தைத்தவிர்கென்றல்
உரந்தானல்லானல்லறமாமோவுரையென்றாள்.

இ-ள். மரம்தான் என்னும் நெஞ்சினள்—மரமோவென்றுகருதும்மன த்தையுடைய கைகேசி, இரந்தான்சொல்லும் இன்உரை கொள்ளாள்—கு றையிரந்துகூறும் அரசன்சொல்லுமினிய வார்த்தைக்குச்சிறிதும் செவிகொ டாள், முனிவு எஞ்சாள்—தான்கொண்டகோபத்தினின்றுஞ் சிறிதுந்தவ றாள், நாணாள்—பழிக்குநாணாள், வசைபாராள்—பின் வரும்பழிச்சொல்லை நோக்காள், சரம்தாவில்லாய்—அம்புதாவும் வில்லையேந்திய அரசனே தந்த வரத்தைதவிர்கஎன்றல்—நீதந்தவரத்தையே இன்றுநீஏற்காதொழியக்கடவா யென்றுகூறுதல், உரம்தான் அல்லாமல்—உனக்குள்ளவன்மையேயல்லாமல், நல்அறம்ஆம்ஓ—நல்லதருமநெறியாகுமா, உரைஎன்றாள்—சொல்லாயென்று கூறினாள்.

தவிர்கஎன்னும் வியங்கோளீறுதொகுத்தல். 34

கொடியாளின்னகூறினள்கூறக்குலவேந்தன்
முடிசூடாமற்காத்தலுமொய்கானிடைமெய்யே
நெடியானீங்கநீங்குமென்னாவியினியென்னா
இடியேறுண்டமால்வரைபோன்மண்ணிடைவீழ்ந்தான்.

இ-ள். கொடியாள் இன்னகூறினள்—கொடியவளாகிய கைகேசிஇ துபோன்றசொற்களைச்சொன்னாள், கூற—சொல்ல, குலவேந்தன்—அரசர் குலத்திற்றோன்றிய தசரதச்சக்கரவர்த்தி, நெடியான் முடிசூடாமல் காத்த லும்—இராமமூர்த்திமகுடஞ்சூடாமற் காக்கவும், மொய்கான் இடைமெய்எநீ ங்க—வெப்பமிக்ககாட்டில் உண்மையாகநீங்கவும், இனிஎன்ஆவி நீங்கும்

என்று—இனியென துயிர் நீங்குமெனவும், இடிஏறுண்டமால்வரைபோல்—இடிவிழுந்தபெரியமலையைப்போல மண் இடைவீழ்ந்தான்—நிலவுலகின்மேல் வீழ்ந்தான்.

காத்தலும் நிகழ்காலவினையெச்சம் கா பகுதி, துசாரியை, தகரத்தோற் றமும்உகரக்கேடும்சந்தி, உம்எச்சவிகுதி.என்றுஇடைச்சொல்லடியாகப்பிற ந்த செய்பாஎன்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம். 35

வீழ்ந்தான்வீழாவெந்துயரத்தின்கடல்வெள்ளத்
தாழ்ந்தானாழாவக்கடலுக்கோர்கரைகாணான்
சூழ்ந்தாள்துன்பஞ்சொற்கொடியாள்சொற்கொடுநெஞ்சம்
போழ்ந்தானுள்ளப்புன்மையைநோக்கிப்புலர்கின்றான்.

இ-ள். வீழ்ந்தான்—விழுந்தவன், வீழா—விழுந்தே, வெந்துயரத்து இன்கடல்வெள்ளத்துஆழ்ந்தான்—கொடியதுன்பக்கடல்வெள்ளத்திலழுந்தி னன், ஆழா—அழுந்தியே, அகடலுக்குஓர்கரைகாணான்—அத்துன்பக்கட லுக்கு அவன் ஒருகரைகாணாது, சொல் கொடியாள்—சொல்லிற் கொடிய வளாய், துன்பம்சூழ்ந்தாள், தக்குத்துன்பஞ்சூழ்ந்தவளும், சொல்கொடுநெ ஞ்சம்போழ்ந்தான்—கொடுஞ்சொற்கொண்டு தன்மனதைப் பிளந்தவளுமா கியகைகேசியின், உள்ளம்புன்மையை நோக்கிபுலர்கின்றான்—மனக்கொடு மையை நோக்கிவருந்துகின்றவனாயினன்.

வீழா, ஆழா என்னும் எச்சங்கள் வீழ்ந்தவன் எழவில்லையெனவும், ஆழ் ந்தவன்கரைகாணவில்லையெனவும்பொருள்மேல்நின்றன. காணான்முற்றெச் சம். சூழ்ந்தாள் போழ்ந்தாள் வினைமுதற்பொருள்மேல்நிற்றலால்வினைமுற் றுப்பெயர்கள். 36

ஒன்றாநின்றவாருயிரோடுமுயிர்கேள்வர்
பொன்றாமுன்னம்பொன்றினரென்னும்புகழல்லால்
இன்றோர்காறுமெல்வளையார்தம்மிறையோரைக்
கொன்றாரில்லைகொல்லுதியோநீகொடியாளே.

இ-ள். எல்வளையார்—விளங்கும் வளையலையணிந்த பெண்கள், ஒன்றா நின்ற ஆர்உயிரோடும்—தம்மொடுபொருந்திநின்றபெறுதற்கரிய வுயிரோடு ம், உயிர்கேள்வர்—தம்முயிரையொத்த கணவாகள, பொன்றாமுன்னம்—இ றப்பதற்குமுன்னமே, பொன்றினர்என்னும் புகழ் அல்லாமல்—தாமிறந்தன ரென்னுங்கீர்த்திபெறுதலேயல்லாமல், இன்று ஓர்காறும்—இதுவரைக்கும், தம்இறையோரைகொன்றார் இல்லை—தமதுகணவரைமுன்புகொன்றவர்களி ல்லை, கொடியாளே—கொடியகைகேசியே, நீகொல்லுதியோ—நீகொன்று புகழ்பூணப்போகின்றாயோ.

உயிர்க்கேள்வர்தொகுத்தல். 37

ஏவம்பாராயின்முறைநோக்காயறமெண்ணாய்
ஆவென்பாயோவல்லைமனத்தாலருள்கொன்றாய்
நாவம்பாலென்னுருயிருண்டாயினிஞாலம்
பாவம்பாராதின்னுயிர்கொள்ளப்படுகின்றாய்.

இ-ள். ஏவம்பாராய் — என் துன்பத்தையும்பாராய், இன்முறைநோக்காய்—இனியஅரசியன் முறைமையையும்பாராய், அறம்என்னாய்—மநுநூலிற் கூறிய தருமத்தையுங்கருதாய், ஆ வென்பாய் ஓ—இவ்வாறுள்ள நீஐயோ வென்றிரங்குவாயோ,வல்லமனத்து ஆல் அவள்கொன்றாய்—கடினமானமனத்தினால் சிவகருணையையுமொழித்தாய், நா அம்பு ஆல்—நாவாகிய அம்பினால், என் ஆர்உயிர் உண்டாய் — என்னுடையபெறுதற்கரிய வுயிரினையுண்டாய், இனிஞாலம்—இவ்வுலகத்தாரால்; பாவம்பாராது இன்உயிர்கொள்ளப்படுகின்றாய்— (பெண்பாலைக்கொன்றால்) பாவமென்றுநோக்காது உனது இனிய உயிர்வாங்கப்படபோகின்றாய்.

இராமமூர்த்திமுடிசூடாது காட்டிற்குச்செல்லஓட்டினவளென்றும்கணவனைக்கொன்றவளென்றும்உன்னையுலகினர் பழிபாராது சொல்வார்என்பான்இஞாலம் பாவம்பாராதின் னுயிர்கொள்ளப் படுகின்றான். ஞாலம்இடவாகுபெயர். 38

எண்பாலோவாநாண்மடமச்சமிவையேதம்
பூண்பாலாகக்காண்பவர்நல்லார்புகழ்பேணி
நாண்பாலோராநங்கையர்தம்பானணுகாரே
ஆண்பாலாரேபெண்பாலாரோடடைவம்மா.

இ-ள். எண்பால்ஓவாத — வலிமையினின்றும்நீங்காத, நாண்மடம்அச்சம்இவைஏ—நாணமுமடமையும் அச்சமுமாகிய இவைகளையே, புகழ்பேணி தம் பூண்பால்ஆக காண்பவர் ஏநல்லார்—புகழைவிரும்பித்தம்மாற்பூணப்படும் ஆபரணப்பகுதி யாகக்கருதி நோக்குவோரே பெண்களாவார்,நாண்பால் ஓரா நங்கையர்தம்பால்—நாணமுதலியஅப்பகுதிகளைக்கருதாதபெண்களிடத்து, ஆண்பாலார் நணுகார்—ஆண்மையையுடையவர்சேரார், நணுகுவோர் பெண்பாலார்ஓடு அடைவு—சேருவோர் அப்பெண்பாலரை யொத்தவர்.

நாணம்பழிக்குநாணுதல், மடம்தீச்செயல்வலையறியாமை. அச்சம்அச்செயல்களுக்கு அஞ்சுதல். பிரிநிலை ஏகாரந்தொகுத்தல் நணுகுவார்சொலலெச்சம். ஓடு உருபுமயக்கம். 39

மண்ணாள்கின்றாராகிவலத்தான்மதியால்வைத்
தெண்ணாநின்றார்யாரையுமெல்லாவிகலாலும்
விண்ணோர்காறும்வென்றவெனக்கென்மனைவாழும்
பெண்ணால்வந்ததந்தரமென்னப்பெறுவேனே.

இ-ள். வலத்து ஆல்மண் ஆள்கின்றார் ஆகி—வெற்றியால் மண்ணுலகையாளுகின்றவராகி, மதியால்வைத்து எண்ணாநின்றார்யாரைஉம்—தமதறிவில் வைத்துயாவராலும் மதிக்கப்படும் அரசரெல்லோரையும், எல்லா இகலால் உம்—எவ்வகைப்பட்ட வலிமையாலும், விண்ணோர்காறும்வென்றவனக்கு—தேவர்கள்வரைக்கும் வென்றவெனக்கு, என்மனைவாழும்—என்மனையில்வாழாநின்ற, பெண் ஆல் அந்தரம்வந்தது என்னபெறுவேனே—பெண்ணினால்முடிவுவந்ததென்றுசொல்ல நான்பெறுவேனோ (பெறேனென்றபடி)

ஓகாரம்எதிர்மறைப்பொருட்டு. இதனால்வீரியல்பு கூறப்பட்டது. 40

என்றென்றன்னும்பன்னியிரக்குமிடர்தோயும்
ஒன்றொன்றொவ்வா இன்னலுழக்குமுயிருண்டோ
இன்றென்றென்னும்வண்ணமயக்குமிடியும்பொன்
குன்றொன்றொன்றோடொன்றியதென்னக்குவிதோளான்.

இ-ள். பொன்குன்றுஒன்று — மேருவொன்று, ஒன்றுஒடுஒன்றியது அன்னகுவிதோளான்—மற்றொருமேருவோடுபொருந்திநின்றதுபோலக்குவிந்துதிரண்ட தோளையுடைய அரசன், என்றுஎன்று உன்னும்—என்றுகூறியென்று கூறிக்கருதுவான், பன்னி இரக்கும்—தன் துன்பங்களைச்சொல்லியிரப்பான், இடர்தோயும்—துன்பத்தில் அழுந்துவான், ஒன்றுஒன்றுஒவ்வா இன்னல்உழக்கும்—ஒன்றுக் கொன்றொவ்வாத துன்பத்தில் வருந்துவான், உயிர் உண்டு ஓ இன்று ஓ என்னும் வண்ணம்மயக்கும் — உயிருண்டோஇல்லையோ வென்றையுறும் வண்ணமயங்குவான், இடியும்—இடிந்து போவான்.

ஒரிவகைத் துன்பம் அல்லவாதலால் ஒன்றொன்றொவ்வா வென்றார். எண்பாலோவா என்றதுமுதல் என்றென்றன்னும் என்பதுகாறும் ஒருதொடராதலால் குளகம். ஒன்றுஒன்று எல்லைப்பொருளில்வந்த நான்காம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். பொன்குன்றொன்றொடு ஒன்றியதென்ன இல்பொருளுவமையணி.

ஆழிப்பொற்றேர்மன்னவனிவ்வாறயர்வெய்திப்
பூழிப்பொற்றோண்முற்றுமடங்கப்புரள்போழ்தில்
ஊழிற்பொய்த்தாலென்னுரையின்றேயுயிர்மாய்வென்
பாழிப்பொற்றார்மன்னவவென்றாள்பகையற்றாள்.

இ-ள். ஆழிபொன் தேர்மன்னவன் — உருளைபூண்ட பொன்னாற்சமைந்த தேரையுடைய அரசன், இ ஆறுஅயர்வுஎய்தி—இவ்வகையாகத் துன்பங்கூர்ந்து, பொன்தோள் பூழிமுற்றும் அடங்கபுரள்போழ்தில்—பொன்னிறம்வாய்ந்த தோளில்புழுதி முழுதுமடங்கப் புரளுங்காலையில், பகைஅற்றாள்—சிறிதும் ஈரம்மில்லாத மனத்தையுடையகைகேசி, என்உரை ஊழ்இல்பொய்த்தால்—எனதுவார்த்தை நான்கேட்டமுறையினின்றுந்தவறினால், பாழிபொன்தார்மன்னவ—பெருமையமைந்தபொன்னலரிந்துசெய்தமாலையணிந்த அரசனே; இன்று ஏ உயிர்மாய்வென்என்றாள்—இப்பொழுதேயுயிர்விடுவேனென்றுகூறினாள்.

மாய்வென் எதிர்காலத்தன்மை யொருமைவினைமுற்று மாய் பகுதி,வகரமெய்இடைநிலை, என்தன்மையொருமை விகுதி.பொய்த்தால் பெயரடியாகப்பிறந்த எதிர்காலவினையெச்சம் பொய் பகுதி.த் சாரியை, தகரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி. ஆல்எச்ச விகுதி. 42

அரிந்தான்முன்னோர்மன்னவனன்றேயருமேனி
வரிந்தார்வில்லாய்வாய்மைவளர்ப்பான்வரங்கல்கிப்
பரிந்தாலென்னுமென்றனள்பாயுங்கனலேபோல்
எரிந்தேதழுதேயின்னுயிருண்ணுமெரியன்னாள்.

இ - ள். பாயும்கனல் ஏபோல்—பரவியேறியெரியுந் தீயைப்போல, எரிந்துஏறாது—எரிந்துபரவியேறாமல், இன்உயிர் உண்ணும்எரிஅன்னாள்—இனியவுயிரையுண்ணும் தீயையொத்தகைகேசி, வரித்துஆர்வில்லாய்—கட்டமைந்து நிறைந்தவில்லையேந்திய அரசனே, முன்ஓர்மன்னவன்—முன்னொருஅரசன், வாய்மைவளர்ப்பான்—தன்வாய்ச்சொல்லைப் பாதுகாக்கும் பொருட்டு, அருமேனி அரிந்தான் அன்றுஏ—தனது அரியசரீரத்தை யொருபுறவின்பொருட்டாக அரிந்து தந்தானல்லவா, வரம்நல்கிபரிந்தால் என்ஆம் என்றனள்—வரந்தந்து இப்போது வருந்தினாலென்னபயனென்றுகூறினாள்.

சிபிச்சக்கரவர்த்தியென்பவர் நீதியும் அறமுங்குன்றாமல் அரசுசெய்து வருங்காலையில், அவர்நிலையையுயிர்களுக் குணர்த்தச்சிவபெருமான் திருவுளங்கொண்டு இந்திரனையும் அக்கினிதேவனையுமேவ, இந்திரன் பருந்தாகவும் அக்கினிதேவன் புறவாகவுஞ்சென்றபோது அப்புறவுஅரசனைச்சரணடைய, பருந்துஅவ்வரசன் பாற்சென்று நெடுங்காலம் இரையின்றுவருந்தி இப்புறவாற்பசியொழிக்கலாமென்றிருந்தனன், இப்பொழுதுநின்னைச்சரணடைந்தஇப் புறவைத்தந்து பசியொழிப்பது உன்கடமையென்றுவேண்ட, அதற்கரசனிரங்கி யென்னைக்சரணடைந்த இதனைத்தாரேன், இதற்குப்பிரதியாக என் தேகத்தசையைத் தருவேனென்றதற்குடன் பட்டபருந்தின் கருத்தையுணர்ந்து வேள்விச்சாலியினட்ட யூகத்தம்பத்திற்கருகே ஒருதுலைநாட்டி யொருதட்டில் புறவையும்மற்றோர் தட்டில்தன்வாளாலரிந்ததசையையும்பெய்துசரிவாராமையால் சரிவரத்தான் துலையிலேறினான் என்பதுஇந்நூல்வரலாறு. வரிந்து இறந்தகாலவினையெச்சம் வரிபகுதி நகரமெய் சந்தி. தகரமெய்இடைநிலை, உ எச்சவிகுதி. இதுமெலித்தல்விகாரம். வளர்ப்பான் எதிர்காலவினையெச்சம் வளர் பகுதி, பகரமெய்சந்தி, பான் விகுதி. 43

வீந்தாளேயிவ்வெய்யவளென்னாமிடல்வேந்தன்
ஈந்தேனீந்தேனிவ்வரமென்சேய்வனமாள
மாய்ந்தேநான்போய்வானுலகாள்வென்வசைவெள்ளம்
நீந்தாய்நீந்தாய்நின்மகனோடும்நெடிதென்றான்.

இ - ள். மிடல் வேந்தன்—வலிமையையுடைய அரசன், இ வெய்யவள் வீந்தாள் ஏ என்னா—இக்கொடியவளிறந்தனளென்று, இவரம் ஈந்தேன் ஈந்தேன்—இந்தவரத்தைத் தந்தேன் தந்தேன், என்சேய்வனம்ஆள—என்னுடைய புத்திரன்காடாள, நான்மாய்ந்துபோய் வானுலகு ஆள்வென்—நானிறந்துவிண்ணுடாள்வேன், நெடிது—உலகுள்ளளவும், நின்மகன் ஓடும்வசைவெள்ளம்நீந்தாய்நீந்தாய்—நினதுபுத்திரனோடும் வசைச்சொல்லாகியவெள்ளத்தினின்றும்நீந்தாய், என்றான்—என்றுகூறினான்.

ஈந்தே னீந்தேன், நீந்தாய் நீந்தாய் துணிவுப்பொருளில் வந்த அடுக்குத்தொடர். 44

கூறாமுன்னங்கூறுபடுக்குங்கொலைவாளின்
ஏறாமென்னும்வன்றுயராகத்திடைமூழ்கத்
தேறானாகிச்செய்கைமறந்தான்செயல்முற்றி
ஊறாநின்றசிந்தையினாளுந்துயில்வுற்றாள்.

இ - ள். கூறுமுன்னம்—தான் சொல்லுதற்குமுன்னமே, கூறுபடுக் கும்கொலைவாளின்—பிளவுபடுக்குங்கொலைத்தொழிலையுடையவாளைப்போல ஏறும் என்னும்வன் துயர்—இடியேயென்றுசொல்லப்படும் மிக்க துன்பமானது, ஆகத்து இடைமூழ்க—தன்மார்பில்மூழ்க, தோான் ஆகி செய்கைமறந்தான்–சிறிதுந்தெளியானுகித்தானினிச்செய்யுஞ்செயலைமறந்தனன், செயல் முற்றி ஊறுகின்ற சிந்தையினளும்—தன்செயல் முடிந்துமகிழ்சுரக்காநின்ற மனத்தையுடைய கைகேசியும், துயில்வுற்றாள்—நித்திரைசெய்தாள்.

பெருந்துன்பம் என்பார் ஏறுமென்னும் வன்றுயர்எனவும், தான்கருதியவரத்தைப்பெறுதலால் செயல்முற்றித்துயில்வுற்றாள்எனவுங்கூறினர். இன் உருபுஒப்புப்பொருட்டு. 45

எழுசீரடியாசிரிய விருத்தம்.

சேணுலாவியநாளெலாமுயிரொன்றுபோல்வனசெய்துபின்
ஏணுலாவியதோளினனிடரெய்தவொன்றுமிரங்கிலா
வாணிலாநகைமாதராள்செயல்கண்டுமைந்தர்முனிற்கவும்
நாணினளெனவேகினளிர்கங்குலாகியநங்கையே.

இ - ள். சேண்உலாவிய நாள்எல்லாம்—கடந்தபலநாளெல்லாம், உயிர் ஒன்றுபோல்வனசெய்து—இருவருக்கும் உயிரொன்று என்னஒத்த காரியங்களைச்செய்து, பின்—பின்பு, ஏண்உலாவிய தோளினன் இடர்எய்த—வலிமைமிக்க தோளையுடைய அரசன் இன்று துன்பமடைய, ஒன்றும் இரங்கிலாத, சிறிதுமனமிரங்காத, வாள்நிலாநகைமாதராள்செயல்கண்டு—ஒளிவிளங்கும்பற்களையுடையகைகேசியின் செயலைப்பார்த்து, நளிர்கங்குல் ஆகிய நங்கை மைந்தர்முன்நிற்க உம் நாணினள் ஏகினள்—பெரிய இருளாகிய பெண் உலகிலுள்ளபுருடர்முன்னிற்கவும் நாணங்கூர்ந்தவள்போலச் சென்றனள்.

விடிதலை, தானும் பெண் ஆதலால் அவள்செயல்கண்டு நாணங்கூர்ந்து கழிதல்போலக் கழிந்ததென்றுகூறியது தற்குறிப்பேற்றவணி. உம்மைஇழிவுசிறப்புப்பொருட்டு. 46

எண்டருங்கடைசென்றயாமமியம்புகின்றனவேழையால்
வண்டுதங்கியதொங்கன்மார்பன்மயக்கிவிம்மியவாறெலாம்
கண்டுநெஞ்சுகலங்கியஞ்சிறையானகாமர்துணைக்கரங்
கொண்டுதம்வயிறெற்றிவிளிப்பபோன்றனகோழியே.

இ-ள் கோழி–கோழிகள், எண்தரும்கடைசென்றயாமம்–யாவரும்எண்ணத்தகும் இராப்போது கழிந்தனவென்று, இயம்புகின்றன—தெரிவித்தல், வண்டுதங்கிய தொங்கல்மார்பன் - வண்டுதங்கிய மாலையையணிந்த மார்பையுடைய அரசன், ஏழைஆல்மயங்கிவிம்மியஆறு எல்லாம்கண்டு—கைகேசியால்மயங்கித் தன்னிலைமையழிந்த வகையெல்லாம்பார்த்து, நெஞ்சுகலங்கி—மனங்கலங்கி, அம்சிறை ஆனகாமர்துணை கரம்கொண்டு–அழகியதமதுசிறை

யாகிய இரண்டுகைகளையுங்கொண்டு, தம்வயிறு எற்றிஎற்றி-தமது வயிற்றில் மோதியடித்துக்கொண்டு, விளிப்பபோன்றன - உலகிலுள்ளவர்களுக்கு அதைத்தெரிவித்தலையொத்திருந்தன.

இயம்புகின்றன, விளிப்ப, இவைசெயலையுணர்த்துதலால் வினைமுற்றுப்பெயர்கள் - இது தற்குறிப்பேற்றவணி. 47

தோய்கயத்துமரத்துமென்சிறைதுள்ளிமீதெழுபுள்ளொலாம்
தேய்கையொத்தமருங்குன்மாதர்சிலம்பினின்றுசிலம்புவ
கேகயத்தரசன்பயந்தவிடத்தையின்னதோர்கேடுசூழ்
மாகயத்திலையுட்கொதித்துமனத்துவைவனபோன்றவே.

இ-ள். தோய்கயத்துஉம் மரத்துஉம்—பறவைகள்தோயுங்குளத்திலும் மரங்களிலும், மென்சிறைதுள்ளிமீது எழுபுள்எல்லாம்—மெல்லிய சிறகால் துள்ளிமேலெழுந்த பறவைகளெல்லாம் தேய்கைஒத்த மருங்குல்மாதர்சிலம்பின்நின்றுசிலம்புவ-தேய்தலைப்பொருந்திய இடையையுடைய பெண்களது காற்சிலம்புகள்போலநின்று ஒலித்தல், கேகயத்து அரசன் பயந்தவிடத்தை-கேகயநாட்டரசன்பெற்றவிஷம்போல் வாளை, இன்னதுஓர்கேடு சூழ்மாகயத்திலை—இத்தன்மைமையுடைய ஒருகெடுதியைத்தன்கணவனுக்குச்சூழ்ந்த கொடியகீழ்மகளை, உள்கொதித்துவைவனபோன்ற — உள்ளேகொதித்து மனத்தால் வைதலையொத்திருந்தன.

சிலம்புவ, வைவனசெயல்மேல் நிற்றலால்வினைமுற்றுப்பெயர்கள். இதுவும் அவ்வணி. 48

சேமமென்பனபற்றியன்புதிருந்தவின்றுயில்செய்தபின்
வாமமேகலைமங்கையோடுவனத்துள்யாருமறங்கிலா
நாமநம்பிநடக்குமென்றுநடுங்குகின்றமனத்தவாய்
யாமுமிம்மணிறந்துமென்பனபோலெழுந்தனயானையே.

இ-ள். யானை—யானைகள், சேமம்என்பனபற்றி— தமக்குப்படுக்கையாயுள்ள இடங்களைப்பொருந்தி, அன்புதிறந்த இன்துயில்செய்தபின்-அன்புமிக இனியநித்திரைகூர்ந்தபின், வாமம்மேகலைமங்கைஓடு - ஒளிவாய்ந்தமேகலையையணிந்த சீதாப்பிராட்டியோடு, யார்உம்மறங்குஇல்லாத-உலகில்யாவரும்பிணங்குதல்செய்யாத, நாமம்நம்பி - புகழ்வாய்ந்தஇராமமூர்த்தி, வனத்துஉள் நடக்கும்என்று - காட்டிற்குச்செல்வாரென்று, நடுங்குகின்றமனத்தஆய்-நடுங்காநின்றமனத்தையுடையவனாகி, யாம்உம் இமண் இறந்துஎன்பனபோல் எழுந்தன - நாமுமிவ்விடத்தினின்று காட்டிற்குச்செல்வோமென்று எழுதல்போல எழுந்தன.

யானைபாலபகா அஃறிணைப்பெயராதலால் எழுந்தனஎன்னுஞ்சிறப்புவினையால் பொதுமைநீங்கிப் பலவின்பால்மேல்நின்றது. மறங்குமுதனிலைத்தொழிற்பெயர், மறங்குதல்பிணங்குதல். 49

இரித்தபங்கயமொத்தசெங்கணிராமனைத்திருமாலையக்
கரிக்கரம்பொருகைத்தலத்துயர்காப்புநாணணிதற்குமுன்

வரித்ததண்கதிர்முத்ததாகியிம்மண்ணனைத்தும்நிழற்றமேல்
விரித்தபந்தர்பிரித்ததாமெனமீனொளித்தனவானமே

இ-ள். சிறித்தபங்கயம்ஒத்த செங்கண் இராமனை - மலர்ந்த தாமரைமல ரையொத்த செவந்தகண்களையுடைய இராமமூர்த்தியை, திருமாலை-மாயல னை, கரிகரம்பொருகைத்தலத்து-யானையின் துதிக்கையை யொத்தகையில், அஉயர்நாண்காப்பு அணிவதற்குமுன்-(முடிசூடுதற்கு) அந்தஉயர்ந்தநாண்கா ப்பினையணிதற்குமுன்னே,வரித்ததண்கதிர்முத்து ஆகி - மேலேகட்டிய முத் துகளாகி, இமண் அனைத்தும்நிழற்ற - இந்நிலவுலகமுழுதும் நிழல்செய்ய, மேல்விரிந்தபந்தர்—மேலே வேய்ந்தபந்தலை, பிரித்ததும்ஆம் என்ன—பிரித் ததுபோல, வானம் மீன் ஒளித்தன—ஆகாயம் நட்சத்திரங்களைக்கரந்தன.

சிரித்த என்பது மலர்ந்த என்னும்பொருள்மேல்நிற்றல் "உண்டற்குரிய வல்லாப்பொருளை உண்டனபோலக்கூறலுமரபே என்ற சூ-இல்" கூறலும் என்ற உம்மையால்.வரித்த இறந்தகாலப்பெயரெச்சம் வரி பகுதி.அது பகுதி ப்பொருள்விகுதி. நிழற்ற, பெயரடியாகப்பிறந்த எதிர்காலத்தில்வந்த பெய ரெச்சம் நிழல் பகுதி, து சாரியை,லகரமுந்தகரமும் திரிதலும் உகரக்கேடும் சந்தி, அ விகுதி. இதனடியாக நிழற்றல், நிழற்றி, நிழற்றினன்என வினைவி கற்பங்கள்வரும். பந்தல் பந்தர் இறுதிநிலைபோலி. 50

நாமவிற்கையுராமனைத்தொழுநாளடைந்தநமக்கெலாம்
காமவிற்குடையங்குன்மாலைகழிந்ததென்பதுகற்பியா
தாமொலித்தனபேரியவ்வொலிசாரன்மாரித்தழங்கலா
மாமயிர்குலமென்னமுன்னமலர்ந்தெழுந்தனர்மாதரே.

இ-ள். நமக்கு எல்லாம்—நமக்கெல்லாம், நாமம் வில்கை இராமனை தொழுநாள் அடைந்த—அச்சத்தைத்தரும் வில்லையேந்திய திருக்கரத்தையு டைய இராமமூர்த்தியைவணங்குங்காலமடைந்தன, காமம்வில்கு உடைகங்கு ன்மாலைகழிந்தது என்பது கற்பியா—மன்மதன்வில்லுக்குவருந்துதற்குக்கா ரணமான இராப்பொழுது கழிந்ததென்பதைக்கற்பித்து, பேரிதாம் ஒலித்த ன—பேரிகையொலித்தன, அ ஒலிசாரல்—அந்தப்பேரிகையொலியடைத லால், மாரிதலங்கலாக—மேகமுழங்க, மாமயில் குலம் என்ன—பெரியமயிற் கூட்டமெழுந்தார்போல, மாதர்முன்னம்மலர்ந்து எழுந்தனர்—பெண்கள்மு கமலர்ந்தெழுந்தார்கள்.

தழங்கலாக ஒருசொல். ஈறுகெடுதல் "சாவவென்மொழியீற்றுயிர் சாத லும்விதி" என்ற உபலக்கணத்தால். நாமவில் உரிச்சொற்றொடர். நாம் உரிச் சொல், அம் சாரியை "காமன்வில் காமவில்" சிலவிகாரமாமுயர்திணை. என் றவிதியால் ஈறுகெட்டது. தழங்கலால் எனப்பாடங்கொண்டு, அ ஒலி அந்த ஒலியால், சாரல்மாரிதழங்கல் ஆல்—மலைப்பக்கத்தில் மேகமுழங்குதலால். எனக்கொள்ளுதலும் ஒன்று. 51

இனமலர்குலம்வாய்விரித்திளவாசமாருதம்வீசமுன்
புனைதுகிற்கலைசோரநெஞ்சுபுழுங்கினர்சிலர்பூவைமார்
மணமலுக்கம்விடத்தனித்தனிவள்ளலைப்புணர்கள்ளவன்
கனவினுக்கிடையூறெடுக்கமயங்கினர்சிலர்கன்னிமார்

இ-ள். இளமாருதம்—தென்றற்காற்று, முனம்மலர் குலம்வாய் விரித்து வாசம்முன்வீச—முன்பு ஒருசாதியாயுள்ள மலர்க்கூட்டங்கள் மலரச்செய்துவாசந்தோய்ந்து தம்முன்வீசுதலால், பூவைமார் சிலர்—நாகணவாய்ப்பட்சிபோலுஞ்சொல்லையுடைய பெண்கள்சிலர், புனைதுகில்கலைசோர—உடுத்தஆடைசோர, நெஞ்சுபுழுங்கினர்—மனம்புழுங்கினார்கள் மனம் அனுக்கம் விட—மனநடுக்கம்நீங்க, தனிதனிவள்ளலைபுணர்கள்ளம் வன்கணவினுக்கு—தனித்தனி இராமமூர்த்தியைக்கூடும் வஞ்சகத்தையுடைய வலியகனவினுக்கு, இடையூறு அடுக்க—இடையூறடுத்தலால், கன்னிமார்சிலர் மயங்கினார்—கன்னிப்பெண்கள் சிலர்மயங்கினார்கள்.

கள்ளம் என்றது கூட்டுறவு உண்மையையல்லாமையை. வீச, அடுக்க காரணப்பொருள்மேல் நிற்றலால் இறந்தகாலவினையெச்சம். மார்—பலர்பால் விகுதி. 52

சாயடங்கநலங்கலந்துதயங்குதன்குலநன்மையும்
போயடங்கநெடுங்கொடும்பழிகொண்டரும்புகழ்சிந்துமந்
தீயடங்கியசிந்தையாள்செயல்கண்டுசீரியநங்கைமார்
வாயடங்கினவெனவந்துகுவிந்தவண்குமுதங்களே.

இ-ள். சாய் அடங்க—தமதுமென்மைத்தன்மையடங்கவும், நலம்கலந்துதயங்குதன்குலம் நன்மை உம்போய் அடங்க—புகழ்நலங்கலந்துவிளங்குந்தனதுகுலத்தினன்மை கெட்டடங்கவும், நெடுங்கொடும்பழிகொண்டு—நெடியகொடிய பழிபூண்டு, அரும்புகழ்சிந்தும் அந்தீ அடங்கியசிந்தையாள்செயல் கண்டு—அரியகீர்த்தியைச்சிந்திய அந்தத்தீமைகளொருசேர அடங்கியமனத்தையுடையவளது செயலைப்பார்த்து, சீரியநங்கைமார் வாய்வந்து அடங்கினஎன்ன—கற்பிற்சிறந்தபெண்களது வாய் அடைவேயடைங்குதல்போல, வண்குமுதங்கள்குவிந்த—வளமமைந்த ஆம்பல்கள்குவிந்தன.

சாயல் ஈறுதொகுத்தல். 53

மொய்பராகநிரம்பவாசைமுருங்குதீயின்முழங்கமேல்
வையராவியமாரன்வாளியும்வாணிலாநெடுவாடையும்
மெய்யராவிடவாவிசோரவெதும்புமாதர்தமின்செவி
பையராநுழைகின்றபோன்றன பண்கனிந்தெழுபாடலே.

இ-ள். மொய் அராகம்நிரம்ப—நெருங்கிய காமப்பெருக்கானது மீதூர, ஆசை—அவ்வாசையானது, முருக்குதீ இன்முழங்க—கெடுக்குந் தீயைப்போல அதிகரிக்கவும், மேல்—தம்மேல், வை அராவிய மாரன்வாளி உம்—கூர்மையுண்டாக அராவியமன்மதனது அம்பும், வால்நிலா உம் நெடுவாடைஉம்—வெள்ளியசந்திரனும் நெடியவடகாற்றும், மெய் அராவிட (படுதலால்) தேகத்தைமெலியச்செய்யவும், ஆவிசோர—உயிர்சோரவும், வெதும்பும்மாதர்தம் இன்செவி—வெப்பங்கூரும் பெண்களது இனியசெவியில், பண்கனிந்துஎழு பாடல்—இசையகனிந்தெழுந்த பாடல்செல்லுதல், பை அரா நுழைகின்ற போன்றன—படத்தையுடைய பாம்புநுழைதலையொத்திருந்தன.

நிலாவென்பதனிறுதியில் எண்ணும்மைதொகுத்தல். அராவிட, சோர செவ்வெண். முருக்கு முருங்கு மெலித்தல் விகாரம். 54

ஆழியானின்முடிசூடுநாளிடையானபாவியிதோரிர
வூழியாயினவாறெனுவுயர்போதின்மேலுறைபேதையும
ஏழுலோகமுமெண்டவஞ்செய்தகண்ணுமெங்கண்மனங்களும்
வாழுநாளிதெனுவெழுந்தனர்மஞ்சுதோய்புயமஞ்சரே.

இ-ள். மஞ்சு தோய்புயம் மஞ்சர்—அழகமைந்த புயத்தையுடையமைந்தர்கள், ஆழியான் முடிசூடுநாள்—ஆக்கினாசக்கரத்தையுடைய இராமமூர்த்திமகுடஞ்சூடுநாளில், இடை ஆனபாவி இது ஓர் இரா—இடையில் உண்டானபாவியாகிய இதோரிராக்காலம், ஊழி ஆயினவாறு எனு—ஊழிக்காலம் ஆயிருந்தது இதென்னகைமையென்றும், உயர்போது இல்மேல் உறைபேதை உம்—மணமிக்கதாமரைமேல்வசிக்கு மிலக்குமியும், ஏழ் உலோகம்உம்—ஏழுலோகங்களும், எண்தவம் செய்தகண் உம்—கருதுந் தவஞ்செய் கண்களும், எங்கள் மனங்கள் உம்—எங்களுடைய மனங்களும், வாழுநாள் இது எனு—வாழுநாளிதென்று, எழுந்தனர்—எழுந்தார்கள்.

மைந்தர் மஞ்சர் மரூஉ. 55

ஐயுறுஞ்சுடர்மேனியானெழில்காணலுறுமவாவினால்
கொய்யுறுங்குலமாமலர்க்குவைநின்றெழுந்தனர்கூர்மைகூர்
நெய்யுறுஞ்சுடர்வேனெடுங்கண்முகிழ்த்துநெஞ்சினினைப்பொடும்
பொய்யுறங்குமடந்தைமார்குழல்வண்டுபொம்மெனவிம்மவே.

இ-ள். கூர்மை கூர்—கூர்மைமிக்க, நெய் உறும் சுடர்வேல்—நெய்பூசிய ஒளியமைந்த வேலையொத்த, நெடுங்கண் முகிழ்த்து—நெடியகண்ணைமூடி, நெஞ்சு இல் நினைப்பொடு உம்—தனது மனத்தில் காமநினைவோடும், பொய் உறங்கும் மடந்தைமார்—பொய்யுறக்கங்கொள்ளும்பெண்கள், ஐஉறும் சுடர்மேனியான் எழில்காணலுறும் அவாவின் ஆல்—அழகு மிக்கமேனியையுடைய இராமமூர்த்தியினழகைக்காணலுளாநின்ற ஆசையினால்,குழல்வண்டுபொம்மெனவிம்ம—கூந்தலில் வண்டுகள்பொம்மென்னு மொலிக்குறிப்போடு பறந்தொலிக்க, கொய்யுறும்—கொய்யாநின்ற குலம்மாமலர்குவை நின்று ஏ எழுந்தனர்—கூட்டமாகிய பெரியமலர்குப்பையினின்று மெழுந்தார்கள்.

முகிழ்த்து இறந்தகாலவினையெச்சம் முகிழ் பகுதி. 56

ஆடகந்தருபூண்முயங்கிடவஞ்சியஞ்சியனந்தரால்
ஏடகம்பொதிதார்பொருந்திடயாமபேரியிசைத்தலால்
சேடகம்புனைகோதைமங்கையர்சிந்தையின்செறிதிண்மையால்
ஊடல்கண்டவர்கூடல்கண்டிலர்நையுமைந்தர்களுய்யவே.

இ-ள். நையும் மைந்தர்கள்—புணர்ச்சிக்குவருந்தும் புருடர்கள், அனந்தர் ஆல்—நித்திரையால், ஆடகம் தரு பூண்முயங்கிட—ஆடகம் என்னும்ஒருவகைப்பொன்னாற்செய்த ஆபரணம்தன்மனைவியர்மேல் உறுத்தலால், அஞ்சிஅஞ்சி—எங்கு ஊடல் உண்டாகுமோவென்று அச்சங்கூர்ந்து, யாமபேரி இசைத்தலால்—இராப்போது கழிந்ததென்று குறிப்பிக்கும் பேரிகையொலித்தலால், ஏடு அகம்பொதிதார்பொருந்திட—(அவர்களுக்குமகிழ்வுண்டாக அவ்வாபரணத்தைக்கழித்து) அகவிதழாற்றொடுத்த மாலையைச்சூடவும்,சேடு அகம்

கோதை புனை மங்கையர்—அழகு தமதிடத்தமைய மாலைசூடியபெண்களது, சிந்தையின் செறிதிண்மை ஆல்—மனத்திற்செறிந்தவயிரத்தால், ஊடல்கண்டவர்—நீட்டித்த பிணக்கினைக் கண்டவர்கள் உய்யகூடல்கண்டிலர்—காமத்துன்பநீங்கக்கூடுதலைக் காணாராயினார்.

கூடுதலுக்கு மலர்மாலையணியவும் கூடல்காணாமையால் நையுமைந்தர்கள் என்றார். அஞ்சியஞ்சி அவலப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். 57

தழையொலித்தனவண்டொலித்தனதாரொலித்தனபேரியாம்
முழவொலித்தனதேரொலித்தன்முத்தொலித்தெழுமல்குலார்
இழையொலித்தனபுள்ளொலித்தனயாழொலித்தனவெங்கணும்
மழையொலித்தனபோல்கலித்தமனத்தின்முந்துறுவாசியே.

இ—ள். தழைஒலித்தன—மரத்தினிலைகள்காற்றாலொலித்தன, வண்டு ஒலித்தன — மலரில்வீழ்ந்த வண்டுகளாரவாரித்தன, தார் ஒலித்தன—கிண்கிணிமாலைகள் முழங்கின, பேரி ஆம் முழவுஒலித்தன—பேரிகையாகியவாச்சியம் கோஷித்தன, தேர் ஒலித்தன—தேர்கள் கலித்தன, முத்துஒலித்து எழும் அல்குலார் இழை ஒலித்தன—மேகலையிற் கோவைசெய்தமுத்தங்கள் ஒலித்தாரவாரிக்கும் அல்குலையுடையபெண்களது ஆபரணங்களதிர்ந்தன, புள் ஒலித்தன—பறவைகள் கம்பலைசெய்தன, யாழ் ஒலித்தன — வீணையிசைத்தன, எங்கண்உம்மழை ஒலித்தன போல்—எவ்விடத்து மேகங்கோஷித்தது போல, மனத்து இன் முந்துறுவாசி கலித்த—மனவேகத்தினு முந்திச்செல்லும்குதிரைகள் கம்பலைசெய்தன.

ஒலித்தன அன்சாரியைபெற்றுவந்த இறந்தகாலவினைமுற்று. கலித்த சாரியைபெறாதுவந்த வினைமுற்று. 58

வையமேழுமோரேழுமாருயிரோடுகூடவழங்குமம்
மெய்யன்வீரருள்வீரன்மாமகன்மேல்விளைவதோர்காதலால்
நையநையநலம்புலன்களவிந்தடங்கிநடுங்குவான்.
தெய்வமேனிபடைத்தசேயொளிபோன்மழுங்கினதீபமே.

இ—ள். வையம் எழும் ஓர் எழும்—பதினான்குலகங்களையும், ஆர் உயிர் ஓடுகூட வழங்கும்அம்மெய்யன்—பெறுதற்கரிய உயிரோடுகூடக்கொடுக்கும் அந்தமெய்யையுடையவனும், வீரர் உள் வீரன்—வீரருள் வீரனுமாகிய தசரதச்சக்கரவர்த்தி, மாமகன்மேல்விளைவது ஓர் காதல் ஆல்—தனதுபெருமையமைந்தபுத்திரன்மேல்விளைந்தஆசையால், நையநைய—மனம் நெக்குவிட்டுடைய, நல் ஐம்புலன்கள் அவிந்து அடங்கி நடுங்குவான்—நல்லதனதைந்துபுலன்களு நிலைகெட்டொடுங்கி நடுங்காநின்றான், தெய்வம் மேனிபடைத்த சேய் ஒளிபோல்—அவனதுதெய்வத்தன்மையுடையசரீரத்திற் பொருந்திய செவந்த ஒளிமழுங்கினதுபோல, தீபம் மழுங்கின — தீபங்கள் ஒளி மழுங்கின.

நையநைய அவலப்பொருளில்வந்தஅடுக்குத்தொடர். 59

வங்கியம்பலதேன்விளம்பினவாணிமுந்தினபாணியின்
பங்கியம்பரமெங்கும்விம்மினபம்பைபம்பினபல்வகைப்

பொங்கியம்பலவுங்கறங்கினநூபுரங்கள்புலம்பவெண்
சங்கியம்பினகொம்பலம்பினசாமகீதநிரம்பவே.

இ-ள். சாதகீதம்நிரம்ப—சாமவேத கீதம்நிரம்ப, பலவங்கியம் தேன் விளம்பின—பலவாச்சியங்கள் தேனைப்போல் இனிமையுண்டாக வொலித்தன.வாணிமுந்தின—வாக்கில்முற்பட்டெழுந்த,பாணி இன்பங்கு அம்பரம்எங்கும் விம்மின—இசைப்பாடல்களின் கூறுகள் திசைகளெங்கும்நெருங்கின, பம்பை பம்பின—பம்பைகளினொலிமிக்கன, பல்வகைபொங்கு இயம்பலவும் கறங்கின—பலவகையாகமிகுத்த வாச்சியங்கள் பலவுங்கோஷித்தன, நூபுரங்கள் புலம்ப—பெண்கள் காற்சிலம்புக ளொலிக்க, வெண்சங்கு இயம்பின—வெள்ளியசங்குகளொலித்தன, கொம்பு அலம்பின—கொம்புகள்முழங்கின.

வாணி முந்தினஎன்றதற்குச்சொற்கள் முற்பட்டெழுந்தன என்றுபொருள்கொள்ளலும் ஒன்று. விடியற்போதாதலால் நிகழ்ந்தவற்றைக்கூறினர். இது தொழிற்றன்மையணி. பங்கி என்றதில் இ பகுதிப்பொருள் விகுதி. 60

தூபமுற்றியகாரிருட்புகைதுள்ளியோளிடவுள்ளெழும்
தீபமுற்றவுநீர்த்தகன்றெனச்சேயதாருயிர்தேய்தலால்
பாபமுற்றியபேதைசெய்த பகைத்திறத்தினில்வெய்யவன்
கோபமுற்றிமிகச்செவந்தனனொத்தனன்குணக்குன்றிலே

இ-ள். தூபம் முற்றியகார்இருள்பகை துள்ளி ஓட—தூபம்போலக் கருநிறமிக்க கரிய இருளாகியபகை புறங்கொடுத்தோட, உள் எழும் தீபம் முற்றஉம் நீர்த்து அகன்றால் என்ன—வீட்டினுள்ளெழாநின்ற தீபமுழுமையுந்தனதுபுத்திரனாகிய தசரதச்சக்கரவர்த்தியின்பெறுதற்கரிய உயிர்நிலைகெடுதலால். பாபம் முற்றியபேதைசெய்த பகைத்திறத்தின் இல்—பாபச்செயலிற்கன்றிய கைகேசிசெய்த பகைச்செயலில், வெய்யவன்கோபம் முற்றி—சூரியன்கோபமிகுந்து, குணக்கு குன்று இல்—கீழ்த்திசைமலையில், மிகசெவந்தனன் ஒத்தனன்—மிகவுஞ்செவந்துதோன்றினவனையொத்துத்தோன்றினன்.

முற்றிய இறந்தகாலப்பெயரெச்சம் முற்று பகுதி, உகரக்கேடு சந்தி, கடைக்குறையாய் நின்ற இன் இறந்தகாலவிடைநிலை யகரத்தோற்றம்சந்தி, அ எச்ச விகுதி. இது தற்குறிப்பேற்றவணி. நீர்த்து, து பகுதிப் பொருள் விகுதி. 61

மூவராய்முதலாகிமூலமதாகிஞாலமுமாகியத்
தேவதேவர்பிடித்தபோர்விலொடித்தசேவகர்சேணிலங்
காவன்மாமுடிசூடுபேரெழில்காணலாமெனமாசைகூர்
பாவைமார்முகமென்னமுன்னமலர்ந்தபங்கயராசியே.

இ - ள். மூவர்ஆய்—(படைப்புமுதலியதொழிற்கு)பிரமன்முதலியமூவராகி, முதல் ஆகி—இவர்களுக்கு முன்னுள்ளவராகி,ஞாலம் உம் ஆகி—பிரபஞ்சமுந்தாமாகி, அ தேவ தேவர்—அந்ததேவர்களுக்குத் தேவனாயுள்ள உருத்திரமூர்த்தி, பிடித்தபோர்விம் ஒடித்த—ஏந்தியபோர்த்தொழிலையுடைவில்லினைச் சீதைப்பிராட்டியின் திருமணத்தின் பொருட்டு முறித்த,

சேவகர்—வீரராகிய இராமமூர்த்தி, சேண் நிலம் காவல் மாமுடி சூடுபேர் எழில்—பரந்த நிலத்தைக் காத்தற்பொருட்டுப் பெருமை யமைந்த மகுடஞ் சூடும் பெரிய பொலிவினை, காணலாம் என்னும் ஆசைகூர் பாவைமார்முகம் என்ன—பார்ப்போமென்னுமாசைமிகுந்த பெண்கள்முகம்போல, பங்கயராசி முன்னம்மலர்ந்த—தாமரைக்கூட்டங்கள் முன்னேமலர்ந்தன. 62

இன்னவேலையினேழுவேலையொத்தபோலவிரைத்தெழுந்
தன்னமாநகர்மைந்தன்முடிசூடும்வைகலிதாமென
துன்னுகாதருப்பவந்தவைசொலல்லாம்வகையெம்மனோர்க்
குன்னலாவனவல்லவென்னினுமுற்றபெற்றியுணர்த்துவாம்

இ-ள். இன்னவேலையின்—இச்சமையத்தில், அன்னமாநகர்—அந்தப் பெரியநகரிலுள்ளோர், ஏழுவேலை உம் ஒத்தபோல—எழுகடலும் ஒருசேர எழுந்தனபோல, இரைத்து எழுந்து—கோஷித்தெழுந்து, மைந்தன்மாமுடி சூடும் வைகல் இது ஆம் என்று—இராமமூர்த்திமகுடஞ்சூடும் நாளிந்நாளென்று, துன்னுகாதல்துரப்ப—மிக்க ஆசையேவ, வந்தவை—வந்துநெருங்கினவற்றை, சொல்லலாம்வகை—சொல்லும் வண்ணம், எம் அன்னோர்க்கு உன்னல் ஆவன அல்லஎன்னின்உம்—எம்போலியர்க்கும் கருதுவன வல்லவாயினும்,உற்றபெற்றிஉணர்த்துவாம்—நிகழ்ந்தசெய்தியைச்சிறிதுசொல்லுவாம்.

இன்ன, அன்ன இ, அ என்னுஞ்சுட்டுத்திரிபுகள். எனையோர்க்கன்றி யெனநிற்றலால் இறந்ததுதழீஇய வுயர்வுசிறப்புப்பொருளில்வந்த உம்மை தொகுத்தல். 63

கலிவிருத்தம்.

குஞ்சரமனையார்சிந்தைகொளிளையார்
பஞ்சினையணிவார்பால்வளைதெரிவார்
அஞ்சனமெனவாளம்புகளிடையே
நஞ்சினையிடுவார்நாண்மலர்புனைவார்.

இ-ள். குஞ்சரம்அனையார் சிந்தைகொள் இளையார் — யானையையொத்த தமதுபுருடரது மனத்தைக்கொள்ளைகொள்ளும் மங்கையர்கள், பஞ்சின் ஐ அணிவார்—காலிற் செம்பஞ்சுக்குழம்பூட்டுவார்கள், பால்வளைதெரிவார்—வெள்ளியவளையலை யாராய்ந்தணிவார்கள், வாள் அம்புகள் இடை ஏ—வாளையும் அம்பையுமொத்த கண்களிடத்து, அஞ்சனம்என்ன நஞ்சின் ஐ இடுவார்—மையென்று நஞ்சினைத்திட்டுவார்கள், நாள்மலர்புனைவார் — அன்றலர்ந்தமலர்களைச்சூடுவார்கள்.

வாள் அம்புகளாகிய உபமானச்சொற்களால் உபமேயமாகிய கண்ணை இலக்கணையாகக்கூறுதலால் உருவகவுயர்வு நவிற்சியணி. வாளிலும் அம்பிலும் நஞ்சுபூசுதல்வழக்காதலால் நஞ்சினையிடுவார் என்றார். 64

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொங்கியவுவகைவெள்ளம்பொறிநரக்கமலம்பூத்த
சங்கையின்முகத்தார்நம்பிதம்பியரனையராளுர்

செய்கயினறவமாந்திக்களித்தெனச்செவக்குங்கண்ணார்
குங்குமச்சுவடுநீங்காக்குவவுத்தோட்குமரரெல்லாம்.

இ-ள். செங்கயல்நறவம் மாந்திகளித்தால்என்னசெவிக்கும்கண்ணார்— செவந்தகயல்கள்ளையுண்டு களித்தாற்போலக் கள்ளருந்திச் செவக்குங் கண்களையுடையவராய், குங்குமம் சுவடு நீங்காத குவவுதோள் குமரர் எல்லாம்— பெண்கள் தனத்திற்றோய்ந்த குங்குமச்சுவடுநீங்காத திரண்டதோளையுடைய புருடர்களெல்லாம், பொங்கிய உவகைவெள்ளம் பொழிதர—தம்மையறியாது மேலெழுந்த மகிழ்ச்சியாகிய வெள்ளம் பொங்கி வழிய, கமலம்பூத்த சங்கை இல்முகத்தார்—தாமரைபோலமலர்ந்தஉள்ளக்கிளர்ச்சியையுடையமுகத்தையுடையவராய், நம்பிதம்பியர் அனையர்ஆனார்—இராமமூர்த்தியின் தம்பிமாரையொத்தவ ரானார்கள்.

இளையபெருமான் முதலியோரைப்போல நகரத்திலுள்ளோரெல்லாம் களிப்புக்கூர்தலால் நம்பிதம் பிரயனையரானாரென்றார் சங்கை — மேலெழுதல். மாந்தி இறந்தகாலவினையெச்சம் மாந்து பகுதி. 65

மாதர்கள்கற்பின்மிக்கார்கோசலைமனத்தையொத்தார்
வேதியர்வதிட்டனொத்தார்வேறுளமகளிரெல்லாம்
சீதையையொத்தாரன்னாள்திருவினையொத்தாளவ்வூர்
சாதுகைமாந்தரெல்லாந்தயரன்றன்னையொத்தார்.

இ-ள். கற்பில்மிக்கார்மாதர்கள்—கற்பின்மிகுந்தபெண்கள், கோசலை மனத்தையொத்தார்—கௌசலாதேவியின்மனத்தையொத்த மனத்தையுடையவரானார்கள், வேறு உள்ள மகளிர் எல்லாம் சீதை ஐ ஒத்தார்—மற்றுள்ள பெண்களெல்லாம் சீதாப்பிராட்டியையொத்தார்கள், அன்னாள் திருவின் ஐ ஒத்தாள்—அப்பிராட்டியார் இலக்குமிதேவியையொத்திருந்தனர், அ ஊர் சாதுகைமாந்தர் எல்லாம்—அந்நகரிலுள்ள சற்குணத்தையுடைய புருடர்களெல்லாரும், தயரதன் தன்னை ஒத்தார்—தயரதச்சக்கரவர்த்தியை யொத்தார்கள்.

அவரவர்களுக்குள்ளமகிழ்ச்சி மிகுதியைக்கூறுவோர் இவ்வாறுகுறிப்பாகக்கூறுதலால் உதாரவணி. 66

இமிழ்திரைப்பரவைஞாலமெங்கனும்வறுமைகூர
உமிழ்வதொத்ததுவுகாதலுந்திடவந்ததன்றே
குமிழ்முலைச்சீதைகொண்கன்கோமுடிபுனைதல்காண்பான்
அமிழ்துணக்குழுவுகின்றவமரரினரசவெள்ளம்.

இ-ள். குமிழ்முலைசிதைகொண்கன்கோமுடிபுனைதல்காண்பான்—தாமரையரும்பையொத்த சீதாப்பிராட்டியின் மணவாளராகிய இராமமூர்த்தி அரசியலுக்குரிய மகுடஞ்சூடுதலைக்காண, அரசவெள்ளம்—அரசர்கூட்டம், இமிழ்திரைபரவைஞாலம்—ஒலிக்கும் அலையையுடைய கடல்சூழ்ந்தநாடுகள், எங்கண் உம்வறுமைகூர—எவ்விடத்தும் வறுமையடைய, உமிள்வதுஒத்து—(தம்மிடத்திலுள்ளோரை) வெளிப்படுத்துவதையொத்து, உதவுகாதல் உந்திட—மீதூர்ந்த ஆசைபின்னின்றுதள்ள, அமிழ்துஉண குழுவுகின்ற அமரர்

இன் — அமிர்தத்தை யுண்ணும்படி தாமேவந்து கூடுகின்ற தேவர்கூட்டம் போல, வந்தது—வந்துநெருங்கியது.

பொருளாற் பன்மையாயினும் வெள்ளமென்னுஞ் சொல் ஒருமையாத லால்வந்தது என ஒருமைமுடிபுதந்துகூறினர். 67

பாகியல்பவளச்செவ்வாய்ப்பணைமுலைப்பரவையல்குல்
தோகையர்குழாமுமைந்தர்சும்மையுந்துவன்றியெங்கும்
ஏகுமினேகுமென்றென்றிடையிடைநிற்றலல்லாற்
போகிலமீளகில்லாபொன்னகர்வீதியெல்லாம்.

இ-ள். பொன் நகர்வீதியெல்லாம்—இலக்குமிவசிக்கு நகரிலுள்ள வீதிகளிலெல்லாம், பாகு இயல்—கருப்பம்பாகையொத்த சொல்லமைந்த, பவளம் செவ்வாய்—பவளம்போன்ற செவந்தவாயையும், பணை முலை — பருத்தமுலையையும், பரவை அல்குல்—கடல்போலப்பரந்த அல்குலையுமுடைய, தோகையர்குழாம்உம் மைந்தர்சும்மைஉம்—மயில்போன்றபெண்கள்கூட்டமும் புருடர்கூட்டமும், எங்குஉம்துவன்றி — எவ்விடத்தும்நெருங்கி, ஏகுமின்ஏகும் என்றுஎன்று—போங்கள்போங்களென்று இடை இடை நிற்றல் அல்லாமல்—புடைபெயர இடமில்லாமல் இடையிடையே நிற்றலல்லாமல், போகிலமீள இல்லா—சென்றிலதிரும்பில.

சனநெருக்கால் போக்குவரமில்லையென்பார் இடையிடைநிற்றலல்லாற் போகிலமீளகில்லாரென்றார். ஏகுமின் செய்புளில்வந்த முன்னிலைப்பன்மை யேவல்வினைமுற்று. ஏகும்வழக்கில்வந்த முன்னிலைப்பன்மை யேவல்வினைமுற்று. ஏகு பகுதி, உம் விகுதி. உகரக்கேடு சந்தி. துவன்றி இறந்தகாலவினையெச்சம் துவன்று பகுதி. இடையிடை அளவின்மைப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். 68

வேந்தரேபெரிதென்பாரும்வீரரேபெரிதென்பாரும்
மாந்தரேபெரிதென்பாருமகளிரேபெரிதென்பாரும்
போந்ததேபெரிதென்பாரும்புகுவதேபெரிதென்பாரும்
தேர்ந்ததேதேரினல்லால்யாவரேதெரியக்கண்டார்.

இ-ள். வேந்தர் ஏபெரிதுஎன்பார்உம்—அரசர்கூட்டமேயதிகமென்று சிலர் சொல்லுவாரும், வீரர்ஏபெரிதுஎன்பார் உம்—வீரர்கூட்டமேயதிகமென்று சிலர் சொல்லுவாரும், மகளிர்ஏபெரிது என்பார் உம்—மைந்தர்கூட்டமே யதிகமென்று சிலர் சொல்லுவாரும், மாந்தர்ஏபெரிது என்பார் உம்—பெண்கள்கூட்டமேயதிகமென்று சிலர்சொல்லுவாரும், போந்தது ஏபெரிது என்பார்உம்—இவர்கள்வந்துகூடியதே பெரிதென்று சிலர் சொல்லுவாரும், புகுவது ஏபெரிது என்பார் உம்—இனி வருவோர்கூட்டமே மிகவும் பெரிதென்று சிலர் சொல்லுவாருமாய், தேர்ந்தது ஏ தேரின் அல்லாமல்—இவ்வாறவரவர்தெளிந்ததே தேர்ச்சியல்லாமல், தெரியகண்டார் யாவர்—வரையறைப்பட இதுதான் பெரிது என்றுபார்த்தவர் எவர். 69

குவளையின்னெழிலும்வேலின் கொடுமையுங்குழைத்துக்கூட்டித்
திவளுமஞ்சனமென்றேய்ந்த நஞ்சினைத்தெரியத்தீட்டித்

தவளவொண்மதியுள்வைத்ததன்மைசாறடங்கணல்லார்
துவளுநுண்ணிடையாடுந்தோகையங்குழாத்திற்றொக்கார்.

இ-ள். குவளையின் எழில் உம் வேலின்கொடுமை உம் குழைத்து கூட்டி—குவளைமலரின்றோற்றத்தையும் வேலினதுகொடுமையையும் குழைத்துச்சேர்த்து, திவளும் அஞ்சனம்என்று எய்ந்த நஞ்சின் ஐ—விளங்குமை யென்றமைந்த நஞ்சினை, தெரியக்கூட்டி—விளங்கவெழுதி, தவளம் ஒள் மதி உள்வைத்த தன்மைசால்—வெள்ளிய ஒள்ளியசந்திரனில்வைத்ததன்மையை யொத்த, தடகண் நல்லார்—பரந்தகண்களையுடைய அழகிற்சிறந்தவராகிய, துவளும் நுண் இடையார்—துவளாநின்ற நுண்ணிய இடையையுடைய பெண்கள், ஆடும் அம்தோகை குழாத்து இல் தொக்கார்—ஆடாநின்ற அழகிய மயிலின்கூட்டத்தைப்போல நெருங்கினார்கள்.

இது இல்பொருளுவமையணி. எய்ந்த இறந்தகாலப்பெயரெச்சம் எய் பகுதி. நல்லார்நன்மை (அழகு) பகுதி, ஈறுகெடுதலும் லகரத்தோற்றமும் சந்தி, ஆர் விகுதி. 70

நலங்கிளர்பூமியென்னுநங்கையைநறுந்துழாயின்
அலங்கலான்புணருஞ்செல்வங்காணவந்தடைந்திலாதார்
இலங்கையினிருந்தரேயிவ்வேழுலகத்துவாழும்
விலங்கலுமாசையின்றவிடாமதவிலங்கலேயாம்.

இ-ள். நலம்கிளர்பூமிஎன்னும் நங்கையை—செல்வத்தால்விளங்கும் பூமியென்னும் பெண்ணை, நறுந்துழாய் இன் அலங்கலான் புணரும்செல்வம்—நறுமணங்கமழுந்துழாய் மாலையணிந்த இராமமூர்த்திகூடுஞ்செல்வத்தை, வந்து காண அடைந்திலாதார்—வந்துபார்க்க அடையாதவர்கள், இலங்கையில்இருந்தர் ஏ—இலங்கையில்வசிக்கும் அரக்கர்மட்டுமா, இ ஏழ் உலகத்துவாழும்விலங்கல் உம்—இந்த எழுலகங்களும் வாழாநின்ற மலைகளும், ஆசைநின்ற விடாதமதவிலங்கலே ஆம்—திக்குகளினின்ற நீங்காதமதத்தையுடைய திக்கு யானைகளுமாம்.

ஏகாரம்வினாப்பொருட்டு. எழுலகம்என்றது எழுதீவுகளை. நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு. 71

சந்திரர்கோடியென்னத்தரளவெண்கவிகையோங்க
அந்தரத்தன்னமெல்லாமார்ந்தெனக்கவரிதுன்ன
இந்திரற்குவமைசாலுமிருநிலக்கிழவரெல்லாம்
வந்தனர்மௌலிசூட்டுமண்டபமரபிற்புக்கார்.

இ-ள். கோடிசந்திரர்என்ன—கோடிசந்திரருதயஞ்செய்ததுபோல, தரளம் வெண்கவிகைஓங்க — முத்தாலமைந்த தவளவட்டக்குடைமேல்நின்று விளங்கவும், அந்தரத்து அன்னம்எல்லாம் ஆர்ந்தால் என்னகவரிதுன்ன— விண்ணுலகிலுள்ள அன்னங்களெல்லாம் வந்து நிறைந்தாற்போலச் சாமரைகணெருங்கவும், இந்திரற்குஉவமைசாலும்இருநிலம் கிழவர்எல்லாம்வந்தனர்— இந்திரனுக்கொத்த பெரியநிலவுரிமைபூண்ட அரசர்களெல்லாம்வந்து,மௌ

விசூட்டும் மண்டபம்மரபு இல்புக்கார்—மகுடஞ்சூட்டுமெண்டபத்தில் முறை யாகப்புகுந்தார்கள். 72

முற்பயந்தெடுத்தகாதற்புதல்வனைமுறையினோடும்
இற்பயன்சிறப்பிப்பாரினீண்டினியவுவகைதூண்ட
அற்புதன்றிருவைச்சேருமணங்காணப்புக்கார்
நற்பயன்றவத்தினுய்க்குநான்மறைக்கிழவரெல்லாம்.

இ-ள். நல்பயன் தவத்தின்உய்க்கும்—வீடுபேறடையத்தவத்திற்செலுத்தும், நான்மறைகிழவர்எல்லாம்—நான்குவேதங்களுக்குரியமுனிவர்களெல்லாம், முன்பயந்து எடுத்தகாதல்புதல்வனை—முன்புபெற்றெடுத்த விருப்பமிக்க மூத்தபிள்ளையை, முறையின்ஓடும் இல்பயன்சிறப்பிப்பார் இன்—முறைப்படிமணஞ்செய்விக்குந் தந்தைதாயர்கள் பெருமகிழ்ச்சியைப்போல, ஈண்டியஉவகை தூண்ட—மிக்கமகிழ்ச்சி தூண்ட, அற்புதன்திருவைசேரும் அருமணம்காணபுக்கார்—ஞானமேதிருமேனியாகஉடைய இராமமூர்த்தி யரசச்செல்வத்தையடைதற்கேதுவாகிய பெருதற்கரிய பூதேவியின் திருமணத்தினைக்காணவந்தார்கள். 73

விண்ணவர்விசும்புதூர்த்தார்விரிதிரையுடுத்தகோல
மண்ணவர்திசைகடூர்த்தார்மங்கலமிசைக்குஞ்சங்கம்
கண்ணகன்முரசினோதைகண்டவர்செவிகடூர்த்த
எண்ணருங்கனகமாரியெழுதிரைக்கடல்கடூர்த்த.

இ-ள். விண்ணவர் விசும்புதூர்த்தார்—தேவர்கள் விண்ணுலகைமறைத்தார்கள், விரைதிரை உடுத்தகோலம் மண்ணவர் திசைகள் தூர்த்தார்—பரந்தகடல்சூழ்ந்த அழகியமண்ணுலகிலுள்ளவர் திசைகளைமறைத்தார்கள், மங்கலம் இசைக்கும்சங்கம்—மங்கலவோசையெவிக்கும் சங்குகளும், கண்அகல் முறசின்ஓதை—இடம்பரந்த முறசினோசையும், கண்டவர்செவிகள் தூர்த்த—கேட்டவர்காதுகளை செவிடுபடுத்தின, எண்அருங்கனகமாரி—வரையறுத்தற்கரிய பொன்மழை, எழுதிரைகடல்கள் தூர்த்த—எழுகடல்களைபுந் திடப்படுத்தின.

திரைகடல்மேல்நிற்றலால் தானியாகுபெயர். கேட்டவரைக்கண்டவர் என்றது புலமயக்கம். 74

விளக்கொளிமறைத்தமன்னர்மின்னொளிமகுடகோடி
துளக்கொளவிசும்புனூருஞ்சுடரையுமறைத்தசூழ்ந்த
அளக்கர்வாய்த்தரளமூரன்முறுவலாரணியின்சோதி
வளைக்கலாமென்றுயாரோகண்ணையுமறைத்தவன்றே.

இ-ள். மன்னர் மின் ஒளி—அரசர்கள் தேகத்தில் விளங்குமொழி, விளக்கு ஒளிமறைத்த—தீபத்தினொளியைமறைத்தன, மகுடகோடி—அவர்கள் முடியறுப்பு, துளங்கு ஒளி—விளங்குமொளி, விசும்பு இன்னூரும் சுடரைஉம் மறைத்த—ஆகாயத்திற் சஞ்சரிக்குஞ் சூரினொளியையு மறைத்தன, சூழ்ந்த அளக்கர்வாய்தரளம் மூரல்முறுவலார் அணிஇன்சோதி—பூமியைச்சூழ்கடலிற் றோன்றிய முத்தினையொத்த பற்களையுடைய பெண்களணிந்த

ஆபரணத்தின்விளக்கம், வானோர்உம் விளக்கலாம்என்றுகண்ணைமறைத்த— விண்ணுலகிலுள்ளவரையும் விளக்கலாமென்று அவர்கண்களையுமறைத்தன.

வானோர் என்பதினிறுதியிலுள்ள உம்மை, கண் என்பதனிருதியினிற் றல் பொருத்தமில் புணர்ச்சி. துளக்கு வலித்தல் விகாரம். 75

ஆயதோரமைதியின்கணையனைமகுடஞ்சூட்டற்
கேயுமங்கலங்கானயாவையுமியைக்கொண்டு
தூயநான்மறைகள்வேதபாரகர்சொல்லத்தொல்லை
வாயில்கணெருக்கநீங்கமாதவக்கிழவன்வந்தான்.

இ-ள். ஆயது ஓர் அமைதியின்கண்— இவ்வாறமைத்த சமையத்தில், ஐயனைமகுடம் சூட்டற்கு—இராமமூர்த்தியை முடிசூட்ட, ஏயும் மங்கலங்கள் ஆனயாவை உம் இயையகொண்டு—பொருந்திற் மகுடாபிஷேகத்திற்குரிய உபகரணங்களையெல்லாம் பொருந்தக்கைக்கொண்டு, தூரியநான்மறைகள் வேதபாரகர்சொல்ல—குற்றமற்ற நான்குவேதங்களையுமுணர்ந்தவேதபாராயணஞ்செய்யும் அந்தணர்கள்கூற தொல்லைவாயல்கள் நெருக்கம்நீங்க—தொன்றுதொட்டுள்ள கோயில்வாயலில் நெருங்கிய மக்கள் நெருக்கம்நீங்க, மாதவக்கிழவன்வந்தான்—பெரியதவத்திற்குறிய வசிட்டமுனிவர்வந்தனர்.

இல்வாய்வாயில் இலக்கணப்போலி. 76

கங்கையேமுதலவாயகன்னியீறானதீர்த்த
மங்கலப்புனலுநாலுவாரியினீரும்பூரித்
தங்கியின்வினையிற்கேற்றயாவையுமமைத்துவீரச்
சிங்கவாதனமும்வைத்துச்செய்வனபிறவுஞ்செய்தான்.

இ-ள். கங்கைமுதல ஆய கன்னி ஈறு ஆனதீர்த்தம் மங்கலம் புனல் உம்—கங்கைமுதலாகக் கன்னியாகுமரியீராகவுள்ள மங்கலமமைந்த தீர்த்த நீரையும், நாலுவாரி இன் நீர் உம்பூரித்து—நாற்கடலிலுள்ள தீர்த்தநீரையும் பூரணகலசத்திற்பூரித்து, அங்கியின் வினையிற்கு ஏற்றயாவை உம் அமைத்து—முத்தீயின்றொழிற்குவேண்டும் உபகரணங்களையெல்லா மமையச்செய்து, வீரம் சிங்கம் ஆதனம் உம்வைத்து—வீரத்தையுடைய சிம்மாசனத்தையுமமைத்து, செய்வன பிற உம் செய்தான்—செய்யும் பிறகாரியங்களையுஞ்செய்தனன்.

யாவை வினுவடியாகப்பிறந்த பலவின்பாற்படர்க்கைப்பெயர்ச்சொல்யாபகுதி, வை விகுதி. யா என்னும் வினுவிடைச்சொல் எல்லாம் என்னும்பொருள்மேல் நின்றது. செய்வன என்னும் வினைமுற்று, பெயரெச்சப்பொருள் மேல் நின்றது. பிற இடைச்சொலடியாகப்பிறந்த பலவின்பாற்படர்க்கைப் பெயர்ச்சொல். பிற பகுதி, ஈறுகெடுதல் சந்தி, அ பலவின்பால் விகுதி. 77

கணிதநூலுணர்ந்தமாந்தர்காலம்வந்தடுத்ததென்னப்
பிணியறநோற்றுநின்றபெரியவன்விரைவினேகி
மணிமுடிவேந்தன்றன்னைவல்லையிற்கொணர்தியென்னப்
பணிதலைநின்றகாதற்சுமந்திரன்பரிவிற்சென்றான்.

இ-ள். கணிதநூல் உணர்ந்த மாந்தர்—கணிதநூலினையுணர்ந்த வல்லோர், காலம்வந்து அடுத்தது என்ன—முடிசூட்டுஞ்சமையம்வந்தடுத்ததென்

றுகூற, பிணி அறநோற்றுகின்ற பெரியவன்—பிறவிநோய்கெடத்தவஞ்செய்துநின்ற பெரியவசிட்டமுனிவர், விரைவின் ஏகி—விரைந்துசென்றுமணிமுடி வேந்தன்தன்னைவல்லையில்கொணர்தி என்ன—இரத்நமழுத்தியகிரீடத்தையுடைய தசரதச்சக்கரவர்த்தியை விரைந்துசென்று கொண்டுவருவாயென்று நோக்கிக்கூற பணிதலைநின்றகாதல் சுமந்திரன் பரிவில்சென்றான்—அப்பணியின் சிறந்துநின்ற விருப்பத்தையுடைய சுமந்திரன் அன்போடுசென்றனன்.

கொணர்தி முன்னிலையொருமை யெதிர்கால வினைமுற்று கொணு பகுதி; அது ஈறு குறுகலும் ரகரமெய் விரிதலும் விகாரம், து சாரியை, உகரக்கேடு சந்தி, இ விகுதி. 78

விண்டொடநிவந்தகோயில்வேந்தர்தம்வேந்தன்றன்னைக்
கண்டிலன்வினவக்கேட்டான்கைகயன்கோயினண்ணித்
தொண்டைவாய்மடந்தைமாரிற்சொல்லமற்றவருஞ்சொல்லப்
பெண்டிரிற்கூற்றமன்னாள்பிள்ளையைக்கொணர்கவென்றான்.

இ-ள். விண்தொட நிவந் கோயில்—ஆகாயத்தையளாவவுயர்ந்த அரசன்கோயிலையடைந்து, வேந்தர்தம் வேந்தன்தன்னை கண்டிலன்—அரசர்களுக்கு அரசனாகிய அத்தசரதச்சக்கரவர்த்தியைக்காணாது, வினவக்கேட்டான்—அங்குள்ளோர்சொல்லக்கேட்டு, கைகயன்கோயி நண்ணி—கைகேசியின் கோயிலையடைந்து, தொண்டைவாய் மடந்தமாரில்சொல்ல—கோவைக்கனிபோலும் வாயையுடைய பரிவாரப்பெண்களிடத்துத் தன்வரவைச்சொல்ல, அவர் உம் சொல்ல—அப்பெண்களும்சொல்ல, பெண்டிர் இல் கூற்றம் அன்னாள்—பெண்களுள் இயமனையொத்த கைகேசி, பிள்ளையைகொணர்க என்றாள்—(சுமந்திரனைநோக்கி) இராமமூர்த்தியைக்கொண்டுவரக்கடவாயென்றுகூறினாள்.

கண்டிலன், கேட்டான் முற்றெச்சம். மற்று அசைநிலை கொணர்கவியங்கோள்வினைமுற்று. 79

என்றனளென்னக்கேட்டானெழுந்தபேருவகைபொங்கப்
பொன்றிணிமாடவீதிபொருக்கெனநீங்கிப்புக்கான்
தன்றிருவுள்ளத்துள்ளே தன்னையேநினைவுமற்றக்
குன்றிவர்தோளினானைத்தொழுதுவாய்புதைத்துக்கூறும்.

இ-ள். என்றனள்—என்று கைகேசிகூறினாள், என்னகேட்டான்—என்றுகூறக்கேட்டசுமந்திரன், எழுந்தபேர் உவகைபொங்க—மீதூர்ந்த பெரியமகிழ்ச்சிபொங்கிவழிய, பொன்திணிமாடம் வீதி—பொற்கொடிசெறிந்த மாடங்கள்நெருங்கிய வீதியினின்று, பொருக்கெனநீங்கி புக்கான்விரைந்து நீங்கிக்கோயிலிற்புகுந்து, தன்திருஉளளத்துஉள் ஏ தன்னை ஏ நினையும்—தமது திருமனத்தே தன்னையே நினையாநின்ற அ குன்று இவர்தோளினான் ஐ—அந்தமலையையொத்த தோளையுடைய இராமமூர்த்தியை, தொழுதுவாய் புதைத்துகூறும்—வணங்கி வாய்பொத்திச்சொல்லாநிற்பான்.

புக்கான் முற்றெச்சம். தானே இறைவன் ஆதலால் தன்றிருவுள்ளத்துள்ளே 'தன்னையேநினையும் என்றார். 80

கொற்றவர்முனிவர்மற்றுங்குவலயத்துள்ளாருன்னைப்
பெற்றவன்றன்னைப்போலப்பெரும்பரிவியற்றிநின்றார்
சிற்றவைதானுமாங்கேகொணர்கெனச்செப்பினாளப்
பொற்றடமகுடஞ்சூடப்போதுநீவிரைவினென்றான்.

இ-ள். கொற்றவர்முனிவர் குவலயத்து உள்ளார்—அரசருமுனிவரும் நிலவுலகிலுள்ளவரும், உன்னைபெற்றவன்றன்னைப்போல—உன்னைப்பெற்ற தசரதச்சக்கரவர்த்தியைப்போல, பெரும்பரிவு இயற்றிநின்றார்—பேரன்பு கூர்ந்து நின்றார்கள், சிற்றவைதான் உம் ஆங்கு ஏ கொணர்க என்னசெப்பினாள்—கைகேசியும் அவ்விடத்தே உன்னைக்கொண்டுவரக்கடவாயென்றென்னை யேவினாள், அ பொன் தடமகுடம்சூட விரைவின்போதுதி என்றான்—அந்தப்பொன்னாற்செய்த பெரியமுடிசூட விரைந்துவருவாயென்று கூறினான்.

மற்று, உம், ஆங்கு, ஏ அசைநிலைகள். 81

ஐயனுமச்சொற்கேளாவாயிரமௌலியானைக்
கைதொழுதரசவெள்ளங்கடலெனத்தொடர்ந்துசுற்றத்
தெய்வகீதங்கள்பாடத்தேவருமகிழ்ந்துவாழ்த்தத்
தையலாரிரைந்துநோக்கத்தாரணிதேரிற்சென்றான்.

இ-ள் ஐயன் உம் அ சொல்கேளா—இராமமூர்த்தியு மந்தவார்த்தையைக்கேட்டு, ஆயிரம்மௌலியானை கைதொழுது—இறைவனைக்கைகூப்பி, அரசவெள்ளம் கடல் என்ன தொடர்ந்துசுற்ற—அரசர்கூட்டம் கடலைப்போலப்பின்றொடர்ந்துசூழ்ந்துவரவும், தெய்வகீதங்கள் பாட—தேவகீதங்கள்ஒருபால்பாடவும், தேவர்உம் மகிழ்ந்து வாழ்த்த—தேவர்களு மகிழ்கூர்ந்து ஒருபால் வாழ்த்தவும், தையலார் இரைந்துநோக்க—பெண்களொருபால் நின்று கோஷித்துப்பார்க்கவும், தார்அணி தேர்இல் சென்றான்—பொன்னரிமாலையாலலங்கரித்த தேரின்மேலேறிச்சென்றார்.

ஐயனும், தேவரும் இவற்றினிறுதியில் நின்ற உம்மை உயர்வு சிறப்புப் பொருட்டு. 82

திருமணிமகுடஞ்சூடச்சேவகன்செல்கின்றானென்
றொருவரினொருவர்முந்தக்காதலோடுவகையுந்த
இருகையுமிரைத்துமொய்த்தாரின்னுயிர்யார்க்குமொன்றாய்ப்
பொருவருந்தேரிற்செல்லப்புறத்திடைக்கண்டார்போல்வார்.

இ-ள். திருமணி மகுடம் சூட— அழகிய இரத்திநங்களழுத்தியமுடிசூட, சேவகன்செல்கிறான் என்று—இராமமூர்த்திபோகின்றாரென்று, ஒருவர் இன் ஒருவர்முந்த—செல்லுமொருவரினு மொருவர்முந்திச் செல்லும்படி காதல் ஓடு உவகை உந்த—ஆசையோடு மகிழ்ச்சிபின்னின்றுதள்ள, இருகை உம் இரைத்து மொய்த்தார்—இரண்டுபாலுங்கோஷித்து நெருங்கினார்கள், இன்உயிர் யார்க்கு உம் ஒன்று ஆய்—தமது இனிய உயிர் அங்குநெருங்கிய எவர்களுக்குமொன்றாகி, பொருவரும் தேர் இல் செல்ல—ஒப்பில்லாதவீரர் மேற்போக, புறத்து இடைகண்டார்போல்வார்—புறத்தில் பார்த்தவர்களாதே யொத்தவராயினார்கள்.

யாவர்க்கும் தத்தமக்குரிய உயிர்போல இராமமூர்த்தி சிறந்திருத்தலால் இன்னுயிர் யார்க்கும் ஒன்றாய்ப்பொருவருந் தேரிற்செல்லி என்றார். 83

துண்ணெனுஞ்சொல்லாள்சொல்லச்சுடர்முடிதுறந்துதூய
மண்ணெனுந்திருவைநீங்கிவழிக்கொளாமுன்னம்வள்ளல்
பண்ணெனுஞ்சொல்லினார்தந்தோளெனுமபணைந்தவேயும்
கண்ணெனுங்காலவேலுமிடைநெடுங்கானம்புக்கார்.

இ-ள். துண் என்னும் சொல்லாள்சொல்ல—நடுக்கமுறுத்துஞ் சொல்லையுடைய கைகேசியன்னைகூற, வள்ளல்சுடர்முடி துறந்து—இராமமூர்த்தி விளங்குமகுடம் சூடுதலைக்கைவிட்டு, தூயமண்என்னும் திரு நீங்கி—களங்கமில்லாத பூதேவியென்னும் பெண்ணினின்று நீங்கி, வழிக்கொள்ளாமுன்னம்—காட்டிற்செல்வதற்குமுன்னமே, பண்என்னும்சொல்லினார்தம் தோள் என்னும் பணைத்த வேய் உம்—இசையையென்று கேட்போர்கூறும் சொற்களையுடையபெண்களது தோளென்றுசொல்லப்படும் பெருந்தமூங்கிலும்,கண் என்னும்காலவேல் உம்மிடைநெடுங்கானம்புக்கார்—அவர்கள்கண்களென்றுசொல்லப்படுமியமனையொத்தவேலும்நெருங்கிய பெரியகாட்டிற்புகுந்தார்.

மூங்கில்வேலுமே காடாயிருந்ததென்பார் பணைத்தவேயும் காலவேலுமிடைநெடுங்கானம் என்றார். இது இயைபுருவகவணி. காலன்வேல் நிலைமொழியிற்று மெய்கெடுதல் "சிலவிகாரமாமுயர்திணை" என்றவிதியால். 84

சுண்ணமுமலருஞ்சாந்துங்கனகமுந்தூவவந்து
வண்ணமேகலையுநாணும்வளைகளுந்தூவுவாரும்
புண்ணுறவனங்கன்வாளிபுழைத்ததம்புணர்மென்கொங்கை
கண்ணுறப்பொழிந்தகாமவெம்புனல்கழுவுவாரும்

இ-ள். சுண்ணம் உம் மலர் உம் சாந்து உம் கனகம் உம்—சுண்ணப்பொடியையுமலரையுஞ்சந்தனக்குழம்பையும், தூவவந்து—வீதியிற்சிந்தவந்து, வண்ணம் மேகலை உம் நாண் உம் வலைகள் உம் தூவுவார் உம்—அழகியமேகலாபரணத்தையும் நாணையும்வளையல்களையுஞ் சிந்துகின்றவர்களும்,அனங்கன் வாளிபுண்உற புழைத்த—மன்மதனம்புபுண்படத்தொளைத்த, தம்புணர்மென்கொங்கை—தமதுநெருங்கிய மெல்லியதனத்தில், காமம் கண் உறபொழிந்த வெம்புனல் கழுவுவார் உம்—காமத்தால்கண்கள்மிகவும் சொரிந்த வெய்யநீரினால் கழுவுகின்றவர்களும்.

புண்ணிற்கு வேதுகொடுத்தனர் என்பார் வெம்புனல் கழுவுவாரும் என்றார். இதுமுதல் இளையராமகளிர் கூறும் ஒருதொடர். 85

அங்கணனவனிகாத்தற்காமிவனென்னலாமோ
நங்கணன்பிலனென்றுள்ளாந்தள்ளுறநடுங்கிநைவார்
செங்கணுங்கரியகோலமேனியுந்தேருமாகி
எங்கணுந்தோன்றுகின்றானெனவரோவிராமனென்பார்.

இ-ள். அங்கணன் நம்கண் அன்பு இலன்—அழகிய கருணைநோக்கத்தையுடைய இராமமூர்த்தி நம்மிடத்திலன்பிலராயிருக்கின்றார் ஆதலால், இவன் அவனிகாத்தற்கு ஆம் என்னல் ஆம் ஓஎன்று—இவர் உலகினைக்காத்தற்

குத்தக்கவ ரென்றுசொல்லக்கூடுமோவென்று, உள்ளம் தள்ளுறநடுக்கினைவா —மனந்தடுமாற நடுக்கங்கூர்ந்து ஏக்குவிடுகின்றவரும், செங்கண் உம்கரிய கோலம்மேனி உம் தேரும் ஆகி—செவந்தகண்களும் கரியநிறம்வாய்ந்த அழகிய திருமேனியும் தேருமுடையவராகி எங்கண் உம் தோன்றுகின்ருர்—எந்தத்திசையிலும் கண்களுக்குப்புலப்படுகின்றனர், இராமன் எனேவர் ஓ என்பார்—இவருள் இராமமூர்த்தி யெவரென்றுசொல்லுகின்றவரும். 86

இனையராமகளிரெல்லாமிரைத்தனர்நிரைத்துமொய்த்தனர்
முனைவருநகர்மூதூர்முதிருநரிளைஞர்தாமும்
அனையமன்மேனிகண்டாரன்பினுக்கெல்லைகாணுர்
நினைவினர்மனத்தால்வாயானிகழ்ந்ததுகூறலுற்ருரும்.

இ-ள். இனையர் ஆம்மகளிர்எல்லாம் இரைத்தனர் நிரைத்து மொய்த்தார்—இத்தன்மையராகிய பெண்களெல்லாங்கோஷித்து வரிசையாய் நெருங்கினர்கள், முனைவர் உம் நகரம் மூதூர் முதிருநர் உம் இளைஞர்தாம் உம்—முனிவர்களும் தொன்றுதொட்டுள்ள நகரத்திலுள்ள முதியவர்களும் வாலிபர்களும், அனையவன்மேனிகண்டார் அன்பினுக்கு எல்லைகாணுர்—அந்த இராமமூர்த்தியின் திருமேனியைக்கண்டுசுரந்தநேயத்திற்கு ஓரளவுகாணுது, மனத்து ஆல் நினைவினர்—மனத்தால் நினைந்து, வாய் ஆல் நிகழ்ந்தது கூறலுற்ரும்—வாக்காற்கூறியதைச்சொல்லத்தொடங்குவாம்.

இதுமுதல் ஆண்டிளையராயினையகூற என்பது காறும் ஒருதொடர். கண்டார், காணுர், நினைவினர் முற்றெச்சம். எனேவர் எவர் என்னும் வினுவிடைச்சொற்றிரிபு. 87

உய்ந்ததிவ்வுலகமென்பாரூழிகாண்கிற்பாயென்பார்
மைந்தநீகோடியெங்கள்வாழ்க்கைநாள்யாவுமென்பார்
ஐந்துவித்தருதிற்செய்ததவமுனக்காகவென்பார்
பைந்துழாய்தெரியலாய்க்கேநல்வினைபயக்கவென்பார்.

இ—ள். இ உலகம் உய்ந்தது என்பார்—இந்நிலவுலகு இனித்துன்பத்தினின்று பிழைத்தது என்பவரும், ஊழிகாண்கிற்பாய் என்பார்—ஊழிகாலங்காறும் வாழ்வா என்பவரும், மைந்த—மைந்தனே, நீ எங்கள் வாழ்க்கை நாள்யாவும் கோடி என்பார்—நீயெங்கள் வாழ்நாள் முற்றுங்கொள்வாயென்பவரும், ஐந்து அவித்து அரிது இல் செய்ததவம் உனக்கு ஆக என்பார்—பஞ்சேந்திரியங்களையொடுக்கி யாங்கள் அரிதாகச்செய்த தவப்பயன் உனக்குக் கைகூடுகவென்று சொல்லுகின்றவர்களும், பைந்துழாய் தெரியலாய்க்கு ஏ நல்வினைபயக்க என்பார்— பசியதுழாய் மாலிகையணிந்த உமக்கேயெங்கள் நல்வினை பயன்படுக என்றுசொல்லுகின்றவர்களும்.

யா என்னும் வினுவிடைச்சொல் எல்லாம் என்னும் பொருள்மேல் நின்றது. கோடி முன்னிலையொருமை யெதிர்கால வினைமுற்று கொள்பகுதி, முதனீளல் விகாரம், து சாரியை, ளகரக்கேடும் தகரத்திரிபும் உகரக்கேடும் சந்தி, இ விகுதி, அரிதிற்செய்த என்றது வெயில், மழை முதலியவற்றில் நின்றுசெய்த என்பது பொருள். 88

உயரருளொண்கணொக்குந்தாமரைநிறத்தையொக்கும்
புயல்பொழிமேகமென்னபுண்ணியஞ்செய்தவென்பார்
செயலருந்தவங்கள்செய்திச்செம்மலைத்தந்தசெல்வத்
தயரதற்கென்னகைம்மாறுடையம்யாந்தக்கதென்பார்.

இ-ள் உயர் அருள் ஒண்கண் ஒக்கும்—எல்லாநற்குணங்களிலுமுயர்ந்த கருணையானது இவனது ஒள்ளியதிருநோக்கத்தை யொத்துத்தோன்றும், தாமரை நிறத்தை ஒக்கும்—தாமரையானது திருநோக்கத்தினிறத்தையொத்துத்தோன்றும், புயல்பொழிமேகம்—நீரைச்சொரியுமேகம் (இவன் திருமேனியையொத்துத்தோன்ற) என்னபுண்ணியம்செய்த ஓ என்பார்—என்ன புண்ணியஞ்செய்தனவோவென்பவரும், செயல் அருந்தவங்கள்செய்து—செய்தற்கரியதவங்களைச்செய்து, இச்செம்மலைத்தந்த செல்வம்தயரதற்கு—இந்த இராமமூர்த்தியைப்பெற்ற தசரதச்சக்கரவர்த்திக்கு, யாம்தக்கது என்ன கைம்மாறு உடையம் என்பார்—நாம் தக்கதாக என்ன பிரதியுபகாரத்தை யுடையோ மென்பவரும்.

உயரருளொண்கணொக்கும், தாமரைநிறத்தையொக்கும், புயல்பொழி மேகம் என்ன புண்ணியம்செய்த என உபமானப்பொருள்களை யுபமேயங்களாக்கிச்சொல்லுதலால் எதிர்நிலையணி. இதனை வடநூலார் பிரதீபாலங்காரம் என்பார். செம்மல் பெருமையிற்சிறந்தோன். ஓ தொகுத்தல். 89

வாரணமரற்றவந்துகராமுயிர்மாற்றுநேமி
நாரணனொக்குமிந்தநம்பிதன்கருணையென்பார்
ஆரணமறிதறேற்றாவையனையணுகிநோக்கிக்
காரணமின்றியேயுங்கண்கள்நீர்கலுழநிற்பார்

இ-ள். வாரணம் அரற்றவந்து—கசேந்திராழ்வான் ஆதிமூலமேயென்றோலமிடவந்தருளி, கராம் உயிர்மாற்றும் நேமிநாரணன்—முதலையினுயிரை யொழித்துக்காத்தசுதரிசனமென்னுஞ் சக்கரத்தையுடையஇறைவனை, இந்த நம்பிதன் கருணை ஒக்கும் என்பார்—இந்த இராமமூர்த்தி தன்கிருபையால் ஒப்பான் என்பவரும், ஆரணம் அறிதல் தேற்றாத ஐயனை அணுகிநோக்கி—வேதம் அறிதற்கரிய இராமமூர்த்தியைச்சேரவந்து கண்களாற்பார்த்து, காரணம் இன்றிஉம்—யாதொரு காரணமின்றியுந் தம்மையறியாமல், கண்கள் நீர்கலுழ நிற்பார்—கண்களினின்று ஆனந்தநீர்த்துளிசிந்த நிற்பவரும்.

இறைவனென இவரையுணராதிருக்கவும் ஆனந்தபாஷ்பம் சிந்தினராதலால் காரணமின்றியேயும் என்றார். நீர்பருகமடுவிற்சென்ற கசேந்திராழ்வானைமுதலைபற்றி நெடுநாளலைக்க அதற்காற்றாது ஆதிமூலமேயென்றோலமிட்டழைத்தபோது, கருடாரூடராயெழுந்தருளிச்சக்கரத்தையெறிந்து அம்முதலையைக்கொன்று அபயந்தந்தனர் என்பது புராணவரலாறு. தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவாய்நின்றதேற்றாத என்னும் எதிர்மறைப்பெயரெச்சம் இங்குத்தன்வினைமேல் நின்றது. ஏகாரம் அசைநிலை. 90

நீலமாமுகிலனன்றனிறையினோடறிவுநிற்கச்
சீலமார்க்குண்டுகெட்டேனென்றேவரினடங்குவாறு

காலமாக்கணிக்குநுண்மைக்கணக்கையுங்கடந்துநின்ற
மூலமாய்முடிவிலாதமூர்த்தியிம்முன்பனென்பார்.

இ-ள். நீலம்மாமுகில் அன்னான்தன் நிறையின் ஓடு அறிவுநிற்கமூரி
ரியபெருமைவாய்ந்த மேகத்தையொத்தஇராமமூர்த்திநிறையும் அறிவும் இரு
க்க, சீலம் ஆர்க்குஉண்டு—அவர்க்குள்ள சீலம்எவர்க்குண்டு, கெட்டேன்—
இது ஆச்சரியம், தேவர் இன் அடங்குவான் ஓ—தேவர்கூட்டத்துளடக்கிப்
பார்க்கிலவருள் ஒருவராக அடங்குவாரோ (அடங்காரென்றபடி) இமுன்பன்-
(ஆதலால்) இம்முன்னோன், காலம் ஆககணிக்கும் நுண்மைகணக்கை உம்
கடந்துநின்ற—காலமாக வளவறுக்கும் நுண்ணிய நிமிடத்தையும் கடந்து
அப்பால்நின்ற, மூலம் ஆய்முடிவு இல்லாத மூர்த்திஎன்பார்—முதலாயழி
வில்லாது நின்ற மூர்த்தியேயிவரென்று கூறுவார்கள்

நிறை—விதிவழிநிற்றல். நுண்மைக்கணக்கு என்றது நிமிடத்தைகால
மாகக்கணிக்கும்என்றது நிமிடம்பதினைந்துகொண்டதுகாட்டை, காட்டைமு
ப்பதுகொண்டது கலை, கலைமுப்பதுகொண்டது முகூர்த்தம், முகூர்த்தமுப்
பதுகொண்டது ஓர்நாள். காலமாகக்கணிக்கு நுண்மைக்கணக்குஎன்றதுகா
லதத்துவத்தை காலதத்துவத்தில்யாவும் அடங்குதலால் அதுவேபொருள்
என்பார்மதங்கெடக்கடந்துநின்றமூலமாய் முடிவிலாதமூர்த்திஎன்றார் கெட்
டேன்ஆச்சரியப்பொருளில்வந்த இடைச்சொல். மூர்த்தி என்பதனிறுதியில்
பிரிநிலை ஏகாரந்தொகுத்தல். ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. 91

ஆர்கலியகழ்ந்தோர்கங்கையவனியிற்கொணர்ந்தோர்முந்தைப்
போர்கெழுபுலவர்க்காகியசுரரைப்பொருதுவென்றோர்.
பேர்கெழுசிறப்பின்வந்தபெரும்புகழ்நிற்பவையன்
தார்கெழுதிரடோடந்தபுகழினைத்தழுவியென்பார்.

இ-ள். ஆர்கலி அகழ்ந்தோர்—கடலைத் தோண்டினவர்களும், கங்கை
அவனிஇல் கொணர்ந்தோர்—கங்கையை நிலவுலகிற்கொண்டுவந்தவரும், முந்
தை—முற்காலத்தில், போர்கெழு புலவர்க்கு ஆகி—போர்த்தொழில்மிக்க தே
வர்கள் பொருட்டுத் துணையாய், அசுரரைபொருதுவென்றோர்—அசுரரைப்
போர்செய்து வென்றவருமாகிய இவர்களுக்கு, பேர்கெழுசிறப்பு இன்வந்த
பெரும்புகழ்நிற்பது—இவர்கள்பேரால் மிக்கசிறப்பால்வந்த பெருங்கீர்த்தி
நிலைநிற்பது, ஐயன்தார் கெழுதிரள்தோள்தந்த புகழினை தழுவி என்பார்—
இராமமூர்த்தியின் வெற்றிமாலை பொலிந்துதோன்றும் திரண்டதோள்கொ
டுத்த கீர்த்தியைத்தொழு கொம்பாகத்தழுவி யல்லவாவென்று கூறுவார்கள்.

ஆர்கலியகழ்ந்தோர் தமது பிதாசெய்த அசுவமேதயாகத்தை முடித்தற்
பொருட்டு இந்திரனொளித்த அவ்வசுவத்தைத் தேடுதற்பொருட்டு நிலத்
தைத்தோண்டிய அறுபதினாயிரஞ்சகரர்கள். கங்கையை அவனியிற்கொணர்
ந்தோர், கபிலமுனியாலழிந்த அந்தஅறுபதினாயிரம் சகரரும் விண்ணுலக
டையத்தவஞ்செய்து கங்கையைக்கொண்டுவந்த பகீரதர். புலவர்க்காகிய சுர
ரைப்பொருதுவென்றோர் மாந்தாதாமுதலியோர் இராமர் தோள்தந்தபுகழ்
என்றது தாடகைமுதலியோரையும் பரசுராமரையும் வென்றதனால் வந்தபு

கழ். அவர்கள்புகழ் இவர்புகழாலிலைபெற்றது என்றதனால்இவர்புகழ்மிக்கதென்பதுதோன்றுதலால் குறிப்பணி. அகழ்ந்தோர், கொணர்ந்தோர், வென்றோர் வினைமுற்றுப்பெயர்கள். அகழ், கொணு, வெல் பகுதிகள். 92

கலி விருத்தம்.

சந்தமிவைதாவின்மணியாரமிவையாவும்
சிந்துரமுமிங்கிவைசெறிந்தமதவேழப்
பந்திகள்வயப்பரிபசும்பொனின்வெறுக்கை
மைந்தவறியோர்கொளவழங்கெனநிரைப்பார்.

இ-ள். மைந்த—இராமமூர்த்தியே, இவைசந்தம் — இவைசந்தனக்குழம்பாம், இவைதாஇல் மணி ஆரம்உம்சிந்துரம்உம்— இவைகள் கெடுதலில்லாத முத்தாரமும் சிந்தூரமுமாம், இங்கு இவை—இங்குள்ள இவைகள்,செறிந்தமதம்வேழம் பந்திகள்—நெருங்கிய மதத்தையுடைய யானைப்பந்திகளும் வயம்பரி—வெற்றியையுடைய குதிரைகளும், பசும்பொன்வெறுக்கை—பசியபொற்குவியலுமாம், யாஉம்—இவையெல்லாவற்றையும், வறியோர்கொள்ளவழங்கு என்னநிரைப்பார்—தரித்திரர்கொள்ளக் கொடுப்பாயென்று வரிசையாகக்குவிப்பவர்களும்.

இதுமுதல் ஆண்டிணையராயினைய கூறினென்பதுகாறும் காணவந்தோர் கூறுதலால் ஒருதொடர். மடல்பெரிய தாழையென்றாற்போலத் தாவின்மணியெனவந்தது "உயர்திணைதொடர்ந்த" என்னும்சூ—இல் "சொற்றொறுமிற்றிதன்பெற்றி" என்பதினால் வந்த அஃறிணைமுடிபெனக்கொள்க. தாஉரிச்சொல் இதுபெயர்த்தன் மைப்பட்டுநின்றது. ஆரம் என்பதனிறுதியில் எண்ணும்மைதொகுத்தல். இன் வேண்டாவழிச்சாரியை. 93

மின்பொருவுதேரின்மிசைவீரன்வருபோழ்தில்
தன்பொருவில்கன்றுதனிதாவிவரல்கண்டாங்
கன்புருகுசிந்தையொடுமாவுருகுமாபோல்
என்புருகிநெஞ்சுருகிநஞ்சுருகிநிற்பார்.

இ-ள். மின்பொருது தேரில்மிசை வீரன்வருபோழ்துஇல்—மின்னலையொத்த தேரின்மேலிராமமூர்த்தி வருங்காலையில், தன் பொரு இல்கன்று—தனது ஒப்பில்லாத இளங்கன்று, தனிதாவிவரல்கண்டால் ஆங்கு—தனித்துத்துள்ளிவருதலைக்கண்டாற்போல, அன்புஉருகுசிந்தையொடுஉம் ஆ உருகும்ஆறுபோல்—அன்பாலுருகு மனத்தோடும் பசுகனிந்துருகும்வகைபோல, என்பு உருகி நெஞ்சுஉருகி நஞ்சு உருகிநிற்பார்—எலும்புகள் நெக்குவிட்டு மனமுருகி மற்றையவயவங்கள் நைந்துருகிநிற்பவர்களும்.

கண்டால் ஈறுதொகுத்தல், இவ்வினையெச்சம் உவமப்பொருளில்வந்ததால்வினையெச்சவுவமம். நைந்துநஞ்சு மரூஉ. ஆறு என்னும்பெயர்ச்சொல் ஈறுதொக்குநின்ற வழிவருமொழி வல்லெழுத்தியல்பாதல் "இயல்பினும்விதியினும்என்ற சூ—இல் "மன்" என்றமிகையால். 94

சத்திரம்நிழற்றமிர்தானையொடுநாணு
அத்திரம்நிழற்றவருளோடவனியாள்வோர்

புத்திரரினிப்பெறுதல்புல்லிதெனநல்லோர்
சித்திரமெனத்தனிநிகைத்துருகிநிற்பார்.

இ-ள். சத்திரம்நிழற்ற—தவளக்குடை நிழல்செய்யவும், நிமிர்தானையொடு—நிமிர்ந்தசேனைகளோடு, நாளு அத்திரம்நிழற்ற, பலவகைப்பட்டஎய்யும் அம்புகள் ஒளிவீசவும், அருளோடு அவனிஆள்வோர்—கருணையோடு உலகினையாளும் அரசர்களும் இனிபுத்திரர் பெறுதல்புல்லிதுஎன்ன—இனிப்புத்திரரைப்பெற்றெடுத்தல்மிகவுஞ்சிறுமையதென்று,நல்லோர்சித்திரம் என்ன—பெரியோர்கள் ஓவியம்போல, தனிநிகைத்து உருகிநிற்பார்—தனித்தனியாய் அறிவுகலங்கி மனமுருகிநிற்பவர்களும்.

இராமமூர்த்தியைப் பெற்றதனால் தசரதனடைந்த பொலிவைப்போல இனியடையப்போகின்றவர்கள் யாரெனறு கருதினரென்பார் புத்திரரினிப்பெறுதல் புல்லிதெனநல்லோர் சித்திரமெனத்தனி நிகைத்துருகிநிற்பாரென்றார். இது உதாரவணி. அத்திரம் மந்திரத்தாற் பிரயோகிக்கும் ஆயுதம். புத்திரர்பும்என்னும் நரகத்தைநீக்கி முத்தியைத்தருவோர். நிழற்றநிகழ்கால வினையெச்சம் நிழல்பகுதி, து சாரியை, லகரமும்தகரமுந் திரிதலும் உகரக்கேடும் சந்தி, அ எச்சவிகுதி. 95

கார்மினொடுலாயதெனநூல்கணுலுமார்பன்
தேர்மிசைநம்வாயில்கடிதேகுதல்செய்வானோ
கூர்கனகராசியொடுகோடிமணியாலும்
தூர்மினெடுவீதியினிமென்றுசொரிவாரும்.

இ-ள். கார்மின்ஒடு உலாயது என்னநூல்கணுலும்மார்பன்—மேகமின்னலோடுலாவியதுபோல முப்புரிநூல் விளங்குமார்பினையுடைய இராமமூர்த்தி, தேர்மிசை நம்வாயில்கடிது ஏகுதல்செய்வான்ஓ—தேரின்மேல வருவோன் நமதுவாசலைவிரைந்து கடக்காமல், கூர்கனகம்ராசியொடு—மிக்கபொற்குவியலோடு, கோடிமணியால்உம்—அளவில்லாத இரத்தினங்களாலும், நெடுவீதியின்இ தூர்மின்என்று சொரிவார்உம்—நீண்டதெருவினைத்திடர் படுத்துங்களெனக்குவிப்பவர்களும்.

ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு ஆதலால் கடக்காமல் என்றும். ஏகுதல்செய்வானோ ஒருசொல். இல்வாய்வாயில் இலக்கணப்போலி. 96

தாய்கையில்வளர்ந்திலன்வளர்த்ததுதவத்தால்
கேகயமடந்தைகிளர்ஞாலமிவனாள
ஈகையிலுவந்தவவ்வியற்கையிதுவென்றால்
தோகையிவள்பேருவகைசொல்லலரிதென்பார்.

இ-ள். தாய்கையில்வளர்ந்திலன்—இவ்விராமமூர்த்தி தனது தாயின் கையில் வளர்ந்திலன், தவத்தால்வளர்ந்தது கேகயன்மடந்தைஎ—தவத்தினால்வளர்த்தெடுத்தது கைகேசியே, கிளர்ஞாலம் இவன்ஆள—விளங்கும் நிலவுலகையிவன்ஆள, ஈகையில்உவந்த அ இயற்கை—கொடுத்தற்றொழிலில்மகிழ்கூர்ந்த அவ்வியல்பு, இதுஎன்றால்—இவன்வருந்திருக்கோலம்ஆயின், தோ

மைஇவள்பேர் உவகைசொல்லல் அரிதுஎன்பார்—மயில்போன்ற இக்கைகே சியின்பெருமகிழ்ச்சியைநம்மால் வரையறுத்துச்சொல்லுதலரிது என்பவரும்.

உலகாளத் தனக்கோர்புத்திரனிருக்கவும் அவனைநோக்காது இராமமூர்த்திக்கு அவ்வாட்சியைத்தந்தமையாலித்திருக்கோலம் அவள்கண்ணிற்கு எவ்வாறிருக்குமோ என்பார் பேருவகைசொல்லலரிதென்பார் என்றார். 97

பாவமுமருந்துயரும்வேர்பறியுமென்பார்
பூவலயமின்றுதனியன்றுபொதுவென்பார்
தேவர்பகையுள்ளனவிவ்வள்ளால்தெறுமென்பார்
ஏவல்செயுமன்னர்தவம்யாவதுகொலென்பார்.

இ-ள். பாவம்உம் அருந்துயர்உம் வேர்பறியும் என்பார்—பாவச்செயலும் அடைதற்கரிய துன்பமும் இனிவேரறுகெடுமென்பவரும், பூவலயம் இன்று தனிபொது அன்று என்பார்—வட்டமாயுள்ளநிலவுலகு இப்பொழுது இவனுக்கேயுரித்து இனிபாவர்க்கும் பொதுவாயுள்ளது அல்ல என்பவரும், தேவர்பகைஉள்ளன இவ்வள்ளல்தெறும்என்பார்—தேவர்களால் உயிர்களுக்குவரும் பகையாயுள்ளவற்றையும் இவ்விராமமூர்த்தி யழிப்பான் என்பவரும், ஏவல்செயும்மன்னர் தவம்யாவது கொல்என்பார்—இவனுக்கு ஏவல்செய்யும் அரசர்கள்பெருந்தவம் எத்தன்மையதோ என்பவரும்.

பூவலயமின்றுபொது வன்றுதனியென்பார் என்னும்பாடத்திற்கு வட்டமாயுள்ள நிலவுலகுஇன்று முதல்பொதுவல்ல இவனுக்கேயுரித்து என்று சொல்வாரும் எனப்பொருள்கொள்க. செய்யுளாதலால் அன்றுபொதுவென மாறிவந்தது. மழையில்லாமையும் அதிகமும், காற்றும், தீயும், நோய்முதலியவையும்தேவரால் உயிர்களுக்குவரும்பகையென்பார் தேவர்பகையுள்ளனஎனவும், இவனுக்கு அரசர்கள்குற்றேவல் செய்யத்தாம் செய்ததவம்பெரிதென்பார் ஏவல்செயுமன்னர்தவம்யாவது கொலென்பார் எனவுங்கூறினர். தேவர்பகையுள்ளன என்பதற்குத் தேவர்களுக்குப்பகையாயுள்ள அசுரர்களை எனப்பொருள் கொள்வாருமுண்டு. உள்ளன என்பது அஃறிணையாதலால் பொருந்தாதெனமறுக்க. கொல் ஐயப்பொருளில் வந்த இடைச்சொல். 98

ஆண்டிளையராயினையகூறவடல்வீரன்
தூண்டுபுரவிப்பொருவில்சுந்தரமணித்தேர்
நீண்டகொடிமாடநிரைநிரையப்போய்ப்
பூண்டபுகழ்மன்னனுறைகோயில்புகலோடும்.

இ-ள். ஆண்டு இளையர்ஆய் இனையகூற—அவ்விடத்திலித்தன்மையாயிந்த வார்த்தைகளை முனிவரு முதியோருமிளையோருங்கூற; அடல்வீரன்—வெற்றியையுடைய இராமமூர்த்தி, தூண்டுபுரவி—செலுத்தற்குரிய குதிரைபூட்டிய, பொருஇல் சுந்தரம்மணிதேர்—ஒப்பில்லாத அழகமைந்த இரத்திநமழுத்திய தேரில், நீண்டகொடி மாடம்நிரை வீதிநிறைய போய்—உயர்ந்த துவசங்கள்கட்டிய உப்பரிகையின் வரிசையையுடைய தெருவில் பார்ப்போர்கண்கள் நிறையச்சென்று, புகல்பூண்டமன்னன் உறைகோயில் புகல் ஓடும்—கீர்த்தியையாபரணமாகப்பூண்ட அரசன்வசிக்குங்கோயிலிற்புகுந்து

இதுமுதல்சிற்றவைகோயில்புக்கான் என்பதுகாறும் ஒருதொடராதலா ல்குளகம். உம்மையிடைச்சொல்லையடுத்த ஓடுருபுவினையெச்சப்பொருளில் வந்தது. இனையர்பண்படியாகவந்த சுட்டிடைச்சொல்லாகப்பிறந்த பலர்பா ற்படர்க்கைக்குறிப்பு வினைமுற்று. இ சுட்டிடைச்சொற் பகுதி, னகரமெய் விரித்தல்விகாரம், ஐ சாரியை, யகரத்தோற்றம் சந்தி, அர் விகுதி. இனையசு ட்டுத்திரிபு. 99

அறுசீரடியாசிரிய விருத்தம்.

ஆங்குவந்தடைந்தவண்ணலாசையின்கவரிவீசப்
பூங்குழன்மகளிருள்ளம்புதுக்களியாடநோக்கி
வீங்கிருங்காதல்காட்டிவிரிமுகக்கமலபீடத்
தோங்கியமகுடஞ்சூடியுவகைவீற்றிருப்பக்காணான்,

இ-ள். ஆங்குவந்து அடைந்த அண்ணல்—அவ்விடத்து மகிழ்ந்தடைந்த இராமமூர்த்தி, ஆசைகவரி சு—ஆசையென்னும் சாமரைவீசவும், பூகுழல்மக ளிர்உள்ளம்—மலரணிந்த கூந்தலையுடைய பெண்கள்மனத்தில், புதுகளிஆட நோக்கி—புதிதாயெழுந்தகளிப்பு நடனஞ்செய்பவும்பார்த்து, வீங்கு இருங் காதல்காட்டிவிரிமுகம்கமலம்பீடத்து—அதிகரித்த பெரியவிருப்பினைக்காட் டிமலர்ந்தமுகமாகியதாமரைப்பீடத்தில், உவகை ஓங்கிய மகுடம்சூடிவீற்றிரு ப்ப—மகிழ்ச்சியென்னும் அரசஒளிமிக்க முடிசூடி நிகரின்றி யிருக்க, காணா ன்—அவ்விடத்து இராமமூர்த்திநோக்காது.

கோயிலில் அரசனில்லாமையால் மகிழ்ச்சியில்லையென்பார் இவ்வாறு கூறினர். காணான்முற்றெச்சம். இன் அல்வழிச்சாரியை. 100

வேத்தவைமுனிவரோடும்விரிப்பொடுகளிக்குமெய்ம்மை
ஓத்தவையுலகத்தெங்குமுள்ளவையுணர்ந்தாருள்ளம்
ஏத்தவையிசைக்குஞ்செம்பொன்மண்டபமினிதினெய்தான்
பூத்தவைவடிவையொப்பான்சிற்றவைகோயில்புக்கான்.

இ-ள். வேந்துஅவைமுனிவர் ஓடு விருப்பு ஓடு களிக்கும்—அரசர்கள் கூட்டம் முனிவர்களோடு முடிசூடுதலைக்காணவேண்டுமென்னும் விருப்பால் களிகூறும், மெய்மைஏத்து அவை இசைக்கும்—உண்மையாகப்பிறர் போற் றும்புலவர்கள் புகழ்ந்துகூறும், செம்பொன்மண்டபம் இனிது இன்எய்தான் —செவந்தபொன்னாலமைந்த சபாமண்டபத்தை மகிழ்கூர்ந்தடையாது,ஓத்து அவை—வேதங்களையும், உலகத்துஎங்கும்உம் உள்ளவை—உலகத்திலெங்கு முள்ளநித்திய அநித்தியப்பொருள்களையும், உணர்ந்தோர்உள்ளம்பூத்தஐவடி வைஒப்பான்—உணர்ந்தபெரியோரிதயத்தில் மலர்ந்த பரத்துவமுதலிய ஐந் துதிருவுருவங்களையுமொத்த இராமமூர்த்தி, சிற்றவைகோயில்புக்கான்—தம துசிற்றன்னையாகிய கைகேசியின் கோயிலையடைந்தார்.

காணான், எய்தான்என்னுமுற்றெச்சங்கள் விரவாது, புக்கான் என்னும் வினைமுற்றின் முதனிலையைத்தனித்தனிகொண்டன. பரத்துவமுதலிய ஐந் துதிருவுருவங்கள் பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமித்துவம், அர்ச்சா வதாரம். பரத்துவம் ஸ்ரீ வைகுந்தத்தில் எழுந்தருளியிருத்தல், வியூகம்

திருப்பாற்கடலிலறிதுயிலமர்ந்திருத்தல், விபவம் இராமாவதாரமுதலிய திருவவதாரங்கள், அந்தரியாமித்துவம் அடியவர்மனங்களிலிருத்தல், மச்சாவதாரம் திருக்கோயிலி லெழுந்தருளியிருத்தல். அவைக்கூட்டம், புலவர், ஒத்து அவை வேதங்களாகிய அவை. வேந்தவை வேத்தவையலித்தல்விகாரம். ஒடு உருபு எதுப்பொருளில்வந்தது. 101

புக்கவன்றன்னைநோக்கிப்புரவலர்முனிவர்யாரும்
தக்கதேநினைந்தான்றாதைதாமரைச்சரணஞ்சூடித்
திக்கினைநிமிர்த்தகோலச்செல்வனைசெம்பொற்சோதி
மிக்குயர்மகுடஞ்சூட்டச்சூடுதல்விழுமிதென்றார்.

இ-ள். புக்கவன்தன்னை—சிற்றன்னை கோயிலிற்புகுந்த இராமமூர்த்தியை, புரவலர் முனிவர்யாரும்நோக்கி—சபாமண்டபத்திலுள்ள அரசரும் வசிட்டர்முதலிய முனிவர்களும் மற்றையாவரும்பார்த்து, தக்கதுஎநினைந்தான்—இவன் தக்ககாரியத்தையே கருதினான், தாதைதாமரை சரணம்சூடி—தனதுபிதாவின் தாமரைமலரையொத்த திருவடியைச்சிரசிற் சூடி, திக்கினை நிமிர்த்தகோல் அ செல்வன்ஏ—திக்குகளிலுள்ள மாறுபாடுகளைத் தவிர்த்து நல்வழிப்படுத்திய செங்கோலையுடைய அத்தசரதனே, செம்பொன்சோதிமிக்குஉயர்மகுடம்சூட்ட—செவந்த பொன்னாலமைந்த ஒளிமிகுந்துயர்ந்த முடிசூட்ட, சூடுதல்விழுமிதுஎன்றார்—தான்சூடுதல் தக்கது என்றுகூறினார்.

அரசனுமையால் நாம்சூட்டத்தான் சூடுதல் தகுதியென்று நினைத்தானென்பார். தக்கதேநினைந்தான் என்றார். திக்குஇடவாகுபெயர். மாறுபாடு பகைவர்கருதிய தீமையும், உயிர்கள்தீய ஒழுக்கத்திற் செல்லுகையும். 102

ஆயனநிகழும்வேலையண்ணலுமயர்ந்துதேறுந்
தூயவளிருந்தசூழறருவினன்வருதனோக்கி
நாயகனுரையான்வாயாலினிதுபகர்வனென்னுந்
தாயெனநினைவான்முன்னேகூற்றெனத்தமியள்வந்தாள்.

இ-ள். ஆயனநிகழும் வேலை—முடிசூட்டற்கமைந்த காரியங்கள்நடக்கும் சமையத்தில், அண்ணல்உம் அயர்ந்துதேறு—இராமமூர்த்தியும் தன்தந்தையைக்காணாமையால் நிலைதளர்ந்து பின்தெளிந்து, தூயவள்இருந்த சூழல்தருவினன் வருதல்நோக்க —சிற்றன்னைகோயிலில் அரசனிருக்குமிடத்தைத்தேடிவருதலைப்பார்த்து, நாயகன்வாயால் உரையான்—அவ்வரசன்பராதாழ்வான்முடிசூடுவான் நீபதினான்குவருடங்காட்டிற்குச் செல்லென்று தன்வாயாற்கூறான், இதுநான்பகர்வன்என்னு—இதனைமுற்பட்டு நான்கூறுவேனென்று, தாய்என்ன நினைவான்முன்எ—தாயென்று நினையும் அந்த இராமமூர்த்தியின்முன்னே, கூற்று என்னதமியள் வந்தாள்—இயமனைப்போலத் தனியளாய்க் கைகேசிவந்தாள்.

தருவினன்முற்றெச்சம். நாயகன் இதன்முன் அகரச்சுட்டுத் தொகுத்தல். என்ன இரண்டனுள் முன்னது இடைச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம். பின்னது உவம உருபிடைச்சொல் லடியாகப்பிறந்த குறிப்பு வினையெச்சம். இரண்டிற்கும் என்பகுதி. 103

வந்தவடன்னைச்சென்னிமண்ணுறவணங்கிவாய்த்த
சிந்துரப்பவளச்செவ்வாய்செங்கையிற்புதைத்துமற்றைச்
சுந்தரத்தடக்கைதானைமடக்குறத்துவண்டுநின்றான்
அந்திவந்தடைந்ததாயைக்கண்டவான்கன்றினன்னான்.

இ-ள். அந்திவந்தடைந்ததாயை—தன்னைப்பிரிந்து அந்திப்பொழுதில் வந்தடைந்த தனதுதாயினை, கண்டஆன்கன்று இன்அன்னான்—பார்த்த அப்பசுவின் கன்றையொத்த இராமமூர்த்தி, வந்தவள்தன்னை — வந்தசிற்றன்னையை, சென்னிமண்உறவணங்கி—தன்நெற்றிமண்ணுலகில்தோயவணங்கி, வாய்ந்த சிந்துரம்பவளம்செவ்வாய் செங்கையில்புதைத்து—அமைந்தசெவந்தபவளம்போன்ற செவந்தவாயினைச் செவந்தகையாற்புதைத்து, மற்றைசுந்தரம் தடகைதானைமடக்குறது வண்டுநின்றான் — பின் அழகிய நீண்டகை ஆடையைமடக்கி நிற்கத்துவண்டுநின்றனர்.

வாய்த்த வலித்தல் விகாரம். மற்றைபின் என்னும் பொருளில் வந்த இடைச்சொல். அட்டாங்கமும் பஞ்சாங்கமும் நெற்றிதோய வணங்குதலால் சென்னிஎன்றதற்கு நெற்றிஎன்றும் இதுவிடாதவிலக்கணை. தடக்கைஉரிச்சொற்றொடர், வருமொழிவல்லெழுத்துமிகுதல் "இயல்பினும் விதியினும்" என்றசூ—ஆல். 104

நின்றவன்றன்னைநோக்கியிரும்பினுலியைந்தநெஞ்சிற்
கொன்றுழல்கூற்றமென்னும்பெயரினிற்கொடுமைபூண்டாள்
உன்றெனக்குணர்த்தலாவதேயதேயென்னினாகும்
ஒன்றுனக்குந்தைமைந்தவுரைப்பதோருரையுண்டென்றாள்.

இ-ள். நின்றவன்தன்னைநோக்கி—நின்றஇராமமூர்த்தியைப்பார்த்து, இரும்பின்ஆல் இயைந்தநெஞ்சுஇன்—இரும்பாற்செய்தமனத்தோடு, கொன்றுஉழல் கூற்றம்என்னும்பெயரின்இல்—உயிர்களைக்கொன்றுழலும் இயமனென்னும் பெயரிலும், கொடுமைபூண்டாள்—மிக்ககொடுமை பூண்டகைகேசி, மைந்த—மைந்தனே, இன்றுஎனக்கு உணர்த்தல் ஆவது ஒன்று—இப்பொழுதுஎன்னால் தெரிவிக்கும்ஒருசெய்தி, எயதுஏ—உன்பிதாஏவியதோ, என்னின்ஆகும்—(ஆதலால்) அதுஎன்னாலுணர்த்தக்கூடும், உந்தைஉனக்கு உரைப்பது ஓர்உரைஉண்டுஎன்றாள்—உன்பிதாஉனக்குக் கூறும்ஒருவார்த்தையுண்டென்றுகூறினள்.

ஏவியது எயது எனவந்தது. ஏவு பகுதி, ஈறுகெடுதல் சந்தி, யகரமெய் இடைநிலை.-அ சாரியை, து ஒன்றன்பால்விகுதி. இதுசெயப்படுபொருள்மேல்நிற்றலால் வினைமுற்றுப்பெயர். ஏகாரம்தேற்றப்பொருட்டு. ஒன்றுசெய்திமேல்நிற்றலால் பண்பாகுபெயர். 105

எந்தையேயேவநீரேயுரைசெயஇயைவதுண்டேல்
உய்ந்தனனடியேனென்னிற்பிறந்தவருளரோவாழி
வந்ததென்றவத்தினுயவருபயன்மற்றொன்றுண்டோ
தந்தையுந்தாயுநீரேதலைநின்றேன்பணியீனென்றான்.

இ-ள். எந்தஏ ஏவ—என்பிதாவே யேவ, நீர் ஏ உரைசெய்ய—நீரே யதனைக்கூற, இயைவது உண்டேல் — கிடைக்கும் பயனுளதாயில், அடியேன் உய்ந்தனன் — அடியேன் பிழைத்தேன், என் இல்பிறந்தவர் உளர்ஓ—என்னைப்போல மக்கட்பிறப்பிற் பிறந்தவருண்டோ, வாழி—வாழக்கடவேன், வந்ததுஎன் தவத்து இன் ஆயவருபயன்—இங்குயான்வந்தது என்தவத்தால் வந்தபெரும்பயன், மற்றுஒன்றுஉண்டுஒ —வேறொன்றுளதா, நீர்ஏதந்தைஉம் தாய்உம்—நீரேபிதாவுந் தாயுமாவீர், தலைநின்றேன் பணியின் என்றான்—நீர்கூறும் ஏவலின்தலை நின்றேனதனையருளுமென்று கூறினார்,

வாழிய என்னும் வியங்கோளீறு கடைகுறை விகாரம். வாழ் பகுதி இ சாரியை, ய விகுதி. "வாழியவென்பதனீற்றி னுயிர்மெய்- யேகலுமுரித்து" என்ற சூ-ஆல். ஆவீர் என்னும் பயனிலைதொகுத்தல். ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. 106

ஆழிசூழுலகமெல்லாம்பரதனேயாளநீபோய்த்
தாழிருஞ்சடைகடாங்கித்தாங்கருந்தவமேற்கொண்டு
பூழிவெங்கானநண்ணிப்புண்ணியத்துறைகளாடி
ஏழிரண்டாண்டினவாவென்றியம்பினனரசனென்றாள்.

இ-ள். பரதன் ஏ ஆழிசூழ் உலகம் எல்லாம் ஆள — பரதன்ஒருவனே கடல்சூழ்ந்தநிலவுலகமெல்லாவற்றையும் ஆள, நீ போய்— நீசென்று, தாழ் இருஞ்சடைகள் தாங்கி தாங்கு அருந்தவம் மேற்கொண்டு—தாழ்ந்த பெரிய சடைகளைத் தாங்கிப் பிறர் தாங்கற்கரிய தவத்தினை மேற்கொண்டு,பூழி வெங்கானம் நண்ணி புண்ணியம் துறைகள் ஆடி—புழுதியடைந்த கொடிய ஆரணியத்தையடைந்து அங்குள்ள புண்ணியநதிகளினீர்த்துறையில் நீராடி,ஏழ் இரண்டு ஆண்டுஇன் வா என்று அரசன் இயம்பினன் என்றாள்—பதினான்குவருடம்கழித்துவாராயென்று தசரதசக்கரவர்த்திகூறினான்என்றுகூறினாள்

புண்ணியத்துறை என்றது' கங்கையின்கணிடைச்சேரி'' என்றால்போலநிற்றலால் விட்டவிலக்கணை. ஏழிரண்டு பண்புத் தொகைநிலைத்தொடர். இன்நீக்கப்பொருட்டு. (107)

இப்பொழுதெம்மனோராலியம்புதற்கெளிதேயாரும்
செப்பருங்குணத்திராமன்றிருமுகச்செவ்விநோக்கில்
ஒப்பதேமுன்புபின்பிவ்வாசகமுணரக்கேட்ட
அப்பொழுதலர்ந்தசெந்தாமரையினைவென்றதம்மா.

இ-ள். யார் உம்செப்பு அருங்குணத்துஇராமன் திருமுகம்செவ்விநோக்கில்—எவருஞ்சொல்லுதற்கரிய நற்குணத்தினையுடைய இராமமூர்த்தியின திருமுகப்பொலிவைப்பார்க்கில்,முன்புஒப்பது—முன்புதாமரைமலரையொத்திருந்தது, இவாசகம் உணரகேட்டபின்பு—இந்த வார்த்தையைக்கேட்டபின்னர், அப்பொழுது அலர்ந்தசெந்தாமரையினைவென்றது—அன்றலர்ந்தசெந்தாமரை மலரைவெற்றிகொண்டது,அம்மா இது ஓர் வியப்பு(ஆதலால் எம்அன்னோர் ஆல் இப்பொழுது இயம்புதற்கு எளிதுஏ—எம்போலியசாலிப்பொழுது அவரது உள்ளக்கிளர்ச்சியைச் சொல்லுதற்கு எளிதாகுமா(அரிதுஎன்றபடி)

முன்புஎன்றது அங்குவந்தகாலத்தை. அம்மாவியப்பிடைச்சொல். ஏகாரம் எதிர்மறைப்பொருட்டு. இதனால் அவரது உள்ளக்கிளர்ச்சி புலப்பட்டதால் குறிப்பு நவிற்சியணி. 108

தெருளுடைமனத்துமன்னனேவலிற்றிறம்பவஞ்சி
இருளுடையுலகந்தாங்குமின்னலுக்கியைந்துநின்றான்
உருளுடைச்சகடம்பூண்டவுடையவனுய்த்தகாரே
றருளுடையொருவனீக்கவப்பிணியவிழ்ந்ததொத்தான்.

இ-ள். தெருள்உடைய மனத்துமன்னன் ஏவலில் திறம்பஅஞ்சி—தெளிவமைந்த மனத்தையுடைய தசரதச்சக்கரவர்த்தியின் ஏவலினின்று மாறுபடுதற்கஞ்சி, இருள்உடைய உலகந்தாங்கும் இன்னலுக்குஇயைந்துநின்றான்—இருள்வாய்ந்த பூபாரத்தைத்தாங்குந் துன்பத்திற்கு உடன்பட்டுநின்ற இராமமூர்த்தி, உடையவன்உய்த்த—உரியவன்செலுத்திய, இருள்உடைய சகடம் பூண்டகார்ஏறு—உருளைவாய்ந்த பண்டியிற்பூட்டிய எருமைக்கடாவை, அருள்உடைய ஒருவன்நீக்க—கருணையையுடைய பிறனொருவன் பூட்டுவிட்டு நீக்க, அ பிணி அவிழ்ந்தது—அப்பூட்டுவிட்டுமகிழ்ந்ததை, ஒத்தான்—இவர் ஒத்துப்பொலிந்தார்.

இருளுடைய என்ற பொருளடை உயிர்களுக்கு இளைப்பொழித்தல் மேல் நின்றது. பூபாரஞ்சுமத்தற் குடம்பட்டது அரசனேவற்கஞ்சியேயாதலால் ஏவலிற்றிறம் பவஞ்சிஇயைந்து நின்றான்என்றார். பூபாரத்தை ஏற்றுதலால் அரசன் பாரமேற்றிய பண்டியையுடையவனுக்கும், அப்பாரத்தையிழுத்துச்செல்லும் கடாவிற்கிரங்கிப்பூட்டு அவிழ்த்து விட்டபிறனொருவன் கைகேசிக்கும், அக்கடா இளைப்பொழிந்து மகிழ்கூர்தல் இராமமூர்த்திமகிழ்கூர்ந்ததற்கும் ஒப்புக்கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. உடைய என்னும் தொழிற்பண்படியாகப்பிறந்த செயப்படு பொருள்குன்றாத, குறிப்புவினைப்பெயரெச்சம் ஈறுகெட்டு நின்றது. 109

மன்னவன்பணியன்றாகினும்பணிமறுப்பனோவென்
பின்னவன்பெற்றசெல்வமடியனேன்பெற்றதன்றோ
என்னினியுறுதியப்பாலிப்பணிதலைமேற்கொண்டேன்
மின்னொளிர்கானமின்றேபோகின்றேன்விடையுங்கொண்டேன்

இ-ள். மன்னவன் பணி அன்று ஆகில்—(ஏவியது) அரசன்பணித்த ஏவலல்லவாயினும், நும்பணிமறுப்பன்ஓ—நீர்பணித்த பணியைமறுப்பேனோ, என்பின்னவன்பெற்றசெல்வம் அடியனேன்பெற்றது அன்றுஓ—எனதுபின்னோனாகியபரதாழ்வான் அடைந்தசெல்வம் அடியோனாகிய யான்அடைந்ததல்லவா, அ பால்உறுதி இனிஎன்—(அவ்வாறுகருதாவிடில்) அப்பால்பெரும் பயன்யாது, இ பணிதலைமேற்கொண்டேன்—நீரருளிய இந்தப்பணிவிடையைதலைமேற்சுமந்தேன் (ஆதலால்) மின்ஒளிர்கானம் இன்றுஏபோகின்றேன்—மேகத்தில்மின்னல்விளங்குங்காட்டிற்கு இப்பொழுதே போகின்றேன். விடைஉம்கொண்டேன்—(நீர்ஏவியதால்) விடையும்பெற்றுக்கொண்டேன்

விடை விடுக்கப்படுவது என்னும் பொருள்மேல்நிற்றலால் செயப்படு பொருளில்வந்த தொழிற்பெயர், விடு பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ விகுதி. விடைஉத்தரம். எவன்என்னுங்குறிப்புவினைமுற்று இடைக்குறையாய் என் என நின்றது. ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு 110

கைகேசிசூழ்வினைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் 294.

## நகர்நீங்கு படலம்.

இராமமூர்த்தி நகரினின்று நீங்குதலையுணர்த்திய சமூகம்என மூன்று சொல் இரண்டுசந்தியாய்நிற்றலால் முன்னது நீக்கப்படு பொருளில்வந்துஐந் தாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடரிலும் பின்னது எய்தப்பொருளில் வந்த உருபும்பயனுந்தொக்க இரண்டாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடரி லும்வந்தன. நகர்நீங்கு வருமொழிமுதல் மெல்லெழுத்தியல்பாதல் "எண்மூ வெழுத்து" என்னுஞ்சூ—இல் "ஞநமயவக்களியல்பும்" என்றவிதியாலும், நீங்குபடலம் வேற்றுமைவழியில்மென்றொடர் குற்றியலுகரத்தின்முன்வரு மொழிமுதல் வல்லெழுத்துமிகாது இயல்பாதல் "இயல்பினும்விதியினும்" என்றசூ—இல் "மன்" என்றமிகையாலுங்கொள்க.

என்றுகொண் டிணையகூ டியடியிணையிறைஞ்சிமீட்டும்
தன்றுணைத்தாதைபாதமத்திசைநோக்கித்தாழ்ந்து
பொன்றிணிபோதினாலும்பூமியும்புலம்பிநையக்
குன்றினுமுயர்ந்ததோளான்கோசலைகோயில்புக்கான்.

இ-ள். குன்றின்உம் உயர்ந்த தோளான்—மலையைப்பார்க்கிலு முயர் ந்ததோளையுடைய இராமமூர்த்தி, என்றுகொண்டு இணையகூறி—(விடைமே ற்கொண்டேன்)என்றுகைக்கொண்டு இத்தன்மையுடையவற்றைச்சொல்லி, இணை அடி இறைஞ்சி—அவள் இரண்டுபாதங்களையும்வணங்கி மீட்டும்—மீள வும், தன்தாதை துணைபாதம்—தனதுபிதாவினிரண்டுபாதங்களையும், அ திசை நோக்கித்தாழ்ந்து—அவனிருக்கும்அந்தத்திசையைநோக்கிவணங்கி, பொன் திணிபோதின்உம் பூமியும்புலம்பிநைய—பொன்னைப்போலுஞ்செந்நிறமிக்க தாமரைமலரில்வசிக்கும் சிதேவியும்பூதேவியும் புலம்பிமனம்வருந்த, கோசலை கோயில்புக்கான்—கௌசலாதேவியின் கோயிலிற்சென்றார்.

மீட்டுசெயவெனெச்சத்திரிபு. இறைஞ்சி இறந்தகால வினையெச்சம் இறைஞ்சு பகுதி. 1

குழைக்கின்றகவரியின்றிக்கொற்றவெண்குடையுமின்றி
இழைக்கின்றவிதிமுன்சொல்லத்தருமம்பின்னிரங்கியேக
மழைக்குன்றமனையான்மௌலிகவித்தனன்வருமென்றென்று
தழைக்கின்றவுள்ளத்தன்னாள்முன்னொருதமியன்சென்றான்.

இ—ள். மழைகுன்றம் அனையான் — மேகம்படிந்த மலையையொத்த இராமமூர்த்தி, குழைக்கின்ற கவரி இன்றி—துவண்டசைகையுஞ் சாமரையில்லாமலும், கொற்றம்வெண்குடைஉம்இன்றி—வெற்றியமைந்த தவளக்குடை இல்லாமலும், இழைக்கின்றவிதியின்முன்செல்ல—நிகழும் ஆதிசங்கற்பமுன்செல்லவும், தருமம்பின்இரங்கிஏக—அறக்கடவுள் பின்னேவருந்திச்செல்லவும், மௌலிகவித்தனன் வரும்என்று என்றுதழைக்கின்ற உள்ளத்து அன்னாள்முன்—முடிசூடிவருவானென்றென்று தழைக்காநின்ற மனத்தையுடைய அக்கௌசலாதேவியின் முன்பு, ஒருதமியன்சென்றான்—பரிவாரமில்லாது தானொருதனியனாய் இராமமூர்த்தி போயினான்.

குழைக்கின்றஇழைக்கின்ற நிகழ்காலப்பெயரெச்சம் குழை இழை பகுதி.

புனைந்திலன்மௌலிகுஞ்சிமஞ்சனப்புனிதநீரால்
நனைந்திலனென்கொலென்னுமையத்தாள்நளினபாதம்
வனைந்தபொற்கழற்கால்வீரன் வணங்கலுங்குழைந்துவாழ்த்தி
நினைந்ததென்னிடையூறுண்டோநெடுமுடி புனைதற்கென்றாள்.

இ—ள். மௌலிபுனைந்திலன்—முடிசூடிலன், புனிதம் மஞ்சனம் நீர் ஆல் குஞ்சிநனைந்திலன்—தூய்மைவாய்ந்த திருமஞ்சன நீரினாற்சிகைநனையாதிருக்கின்றனன், என்கொல்என்னும் ஐயத்தாள்நளினம்பாதம்—இவ்விடையூறுநேர்ந்தது என்னகாரணமோவென்று மயங்கும் ஐயத்தையுடைய கௌசலாதேவியின் தாமரைமலர்போன்றபாதங்களை, பொன்கழல் வனைந்தகால்வீரன்வணங்கலும்—பொன்னாற்செய்த வீரகண்டைகட்டியகாலையுடைய இராமமூர்த்திவணங்க, குழைந்து வாழ்த்தி—மனமிளகிவாழ்த்தி, நெடுமுடிபுனைதற்குநினைந்ததுஎன்—நீநீண்டமகுடஞ்சூடுதற்கு மீளநினைந்ததியாது, இடையூறுஉண்டு ஓஎன்றாள்—இடையில்தடைவந்ததோ வென்றுவினவினாள். 3

கலிவிருத்தம்.

மங்கையம்மொழிகூறலுமானவன்
செங்கைகூப்பிநின்காதற்றிருமகன்
பங்கமில்குணத்தெம்பிபரதனே
துங்கமாமுடிசூடுகின்றானென்றான்.

இ—ள். மங்கை அ மொழிகூறலும்—கௌசலாதேவியந்த வார்த்தை வினவ, மானவன் செங்கைகூப்பி—இராமமூர்த்தி செவந்த கைகளைக்கூப்பி, நின்காதல் திருமகன்—உனது விருப்பமைந்த திருமகனும், பங்கம் இல்குணத்துஎம்பி—குற்றமில்லாத குணத்தையுடைய என்தம்பியாகிய, பரதனே—பரதாழ்வானே, துங்கம் மாமுடி சூடுகின்றான்என்றான்—உயர்ச்சிவாய்ந்தபெருமையமைந்த மகுடஞ்சூடுகின்றானென்றுகூறினான்.

மானவன் மனுமரபிற்பிறந்தவன். இதுதத்திதாந்தபதம் 4

முறைமையன்றென்பதொன்றுண்டுமும்மையின்
நிறைகுணத்தவனின்னினும்நல்லனும்
குறைவிலனெனக்கூறினள்நால்வர்க்கும்
மறுவிலன்பினில்வேற்றுமைமாற்றினாள்.

இ-ள். நால்வர்க்கும் உம் மறு இல் அன்பின் இல்வேற்றுமைமாற்றினள்—நால்வரிடத்திலுஞ் செலுத்தக்குற்றமில்லாத நேயத்தில் வேறுபாடில்லாத கௌசலாதேவி, முறைமை அன்று என்பது ஒன்று உண்டு—மூத்தானிருக்க இளையானுக்கு முடிசூட்டுதல் முறைமையல்லவென்றுகூறும் ஒருவார்த்தையுளது (அதுவேயன்றி), நின்னின் உம்மும்மையின் நிறைகுணத்தவன் நல்லன்—உன்னைப்பார்க்கிலும் மூன்றுபங்கு நிறைந்த சற்குணத்தையுடையவன் நல்லவன், குறைவிலன் எனகூறினள்—நல்லொழுக்கங்களிற் சிறிதுங்குறைவில்லாதவனென்று சொன்னாள். 5

என்றுபின்னருமன்னவனேவிய
தன்றெனுமைமகனேயுனக்கறன்
நன்றுநம்பிக்குநானிலமீகொடுத்
தொன்றிவாழுதியூழிபலவென்றாள்.

இ-ள். என்று—என்றுகூறி, பின்னர் உம்—மீளவும், மகனே மன்னவன் ஏவியது அன்று என்னுமை உனக்கு அறன்—என் அருமைப்புதல்வனே அரசனேவியபணியை மறுக்காமையல்லவோ உனக்குத்தருமம், நம்பிக்கு நன்று நானிலம் நீ கொடுத்து—உனது தம்பிக்கு மிகவும்நிலவுலகை நீகொடுத்து, ஒன்றிபலஊழிவாழுதி என்றாள்—மனவொருமைப்பட்டுப்பல ஊழிகாரும்வாழ்வாயென்று கூறினாள்.

பின்னர் காலப்பொருளில்வந்த இடைச்சொல் பின் பகுதி, னகரமெய் சந்தி, அர் பகுதிப்பொருள் விகுதி. 6

தாயுரைத்தசொற்கேட்டுத்தழைக்கின்ற
தூயசிந்தையத்தோமில்குணத்தினான்
நாயகன்னெனைநன்னெறியுய்ப்பதற்
கேயதுண்டோர்பணியென்றியம்பினான்.

இ-ள். தாய் உரைத்தசொல்கேட்டு தழைக்கின்ற—தாய்கூறிய வார்த்தையைக்கேட்டுத்தழைக்காநின்ற, தூயசிந்தை அத்தோம் இல்குணத்தினான்—களங்கமில்லா மனத்தையும் குற்றமில்லாதகுணத்தையுமுடைய இராமமூர்த்தி, நாயகன்—நமதரசன், என்னை நல்நெறி உய்ப்பதற்கு—என்னைநல்லவழியிற்செலுத்த, ஏயது ஓர்பணிஉண்டு என்று இயம்பினான்—ஏவியதோர்பணி விடையுண்டென்றுகூறினார்.

உய்ப்பதற்கு நிகழ்காலவினையெச்சம் உய் பகுதி, பகரமெய் விரித்தல் விகாரம், அ, து, அன் சாரியை, பகரத்தோற்றமும் உகரக்கேடும் னகரத் திரிபும் சந்தி, கு எச்சவிகுதி, 7

ஈண்டுரைத்தபணியென்னையென்றவட்
காண்டொரேழினோடேழகன்கானிடை
மாண்டமாதவரோடுடன்வைகிப்பின்
மீண்டுநீவரல்வேண்டுமென்றானென்றான்.

இ-ள். ஈண்டு உரைத்தபணி என்னை என்றவட்கு—இவ்விடத்து அரசன்கூறியபணி என்னவென்றுவினவிய கௌசலாதேவிக்கு, ஓர் ஏழினோடு

ஏழ் ஆண்டு—பதினான்குவருடம், அகன் கான் இடைமாண்ட மாதவர் ஒடு உடன்வைகி—இடம்பரந்த காட்டில் பெரிய தபோதனரோடுகூட விருந்து, பின்மீண்டுநீவரல்வேண்டும் என்றான் என்றான்— பின் நீ திரும்பிவரவேண்டு மென்று கூறினானென்று இராமமூர்த்திகூறினார்.

ஒடுருபிரண்டனுள் முன்னது வினையிலுடனிகழ்ச்சிப்பொருட்டு. பின்னது தலைமையுட னிகழ்ச்சிப்பொருட்டு. வைகி இறந்தகால வினையெச்சம் வைகு பகுதி. 8

ஆங்கவவாசகமென் னுமனல்குழை
தூங்குதன்செவியிற்றொடாமுனம்
ஏங்கினாளிளைத்தாள் திகைத்தாண்மனம்
வீங்கினாள்விம்மினாள்விழுந்தாளரோ.

இ-ள். ஆங்கு—கூறிய அப்பொழுது, அவாசகம் என்னும் அனல்— அந்தவார்த்தையென்னும் நெருப்பு, குழை தூங்குதன்செவியில் தொடாத முன்னம்—குண்டலந்தொங்கியசையுந் தன்காதில் தொடர்தற்கு முன்னமே ஏங்கினாள் இளைத்தாள் திகைத்தாள்—புலம்பியிளைத்துத்திகைத்து, மனம்வீங்கினாள் விம்மினாள் விழுந்தாள்—மனம்பொருமிவிம்மி நிலத்தின்மேல்விழுந்தனள்

ஏங்கினாள், இளைத்தாள் திகைத்தாள், வீங்கினாள், விம்மினாள் என்னு முற்றுகள் எச்சமாய் விழுந்தாள் என்னும் வினைமுற்றின் முதனிலையைத் தனித்தனிகொண்டன. 9

வஞ்சமோமகனேயுனைமாநிலம்
தஞ்சமாகநீதாங்கென்றவாசகம்
நஞ்சமோவினிநானுயிர்வாழ்வெனோ
அஞ்சுமஞ்சுமென்னாருயிரஞ்சுமால்

இ-ள். மகனே உன்னைமாநிலம் தஞ்சம்ஆக நீதாங்கு என்றவாசகம் வஞ்சம் ஓ நஞ்சம் ஓ—மகனே உன்னைநோக்கி பெரிய நிலவுலகைப் பற்றுக்கோடாக நீபாதுகாவாயென்றவார்த்தை யுன்னைவஞ்சித்தற்பொருட்டாவென்னைகொல்லுதற்பொருட்டா, நான் இனி உயிர்வாழ்வென் ஓ—உன்னைப்பிரிந்துநானுயிரோடுகூடி வாழ்வேனோ, அஞ்சும் அஞ்சும் என் ஆர் உயிர் அஞ்சும்— உன்பிரிவிற்கு அஞ்சாநிற்கும் எனது அரிய வுயிர் அஞ்சாநிற்கும் என்றனள்.

அஞ்சும் அஞ்சும் அவலப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். நஞ்சம் என்றது தனக்காதலால் என்னை கொல்லுதற் பொருட்டு. எனப்பொருள் கூறினும். 10

கையைக்கையைநெரிக்குந்தன்காதலன்
வைகுமாவிலையன்னவயிற்றினை
பெய்வளைத்தளிராற்பிசையும்புகை
வெய்துயிக்கும்விழுக்கும்புழுக்குமா

இ-ள். கையைகையை நெரிக்கும்—தனதுகையை, மற்றொருகையா னெரிப்பாள், தன்காதலன்வைகும் ஆல் இலை அன்னவயிற்றினை—தனதுபுத் திரனாகிய திருமால்தங்கிய ஆலிலையையொத்தவயிற்றை, வளைசெய்தளிர் ஆல்பிசையும்—வளையலணிந்த தளிர்போன்ற கைகளாற்பிசைவாள், புகைவெய்துயிர்கும்—புகையெழப் பெருமூச்செறிவாள், விழுங்கும் புழுங்குவாள்—அம்மூச்சை யடக்குவாள் மனம்புழுங்குவாள்.

திருமால் ஆலிலையி லறிதுயிலர்தலால் தன்காதலன்வைகுமாலிலையென்றார். புழுங்குதல் வெப்படைதல் கையைக்கையைநெரிக்கும் என்றதற்குக் கையைநெரிப்பாள் கையைநெரிப்பாள் எனக் கொள்ளலும் ஒன்று. புழுங்கும் செய்யும் என்னும் வாய்பாட்டுமுற்றாதலால் பொதுமைநீங்கிநின்ற பெண்பார் படர்க்கை வினைமுற்று புழுங்கு பகுதி, உகரக்கேடு சந்தி, உம் விகுதி. 11

நன்றுமன்னன்கருணையென்றுநகும்
நின்றமைந்தனைநோக்கிநெடுஞ்சுரத்
தென்றுபோவதென்னவெழும்இன்னுயிர்
பொன்றும்போதுற்றதுற்றதுபோலுமே.

இ-ள் மன்னன்கருணை நன்று என்று நகும்—அரசன்புத்திரனிடத்துக்கொண்டகிருபை நன்றாயிருந்ததென்று கூறிச்சிரிப்பாள், நின்றமைந்தனை நோக்கி—தன்முன்னின்ற இராமமூர்த்தியைப்பார்த்து, நெடுஞ்சுரத்து என்றுபோவதுஎன்னஎழும்—பெரியபாலைநிலத்தில் எப்பொழுதுசெல்வதென்று எழுவாள், இன் உயிர் பொன்றும்போது உற்றது—இனியஉயிர் உடலின்று நீங்குங்காலத்தில் நேரிட்ட அவத்தையை, உற்றதுபோலும்—அடைந்ததன்மையையொத்தவளாயினள்.

நகும், எழும், போலும் என்னும் வினைமுற்றுகள்பாற் பொதுமையினீங்கிப்பெண்பால்மேல் நின்றன. பொன்றும் எதிர்காலப்பெயரெச்சம் பொன்று பகுதி. 12

அன்பிழைத்தமனத்தரசற்குநீ
என்பிழைத்தனையென்றுநின்றேங்குமால்
முன்பிழைத்தவறுமையின்முற்றினோர்
பொன்பிழைக்கப்பொதிந்தனர்போலவே

இ-ள். அன்பு இழைத்தமனத்து அரசற்கு—உன்னிடத்து ஆரா அன்புகொண்டமனத்தையுடைய அரசனுக்கு, நீ என்பிழைத்தனை என்றுநின்றுஏங்கும்—நீயென்ன தவறுசெய்தாயோவென்று கூறிநின்று புலம்புவாள். முன்புஇழைத்தவறுமையின் முற்றினோர்—முன்புசெய்ததவக்குறைவால் தரித்திரத்தில் முதிர்ந்தோர், பொன்பிழைக்க பொதிந்தனர்போல—இடையிர் பெற்றபொருளையிழத்தலாலடைந்ததுன்பத்தால்விழுங்கப்பட்டவரை யொப்ப.

மிக்கவறுமையுடையோன் இடையிற் பெறும்பொருளைப்பெற்று இழந்துபெருந்துன்பத்தை யடைதல்போல மகவில்லாமல்வருந்தி இடையி லிராமமூர்த்தியைப்பெற்றுப்பின் பிரிதலால் வறுமையின்முற்றினோர் பொன்பிழைக்கப்பொதிந்தனர்போல என்றார். இது தொழில் பற்றிவந்த வுவமையணி

பிழைக்க காரணகாரியப்பொருள்மேல் நிற்றலால் இறந்தகால வினையெச்சம். பிழை பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, அ எச்ச விகுதி. 13

அறமெனக்கிலேயோவெனுமாவிநைந்
திறவிடுத்ததென்றெய்வதங்காளெனும்
பிறவுரைப்பதென்கன்றுபிரிந்துழிக்
கறவையொப்பக்கரைந்துகலங்கினாள்.

இ-ள். தெய்வதங்காள்—தெய்வங்களே, அறம் எனக்கு இல்லை ஒ என்னும்—தருமப்பயன்பாற்பொய்த்ததோவென்பாள், ஆவிநைந்து இற அடுத்தது என்என்னும்—உயிர்நைந்தழியவந்த தீவினைப்பயன் யாதோவென்பாள், பிற உரைப்பது என்—வேறேநாமெடுத்துக்கூறுவது என்ன இருந்தது, கன்றுபிரிந்த உழிகறவை ஒப்பக கரைந்துகலங்கினாள்—கன்றுபிரிந்தவிடத்துவருந்திநையும்பசுவைப்போல மனநெக்குவிட்டுக்கௌசலாதேவிநிலைகலங்கினாள்.

தெய்வதம் தகரம்பிரத்தியம். தெய்வதங்காள் விளியுருபேற்றுநின்றது. "ளஃகானுயிர்பெயர்க்கு" என்றகு—ஆல். பிறஅஃறிணைப்பலவின்பாற்படர்க்கைப்பெயர்ச்சொல் அகரவீறு தொக்கது. கறவை வினைமுதற்பொருளில் வந்த தொழிற்பெயர். கற பகுதி, வகரமெய்சந்தி, ஐ விகுதி.. 14

இத்திறத்தினிடருறுவாடனைக்
கைத்தலத்தினெடுத்தருங்கற்பினோய்
பொய்த்திறத்தினனாக்குதியோபுகல்
மெய்த்திறத்துநம்வேந்தனைநீயென்றான்.

இ-ள். அருங்கற்பினோய்—பெறுதற்கரிய கற்பினையுடையாய், இதிறத்து இன் இடர் உருவாள்தன்னை—இவ்வாறாகத் துன்பங்கூர்கின்ற தன் அன்னையை, கைத்தலத்து இன் எடுத்து—தனதுகையாலெடுத்து, மெய்திறத்து நம்வேந்தனை—உண்மைபொய்க்காத நமதரசனை, நீபொய் திறத்தினன் ஆக்குதி ஓ—(இப்போது) பொய்த்தனனென்று நீசெய்கின்றாயோ, புகல் என்றான்—சொல்லாயென்று இராமமூர்த்திகூறினார்.

கைத்தலம் ஒருசொல். 15

பொற்பிறுத்தனமெய்மைபொதிந்தன
சொற்புறத்தற்குரியனசொல்லினான்
கற்புறுத்தியகற்புடையாடனை
வற்புறுத்திமனங்கொளத்தேற்றுவான்.

இ-ன். கற்பு உறுத்திய கற்புஉடையாள்தன்னை—உலகில் கற்பிலக்கணத்தை நிலைநிறுத்திய கற்பினையுடைய கௌசலாதேவியை, மனம்கொள வற்பு உறுத்தி—மனம் நிலைபெற உறுதிப்படுத்தி, தேற்றுவான்—தெளிவிக்குமிராமமூர்த்தி, பொற்பு உறுத்தன—நற்செயல்நிலைத்தனவும், மெய்மைபொதிந்தன—உண்மை செறிந்தனவும், சொற்பு உறுத்தற்கு உரியன—சொல்லுஞ்சொற்களால் உறுதிப்படுத்தற் குரியனவுமாகிய சொற்களை, சொல்லினான்—கூறினான்.

சொற்பு தொழிற்பெயர் சொல் பகுதி, லகரத்திரிபு சந்தி, பு புடைபெயர்ச்சி விகுதி. சொல் சாதியொருமை. 16

சிறந்துதம்பிதிருவுறவெந்தையை.
மறந்தும்பொய்யிலனாக்கிவனத்திடை
உறைந்துதீருமுறுதிபெற்றேனிதிற்
பிறந்துயான்பெறும்பேறென்பதியாவதே.

இ-ள். தம்பிசிறந்து திருவுற—பரதாழ்வான் மகிழ்ச்சியிற் சிறந்துசெல்வத்தையடையவும், எந்தையைமறந்தும் பொய்யிலன் ஆக்கிஉம்—என்பிதாவைமறந்தும் பொய்கூறாதவனாகச்செய்தும், வனத்து இடைஉறைந்துதீரும் உறுதிபெற்றேன்—காட்டில்வசித்துத் தவத்தில்நாள்போக்கும் உறுதி அடைந்தேன், இதில்—இதைப்போல யான்பிறந்துபெறும்பேறு என்பதுயாவது—யான்மக்கட்பிறப்பிற் பிறந்து அடையும்பெரும்பயனென்று சொல்லப்படுவது வேறுஎது (ஒன்றுமில்லைஎன்றபடி)

யாது யாவது வகரவுயிர்மெய் தோன்றல் விகாரம், பெருபேரு முதனிலைதிரிந்த தொழிற்பெயர். எண்ணும்மைதொகுத்தல். 17

விண்ணுறுமண்ணுமிவ்வேலையுமற்றுடவே
றெண்ணும்பூதமெலாமிறந்தேகினும்
அண்ணலேவல்மறுக்கவடியனேற்
கொண்ணுமோவிதற்குள்ளழியேலென்றான்.

இ-ள். விண்உம் மண்உம் இவேலைஉம்—விண்ணுலகு மண்ணுலகும் இக்கடலும், மற்றுஉம்—மற்றுள்ளபொருள்களும், வேறுஎண்ணும் பூதம்எல்லாம் இறந்துஏகினும்—வெவ்வேறாக எண்ணப்படும் பஞ்சபூதங்களும் தத்தம் நிலைகெட்டழிந்துபோயினும், அண்ணல் ஏவல்மறுக்க—அரசனாணையை மறுக்க, அடியனேற்கு ஒண்ணும் ஓ—அடியேனுக்கியவெனக்குக்கூடுமோ, இதற்குஉள்அழியேல் என்றான்—இதற்கு மனம்வருந்தாதேயென்று தன்னன்னைக்குக்கூறினார்.

ஊழிபெயரினும் என்பார் இறந்தேகினும் என்றார். மற்று என்னும் இடைச்சொல் முன்சுட்டியவைகட்கு இனமாய்வந்தது. அழியேல் முன்னிலையொருமையெதிர்மறை ஏவல் வினைமுற்று அழி பகுதி, யகரமெய் சந்தி, எல் விகுதி. 18

ஆகினையவரசன்றனாணையால்
ஏகலென்பதியானுமுறைக்கிலென்
சாகலாவுயிர்தாங்கவல்லேனையும்
போகினின்னொடுங்கொண்டனையும்போகென்றாள்.

இ-ள். ஐய—ஐயனே, ஆகின்—ஆனால், அரசன்தன் ஆணையால் ஏகல் என்பது—அரசனாணையின்படிச்செல்லுதலொழிக என்பதை, யான்உம்உரைக்கிலென்—நானுங்கூறேன், சாகலாக உயிர்தாங்க வல்லேனைஉம்—கேட்டுச்சாகாத உயிரைசுமக்கவல்ல என்னையும், போகின்—நீ காட்டிற்குச்சென்றால், நின்னொடுஉம் கொண்டனைபோகு என்றாள்—உன்னோடும் அழைத்துக்கொண்டு செல்லாய் என்றுகூறினாள்.

ஏகல் எதிர்மறைவியங்கோள் வினைமுற்று ஏகுபகுதி, உகரக்கேடுசந்தி, அல்வியங்கோள்விகுதி அல் எதிர்மறையேவல் விகுதியாகக்கொண்டு ஏகா தேயெனப்பொருள்கொள்ளலும் ஒன்று. கொண்டனைமுன்னிலையொருமை வினைமுற்று எச்சத்தின்மேல் நின்றது. போகுமுதனிலைத் தனிவினை யாதலால் முன்னிலையேவல் வினைமுற்றின்மேல் நின்றது. 19

என்னைநீங்கியிடர்க்கடல்வைகுறும்
மன்னர்மன்னனைவற்புறுத்தாதுடன்
துன்றுகானந்தொடரத்துணிவதோ
அன்னையேயறம்பார்க்கிலையாமென்றான்.

இ-ள். அன்னையே தாயே, என்னைநீங்கி இடர்கடல் வைகுறும்மன்னர் மன்னனை—என்னைப்பிரிந்து துன்பக்கடலில் அழுந்திய அரசனை வற்புறுத்தாது—மனந்தெளிவிக்காது, உடன் துன்றுகானம் தொடரதுணிவது ஓ அறம்—என்னுடன் வெப்பமிக்ககாட்டில் தொடர்ந்துவரத் துணிவதோ தருமம். பார்க்கிலைஎன்றான்—நீ அத்தருமத்தைநோக்கிலையென்று கூறினான்.

அறம் அரசனைத்தேற்றுதல். ஆம்கட்டுரைச்சுவைப்பொருள் படநின்ற இடைச்சொல். 20

வரிவிலெம்பியிம்மண்ணரசாயவற்
குரிமைமாநிலமுற்றபின்கொற்றவன்
திருவினீங்கித்தவஞ்செயுநாளுடன்
அருமைநோன்புகளாற்றுதியாமன்றே.

இ-ள். வரிவில் எம்பி—கட்டமைந்த வில்வினையேந்திய பரதாழ்வான், இமண் அரசு ஆய்—இந்நிலவுலகிற்கரசனாய், அவற்கு உரிமைமாநிலம் உற்றபின் அவனுக்கு உரிமையாகப்பெரிய இந்நிலவுலகு கைவசப்பட்டபின், கொற்றவன் திரு இன்நீங்கி தவஞ்செயும்நாள்—அரசன் அரசச்செல்வத்தினின்று நீங்கித்தவஞ்செய்யுங்காலத்தில், உடன் அருமைநோன்புகள் ஆற்றுதி—அவனோடு நின்று செய்தற்கரிய விரதங்களைச்செய்வாய்.

ஆம் அன்று ஏ, அசைநிலைகள். 21

சித்தம்நீதிகைக்கின்றதென்றேவரும்
ஒத்தமாதவஞ்செய்துயர்ந்தாரன்றே
எத்தனைக்குளவாண்டுகளீண்டவை
பத்துநாலும்பகலல்லவோவென்றான்.

இ-ள். தேவர்உம் ஒத்தமாதவஞ்செய்து அகன்றுஏஉயர்ந்தார்—தேவர்களும் தத்தம்நிலைக்கொத்த பெரியதவஞ்செய்தல்லவா வுயர்வடைந்தார்கள், ஆண்டுகள் எத்தனைக்குஉள—(காட்டில்வசிக்கும்) வருடங்கள் எவ்வளவுநாளைக்கு உள்ளன, அவைஈண்டுபத்தும் நாலும்பகல்அல்ல ஓ—அவ்வருடங்கள் இப்பொழுது பதினான்கும் பதினான்குநாளல்லவா (அவ்வாறிருக்க) நீசித்தம் திகைக்கின்றதுஎன்—நீமனநிலைகலங்குதல்யாது, என்றான்என்றுகூறினார்.

பதினான்குவருடமுஞ் சிறிதுபொழுதென்பார் பண்புத்தொகை யாகக் கூறாது. எண்ணும்மை தந்துபத்துநாலும் என்றார். 22

முன்னர்கோசிகனென்னுமுனிவரன்
தன்னருட்டலைதாங்கியவிஞ்ஞையும
பின்னரெய்தியபேறும்பிழைத்தவோ
இன்னம்நன்றவர்க்கேவினைசெய்தலே

இ-ள். முன்னர் கோசிகன் என்னுமுனிவரன் தன்னருள்—முன்பு கோசிகனென்னும் விசுவாமித்திரமுனிவரது பணியை, தலைதாங்கியவிஞ்ஞை உம்—தலைமேற்கொள்ளுதலால் வந்தகல்வியும், பின்னரெய்திய பேறுஉம்பிழைத்தஒ— அதனாற்பின்படைந்த பயனுந்தவறினவோ (இல்லைஆகலால்) அவர்க்கு எவினைசெய்தல் இன்னம்நன்றுஎ—அவர்களுக்கு வவினைவற்றைச்செய்தல் இன்னமும்நல்லதே.

பணி அருளுதல் ஆகலால் பணியென்றும். விஞ்ஞையென்றது அவருபதேசித்த மந்திரங்கள். அவற்றால்வந்த பயன் தாடகைமுதலியோரைவென்றதும் சீதாப்பிராட்டியைத்திருமணமுடிந்ததும். இன்னம்இனியென்னும் இடைச்சொற்றிரிபு. ஏகாரம்பொருத்தமில் புணர்ச்சி, நன்று என்பதனிறுதியில் நிற்றற்குரித்தாதலால். தாங்கிய காரணப்பொருளில்வந்த இறந்தகாலவினையெச்சம். 23

மாதவர்க்குவழிபாடிழைத்தரும்
போதமுற்றிப்பொருவருவிஞ்ஞைகள்
ஏதமற்றனதாங்கியிமையவர்
காதல்பெற்றுநன்காவாக்காண்டியால்.

இ—ள். மாதவர்க்குவழிபாடு இழைத்து—பெரிய தபோதனர்களுக்குத் தொண்டுசெய்து, அரும்போதம்முற்றி—அகறுதற்கரிய ஞானத்தில் முதிர்ந்து, எதம்அற்றன பொருவருவிஞ்ஞைகள்தாங்கி—குற்றமற்ற ஒப்பில்லாத மந்திரோபதேசங்களை மேற்கொண்டு, இமையவர்காதல் பெற்று நன்கு ஆவாகாண்டி—தேவர்களன்புபெற்று நான்சுகமாக இங்குவரக்கடவீர் காண்பாய்.

தேவர்களன்பாவது அவர்களுக்குள்ள பகைமையைநீக்குதலாலவர்செய்யும் அன்பு. நன்காஒருசொல். காண்டி முன்னிலையொருமை யெதிர்காலவினைமுற்று காண்பகு, துசாரியை, தகரத்திரிபும் உகரக்கேடும் சந்தி.இவிகுதி.

மகரவேலைமண்டொட்டவண்டாடுதார்ச்
சகரர்தாதைபணிதலைநின்றதும்
புகரில்யாக்கையினின்னுயிர்போக்கிய
நிகரின்மாப்புகழ்நின்றதன்றோவெனு.

இ-ள். மகரம்வேலை — மகரமீனுலவுங்கடலாக, மண்தொட்டவண்டு ஆடுதார்சகரர்—நிலவுலகத்தைத்தோண்டியவண்டுகள் வசிக்குமாலையயணிந்தசகரர்கள், தாதைபணிதலைநின்று—தமது பிதாபணித்தபணியில்நின்று,தம்புகர்இல்யாக்கையின் இன்உயிர்போக்கியநிகர்இல்மாபுகழ்—தமது குற்றமில்லாத உடலினின்று இனியவுயிரைப்போக்குதலால் வந்த ஒப்பில்லாத பெரியகீர்த்தி, நின்றது அன்றுஒ என்று—நிலைபெற்றதல்லவாவென்றுகூறி.

*அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.*

பிறியார்பிறிவேதென்னும்பெரியோய்தகவோவென்னும்
நெறியோவடியேம்நிலைநீநினையாநினைவேதென்னும்
வறியோர்தனமேயென்னுந்தமியேன்வலியேயென்னும்
அறிவோவினையோவென்னுமரசேயரசேயென்னும்

இ-ள். பிறியார் பிறிவு ஏதுஎன்னும்—ஒருகணமும் பிறியாதவர் இப்போது பிரிதல்யாது காரணம்என்பாள், பெரியோய்தகவுஓஎன்னும்—எல்லா நற்குணங்களிலும் சிறந்தோயிது தகுதியாவென்பாள், நெடுஓ—இதுமுறையா, அடியேம்நிலைநீநினையாதநினைவு ஏதுஎன்னும்—அடியேம்நிலைமையை நீநினையாதஎண்ணம்யாதுகாரணம்என்பாள், வறியோர்தனம்ஏஎன்னும்—வறியவர்பெற்றதனம் போல்வாயென்பாள், தமியேன்வலியேஎன்னும்—உன்னையன்றித்துணையில்லாதவெனதுவலிமையேயென்பாள், அறிவுஓவினைஓஎன்னும்—(ஒன்றும்வாய்திறவாதிருப்பது) அறிவோ (அடியேன்செய்த) தீவினைப்பயனோ வென்பாள், அரசே அரசே என்னும் — அரசனே யரசனே யென்பாள்.

ஓகாரமும் ஏகாரமு முறைபிடுதற்பொருளில்வந்தன, பிறியார்லகரம் ளகரமாதல்போல ரகரம் றகரமாக வருதல்தமிழ்வழக்கு. 31

இருளற்றிடவுற்றொளிருமிரவிக்கெதிருந்திகிரி
உருளத்தனியுய்த்தொருகோனடையிற்கடைகாணுலகம்
பொருளற்றிடமுற்றுறுமப்பகலிற்புகுதற்கென்றோ
அருளக்கருதிற்றிதுவோவரசர்க்கரசேயென்னும்.

இ-ள். அரசர்க்கு அரசே—அரசர்க்கரசனே, இருள்அற்றிட உற்றுஒளிரும் இரவிக்குஎதிரும்—அந்தகாரம் ஒழியஉதித்து விளங்கும்சூரியனுக்கொத்த, திகிரிஉருளதனிஉய்த்து—ஆக்ஞைசக்கரஞ்செல்லத் தனியேசெலுத்தி, ஒருகோல்நடையில் கடைகாண்உலகம்—ஒப்பில்லாசெங்கோல்நடத்துதலால் நீமுடிவுகாணுமுலகமானது, பொருள் அற்றிடமுற்றுறும்அபகலில்—எல்லாப்பொருளுமழிய முடியுமந்த ஊழிகாலத்தில். புகுதற்குஎன்றுஓ—புகவேண்டுமென்றோ, இது அருளகருதிற்று என்னும் (இராமமூர்த்திக்கு) இவ்வரசியல்தரக்கருதியது என்றுபுலம்புவாள்.

திக்குப்பரியந்தம் செங்கோல்செல்லநடத்துவோனென்பாள் ஒருகோனடையிற் கடைகாணுலகம் எனவும் இராமமூர்த்திக்கு முடிசூட்டக்கருதியது உலகமுற்றுமழியக்கருதியோவென்பாள் பொருளற்றிடமுற்றுறுமப்பகலிற் புகுதற்கென்றோ அருளக்கருதிற்றெனவுங்கூறினாள். நடைநடத்தல்என்னும் பொருள்மேல்நிற்றலால் தொழிற்பெயர்நட பகுதி, ஈறுகெடுதல் சந்தி, ஐபுடைபெயர்ச்சிவிகுதி.

திரையார்கடல்சூழுலகின்றவமேதிருவின்றிருவே
நிரையார்கலையின் கடலேநெறியார்மறையின்னிலையே
கரையாவயர்வேனெனைநீகருணாலயனேயெனிறென்
றுரையாவிதுதானழகோவுலகேழுடையாயென்னும்.

இ-ள். திரைஆர்கடல்சூழ் உலகின்தவம்ஏ—அலைநிறைந்தகடல்சூழ்ந்த டலகினர்தவப்பேறே, திருஇன் திருவே—செல்வத்திற் கோர்பெருஞ்செல்வமே, நிரைஆர்கலையின்கடலே—முறையாக நிறைந்தநூற்கடலே, நெறிஆர் மறையின்நிலையே—நன்னெறிநிரம்பியவேதத்தினிலைமையே, கரையாஅயர்வேன்என்னை—மனங்கரைந்து சோருமென்னை, நீகருணாலயனேஎன்னின்—நீ கிருபைக்கு இருப்பிடமானவனானால், உலகுஏழ் உடையாய்—ஏழுலகங்களையுமுடையவனே, ஒன்றுஉரையாத இதுதான்அழகுஓஎன்னும்—ஒருசெப்தியையும் வாய்திறவாத இச்செய்கைதானழகோ வென்றுபுலம்புவாள். 33

மின்னின்றனையமேனிவெறிதாய்விடநின்றதுபோல்
உன்னுந்தகைமைக்கடையாவுறுநோயதுகின்றுணரான்
இன்னென்றுரையானென்னையிதுதான்யாதென்றறியேன்
மன்னன்றகைமைகாணவாராய்மகனேயென்னும்.

இ-ள். மின்நின்றால் அனையமேனி வெறில்ஆய்—மின்னல்நிலைபெற்றாலொத்த வுடம்புவெறிதாக, விடம்நின்றதுபோல்—பாம்பின்விஷமேறிநின்றதுபோல,உன்னும் தகைமைக்கு அடையாமல் உறுநோய்உறுகின்றதுஉணரான்—(பிறர்இன்னநோயென்று)கருதுந்தன்மைக்கு அமையாமல்மிக்கநோய்தானடைகின்றதையறியான், இன்என்றுஉரையான்—இன்னதென்றுவாய்திறந்துகூறான், இதுதான்என்னை—இதுஎன்ன, யாதுஎன்றுஅறியேன்—வந்தது இன்னதென்றறியேன், மன்னன்தகைமைகாண மகனேவாராய் என்னும்—அரசனடைந்த தன்மையைக் காணமகனே வருவாயென்றுபுலம்புவாள்.

புகழ்ந்தார் என்பது "புகழ்ந்திருமல்லரோ" எனவருதல்போல உறுகின்றதுஎன்னுந்தெரிநிலை வினைமுற்றும் இன்னது என்னுங்குறிப்பு வினைமுற்றும் ஈறுகெட்டுநிற்றல் செய்யுள்முடிபெனக்கொள்க. ஆய்செயவெனெச்சத்திரிபு. 34

இவ்வாறழுவாளிரியற்குரல்சென்றிசையாமுன்னம்
ஒவ்வாதொல்லாதென்றொளிவாணிருபர்முனிவர்
அவ்வாறறிவாயென்னவந்தான்முனிவன்னவனும்
வெவ்வாளரசன்னிலைகண்டென்றும்விளைவென்றென

இ-ள். இஆறு அழுவாள் இரியல்குரல்சென்று இசையாதமுன்னம்—இவ்வகையாகவழுங் கௌசலாதேவியின் கெடுதிக்குரிய குரல்போய்க் காதில் அடைதற்குமுன்னமே, ஒளிவாள் நிருபர்முனிவர்—ஒளிவாய்ந்தவாளையேந்திய அரசருமுனிவரும், ஒவ்வாதுஒல்லாதுஎன்று—(இம்மங்கலச்செய்கைக்கு) பொருந்தாதே கூடாதேயென்றுகூறி, அஆறுஅறிவாய் என்ன—அங்கு நிகழ்ந்ததை யறிவாயென்றுகூற, முனிவன்வந்தான்—வசிட்ட முனிவர்வந்தார், அவன்உம் வெம்வாள்அரசன்நிலைகண்டு—அம்முனிவரும் வெய்யதாளையேந்திய அரசனது நிலைமையைப்பார்த்து, என்னும்—நிகழ்ந்ததுயாதாம், விளைவு என்று உன்னு—விளைந்தது என்னவென்றுகருதி.

வெம்மைவாள் ஈறுகெட்டுமுன்னின்ற மெய்வகரமெய்யாகத் திரிந்து வெவ்வாளென வந்தது ஆம் கட்டுரைச்சுவைப்பொருள் படநின்ற இடைச்சொல். 35

இறந்தானல்லனரசனிறவாதொழிவானல்லன்
மறந்தானுணர்வென்றுன்னாவன்கேகயர்கோன்மங்கை
துறந்தாடுயரந்தன்னைத்துறவாதொழிவாளிவளே
பிறந்தார்பெயருந்தன்மைபிறரா லறிதற்கெளிதோ.

இ-ள். அரசன் இறந்தான் அல்லன்—அரசன்செத்தவனுமல்ல, இறவாது ஒழிவான் அல்லன்—இனிச்சாகாதிருப்பவனுமல்ல, உணர்வுமறந்தான் என்றுஉன்னா—அறிவிழந்த வசமானானென்றுகருதி, வன்கேகையர்கோன் மங்கை துயரம்தன்னை துறந்தாள்—வலியகேகையநாட்டரசன் புத்திரியாகிய கைகேசி துன்பத்தை நீக்கினாள், இவளே துறவாது ஒழிவாள்—இக்கௌசலாதேவியே துன்பத்தினின்றுநீங்காதிருக்கின்றாள், பிறந்தார்பெயரும்தன்மை—மக்கட்பிறப்பாய்ப் பிறந்தவர்கொண்டமனமகிழ்ச்சியை, பிறர்ஆல்அறிதற்குஎளிது ஒ—மற்றையோரால்வரையறுத்தறிதற்குஎளிதா(அரிதென்றபடி).

வன்கேகயர் உரிச்சொற்றொடராதலால் 'இடையுரிவடசொலின்" என்றது—ஆல் லகரமெய் னகரமெய்யாகத்திரிந்தது. 36

என்னாவுன்னாமுனிவனிடராலழுவாள்துயரம்
சொன்னாளாகாளெனமுன்றொழுகேகயர்கோன்மகளை
அன்னாயுரையாயரசனயர்வானிலையென்னென்னத்
தன்னானிகழ்ந்ததன்மைதானேதெரியச்சொன்னாள்.

இ-ள். என்னா உன்னா—என்றுகருதி, முனிவன் இடரால் அழுவாள் துயரம்சொன்னாள் ஆகாள்என—வசிட்டமுனிவர் துன்பத்தாலழுங்கௌசலாதேவி தன் துயரத்தைக்கூறாதொழிந்தாளென்று, முன்தொழுகேகையர் கோன்மகளை—தம்முன்னேவந்து வணங்கியகேகையநாட்டரசன் புத்திரியாகிய கைகேசியைநோக்கி, அன்னாய்உரையாய்—அன்னையேகூறாய், அரசன் அயர்வான்—அரசனுயிர்சோருகின்றான், நிலைஎன்என்ன—அவனிலையென்னவென்றுவினவ, தன் ஆல் நிகழ்ந்ததன்மைதானே தெரியச்சொன்னாள்—தன்னால் நடந்தசெய்தியைத்தானே தெரியக்கூறினாள்.

சொன்னாளாகாள் ஒருசொல். 37

சொற்றாள்சொற்றாமுன்னஞ்சுடர்வாளரசர்க்கரசைப்
பொற்றாமரைபோற்கையாற்பொடிசூழ்படிநின்றெழுவிக்
கற்றாயயரேலவளேதரும்நின்காதற்கரசன்
றெற்றேசெயலின்றொழிநீயென்றென்றிரவாநின்றான்.

இ-ள். சொற்றான்—கூறினான், சொற்று ஆம்முன்னம்—அவள்சொல்வதற்குமுன்னமே, சுடர்வாள் அரசர்க்கு அரசை—விளங்கும் வாளையேந்திய அரசாளுக்கரசனை, பொன்தாமரைபோல்கையால்—பொன்னிறமமைந்ததாமரைபோன்ற தங்கைகளினால், பொடிசூழ்படிநின்று எழுவி—துகளமைந்த தரையினின்றெழுப்பி, கற்றாய் அயரேல்—பலகலையுங்கற்றவனே நீசோராதே,

அன்றவ அவள் ஏஙின்றகதற்கு அரசுதரும்—நான்கூறும்அப்பொழுதே அக் கைகேசியேஎன்புத்திரனுக்குஅரசியல்தருவாள், செயலஎற்று—உன்செயல் யாது, நீ இன்று ஒழிஎன்றுஎன்று இரவாநின்றான்—அத்துன்பத்தை நீயிப் பொழுதொழிவாயென்றுகுறையிரந்தார்.

சொற்றுதொழிற்பெயர் சொல்பகுதி, லகரமும்தகரமும் றகரமாகத்திரி தல்சந்தி, து புடைபெயர்ச்சிவிகுதி. சொற்றான் இறந்தகால வினைமுற்று சொல் பகுதி, றகரமெய் இடைநிலை, லகரம்றகரமாகத்திரிதல் சந்தி, ஆன் விகுதி. எழுவி இறந்தகாலவினையெச்சம்எழு பகுதி, வகரமெய்சந்தி, இ எச்சவிகுதி. எற்று என்பதனிறுதியிலுள்ள ஏகாரத்தை அன்று என்பதனோடு கூட்டுக. இரவாநின்றான் நிகழ்காலத்தில்வந்த இறந்தகால வினைமுற்று. 38

சீதப்பனிநீரளவித்திண்காலுதவுந்தண்கால்
போதத்தளவேதவழ்வித்தின்சொற்புமலாநின்றான்
ஓதக்கடனஞ்சனையாளுரைநஞ்சொருவாறவியக்
காதற்புதல்வன்பெயரேபுகல்வானுயிருங்கண்டான்.

இ-ள். சீதப்பனிநீர் அளவி—குளிர்ந்தபனிநீரிற்கலந்து, திண்கால்—திண்ணிய காம்பினையுடைய விசிறி, உதவும் தண்கால்—தரும் குளிர்ந்த காற்றை, போது அடவுதவிழ்வித்து—புகுதுமளவும் தவழச்செய்து, இன் சொல்புகலாநின்றான்—இனியசொற்களைக்கூறும்வசிட்டமுனிவர் தஞ்சொல் லாகிய மருந்தால், ஓதம்கடல் நஞ்சு அனையாள் உரை நஞ்சு ஒருஆறுஅவிய —அலைகளையுடையகடலிற்றோன்றிய நஞ்சினையொத்த கைகேசியின் சொல் லாகியஎறிய நஞ்சுஒருவகைகெட்டழிய, காதல்புதல்வன்பெயரே புகல்வா ன்உயிர்உம்கண்டான்—விரும்புதற்குரிய தனது புத்திரனாகியஇராமமூர்த்தி யின்பெயரையே கூறுமரசன் தனதுயிரையுஞ்சிறிதுபெற்றான்.

திண்கால்காற்றையுதவும் விசிறிக்கானமையால் விடாதவிலக்கணை கால் காம்பு. புகுதுஎன்பதுபோது எனநின்றது இலக்கணமரூஉ. 'அத்து வேண் டாவழிச்சாரியை. அவள்சொல்லை நஞ்சாகவுருவகஞ்செய்து முனிவர்சொல் லை மருந்தாகவுருவகஞ்செய்யாமையால் ஏகதேசவுருகவணி. 39

காணுவையாவினிநீயொழிவால்கழிபேரவலம்
ஆணுயகனேயினிநாடாள்வானிடையூறுளதோ
மாணுவுரையாடானேதருமாமழையேயனையான்
பூணுதொழிவானெனில்யாமுனமேயபொன்றேமென்றான்.

இ-ள். மாணுதவரையாள்தானே தரும்—மாட்சிமைப்படாத சொல் லையுடைய கைகேசிதானேயுன்மகனுக்கு அரசியலைத்தருவாள், ஆண்நாயக ன்எ இனி நாடுஆள்வான்—ஆண்மையையுடைய இராமமூர்த்தியே இனிநா டாள்வான் இடையூறுஉளதுஒ—வேறுதடையுண்டோ (இல்லைஆதலால்) ஐ யா இனி நீகாணு—ஐயனே இனி நீ அவ்விராமமூர்த்தியைப்பார்த்து. கழிபேர அவலம் ஒழிவாய்—மிக்கபெருந் துன்பத்தை யொழியாநிற்பாய், மாமழை எ அனையான் பூணுது ஒழிவான் என்னில்—கரியமேகத்தையே யொத்த அவ்வி

ராமமூர்த்தி அவ்வரசியலைப்பூணாது காடுசெல்வானாகில், யாம்உளம்ஓ—நாமுயிரோ டிருப்போமா, பொன்றேல்என்றான்—நீயுயிர்விடாமல்தயென்று முனிவர்கூறினார்.

பொன்றேல் எதிர்மறையேவலொருமை வினைமுற்று பொன்று பகுதி, உகரக்கேடு சந்தி, எல் விகுதி. 40

என்றம்முனிவன் றன்னைநினையாவினையேனினியான்
பொன்றும்மளவில்லவனைப்புனைமாமகுடம்புனைவித்
தொன்றும்வனமென் றன்னுவண்ணஞ்செய்தென்னுரையும்
குன்றும்பழிபூணமற்காவாய்கோவெயென்றான்.

இ—ள். என்ற அம்முனிவன் தன்னைநினையா—என்றுகூறிய அந்தவசிட்டமுனிவரைக் கருதிநோக்கி, வினையேன் யான்இனிபொன்றும் அளவு இல்—தீவினையேனாகிய நான்இனி உயிர்விடுமளவில், அவனைபுனைமாமகுடம் புனைவித்து—அந்தஇராமமூர்த்திக்குச் சூட்டும் பெரியமுடியைச்சூட்டி, ஒன்றும்வனம் என்று உன்னாத வண்ணஞ்செய்து—சிறிதுங்காட்டிற்குச்செல்வானென்றுகருதாதபடிசெய்து என்உரைஉம் குன்றும்பழிபூணமல்—எனதுவார்த்தையும் குறைவிக்கும் பழிச்சொல்லையும் பூணாமல், கோவைகாவாய் என்றான்—முனிவர்களுக்கு அர[illegible]காப்பாயென்ற ரசனிரந்தான்.

குன்றும்முதனிலை திரியாதுவந்த பிறவினைப்பெயரெச்சம். 41

முனியும்முனியுஞ்செய்கைக்கொடியாண்முகமேமுன்னி
இனியுன்புதல்வற்கரசும்மேனையோர்க்கின்னுயிரும்
மனுவின்வழிநின்கணவற்குயிரும்முதவிவசைதீர்
புனிதம்மருவும்புகழேபுனையாய்பொன்னேயென்றான்.

இ—ள். முனிஉம்—வசிட்டமுனிவரும், முனியும் செய்கைகொடியாள்முகம்எமுன்னு—யாவருமருவருக்குந் தீச்செயலையுடைய கொடியகைகேசியினிடத்தேயடைந்து, பொன்னே—பொன்போல்பவளே, இனிஉன்புதல்வற்கு அரசுஉம்—இனியுனது புத்திரனாகியஇராமமூர்த்திக்கு அரசியலையும் எனையோர்க்கு இன்உயிர்உம்—மற்றையோர்க்கு இனியவுயிரையும், மனுஇன்வழிநின் கணவற்குஉயிரும்உதவி—மனுச்சக்கரவர்த்தியின் வழியில்வந்த உன்நாயகனுக்கு உயிரையுந்தந்து, வசைதீர்புனிதம்மருவும் புகழேபுனையாய் என்றான்—குற்றத்தினின்று நீங்கியபுனிதமைந்த கீர்த்தியையே யாபரணமாகவணிவாயென்றுகூறினார்.

முன்னி இறந்தகாலவினையெச்சம் முன்பகுதி. 42

மொய்ம்மாண்வினைவேரறவென்றொழிவான்மொழியாமுன்னம்
விம்மாவழுவாளரசன்மெய்யிற்றிரிவானென்னில்
இம்மாவுலகத்துயிரோடினிவாழ்வுகவேனென்சொல்
பொய்மாணமற்கின்றேபொன்றுதொழிவேனென்றாள்.

இ—ள். மொய்ம்மாண் வினைவேர் அறவென்றொழிமான்—நெருங்கியமாட்சிமைப்பட்ட இருவினையும் வேரோடறவென்ற வசிட்டமுனிவர், மொழியாமுன்னம்(இவ்வாறு)சொல்லுவதற்குமுன்னமே, விம்மா அழுவாள்—விம்

மியழுங் கைகேசி, அரசன்மெய்இல் திரிவான்என்னில்—அரசன்உண்மையி னின்றும் வேறுபடுவானாகில், இமாஉலகத்து உயிரோடுஇனிவாழ்வு உகவே ன்—இந்தப்பெரியநிலவுலகில் இனியுயிரோடு கூடிவாழேன், என்சொல்பொ ய்மாறுமற்கு—எனதுவார்த்தை பொய்க்காமைக்கு, இன்றேபொன்றுது ஒழியேன்என்றாள்—இப்பொழுதே யிறவாமலொழியேனென்று கூறினாள்.

வென்றொழிவான் துணிவுப்பொருளில் வந்த எதிர்காலவினை முற்று வென்றொழிபகுதி. முன்னர்க்காண்க. 43

கொழுநன்றுஞ்சும்மெனவுங்கொள்ளா துலகம்மெனவும்
பழிநின் றுயரும்மெனவுமபாவம்முளதாமெனவும்
ஒழிகின் றிலேயன்றியுமொன் றுணர்கின் றிலேயானினிமேல்
மொழிகின் றனவென்னென் றுமுனியும்முறையன்றென்பான்.

இ-ள். முனியும்—வசிட்டமுனிவரும், கொழுநன் துஞ்சும் எனஉம்—தனது கணவனிறப்பானென்றும், உலகம் கொள்ளாது எனஉம்வுலகிலுள் ளோர் இசையாரென்றும் பழிநின்று உயரும்எனஉம்—பழிச்சொல்நிலைபெற் றோங்குமேயென்றும், பாவம் உளது ஆம்என உம்—பெரும்பாவமுண்டா மென்றும், ஒழிகின்றிலை—உன்தீச்செயலினின்றும் நீயேஒழியாநின்றிலை, அன்றிஉம் ஒன்று உணர்கின்றிலை—அதுவல்லாமலும் பிறர்கூறும் வார்த்தை யையுஞ்சிறிது மறிந்திலை, மேல்இனி யான்மொழிகின்றன என்என்று— இனிநான்கூறுஞ் சொற்கள் என்னவென்றும், முறையன்று என்பான்—(இ னிக்கூறுவது)முறையல்ல வென்றுங்கருதுவான். 44

கண்ணோடாதேகணவனுயிரோடிடர்காணாதே
புண்ணோடோடுங்கனலோவிடமோவென்னப்புகல்வாய்
பெண்ணோதீயோமாயாப்பேயோகொடியாய்நீயிம்
மண்ணோடுன்னோடென்னாம்வசையோவலிதேயென்றான்.

இ-ள், கொடியாய்—கொடியவளே, கண்ணோடாது—உயிர்க ளிட த்துத் தாட்சிணியஞ்செய்யாமலும், கணவன்உயிர் ஓடுஇடர்காணாது—தன்னா யகனுயிரோடு துன்பத்தைக்காணாமலும், புண் ஓடுஓடும் கனல் ஓவிடம் ஓஎன் னபுகல்வாய்—புண்ணிற்சென்று பாயும் நெருப்போ விஷமோவென்று கரு தப்பேசுகின்றாய்(ஆதலால்)நீபெண்ஓ, தீஓமாயாதபேய் ஓ—நீ பெண்வடிவு தானா அல்லது நெருப்பா கெடாதபேய்தானா, இமண் ஓடு உன் ஓடு என்ஆம் —இம்மண்ணுலகில் உன்னோடுஆவதுஎன்னவிருக்கின்றது, வசை ஓ வலிது ஓ என்றான்—உனக்கு உண்டானபழிச் சொல்லோ பெரிதென்றுகூறினான்.

உலகினருயிர்வாழார் என்பார் கண்ணோடாதேயெனவும், உலகிலுள்ள துனக்கு வசையே என்பார் மண்ணோடுன்னோடென்னாமெனவுங் கூறினார். எழனுருபுநிற்குமிடத்து மூன்றனுருபுநிற்றலால் உருபுமயக்கம். 45

வாயான்மன்னன்மகனேவனமேகென்றுமுன்னம்
நீயோசொன்னயவனோநிமிர்கானிடைவெங்நெறியில்
போயோபுகலோதவிரான்புகழோடுபிரைச்சுடுவெந்
தீயோநின்போழ்தீயாருளரோசெயலென்னென்றான்.

இ—ள். மன்னன் மகனைவாய்ஆல் எஅம்எகு என்றுமுன்னம் நீஒசொன்றாய்—அரசன்தனது புத்திரனைகாயினுல் காட்டிற்குச்செல்லு என்றுகூறுதற்குமுன்னமே நீயோபோவென்றுகூறினாய், அவன் ஒஙிபிர்கான் இடைவெங்நெறியில் போயோ புகலோதவிரான்—அந்த இராமமூர்த்தியோ கொடுமைமிர்ந்த காட்டில் வெம்மைவாய்ந்த வழியில்சென்று புகுதலோநீங்கான், புகழ் ஓடுஉயிரை சுடுவெந்தீயோ—நீஉனக்குள்ள கீர்த்தியோடு கணவனுயிரையுஞ் சுடுங்கொடியநெருப்போ, நின்போல்தீயார்உளர் ஓ செயல் என்என்றான்—உன்னைப்போலக் கொடியவருலகில் வேறுண்டோ இனிச்செய்யுஞ்செய்கைவேறென்னவென்று வசிட்டமுனிவர்கூறினர்.

ஓகாரம்தெரிநிலைப்பொருட்டு 46

தாவின் முனிவன் புகலத்தளராநின்றமன்னன்
நாவில்நஞ்சம்முடையநங்கைதன்னைநோக்கி
பாவிநீயேவெங்கான்படர்வாயென்றென்னுயிரை
ஏவினாயோவவனும்மேகினானோவென்றான்.

இ—ள். தா இல்முனிவன்புகல—கெடுதலில்லாத வசிட்டமுனிவர்கூற, தளராநின்றமன்னன் — மனந்தளருமரசன், நா இல்நஞ்சம் முடையநங்கைதன்னைநோக்கு—நாவில்விஷத்தையுடைய கைகேசியைப்பார்த்து, பாவிநீஏ—வெங்கான்படர் வாய்என்று என்உயிரைஏவினாயோ—கொடியகாட்டிற்செல்வாயென்று எனதுயிராகிய இராமமூர்த்தியையேவினாயோ, அவன்உம் ஏகினானோஎன்றான்—அவனுஞ்சென்றானோவென்றுகூறி

இதுமுதல் ஆகானுரிமைக்கென்றான் என்பதுகாறும் ஒருதொடராதலால் என்றான்என்பதுமுற்றெச்சம் 47

கண்டேனெஞ்சங்கனிவாய்க்கனிவாய்விடநாநெடுநாள்
உண்டேனதனானீயென்னுயிரைமுதலோடுண்டாய்
பண்டேயெரிமுன்னுன்னைப்பாவிதேவியாகக்
கொண்டேனல்லேன்வேறோர்கூற்றந்தேடிக்கொண்டேன்.

இ—ள். கண்டேன் நெஞ்சம் கனிவாய் கனிவாய்விடம் நான்நெடுநாள் உண்டேன்—உன்னைப்பார்த்துமனங்கனிந்து கோவைக்கனிபோன்ற உன்வாயிலுள்ளவிஷத்தை நான்நெடுநாளாய்ப்பருகிவந்தேன், அதனால்நீஎன் உயிரைமுதலோடு உண்டாய்—அதனால்நீயென்னுடைய வுயிரைவேரோடறப்பருகினாய், பாவிபண்டு உன்னைஎரிமுன்தேவி ஆகக்கொண்டேன் அல்லேன்—பாவீ உன்னை முன்பு அக்கினிமுன் மனைவியாகக்கொண்டிலேன், வேறு ஓர்கூற்றம் தேடிக்கொண்டேன்—என்னுயிரைக் கொள்ளை கொள்ள வேறொரு இயமனைக் வுன்னைத்தேடினேன்.

நாள்தோறும் விடம்பருகினேனுயிர் அவ்விடத்தால் கழிதலுண்மையால் அதனானீயென்னுயிரை முதலோடுண்டாயெனவும், தன்னுயிரைக்கொள்ளை கொண்டதனால் தேவியாகக்கொண்டேனல்லேன் வேறோர் கூற்றந் தேடிக்

கொண்டேனெனவுங்கூறினன். பாவீஉயர்திணைப்பெயரில் இகரவீறு விளியுருபேற்றது. தேவீநீட்டம்விகாரம் கண்டேன்முற்றெச்சம். 49

விழிக்குங்கண்வேறில்லாவெங்கானென்கான்முளையைச்
சுழிக்கும்வினையாலேகச்சூழ்வாயென்னைப்போழ்வாய்
பழிக்கும்நாணாய்மாணாப்பாவிபினியென்பலவுன்
கழுத்தின்னாணுன்மகற்குக்காப்பின்னாணென்றான்.

இ-ள். விழிக்கும்கண்வேறுஇல்லாத என்கான்முளையை—எனக்குவிழித்துப்பார்க்குங் கண்கள்தன்னையன்றி வேறில்லாதஎனதுபுத்திரனை, வெங்னேக—கொடியகாட்டிற்செல்ல, சுழிக்கும்வினையால்சூழ்வாய்—வருத்துந்தீவினையாலாலோசிப்பாய், என்னைபோழ்வாய் — அதனாலென்னுயிரைப்பிளப்பாய், மாணாதபாவி பழிக்கும்நாணாய்—கொடியபாவி பழிச்சொல்லுக்குஞ்சிறிதும்நாணங்கூடாய், இனிபலஎன்—இனியுன்னிடத்துப் பலபடப்பேசியென்னபயன், உன்கழுத்தின்நாண்—உன்கழுத்திலணிந்த மங்கலநாண், உன்மகன்கு காப்பின்நாண் ஆம்என்றான்—உன் மகனுக்கு முடிசூட்டுதற்குக்கையிற் கட்டுங்காப்பு நாணென்றுகூறி.

இனி நான்உயிர்விடுவேன் நீமங்கலநாணிழப்பாயென்பான் கழுத்தின்னாணுன் மகற்குக்காப்பினாணென்றான் எனக்கொள்க. போழ்வாய் எதிர்காலமுன்னிலையொருமைவினைமுற்று. பே ழ்பகுதி. சூழ்வாய்என்னும்வினை முற்றினின்றுபிறந்ததொழிற்பெயர் மூன்றனுருபேற்றலால் அதனால் என்றும்.

இன்னேபலவும்பகர்வானிரங்காதாளைநோக்கிச்
சொன்னேனின்றேயிவளென்றாரமல்லடிறந்தேன்
மன்னேயாவான்வருமப்பரதன்றனையுமகனென்
றுன்னேன்முலுவாவவனுமாகானுரிமைக்கென்றான்.

இ-ள். இன்னேபலவும் பகர்வான்—இவைபோல்வனவற்றைப் பகருமரசன், இரங்காதாளை நோக்கி—சிறிதுமனமிரங்காதகைகேசியைப்பார்த்து, முனிவா இன்று ஏசொன்னேன்—முனிவரே இப்பொழுதேசொன்னேன், துறந்தேன்— இவளைநீக்கினேனுதலால், இவள்என்தாரம்அல்லள்—இவளென்மனைவியாகாள். மன் ஏஆவான்வரும்—இனி அரசாகவரும், அப்பரதன்தனையும் மகன் என்றும் உன்னேன்—அந்தப் பரதாழ்வானையு மகனென்றுகருதேன், அவன்எம் உரிமைக்குஆகான் என்றான்—அப்பரதனும் என்கருமவுரிமைக்கு ஆகானென்றுகூறினன். 50

என்னைக்கண்டும்மேகவண்ணமிடையூறுடையான்
உன்னைக்கண்டும்மிலனேஎவன்றனுயர்கோசலையைப்
பின்னைக்கண்டானனையான்பிரியக்கண்டதுயரம்
தன்னைக்கண்டேதவிர்வான்தளர்வாணிலையிற்றளர்வான்.

இ-ள். என்னைகண்டு உம்ஏகாவண்ணம்இடையூறுஉடையான்—என்னைப்பார்த்தும்போகாதபடி கைகேசியாலிடையூறுடையஇராமமூர்த்தி, உன்னைக்கண்டும் இலன் ஏஎன்றான்—உன்னைப்பார்த்தி லனேவென்றுவசிட்டமுனிவரைவினவின், உயர்கோசலையை பின்னை கண்டான்—கற்பினிலையி

னுயர்ந்த கௌசலாதேவியைப்பின்புபார்த்தான், அனையான்பிரியகண்டது ர்ம் தன்னைக்கண்டேதவிர்வான் தளர்வான்—அந்த இராமமூர்த்திதம்பினிட றும் பிரியநேர்ந்த துன்பத்தைத் தவிர்க்கும்பொருட்டு வந்துதன்னிலைமை க்கண்டுதளருமக் கௌசலாதேவியின், நிலையின்தளர்வான்—நிலையினைநோ கித் தளருவானாயினான்

தவிர்வான் எதிர்காலவினையெச்சம் வான்விகுதி. 5

மாற்றாள்செயலாமென் றுங்கணவன்வரமீந் துள்ளம்
ஆற்றாதயர்ந்தானென் றும்மறிந்தாளவளுமவனைத்
தேற்றாநின்றாள்மகனைத்திரிவானென் றாளரசன்
தோற்றான்மெய்யென் றுலகஞ்சொல்லும்பழிக்குஞ்சோர்வாள்

இ-ள். மாற்றாள்செயல் வீம்என்றுஉம்—(இன்றுநிகழ்ந்ததீங்கு)மாற் வளாகிய கைகேசியின்செய்கையாமென்றும், கணவன்வரம்ஈந்துஉள்ளம் . ற்றாது அயர்ந்தான்என்றுஉம் அறிந்தாள்—தன்கணவனவளுக்கு வரந்தந் மனமாற்றாது சோர்ந்தானென்றும் அறிந்தனளாய், அவளும் அவனை தேற் நின்றாள்—அக்கௌசலாதேவியும் அவ்வரசனைத் தேற்றத்தொடங்கினாள்,ம னைதிரிவான்என்றாள்—இராமமூர்த்தி திரும்பி வருவானென்று கூறினா அரசன் மெய்தோற்றான் என்று உலகம்சொல்லும் பழிக்கும்சோர்வாள்— (திரும்பிவரில்) அரசனுண்மையையிழந்தானென்று உலகங்கூறும் பழிச்செ ல்லுக்குஞ்சோருவாள்.

தேற்றாநின்றாள் நிகழ்காலத்தில்வந்த இறந்தகாலவினைமுற்று, இதனை முன்னர்காண்க. தோற்றான் இறந்தகாலவினைமுற்று தோல் பகுதி. 5

தள்ளாநிலைசால்மெய்ம்மைதழுவாவழுமைவகைநின்
பெள்ளாநிலைகூர்பெருமைக்கிழிவாமென்றாலுரவோய்
விள்ளாநிலைசேரன்பான்மகன்மேன்மெலியினுலகம்
கொள்ளாதன்றோவென்றாள்கணவன்குறையக்குறைவாள்.

இ-ள். கணவன்குறையகுறைவாள்—தன்கணவன் துன்பத்திற் குறை நத்தானும்அத்துன்பத்திற்குன்றும்கௌசலாதேவி, உரவோய்—பெரியோய் மகன்மேல்விள்ளாத நிலைசேர் அன்புஆல் மெலியின்—புத்திரன்மேல்தன்னை ன்றும் நீங்காதநிலைமையமைந்த அன்பினால் நீமெலிவாயானால் அம்மெலிவை தள்ளாதநிலைசால் மெய்ம்மைதழுவா வழுவாவகைநின்று—பிறராலசைக்கவி லாத நிலைமையமைந்த உண்மையைத்தழுவியதினின்றும் வழுவாதவண்ண நிலைபெறுதலால், எள்ளாதநிலைகூர் பெருமைக்கு இழிவுஆம்என்றால்—பிற இகழாத நிலைமையமைந்த உனதுபெருமைக் கிழிவாகுமாயின், உலகம்கொ ள்ளாது அன்றுஓஎன்றாள்—உயர்ந்தோர் கொள்ளமாட்டாரல்லவா வென்று கூறினாள்.

மெலியின் என்னும்வினைமுற்றினின்று பிரிந்ததொழிற்பெயர் இரண்டா னுருபேற்று என்றாள்என்னும் வினைமுற்றின் முதனிலைகொண்டது. உ கம்வடசொல் ஆதலால் ஆகுபெயரன்று. வழுவாத, எள்ளாதஎன்னும் எதி மறைப்பெயரெச்சங்களின் ஈறுகெடுதல் "சாவவென்மொழியீற் றுயிர்மெய்ச தலும்விதி" என்றதனால்—இன் உபலக்கணத்தால். 5

போவாதொழியானென்றாள்புதல்வன்றன்னைக்கணவன்
சாவாதொழியானென்றென்றுள்ளந்தளர்வுற்றயர்வாள்
காவாயென்றாண்மகனைக்கணவன்புகழுக்கழிவாள்
ஆவாவுயர்கோசலைபாமன்னம்மென்னுற்றனளே.

இ-ள். புதல்வன்தன்னை போவாது ஒழியான்என்றாள்—இராமமூர்த்தியைக் காட்டிற்குச் செல்லாதொழியாகனன்றுகூறினாள். கணவன்சாவாதுஒழியான்—(அதனால்)தன்கணவனோ சாகாமலொழியான்(சாவான்என்றபடி) என்றுஎன்று உள்ளம்தளர்வுற்று அயர்வாள்—என்றுபுலம்பி மனந்தளர்ந்து சோரும்கௌசலாதேவி,கணவன்புகழுக்கு அழிவாள்—தனதுநாயகன்கீர்த்திக்கு அழிவுவருமேயென்றுமனமழிந்து, மகனைகாவாய்என்றாள்—(இராமமூர்த்தியே (காட்டிற்செல்லாமல்) பாதுகாவாயென்றுகூறினள், உயர்கோசலை ஆம் அன்னம்என்உற்றனள்—கற்பிலுயர்ந்த கௌசலாதேவியாகியஅன்னம் போல்வாள்என்னதுன்பமடைந்தனள், ஆவா—(இது மிகவும்) ஆச்சரியம்.

அழிவாள்முற்றெச்சம். என்றுஎன்றுபுலம்புதற் பொருளில்வந்தஅடுக்கு

உணர்வானனையாளுரையாலுயர்ந்தானுரைசால்குமரன்
புணரானிலமேவனமேபோவானேயாமென்று
இணரார்தருதாரரசனிடராலயர்வான்வினையேன்
துணைவாதுணைவாவென்றான்றோன்றால்தோன்றாயென்றான்.

இ-ள். இணர் ஆர்தருதார்அரசன் — பூங்கொத்துகள் நிறைந்தமாலையையணிந்த தசரதன், அனையாள்உரைஆல்—அக்கௌசலாதேவியின்வார்த்தையால், உயர்ந்தான் உரைசால்குமரன்—நற்குணங்களிலுயர்ந்த புகழ்மிக்க இராமமூர்த்தி, நிலம்புணரான் வனம்ஏபோவான் ஏஆம்என்று உணர்வான்—நிலவுலகையாளாது காடாளப்போகின்றானென்றறிந்து—இடர்ஆல்அயர்வான்·வினையேன் துணைவா துணைவாஎன்றான்—துன்பத்தாற்சோர்ந்துதீவினையேனது துணைவனே துணைவனேயென்று புலம்பினான், தோன்றால்தோன்றாய் என்றான்— பெருமையிற் சிறந்தோனே யென் கண்கள்முன்தோன்றுவாயென்று கதறினான்.

உயர்ந்தானென்னும் வினைமுற்றுப்பெயரெச்சமாய் குமரன்என்னும்பெயர்கொண்டது, உணர்வான்முற்றெச்சம். தோன்றால்விளியுருபு. "லகாரவீற்றுயர்பெயர்க்கு" என்னும்சூ—ஆல். 55

கண்ணும்நீராயுயிரும்மொழுகக்கழியாநின்றேன்
எண்ணும்நீர்நான்மறையோரெரிமுன்னின்மேற்சொரிய
மண்ணும்நீராய்வந்தபுனலைமகனேவினையேற்
குண்ணும்நீராயுதவியுயர்கானடைவாயென்றான்.

இ—ள். மகனே—என்புதல்வனே, உயிர்உம்கண்உம் நீராய்ஒழுககழியாநின்றேன்—எனதுயிருங் கண்களும் நீராயொழுகத் துன்பத்தினின்றுங் கழியாநின்றேன், எண்ணும்நீர் நான்மறையோர் எரிமுன் நின்மேல்சொரிய — எண்ணுந்தன்மையையுடைய நான்குவேதங்களையுணர்ந்த அந்தணர்கள் தீமுன்னேயுன் மேற்றெளிக்க, மண்ணும்நீர் ஆய்வந்தபுனலை—உடல்

கழுவும் நீராகவந்த தீர்த்தத்தை, வினையேற்கு உண்ணும் நீர் ஆய் உதவி - தீவினையையுடைய வெனக்கு உண்ணும் நீராகத்தந்து, உயர்கான் அடைவாய்என்றான்— வெப்பத்தால்மிக்ககாட்டையடைவாயென்று கூறினான்.

ஆய்செயவெனெச்சத்திரிபு. 56

படைமாணரசைப்பலகாற்பழுவாய்மழுவாலெறிவான்
மிடைமாவலிதானனையான்வில்லாலடுமாவல்லாய்
உடைமாமகுடம்புனையென்றுரையாவுடனேகொடியேன்
சடைமாமகுடம்புனையத்தந்தேனந்தோவென்றான்.

இ-ள். படைமாண்அரசை—ஆயுதங்களான் மாட்சிமைபெற்ற சூரியகுலத்தில்தோன்றிய அரசர்களை, பலகால்பழுவாய் மழுஆல்எறிவான்—பலநாளும்தீப்போலக்கனியும் வாயையுடையமழுவாயுதத்தாலெறிந்தவனும், மிடைமாவலிதான் அனையான்—வலிமைமிக்க மாவலியையொத்தவனுமாகிய பரசிராமனை, வில்ஆல்அடுமாவல்லாய்—வில்லினால்வென்றபெரியவன்மையையுடையவனே, கொடியேன்—கொடுமையையுடையயான், உடையமாமகுடம்புனையென்று உரையா—உனக்குரிமையையுடைய பெரியகிரீடத்தைச்சூடாயென்றுகூறி, அந்தோ—ஐயோ, உடனே மாசடைமகுடம்புனைய தந்தேன்என்றான்—உடனேபெரிய சடாமகுடஞ்சூடத் தந்தேனேயென்று புலம்பினான்.

தந்தேன்என்பதனிறுதியிலிரக்கப்பொருளில்வந்த ஏகாரந்தொகுத்தல்.

கறுத்தாயுருவம்மனமுங்கண்ணுங்கையுஞ்செய்ய
பொறுத்தாய்பொறையேயிறைவன்புரமூன்றெரிந்தபோர்வில்
இறுத்தாய்தமியேனென்னாதென்னையிம்மூப்பிடையே
வெறுத்தாயினிநான்வாணாள்வேண்டேன்வேண்டேனென்றான்.

இ-ள். உருவம் கறுத்தாய் — திருவுருவங்கறுத்தவனே, மனம்உம்கண்உம் கைஉம்செய்யபொறுத்தாய்—மனமுங்கண்களுங்கைகளுஞ்செய்யனவாகப்படைத்தவனே, பொறையே—பொறுமையேயோருருவாகவமைந்தவனே, இறைவன்புரம்மூன்று எரித்தபோர்வில் இறுத்தாய்—சிவபெருமானது முப்புரங்களையுமெரித்த போர்த்தொழிற் குரியவில்லைமுறித்தவனே, என்னை தமியேன்என்னாது—என்னை யுன்னையன்றித் துணையில்லாத தனியனென்று கருதாது, இ மூப்புஇடை எவெறுத்தாய்—இம்மூப்புக்காலத்திலருவத்துநீக்கினாய், இனிநான் வாணாள் வேண்டேன் வேண்டேன்என்றான்—இனிநானினிந்த வாழ்நாளைவேண்டேன்வேண்டேனென்று புலம்பினான்.

செய்ய பலபொருளொரு சொல்லாய்நின்ற பண்படியாகப்பிறந்த பலவின்பாற்படர்க்கை முற்றெச்சமாய்ச் செந்நிறமுடையனவும் நீதியுடையனவுமாய்என்னும் பொருள்மேல்நிற்றலால் மனம் நீதியையுடையதாயெனப்பொருள்கொள்க. வாழ்நாள்வாணாள்என்றதுமரூஉ. வேண்டேன் வேண்டேன் அவலப்பொருளில்வந்தஅடுக்கு. 58

பொன்னின்முன்னம்மொளிரும்பொன்னேபுகழின்புகழே
மின்னின்முன்னுமவிரிற்குமரமெய்யின்மெய்யே

என்னின் முன்னம் வனம் நீ யடைதற் கெளியேனல்லேன்
உன்னின் முன்னம் புகுவே னுயர் வானகம் யா னென்றான்.

இ-ள். பொன் இன் முன்னம் ஒளிரும் பொன்ஏ—பொன்னுக்கு முற்ப ட்டுவிளங்குமொருபொன்னே, புகழின் புகழே—புகழிற்கொருபுகழே, மின் னின்மின்னும்வரிவில்குமரா—மின்னலைப்போலவிளங்குங்கட்டமைந்த வில் லையேந்தியகுமரனே, மெய் இன் மெய்ஏ—உண்மைக்கொருஉண்மையே, நீ என் இன் முன்னம் வனம் அடைதற்கு—நீயெனக்குமுன்னேகாட்டையடைத ற்கு, யான் எளியேன் அல்லேன்—நானெளியவனல்லன், உயர் வானகம் உன் இன் முன்னம் புகுவேன் என்றான்—உயர்ந்த விண்ணுலகில் உனக்குமுன்செ ல்லுவேனென்றுபுலம்பினான்.

பொன், புகழ், மெய் இவை யுலகில்நிலைபெறுதற்கு இராமமூர்த்தி ஓர் பற்றுக்கோடாயிருந்தானென்பான் பொன்னின் பொன்னே, புகழின் புகழே, மெய்யின் மெய்யே எனவும், உனக்குமுன் விண்ணிற்குச் செல்லயான் வலிய னென்பான் எளியேனல்லே னெனவுங்கூறினான். நானகனுருபு நிற்குமிடத் துப் பொன்னின், என்னின், உன்னின் எனஐந்தனுருபு நிற்றலால் உருபு மயக்கம். 59

நெகுதற்கொத்த நெஞ்சு நம் நேயத் தாலே யாவி
உகுதற்கொத் துடலு முடையே னுன் போலல்லேன்
தகுதற்கொத்த சனகன் றையல் கையைப் பற்றிப்
புகுதற் கண்ட கண்ணாற் போகக் காணேனென்றான்.

இ-ள். நேயத்து ஆல் நெகுதற்கு ஒத்த நெஞ்சு உம் — (பிரிவுவரில்) நர ன் அன்பால் நெக்குவிட்டுருகுதற்கு ஒத்தமனத்தையும், ஆவி உகுதற்கு ஒத்த உ டல் உம் உடையேன்—பிராணன் கழிதற்குடம்பட்ட சரீரத்தையுமுடையே ன், உன் போல் அல்லேன் — உன்னைப்போல ஆற்றுங்கடின முடையவனல் லேன், தகுதற்கு ஒத்த சனகன் தையல் கையைபற்றி—நறிநிலையினிற்றற்கு இயைந்த சனகமகாராசன புத்திரியாகியசீதாப்பிராட்டியின் கையைப்பற்றி, புகுதல் கண்ட கண் ஆல் — (என்முன்) வரக்கண்டகண்களால், போககா ணேன் என்றான்——(நீகாட்டிற்குச்) செல்லப்பார்த்தற்கு உரியவனல்லே னென்றுகூறினான். 60

தென்றே பகர்வே னினியா னென்னை யுன்னை யிற்
பொன்னுலகம் மெனினும் வானோர் வருந்தா தெனினும்
பொற்றேரரசே புகழே யுயிரே யென்னைப்
பெற்றே னருமை யறிவேன் பிழையேன் பிழையே னென்றான்.

இ-ள். பொன்தேர் அரசே — பொன்னாலமைந்த தேரையுடைய அர சனே, தமியேன் புகழே உயிரே—உன்னையன்றித் துணையற்றதனியேனது புகழேயுயிரே, இனியான் எற்றே பகர்வேன்—இனிநான் என்னசொல்லப் போகின்றேன், உலகம் என்னை உன் இல் பிரியவற்று எனின் உம்—உலகி லுள்ளோர் உன்னின்று என்னைப்பிரிக்க வல்லதேயானாலும், வானவருந்தாது என்னின் உம்—விண்ணிலுள்ளோர் வருந்தாராயினும், உன்னைபெற்றேன்

அருமை அறிவேன்—உன்னைப்பெற்றயானுன் னருமையரிவேன் பிழையேன் பிழையேன்என்றான்—நானுயிர்பிழைக்கேனுயிர்பிழைக்கேனென்று புலம்பினன்.

ஏற்று வினைவோடு வந்தபண்படியாகப்பிறந்த ஒன்றன்பாற்படர்க்கைக் குறிப்புவினைமுற்று எவினைவிடைச்சொற்பகுதி, நகரமெய்சந்தி, று விகுதி, வற்றுபண்படியாகப்பிறந்த குறிப்பு வினைமுற்று வன்மைபகுதி, ஈறுகெடுதலும் லகரம் றகரமாகத்திரிதலும் சந்தி, று விகுதி. உலகம் வடசொல். வான் இடவாகு பெயர். 61

அள்ளற்பள்ளப்புனல்சூழகன்மாநிலமுமரசும்
கொள்ளக்குறைபாநிதியின்குவையுமுதலாமெவையும்
கள்ளக்கைகேசிக்கேயுதவிப்புகழ்கைக்கொண்ட
வள்ளற்றனமென்னுயிரைமாய்க்குமாய்க்குமென்றான்.

இ-ள். அள்ளல் பள்ளம் புனல்சூழ் அகல்மாநிலம்உம் அரசுஉம்—சேறனைந்த கடல் சூழ்ந்த பெரியநிலவுலகும் அரசியலும், குறையாத நிதியின்குவைஉம் — குன்றாத பொருட்குவியலும், முதல் ஆம் எவைஉம் கொள்ள—முதலாகிய எல்லாவற்றையும் கைக்கொள்ள, கள்ளம்கைகேசிக்கு ஏ உதவி—வஞ்சனையையுடைய கைகேசியென்னுஞ் சிற்றன்னைக்கே கொடுத்து, புகழ்கைக்கொண்ட வள்ளல்தனம்—கீர்த்தியைக்கைக்கொண்ட வுன துவள்ளற்றன்மை, என்உயிரைமாய்க்கும் மாய்க்கும் என்றான் — எனதுயிரைக்கெடுக்கும் கெடுக்குமென்றுகூறினன். 62

ஒலியார்கடல்சூழுலகத்துயர்வானிடைநாகரினும்
பொலியாநின்றாருன்னைப்போல்வாருளரோபொன்னே
வலியாருடையாரென்றான்மழுவாளுடையான்வரவும்
சலியாநிலையாயென்றாற்றவிர்வாருளரோவென்றான்.

இ-ள். யார் வலிஉடையார் என்றால்—யார் வலிமையையுடையவரென்றாயில், பொன்னே—பொன்போல்வாம், மழுவாள் உடையான்வரவுஉம் சலியாநிலையாய்என்றால்—மழுவாயுதத்தையுடைய பரசிராமன் வருகைக்குமஞ்சாது மனஞ்சலியாத நிலைமையையுடையாயாயினால், ஒலிஆர்கடல் சூழ்உலகத்துஇடையின்உம்—ஒலிநிறைந்த கடல்சூழ்ந்தஉலகத்தினிடத்தினும், வான் இடையின்உம் நாகர்இடையின்உம்—விண்ணுலகத்திலும் நாகருலகத்திலும், பொலியாநின்றார் உன்னைப்போல்வார்உளர்ஓ—விளங்கும்வீரருளுன்னையொத்தவருண்டா, தவிர்வார்உளர்ஓ என்றான்— (ஆதலால்) உன்னைப்பிரிந்துயிர் வாழ்வாருமுண்டாரனென்றுகூறினன். 63

கேட்டேயிருந்தேனெனினுங்கிளர்வானின்றேயடைய
மாட்டேனாகிலன்றேவன்கண்ணெனன்கண்மைந்தா
காட்டேயுறைவாய்நீயிக்கைகேசியையுங்கண்டிந்
நாட்டேயுறைவேனென்றானன்றென்றன்மையென்றான்.

இ-ள். மைந்த—மைந்தனே, கேட்டே இருந்தேன் எனினும்—கேட்டபொழுதே யுயிர்விடாதிருந்தேனாயினும், கிளர்வான் இன்று ஏ அடைய

மாட்டேன் ஆகில்—விளங்கும் விண்ணுலகினை யிப்பொழுதாயினுமடையமா ட்டேனுனல், என்கண் அன்று ஓவண்கண்—கைகேசியினிடத்தல்ல என்னிட த்தல்லவா கொடுமை, நீகாட்டே உறைவாய்—நீகாட்டிலேவசிப்பாய், இக் கைகேசியையுங்கண்டு இந்நாட்டே உறைவேன் என்றால்—இக்கைகேசியை யுங் கண்ணுர்பார்த்து இந்த நாட்டிலே நான்வசிப்பேனாகில், என்தன்மை நன் றுஎன்றான்—எனது தன்மை நன்றாயிருக்கிறது என்று கூறினான்.

அடையமாட்டேன் வன்மையுருத்தற் பொருளில்வந்த எதிர்மறைத்தன் மை யொருமைவினைமுற்று அடைபகுதி, அ சாரியை, யகரத்தோற்றம்சந்தி மாட்டுவன்மை யுறுத்தற்பொருளில்வந்த விகுதி, அனைத்தும் ஒருபகுதி, ஆ எதிர்மறை விகுதி, ஏன்விகுதி, எதிர்மறை ஆகாரம்தொகுத்தல். 64

மெய்யார்தவமேசெய்துன்னுடன்மார்பரிதிற்பெற்ற
செய்யாளென்னும்பொன்னும்நிலமாதென்னுந்திருவும்
உய்யாருய்யார்கெடுவேநுன்னைப்பிரிவின்வினையேன்
ஐயாகைகேசியைநேராகேனோநானென்றான்.

இ-ள். மெய்ஆர்தவம் ஏசெய்து—உண்மைநிறைந்த தவத்தையேசெய் து, உன்உடல் மார்புஅரிதில்பெற்ற—உனதுவலிமையமைந்த மார்பினையரி தாகப்பெற்ற, செய்யாள்என்னும்பொன்உம்—ஸ்ரீதேவியென்னும்திருவும்,நில மாதுஎன்னும்திருஉம்—பூதேவியென்னுந்திருவும், உய்யார்உய்யார்—இனி உயிர்பிழையாருயிர்பிழையார், ஐயா-ஐயனே, கெடுவேன்—ஆகெடுவேன்,வி னையேன் நான்உன்னைபிரியின்—தீவினையேனுன்னைப்பிரிந்தால், கைகேசி யைநேராகேனோஎன்றான்–கைகேசியையொப்பாகேனோவென்றுகூறினான்.

கெடுவென் ஆச்சரியப்பொருளில்வந்த இடைச்சொல். 65

பூணாரணியும்முடியும்பொன்னாசனமுங்குடையுஞ்
சேணார்மார்புந்திருவுந்தெரியக்காணத்திரிவேன்
மாணாமறவற்கலையும்மானின்றோலும்பவைநான்
காணாதொழிந்தேனென்றானன்றாய்த்தன்றோகருமம்.

இ—ள். பூண்ஆர் அணிஉம் முடிஉம்பொன் ஆசனம்உம்குடையும்—பூ ணநிறைந்த ஆபரணமும் கிரீடமும் பொன்னாலமைந்த சிம்மாசனமும் தவள வட்டக்குடையும், சேண் ஆர்மார்புஉம் திருஉம்—பரந்தமார்பும் செல்வமுமா கிய இவற்றை, தெரியகாணதிரிவேன்—விளங்கக்கண்ணாற் பார்க்கத்திரியும் நான்,மாணாதமறவற்கலைஉம் மான்இன்தோல்உம்அவை—மாட்சிமைப்படாத மரவுரியும் மானினதுதோலுமாகியவவற்றை, நான்காணாது ஒழிந்தேன் என் றால்—நான்கண்டேனாகில்,கருமம்நன்று ஆய்த்துஅன்றுஓ—முடிசூட்டநான் கொண்டகருமம் நன்றாய்முடிந்த தல்லவா.

காணாதொழிந்தேன் காணாதிருத்தலையொழித்தேனென்பதுகண்டேன் என்பதன்மேல் நிற்றலால் கண்டேனென்று பொருள்கூறினாம். மறைச்சொ ல்விகுதிப் பொருளில்வந்தது. 66

என்றாவொன்றொன்றொவ்வாவிசைதந்தாசன்றுருயிரும்
சென்றானின்றேடென்னுந்தன்மையெய்தித்தேய்ந்தான்

மென்றோன்மார்பின் முனிவன் வேந்தேயயரேலவனை
இன்றேகாதவண்ணந்தகைவெனுலகோடென்றான்.

இ-ள். என்று—என்று, ஒன்றுஒன்று ஒவ்வாத இசைதந்து—ஒன்று க்கொன்றொவ்வாதசொற்களைக்கூறி, இன்றுஒடு அரசன்உம்உயிர்டு சென்றான் என்னும்தன்மை எய்திதேய்ந்தான்—இன்றோடே யரசனுமுயிரிழந்தானென் றுகண்டோர் கூறுந்தன்மையையடைந்து மெலிந்தான் மென்தோல் மார்பி ன்முனிவன்—மெல்லியமான்றோல் பொருந்திய வுபவீதத்தையணிந்த மார்பி னையுடைய வசிட்டமுனிவர், வேந்தே அயரேல்—அரசனே நீ வருந்தாதே, அவனை இன்று ஏகாதவண்ணம் உலகுஓடு தகைவென் என்றான்—அந்தஇராம மூர்த்தியை யின்றுகாட்டிற்குச்செல்லாதபடி யுயர்ந்தோரோடுசென்று தடுப் பேனென்றுகூறினர்.

சார்புபற்றி மென்றோல்மார்பின் என்றதற்கு மான்றோல்பொருந்திய உபவீதத்தையணிந்தமார்புஎன்றும்"உலகமென்பதுயர்ந்தோர்மாட்டே" என் றதனுல் உயர்ந்தோர்என்றும். உணர்வானனை யாருரையால் என்னுஞ்செய்யு ள்முதல் இதுகாறும் ஒருதொடராதலால் என்றாஎன்பதனோடுமுடிக்க. 67

முனிவன்சொல்லுமளவின்முடியுங்கொல்லென்றரசன்
தனிநின்றுழறன்னுரைச்சிறிதேதகைவானிந்தப்
புனிதன்போனலிவனும்போகாதொழிவானென்று
மனிதன்வடிவங்கொண்ட மனுவுந்தன்னைமறந்தான்

இ-ள். முனிவன்சொல்லும் அளவில்—வசிட்டமுனிவர் கூறுமளவில் முடியும்கொல்என்று—ஒருகால் காட்டிற்குசெல்லாது அரசியல் கொள்வா னென்று, அரசன்—தசரதச்சக்கரவர்த்தி, தனிநின்று உழல்தன் உயிரைசிறி தேதகைவான்—துணையின்றி நின்றுவருந்துந் தன்னுயிரைப் போகாதவண் ணம் சிறிதேதடுப்பவன், இந்த புனிதன்போனல் இவன்ஆல்போகாது ஒழி வான்என்று—இந்தமுனிவர் சென்றாலிவராற்காட்டிற்குச்செல்லாம விராம மூர்த்தியொழிவானென்று, மனிதன் வடிவங்கொண்ட மனுஉம்தன்னைமறந் தான்—மானிடவடிவங்கொண்டு தசரதனெனப்பெயர்வாய்ந்த ஆதிமனுவாயு ள்ள அவனுந்தன்னைமறந்தனன்.

பிரமனேமனுவடிவாதலால் மனிதன்வடிவங்கொண்ட என்றார். தன்னை மறத்தல் அவசமாகுதல். 68

மறந்தானினைவும்முயிரும்மன்னன்னென்னுமறுகா
இறந்தான்கொல்லோவரசன்னென்னுவிடருற்றழிவாள்
துறந்தாய்மகனேயுலகோடெமையும்மென்னத்துணையாம்
அறந்தானிதுவோவையாவரசர்க்கரசேயென்றாள்.

இ-ள். மன்னன்நினைஉம் உயிர்உம் மறந்தான்என்னு மறுகா—அரச ன்தனது நினைவையுமுயிரையுமறந்தன னென்றுசுழன்று, அரசன் இறந்தா ன்ஓஎன்னு இடர்உற்று அழிவாள்—அவ்வரசனிருந்தனனோவென்று துன்பங் கூர்ந்து மனமழியுங்கௌசலாதேவி, மகனே உலகு ஓடுஎம்மைஉம் துறந்தா ய்—மைந்தனேயுலகினரோ டெம்மையுங் கைவிட்டாய், என்னதுணைஆம்—

இதுவென்னதுணை, ஐயா அரசர்க்குஅரசே இது அறம்தான் ஓ என்றாள்—ஐயயனே யரசர்க்கரசனே இதுஉனக்குத் தருமமாவென்றுபுலம்பினாள்.

தந்தைதாயர்க்குத்துணையாயிருத்தலைவிட்டு அவர்களைத்துறத்தல் தருமமல்லவென்பாள் அறந்தானிதுவோஎன்றாள். என்னத்துணையாம் தகரமெய் விரித்தல் விகாரம். 69

மெய்யின்மெய்யேயுலகின்வேந்தர்க்கெல்லாம்வேந்தே
உய்யும்வகைநின்னுயிரையோம்பாதிங்ஙன்றேம்பில்
வையம்முழுதுந்துயரான்மறுகும்முனிவன்னுடனம்
ஐயன்வரினும்வருமாலயரேலரசேயென்றாள்.

இ-ள். மெய்யின்மெய்யே—உண்மைக்கோருண்மை யாயுள்ளவனே, உலகுஇன் வேந்தர்க்கு எல்லாம்வேந்தே—உலகிலுள்ள அரசர்க்கெல்லாமரசனே, நின்உயிரை உய்யும்வகை ஓம்பாது—உன்னுயிரைப்பிழைக்கும் வண்ணம்பாதுகாவாமல் இங்ஙனம்தேம்பில்—இவ்விடத்தில் நீவருந்துவாயானால்,வையம்முழுதுஉம்துயர் ஆல்மறுகும்—உலகமுற்றுந்துன்பத்தால்வருந்தும்,முனிவன்உடன் நம்ஐயன்வரினும்வரும்—வசிட்டமுனிவருடனே நமது ஐயனாகிய இராமமூர்த்திவந்தாலும்வருவான், அரசே அயரேல்என்றாள்— அரசனே நீவருந்தாதேயென்றுகூறினாள்.

வையம் உயிர்மேல் நிற்றலால் இடவாகுபெயர். இங்ஙனஈறுதொகுத்தல் உம்மைஐயப்பொருட்டு. 70

என்றென்றரசன்செய்யிருதாளிணையும்முகமும்
தன்றன்செய்கையாற்றைவந்திடுகோசலையை
ஒன்றுந்தெரியாமம்மல்லுள்ளத்தரசன்மெள்ள
வன்றின்சிலைநங்குரிசில்வருமேவருமேயென்றான்.

இ-ள். என்றுஎன்று—என்றுகூறி, அரசன்மெய்உம் இருதாள்இணைஉம் முகம்உம்—அரசனதுஉடலையும் இரண்டுபாதங்களையுமுகத்தையும், தன்செய்யகையால் தைவந்திடுகோசலையை—தனது செவந்த கைளால் தடவிய கௌசலாதேவியை, ஒன்றுஉம் தெரியாதமம்மல் உள்ளத்துஅரசன்—ஒரு செய்தியையும் அறியாதமயக்கம் வாய்ந்தமனத்தையுடைய அரசனோக்கி,மெள்ள—அயர்ந்தசொல்லால், வன்தின்சிலைநம் குரிசில்வரும் வருமேஎன்றான்—வலியவில்லையேந்தியநமதுஐயன் வருவானோவென்று வினவினான்.

வருமேவருமே ஐயப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். மெல்லமெள்ள மரூஉ. 71

வன்மாயக்கைகேசிவாக்காலென்றன்னுயிரை
முன்மாவிப்பத்துணிந்தாளேனுங்கூனிமொழியால்
தன்மாமகனுந்தானுந்தாரணிபெறுமாறன்றி
என்மாமகனைக்கானேகென்றாளென்றான்.

இ-ள். வல்மாயம் கைகேசிவாக்குஆல்—மிக்கவஞ்சனையுடையகைகேசி எனது வார்த்தையால், என்தன் உயிரைமுன்மாய்விப்பதுணிந்தாள் எனும்—தனதுயிரை முன்னேவாங்கத்துணிந்தாளாயினும், கூனிமொழியால்—மந்

தரையின் உபாயத்தால், தன்மாமகன்உம் தான்உம்தரணிபெறும் ஆறு அன்றி—தன்னுடைய பெருமையமைந்த புத்திரனும்தானும் அரசுரிமையைப்பெறும் வகையல்லாமல், என்மாமகனை கான்எரு என்றாள்என்றாள் என்றான்—என்னுடைய பெருமையமைந்த புத்திரனைக்காட்டிற்குசெல்லாயென்றுஏவினுளென்று கூறினன்.

மகனும் தானுமெனநின்று என்றாள் என ஒருமை முடிபெற்றதற்குமுன்னர்க்கூறிய விதிகொள்க. என்னுயிர்வொற்றுமைக் கிழமைப்பொருளில் வந்த ஆறும் வேற்றுமை தொகைநிலைத்தொடர். 72

பொன்னார்தோளான் தானேபுகுதப்புகுதறவிரான்
என்னாருயிரோவகலாதொழியாதிதுகோசலைகேள்
முன்னாளொருமாமுனிவன்மொழியுஞ்சாபமுளதென்
றந்நாளுற்றதெல்லாமவனுக்கரசன்னறைவான்

இ-ள். பொன் ஆர்தோளான்கான் ஒ புகுதபுகுதல் தவிரான்—வீரலட்சுமி வசிக்குந்தோளையுடைய இராமமூர்த்தி காட்டிற்கோ செல்லப்போகலைச் சிறிதுந்தவிரமாட்டான், என் ஆர்உயிர் ஓ அகலாது ஒழியாது—எனதுஅரியவுயிரோ நீங்காது சிறிதுமொழியாது, இதுகோசலைகேள்—இக்காரணத்தைக் கௌசலாதேவி சிறிதுகேள், முன்னாள் ஒருமாமுனிவன் மொழியும்சாபம் உளது என்று—முற்காலத்தில் ஒருபெரியமுனிவர் எனக்குக்கூறியசாபமொன்றுண்டென்று, அந்நாள் உற்றது எல்லாம்—அக்காலத்தில் தனக்கு நேரிட்டசெய்தியெல்லாம், அரசன் அவளுக்கு அறைவான்—அரசனத கௌசலாதேவிக்குக் கூறத்தொடங்கினேன்.

உற்றதெல்லாம் ஒருமையிற் பன்மைவந்த வருமைதி. 73

வெய்யகானத்திடையேவேட்டைவேட்கைமிகவே
ஐயசென்றுகரியோடரிகடுருவித்திரிவேன்
கையார்சிலையுங்கணையுங்கொடுகார்மிருகம்வருமோர்
செய்யநதியின்கறைவாய்ச்சென்றேமறையநின்றேன்.

இ-ள். வெய்யகானத்து இடை—கொடியகாட்டில், வேட்டைவேட்கை மிகசென்று—வேட்கையில் விருப்பமீதூரச்சென்று, கரியோடுஅரிகள் துருவி திரிவேன்—யானைகளொடு சிங்கங்களைநாடித்திரியும் நான், கையாற்சிலை உம் கணைஉம்கொடு—கையிலமைந்த வில்லையும் அம்பையுங்கொண்டு, கார்மிருகம்வரும் ஓர் செய்யநதியின் கரைவாய் சென்று— பெரிய மிருகங்கள் (நீர்பருக) வராநின்ற ஒரு பெருமையமைந்த நதியின் கறையிற்சென்று மறையநின்றேன்—மறையநின்றனன்.

ஐயகட்டுரைச்சுவைப்பொருள் படநின்ற அசைநிலை யிடைச்சொல், கருமைபெருமை ஈறுகெட்டு "ஆதிநீடல்" என்றபடி கார்எனநின்றது. இதுமுதல்சிந்தை தளர்வுற்றயர்வேன் என்னும் செய்யுள்காறும் ஒருதொடர். 74

ஒருமாமுனிவன்மனையோடொளியொன்றிலாவாய்நயனம்
திருமாமகனே துணையாய்த்தவமேபுரிபோழ்தினில்வாய்

அருமாமகனே புனல்கொண்டகல்வான் வருமாறறியேன்
பொருமாகணைவிட்டிடலும் புவிமீதலறிப்புரள.

இ-ள். ஒருமாமுனிவன் மனையோடு—ஒரு பெருமையமைந்த முனிவர் தமது மனைவியோடு, நயனம் ஒளி ஒன்றில ஆய்—கண்களொழியிழந்து, திருமாமகனே துணை ஆய் தவம்புரிபோழ்தின் இல்—அழகிய பெருமை வாய்ந்த புத்திரனையே துணையாகக்கொண்டு தவத்தைசெய்யுங்காலத்தில், அருமைவாய் மாமகனே புனல்கொண்டு அகல்வான் வரும் ஆறு அறியேன்—அருமைவாய்ந்த பெரிய புத்திரனை (தாய்தந்தையர்பருக) நீர்கொண்டுசெல்லவரும்வகையையறியாதநான், பொருமாகணை விட்டிடலும்—பொருதற்குரிய (விஷத்தால்) கருமைவாய்ந்த பாணத்தையெய்ய, புவிமீது அலறி புரள (தைத்தலால்) பூமிமேல் வீழ்ந்து கதறி (அம்முனிவர்புதல்வன்) புரளாநிற்க.

ஆய்செயவெனெச்சத்திரிபு. கொண்டுசொல்லெச்சம். மாகருமை. இது உரிச்சொற்றொடராதலால் வருமொழி வல்லெழுத்தியல்பாயிற்று. 75

புக்குப்பெருநீர் நுகரும்பொருபோதகமென்றொலிமேல்
கைக்கட்கணைசென்றதலாற்கண்ணாற்றெரியக்காணேன்
அக்கைக்கரியின்குரலேயன்றீதென்னவெருவா
மக்கட்குரலென்றயர்வேன் மனநொந்தவண்வந்தனனால்.

இ-ள். புக்கு பெருநீர் நுகரும் பொருபோதகம் என்று—வந்துபெரிய நீரைப்பருகும்போர் செய்தற்குரிய யானையென்று, ஒலிமேல் கைகண்கணை சென்றது அல்லாமல்—(நீர்முகக்கும்) ஒலியே குறிப்பாகக்கொண்டு கையினின்று பாணஞ்சென்றதன்றி, கண் இல் தெரியகாணேன் — கண்களால் யானை அன்றுமகனென்று புலப்படக்காணேன், ஈது அகைகரியன் குரலே அன்று என்ன வெருவா—இந்தக்குரல் அந்த யானையின் குரலேயல்லவென்று அஞ்சி, மக்கள் குரல்என்று அயர்வேன்—மக்கட்பிறப்பினர் குரலென்று சோரும்யான், மனம்நொந்து அவண்வந்தனென்—மனம்வருந்தி யவ்விடத்து வந்தேன்.

மக்கள் பலர்பாற் படர்க்கைப் பெயர்ச்சொல் ம பகுதி, அகரவீறுதொகுத்தல், கள் விகுதி. மக்கட்குரல் உயர்திணைப் பெயரீற்று ளகரமெய் வருமொழி வல்லெழுத்து வர இயல்பாகாது திரிதல் இசைநோக்கி கண் உருபு மயக்கம். 76

கையுங்கடனும்நெகிழக்கணையோடுருள்வோற்காணா
மெய்யுந்தனுவும்மனமும்வெறிதேகிடமேல்வீழா
ஐயன்னீதான்யாவனந்தோவருள்கென்றயரப்
பொய்யன்றறியாமைந்தன் கேணீயென்னப்புகல்வான்.

இ-ள். கையும் கடனும் நெகிழக்கணையோடு உருள்வோன்காணா—கையும் நீர்முகந்த கரகமும் தம்மினின்று நீங்க என்பாணத்தோடு உருளுமப்புதல்வனைக்கண்டு, மெய்யும்தனுஉம் மனம்உம் வெறிது எகிடமேல் வீழா—என்னுடலும் வில்லும் மனமும் பயனில்லாதொழிய. அவன்மேல் வீழ்ந்து,

அந்தோ ஐயன் நீதான்யாவன்—ஐயோ ஐயனே நீயார், அருள்க என்று அயர—அருளக்கடவாயென்று நான்சோர, பொய்ஒன்று அறியாதமைந்தன் நீகேள் என்ன புகல்வான்—பொய்நெறிகளைச் சிறிதுமறியாத அம்முனிவர் சிறுவநீ கேளாயென்று சொல்லாநின்றான்.

காணு, வீழா செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினை யெச்சம். அருள் கவியங்கோளீறுதொகுத்தல். 77

சேலாகியமாமுதல்வன்றிருவுந்தியினீண்மலரின்
மேலாகியநான்முகனுல்வேதங்களின்மாமுறையின்
பாலாகியயோனிகளின்பலவாம்வருணந்தருவான்
நாலாகியதாம்வருணந்தனின்முன்னெமைநல்கினனால்.

இ—ள். சேல்ஆகிய மாமுதல்வன்—மச்சாவதாரங்கொண்ட பெருமை யமைந்த இறைவனது, திருஉந்திநீள்மலர் இல்மேல் ஆகிய நான்முகன்—திருவுந்தியாகிய பரந்த தாமரைமலரில் தோன்றியபிரமன், நால்வேதங்கள் மாமுறைஇன்—தானருளிய வேதங்களுண்கென்னுமுறைப்படி, பால்ஆகிய பலஆம் யோனிகளின்வருணம் தருவான்—பகுப்பமைந்த பலயோனிகளினி ன்று பலவருணங்களையுந் தருகின்றவன், நாலாகியது ஆம்வருணம் தன் இல் முன் எம்மை நல்கினன்—நான்கு வகைப்பட்ட வருணத்தில் முற்பட்டபிரம வருணத்தில் எங்களைப்படைத்தனன்.

இரண்டிடத்தும்வந்த இன் வேண்டாவழிச்சாரியை. வேதங்கள் நான்கு எனப்படுதலால் வருணங்களும் நான்கு என்பார் நால்வேதங்களின் மாமுறை யின் வருணந்தருவான் என்றார். 78

அந்நான்மறையோன்வழியிலருள்காசிபன்மைந்தன்
மின்னார்புரிநூன்மார்பன்விருத்தேசனன்மெய்ப்புதல்வன்
நன்னான்மறைநூறெரியும்நாவான்சலபோசனனெனச்
சொன்னான்முனிவன்றருசுரோசனன்யானென்றான்.

இ-ள். அ நான்மறையோன் வழியில் அருள்காசிபன் நல்மைந்தன்—அந்தப்பிரமன்மரபில் அருள்வாய்ந்த காசிபமுனிவரது நல்லபுத்திரராகிய, மின்ஆர் புரிநூல்மார்பன் விருத்தேசனன் மெய்புதல்வன்—மின்னல்போல ஒளிநிறைந்த முப்புரிநூலணிந்த மார்பையுடையவராகிய விருத்தேசனரென் னுமுனிவரது உண்மைவாய்ந்த மைந்தரும், நல்நான்மறைநூல்தெரியும்நாவா ன்சலபோசனன் என்னசொன்னான்—நல்ல நான்குவேதங்களாகிய நூல்களை க்கற்ற நாவையுடையவருமாகிய சலபோசனமுனிவர் என்பிதாவென்றுகூறி னன், முனிவன் தருசுரோசனன் யான் என்றான்—அம்முனிவர் பெற்ற மைந்தனாகிய யான் சுரோசனமுனிவனென்னும் பெயரையுடையேனென்று கூறினன்.

மார்பன், நாவான் சினையடியாகப்பிறந்த குறிப்புவினைமுற்றுப் பெயரெ ச்சமாய் நின்றன. 79

இருகண்களுமின்றியதாய்தந்தைக்கும்மீங்கிவர்கள்
பருகும்புனல்கொண்டகல்வான்படர்ந்தேன்பழுதாயினதால்

இருகுன்றனையபுயத்தாய் இபமென்றுணராதெய்தாய்
உருகுந்துயரந்தவிர்நீ யூழின்செயலீதென்றான்.

இ-ள். ஈங்கு இருகண்கள்உம் இன்றியதாய்தந்தைக்கு—இவ்விடத்தி லிரண்டு கண்களையுமிழந்ததாய் தந்தையர்களுக்கு, அவர்கள்பருகும் புனல் கொண்டு அகல்வான் படர்ந்தேன்—அவர்கள்பருக நீர் முகந்து செல்லவந் தேன், பழுது ஆயினது—அந்த கருமம்பழுதுபட்டது, இருகுன்று அனைய புயத்தாய்—இரண்டு மலைகளையொத்தபுயத்தையுடைய அரசனே, உணராது இபம் என்று எய்தாய்—என்னையறியாமல் யானையென்று பாணப்பிரயோ கஞ்செய்தாய், இது ஊழின்செயல் (நீஎய்யவும் நானுயிரிழக்கவும்நேரிட்ட) இதுமுன்னையூழின் செயல், நீஉருகும் துயர்தவிர்என்றான்—நீமனமுருகுந் துன்பத்தினின்று நீங்காயென்றுகூறினான்.

இதுபடும் விதி, நீவருந்துவதாற் பயனில்லையென்பான உருகுந்துயர் தவிர் என்றான், இன்றிய எதிர்மறைக் குறிப்புவினைப்பெயரெச்சம் இன்மை பகுதி து சாரியை, ஈறும் உகரமுங்கெடுதலும் லகரமுந்தகரமுந் திரிதலும் யகரத்தோற்றமும் சந்தி, அ விகுதி. 80

உண்ணீர்வேட்கைமிகவுயங்குமெந்தைக்கொருநீ
தண்ணீர்கொடுபோயளித்தென்சாவும்முரைத்தும்புதல்வன்
விண்மீதடைவான்றொழுதானெனவும்மவர்பால்விளம்பென்
றெண்ணீர்மையினான்விண்ணோரெதிர்கொண்டிடவேகினனால்

இ-ள். உண்நீர் வேட்கைமிக உயங்கும்எந்தைக்கு—பருகற்குரிய நீர் வேட்கை யதிகரிக்க மயங்குமென்பிதாவுக்கு, ஒருநீ தண்ணீர் கொடுபோய்அ ளித்து என்சா உம் உரைத்து—நீதண்ணீர்கொண்டுபோய் தந்து என்சாவை யுஞ்சொல்லி, உம்புதல்வன் விண்மீது அடைவான் தொழுதான் எனவும்அவ ர்பால் விளம்புஎன்று—உம்முடைய புத்திரன் விண்ணுலகத்தி லடைகின்ற வனும்மை வணங்கினானென்று மவர்களிடத்துச் சொல்லாயென்று, எண்நீர் மையினான்—யாவருமதிக்குந் தன்மையையுடைய அம்முனிவர்சிறுவன்,விண் ணோர் எதிர்தகாண்டிட ஏகினன்—தேவர்களெதிர்கொண்டுவர விண்ணுலக டைந்தான். 81

மைந்தன்வரவேநோக்கும்வளமாதவன்பான்மகவோ
டந்தண்புனல்கொண்டணுகலுமையாவிதுபோதளவாய்
வந்திங்கணுகாதென்னேர்வந்ததென்னென்றேங்கும்நேர
சந்தங்கமழுந்தோளாய்தழுவிக்கொளவாவெனவே.

இ-ள். மைந்தன் வரவுநோக்கும் வளம்மாதவன்பால் (தண்ணீர்க்கு ச்சென்ற)தமதுபுத்திரன்வருகையை யெதிர்பார்க்கும் தவவளம் நிறைந்தசல போசனமுனிவரிடத்து, மகவோடு அம்தண் புனல்கொண்டு அணுக—இறந்த புத்திரனோடு அழகியதண்ணிய நீர்கொண்டுவர, ஐயா இதுபோது அளவு ஆய்—ஐயனே இவ்வளவு காலமாக, வந்து இங்கு அணுகாது — வந்திவ்விடத்துச் சேராததனால், என் ஒ வர்தது என்றுசொர்ந்தேட- என்ன நீசோர்ந்தேனென்று

வருந்தினேம், சந்தம்கமழும் தோள் ஆய் — சந்தனக்குழம்பு கமழாநின்ற தோளையுடையாய், தழுவிக்கொள்ளவா என்ன — எங்களைத்தழுவவாவென்று கூற.

ஆம்செயவெனெச்சத்திரிபு. தழுவிக்கொள்ள தற்பொருட்டுப்பொருளில்வந்த எதிர்காலவினையெச்சம் தழுவுபகுதி, இ சாரியை, உகரக்கேடுங் ககரத்தோற்றமும்சந்தி, கொள்தற்பொருட்டுப் பொருளில்வந்தவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, ளகரமெய்சந்தி, அ விகுதி. 82

ஐயாயானோரரசன்னயோத்திநகரத்துள்ளோன்
மையார்களபந்துருவிமறைந்தேவதிந்தேனிருள்வாய்
பொய்யாவாய்மைபுதல்வன்புனன்மொண்டிடுமோதையின்மே
கையார்கணைசென்றதுலாம்கண்ணிற்றெரியக்காணேன் [ல்

இ-ள். ஐயா — ஐயனே, யான்ஓர்அரசன் — நானொருவேந்தன், அயோத்திநகரத்துஉள்ளோன் — அயோத்திநகரத்தில்வசிப்பவன், மைஆர்களபம்துருவி — கருநிறம்பொருந்திய யானையைத்தேடி, இருள்வாய் மறைந்து வதிந்தேன் — இருட்டில் ஒளித்திருந்தேன், பொய்யாதவாய்மைபுதல்வன் — பொய்க்காதவுண்மைச்சொல்லையுடைய உமதுபுத்திரன், புனல்மொண்டிடும் ஓதையின்மேல்கைஆர்கணைசென்றது அல்லாமல் — நீர்முகக்கும் ஓசையின்மேல் என்கையாலேவிட்ட பாணஞ்சென்றதல்லாமல், கண்ணில் தெரியகாணேன் — கண்ணாலுமதுபுத்திரனென்று புலப்படக் கண்டிலேன்.

நீர்முகக்கும் ஓசைசாயால்யானையென்று கருதினதேயல்லாமல் கண்களாற்பார்த்து எய்யாமையால் யான்அபராதியல்லனென்பான் கண்ணிற்றெரியக் காணேன்என்றான். மொண்டிடும் எதிர்காலப் பெயரெச்சம் மொள் பகுதி, து சாரியை, ளகரமுந்தகரமுந்திரிதலும்உகரக்கேடும்சந்தி, இடுபகுதிப் பொருள்விகுதி, அனைத்தும்ஒருபகுதி. உம்எச்சவிகுதி, உகரக்கேடுசந்தி. 83

வீட்டுண்டலறுங்குரலால்வேழக்குரலன்றெனவே
ஓட்டந்தெதிராநீயாரெனவுற்றவெலாமுரையா
வாட்டந்தருநெஞ்சினனாய்நின்றான்வணங்காவானோர்
ஈட்டம்மெதிர்வந்திடவேயிறந்தேகினன்விண்ணிடையே.

இ-ள். வீட்டுண்டு அலறும்குரலால் — என்னம்பாற் கொல்லப்பட்டுக்கதறும்உமதுமைந்தன் குரலினால், வேழம்குரல் அன்றுஎன்னஓட்டம்தந்துஎதிரா நீயார்என்ன — இதுயானையின் குரலல்லவென்று ஓடிவந்து எதிர்த்து நீயாரென்றுவினவ, உற்றஎல்லாம்உரையா (உமதுபுத்திரன்) நடந்தசெய்தியையெல்லாங்கூறி, வாட்டம்தரும் நெஞ்சினன் ஆய்நின்றான் — வாடியமனமுடையனாய்நின்றனன். வானோர்ஈட்டம் வணங்காஎதிர்வந்திட — தேவர்கள்கூட்டம் வணங்கியெதிர்கொள்ள, இறந்துவிண் இடை ஏகினன் — உடலைவிட்டு விண்ணுலகிற்சென்றனன்.

உடலும் உயிருங்கூடி நின்றவழி உயர்திணையேயன்றி, அவற்றைத்தனித்தனி கூறுமிடத்து அஃறிணைப்பொருள்களாயிருக்க, ஏகினன் என உயர்திணைப்பொருளாகக்கூறியது தேவருடம்புபெற்றமையால். ஓட்டந்தந்து ஓட்டந்துதொகுத்தல். வீட்டுண்டு செயப்பாட்டிறந்தகாலவினையெச்சம் விட்டு

பகுதி, உண்செயப்பாட்டு வினை விகுதி, உகரக்கேடுசந்தி, அனைத்தும் ஒரு பகுதி, டகரமெய்யிடைநிலை, உ எச்ச விகுதி. 84

அறுத்தாய்கணையாலெனவேயடியேன்றன்னையையா
கறுத்தேயருளாயானேகண்ணிற்கண்டேனல்லேன்
மறுத்தானில்லான்வனமொண்டிடுமோசையினெய்ததலால்
பொறுத்தேயருள்வாயென்றாயிருதாள்சென்னிபுனைந்தேன்.

இ-ள். ஐயா—ஐயனே, கணையால் அறுத்தாய்என்ன—அம்பாலென் மகனைக் கொன்றாயென்று, அடியேன்தன்னை கறுத்தேயருளாய்—அடியேனைக்கோபியாதே, மறுதான் இல்லான்—குற்றமில்லாதஉமதுபுத்திரன், வனம்மொண்டிடும் ஓதையின் எய்தது அல்லாமல—நீரைமுகக்கும் ஓசையைக்குறியாகக்கொண்டு எய்ததேயல்லாமல், யான்ஓகண் இன் கண்டேன் அல்லேன்—நானேகண்களாற் பார்த்து அம்பைப்பிரயோகஞ் செய்கின்றிலேன், பொறுத்தே அருள்வாய்என்று—(அபுத்திபூர்வகமாகநிகழ்ந்ததாதலால்) பொறுத்தருள்வாயென்று, இருதாள் சென்னிபுனைந்தேன்—அவரது இரண்டுதிருவடிகளையுஞ்சிரசிற்சூடினேன். 85

வீழ்ந்தாரயர்ந்தார்புரண்டார்விழிபோயிற்றின்றென்றார்
ஆழ்ந்தார்துன்பக்கடலுள்ளையாவையாவென்றார்
போழ்ந்தாய்நெஞ்சையென்றார்பொன்னாடுதனிற்போய்நீ
வாழ்ந்தேயிருப்பத்தரியேமவந்தேமவந்தேமினியே.

இ—ள். வீழ்ந்தார் அயர்ந்தார் புரண்டார் இன்றுவிழி போயிற்றுஎன்றார்—நிலத்தின்மேல்வீழ்ந்து சோர்ந்துபுரண்டு இப்பொழுது தான்கண்போனதுஎன்றுபுலம்பினார்கள், துன்பக்கடலுள் ஆழ்ந்தார் ஐயாஐயாஎன்றார்—துன்பக்கடலிலழுந்தி ஐயாஐயாவென்றுகதறினார்கள், நெஞ்சைபோழ்ந்தாய் என்றார் — எங்கள்மனதைப்பிளந்து புண்படுத்தினை யென்றுவிம்மினார்கள், நீபொன்னாடுஇல்போய்வாழ்ந்தே இருப்பதரியேம்—நீவிண்ணுலகிற் போய் வாழ்ந்திருக்க இந்நிலவுலகில் யாங்கள்தரித்திரோம், இனிவந்தேம்வந்தேம்—இனிநாங்களுமங்குவந்தோம் வந்தோம்

வீழ்ந்தார், அயர்ந்தார், புரண்டார், போயுற்று, போழ்ந்தார்முற்றெச்சங்கள். வந்தேம்வந்தேம் விரைவுப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். கண்களிழந்தது இன்று என்பார் விழிபோயிற்று என்றார்கள். 86

என்றென்றருந்தவரையிருதாள்வணங்கியானே
இன்றும்புதல்வனினிநீரேவும்பணிசெய்திடுவேன்
ஒன்றுந்தளர்வுற்றயர்சோரொழிமின்னிடரொன்றிடலும்
வன்றிண்சிலையாய்கேண்மோவெனவேவொருசொல்வகுத்தார்

இ—ள். என்றுஎன்று அயரும்தவரை—என்றுபுலம்பிச் சோருந்தாய்தந்தையரை, இருதாள்வணங்கி—இரண்டுபாதங்களையும்வணங்கி, யானே இன்று உம்புதல்வன்—நானேயிப்பொழுது உமதுபுத்திரன், இனிநீர் ஏவும்பணிசெய்திடுவேன்—இனிநீங்களேவும் பணியைச்செய்வேன்; ஒன்றும்தளர்வுற்று அயரீர்—சிறிதுந்தளர்ச்சியுற்றுச் சோராதிருங்கள், இடர்ஒழிமின் என்றிடலும்—

துன்பத்தினின் றுநீங்குங்களென்றுகூற,வன்றிண்சிலேயாய்கேண்மோஎன்ருன்—வலியவில்லேயேந்தியஅரசனே கேளாய்என்று, ஒருசொல்வகுத்தார்—ஒருசொல்கூறுவார்.

வன்றிண் ஒருபொருட்பன்மொழி. கேண்மோ மோமுன்னிலேயசைச்சொல். வகுத்தார் இறந்தகாலம் எதிர்காலத்தில்வருதலால்இது இயல்பில்வந்தகாலவழுவமைதி. 87

கண்ணுண்மணிபோன்மகவையிழந்தும்முயிர்காதலியா
உண்ணுவெண்ணியிருந்தாலுலகோரென்னென்றுரையார்
விண்ணினிற்லேசேருதும்யாமெமபோல்விடலேபிரியப்
பண்ணும்பரிமாவுடையாயடைவாய்படர்வானென்று

இ—ள். கண்உள் மணிபோல் மகவை இழந்தும் — கண்ணுளிருக்குமணியைப்போன்ற புத்திரனையிழந்தும், உயிர்காதலியா உண்ணுஎண்ணி இருந்தால்—உயிரைவிரும்பி புண்ணவெண்ணியிந் நிலவுலகிலிருந்தால், உலகோரென்னென்று உரையார்—உலகிலுள்ளோரிதுவென்ன வுயிர்வாழ் வென்றெங்களையேசார், யாம்விண் இன்தலேசேருதும்—யாங்களும்விண்ணுலகிலடைவோம், பண்ணும்பரிமா உடையாய்—அலங்கரிக்கருதிரைச்சேனையையுடையாய், எம்போல்விடலேபிரிய—எம்மைப்போல விடலேபருவத்தையுடைய புத்திரன்பிரிய, படர்வான் அடைவாய்என்று—பரவியவிண்ணுலகை நீயுமடைவாயென்றுகூறி.

காதலியா பெயரடியாகப்பிறந்த செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம் காதலிபகுதி, ஆ எச்சவிகுதி; யகரமெய்சந்தி. உண்ணுசெயவெனெச்சத்திரிபு. ௮௮

தாவாதொளிருங்குடையாய்தவறிங்கிதுநின்சரணம்
காவாயென்ருயதனுங்கடியசாபங்கருதேம
ஏவாமகவைபிரிந்தின்றெம்போலிடருற்றனைநீ
போவாயகல்வானென்றுப்பொன்னாட்டிடைபோயினரால்

இ—ள். தாவாது ஒளிரும்குடையாம்—கெடாமல் விளங்கும் தவளக்குடையினையுடையாய், இங்கு இதுதவறு—இவ்விடத்தில்நான்செய்த இச்செய்கைபெருங்குற்றம், நின்சரணம் காவாய்என்ருய்—உனக்குநானடைக்கலம் என்னைப்பாதுகாவாயென்று குறையிரந்தாய், அதனுல்கடிய சாபம்கருதேம்-அதனுல்கொடுஞ்சாபத்தைக் கருதமாட்டேம், ஏவாதமகவைபிரிந்து—இன்னதுசெய்யென ஏவுதற்குமுன்குறிப்பறிந்துசெய்கிற பிள்ளையைநீயும்பிரிந்து, இன்றுஎம்போல்-இடர்உற்றனை நீஅகல்வான் போவாய்என்று—இப்பொழுது எம்மைப்போல நீயுந்துன்பமுற்றுப் பரந்தவிண்ணுலகிற் செலவாயென்று, பொன்நாடு இடைபோயினர்—விண்ணுலகிற்சென்றனர்.

உற்றனைமுற்றெச்சம். 89

சிந்தைதளர்வுற்தயர்தல்சிறிதும்பிலனுயின்சொல்
மைந்தன்னுளனென்றதனல்மகிழ்வோடிவண்வந்தினனுல்

அந்தமுனிசொற்றமையுமண்ணல்வனமேகுதலும்
என்றன்னுயிர்வீகுதலும் மிறையுந்தவறாவென்றான்.

இ-ள். சிந்தைதளர்வுற்று அயர்தல் (அச்சாபத்தைக்கேட்டு) மனந்தளர்ந்து உயிர்சோர்தல், சிறிதும் இலன் ஆய்—சற்றுமில்லாதவனாய், இன்சொல்மைந்தன் உளன் என்றதன் ஆல்—இனியமழலைச்சொல்லையுடைய புத்திரனிருக்கிறானென்று கூறியதனால், மகிழ்வு ஒடு இவண்வந்தனென் — மகிழ்ச்சியோடுஇங்குவந்தேன், அந்தமுனி சொற்றமைஉம் அண்ணல்வனம்ஏகுதல்உம்—அந்தச்சலபோசமுனிவர் சொன்னதும் இராமமூர்த்தி காட்டிற் செல்லுதலும், என்தன்உயிர்வீகுதலும்—என்னுயிர்போதலும், இறையும்தவறாஎன்றான்—சிறிதிறையளவேனுந் தப்பாவென்று அரசன் கௌசலாதேவிக்குக்கூறினான்.

சாபமிட்டபின் புத்திரகாமேட்டி நிகழ்ந்தது மிராமமூர்த்தி முதலியநால்வரும் அவதரித்தும் ஆகலால் மைந்தனுளனென்றதனால் மகிழ்வோடிவண் வந்தனெனால் என்றான் சொற்றமை இறந்தகாலத்தொழிற்பெயர் சொல்பகுதி, றகரமெய்யிடைநிலை, லகரந்திரிபுசந்தி, அசாரியை, மைபுடைபெயர்ச்சிவிகுதி. நிகழ்காலத்தில்சொல்லுகின்றமையெனவரும், வீகுதல்தொழிற்பெயர் வீ பகுதி, குசாரியை, தல்புடைபெயர்ச்சிவிகுதி. 90

இம்மாமொழிதந்தரசனிடருற்றிடுபோழ்தினிலச்
செம்மாமயில்கோசலையுந்திகையாவுணர்வோய்வினளாய்
விம்மாநெறியின்விதியின்விளைவுந்தளர்வின்றொடரும்
அம்மாதவனும்விரைவோடவலந்தருநெஞ்சினனாய்.

இ-ள். அரசன் இம்மாமொழிதந்து இடர்உற்றிடு போழ்தின் இல்—அரசனிந்தப்பெரிய சொற்களைக்கூறித் துன்பமடையுங்காலத்தில், அச்செம்மாமயில்கோசலைஉம் திகையா—அந்தச்செவ்விய பெரியமயில்போன்ற கௌசலாதேவியுமயங்கி, உணர்வுஓய்வினள் ஆய்—அறிவோய்ந்து, விம்மா—விம்மி, நெறியின் — முறைப்படி, விதியின்விளைவும்-தீயூழ் விளைந்தபயனையும், தளர்வுஇன் தொடர்வுஉம்—இவர்கள்தளர்ச்சியின் தொடர்ச்சியையும்நோக்கி, அம்மாதவன்உம் விரைவோடு அவலம்தரும் நெஞ்சினன் ஆய்—அந்தவசிட்டமுனிவரும் துன்பமிக்க மனமுடையவராய்.

நோக்கிசொல்லெச்சம், 91

ஒருபோகு கொச்சகக்கலிப்பா.

உரைசெய்பெருமையுயர்தவத்தோரோங்கல்
புரைசைமதகளிற்றான்பொற்கோயின்முன்னர்
முரைசமுழங்கமுடிசூட்டமொய்த்தாண்
டரைசனிலிருந்தவ்வவையினானான்.

இ-ள். உரைசெய்பெருமை இயர்தவத்து ஓர்ஓங்கல்—புகழ்ந்துசொல்லும் பெருமைவாய்ந்த உயர்ந்ததவத்தில்ஒருமலைபோன்ற அம்முனிவர், புரைசைமதகளிற்றான் பொன்கோயின்முன்னர்—கழுத்திற்பூட்டிய கயிற்றையுமதத்தையுமுடைய யானைச்சேனையையுடையதசரதனது பொன்னாலமைந்தகோயிலின்முன், முரசம்முழங்க முடிசூட்டமொய்த்து—முரசொலிக்கமகுடஞ்சூ

ட்டும்படி நெருங்கி, ஆண்டு அரசர் இனிது இருந்தநல் அவையின் ஆனுன்
வ்விடத்திலரச ரினிதாகக்கூடியிருந்த நல்லஇராசசபைக்களத்திலடைந்த

நல்லவையென்பதை "புகழுந்தரும நெறிநின்றோர் பொய்காமம்-
மூஞ்சினஞ் செற்றமில்லோர்—நிகழுகலைகள்—எல்லாமுணர்ந்தோரிருப்
டமன்றே—நல்லாரவைக்கு நலம்" எனவருஞ் சங்கச்செய்யுளாலறிக.
சை, முரைசம், அரைசர் இடைநிலைப்போலி.

வந்தமுனியைமுகம்நோக்கிவாள்வேந்தர்
எந்தைபுகுதற்கிடை யூறுண்டாயதோ
அந்தமில்சோகத்தழுதகுரலாலென்னச்
சிந்தைதெளிந்தோய்தெரியமக்கிவ்வென்றுரைத்தார்.

இ-ள். வாள்வேந்தர் — வாளையேந்தியஅரசர்கள், வந்தமுனிவ
ம்நோக்கி —வந்தமுனிவரைஅவர்முகத்தைப்பார்த்து, எந்தைவுகுதற்கு
யூறுஉண்டாயதோ—எமதுதந்தையே நீர்செல்லத்தடையுண்டாயிற்றோ
தம்இச்சோகத்து அழுதகுரல்தான்என்ன—அளவில்லாத சோகத்திலு
குரல்யாது, சிந்தைதெளிந்தோய் — மனந்தெளிந்தோய், எமக்குஇவ்
ன்றுஉரைத்தார்—எங்களுக்கு இவற்றைத்தெரிவிப்பீரென்றுகூறினா

தெரிமுதனிலை திரியாதுவந்த பிறவினைமுன்னிலையே வல்லினை
இவ்—பலவின் பாற்படர்க்கைப் பெயர்ச்சொல் இ சுட்டிடைச்சொற்
வகரமெய் பலவின்பால் விகுதி.

கொண்டாள்வரமிரண்டுகைகையர்கோன் கொம்பவட்கு
தண்டாதசெங்கோற்றயரதனுந்தானளித்தான்
ஒண்டார்முகிலேவனம்போவென்றொருப்படுத்தாள்
எண்டானும்வேறில்லையீதடுத்தவாறென்றான்.

இ-ள். கைகையர்கோன்கொம்பு வரம் இரண்டுகொண்டாள்—
யநாட்டரசன் புத்திரியாகியகைகேசி இரண்டுவரம்கேட்டனள், அ
ண்டாத செங்கோல்தயரதன்உம்தான் அளித்தான்—அவளுக்குஉண்
ன்று நீங்காதசெங்கோலையேந்திய தசரதச்சக்கரவர்த்தியுந் தான்கொ
ன், ஒண்தார் முகிலேவனம்போக என்றுஒருப்படுத்தாள்—(அவ்வரங்க
ன்றால்)ஒள்ளியமாலையையணிந்த மேகம்போன்ற இராமமூர்த்தியை
ற்குச்செல்கவென்றுடம்படுத்தினாள், எண்தான்வேறுஇல்லை—இந்த
ன்றிவேறில்லை, ஈது அடுத்த ஆறுஎன்றான்—இச்செய்திதான்நேரிட்
யென்றுகூறினார்.

உம்மைஅசைநிலை. போக வியங்கோளீறுதொகுத்தல்.

வேந்தன்பணியினாற்கைகேசிமெய்ப்புதல்வன்
பாந்தண்மிசைக்கிடந்தபாரளிப்பானாயினான்
ஏந்துதடந்தோளிராமன்றிருமடந்தை
காந்தனொருமுறையேகாடுறைவானாயினான்.

இ-ள். வேந்தன்பணியின் ஆல் — அரசன்பணித்த இரண்டு
லொன்றால், கைகேசிமெய் புதல்வன்—கைகேசிக்குரிய புத்திரனு

தாமரைகள் செவப்பேறவும், தாம்பதைத்து—தாங்களுடல் பதைபதைத்து, ஊதைஎறிய ஒசிபூங்கொடிஒப்பார்—பெருங்காற்றுவீசத்துவளும் பூங்கொடியையொத்தவராய், பார்சேர்ந்தார்—நிலத்திற்சோர்ந்து கிடந்தார்கள்.

ஒப்பார் முற்றெச்சம். 98

ஆவாவரசனருளிலனேயாமென்பார்
காவாவறத்தையினிக்கைவிடுவேம்யாமென்பார்
தாவாதமன்னர்தலைத்தலைவீழ்ந்தேங்குகின்றார்
மாவாதஞ்சாய்த்தமராமரமேபோல்கின்றார்.

(இ-ள்.) தாவாதமன்னர் (தந்தமக்குரிய நிலைபிறழின்றி) கெடாத அரசர்கள், அரசன்—தசரதச் சக்கரவர்த்தி, ஆவா—ஐயோ, அருளிலனே ஆமென்பார்—சிறிதுங் கருணையில்லாதவனே யாமென்பவரும், அறத்தை (இதுகாறும் நாம்காத்துவந்த) தருமத்தை, யாம்இனிகாவாமல் கைவிடுவேம் என்பார் நாம் இனிப்பாதுகாவல் கைவிடுகின்றோமென்பவருமாய், மாவாதஞ்சாய்த்த மராமரம் ஏபோல்கின்றார்—பெருங்காற்றுமோதிக் கீழேசாய்த்த மராமரத்தினையே யொத்து, தலைத்தலை வீழ்ந்து ஏங்கினார்—இடந்தோறு மிடந்தோறும் வீழ்ந்து வருந்தினார்கள்.

ஏங்கினார், போல்கின்றார் முற்றெச்சங்கள் அறக்கடவுள் நல்லோரைக்காவாமையாற் பயனில்லையென்பார் அறத்தையினிக்கைவிடுவேம் என்றார். 99

கிள்ளையொடுபூவையழுதகிளர்மாடத்
துள்ளுறையும்பூசையழுதவுருவறியாப்
பிள்ளையழுதபெரியோரையென்சொல்ல
வள்ளல்வனம்புகுவானென்றுரைத்தமாற்றத்தால்

(இ-ள்.) வள்ளல் வனம்புகுவான்என்று உரைத்தமாற்றத்தால்—இராமமூர்த்தி காட்டிற்குச்செல்லுகின்றானென்று கூறிய சொல்லால், கிள்ளையொடுபூவை அழுத—கிளியோடு நாகணவாய்ப் புள்ளுமழுதன, கிளர்மாடத்து உள்உறையும் பூசை அழுத—விளங்கும்மேன்மாடத்தில் வசிக்கும்பூனைகளுமழுதன, உருஅறியாத பிள்ளை அழுத—இவர்நமக்குறவினரயலினரென்றறியாத பிள்ளைகளும் அழுதன, பெரியோரை என்சொல்ல—பகுத்தறியும் பெரியோர்பட்டபாட்டை யென்னசொல்லக்கடவேன்

பகுப்பறிவின்மையால்பிள்ளையழுதஎன்று அஃறிணைமுடிபுதந்தார் "உயர்திணையென்மனார் மக்கட்சுட்டே" என்னும் சூ-ஆல். அழுத சொல்லவியப்கோள்வினைமுற்று. அகரவீறுவியங்கோட்பொருட்டு. அழுத சாரியைபெறாதுவந்த பலவின்பாற்படர்க்கை வினைமுற்றின்முன் வந்தவல்லெழுத்தியல்பாதல் "செய்யிய" என்னும் சூ-இல் அஃறிணைப்பன்மை என்பதனால். 100

சேதாம்பற்போதனையசெங்கனிவாய்வெண்டளவப்
போதாம்பற்றோன்றப்புணர்முலைமேற்பூந்துவள
மாதாம்பற்றென்னமழைக்கணீராலியுக
நாதாம்பற்றாமழலைநங்கைமாரேங்கினார்

(இ-ள்.) நாதாம்பற்றாத மழலைநங்கைமார்—நாவில் பொருளமையாத

மழலைச்சொல்லையுடையபெண்கள், சேதாம்பல்போதுசெங்கனி அனையவாய்—செவ்வாம்பல் மலரையும்செவந்த கோவைக்கனியையுமொத்தவாயால், வெள்ளளவம்போது ஆம்பல்தோன்ற—வெள்ளிய முல்லைப்போதையொத்த பற்கள் தோன்றவும், புணர்முலைமேல்பூதாளம் மாதாம்புஅற்றால்என்ன—நெருங்கிய தனத்தின் மேல்பொலிவையுடைய முத்துவடமற்றாற்போல, மழைகண்ணீர் ஆலிஉக—மேகம்போன்றகண்களினின்றுநீர்த்துளிசிந்தவும், ஏங்கினார்—அழுதார்கள்.

போதுமலரும் பருவத்தையுடைய அரும்பு பொருளமையாத மழலைச் சொல்என்றது சோற்றுக்குச்சோச்சியென்றலை "உவமைக்குவமையில்லென மொழிப" என்றதனால் சேதாம்பற்போது செங்கனிஎன்னையென மாற்றிக் கொள்க. சோம்பல்செம்மை ஆம்பல் எனப்பிரித்துப் பண்பீறுகெட்டு முதனீண்டு முன்னின்றமகரமெய் தகரமெய்ஆகத்திரிந்து நின்றதெனக்கொள்க.

ஆவுமழுதவதன் கன்றழுதவன்றலர்ந்த
பூவுமழுதபுனற்புள்ளழுதகள்ளொழுகுங்
காவுமழுதகளிறழுதகால்வயப்போர்
மாவுமழுதனவம்மன்னவனைமானவே.

(இ-ள்.) அம்மன்னவனைமான— அந்தசாதனையொப்ப. ஆஉம்அழுத— பசுக்களுமழுதன, அதன்கன்றுஅழுத—அதன்கன்றுகளுமழுதன, அன்று அலர்ந்தபூஉம் அழுத—அப்பொழுதலர்ந்தமலர்களுமழுதன, புனல்புள் அழுத—நீர்வாழ்பறவைகளழுதன, கள்ஒழுகும் காஉம்அழுத—தேன்சிந்துஞ் சோலையுமழுதன, களிறுஅழுத—யானைகளுமழுதன கால்வயம்போர் மாஉம்அழுத—கால்வலிய போர்த்தொழிலையுடைய குதிரைகளுமழுதன

"மடப்பெரியசாழை" என்றார்போலக் கால்வயம்எனவந்தது. 102

ஞானியுமுய்கலானென்றே நாயகனைக்
கானேயுமென்றுரைத்தகைகேசியுங்கொடிய
கூனியுமல்லாற்கொடியார்பிறருளரோ
மேனியுமின்றிவெறுநீரேயாயினார்

(இ-ள். ஞானியும்உய்கலான்என்றது—(இருவகைப்பற்றையுங்கடந்த) மெய்ஞ்ஞானியு மிதனைக்கேள்வியுற்றால் உயிர்பிழையானென்றுகருதாது, நாயகனைகான் ஏயும்என்று உரைத்தகைகேசிஉம்—தன்கணவனை நோக்கி இராமமூர்த்திகாட்டில்வசிக்க வரம்கொடும்என்று கூறியகைகேசியென்பவளும், கொடியகூனியும் அல்லாமல்—கொடுந்தொழிலையுடைய கூனியென்பவளுமல்லாமல், கொடியார்பிறர்உளர்ஓ—உலகிற்கொடுந்தொழிலையுடையவர்களுண்டா, மேனிஉம் இன்றிவெறு நீர்ஏ ஆயினார்—தங்கள் மேனியுமல்லாமல் மற்றையவயங்கள்முற்றும் கண்ணீர்வடிவமுடையவரானார்கள்.

கண்ணீர்பெருக்குப் பாதமளவும் பெருகிநிற்றலால் மேனியுமின்றி வெறுநீரேயாயினார் எனவும், உலகியல்சிறிதும் வேண்டாதஞானியுமுய்கலானென்றலால் மற்றையோர் உய்கலார்எனவுங்கூறினார். ஞானி, கூனி, மேனி இவற்றி னீற்றிகரம் நீட்டல்விகாரம். 103

தேருறுதறிவிழந்தாரெங்குலப்பார்தேரோட
நீறாகிச்சுண்ணம்நிறைந்ததெருவெல்லாம்
ஆறாகியோடினகண்ணீரருநெஞ்சம்
கூறாகியோடாதவித்துணையேகுற்றமே

(இ-ள்.) தேரோடநீறு ஆகிசுண்ணம் நிறைந்ததெருவெல்லாம்—தேர்கள் செல்ல நீறாய்ச்சுண்ணப்பொடிநிறைந்த தெருக்களெல்லாம், கண்ணீர்ஆறு ஆகிஓடின—கண்ணினீர்பெருக்கெடுத்தோடின (ஆதலால்) தேருறுதுஅறிவு இழந்தார் எங்கு உலப்பார்—தம்மை யறியாமலறிவிழந்தவர்தாம் எங்கு அளவறுக்கப்படுவார், அருநெஞ்சம் கூறுஆகி ஓடாதஇத்துணை உம்குற்றம்—கண்களுக்குப் புலப்படாதமனம் பிளவுபட்டு ஓடாத இவ்வளவு தானவர்களுக்குக் குறை.

குற்றம் குறுமைபகுதி ஈறுகெடுத்தூம் றகரமெய் இரட்டிமதலும்சந்தி, அம்பண்புப்பெயர்விகுதி. 104

மண்செய்தபாவமுளதென்பார்மாமலர்மேற்
பெண்செய்தபாவமதனிற்பெரிதென்பார்
புண்செய்தநெஞ்சைவிதியென்பார்பூதலத்தோர்
கண்செய்தபாவங்கடலிற்பெரிதென்பார்.

(இ-ள்.) மண்செய்தபாவம்உளதுஎன்பார்—மண்ணுலகுதான் செய்தபாவமுண்டு என்பவரும், மாமலர்மேல்பெண்செய்தபாவம் அதனில்பெரிது என்பார்—பெருமையமைந்த தாமரைமேல்வசிக்கும் இலக்குமிசெய்த பாவமதனிலும் பெரிதென்பவரும், விதிநெஞ்சை புண்செய்தஎன்பார்—ஊழ்நமது மனத்தைப் புண்படுத்தினதென்பவரும், பூதலத்தோர் கண்செய்த பாவம்கடலில் பெரிதுஎன்பார்— நிலவுலகிலுள்ளோர் கண்கள்செய்த பாவம்கடலினும் பெரிதென்பவரும்.

தனக்குரியனு காமையால் மண்செய்தபாவமுளது எனவும், தன்னை நுகர்தற்கு இல்லாமையால் மாமலர்மேற் பெண்செய்தபாவமதனிற் பெரிது எனவுங்கூறினர். இதுமுதல் ஊந்தாதுஎன்பதுகாறும் ஒருதொடர் 105

ஆளான்பரதனரசென்பாரய்யனினி
மீளானமக்குவிதிகொடிதுகாணென்பார்
கோளாகிவந்தவாகொற்றமுடிதானென்பார்
மாளாதநம்மின்மனம்வலியராரென்பார்.

(இ-ள்.) பரதன்அரசு ஆளான்என்பார்—பரதாழ்ந்தனல் லொழுக்கமுடையனாதலால் தன்மூத்தானுக்குரிய அரசினையாளான், இனி அய்யன்மீளான்—இனி இராமமூர்த்தி காட்டிற்குச்செல்வானேயன்றி (அவன்வேண்டுகோளாலாயினும்) இந்நாட்டிற்குத்திரும்பான்—(ஆதலால்,) நமக்குவிதி கொடிது காண்என்பார்—நமக்கு வாய்த்த ஊழோகெட்டது என்பவரும், கொற்றம் முடிதான் கோள்ஆகிவந்த ஆறுஎன்பார்—வெற்றியமைந்த முடி இராமமூர்த்திக்குச் சூட்டுகையுலகிற்குத் தீக்கோளாய்வந்தது என்பவரும், மாளாத

நம் இன்மனம் வலியர்ஆர் என்பார்—இதனைக்கண்டுயிர்விடாத நம்மைப்பார்க்கிலும் கன்னெஞ்சர்யார் என்பவரும்.

இராமமூர்த்திக்கு முடிசூட்டத்தொடங்கியது காட்டிற்குச்செல்ல நேர்ந்ததால் கோளாகி வந்தவாகொற்ற முடிதான்என்பார் என்றனர். 106

ஆதியரசனருங்கேகையன்மகண்மேற்
காதன்முதிரக்கருத்தழிந்தானென்பார்
சீதைமணவாளன்றன்னோடுந்தீக்கானம்
போதுமதுவன்றேற்புகுதுமெரியென்பார்.

(இ-ள்.) ஆதி—முதலில், அரசன்—தயரதன், அருங்கேகையன்மகள்மேல்—பிறர்வெல்லுதற்கரிய கேகையநாட்டரசன் புத்திரியாகிய கைகேசியின்மேல், காதல்முதிரகருத்து அழிந்தான்என்பார்—ஆசைமுதிர்தலால் மனநிலைகெட்டனனென்பவரும், சீதைமணவாளன் தன்னொடும்—இராமமூர்த்தியோடும், தீகானம்போதும்—தீக்கொப்புளிக்குங் காட்டிற்குச்செல்வோம், அது அன்றேல்—(அச்செல்லுதல்) நாம்ஒழிந்தால், எரிபுகுதும்என்பார்—நெருப்பில்விழலாம் என்பவரும்.

ஆம் கட்டுரைச்சுவைப் பொருள்படவந்த இடைச்சொல். போதும்எதிர்காலத்தன்மைப் பன்மைவினைமுற்று புகுஎன்னும் பகுதி, ஈறுகெட்டு முதல் நீண்டு நின்றபோ பகுதி, தும் விகுதி. 107

கையானிலந்தடவிக்கண்ணீர்மெழுகுவார்
உய்யாள்போற்கோசலையென்றோவாதுவெய்துயிர்ப்பார்
ஐயாவிளங்கோவேயாற்றுதிபோநீயென்பார்
நெய்யாரழலுற்றதுற்றாரந்நீணகரார்

(இ-ள்.) அந்நீள்நகரார்—அந்தப்பெரியநகரத்திலுள்ளவர்களிற்சிலர், நிலம்கையால் தடவிக்கண்ணீர் மெழுகுவார்—நிலத்தினைக்கையாற் றடவிக்கண்ணீரினால் மெழுகுவாரும், கோசலைஉய்யாள்போல் என்று ஓவாது வெய்துயிர்ப்பார்—கௌசலாதேவி உயிர்பிழைப்பாள்போலு மென்றுசிலர்இடைவிடாது பெருமூச்செறிவாரும் ஐயா—பிள்ளாய், இளங்கோவே—இளையபெருமானே, நீஆற்றுதி என்பார்—நீயுந்தரிப்பாயோவென்று சிலர்சொல்லுவாருமாய் நெய்யார் அழல் உற்றது உற்றார்—நெய் நிறைந்த நெருப்பையடைந்தது போலமனங்கொதித் தெரிந்தார்கள்.

போல் ஒப்பில்போலி யிடைச்சொல். 108

தன்னூறிவள்வேறில்லைதன்மகற்குப்பார்கொள்வான்
எள்ளூறியகருமந்நேர்ந்தாளிவளென்று
கள்ளூறுசெவ்வாய்க்கணிகைகாண்கைகேசி
உள்ளூறுகாதலிலள்போலென்றுள்ளழிந்தார்.

(இ-ள்.) தன்ஊறு இவள்வேறு இல்லை—(இப்போதுமுடிந்தஇடையூறு) இவளையன்றிவேறில்லை, தன்மான்குபார்கொள்வான் எள்ஊறியகருமம்நேர்ந்தாள்—தன்னுடையபுத்திரனுக்கு நிலவுரிமைகொள்ள (அரசனுக்கு) எள்ளுந் தண்ணீருமிறைக்குங் கருமத்திற்குடம்பட்டாள்—(ஆதலால்) கைகேசிகள்

ஊறுசெவ்வாய்க்கணிகையாளென—கைகேசியானவள்மதுவூற்றெடுக்குஞ்செவ்ந்தவாயையுடையவிலைமாது என்றுயாவருஞ்சொல்ல, உள்ஊறுகாதல் இலள்போல்என்று உள்அழிந்தார்—மனத்திற் சுரக்குமன்பில்லாதவள் போலுமென்று கருத்தழிந்தார்கள்.

என்றுசெயவெனெச்சத்திரிபு, போல் ஒப்பில்போலி. 109

நின்றுதவமுஞற்றித்தானிரனேர்ந்ததோ
வன்றிவ்வுலகத்துளாருயிராய்வாழ்வாரைக்
கொன்றுகளையக்குறித்தபொருளன்றோ
நன்றுவரங்கொடுத்தநாயகற்குநன்றென்பார்

(இ-ள்.) தான்—அரசன் (இராமமூர்த்திக்குமுடிசூட்டக்கருதியது) நின்று தவம்உஞற்றி நிரனேர்ந்ததோ—தான்காட்டில்நின்று தவத்தைச்செய்துதன்கருத்துமுடிய உடன்பட்டதோ, அன்று—அல்ல, இஉலகத்துஉள் ஆர்உயிர்ஆய்—வாழ்வாரை இந்நிலவுலகில் பெறுதற்கரிய உயிராய்வாழுமக் கட்பிறப்பினரை, கொன்றுகளையக்குறித்தபொருள் அன்றோ—கொலைசெய்து போகக்கருதிய செய்கையல்லவா, வரம்கொடுத்த நாயகற்கு—(கைகேசிக்கு) வரங்கொடுத்த அவ்வரசனுக்கு, நன்றுநன்று என்பார் (இச்செய்கை) நல்லது நல்லதுஎன்பவரும்.

நன்று நன்று அவலப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். ஆருயிராய்வாழ்வாரென்றது பகுப்பறிவுடையராய மக்கட்பிறப்பினரை. 110

பெற்றுடையமண்ணவனுக்கீந்துபிறந்துலகம்
முற்றுடையகோவைப்பிரியாதுமொய்த்தீண்டி
உற்றுறைதும்யாருமுறையவேசின்னாளில்
புற்றுடையகாடெல்லாநாடாகிப்போமென்பார்

(இ-ள்.) பிறந்து பெற்றுடைய மண் அவனுக்கு ஈந்து—முன்பிறந்துதான்பெற்ற நிலவுலகைக் கைகேசிக்குக்கொடுத்து, உலகம் முற்றுடையகோவைப் பிரியாது மொய்த்து ஈண்டி—உலகமுழுமையுந் தமக்கே யுரிமையாகவுடைய இராமமூர்த்தியை நாம்பிரியாமல் சூழ்ந்துநெருங்கி, உற்று உறைதும்—காடடைந்துவசிப்போம், யாரும் உறைய சிலநாள்இல்—எல்லாரும் வசித்தலால்சிலதினத்தில், புற்று உடைய காடுஎல்லாம் நாடுஆகிப்போம்என்பார் புற்றினையுடையகாடெல்லாம் நாடாய்ப்போமென்பவரும். 111

என்னேநிருபரியற்கையிருந்தவா
தன்னேரிலாததலைமகற்குத்தாரணியை
முன்னேகொடுத்துமுறைதிறம்பத்தம்பிக்குப்
பின்னேகொடுத்தாற்பிழையாதோமெய்யென்பார்.

(இ-ள்.) நிருபர்இயற்கை இருந்த ஆறுஎன்னே—அரசரியல்பு இருந்தவகையென்னவியப்பு, தன்நேர்இல்லாததலைமகற்குதாரணியைமுன்னேகொடுத்து—தனக்கொப்பில்லாத மூத்தபிள்ளைக்கு நிலவுலகைமுன்புகொடுத்து, முறைதிறம்ப—தமதுகுலமுறையாறுபட, தம்பிக்கு பின்னேகொடுத்தால்—

அதனைப்பின்பிறந்தவனுக்குப்பின்பு கொடுத்தால் மெய்பிழையாதோவென்பார் நீதியெந்தவறுதோ வென்பவரும். 112

கோதைவரிவிற்குமரற் கொடுத்தநில
மாதையொருவர் புணர்வாரவ் வஞ்சித்த
பேதைசிறுவனைப்பின் பார்த்துநிற்குமா
சீதைபிரியினுந் திராத்திருவென்பார்.

(இ-ள்) கோதைவரிவில் குமரன்கொடுத்த நிலமாதை யொருவர்புணர்வரா — முன்கைத்தோற் கட்டியில்கட்டமைந்த வில்லினையேந்திய இராமமூர்த்திக்கு உரிமையாகக்கொடுத்த பூதேவியைப்பின் ஒருவர்கூடுவரா, வஞ்சித்தபேதைசிறுவனை — வஞ்சித்துப்புணர்ந்த அறிவில்லாதகைகேசியின் புத்திரனை, சீதைபிரியினும் திருமாமகள் பின்பார்த்துநிற்கும் ஆ என்பார் — சீதாப்பிராட்டியின் நகரினின்று நீங்கினும் சீதேவியும் நீங்காமல் அவனைப்பின்னேநோக்கி நிற்பாளோவென்பவரும்

ஒருவற்குரியவளை மற்றொருவன் புணர்தல் வழக்கன்மையாலும், வஞ்சித்துப்புணரிலவனைச்செல்வம் அடையாமை முறையாதலாலும்இவ்வாறுகூறினர்

உந்தாது மெய்யார்ந்து உகவாது காலெறிய
நந்தாவிளக்கனைய நங்கைமார்
செந்தாமரைத்தடங்கட் செவ்வியருள்நோக்கம்
அந்தோபிரிதுமோ ஆவியோவென்பார்.

(இ-ள்) உந்தாது — தூண்டாமலும், மெய்யார்த்து உகவாது — தைலம் வார்க்காமலும், காலெறிய நந்தாதவிளக்கின் — காற்றுமோத அவியாமலு மெரியாநின்ற விளக்கைப்போல, நடுக்குகின்ற நங்கைமார் — மின்னுநடுங்காநின்றபெண்கள், செந்தாமரைதடங்கண் செவ்வி அருள்நோக்கம் — (இராமமூர்த்தியின்) செந்தாமரைமலரைப்போலப் பரந்தகண்களினழகிய அருட்பார்வையை, அந்தோபிரிதும்ஓ — ஐயோநாம்பிரிவோமா. ஆவியோ என்பார் — ஆவியே கொடிதென்பவருமானார்கள்

ஆனார்கள் என்னும்பயனிலை தொக்குநின்றதெனக்கொள்க. ஆ வியப் பிடைச்சொல், ஓ கொடுமைப்பொருளில்வந்த இடைச்சொல். 114

கலிநிலைத்துறை.

கேட்டாளிளையோன் கிளர்ஞாலம் வரத்தினாலே
மீட்டாளளித்தா ளவனந்தம்முனின் வெம்மைமுற்றித்
தீட்டாதவேற்கட் சிறுதாயெனையாவராலும்
மூட்டாதகாலக் கடைத்தீயென மூண்டெழுந்தான்.

(இ-ள்.) வெம்மைமுற்றி தீட்டாதவேல்கண்சிறுதாய் — கொடுமையிலமைந்து தீட்டாமற் கூர்மைவாய்ந்த வேலையொத்த கண்களையுடைய சிற்றன்னை, வரத்தின் ஆல்கிளர்ஞாலம் மீட்டாள் — தான்பெற்றவரத்தால் இராமமூர்த்திக்குரிமையான விளங்கும் நாட்டினைத் தனக்குரித்தாக்கி, தம்முன் இன்வனம் அளித்தாள்என்ன இளையோன்கேட்டான் — தம்முன்னோனாகிய இராமமூர்த்திக்குக் காட்டைக்கொடுத்தானென்று இளையபெருமாள் கேட்டனன், யாவராலும் மூட்டாத கடைத்தீ என்ன — எவராலு மூள்விக்கவமையாத ஊழித்தீயைப்போல, மூண்டெழுந்தான் — கோபமூண்டெழுந்தனன்.

வானும் நிலனும் மேல்நின்றுகீழ் பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய்நின்றமுறைநிரனிறைப் பொருள்கோளணி. விரிந்தன இதுவினைமுதற்பொருளில்வந்தது. வீழ்வ செயல்மேல்நின்றது. மும்மை குணியைக்குணமாகக்கூறுவதோர் மரபுவழுவமைதி. (120)

புவிப்பாவைபரங்கெடப்போருவந்தோரையெல்லாம்
அவிப்பானுமவித்தவராக்கையையண்டமுற்றக்
குவிப்பானுமெனக்கொருகோவினைக்கொற்றமௌலி
கவிப்பானுநின்றேனிதுகாக்குநர்காமினென்றான்.

(இ-ள்.) புவிபாவைபரம்கெட—பூதேவியின்பாரங்கெட, போர்உவந்தோரை எல்லாம் அவிப்பானும்—போர்த்தொழிலைவிரும்பி வந்தடைந்தவரையெல்லாம் அழிப்பவனும், அவித்து அவர்ஆக்கையை அழித்து அவர்கள் சரீரத்தை, அண்டம்முற்ற குவிப்பானும்—விண்ணுலகைமறைக்கக் குவிப்பவனும், எனக்குஒருகோ இன்ஐகொற்றம் மௌலிகவிப்பானும் நின்றேன்—எனக்கொருதலைவனாய் நின்ற இராமமூர்த்திக்கு வெற்றியமைந்த முடிசூட்டுவோனுமாகயானின்றேன். இதுகாக்குநர்காமின் என்றான்—இதனைக்காப்போர் காத்துக்கொள்ளுங்களென்று கூறி.

நகரம் எதிர்காலத்தில்வருதல் 'ஈங்கே" என்றமிகையால் என்றான்முற்றெச்சம். (121)

விண்ணாட்டவர்மண்ணவர்விஞ்சையர்நாகர்மற்றும்
எண்ணாட்டவர்யாவருநிற்கவொர்மூவராகி
மண்ணாட்டுநர்காக்குநர்வீட்டுநர்வந்தபோதும்
பெண்ணாட்டமொட்டேனினிப்பேருலகத்துளென்னா.

(இ-ள்.) விண்ணாட்டவர் மண்ணவர் விஞ்சையர் நாகர்—விண்ணுலகிலுள்ளவருமண்ணுலகிலுள்ளவரும் வித்தியாதரரும்நரகலோகத்தாரும், மற்றும் எண்நாட்டவர்யாவரும் நிற்க—இவரொழிந்தமற்றையெண்ணத்தக்க நாட்டிலுள்ளவர்களெல்லாரும்நிற்க, ஓர்மூவர் ஆகி—திரிமூர்த்திகளாகி மண்நாட்டுநர் காக்குநர்வீட்டுநர்வந்தபோதும்—உலகினைப்படைக்கும் பிரமனும் உயிர்களைக் காக்குந்திருமாலும் அழிக்குமுருத்திரமூர்த்தியும் போர்க்குவந்தபோதிலும், இனி பெண்நாட்டம் பேர்உலகத்துஉள் ஒட்டேன் என்னா—இனிப்பெண்கள்சஞ்சரித்தலைப் பெரியநிலவுலகில் வைக்கேனென்று. (122)

காலைக்கதிரோனடுவுற்றதோர்வெம்மைகாட்டி
ஞாலத்தவர்கோமகனந்நகரத்துநாப்பண்
மாலைச்சிகரத்துனிமந்தரமேருமுன்னை
வேலைத்திரிகின்றதுபோற்றிரிகின்றவேலை.

(இ-ள்.) ஞாலத்தவர்கோமகன்—உலகிலுள்ளவர்க்கரசனாகியஇளையபெருமாள், காலைக்கதிரோன் நடுஉற்றது ஓர்வெம்மைகாட்டி—காலையிலெழுந்த சூரியன் உச்சிப்பொழுதில் அடைந்தஒப்பில்லாத வெப்பத்தைத்தன்கோபத்தினாற்காட்டி, அந்நகரத்துநாப்பண்—அந்த அயோத்தி நகரத்தினடுவில், [illegible] சிகரங்களை யுடைய ஒப்பில்லாத மந்தர

கிரியென்னுமேரு, முந்தை—(அமுதெழக்கடை-யும்) முற்பொழுதில், வேலை திரிகின்றதுபோல—பாற்கடலிற் சுழன்றதுபோல, திரிகின்றவேலை—திரி ந்துசுழலுஞ்சமையத்தில்.

மேருஎல்லாமலைகளிலும் உயர்ந்ததாதலால் உயர்வுதோன்றமந்தரமேரு என்றார். முந்தைமுந்துபகுதி ஐசாரியை. இது தனித்துச்சாரியையேற்றல் "ஐ யீற்றுடைக்குற்றுகரமுமுளவே" என்ற சூ-ஆல். (123)

வேற்றுக்கொடியாள்விளைவித்தவினைக்குவிம்மித்
தேற்றத்தெளியாதயர்சிற்றவைபாலிருந்தான்
ஆற்றற்றுணைத்தம்பிதன்விற்புயலண்டகோளம்
கீற்றுற்றுடையப்படுநாணுருமேறுகேட்டான்.

(இ-ள்.) வேறுகொடியாள் விளைவித்த வினைக்குவிம்மி—தனக்குமாற்று ளாகிய கொடியகைகேசிசெய்வித்த தீவினைக்குமனம்பொருமி, தேற்றதெளி யாது அயர்சிற்றவைபாம்இருந்தான்—தேற்றவுந்தெளியாமல் மனஞ்சோருஞ் சிற்றன்னையின்பக்கத்திருந்தஇராமமூர்த்தி, ஆற்றல்துணைதம்பிதன்வில்புயல்-வலிமையமைத்த துணையாயுள்ளதமது தம்பியாகிய இளையபெருமாளின்வில் லாகியமேகத்தில், அண்டகோளம்கீற்று ஒத்துஉடையபடும் நாண்உருமேறு கேட்டான்—அண்டவட்டங்கள் கீற்றுக்கீற்றாயுடை படவெழுந்த நாணொசை யாகிய இடியேற்றைக்கேள்வியுற்றனன். (124)

வீறாக்கியபொற்கலன்வில்லிடவாரமின்ன
மாறாத்தனிச்சொற்றுளிமாரிவழங்கிவந்தான்
காறாக்கதிமிர்ந்துபுகைந்துகனன்றுபொங்கும்
ஆறாக்கனலாற்றுமொரஞ்சனமேகமென்ன.

(இ-ள்.) கால்தாக்கதிமிர்ந்து புகைந்துகனன்றுபொங்கும்—காற்றுமோ தஅதிகரித்துப் புகைந்துகொதித்தெரியும், ஆறாதகனல்ஆற்றும் ஓர்அஞ்சன ம்மேகம்என்ன—ஆறாதநெருப்பினை யாற்றுமொருகரிய மேகம்போல, வீறு ஆக்கிய பொன்கலன்வில்லிட—தமக்கொப்பில்லா மற்கம்மியணமைத்த பொ ன்னாலாகிய ஆபரணங்கள்ஒளிவீசவும், ஆரம்மின்ன—முத்தாரங்கள் விளங்க வும், மாறாததனிசொல் துளிமாரிவழங்கிவந்தான்—தண்மைமாறாத ஒப்பில் லாதசொற்களாகிய மழைத்துளிகளைச் சொரிந்து இராமமூர்த்திவந்தனர்.

கனன்றுஇறந்தகாலவினையெச்சம் கனல்பகுதி. (125)

மின்னொத்தசீற்றக்கனல்விட்டுவிளங்கநின்ற
பொன்னொத்தமேனிப்புயலொத்ததடக்கையானை
என்னத்தவென்னீயிமையோரைமுனிந்திலாதாய்
சன்னத்தமாகித்தனுவேந்துதற்கேதுவென்றான்.

(இ-ள்.) மின்ஒத்தசீற்றம்கனல்விட்டுவிளங்கநின்ற—மின்னலையொத்த கோபமாகிய நெருப்பினைவீசிவிளங்கும்படிநின்ற, பொன்ஒத்தமேனி புயல் ஒத்ததடகையானை—பொன்னையொத்த மேனியையுடைய மேகம்போலக் கொடுக்குநீண்டகையையுடையஇளையபெருமானைநோக்கி, என்அத்த—என து தலைவனே, என்—இதுவென்ன, நீ இமையோரைமுனிந்திலாதாய்—நீதேவ

ர்களைக்கோபியாதவன் (நீ இமைப்பொழுதும் முனிந்திலாதாய், நீயிமைப்பொழுதாயினும் கோபமில்லாதிருப்பவன்) சன்னத்தனாகி தனுவேந்துதற்கு ஏதுஎன்றான்—இப்போது யுத்தசன்னத்தனாகி வில்லினையேந்திக் கோபித்தற்குக்காரணமென்னவென்றுவினவினான்.

இமையோரைஎன்றது பிறிமொழிச்சிலேடையணி. (126)

மெய்ம்மையைச்சிதைவித்துநின்மெய்ம்முறைநீத்தநெஞ்சம்
மைம்மையிற்கரியாளெதிர்நின்னைநின்மௌலிசூட்டல்
செய்ம்மைக்கருதித்தடைசெய்குநர்தேவரேனும்
துய்ம்மையைச்சுடுவெங்கனலிற்சுடுவான்றுணிந்தேன்,

(இ-ள்.) மெய்ம்மைசிதைவித்து—உண்மைநெறியையழித்து, நின்மெய்முறைநீத்த—உனக்குரிய உண்மையமைந்த குலமுறையைக்கெடுத்த, நெஞ்சம்மைமையிற்கரியாள்எதிர்—தனதுமனமையினுங் கரியகைகேசியினெதிரே, நின்னைநல் மௌலிசூட்டல்செய்பகருதி—உன்னைவிதிப்படியமைந்த முடிசூட்டவெண்ணி, தடைசெய்குநர்தேவரேனும்—(நானெடுத்தகாரியத்தை) தடைசெய்யவருவோர் தேவர்களாயிருந்தாலும், துய்சுடுவெங்கனலில்—பஞ்சினுனியைச் சுடுங்கொடிய நெருப்பைப்போல, சுடுவான் துணிந்தேன்—சுடத்துணிந்தேன்.

உண்மைநெறியை யழித்தலாவது அரசன்கூறியதைக்கெடுத்தல். குலமுறையைக்கெடுத்தலாவது மூத்தவனுக்குஉரித்து அரசிலமையென்பதைநீத்து இளைத்தானுக்குப்பெயரவுரைசம் நீபருதி. சுடுவானென்றிக்காலவினையெச்சம்வானென்விகுதி. (127)

வலக்கார்முகமென்கையதாகவவ்வானுளோரும்
விலக்காரவர்வந்துவிலக்கினுமென்கைவாளிக்
கிலக்காவெரிவித்துலகேழினொடேழுமன்னர்
குலக்காவலுமின்றுனக்கியான்றரக்கோடியென்றான்.

(இ-ள்.) வலம்கார்முகம் என்கையது ஆக—வெற்றியமைந்தவில்என்கையிலிருக்க, அவானுள்ளோரும் விலக்கார்—(நான்கருதியதுக்கிடையூறாக) அந்தவிண்ணுலகிலுள்ள தேவர்களும் வந்துவிலக்கார்கள், அவர்வந்துவிலக்கினும் அத்தேவர்களொருகால்வந்துவிலக்கினாலும், என்கைவாளுக்கு இலக்குஆக எரிவித்து—என்கையிலுள்ள அம்புக்குஅறிகுறியாகவவரையழித்து, உலகு எழினொடுஎழும்—பதினான்குலகங்களையும், மன்னர்குலமும்காவல்—அங்குள்ள அரசர் கூட்டங்களையுங்காத்தல், உனக்குஇன்றுயான்தர கோடிகின்றான்—உனக்குஇப்பொழுதுயான்தரக்கொள்வாயென்றுஇளையபெருமாள்கூறினான்

காவல் என்பதனிறுதியிலுள்ள உம்மையைப்பிரித்துக் கூட்டுக. இலக்காகஒருசொல். (128)

இளையானிதுகூறவிராமனியைந்தநீதி
வளையாவருநன்னெறிநின்னறிவாகுமன்றே
உளையாவறம்வற்றிடவூழ்வழுவுற்றபோதும்
விளையாதநிலத்துனக்கென்கொல்விளைந்ததென்றான்.

(இ-ள்.) இளையான்இதுகூற இளையபெருமாளிதனையெடுத்துக்கூற, இராமன்—இராமமூர்த்தி, இயைந்த நீதிவிளையாதுவரும் நல்நெறியின்அறிவு ஆகும்அன்றஎ—நீதிகோடாதமைந்தநல்லொழுக்கம உன்னறிவல்லவா, உளையாதஅறம்வற்றிட ஊழ்வழுவுற்ற சீற்றம்விளையாதநிலம்உனக்கு—ஒருகாலத்தும்அழிவில்லாததருமங்கெட முறைவழுவிய கோபமென்னும் பயிர்விளையாதநிலமாகிய உன்னிடத்தில், எங்ஙன்விளைந்ததுஎன்றான்—எவ்வாறுவிளைந்ததுஎன்றுகூறினார்.

அத்துவேண்டாவழிச்சாரியை. கு உருபுமயக்கம். சீற்றந்தைஉருவகஞ் செய்யாமையால் ஏகதேசவுருவகம். (129)

நீண்டானதுரைத்தலுநித்திலந்தோற்கநக்குச்
சேண்டான்றொடர்மாநிலம்நின்னதென்றுந்தைசெப்பப்
பூண்டாய்பகையாலிழந்தேவனம்போதியென்றால்
யாண்டோவடியேற்கினிச்சீற்றமடுப்பதென்றான்.

(இ-ள்) நீண்டான் அதுஉரைத்தலும்—பெருமையின்மிக்க இராமமூர்த்தியதனைக்கூற, நித்திலம்தோற்கநக்கு—முந்தந்தோற் படையப்பெருநகை செய்து, சேண்தான்தொடர் மாநிலம்நின்னது என்றுஉந்தைசெப்ப பூண்டாய்—அகன்றபெரிய நிலவுலகு உன்னுடையதென்று உன்பிதா கூறக்கைக்கொண்டாய், பகைஆல்இழந்தேவனம்போதிஎன்றால்—பகைமையையுடைய சிற்றன்னையாலந் நிலவுலகையிழந்தே காட்டிற்செல்வாயானால், அடியேற்கு இனிசீற்றம் அடுப்பதுயாண்டு ஓஎன்றான்—அடியேனுக்கு இனிக்கோபம் பிறப்பது எவ்விடத்தோவென்றுகூறினான்.

சிற்றன்னையிடத்து என்பான்யாண்டோவென்றான். நின்னதுபொருளடியாகப்பிறந்த ஒன்றன்பாற்படர்க்கைக்குறிப்புவினைமுற்று நீஎன்னும்பகுதி திரிந்துநின்றநின்பகுதி, னகரத்தோற்றம்சந்தி, அசாரியை, துவிகுதி. (130)

நின்கட்பரிவில்லவர்நீள்வனத்துன்னைநீக்கப்
புன்கட்பொறியாக்கைபொறுத்துயிர்போற்றுகேனோ
என்கட்புலமுன்னுனக்கீந்துவைத்தில்லையென்ற
வன்கட்புலந்தாங்கியமன்னவன்காண்கொலென்றான்

(இ-ள்.) நின்கண்பரிவில்லவர்நீள்வனத்துஉன்னைநீக்க—உன்னிடத்தன்பில்லாத தாய்தந்தையர் பெரியகாட்டிலுன்னைப்போக்க, புன்கண்பொறியாக்கைபொறுத்து உயிர்போற்றுகேன்ஓ—அதனைப்பார்த்துத்) துன்பத்தைவிளைக்குமிந்திரியங்களமைத்த சரீரத்தைச்சுமந்து உயிரைப்பாதுகாப்பேனோ (காவேனென்றபடி) என்கட்புலம் முன்உனக்கு ஈந்துவைத்து இல்லைஎன்ற-என் கண்களுக்குமுன்னே நிலவுலகையுனக்குத்தந்து மீளவில்லையென்று கூறிய, வன்கட்புலம்தாங்கிய மன்னவன்காண் கொல்என்றான்—கண்ணோட்டமில்லாமையை மேற்கொண்ட அரசன்படும்பாட்டை முன்னே காணுயென்று கூறினான்.

யாக்கைதொழிலர்குபெயர் எனக்கொள்ளுதலுமன்றி, யாபகுதி, குசாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடுஞ்சந்தி, ஐ செயப்படுபொருளில் வந்த

விகுதியாகக் கொண்டு செயப்படு பொருளில்வந்த தொழிற்பெயராகக்கொள்ளலும் அமையும், யகரமெய்கெட்டு ஆக்கையெனவருதலுமுண்டு. (131)

பின்குற்றமன்னும்பயக்குமரசென்றல்பேணேன்
முன்கொற்றமன்னன்முடிகொள்கெனக்கொள்ளமூண்ட
தென்குற்றமன்றோவியன்மன்னவன்குற்றம்யாதோ
மின்குற்றொளிரும்வெயில்தீக்கொடமைந்தவேலோய்.

(இ-ள்.) மின்குற்று ஒளிரும்வெயில்தீகொடு அமைந்தவேலோய்—மின்னொளியைவென்று விளங்கும்ஒளியையும் கோபாக்கினியையுங் கொண்டமைந்தவேலையேந்திய இளையவனே, அரசு—அரசிறல், மன்னும்குற்றம்பின் பயக்கும் என்றல்பேணேன்—நிலைபெற்றகுற்றத்தைப் பின்தருமென்று அதனைவிரும்பாதயான், கொற்றம்மன்னன் முன்முடிகொள்கஎன்ன கொள்ளமூண்டது என்குற்றம்அன்றோ—வெற்றியையுடைய நமது பிதாமுன்புமகுடஞ்சூடக் கடவாயென்று கூறச்சூட்டிக்கொள்ள எழுந்தது என்பிழையல்லவா, இயல்மன்னவன் குற்றம்யாதோ—வலிமையையுடைய வவ்வரசனிடத்துப்பிழையாது (இல்லையென்றபடி.)

குற்று வினைப்பகுதி இறந்தகாலவினையெச்சப்பொருளில்வந்தது. (132)

நதியின்பிழையன்றுநறும்புனலின்மையற்றே
பதியின்பிழையன்றுபயந்துநமைப்புரந்தாள்
மதியின்பிழையன்றுமகன்பிழையன்றுமைந்த
விதியின்பிழைநீயிதற்கென்னைவெகுண்டதென்றான்.

(இ-ள்.) மைந்த—இளையவனே, நறும்புனல் இன்மை நதியின்பிழை அன்று—நல்லநீரில்லாதிருத்தல் நதியின்பிழையல்ல, அற்று—அதுபோல, பதியின்பிழை அன்று—(நாம்காட்டிற்குச்செல்லுகை) அரசன்தவறல்ல நம்மைபயந்து புரந்தாள்மதியின் பிழைஅன்று—நம்மைப்பெற்றுவளர்த்த கைகேசியன்னையினறிவின் தவறல்ல, மகன்பிழைஅன்று—அவள்புத்திரனாகிய பரதாழ்வான் தவறல்ல, விதியின்பிழை—நமது ஊழ்வினைதவறு, நீ இதற்குவெகுண்டது என்னை என்றான்—நீயிதற்குக்கோபித்தது என்னகாரணமென்று கூறினார். (133)

உதிக்கும்முலையுள்ளுறுதீயெனவூதைபொங்கக்
கொதிக்கும்மனமெங்ஙனமாற்றுவென்கோளிழைத்தாள்
மதிக்கும்மதியாய்முதல்வானவர்க்கும்வலிதாம்
விதிக்கும்விதியாகுமென்விற்றொழில்காண்டியென்றான்.

(இ-ள்.) ஊதைபொங்க உலைஉள்உதிக்கும் உறுதீஎன்ன—துருத்தியாற்காற்றதிகரிக்கக்கொல்லனுலைக்களத்தில்தோன்றுமிக்கதீயைப்போல், கொதிக்குமனம் எங்ஙனம் ஆற்றுவென்—கொதிக்கின்ற வென்மனத்தையெவ்வாறாற்றப்போகின்றேன், கோள்இழைத்தாள்மதிக்குஉம்மதிஆய்—உனக்குத்தீங்குசெய்த கைகேசியினறிவுக்கு மேம்பட்டவறிவாய், முதல்வானவர்க்குஉம்வலியது ஆம்விதிக்கும் விதிஆகும் என்வில்தொழில் காண்டிஎன்றான்—

ள்ளதேவர்களுக்கும் வெல்லுதற்கரியவனாகும் ஈசனுடையதாகிய வென்னுடைய வில்லின் றொழிலைக் காண்பாயென்றிளையபெருமாள் கூறினான்.

ஆய்என்னு மிறந்தகாலவினையெச்சம் ஆரும்என்னும் பெயரெச்சத்தின் முதனிலையையும் அப்பெயரெச்சம் வில்லென்னும் வினைமுதற்பொருளையுங் கொண்டன.

ஆய்தந்தவனவ்வுரைகூறலுமையநின்றன்
வாய்தந்தனகூறுதியோமறைதந்தநாவால்
நீதந்ததன்றேநெறியோர்கணிலாததின்ற
தாய்தந்தையென்றாலவர்மேற்சலிக்கின்றதென்னே

(இ-ள்.) ஆய்தந்தவன் அவ்வுரைகூறலும்—பலநூல்களையு மாராய்ந்த இளையபெருமாள் அந்தவார்த்தையைக்கூற, ஐய—ஐயனே, மறைதந்தநாவில்நின் வாய்தந்தனகூறுதியோ—வேதங்களைப்பயின்ற நாவினால் உனதுவாயில் வந்தனவற்றைப் பேசுகின்றாயோ, நெறியோர்கண் இல்லாததுநீதந்ததுஅன்றே—நல்லொழுக்க முடையாரிடத்தில் குலமுறையின்மை நீகொடுத்ததல்லவே, ஈன்றதாய்தந்தை என்றால் நம்மைப்பெற்ற தாய்தந்தையரிடத்தில் அது இருந்ததானால், அவர்மேல்சலிக்கின்றது என்னோ—(அவர்க்குப்படிந்தொழுகவேண்டுமேயன்றி) அவர்கள்மேல் நாம்சலித்துக் கோபிக்கிறது என்னகாரியம்.

குலமுறையின்மை மூத்தாயிருக்க இளையானுக்கு அரசியல்தருதல்.

நற்றாதையுநீதனிநாயகனீவயிற்றிற்
பெற்றாயுநீயேபிறரில்லைபிறர்க்குநல்கக்
கற்றாயிதுகாணுதியின்றெனக்கைமறித்தான்
முற்றாமதியம்மிலைந்தான்முனிந்தானையன்னான்.

(இ-ள்.) முற்றாமதியம் மிலைந்தான் முனிந்தானை அன்னான்—இளஞ்சந்திரனைத் தரித்தவனும் கோபிப்பவனுமாகிய உருத்திரமூர்த்தியை யொத்த இளையபெருமாள். பிறர்க்குநல்க கற்றாய்—தான்பெற்ற அரசியலைப்பிறர்க்குத்தரக்கற்றவனே, நல்தாதையும்நீ—எனக்கு நல்லபிதாவும்நீயே, தனிநாயகன்நீ—ஒப்பற்றதலைவனும்நீயே, வயிற்றில் பெற்றாயும்நீ—தாயும்நீயே, பிறர் இல்லை—(உன்னையன்றி) வேறொருவருமில்லை, இன்று இது காணுதி என்னகை மறித்தான்—இப்பொழுது இதனைக்காண்பாயென்று கையையசைத்தான். (136)

வரதன்பகர்வான்வரம்பெற்றவளாணிவ்வையம்
சரதம்முடையாளவளென்றனித்தாதைசெப்பப்
பரதன்பெறுவானினியான்படைக்கின்றசெல்வம்
விரதம்மிதினல்லதுவேறினியாவதென்றான்.

(இ-ள்.) வரதன்பகர்வான்—இராமமூர்த்தி கூறுகின்றார், வரம்பெற்றவள் அவள்—வரம்பெற்ற அக்கைகேசி, என்தனிதாதைசெப்ப—எனது ஒப்பில்லாதபிதாகூற, இவையம்சரதம்உடையாள்—இந்நிலஉலகை யுண்மையாகவுடையவள் (ஆதலால்)பரதன்பெறுவான்—இனிப்பரதாழ்வானடைவான், இனி

யான்படைக்கின்ற செல்வம்விரதம்எ—நானடைகின்றசெல்வம்தவமே,இதின் நல்லது இனிவேறுயாவதுஎன்றான்—இத்தவத்தைப்பார்க்கிலு மினிவேறுள் ளதுயாதென்றுகூறினர். (137)

ஆன்றான்பகர்வான்பினுமையவிவ்வையமையல்
தோன்றாநெறிவாழ்துணைத்தம்பியைப்போர்தொலேத்தோ
சான்றோர்புகழுந்தவத்தாயைவாதைகொண்டோ
ஈன்றாளைவென்றோவினியிக்கதந்தீர்வதென்றான்.

(இ-ள்.) பின்உம் ஆன்றான்பகர்வான்—மீளவுமிராமமூர்த்தி கூறுகின் றனர், ஐய—ஐயனே, இவையம்—இந்நிலவுலகில், மையல்தோன்றாதநெறி வாழ்துணை தம்பியைபோர் தொலேத்தோ—மயக்கமில்லாத நன்னெறியில் நின்றுவாழுந் துணைவனுகிய தம்பியைப்போர்த்தொழிலிற் கொலேசெய்தோ சான்றோர்புகழும்தவம்தாதையைவாதைகொண்டோ—அறிவானிறைந்தோர் புகழும் தவத்தையுடைய நமதுபிதாவைக்கொன்றோ, ஈன்றாளைவென்றோ— பெற்றதாயையுயிர் வாங்கியோ, இகதம்இனி தீர்வதுஎன்றான்—நீகொண்ட இக்கோபத்தினின்றினி நீங்குவதென்றுகூறினர். (138)

செல்லுஞ்சொல்வல்லானெதிர்தம்பியுந்தெவ்வர்சொல்லும்
சொல்லுஞ்சுமந்தேனிருதோளெனச்சோம்பியோங்குங்
கல்லுஞ்சுமந்தேன்கணைப்புட்டிலுங்கட்டமைந்த
வில்லுஞ்சுமக்கப்பிறந்தேன்வெகுண்டென்னையென்றான்.

(இ-ள்.) செல்லும்சொல் வல்லான்எதிர்—எங்குஞ்செல்லுஞ் சொல்வன் மையையுடைய இராமமூர்த்திக்குஎதிரே, தம்பிஉம்—இளையபெருமாளும், தெவ்வர்சொல்லும் சொல்உம்சுமந்தேன்—நம்பகைவரிகழ்ந்துகூறும் பழிச் சொல்லேயுஞ்சுமந்தேன், இருதோள்என்ன சோம்பிஓங்கும் கல்உம்சுமந்தேன் இரண்டுதோளென்று பெயர்பெற்றுச் சோம்பலடைந்துயர்ந்த மலேகளேயுஞ் சுமந்தேன், கணைப்புட்டில் உம்கட்டுஅமைந்த வில்லும்சுமக்கப்பிறந்தேன்— அம்பறாத்தூணியையுங் கட்டமைந்த வில்லினேயுஞ்சுமக்கப்பிறந்தேன், வெ குண்டு என்னை என்றான்—(இப்படிப்பட்டபயனில்லாதயான்) கோபித்தென் னபயனென்றுகூறினன்.

தெவ்வர்என்றதுகைகேசிமுதலாயினேரை. (239)

நன்சொற்கடந்தேனைநாளுநீவளர்த்ததாதை
தன்சொற்கடந்தெற்கரசாள்வதுதக்கதன்றால்
என்சொற்கடந்தாலுனக்கியாதுளதீனமென்றான்
தென்சொற்கடந்தான்வடசொற்கடற்கெல்லேதேர்ந்தான்.

(இ-ள்.) தென்சொற்கடந்தான்வடற்சொற்கடற்கு எல்லேதேர்ந்தான்— தமிழ்க்கடலேக்கடந்து வடசொற்கடலுக்கு வரம்புகண்ட இராமமூர்த்தி, நன் சொற்கள்தந்துஎன்னேநாளும்வளர்த்ததாதைதன்சொல்கடந்து—இனியசொ ற்களேக்கூறியென்னேயெந்நாளும்வளர்த்தபிதாவினதுசொல்லேத்தள்ளி, அர சுஆள்வதுஎற்குதக்கது அன்று—அரசியல்செய்வது எனக்குநிலமையல்ல, என்சொல் கடந்தால் உனக்குயாது உளதுஈனம் என்றான்—என்றுடைய

தாயாற்றுகிலாடனையாற்றுகின்றார்கடம்பால்
தீயாற்றுகிலார்தனிசிந்தையினின்றுசெற்ற
நோயாற்றகிலாவுயிர்போனுடங்கிடையார்
மாயாப்பழியாடருநற்கலையேந்திவந்தார்

(இ-ள்.) தாய்ஆற்றுகிலால் தன்னைஆற்றுகின்றார்கள் தம்பால்—துன்பம் ஆற்றாத தாயை அத்துன்பமாற்றுவிக்குமவர்களிடத்து, தீஆற்றுகிலார்தனி சிந்தையின்—நேரிட்ட துன்பமாகிய தீயையாற்ற வியலாதவரது மனத்தைப் போலவும், நின்று—நிலைபெற்று, செற்றும்நோய் ஆற்றுகில்லாத உயிர்போல் கோபமாகிய நோயாற்ற வியலாதவரது உயிரைப்போலவும், நுடங்குஇடையார்—துவளுமிடையையுடைய பணிப்பெண்கள், மாயாதபழியாள் தரு நற்கலை ஏந்திவந்தார்—என்றுமழியாத பழிபூண்ட கைகேசிகொடுக்க மரவுரியை யேந்திவந்தனர்கள்.

அவர்கள்மனமும்உயிருந்தளருதலால் அவையுவமையாயின. 146

கார்வானமொப்பான்றனைக்காண்டொறுங்காண்டொறும்போய்
நீராயுகக்கண்ணினுநெஞ்சழிகின்றநீரார்
பேராவிடர்பட்டயலாருறுபீழைகண்டுந்
தீராமனத்தாடரவந்தனசீரமென்றார்.

(இ-ள்.) கார்வானம் ஒப்பான்தன்னை—கரியமேகத்தையொத்த இராம மூர்த்தியை, காண்தொறும் காண்தொறும்போய்—காணுந்தோறுங் காணுந் தோறுந் தமதுதன்மைகெட்டு, நீர்ஆய்உகு அகண்ணின்உம்—நீராயொழுகு மக்கண்களைப்பார்க்கிலும், நெஞ்சுஅழிகின்றநீரார்—மனமழிகின்ற அப்பணிப் பெண்கள், பேராதஇடர்பட்டு அயலார்உறுபீழைகண்டுஉம்—நீங்காததுன்ப த்திற்பட்டு அயலவரடையும் துன்பத்தைப்பார்த்தும், தீராதமனத்தாள் தர சீரம்வந்தனஎன்றார்—இரங்காதமனமுடைய கைகேசிதர மரவுரிகள்வந்தன வென்றுகூறினார்கள். 147

வாணித்திலவெண்ணகையார்க்கொணரவள்ளல்தம்பி
யாணர்த்திருநாடிழப்பித்தவரீந்தவெல்லாம்
பூணப்பிறந்தானுநின்றானவைபோர்வினோடுங்
காணப்பிறந்தேனுநின்றேனவைகாட்டுமென்றான்.

(இ-ள்.) வாள்நித்திலம் வெள்நகையார் கொணர—ஒள்ளியமுத்துகளையொத்த வெள்ளியபற்களையுடைய அப்பெண்கள்கொண்டுவர, வள்ளல்தம்பி—இராம மூர்த்தியின் பின்பிறந்தோனாகிய இளையபெருமாள், யாணர்திருநாடு இழப் பித்தவர் ஈந்தஎல்லாம்பூணபிறந்தான் உம்நின்றான்—அழகியசெல்வம்வாய்ந்த நாட்டினை யிழக்கச் செய்தவர் கொடுத்த வெல்லாவற்றையுந் தரிக்கப்பிறந்த என்முன்னோனும் நின்றனன், அவை—அவற்றை, போர்வில் ஓடுஉம் காண பிறந்தேன்உம்நின்றேன்—போர்த்தொழிலுக்குரிய வில்லினோடும் பார்க்கப் பிறந்தயானும் வாளாநின்றனன், அவைகாட்டும்என்றான்—அவற்றைக்காட்டு ங்களென்றுகூறினான். 148

என்றானவர்தந்தனவார்தரத்தோடுமேந்தி
இன்றேயிடர்தீர்ந்துடனேகெனவெம்பிராட்டி
சொன்னாலதுவேதுணையாமெனத்தூயகங்கை
பொன்றாளடிமேற்பணிந்தானவளும்புகன்றாள்.

(இ-ள்.) அன்னான் அவர்தந்தன—அந்தஇராமமூர்த்தியவர்கள்கொடுத்த மரவுரிகளை, ஆர்தரத்தோடுமேந்தி—விருப்பத்தோடுகையிலேந்தி, இன்று இடர்தீர்ந்து உடன்ஏகு என்ன எம்பிராட்டிசொன்னால்—வருத்தத்தைவிளைவிக்குந்துன்பத்தினின்று நீங்கிவிரைந்து காட்டிற்குச்செல்லாயென்று எமது தாய்கூறினால், அதுவே துணை ஆம் என்ன—அச்சொல்லேசெல்லுதற்குக்காரணமாமென்று, தூயகங்கைபொன்தாள்அடிமேல்பணிந்தான்—மனத்தூய்மையையுடையசுமித்திராதேவியின் பொன்னனிறமமைந்த திருவடியைவணங்கினார், அவள்உம்புகன்றாள்—அச்சுமித்திராதேவியுமிளையபெருமாளைநோக்கிக்கூறுகின்றார்.

மேல் உருபுமயக்கம். எதிர்காலத்தையிறந்தகாலமாகக்கூறியது இயல்பில்வந்தகாலவழுவமைதி. 149

ஆகாததன்றாலுனக்கவ்வனமிவ்வயோத்தி
மாகாதலிராமனம்மன்னவன்வையமீந்தும
போகாவுயிர்த்தாயர்நம்பூங்குழற்சீதையென்றே
யேகாயினியிவ்வயினிற்றலுமேதமென்றாள்.

(இ-ள்.) அவ்வனம்உனக்குஆகாதது அன்று—(இராமமூர்த்திக்கு இசைந்த) அந்தக்காடுஉனக்கு ஆகாததல்லாது, அயோத்தி—அதுஇந்த அயோத்தி மாநகரம், நம்மன்னவன்—நமது அரசனாகிய உனதுபிதா, வையம்ஈந்தும்மாகாதல் இராமன்—பரதனுக்கு நிலவுலகத்தைத் தந்தும் பெரியவிருப்பத்தையுடைய இராமமூர்த்தியே, போகாஉயிர்தாயர்நம்பூங்குழல்சீதைஎன—உடல்விட்டுப்போகாத உயிரையுடையதாய்மார் நமது மலர்களையணிந்தகூந்தலையுடைய சீதாபிராட்டியாரே என்று அவர்களுடன் செல்லாய், இனி இவ்வயின் நிற்றலும் ஏதம் என்றாள்—இனி இவ்விடத்து நீ தாமதித்து நிற்றலும் தவறாம் என்று சுமித்திராதேவிகூறினாள்.

பிரிநிலையேகாரந்தொகுத்தல். 150

பின்னும்பகர்வாண்மகனேயிவன்பின்செறம்பி
என்னும்படியன்றடியாரினேவல்செய்தி
மன்னும்நகர்க்கேயிவன்வந்திடின்வாவதன்றேல்
முன்னம்முடியென்றனள்பான்முலைசோரநின்றாள்.

(இ-ள்) பால்முலை சோரநின்றாள்—(ஆராக்காதலால்) பால்முலையினின்றுஞ் சோரநின்ற சுமித்திராதேவி, பின்னும்பகர்வாள்—மீளவுங்கூறுநின்றாள், மகனே—புத்திரனே, இவன்பின்செல்தம்பிஎன்னும்படிஅன்று—அங்குநின்றிவன்பின்வந்த தம்பியென்றுகண்டோர் சொல்லும்படியல்ல, அடியாரின் ஏவல்செய்தி—அடியாரைப்போல நின்றேவல்செய்வாய், மன்னும்நகர்க்குஏ இவன்வந்திடின்வா—நிலைபெற்றஅயோத்திநகரின் கண்ணேயுன்

முன்னோன்வந்தால் நீயும்வா, அது அன்றேல்—அதுவொழிந்தால், முன்னம் முடிஎன்றனள்—அவனுக்குமுன்பு நீயுயிர்விடுவாயென்றுகூறினாள். 151

கலிவிருத்தம்,

இருவருந்தொழுதனரிரண்டுகன்றொரீஇ
வெருவருமாவினிற்றாயும்விம்மினாள்
பொருவருங்குமரரும்போயினார்புந்
திருவரைத்துகிலொரீஇச்சீரைசாத்தியே

(இ-ள்.) இருவருந்தொழுதனர்—இராமமூர்த்தியு மிளையபெருமாளும் வணங்கி, திருஅரைபுறந்துகில் ஒருவிசீரைசாத்தி—அழகிய அரையின் புறத்திலுள்ள ஆடையைநீக்கி மரவுரியையுடுத்து, பொருவரும் குமாரரும்போயினார்—ஒப்பில்லாத வவ்விருவருஞ்சென்றனர் (அதனைநோக்கி) இரண்டுகன்று ஒருவிவெருவுவரும் ஆவின் இல் தாயும்விம்மினாள்—தானீன்ற இரண்டுகன்று களினின்று நீங்கியச்சமமைந்த பசுவைப்போலத் தாயுங்கதறினாள்.

வெருவு ஈற்றுகரந்தொகுத்தல். தொழுதனர் முற்றெச்சம். ஒரீஇ சொல்லிசை நிறைத்தவல்வந்த வுயிரளபெடை. 152

தான்புனைசீரையைத்தம்பிசாத்திடத்
தேன்புனைதெரியலான்செய்கைநோக்கினான்
வான்புனையிசையினாய்மறக்கிலாதுநீ
யான்புகல்வனையதோருறுதிகேளென்றா

(இ-ள்.) தான்புனைசீரையை—தானுடுத்தமரவுரியை, தம்பிசாத்திட—தமதுதம்பியுமுடுக்க தேன்புனைதெரியலான் செய்கைநோக்கினான்—தேனிறைந்தமாலையையணிந்த அவ்விளையோனது செய்கையைப்பார்த்து, வான்புனை இசையினாய்—விண்ணுலகுமட்டும் பரந்தபுகழையுடையாய், நீ மறக்கிலாது—நீமறக்காமல், யான்புகல்வனையது ஓர்உறுதிகேள்என்றா—நான் கூறுமொரு உறுதிமொழியைக்கேளாயென்று

புகல்வனையது—சொல்லுந்தன்மையது என்னும்பொருள். நோக்கினான் முற்றெச்சம். 153

அன்னையரனைவருமாழிவேந்தனும்
முன்னையரல்லர்வெந்துயரின்மூழ்கினார்
என்னையும்பிரிந்தனரிடருறாவகை
உன்னைநீயென்பொருட்டுதவுவாயென்றான்

(இ-ள்.) அன்னையர் அனைவர்உம்—தாய்மாரெல்லோரும், ஆழிவேந்தன்உம்—ஆக்கினாசக்கரத்தை யுடைய நமது பிதாவும், முன்னையர் அல்லர்—முன்போலுள்ளவர்களல்லர், வெம்துயர் இல்மூழ்கினார் (இப்பொழுது) கொடியதுன்பாகிய துன்பத்தில் மூழ்கினார்கள், என்னையும்பிரிந்தனர்—(இம்முதுமைப்பருவத்தில்) என்னையும்பிரிந்தார்கள், இடர்உறாதவகை—அவர்கள் துன்பமடையாதவண்ணம், நீஉன்னைஎன்பொருட்டு உதவுவாய் என்றான்—நீயுன்னையென்னிமித்தமவர்களுக் குதவுவாயென்றுகூறினார். 154

ஆண்டகையம்மொழிபகரவன்பனும்
தூண்டருதிரள்புயந்துளங்கத்துண்ணெனு
மீண்டதோருயிரிடைவிம்மவிம்முவான்
ஈண்டுனக்கடியனேன்பிழைத்ததியாதென்றான்

(இ-ள்.) ஆண்தகை அமொழிபகர—ஆண்டன்மையை யுடைய இராமமூர்த்தி யவ்வார்த்தைகூற, அன்பன் உம்-தன்முன்னோனிடத்து நீங்காத அன்பினையுடைய இளையபெருமாளும், தூண்தரு திரள்புயம் துளங்க துண்ணெனு—தூணையொத்த திரண்டபுயந்துடிக்க நடுக்கமுற்று, மீண்டது ஓர்உயிர் இடைவிம்ம விம்முவான்—போய்த்திரும்பிய ஒப்பில்லாததனதுயிரிடையில் வருந்தவருந்துகின்றவன், உனக்கு ஈண்டு அடியனேன்பிழைத்தது யாது என்றான்—உனக்குஇப்பொழுது அடியேன் செய்ததவறியாதென்று வினவினான்.

தன்முன்னோன் காட்டிற்குச் செல்வதைக்கேள்வியுற்றபோது கழிந்து அவன்தேற்றத்தேறினமையால் மீண்டதோருயிரென்றார். இதுமுதல் உரைத்தபின் என்பதுகாறு மொருதொடர். 155

நீருளவெனினுளமீனும்நீலமும்
பாருளவெனினுளயாவும்பார்ப்புறின்
நாருளதனுவுளாய்நானுஞ்சீதையும்
ஆருளரெனினுளேமருளுவாயென்றான்

(இ-ள்,) நார்உள்ளதனுஉள்ளாய்—நாண்பூட்டிய வில்லையுடைய இராமமூர்த்தியே, பார்ப்புறின்—ஆலோசிக்கின், நீர்உள்ளஎன்னின் மீனும் நீலமும் உள்ள—தண்ணீரிருக்குமானால் மீனும் நீலோற்பலமலருமுண்டு, பார் உள்ளஎன்னின் யாவும்உள—உலகிருக்குமாயின் எல்லாப் பொருளுமுண்டு, (அதுபோல) நான்உம் சீதைஉம் ஆர்உளர் என்னின்உளேம்—நானுஞ்சீதையும் உன்னையன்றி ஆரிருக்கின்றார்களென் றிருக்கின்றோம், அருளுவாய் என்றான்—நீயருள்செய்வாயென்று கூறினான். 156

பைந்தொடியொருத்திசொற்கொண்டுபார்மகள்
நைந்துயிர்நடுங்கவுந்நடத்திகானென
உய்ந்தனனிருந்தனனுண்மைகாவலன்
மைந்தனென்றிணையசொல்வழங்கினாயென

(இ-ள்) பைந்தொடி ஒருத்திசொற்கொண்டு—பசியவளையலையணிந்த ஒரு மனைவியின் சொல்லைக்கைக்கொண்டு, பார்மகள்நைந்து உயிர்நடுங்கஉம்—பூதேவிவருந்தி யுயிர்நடுங்கவும், கான் நடத்திஎன்னு—காட்டிற்குச் செல்வாயென்றுகூறி, உண்மைகாவலன் உய்ந்தனன் இருந்தனன்—உண்மையாக அரசன் பிழைத்திருக்கின்றனன், மைந்தன்என்றுஓ—அவன்பெற்றபிள்ளையிவனென்றோ, இணையசொல்வழங்கினாயென்னு—இக் கடுஞ்சொல் கூறினாயென்று 15'

மாறினியென்னைநீவனங்கொள்வாயென
ஏறினவெகுளியையாகுமுற்றுற

(இ-ள்) அவயின் அரசு அவையின்றும் — அவ்விடத்தி விராசசபையி னின்றும், அன்பினன் எவ்வம்இல் இருந்த வம்முனிவன் எய்தினன்—ஆரா அன்பினராகிய குற்றமில்லாத பெரியதவத்தையுடைய வசிட்டமுனிவர் வந்த னர், செவ்விய குமரரும் சென்னிதாழ்ந்தனர்—நடுநிலைமையையுடைய கும ரர்களும் வணங்கினர்கள், கௌவைபெருங்கடல்முனியும் கால்வைத்தான்— துன்பமாகிய பெரியகடலிலந்த முனிவருங்காலைவைத்தனர்

அம் வேண்டாவழிச்சாரியை 161

அன்னவர்முகத்தினோடகத்தைநோக்கினன்
பொன்னரைச்சீரையின்பொலிவுநோக்கினன்
என்னினியுணர்த்துவதெடுத்ததுன்பத்தால
தன்னையுமுணர்ந்திலனுணருந்தன்மையான்

(இ-ள்) உணரும்தன்மை யான்—யாவையுமறியுந் தன்மையையுடைய முனிவர். அன்னவர் முகத்தினோடு அகத்தை நோக்கினன்—அவர்கள்முக மலர்ச்சியையு மனக்குறிப்பையுநோக்கி. பொன் அரைசீரையின் பொலிவுநோ க்கினன்—அழகிய அரையிலுடுத்த மரவுரியின் பொலிவையும் பார்த்து, எடு த்த துன்பத்துஆல—எறிய துன்பத்தினால், தன்னை உம் உணர்ந்திலன்—தம மையுமறியாதவனுபினர், இனி உணர்த்துவதுஎன் (இதனையன்றி) இனி நானெடுத்துக்கூறுவதுயாது (ஒன்றுமில்லைஎன்றபடி)

இதுமுதல் விற்றடந்தாமரை என்பதுகாறும் ஒருதொடர். நோககினன் முற்றெச்சம். ஓடு எண்ணொடு 162

வாழ்வினைநுதலியமங்கலத்துநாள்
தாழ்வினையதுவரச்சீரைசாத்தினன்
சூழ்வினைநான்முகத்தொருவற்சூழினும்
ஊழ்வினையொருவராலொழிககற்பாலதோ

(இ-ள்) வாழ்வினை நுதலிய மங்கலத்துநாள்—முடிசூடு மரசவாழ்க்கை யைககருதிப்புகுந்த மங்கலமுகூர்த்தத்தில், தாழ்வினைவர சீரைசாத்தினன்— போகூழ்வர மரவுரியை யிராமமூர்த்தியுடுத்தனன். சூழ்வினை—விடாதுசூழும் ஊழ், நான்முகத்துஒருவன் சூழ் உம்—நான்முகங்களையுடைய பிரமனைச்சூழ் ந்தாலும், ஊழ்வினைஒருவர் ஆல் ஒழிக்கல் பாலதுஓ—அந்த ஊழ்வினையொரு வராலொழிக்கும் பகுதியதோ (அன்றுஎன்றபடி)

நுதலிய இறந்தகாலப்பெயரெச்சம் நுதல் பகுதி கடைக்குறையாய் நின் றஇன் இறந்தகாலவிடைநிலை, யகரமெய்சந்தி, அ விகுதி. உயர்திணைப்பெய ரின் ஈற்று மெய்வருமொழிமுதல் வல்லெழுத்து வரத்திரிதல் "இயல்பின் விகாரமும்" என்றகு—ஆல் 163

வெய்வினையவாவிவிளைந்ததேயுமன்
றிவ்வினையிவண்வயினெய்தற்பாற்றுமன்
றெவ்வினைநிகழ்ந்ததோவெயவரெண்ணமோ
செவ்விதினொருமுறைதெரியுப்பினென்றூன்

(இ-ள்.) வெவ்வினை யவள்தரவிளைந்ததும் அன்று—தீவினையையுடைய கைகேசிதரவந்ததுமல்ல, இ வினை இவன்வயின் எய்தல்பாற்றும் அன்று—இந்தத் தீவினையிவனிடத்து வரும்பகுதியதுமல்ல, எவினைநிகழ்ந்ததுஓ—எந்த வினைவந்து மூண்டதோ, எவர் எண்ணம்ஓ—இதுயார்கெட்டஎண்ணமோ, பின்ஒறுமுறைதெரியும் செவ்விதுஇன் என்றான்—பின்புஒருகால் செவ்விதாகத்தெரியுமென்று கூறி.

விளைந்ததே ஏகாரம் அசைநிலையிடைச்சொல். எய்தற்பாற்று எய்தல் என்னுந் தொழிற்பெயர் பெயரெச்சமாய்ப் பாற்றுஎன்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புவினைமுற்றின் முதனிலை கொண்டுமுடிந்தது. 164

விற்றடந்தாமரைச்செங்கண்வீரனை
உற்றடைந்தையநீயொருவிபோங்கிய
கற்றடங்காணுதியென்னிற்கண்ணகன்
மற்றடந்தானையான் வாழ்கிலானென்றான்.

(இ-ள்.) வில்—வில்லினையேந்திய, தடதாமரை செங்கண்வீரனைஉற்று அடைந்து—பெரிய தாமரைமலர்போன்றசெவந்த கண்களையுடைய இராமமூர்த்தியையடைந்து, ஐய—ஐயனே, நீஒருவி—நீஎங்களினின்று நீங்கி, கல் ஓங்கிய தடம்காணுதிஎன்னின்—கற்கள்நெருங்கியோங்கிய காட்டின் வழியைக்காண்பாயாகில், கண் அகல்மல் தடதானையான வாழ்கிலான் என்றான்—இடம்பரந்தமற்போர்வாய்ந்த பெரிய சேனையையுடையஉனது பிதா உயிரோடிரானென்று கூறினார்.

தடந்தாமறைச்செங்கண் இடைப்பிறவரல். தடந்தாமரை உரிச்சொற்றொடராதலால்வருமொழிவல்லெழுத்திற்கு இனவெழுத்துமிகுந்தது "இடையுரிவடசொலின்" என்றசூ ஆல். 165

அன்னவன் பணிதலையேந்தியாற்றுதல்
என்னதுகடனவனிடரைநீக்குதல்
நின்னதுகடனிதுநெறியுமென்றனன்
பன்னகப்பாயலுட்பள்ளிநீங்கினான்.

(இ-ள்.) பன்னகம்பாயல் உள்பள்ளிநீங்கினான்—சேஷசயனத்தில் அறிதுயில்நீங்கிய இராமமூர்த்தி, அன்னவன் பணிதலை ஏந்தி ஆற்றுதல்என்னது கடன்—அந்தத்தசரதச்சக்கரவர்த்திபணித்தபணியைச்சிரமேற்கொண்டுசெய்தல்என்னுடைய கடமை, அவன் இடரைநீக்குதல்நின்னதுகடன் இதுநெறிஉம்என்றனன்—அவ்வரசனது துன்பத்தைநீக்குதல் உன்னுடைய கடமை இதுதான்முறைமையென்று கூறினர். 166

வெவ்வரம்பையில்சுரம்விரவென்றுணலன்
தெவ்வரம்பனையசொற்றீட்டினூடக
கவ்வரம்பொருதவேலரசனுய்கிலா
திவ்வரந்தருவனென்றேன்றதுண்டென்றான்.

(இ-ள்.) அஅரம்பொருதவேல் அரசன்—அந்த அரத்தாலராவியவேலையேந்திய எனது பிதா, வரம்புஇல் வெம்மை—அளவில்லாத வெம்மைவாய்ந்த

சுரம்விரவு என்றான் அல்லை—காட்டிற்குச்செல்லாயென்று கூறவில்லை, தெவ்வர் அம்பு அனையசொல் திட்டிஞாள்தனக்கு—பகைவரம்புபோலுங் கொடுமைவாய்ந்த சொற்களைவற்புறுத்திய கைகேசிக்கு, ஆய்கிலாது இவரம்தருவென் என்று என்றது உண்டுஎன்றான்—அவள்வஞ்சனையை யுணராது இந்தவரத்தத் தருவேனென் றுமேற்கொண்டதுண்டென்று இராமமூர்த்தி கூறினார்.

அகரச்சுட்டு உயர்ச்சிமேலும், இகரச்சுட்டுக் கேட்டல்மேலுநின்றன. ()

என்றனனெந்தையிவ்வரங்களீவினாள்
ஈன்றவள்யானதுசென்னியேந்தினேன்
சான்றெனநின்றநீதடுத்தியோவென்றான்
தோன்றியநல்லறநிறுத்தத்தோன்றினான்.

(இ-ள்.) தோன்றியநல் அறம் நிறுத்ததோன்றினான்—உயிர்க்குறுதியாகத்தோன்றிய நல்லதருமத்தை நிலைநிறுத்த அவதரித்த இராமமூர்த்தி, எந்தை என்றனன்—என்பிதாவரந்தருவேனென்று மேற்கொண்டனன், ஈன்றவள் இவரங்கள்ஏவினாள்—(அதனால்) என்னைப்பெற்றதாய் இவ்வரங்களைத்தந்தனள், அதுயான்சென்னிஏந்தினேன்—அதனைநான்சிரத்தின்மேற்கொண்டேன், சான்றுஎனநின்றநீதடுத்தியோஎன்றான்—இதற்குச்சாட்சியாகநின்ற,நீதடுக்கின்றாயோ வென்றுகூறினார். 168

என்றபின்முனிவனொன்றியம்பநேர்ந்திலன்
நின்றனனெடுங்கணீர்நிலத்துநீர்த்துகக்
குன்றனதோளவன்தொழுதுகொற்றவன்
பொன்றிணிநெடுமதில்வாயில்போயினான்.

(இ-ள்.) என்றபின் முனிவன்ஒன்று இயம்பநேர்ந்திலன்—என்றுகூறியபின்வசிட்டமுனிவரொன்றையுங்கூற வுடன்படாது, நெடுங்கண்நீர்நிலத்துநீர்உகநின்றனன்—நெடியகண்கள் கடல்சூழ்ந்தநிலத்தில் நீராயொழுகநின்றார், குன்றுஅன்னதோளவன் தொழுது—மலையையொத்த தோளையுடைய இராமமூர்த்தி யவரைவணங்கி, கொற்றம்வன்பொன்திணி நெடுமதில்வாயில் போயினான்—வெற்றிவாய்ந்த வலியபொன்னாற்செய்த நெடியகோட்டையின் வாயிலையடைந்தார்.

பகைவர் பேர்க்கவியலாததென்பார் வன்நெடுமதில்என்றார். து பகுதிப்பொருள்விகுதி. 169

சுற்றியசீரையன்றொடர்ந்ததம்பியன்
முற்றியவுவகையன்முளரிப்போதினுங்
குற்றமின்முகத்தினன்கொள்கைகண்டவர்
உற்றதையொருவகையுணர்த்துவாமரோ.

(இ-ள்.) சுற்றியசீரையன்—அரையிற்சூழ்ந்த மரவுரியையுடையவரும், தொடர்ந்ததம்பியன்—பின்றொடர்ந்துவரும்இளையோனையுடையவரும், முற்றியஉவகையன்—முறுகியமகிழ்ச்சியையுடையவரும், முளரிபோதின் உம் குற்றம்இல்முகத்தினன்—தாமரைமலரைப்பார்க்கினு மலர்ந்தவாட்டமில்லாத

முகத்தையுடையவருமாகிய இராமமூர்த்தியின், கொள்கைகண்டவர்உற்றது ஐ—கொள்கையைக்கண்டோரடைந்த துன்பத்தை, ஒருவகைஉணர்த்துவாம்· ஒருவாறெடுத்துச்சொல்வாம்.

முற்றும்எடுத்துச் சொல்லுதலரிது என்பார் ஒருவகைஎன்றார். 170

அந்தணரருந்தவரவனிகாவலர்
நந்தலினகருளார்நாட்டுளார்கடம்
சிந்தையென்புகல்வதுதேவருள்ளமும்
வெந்தனர்மேல்வருமுறுதிவேண்டலார்.

(இ-ள்.) அந்தணர்—நாட்டுள்ளார்கள், தம்சிந்தைபுகல்வதுஎன்—மறைய வரும் அரியதவத்தையுடைய முனிவர்களு மரசர்களும் கெடுதலில்லாதவளமை வாய்ந்தநகரிலுள்ளவர்களும் நாட்டிலுள்ளவர்களுமாகிய இவர்கள துமனநிலையையெடுத்துக்கூறுவது பெரிதன்று, மேல்வரும்உறுதிவேண்டலர்—பின் வரும் பெரும்பயனைவிரும்பாது, தேவர்உம்உள்ளம்வெந்தனர்—தேவர்களு மனமெரிந்தார்கள்.

நந்தல் கெடுதி. மேல்வருமுறுதி இராவணுதியரைவெல்லுதல், தேவருள்ளம்வெந்தனர். உயர்திணைப்பொருளைத் தொடர்ந்தசினைப்பெயர் உயர்திணை முடிபேற்றல் திணைவழுவமைதி. இறந்ததுதழீஇய சிறப்பும்மைபொருத்தமிலபுணர்ச்சி, வேண்டலார் முற்றெச்சம். 171

ஐயனைக்காண்டலுமணங்கனார்கடாம்
மொய்யிளந்தளிர்களான்முளரிமேல்விழும்
மையலின்மதுகரங்கடியுமாறெனக்
கைகளின்மதர்நெடுங்கண்களேற்றினார்.

(இ-ள்.) ஐயனைகாண்டலும்—இராமமூர்த்தியைகண்ட அப்பொழுதே அனங்குஅன்னார்கள்தாம்—தெய்வப்பெண்களையொத்தபெண்கள், மொய்இளந்தளிர்கள்ஆல்—நெருங்கிய இளந்தளிர்களினால், முளரிமேல்விழும்மையல் இன்மதுகரம் கடியும் ஆறுஎன்ன—தாமரைமேல்வீழும் மதுமயக்கத்தையுடையவண்டுகளைமோதும் வகைபோல, கைகள்இன் மதர்நெடுங்கண்கள் ஏற்றினார்—தமதுகைகளால் முகத்திலுள்ள மதர்த்த நெடிய கண்களில் மோதினார்கள்.

தளிர்கள் கைகளாகவும் தாமரைமுகமாகவும் வண்டுகள் கண்களாகவுங் கூறினமையால் ஒப்புமைக்கூட்டவுவமையணி. 172

தம்மையுமுணர்ந்திலர்தணிப்பிலன்பினால்
அம்மையினிருவினையகற்றவோவன்றேல்
விம்மியுபேருயிர்மீண்டிலாமைகொல்
செம்மறன்றாதையிற்சிலவர்மூர்ந்தினார்.

(இ-ள்.) சிலவர்—சிலபேர், தணிப்பு இல்அன்பினால்— இராமமூர்த்தியினிடத்து நீங்காதஅன்பினால், தம்மைஉம்உணர்ந்திலர்—தம்மையுமுணராது அவசமாயினார்கள்(அது) அம்மையின் இருவினைஅகற்றஓ—வருபிறப்பிற்கேதுவாகிய நல்வினைதீவினைகளை யிப் பிறப்பிலொழிக்கக் கருதியோ, அன்றேல்—

அல்லவாயின், விம்மியபேர் உயிர்மீண்டிலாமைகொல்—பொருமிய தமது பெரியவுயிரானது மீளாமையினாலோ, செம்மல்தன் தாதையின்முந்தினார்—இராமமூர்த்தியின் பிதாவைப்போல மரணாவத்தையில் முற்பட்டார்கள்.

வருபிறப்பிற்குக்காரணம் இருவினையாதலால்அதனையிப்பொழுதேயகற்றக்கருதினர்என்பர் அம்மையினிருவினை யகற்றவோஎன்றார். ஓ, கொல்இரண்டும் ஐயப்பொருளில்வந்தன. உணர்ந்திலார் என்னும்எதிர்மறை வினைமுற்றினின்றுபிரிந்த உணராமையென்னுந்தொழிற்பெயர் வினைமுதற்பொருள் மேல்நின்றது. 173

விழுந்தனர்சிலர்சிலர்விம்மிவிம்மிமேல்
எழுந்தனர்சிலர்முகத்திழிகண்ணீரிடை
அழுந்தினர்சிலர்பதைத்தளகவல்லியின்
கொழுந்தெரியுற்றெனத்துயரங்கூர்கின்றார்.

(இ-ள்.) சிலர்விழுந்தனர்—(கண்டபெண்களுள்) சிலர்நிலத்தில்வீழ்ந்தார்கள், சிலர்விம்மிவிம்மிமேல்எழுந்தனர்—சிலர்பொருமிப்பொருமிக்குதித்தார்கள். சிலர்முகத்து இழிகண்ணீர்இடை அழுந்தினர்—சிலர் முகத்தினின்றிழியுங்கண்ணீர் வெள்ளத்திலழுந்தினார்கள், சிலர்பதைத்து—சிலபேர்கள்உடல்பதைத்து, அளகம்வல்லியின் கொழுந்து எரிஉற்றால் என்னதுயரம கூர்கின்றார்—கூந்தலையுடையவொருகொடியின்கொழுந்து நெருப்பிலடைந்தாற்போலத் துன்பமுற்றார்கள்.

அளகவல்லியில் பொருளுவமையணி. 174

கரும்பனமொழியினர்கண்பனிக்கிலர்
வரம்பறுதுயரினான் மயங்கியேகொலாம்
இரும்பனமனத்தினரென்னநின்றனர்
பெரும்பொருளிழந்தவர்போலும்பெற்றியார்.

(இ-ள்.) கரும்பு அன்னமொழியினர்—கரும்பையொத்த சொற்களையுடையபெண்கள், பெரும்பொருள் இழந்தவர்போலும்பெற்றியார்—பெரிய பொருளையிழந்தவரை யொத்ததன்மையையுடையவராய், கண்பனிக்கிலர்—கண்ணீர்சிந்தாது. வரம்புஅறுதுயரின் ஆல்மயங்கியே கொல்ஆம்—அளவில்லாததுன்பத்தால் மெய்மறந்தோ, இரும்புஅன்னமனத்தினர்என்னநின்றனர் இரும்பையொத்த மனத்தையுடையவரைப்போல அசையாதுநின்றார்கள்.

கண்பனிக்கிலர் தெரிநிலைவினைமுற்றெச்சம் பெற்றியார் குறிப்புமுற்றெச்சம். 175

நெக்கனவுடலுயிர்நிலையினின்றில
இக்கணமிக்கணமென்னுந்தன்மையும்
புக்கனபுறந்தனபுண்ணிற்கண்மலர்
உக்கன்நீர்வறந்துதிரவாரியே.

(இ-ள்.) உடல்நெக்கன—உடல்நெக்குவிட்டன, உயிர்நிலையில்நின்றில உயிர்நிற்குநிலையில் நிற்றலொழிந்தனவாய், இக்கணம்இக்கணம் என்னும்தன்மையும் புக்கன—இப்பொழுது போமிப்பொழுது போமென்னுந் தன்மை

யிற் சென்று, புறத்தன—வெளிப்பட்டன புண் இல்-புண்களைப்போல, கண் வறந்து உதிரவாரி உக்கன—கண்களாகிய மலர்நீர்சுண்டி யுதிரவெள்ளஞ் சிந்தின.

நின்றில புக்கனமுற்றெச்சங்கள். 176

இருகையிற்கரிநிகரெண்ணிறந்தவர்
பெருகையிற்பெயர்த்தனர் தலையைப்பேணலர்
ஒருகையிற்கொண்டனருருட்டுகின்றனர்
சுரிகையிற்கண்மலர்சூன் றுநீக்கினர்.

(இ-ள்) இருகையின் கரிநிகர் எண் இறந்தவர்பேணலர்—இரண்டுகைகளையுடைய யானையையொத்த அளவில்லாத ஆடவரிற் சிலர் தமதுயிரை விரும்பாது, தலையை பெருங்கையில் பெயர்த்தனர்—தலையைத் தமது பெரிய கைகளாற் கிள்ளி, ஒருகெயில் கொண்டனர் உருட்டுகின்றனர்—தமது ஒரு கையிலேந்தி யுருட்டுவார்கள், சுரிகையில் கண்மலர்சூன் றுநீக்கினர்—தமது டைவாளினால் கண்களாகியமலரைத்தோண்டிச் சிலர் நீக்கினார்கள்.

சூன்று இறந்தகாலவினையெச்சம் சூல் பகுதி, லகரம் னகரமாகத்திரிதல் சந்தி, றகரமெய் இடைநிலை, உ எச்சவிகுதி. 177

சிந்தினவணிமணிசிதறிவீழ்ந்தன
பைந்துணர்மாலையிற்பரிந்தமேகலை
நந்தினர்நகையொளிவிளக்கம்மங்கைமார்
சுந்தரவதனமுமதிக்குத்தோற்றவே.

(இ-ள்.) நங்கைமார் சிந்தின அணிமணி சிதறிவீழ்ந்தன—பெண்கள் கழற்றியெறிந்த ஆபரணங்களினின்று இரத்திநங்கள் சிதறிவிழுந்தன, மேகலைபைந்துணர் மாலையின்பறிந்த — மேகலாபரணம் பசிய பூங்கொத்துகளாலமைந்த மாலையைப்போலச் சிதறின, நகைஒளிவிளக்கம் நந்தினர்—மந்தகாசமாகிய ஒளியையிழந்தனர், சுந்தரம்வதனம் உம்மதிக்குதோற்றன—அழகியமுகங்களுஞ் சந்திரனுக்குத்தோற்றன. 178

அறுபதினாயிரரரசன்றேவியர்
மறுவறுகற்பினர்மழைக்கண்ணீரினர்
சிறுவனைத்தொடர்ந்தனர்திறந்தவாயினர்
எறிதிரைக்கடலெனவிரங்கியேங்கினர்.

(இ-ள்.) அறுபதினாயிரர் அரசன்தேவியர் மறுஅறுகற்பினர்—அறுபதினாயிரவராகிய அரசன் தேவிமாரும் குற்றமற்றவருமாகிய பெண்கள், மழைகண்ணீரினர்—மேகம்போன்ற கண்களிற் சிந்திய நீரினராய், சிறுவனைதொடர்ந்தனர் திறந்தவாயினர்—தமது புத்திரனாகிய இராமமூர்த்தியைத் தொடர்ந்து திறந்தவாயினராய், எறிதிரைகடல் என்ன இரங்கிஏங்கினர்—எறியு மலைகளையுடைய கடலைப்போல மனமிரங்கியழுதார்கள்.

கண்ணீரினர், தொடர்ந்தனர், வாயினர் முற்றெச்சங்கள் இது முதல் இரைத்தனர் என்னுஞ் செய்யுள் காறு மொருதொடர். 179

கன்னிநன் மயில்களுங்குயிற் கணங்களும்
அன்னமுஞ்சிறையிழந் தவனிசேர்ந்தன
என்னவீழ்ந்துழந்தனரிராமனல்லது
மன்னுயிர்ப்புதல்வரைமற்றும்பெற்றிலார்.

(இ-ள்.) இராமன் அல்லது மன்உயிர்புதல்வரை மற்றும் பெற்றிலார்—இராமமூர்த்தியையன்றி யாக்கத்தையுடைய உயிரையொத்த புத்திரர்களை வேறே பெறுமையால், கன்னிநல்மயில்களும் குயில்கணங்களும் அன்னம் உம்—கன்னித்தன்மையையுடைய நல்லமயில்களும் குயிற்கூட்டங்களும் அன்னங்களும், சிறைஇழந்து அவனிசேர்ந்தன என்னவீழ்ந்து உழந்தனர்—சிறையையிழந்து நிலவுலகில்சேர்ந்தனபோலத் தரையில்வீழ்ந்து வருந்தினார்கள்.

உழந்தனர் பலர்பாற்படர்க்கை யிறந்தகாலவினைமுற்று, உழ பகுதி. 180

கிளையினுநரம்பினுநிரம்புங்கேழன
அளவிறந்துயிர்க்கவிட்டாற்றுந்தன்மையால்
தொளைபடுகுழலினேடியாழ்க்குத்தோற்றன
இளையவரமுதினுமினியசொற்களே.

(இ-ள்.) இளையவர் அமுதின்உம் இனியசொற்கள்—அவ் வறுபதினுயிரவது அமுதைப்பார்க்கிலு மினிமைவாய்ந்த சொற்கள், கிளையின்உம் நரம்பின்உம் நிரம்பும்கேழன - வீணையின் கிளைநரம்பிலும் பகைநரம்பிலுமெழுந்த பண்களை யொத்திருப்பன், அளவு இறந்து உயிர்க்கவிட்டு ஆற்றும் தன்மையால்—இப்பொழுது அளவுகடந்து வாய்திறந்து கதறுந்தன்மையினால், தொளைபடுகுழலினேடு யாழ்க்குதோற்றன—தொளையமைந்த வேய்ங்குழ லிசையோடு வீணையிசைக்குந் தோற்படைந்தன.

வீணைநரம்புகள் இணை, கிளை, பகை, நட்பு என நான்கு வகைப்படுதலால் கிளைஎன்றார். தொளைதொழிற்பெயர் தொள் பகுதி, ஐபுடைபெயர்ச்சி விகுதி. தொண்ணூறுஎன வருதல்காண்க. 181

புகவிடங்கொடுவனம்போலுமென்றுதம்
மகன்வயினிரங்குறுமகளிர்வாய்களால்
அகன்மதினெடுமனையரத்தவாம்பல்கள்
பகலிடைமலர்ந்தவோர்பழனம்போன்றவே.

(இ-ள்.) கொடுவனம்புகவிடம்போலும் என்று—கொடிய காடு உரிய இடமாயிற்றேயென்று, தம் மகன் வயின் இரங்குறும் மகளிர்வாய்கள் ஆல்—தமது புத்திரனாகிய இராமமூர்த்தியின் பொருட்டு அழும் ஆறுயிரவர்களது வாய்களினால், அகல்மதில்நெடுமனை— அகன்ற மதில்சூழ்ந்த நெடிய கோயில்கள், அரத்தம்ஆம்பல்கள்பகல்இடைமலர்ந்தது ஓர்பழனம்போன்ற—செவ்வாம்பல்கள்பகற்பொழுதில் மலர்ந்துள்ள ஒப்பில்லாத வயல்களை யொத்திருந்தன.

மலர்ந்தது என்னும் பாடம் ஆம்பல்கள் என்னும்வினைமுதலுக்குப் பொருந்தாமையால் மலர்ந்தவெனப் பாடங்கொண்டாம் 182

திடருடைக்குங்குமச்சேறுஞ்சாந்தமும்
இடையிடைவண்டலிட்டாரமீர்த்தன

மிடைமுலைக்குவடோரீஇமேகலைக்கடங்
கடலிடைப்புகுந்தகட்கலுழியாறரோ.

(இ-ள்.) கண்கலுழிஆறு — (அவர்கள்) கண்ணீரென்னுங் காட்டாறுகள், திடர்உடைய குங்குமச்சேறுஉம் சாந்தம்உம்—திடர்பட்டகுங்குமக்குழம்பையுஞ் சந்தனக்குழம்பையும், இடை இடைவண்டல்இட்டு ஆரம்ஈர்த்தன—இடங்கள்தோறும் வண்டலாகக் கொழித்து முத்தமாலையை யிழுத்துக்கொண்டு, மிடை முலைகுவடு ஒருவி—நெருங்கிய தனயாகியமலையினின்று நீங்கி, மேகலை தடகடல் இடைபுகுந்த—மேகலையையணிந்த பரந்த அல்குலாகிய கழலிற்சென்றன. 183

தண்டலைக்கோசலைத்தலைவன்மாதரைக்
கண்டனனிரவியுங்கமலவாண்முகம்
விண்டலத்துறையுநல்வேந்தற்காயினும்
உண்டிடருற்றபோதென்னுறாதன.

(இ-ள்.) தண்டலைகோசலை தலைவன்மாதரை—சோலைசூழ்ந்தகோசலை நாட்டிற்கரசனாகிய தசரதனது மனைவியாகிய அறுபதினாயிரவரை, கமலம் வாள்முகம்இரவிஉம் கண்டனன்—தாமரைமலர்போன்றஅவர்களது ஒளிவாய்ந்த முகத்தை சூரியனும் பார்த்தனன், விண்தலத்து உறையும் நல்வேந்தற்கு ஆயின்உம்—விண்ணுலகில் வசிக்கு மிந்திரனுக்கானாலும், இடர்உற்றபோது உறாதனஎன் — துன்பம்வந்தபோது வாராதகுறைகளென்ன, உண்டு—எல்லாக்குறைகளுமுண்டு.

சூரியனவர்கள் மரபிற்கு முதல்வனாதலா லவனை க்காணாத முகங்களுங் கண்டனனென்றார். "கடவுளைபடிதொழுது" என்று இந்நூலில் வருவதுபோல மாதரை வாண்முகங்கண்டனன் என்றார் 184

தாயருங்கிளைஞருஞ்சார்ந்துளார்களும்
சேயருமணியருஞ்சிறந்தமாதரும்
காயெரியுற்றனரனையகவ்வையர்
வாயுலுமுன்றிலுமறையமொய்த்தனர்.

(இ-ள்.) தாயர்உம் கிளைஞர்உம் சார்ந்துளார்கள் உம்—இவ்வாறு அறுபதினாயிரந் தாய்மார்களும் உறவினரு மவர்களைச் சார்ந்தவர்களும், சேயர்உம் அணியர்உம் சிறந்த மாதர் உம் — அயலாரும்நெருங்கினவரு மிவர்களொழிந்த சிறந்த பெண்களும், காய்எரிஉற்றனர் அனைய கவ்வையர் — சுட்டுவருத்தும் நெருப்பில்வீழ்ந்தவரையொத்த துன்பத்தையுடையவராய், வாயில் உம் முன்றில் உம் மறையமொய்த்தனர்—தத்தம் வீடுகளின் வாயில்களுமுற்றங்களு மறைய நெருங்கி.

மொய்த்தனர்முற்றெச்சம். 185

இரைத்தனரிரைத்தெழுந்தேங்கியெங்கலும்
திரைப்பெருங்கடலெனத்தொடர்ந்துபின்செல
உரைப்பதையுணர்கிலனுழிப்படதோர்கிலன்
வரைப்புயத்தண்ணறன்மனையைநோக்கினன்.

(இ-ள்.) இரைத்தனர்—கோவென்று கோஷித்தார்கள், இரைத்துஎழுந்து—அவ்வாறிரைத்தெழுந்து, ஏங்கி—புலம்பி, எங்கண்உம்திரைபெருங்கடல்என்ன தொடர்ந்துபின்செல்ல—எவ்விடத்துமலையையுடைய பெரியகடலைப்போலத் தொடர்ந்து பின்னேவர வரைபுயத்துஅண்ணல் உரைப்பதுஇஉணர்கிலன்—மலையையொத்த புயத்தையுடைய இராமமூர்த்தி (அவர்களையாற்றுதற்கு) கூறுவதைச்சிறிது மறியாது, ஒழிப்பதுஓர்கிலன்—(அவர்கள் துன்பத்தை) ஒழிப்பதுஇன்னதெனத்தெரியாது, தன்மனையைநோக்கினன் தமதுகோயிலை நோக்கிச்சென்றனர்.

உணர்கிலன், ஓர்கிலன்முற்றெச்சங்கள். 189

நன்னெடுநளிர்முடிசூடநன்மணிப்
பொன்னெடுந்தேரொடும்பவனிபோனவன்
துன்னெடுஞ்சீரையைச்சுற்றிமீண்டுமப்
பொன்னெடுந்தெருவிடைப்போதன்மேயினன்.

(இ-ள்.) நல்நெடுநளிர்முடிசூட—நல்லநெடிய பெருமையமைந்த மகுடஞ்சூட, நல்மணிபொன்நெடுந்தேரோடும் பவனிபோனவன்—விலையுயர்ந்த இரத்திநங்களழுத்திய பொன்னாலமைந்த நெடியதேரின்மே லுலாப்போன இராமமூர்த்தி, துன்நெடும்சீரையைச்சுற்றி-(மரவுரியால்) துன்னம்பெய்தநெடிய ஆடையையுடுத்து, மீண்டுஉம் அ பொன்நெடுந் தெருஇடை போதல்மேயினன்—மீளவும்தாம்சென்ற அந்தப்பொற்பொடியமைந்த நெடியதெருவில் வரத்தொடங்கினர். இதுயாதுகாரணமோ நாம்அறியோம்என்றனர்)

மீண்டுசெயவெனச்சத்திரிபு. 187

அஞ்சனமேனியிவ்வழகற்கெய்திய
வஞ்சனைகண்டபின்வகிர்ந்துநீங்கலா
நெஞ்சினும்வலிதுயிர்நினைபபதென்சில
நஞ்சினும்வலியநங்நல்மென்றார்சிலர்.

(இ-ள்.) சிலர்—அவருட்சிலர், அஞ்சனம்மேனி இஅழகற்குஎய்தியவஞ்சனைகண்டபின்—மைபோலுங்கரிய மேனியையுடைய இந்தப்பேரழகனுக்கு நேரிட்டவஞ்சனைச்செயலை நாம்பார்த்தபின், வகிர்ந்துநீங்கலாத நெஞ்சின் உம்—பிளவுபட்டு நீங்காதமனத்தைப்பார்க்கிலும், உயிர்வலிது—போகாத நமதுயிர் கொடியது, சிலநினைப்பதுஎன்—சிலவற்றை நினைப்பதாற் பயன்யாது நம்நலம் நஞ்சின்உம் வலியஎன்றார்—நமதுதேகநலம் நஞ்சைப்பார்க்கிலுங் கொடியனவென்று சொல்வாரும். 188

மண்கொடுவரும்எனவழியிருந்தியாம்
எண்கொடுசுடர்வனத்தெய்தல்காணவோ
பெண்கொடுவினைசெயப்பெற்றநாட்டினில்
கண்கொடுபிறத்தலுங்கடையென்றார்சிலர்

(இ-ள்.) சிலர்—சிலபேர், மண்கொடுவரும் எனயாம்வழிஇருந்தது—இராமமூர்த்தி நிலவுலகுரிமையைப்பெற்று முடிசூடிவருவானென்று வழியிற்காண நாம்காத்திருந்தது, எண்கொடுசுடர்வனத்துஎய்தல்காணஓ—நினைத்

தாலுஞ்சுடாநின்ற நெருப்புப்பற்றிய காட்டிற்குச்செல்லுதலைக் காணவோ, பெண்கொடுவினைசெய்ய பெற்றநாட்டின் இல்—ஒருபெண் தீவினைச்செய்தலைச் செய்யப்பெற்றநாட்டில், கண்கொடுபிறத்தலும் கடையென்றார்—கண்ணுகிய வுறுப்பைப்பெற்றுப் பிறத்தலும் கடைப்பட்டபிறப்பு என்றுசொல்லுவாரும்.

அந்தகராய்ப்பிறக்கின் இக் கோலத்தைக்கண்டு வருந்துதலில்லையே யென்பார் கண்கொடுபிறத்தலுங் கடையென்றார் எனறனர். 189

முழுவதேபிறந்துலகுடையமொய்ம்பினேன்
உழுவைசேர்கானகத்துறைவென்யானென
எழுவதேயெழுதல்கண்டிருப்பதேயிருந்
தழுவதேயழகிதிவ்வன்பென்றார்சிலர்.

(இ-ள்.) பிறந்து உலகமுழுவது உடையமொய்ம்பினேன்—அரசமர பிற்பிறந்து உலகமுற்றுமுடையவன்மைவாய்ந்தஇராமமூர்த்தி, உழுவைசே கானகத்துயான்உறைவென் என்னஎழுவதுஎ—புலிவாழு [illegible] ப்பேனென்றுசெல்லஎழுந்திருப்பதா, எழுதல்கண்டு [illegible] ந்திருத்தலைக்கண்டு நாமுமுயிரோடிருப்பதா, இருந்து அழுவதுஎ—([illegible] செல்லாதுவீட்டில்) இருந்துநாமழுவதா, இ அன்பு அழகிதுஎன்றார்—([illegible] கொண்ட) இந்தஅன்பு அழகாயிருந்ததென்று சொல்வாரும்.

ஏகாரம் வினப்பொருட்டு. 190

வலங்கடிந்தேழையராயமன்னரை
நலங்கடிந்தறங்கெடநயக்கலீர்களோ
குலங்கடிந்தான்வலிகொண்டகொண்டலை
நிலங்கடிந்தாளொடுநிகரென்றார்சிலர்.

(இ-ள்.) சிலர்—சிலபேர்கள், ஏழையர் ஆயமன்னரை—[illegible] நடக்குமேழையர்களாகிய அரசர்களை, வலங்கடிந்து [illegible] நயக்கலீர்கள்—வன்மையினின்று நீக்கிச்செல்[illegible] தைமுன்விரும்பாதநீங்கள், நம்குலம்கடிந்தான் வலிகொண்டகொண்டலை—நமதுகுலத்தைக்கெடுத்த பரசிராமன் வலிமையைக்கவர்ந்த மேகம்போன்ற இராமமூர்த்தியை, நிலங்கடிந்தாள் ஒடுநிகர்என்றார்—[illegible] நீக்கியகைகேசியோடு இப்போதுஒத்தீர்களென்று கூறினார்கள்.

நயக்கலீர்கள் கள் விகுதி மேல் விகுதி. 191

திருவரைசுற்றியசீரையாடையன்
பொருவருந்துயரினன்தொடர்ந்துபோகின்றான்
இருவரைப்பயந்தவளினகான்முறை
ஒருவனேவிவற்கிவ்வுருவமென்றார்சிலர்.

(இ-ள்.) சிலர்—சிலபேர், திரு அரைசுற்றிய சீரை ஆடையன்—திருவரையிலுடுத்தமரவுரியையுடையவனும், பொருவருந்துயரினன்—ஒப்பில்லாத துன்பத்தையுடையவனுமாகிய இளையபெருமாள், தொடர்ந்துபோகின்றான்—(இராமமூர்த்தியின்) பின்தொடர்ந்து செல்கின்றான், இருவரைபயந்தவள்

ஈன்றகான்முளை தூருவனிவற்கு ஓ—சுமித்திராதேவிபெற்ற பிள்ளைகளில் ஒருவனாகியசத்துருக்கப்பெருமாளுக்கோ, இவ்வூர்உறவுஎன்றார்—இந்தவயோத்திநகருறவாயிற்றென்றுகூறினார்கள்.

இருவரைப்பெற்றமையால் சுமித்திராதேவிக்கு இருவரைப்பயந்தவள் என்றது காரணப்பெயராய்நின்றது. 192

முழுக்கலின்வலியநம்மூரிநெஞ்சினை
மழுக்களிற்பிளத்துமென்றோடுவார்வழி
ஒழுக்கியகண்ணினிற்கலுழியூற்றிடை
இழுக்கலில்வழுக்கிவீழ்ந்திடருற்றார்சிலர்.

(இ-ள்.) சிலர்—சிலபேர், முழுகல்இன்வலிய நம்மூரிநெஞ்சினை—வலியகல்லினுங்கடிய நமதுபெரியமனத்தை, மழுக்கள்இல் பிளத்தும்என்று ஓடுவார்—மழுவாயுதத்தாற் பிளப்போமென்றோடுகின்றவர்கள், வழிகண்ணின் இல் ஒழுக்கியகலுழிஊற்று இடைஇழுக்கல்இல்—வழிகளிற் கண்களினின்றுஞ் சிந்தியநீராகிய காட்டாறின் சேற்றில், வழுக்கிவீழ்ந்து இடர்உற்றார்—வழுக்கிவீழ்ந்து துன்பங்கூர்ந்தார்கள்.

வழுக்கி இறந்தகாலவினையெச்சம் வழுக்கு பகுதி; இழுக்கல் சேற்றின் மேல்நிற்றலால் தொழிலாகுபெயர் இழு பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, அல் விகுதி. 193

பொன்னணிமணியணிமெய்யிற்போக்கினர்
மின்னெனமின்னெனவிளங்குமெய்விலைப்
பன்னிறத்துகிலினைப்பறித்துநீக்கினர்
சின்னநுண்டுகிலினைப்புனைகின்றார்சிலர்.

(இ·ள்.) சிலர்—சிலபேர், மெய் இன் பொன் அணிமணி அணிபோக்கினர்—உடம்பினின்று பொன்னாற்செய்த ஆபரணங்களையும் இரத்திநமழுத்திய ஆபரணங்களையும் போக்கி, மின்என்ன மின்என்ன விளங்கும் மெய்விலை பல்நிறம் துகிலினைபறித்து நீக்கினர்—மின்னலைப்போல விளங்குமுனைமையாக விலையுயர்ந்த பலநிறமமைந்த ஆடையைக்களைந்து நீக்கி, சின்னம் நுண் துகிலினை புனைகின்றார—துன்பக்குறியுள்ள நுண்ணிய ஆடையையுடுக்கின்றனர். 194

நிறைமகவுடையவர்நெறிசெலைம்பொறி
குறைமகருறையினுங்கொடுப்பாருயிர்
முறைமகன்வனம்புகமொழியைக்காக்கின்ற
இறைமகன்றிருமனமிரும்பென்றார்சிலர்.

(இ-ள்.) நிறையகவு உடையவர்—எல்லாவவையவங்களுங் குறைவின்றி நிறைந்தபலபிள்ளைகளைப்பெற்றவர்கள், நெறிசெல்ஐம்பொறிகுறைமககுறையின் உம்—புலன்வழிச்செல்லும் பஞ்சேந்திரியங்கள்குறைந்ததாம்பெற்றபிள்ளையொன்றுகுறைந்தாலும், உயிர்கொடுப்பர்—உயிரையிழப்பார்கள், முறைமகன்வனம்புக— எல்லாப்பொலிவு முறையாகநிறைந்த தனதுமூத்தபிள்ளை காட்டிற்குச்செல்ல, மொழியைகாக்கின்ற இறைமகன்திருமனம் இரும்பு

என்றார்—கைகேசிக்குத்தான் கூறியசொல்லைக்காக்கும் அரசனது அழகிய மனமிருப்போவென்று சொல்லுகின்றார்கள். 195

வாங்கியமருங்குலார்வைத்தகொங்கையார்
பூங்கொடியொதுங்குவபோலொதுங்கினர்
ஏங்கியகுரலினரிணைந்தகாந்தனில்
தாங்கியசெங்கைதந்தலைகண்மேலுளார்.

(இ-ள்.) வாங்கியமருங்குலார் வைத்தகொங்கையார்—பிரமனிடையை வாங்கித் தனத்தைமட்டும் படைத்தபெண்கள், பூங்கொடி ஒதுங்குவபோல் ஒதுங்கினர்—பூங்கொடியொதுங்குதல்போலவொதுங்கி, ஏங்கியகுரலினர்—அழுகுரலை யுடையவராகி, இணைந்தகாந்தள் இல்—தம்முட் சேர்ந்தகாந்தள் மலர்களைப்போல, தாங்கியசெங்கை தம்தலைகள்மேல் உள்ளார்—மேலெழுந்த தமது செவந்தகைகள் தமதுதலைகள்மேலுள்ளவருமாய்.

ஒதுங்கினர் குரலினர் முற்றெச்சம். இதுபொருள்முரணணி 196

தலைக்குவட்டயன்மதிதவழுமாளிகை
நிலைக்குவட்டிடையிடைநின்றநங்கைமார்
முலைக்குவட்டிழிகணீராலிமொய்த்துக
மலைக்குவட்டாவுறுமயிலின்மாழ்கினார்.

(இ-ள்.) தலைகுவடு அயல்மதி தவழும்மாளிகை—சிகரங்களினயலில்சந்திரன்தவழுமாளிகைகளிலுள்ள, நிலைகுவடு இடைஇடைநின்றநங்கைமார்—செய்குன்றங்களினிடந்தோறுமுள்ளபெண்கள், முலைகுவடுகண் இழிநீர் ஆலி மொய்த்துஉக—தமதுதனமாகியமலையில் கண்களினின்று இழியுநீர்த்துளி நெருங்கிச்சிந்த, மலைகுவடுஅகவுறும்மயில் இன்மாழ்கினார்—மலையின் சிகரத்தினின்றாடு மயிலைப்போலமயங்கினவர்களுமாய்.

மாழ்கினார் இறந்தகாலவினைமுற்றெச்சமாய் நின்றது மாழ்கு பகுதி.

மஞ்செனவகிற்புகைவழங்குமாளிகை
எஞ்சலில்சாரளத்திரங்குமின்சொலார்
அஞ்சனக்கண்ணினீரருவிசோர்தரப்
பஞ்சரத்திருந்தழுகிளியிற் பன்னினார்.

(இ-ள்.) மஞ்சு என்ன அகில்புகை வழங்கும் மாளிகை—மேகத்தைப்போல அகிலின்புகை சஞ்சரிக்குமாளிகைகளில், எஞ்சல்இல் சாளரத்து இரங்கும்இன்சொல்லார்—குறைவின்றிநிறைந்த சாளரங்களிலிருந்து வருந்துமினியசொற்களையுடைய பெண்கள், அஞ்சனம்கண்ணின்நீர் அருவிசோர்தர—மையெழுதியகண்களினீரருவியைப்போலஇழிய, பஞ்சரத்து இருந்து அழுகிளியின்பன்னினார்—கூட்டிலிருந்தழாநின்ற கிளியைப்போலவழுதவர்களாய்.

நன்னெடுங்கண்களினான்றநீர்த்துளி
தன்னெடுந்தாரைகடளத்தின்வீழ்தலால்
மன்னெடுங்குமரன்மாட்டழுங்கிமாடமும
பொன்னெடுங்கண்குழித்தழுவபோன்றவே.

(இ-ள்.) நல்நெடுங் கண்களில் நான்றநீர்த்துளி நெடுந்தாரைகள் தளத்தின் வீழ்தலால்—பரந்தநெடிய கண்களினின்று சிந்தியநீர்த்துளியாகிய நெடியதாரைகளாகு பரிகையில் வீழ்தலால் நெடுமன்குமரன் மாடமாடம் உம் அழுங்கி—பெரிய அரசன் புதல்வராகிய ஸ்ரீராமமூர்த்தியிடத்தன்புகூர்ந்து மாடங்களுமனம்வருந்தி, நெடும்பொன்கண்குழித்து அழுவபோன்ற—நெடிய அழகிய கண்கள்குடைப்பட்ட பூதலையொத்திருந்தன.

நான்ற இறந்தகாலப்பெயரெச்சம் நால் பகுதி. அழுங்கி இறந்தகால வினையெச்சம் அழுங்கு பகுதி. 199

மக்களைமறந்தனர்மாதர்தாயுரைப்
புக்கிடமறிந்திலர்புதல்வர்பூசலிட்
டுக்கனருயங்கினருருகிச் சோர்ந்தனர்
துக்கநின் றறிவினைச்சூறையாடவே

(இ-ள்.) மாதர்மக்களை மறந்தனர்—பெண்கள் தம்புதல்வரை மறந்தும், புதல்வர்தாயரைபுக்கிடம் அறிந்திலர்—பிள்ளைகள்தந்தாய்மாரைப்போனவிடமறியாமலும், துக்கம்நின்று அறிவினைசூறைஆட—துன்பம்நிலைபெற்றுத்தமதறிவினைக்கொள்ளைகொள்ள, பூசல் இட்டு உக்கனர் உயங்கினர் உருகிச்சோர்ந்தனர்—பெருங்குரலிட்டு மயங்கிமனமுருகிச்சோர்ந்தவர்களாய்.

மறந்தனர், உயங்கினர் முற்றெச்சங்கள். உயங்கு பகுதி. 200

காமரக்கனிந்தெனக்கனிந்தமென்மொழி
மாமடந்தையரெலாமறுகுசேர்தலால்
தேமருநறுங்குழற்றிருவினீங்கிய
தாமரையொத்தனதவளமாடமே.

(இ-ள்.) காமரம்கனிந்தால்என்னகனிந்தமெல்மொழி—காமரம்என்னும் ஓர்பண்ணின் சுவைகனிந்தாற்போலச் சுவைபழுத்த மெல்லியசொற்களையுடைய, மாமடந்தையர்எல்லாம்—பெருமையமைந்தபெண்களெல்லாம், மறுகு சேர்தலால்—வீதியிற்சேர்தலால், தவளம்மாடம்—வெள்ளியமாடங்கள், தேமருவு—மலர்த்தேன்மருவிய, நறுங்குழல்திருவின்நீங்கிய தாமரைஒத்தன—நறுமணங் கமழுங்கூந்தலையுடைய இலக்குமிதேவியினின்று நீங்கியதாமரைமலரையொத்தன.

மருவுமரு ஈறுதொகுத்தல். 201

மழைக்குலம்புரிகுழல்விரிந்துமண்ணுறக்
குழைக்குலமுகத்தியர்குழாங்கொண்டேங்கினர்
இழைக்குலஞ்சிதறிடமேவுண்டோய்வுறும்
உழைக்குலமுழைப்பனவொத்தொர்பாலெலாம்.

(இ-ள்.) ஓர்பால்எல்லாம்—ஒருபக்கங்களிலெல்லாம், குழைக்குலம்முகத்தியர்—குண்டலங்களையணிந்தமுகத்தையுடையபெண்கள், மழைகுலம்புரிகுழல் விரிந்துமண்உற—மேகங்களையொத்த முறுக்கமைந்த கூந்தலவிழ்ந்து நிலவுலகிற் பொருந்தவும், இழைகுலம்சிதறிட—ஆபரணங்கள் கழன்றுசிந்த

யுங்குழாம்கொண்டு—கூட்டமாகத்திரண்டு, ஏ உண்டு ஒய்வுறும்உழைகுலம் உழைப்பனஒத்துஎங்கினர்—அம்பாலேறுண்டோய்ந்த மான்கூட்டம் வருந்துதலையொத்து அழுதுபுலம்பினார்கள். 202

கொடியடங்கினமனைக்குன்றங்கோமுர
சிடியடங்கினமுழுங்குபல்லியம்
படியடங்கலுந்திமிர்பசுங்கண்மாரியால்
பொடியடங்கினமதிற்புறத்துவீதியே.

(இ-ள்.) மதில்புறத்துவீதி—மதிலின்புறத்திலுள்ளவீதிகளில், குன்றம் மனைகொடி அடங்கின—மலையையொத்தவீடுகள் துகிற்கொடிகளையிழந்தன கோமுரசு இடிஅடங்கின—அரசர்க்குரிய முரசின்ஒலியடங்கின, பல்இயம் முழங்குஇழந்த—பலவாச்சியங்களுமொலித்தலையிழந்தன, திமிர்பசுங்கண்மாரி ஆல்—மசிர்ந்தபசியகண்ணீராகிய மழையால், படிஅடங்கலும்பொடி அடங்கின—நிலமுழுதுமெழுந்ததூளடங்கின.

மனைக்குன்றம்வீடுகளாகிய மலைகள்எனப்பொருள்கொள்ளினுமமையும்.

அட்டிலுமிழந்தனபுகையகிற்புகை
நெட்டிலுமிழந்தனநிறைந்தபால்கிளி
வட்டிலுமிழந்தனமகளிர்கான்மணித்
தொட்டிலுமிழந்தனமகவுஞ்சோரவே.

(இ-ள்.) அட்டில்உம்புகை இழந்தன—சமையல்வீடும்புகையையிழந்தன, நெடு இல உம் அகில்புகைஇழந்தன—உயர்ந்தமாளிகைகளு மகிற்புகையை யிழந்தன, பால்நிறைந்தவட்டில்உம்கிளி இழந்தன—பால்நிறைந்தகிண்ணங்களை புகுகிளிகளிழந்தன, மகளிர்கால் மணிதொட்டில் உம்—தாய்மார்கால்களாகிய அழகியதொட்டில்களையும, மகவு உம்சோரஇழந்தன—பிள்ளைகளுஞ் சோர்வடையவிழந்தன.

வட்டில்தொட்டில் காரணப்பெயர்கள், வட்டுஇல் வட்டைப்போல இடமமைந்தது, பூட்டுதலமைந்தது எனநிற்றலால் தொட்டில்தொழிலாகுபெயர். தொடு பகுதி, டகரமெய்இரட்டித்தல்சந்தி, இல் புடைபெயர்ச்சிவிகுதி. 204

ஒளிதுறந்தனமுகமுயிர்துறந்தெனத்
துளிதுறந்தனமுகிற்றொகையுந்தூயநீர்த்
தளிதுறந்தனபரிதானயானையும்
களிதுறந்தனமலர்க்கள்ளுண்வண்டினே.

(இ-ள்) உயிர்துறந்தால் என்னமுகம் ஒளிதுறந்தன—உயிர்நீங்கியது போலமுகம் ஒளிநீங்கின, முகில்தொகை உம் துளிதுறந்தன—மேககூட்டங் களுமழைபெய்தலினின்றுநீங்கின, பரிதூயநீர்தளிகைதுறந்தன—குதிரை கள்புனிதமாகியநீர்வார்த்தமைத்தகலத்தைத்துறந்தன, தானம்யானை உம்மலர் கள்உண்வண்டுஇன்களிதுறந்தன—மதத்தையுடையயானைகளும்மலரிலுள்ள கள்ளையுண்ணும் வண்டுகளைப்போலக் களித்தலினின்றுநீங்கின. 205

நிழல்பிரிந்தனகுடை-நெடுங்கணேழையர்
குழல்பிரிந்தனமயிர்குமரர்தாளிணை
கழல்பிரிந்தனசினக்காமன்வாளியும்
அழல்பிரிந்தனதுணைபிரிந்தவன்றிலே.

(இ-ள்) குடை நிழல்பிரிந்தன—குடைநிழல் செய்தலினின்றுநீங்கின, நெடுங்கண் ஏழையர்குழல்மலர்பிரிந்தன—நீண்டகண்களையுடைய பெண்களது கூந்தல்மலரைச்சூடாதொழிந்தன, குமரர்தாள் இணைகழல்பிரிந்தன—வீரர்களது இரண்டுகால்களும் வீரகண்டையை யணியாதொழிந்தன, சினம்காமன்வாளிஉம் அழல்பிரிந்தன—(காமுகர்மேற்கோபமுடைய) மன்மதன்பாணமும் வருத்துதலையொழிந்தன, அன்றில் துணைபிரிந்த—ஆணன்றில் பேடையைப்பிரிந்தன.

குடைபிடிப்போரின்மையால் குடைநிழல்பிரிந்தனஎனவும், அன்றில் இணைந்திருத்தலால் அன்றில்துணைபிரிந்தன வெனவுங்கூறினார். 206

தாரொலிநீத்தனபுரவிதண்ணுமை
வாரொலிநீத்தனமழையின்விம்முறும்
தேரொலிநீத்தனதெருவுந்தெண்டிரை
நீரொலிநீத்தனநீத்தம்போலவே.

(இ-ள்.) புரவிதார் ஒலிநீத்தன—குதிரைகள் கிண்கிணிமாலையினொலியைநீக்கின, தண்ணுமைவார் ஒலிநீத்தன—மத்தளமிக்க வொலியைநீக்கின, தெருஉம் மழையின் விம்முறும் தேர்ஒலிநீத்தன—தெருக்களும் மேகத்தைப் போல வொலிக்கும் தேரினொலியைநீக்கின, தெண்டிரைநீர் நீத்தம்போல ஒலிநீத்தன—தெள்ளியஅலையையுடையகடல்வெள்ளம்போலஒலியைநீக்கின.

நீத்தன இறந்தகாலவினைமுற்று நீ பகுதி. நீத்தம் நீந்தப்படுவதென்னும் பொருள்மேல்நிற்றலால்செயப்படுபொருளில்வந்ததொழிப்பெயர்நீந்துபகுதி, நகரம்தகரமாதல்வலித்தல்விகாரம், உகரக்கேடுசந்தி, அம் விகுதி. 207

முழவெழுமொலியிலமுறையின்யாழ்நரம்
பெழவெழுமொலியிலவிமைப்பில்கண்ணினர்
விழவெழுமொலியிலவேறுமொன்றில
அழவெழுமொலியிலவரசவீதியே.

(இ-ள்) அரசவீதி முழவு எழும்ஒலி இல—இராசவீதியில் முரசிலெழுமுழக்கமில்லை, முறையின்யாழ் நரம்புஎழ எழும் ஒலி இல—முறையாகவீணையினரம்பைத் தடவஎழாநின்றவொலியில்லை, இமைப்புஇல் கண்ணினர்விழவு எழும்ஒலி இல—தேவர்கள்மகோற்சவத்திலெழு மோசையில்லை, வேறுஒன்று உம் இல் இவையொழிந்தவேறொருமங்கலஓசையுமில்லை, அழஎழும்ஒலி இல-அழவெழாநின்றகோஷமுமில்லை.

யாவருமூர்ச்சித்தலால் அழவெழுமொலியிலவென்றார் 280

தெள்ளொலிச்சிலம்புகள்சிலம்புபொன்மனை
நள்ளொலித்திலகளிர்க்கலையுமன்னவே
புள்ளொலித்திலபுனல்பொழிலுமன்னவே
கள்ளொலித்திலமலர்களிறுமன்னவே

(இ-ள்.) தெள்ஒலிசிலம்புகள் சிலம்பு—நிறைந்த ஒலியையுடைய காற்சிலம்புகளின்ஒலி, பொன்மனை நள்ஒலித்தில—பொன்னாற்செய்த மாடங்களினடுவி லொலித்த லொழிந்தன, களிர்கலைஉம் அன்னஎ—பெருமையமைந்த மேகலையுமத்தன்மையனவே, புனல்புள்ஒலித்தில—நீரில் பறவைகளுமொலித்தலையிழந்தன, பொழிலும்அன்னஎ—சோலையுமத்தன்மையனவே, மலர்கள் ஒலித்தில—மலர்கள் தேனைச்சிந்தில, களிறுஉம்அன்ன—யானையு மவற்றைப் போல மதத்தைச்சிந்தில. 209

செய்மறந்தனபுனல்செவந்தவாய்ச்சியர்
கைமறந்தனபசுங்குழவிகாந்தெரி
நெய்மறந்தனநெறியறிஞர்யாவரும்
மெய்மறந்தனரொலிமறந்தவேதமே.

(இ-ள்.) புனல்செய்மறந்தன—நீரை வயல் மறந்தன, பசுங்குழவி செவந்த வாய்ச்சியர் கைமறந்தன—இளம்பிள்ளைகளைச்செவந்த வாயையுடையபெண்களது கைகள்மறந்தன, காந்துஎரிநெய்மறந்தன—விளங்கும் யாகாக்கினி நெய்யைமறந்தன, நெறிஅறிஞர்யாவர் உம் மெய்மறந்தனர்—நன்னெறியையுடைய அறிஞரெல்லோரு முண்மையைமறந்தார்கள், வேதம் ஒலிமறந்த—வேதங்களொலியைமறந்தன

ஒலிஉதாத்தம், அநுதாத்தம், சொரிதம். செய்மறந்தன, கைமறந்தன, வேதமறந்தன என உடையவர் தொழிலையுடைமைமே லேற்றிக்கூறினர்.

ஆடினரழுதனரமுதவேழிசை
பாடினரழுதனர்பரிந்தகோதையர்
ஊடினரழுதனருயிரினன்பரைக்
கூடினரழுதனர்குழாங்குழாங்கொடே,

(இ-ள்.) குழாம்குழாம் கொடுஆடினர் அழுதனர்—கூட்டங்கூட்டமாகத்திரண்டு ஆடினவர்க ளழுதார்கள், அமுதம் ஏழிசைபாடினர் அழுதனர்—அமுதம்போன்ற குரல்முதலிய ஏழிசைகளையும் பாடினவர்க ளழுதார்கள், பரிந்தகோதையர் ஊடினர் அழுதனர்—சரிந்த கூந்தலையுடையவராய்ப் பிணங்கிய பெண்களழுதார்கள், உயிர்இன் அன்பரைகூடினர் அழுதனர்—உயிர் போன்ற தத்தங்கணவரைக் கூடியபெண்க ளழுதார்கள். 211

நீட்டிலகளிறுகைநீரின்வாய்புதல்
பூட்டிலபுரவிகள்புள்ளும்பார்ப்பினுக்
கீட்டிலவிரைபுனிற்றீன்றகன்றையும
ஊட்டிலகறவைகளுருகிச்சோர்ந்தவே

(இ-ள்.) களிறுகைநீர்இன் நீட்டில—யானைகள் பருகும்படி தூதிக்கையை நீரில்நீட்டுத லொழிந்தன, புரவிகள்வாய்புதல்பூட்டில—குதிரைகள் தின்னும்படி வாயாற் புதலைக்கவ்வுத லொழிந்தன, புள்உம்பார்பிள்ளைக்கு இரைஈட்டில—பறவைகளுங் குஞ்சுகளுக்கு இரைதேடுதலொழிந்தன, கன்றுஉருகிசோர்ந்த—கன்றுக ளுருகிச்சோர, கறவைஈன்ற புனிறுகன்றை உம் ஊட்டில — பசுக்கள் தாம்பெற்ற இளங் கன்றுகளுக்கும் பாலூட்டுதலொழிந்தன.

சோர்ந்த முற்றெச்சம். ஐ உருபுமயக்கம். கறவைவினைமுதற் பொருளில்வந்த தொழிற்பெயர், அன்றித் தொழிலாகுபெயரெனினு மமையும் கற பகுதி, ஐ விகுதி, வகரத்தோற்றம்சந்தி. 212

மாந்தர்தமமொய்ம்பினின்மகளிர்கொங்கையாம
வேந்திளநீர்களுஞ்சவ றுமைமெய்தின
சாந்தமமகிணார்தம முடியிற்றையலார்
கூந்தலின் வறுமையமமலரின் கூலமே

(இ-ள்.) மாந்தர்தம் மொய்ம்பின் இல்ஏந்து—புருடர்கள் தமது புயங்களாலேந்திய, மகளிர்கொங்கைஆம் இளநீர்கள்உம்—பெண்கள் தனமாகிய இளநீர்களும், சாந்தம்வறுமைஎய்தின—சந்தனம் திமிராமையாகிய தரித்திரத்தை யடைந்தன, அமகிணர்தம்முடியின் தையலார்கூந்தலின்—அப் புருடர்கள் தமது முடியிலும் அப் பெண்கள் தமது கூந்தலிலுஞ் சூடாமையால், அமலரின் கூலம் வறுமைஎய்தின—அழகியமலரின்கூட்டம் வறுமையடைந்தன.

சூடாமை சொல்லெச்சம். 213

கலிநிலைத்துறை

ஓடைநல்லணிமுனிந்தனவுயர்களிறுச்சி
சூடைநல்லணிமுனிந்தனதொடர்மனைபொற்பின்
ஆடைநல்லணிமுனிந்தனம்பொன்செயிஞ்சி
பேடைநல்லணிமுனிந்தனமென்னடைபுறவம்.

(இ-ள்.) உயர்களிறு—எழுசாணளவுயர்ந்த அரசயானைகள், ஓடைநல் அணிமுனிந்தன — நெற்றிப்பட்டமாகிய நல்ல ஆபரணங்களை வெறுத்தன உச்சிசூடைநல்அணிமுனிந்தன—பெண்களுச்சிகள் சூடையாகிய நல்ல ஆபரணத்தை வெறுத்தன, தொடர்மனை—ஆகாயத்தை யளாவிய வீடுகளும்,அம் பொன்செய்இஞ்சி—அழகிய பொன்னாற்செய்த மதிலும், ஆடைகொடியின் நல்அணி முனிந்தன — துகிற்கொடியினல்லவரிசைகளை வெறுத்தன, மெல்நடைபுறவம்—அசைந்துநடக்கும் நடையையுடைய புறக்கள், பேடைநல் அணிமுனிந்தன—தமக்கு நல்லஆபரணமாகிய பெண்புறக்களை வெறுத்தன.
சூடை உச்சியி லணியுமொருவகை யாபரணம். 214

திக்குநோக்கிய தீவினைப்பயனெனச்சிந்தை
நெக்குநோக்குவோர்நல்வினைப்பயனெனநேர்வோர்

பக்கநோக்கலென் பருவரலின் பமென் றிரண்டும்
ஒக்கநோக்கியமேயாகருமருந்துயருழந்தார்

(இ-ள்.) திக்குநோக்கிய தீவினைப்பயன்என — தம்மிடத்துவந்தடைந்தன தீவினைப்பயனென்றால், சிந்தைநெக்குநோக்குவோர்—மனம்நெக்குவிட்டுடைந்து வெறுப்பவரும், நல்வினைப்பயன் என நேர்வோர் பக்கம்நோக்கல் என்—நல்வினைப்பயன் வந்ததென்றால் விரும்புவோருமாகிய இவர்களிடத்துள்ள துன்பத்தை யாராய்தலென்ன. பருவரல்இன்பம் என்ற இரண்டும் ஒக்கநோக்கியயோகர்உம் அருந்துயர் உழந்தார்—துன்பமின்பமென்று சொல்லப்பட்ட இருவினைப்பயன்களையுஞ் சமமாக நோக்கிய யோகிகளும் அடைதற்கரிய துன்பத்தில் வருந்தினார்கள்.

இருவினைச் சமத்துவம்வாய்ந்தவர் என்பார் ஒக்கநோக்கிய என்றார். திக்கு இடம். 215

ஓவினல்லுயிருர்ப்பினோடுடல்பதைத்துலைய
மேவிநல்லழகெழில்கேடவிம்மனோய்விம்மத்
தாவிலைம்பொறிமறுகுறத்தயரதனென்ன
ஆவிநீக்கின்றதொத்ததவ்வயோத்திமாநகரம

(இ-ள்.) அஅயோத்திமாநாகரம்—அந்த அயோத்தியென்னும் பெரிய நகரமானது, உடல்ஓவுஇல் நல்உயிர்உயிர்ப்பின் ஓடு பதைத்துஉலைய—உடம்பானது ஒழிதலில்லாத நல்லஉயிர்உயிர்ப்பெறிதலோடு பதைபதைத்துவருந்தவும், நல்அழகுஎழில் மேவிகெட—நல்ல அழகின்றோற்றம் வாட்டமடைந்து கெடவும், விம்மல்நோய்விம்ம—பொருமனோ யதிகரிக்கவும், தாவு இல்ஐம் பொறிமறுகுற — கெடுதலில்லாத பஞ்சேந்திரியங்கள் சுழலவும், தயரதன் என்ன—தசரதனைப்போல, ஆவிநீக்கின்றது ஒத்தது—பிராணனைவிடுதலை யொத்திருந்தது.

அயோத்திமாநகரம் இடவாகுபெயராய்ப் பொருளாலுயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால் ஒத்ததுஎன அஃறிணைமுடிபெற்றது. 216

உயங்கியந்நகருலைவுறவொருங்குழைசுற்ற
மயங்கியேங்கினர்வயின்வயின்வரம்பிலர்தொடர
இயங்குபல்லுயிர்க்கோருயிரெனநின்றவிராமன்
தயங்குபூண்முலைச்சானகியிருந்துழிசார்ந்தாள்

(இ-ள்.) அநகர்உயங்கிஉலைவுற—அந்த நகரத்திலுள்ளோர் மயங்கிவருந்தவும், ஒருங்குஉழை சுற்றம்மயங்கி ஏங்கினர் வயின்வயின்வரம்பிலர்தொடர—ஒருசேரத்தம்பக்கத்திலுறவினர் மயங்கி யழுது இடங்கள்தோறு மளவிறந்து தொடர்ந்துவரவும், இயங்குபல்உயிர்க்கு ஓர் உயிர்என்ன நின்ற இராமன்—உலகிற் சஞ்சரிக்கும்பல வுயிர்களுக்கும் ஒருயிரைப்போல நின்ற இராமமூர்த்தி, பூண் தயங்குமுலைசானகிஇருந்த உழிசார்ந்தாள்—ஆபரணம்விளங்குந் தனத்தையுடைய சீதாப்பிராட்டியிருந்தவிடத்திலடைந்தனர்

இருந்த என்னும் பெயரெச்சத்தி னகரவீறுதொகுத்தல். உயங்கி இறந்த காலவினையெச்சம் உயங்கு பகுதி. 217

அழுதுதாயரோ டருந்தவரந்தணரரசர்
புழுதியாடியமெய்யினர்புடைவந்துபொருமப்
பழுதுசீரையினுடையினன் வரும்படிபார
எழுதுபாவையன் னாண்மனத்துறுக்கமோ டெழுந்தாள்.

(இ-ள்.) அழுததாயா அருந்தவர் அந்தணர் அரசர்—அழுதுதாய்மார்களும் அரிய தபோதனர்களும் மறையவர்களு மன்னவர்களும், புழுதி ஆடிய வந்துபொரும்—புழுதிபடிந்த வுடம்பினராய்ப் பக்கத்திற்சூழ்ந்துவந்துவிம்ம, மெய்யினர் புடைபழுது சீரையின் உடையினன்வரும்படி—பழுதுபட்ட மரவுரியையுடையவராயிராமமூர்த்திவர, எழுதுபாவை அன்னாள் மனம் துணுக்கமோடு எழுந்தாள்—எழுதிய சித்திரப்பாவையையொத்த சீதாபிராட்டியார் மனநடுக்கத்தோடெழுந்தனள் 218

எழுந்தநங்கையைமாமியர்தழுவினரேங்கிப்
பொழிந்தவுண்கணீர்ப்புதுப்புனலாட்டினர்புலம்ப
அழிந்தசிந்தையளன்னமிதின்னதென்றறியாள்
வழிந்தநீர்நெடுங்கண்ணினள்வள்ளலைநோக்கா

(இ-ள்.) எழுந்த நங்கையை மாமியர்தழுவினர்ஏங்கி—எழுந்த சீதாப்பிராட்டியை மாமிமார்கள் தழுவியது, பொழிந்த உண்கணீர்புதுப்புனல் ஆட்டினர் புலம்ப—சிந்திய மையெழுதியகண்ணீராகியபுதிய நீராட்டியோர் பானின்றுபுலம்ப, அன்னம் அழிந்தசிந்தையள் இது இன்னதுஎன்று அறியாள்—அன்னம்போன்ற அச்சீதாப்பிராட்டிமனமழிந்து நேரிட்டஇது இன்னகாரணத்தாலென் றறியாது, வழிந்தநீர்நெடுங்கண்ணினள் வள்ளலை நோக்கா—நெடியகண்களினின்றுஞ் சிந்திய நீரினளாயிராமமூர்த்தியைப்பார்த்து

கலிவிருத்தம்.

பொன்னையுற்றபொலங்கழலோய்புகழ்
மன்னையுற்றதுண்டோமற்றிவன்றுயர்
என்னையுற்றதியம்பென்றியம்பினாள்
மின்னையுற்றநுடக்கத்துமேனியாள்.

(இ-ள்.) பொன்னைஉற்ற பொலன்கழலோய் — அழகால் மிக்கபொன்னாற்செய்த வீரகண்டையையுடையோய், இவன் துயர் புகழ்மன்னைஉற்றதுஉண்டோ—இந்தப்பெருந்துன்பம் புகழமைந்த அரசனால்வந்ததோ, உற்றதுஎன்னை இயம்புஎன்று-(யாரால்) வந்ததுயரதுகூறுயென்று மின்னைஉற்றநுடக்கத்து மேனியாள்இயம்பினாள்—மின்னலையொத்த துவட்சியையுடையமேனியையுடைய சீதாப்பிராட்டி வினவினாள்.

ஐ உருபுமயக்கம். 220

பொருவிலெம்பிபுவிபுரப்பான்புகல்
இருவராணையுமேந்தினனின்றுபோய்க்

கருவிமாமழைக்கற்றடங்கண்டுநான்
வருவெனீண்டுவருந்தலைநீயென்றான்

(இ-ள்.) பொருவுஇல் எம்பிபுவிபுரப்பான்-(நற்குணநற்செய்கைகளில்) தனக்கொப்பில்லாதபரதாழ்வான்நிலம்ஆள்வான், புகல் இருவர் ஆணையும்ஏந்தினென்—கூறிய தாய்தந்தையரது ஆஞையை மேற்கொண்டேன், நான் இன்று போய்—நானிப்பொழுதுபோய், கருவிமாமழைகல் தடம்கண்டுவருவென்—உலகிற்குத்துணைக்காரணமாகிய கரியமேகங்களுலவு மலைவழியைப் பார்த்துவருவேன், நீஈண்டுவருந்தலைஎன்றான்—நீயிவ்விடத்து வருந்தாதிருக்கவென்று கூறினார்.

வருந்தலை எதிர்மறைவியங்கோள் வினைமுற்று வருந்து பகுதி, அல் எதிர்மறைவிகுதி, உகரக்கேடுசந்தி, அனைத்தும் ஒருபகுதி, ஐ வியங்கோள் விகுதிபொருவில் என்றதற்குப் போர்செய்யும் வில்லெனப் பொருள்கொள்ளலும் ஒன்று. 221

நாயகன் வனம்நண்ணலுற்றானென்றும்
மேயமண்ணிழந்தானென்றுமவிம்மலள்
நீவருந்தலைநீங்குவென்யானென்ற
தீயவெஞ்சொல்செவிசுடத்தேம்புவாள்

(இ-ள்) நாயகன் வனம் நண்ணல்உற்றான்என்றும்—தனது கணவனாகிய இராமமூர்த்தி காட்டிலேயடையத் தொடங்கினானென்றும், மேயமண் இழந்தான்என்றும் விம்மலள் — தனக்குரிய நிலவுலகை யிழந்தனனென்றும் மனம் விம்மாமல், நீ வருந்தலையான் நீங்குவென்என்ற—நீ வருந்தாதொழிக யான் செல்லுகின்றேனென்று கூறிய, தீயவெம்சொல்செவிசுட தேம்புவாள் —கொடியசொல் தனது செவியைச்சுடவருந்தாநின்றாள் 222

துறந்துபோமெனச்சொற்றசொற்றேறுமோ
உறைந்தபாற்கடற்சேக்கையுடனொரீஇ
அறந்திறம்புமென்றய்யனயோத்தியிற்
பிறந்தபின்பும்பிரிவிலளாயினாள்

(இ-ள்.) அறம்திறம்பும்என்று அய்யன் உறைந்த பாற்கடல் சேக்கை உடன்ஒருவி—தருமமாறுபடுமேயென்று திருமால் தானெழுந்தருளிய பாற்கடலிற் சேஷசயனத்தை விரைந்து நீக்கி, அயோத்தியில் பிறந்தபின்புஉம்—அயோத்தியில் மானிடத் திருவுருவங்கொண்டு பிறந்தபின்னும், பிரிவிலள் ஆயினாள்—தானும்பிறந்து பிரியாத சீதாப்பிராட்டி, துறந்துபோம் என்ன சொற்றசொல்தேறும்ஓ—உன்னைவிட்டுப் போவேனென்று சொன்ன சொல்லால் மனந் தெளிவாளா (தெளியாள்என்றபடி) 223

அன்னதன்மையளய்யனுமன்னையும்
சொன்னசெய்யத்துணிந்ததுதூயதே
என்னையென்னையிருத்தியென்றானெனா
உன்னவுன்னவுயிருமிழாநின்றாள்

(இ-ள்) தாயர்தவ்வையர் தன் துணைச்சேடியர்—தாய்மாரும் தனக்கு மூத்தோரும் தனது துணையாயுள்ளபாங்கிமாரும், ஆயம்மன்னிய அன்பினர்என்றஇவர் தீயில்மூழ்கினர் ஒத்தனர்—தோழிமாராக நிலைபெற்ற அன்பினருமென்று சொல்லப்பட்ட இவர்கள் நெருப்பில்மூழ்கினவரையொத்துத் தோன்றினார்கள், செங்கணான் தூயநங்கையைநோக்கினன் சொல்லுவான்—செவந்தகண்களையுடைய இராமமூர்த்தி கற்பின்புனிதம்வாய்ந்த சீதாப்பிராட்டியை நோக்கிக்கூறுகின்றார்.

என்றஎன்னும் இடைச்சொல்லினடியாகப்பிறந்த பெயரெச்சத்தினீறுதொகுத்தல். நோக்கினன் முற்றெச்சம். 230

முல்லையுங்கடன் முத்துமெதிர்ப்பினும்
வெல்லும்வெண்ணகையாய்விளைவுன் னுவாய்
அல்லைபோதவமைந்தனையாதலின்
எல்லையற்றவிடர் தருவாயென்றான்.

(இ-ள்.) முலலையும் கடல்முத்தும் எதிர்ப்பின் உம் வெல்லும்வெண்ணகையாய்—முல்லையரும்பும் கடலிற்றோன்றிய முத்தமும் தம்மொடுபோர்செய்யஎதிர்த்தாலும் அவற்றைவெற்றிகொள்ளும் வெள்ளிய பற்களையுடையாய், விளைவுஉன்னுவாய் அல்லை (எமமொடுவருதால்) வருந்துன்பத்தைச்சிறிதும் நினைகின்றாயல்லை, போத அமைந்தனை ஆதலின்—எம்மொடுகாட்டிற்குவரவுடன்பட்டாயாதலால், எல்லைஅற்றஇடர் தருவாய்என்றான்—வரம்பிகந்ததுன்பத்தை யெங்களுக்குத்தருவாயென்றுகூறினார்.

போத புகுஎன்னும்பகுதியடியாகவந்தது. இதனைமுன்னர்க்காண்க. 231

கொற்றவன் னதுகூறலுங்கோகிலம்
செற்றதன்னகுதலைச்சிறுவாள்
உற்றநின்றதுயரமிதொன்றுமே
எற்றுறந்தபினின்பங்கொலாமென்றாள்

(இ-ள்.) கொற்றவன் அதுகூறலும்—இராமமூர்த்தியதனைக்கூற, கோகிலம் செற்றதுஅன்னகுதலையள் சிறுவாள்—குயிலிசையைவென்ற குதலைச்சொற்களையுடைய சீதாப்பிராட்டிகோபித்து உற்றுநின்றதுயரம் இதுஒன்றும்ஏ—உன்னையடைந்து நின்றதுன்பம் உன்னோடுநான் வருகையாகியஇதுஒன்றுதானே, என்துறந்தபின் இன்பம்கொல் ஆம்என்றாள்—என்னைவிட்டுப்போனாலுனக்கு இன்பமல்லவோவென்றுகூறினாள்.

துறந்தபின் எதிர்காலவினையெச்சம்துற-பகுதி, து அசாரியை, நகரத்தோற்றமும் உகரக்கேடுஞ்சந்தி, பின் எச்சவிகுதி. 232

சீரைசுற்றித்திருமகள் பின்செல
மூரிவிற்கையிளையவன் முன்செலக்
காரையொத்தவன் போமபடிகண்டவவ்
வூரையுற்றதுணர்த்தவுமொண்ணுமோ.

(இ-ள்.) திருமகள் சீரைசுற்றி பின்செல்ல—சீதாப்பிராட்டி மரவுரியையுடுத்துத் தன்பின்னேவரவும், மூரிவில்கை இளையவன் முன்செல்ல—பெ

அன்னதாயரரிதிற்பிரிந்தபின்
முன்னர்நின்றமுனிவனைக்கைதொழாத்
தன்னதாருயிர்த்தம்பியுந்தாமரைப்
பொன்னுந்தானுமோர்தேர்மிசைப்போயினான்.

(இ-ள்) அன்னதாயர் அரிதுஇல்பிரிந்தபின்—அத்தாய்மார்கள் தம்மினின்று அகத்தாற்பிரியாது புறத்திற்பிறந்தபின், முன்னர்நின்ற முனிவனை கைதொழா—தம்முன்னேநின்ற வசிட்டமுனிவரைக்கைகூப்பி, தன் அது ஆர் உயிர்தம்பி உம்தாமரைபொன் உம் தான் உம் ஓர்தேர்மிசைபோயினான்—தம்முடையபெறுதற்கரியவுயிர்போன்ற இளையபெருமாளும் தாமரையில்வசிக்குமிலக்குமியாகிய சீதாப்பிராட்டியும் தானுமொரு தேர்மேலேறிச்சென்றனர்.

அன்ன அகரச்சுட்டின் திரிபு. தம்பியும் பொன்னும்தானும் போயினான் என ஆண்பாலும்பெண்பாலும் விரவித்தான்என்ற சிறப்பால் ஒருமைமுடிபேற்றல் "திணைபால்" என்னுஞ்சூ—இல் "பன்மையொருமுடிபின" என்றதனமையால். 237

நகர் நீங்குபடலம் முற்றிற்று

ஆக திருவிருத்தம் ௩௱௨.



# தைலமாட்டுப் படலம்.

கலிவிருத்தம்.

ஏவியகுரிசில் பின் யாவரேகிலார்
மாவியல்தானையம்மன்னை நீங்கலாத்
தேவியரொழிந்தனர் தெய்வமாநகர்
ஓவியமொழிந்தன வுயிரிலாமையால்.

(இ-ள்.) மா இயல்தானை அமன்னை—பெருமையமைந்த சேனையையுடைய அந்தத்தசரதனை, நீங்கலாததேவியர் ஒழிந்தனர்—பிரிந்து நீங்காத கௌசலைமுதலியதேவியர்கள் பின்செல்லுவதொழிந்தார்கள், உயிர இல்லாமையால்—தமக்குயிரில்லாமையினால். தெய்வமாநகர் ஓவியம் ஒழிந்தன—தெய்வத்தன்மையையுடைய பெருமைவாய்ந்த அயோத்தியாநகரத்திற்சித்திரித்த சித்திரங்கள் செல்லுதலொழிந்தன, (அ-ற்றி) ஏவியகுரிசில்பின் ஏகிலார்யாவர்—தசரதரால் ஏவப்பட்ட இராமமூர்த்தியின் பின்செல்லாதவர்யார் (யாவருஞ்சென்றனரென்றபடி.)

சக்கிரவர்த்தி இராமனைப்பிரிதலால் சரமதசையில் மூர்ச்சித்துக் கிடத்தலின் கௌசலைமுதலிய தேவிமார் சொல்லாதொழிந்தன ரென்பார் அம்மன்னை நீங்கலாத்தேவியரொழிந்தன ரெனவும், சித்திரங்கள்உயிரில்லாதசட்டகமென்பார் உயிரில்லாமையால் ஓவியமொழிந்தன எனவுங்கூறினார். 1

கைகணீர்பரந்துகால்தொடரக்கண்ணுகும்
வெய்யநீர்வெள்ளத்துமெள்ளச்சேறலால்
உய்யவேழுலகுமொன்றான நீருழல்
தெய்வமீனொத்ததச்செம்பொற்றேரரோ.

(இ-ள்.) கைகள் நீர்பரந்து—இரண்டுபக்கங்களிலும் நீர்பரவி, கால் தொடர—தேர்க்காலைத்தொடர்தலால், கண் உகும் வெய்யநீர் வெள்ளத்து—அந் நகரிலுள்ளோர் கண்கள்சிந்தும் அந்நீர் வெள்ளத்தில், மெள்ள அசெம்பொன்தேர் சேறலால்—மெல்ல அச்செம்பொனாலமைந்த தேர்செல்லுதலால், ஏழ்உலகும் ஒன்றான நீர்—ஏழுலகமும் ஒன்றாகக் கோத்தகடலில், உய்ய—ஆன்மாக்களுய்ய, உழல்தெய்வம் மீன்ஒத்தது—சுழன்றுதிரியும் தெய்வத்தன்மையையுடைய மச்சாவதாரத்தை யொத்திருந்தது.

நீர்பரந்து என்றதில்—நீர் என்றது கண்ணீரை, சோமுகாசுரனென்பவன் வேதங்களைக்கவர்ந்துகடலிலொளித்தபோது அவ்வேதத்தை மீட்டுக்கொண்டுவா மச்சாவதாரங்கொண்டு அவனுயிர் வாங்கினமையால் உய்யவேழுலகுமொன்றான நீருழல் தெய்வமீனொத்தது என்றார் 2

மீன்புகழ்பெறவெயிலெல்ர்துங்கமேதியோ
டான்புகக்கிரவணத்தர்புக்கனன்

கான்புகக்காண்கிலேனென்றுகல்லதர்
தான்புகமுடுகினனென்னுந்தன்மையான்.

(இ-ள்.) கதிரவன்—சூரியன், கான்புககாண்கிலேன் என்று—இராமன்காட்டிற்செல்லக்கண்களாற் காண்கிலேன் எனறுவருந்தி, கல்அதர்தான்புகமுடுகினன் என்னும்தன்மையான்—கற்கள்நிறைந்தபாலைநிலவழியில்தான்முந்திச் செல்லவிரைந்தனன்என்னுந்தன்மையனாகி, மீன்புகழ்பெற—நட்சத்திரங்கள் புகழ்ச்சிபெறவும், வெயில ஒதுங்க—தனது கிரணம் ஒருபுடையொதுங்கவும், மேதியோடு ஆன்புக—எருமையும் பசுவும் தத்தம் துறையிற்புகவும், அத்தம் புக்கனன்—அத்தமனகிரியில் அத்தமித்தனன்.

சூரியன் அத்தமித்தகாலையில் தன்னுடைய ஒளியிழந்த நட்சத்திரங்கள் ஒளிபெறதலாலும், மேயச்சென்ற எருமையும் பசுவும் கட்டுத்துறையிற் செல்லுதலாலும் மீன்புகழ்பெற மேதியோடான்புகஎனவும் கூறினார். ஓடு—எண்ணிடைச்சொல். சூரியன் அத்தமித்தலை இராமன் காட்டிற்செல்லுவதை யான் காண்கிலேனென்று அக்காட்டுக்குத் தான்முந்திச்சென்றனன்என அத்தியவசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்ற அணி. 3

பகுத்தவான்மதிகொடுபதுமத்தண்ணலே
வகுத்தவாணுதலியர்வதனராசிபோல
உகுத்தகண்ணீரினவொளியுநீங்கின
முகிழ்த்தழகிழந்தனமுளரியீட்டமே

(இ-ள்.) பகுத்தவான்மதிகொடு—பிளவுபட்ட வெள்ளிய இளஞ் சந்திரனைக்கொண்டு, பதுமத்து அண்ணல்வகுத்தவாள் நுதலியர்—தாமரையில்வசிக்கும் பிரமன்வகுத்த ஒள்ளியநெற்றியையுடைய பெண்களது, வதனம் ராசிபோல்—ஒளியிழந்தமுகங்களின் கூட்டம்போல், முளரிஈட்டம்—தாமரையின் கூட்டங்கள், உகுத்தகண் நீரின—சிந்தியகள்ளாகிய நீரினையுடையன, (கண்ணீரின) கண்ணீரினையுடையன, ஒளியும்நீங்கின—பொலிவும் நீங்கின, முகிழ்த்துஅழகு இழந்தன—குவிந்து அழகினை யிழந்தன.

இராமமூர்த்தியின் பிரிவால்நாட்டிலுள்ள பெண்கள் முகம்கண்ணீரைச் சிந்திப்பொலிவிழந்தனபோலத் தாமரையின் கூட்டங்கள் அந்திப்பொழுதிற் கண்ணீரைசசிந்திப்பொலிவிழந்தன என்பார்முகிழ்த்தழகிழந்தனஎன்றார். 4

அந்தியில்வெயிலொளியழியவானகம்
நந்தலில்கைகயன்பயந்தநங்கைதன்
மந்தரையுரையெனுங்கடுவின்மட்டிய
சிந்தையினிருண்டதுசெம்மைநீங்கியே.

(இ-ள்.) அந்தியில வெயில்ஒளி அழிய—அந்திப்பொழுதில வெயிலின் ஒளிநீங்க, வானகம்—வானுனது, நந்தல் இல் கைகயன் பயந்த—கெடுதலில்லாதகேகயன்பெற்ற, நங்கைதன்—பெண்ணிற்சிறந்த கைகேசியினது, மந்தரை உரையெனும் கடுவில்மட்டிய சிந்தையின்—மந்தரையின்உரையென்னும்

விடத்தால் மழுங்கிய மனத்தைப்போல, செம்மைநீங்கி இருண்டது—செந்நிறத்தினின்றும் நீங்கியிருண்டது.

அந்திப்பொழுதுநீங்கி இராப்பொழுது வந்ததென்பது தோன்றச் செம்மைநீங்கி யிருண்டது என்றார். 5

பார்த்துமீனருமபியபசலைவானகம்
அரங்கையின்முனிவரனறைந்தசாபத்தால்
நிரந்தரமிமைப்பிலாநெடுங்கணீடிய
புரந்தரனுருவெனப்பொலிந்ததெங்குமே.

(இ-ள்) மீன்பார்த்து அரும்பியபசலைவானகம்—நட்சத்திரங்கள் பரவி உதித்த பசிய ஆகாயமானது, அரங்கை இல் முனிவரன் அறைந்த சாபத்தால்—துன்பத்தினின்று நீங்கியகவுதமமுனிவர்கூறியசாபத்தினால், நிரந்தரம்—எப்பொழுதும், இமைப்பு இலாத நெடுங்கண் நீடிய புரந்தரன் உருஎன்ன—இமைத்தலில்லாத நெடிய ஆயிரங்கண்கள்பரந்த இந்திரனதுவடிவத்தைப்போல, எங்கும்பொலிந்தது—எவ்விடத்தும் விளங்கியது.

கவுதமமுனிவன் பத்தினியாகிய அகலிகையை இந்திரன்களவிற்புணர்ந்தபோது அம்முனிவன் கண்டு சினந்து உன்உடம்புமுற்றும் யோனிகளாகவெனச்சபித்துத்தேவர்கள் வேண்டுகோளால் பார்ப்போர்கண்களுக்குக்கண்களாகப்பொலிகவென அனுக்கிரகஞ்செய்தாரென்பது நூல்வரலாறு. இந்திரன்வடிவுவானமாகவும்அவ்வானத்திற்றோன்றிய நட்சத்திரம்அவனதுகண்களாகவும்ஒப்புமை தோன்றக்கூறுதலால் இது ஒப்புமைக்கூட்ட உவமையணி. 6

திருநகர்க்கியோசனையிரண்டுசென்றொரு
விரைசெறிசோலையைவிரைவினெய்தினன்
இரதநின்றிழிந்தபின்னிராமனின்துணை
உரைசெறிமுனிவரோடுறையுங்காலையே.

(இ-ள்.) திருநகர்க்கு இரண்டுயோசனை சென்று—பொலிவமைந்த அயோத்திநகரத்திற்கு இரண்டுயோசனை தூரம் அப்பால் சென்று, ஒரு விரைசெறி சோலையை விரைவின் எய்தினன்—வாசமிக்க ஒரு சோலையை விரைந்தடைந்து, இராமன் இரதம் நின்று இழிந்தபின்—இராமனவன் தான் ஆரோகணித்துவந்த தேரினின்று இறங்கியபின், இன் துணைசெறிமுனிவரோடு—தனக்குஇனியதுணைவராகவந்த புகழ்பெற்ற முனிவர்களோடு, உறையுங்காலை—அச்சோலையில்வசிக்கும்போது.

எய்தினன் முற்றெச்சம். 7

வட்டமோர்யோசனைவளைவிற்றாய்நடு
எட்டனையிடவுமோரிடமிலாவகை
புட்டகுசோலையின்புறத்துப்போர்த்தென
விட்டதுகுரிசிலைவிடாதசேனையே.

(இ-ள்.) ஓர்யோசனை வட்டம் வளைவிற்று ஆய்—ஒருயோசனை வட்டம் வளைந்து, நடு ஓர் எள்தனை இடவும் இலாதவகை—அதனிடையில் ஓர் எள்

ளைப்போட இடமில்லாதவண்ணம், புள்சகுசோலையின்புறத்து—பறவைகளமைந்த அச்சோலையின்புறத்தில், குரிசிலைவிடாதசேனை—இராமனைவிட்டுப் பிரிதற்கிசையாத சேனைகள், போர்த்தாலென்னவிட்டது—போர்த்தாற்போற்சூழ்ந்தன.

சேனைசாதி யொருமையாதலால் சேனைகள் என்றும். போர்த்தென தொகுத்தல் விகாரம். 8

குயின்றியகுலமணிநதியின்கூலத்தில்
பயின்றுயர்வாலுகப்பரப்பிற்பைம்புலில்
வயின்றொறும்வைகினரொன்றும்வாய்மடுத்
தயின்றிலர்துயின்றிலரழுதுவிம்மினார்.

(இ-ள்.) குலமணிகுயின்றிய—நவமணிகளைப் பதித்தாலொக்கப்பரவிய, நதியின்கூலத்தில்—சரயுநதியின்கரையிலும்,பயின்றுஉயர்வாலுகம்பரப்பில்—விடாதமைந்த வெண்மணற்பரப்பிலும், பைம்புல்லில்—பசியபுற்பரப்பிலும்,வயின்தொறும்வைகினர்—அவ்விடங்கள்தோறும் தங்கி, ஒன்றும்வாய்மடுத்து அயின்றிலர் துயின்றிலர் அழுதுவிம்மினார்—ஒன்றையும்வாயிற்பெய்து நுகராமலும் கண்டுயிலாமலும் அழுது விம்மினார்கள்.

இராமன் அரசியலிழந்துவனத்திற்செல்லுதலில் துன்பமீதூர்தலால்பசி தோன்றியதில்லையென்பார் ஒன்றும் வாய்மடுத்தயின்றியலர் என்றார். அயின்றிலர், துயின்றிலர் முற்றெச்சங்கள். 9

ஒருபோது கோச்சகம்.

வாவிவிரிதாமரையின்மாமலரின்வாசக்
காவிவிரிநாண்மலர்முகிழ்த்தனையகண்ணார்
ஆவிவிரிபாலுரையினுடையணையாக
நாவிவிரிகூழையிளநவ்வியர்துயின்றார்.

(இ-ள்.) வாவிவிரி தாமரைமாமலரின—தடாகத்தில்மலர்ந்த பெருமையமைந்த தாமரைமலரில், வாசம் காவிவிரி நாள்மலர் முகிழ்த்தால்அனையகண்ணார்—வாசம் அமைந்த நீலோற்பலத்தினது அன்றலர்ந்த மலர்குவிந்தாலொத்தகண்களையுடையபெண்கள், ஆவிவிரி—அகிற்புகையிற்படிந்த, பால்நுரையின்—வெள்ளியநுரையைப்போலமெய்மைவாய்ந்த, ஆடைஅணையாக—தமது ஆடையேமெத்தையாக, நாவிவிரிகூழைஇளநவ்வியர்துயின்றார்—மிருகமதம் படிந்த கூந்தலையுடைய இளமைவாய்ந்தமான்போன்ற பெண்கள்கண்டுயில் கூர்ந்தார்கள்.

முகம் தாமரையாகவும், கண்கள் நீலோற்பலமாகவும் கூறுதலால் தாமரையின் மாமலரின் வாசக்காவிவிரி நாள்மலர்எனவும், துயில்கொள்ளுதலால் முகிழ்த்தனைய கண்ணார் எனவும் கூறினார். தாமரையின் என்பதில் இன் வேண்டாவழிச்சாரியை. 10

பெரும்பகல்வருந்தினர்பிறங்குமுலைதெங்கின்
குருமடைகள்பொருஞ்செவ்விமன்கையர்குறங்கில்
அரும்பனையகொங்கையயிலம்பனையவுண்கட்
கரும்பனையசெஞ்சொனவில்கன்னியர்துயின்றார்.

(இ-ள்.) அரும்பு அனையகொங்கை—தாமரை அரும்பையொத்த கொங்கைகளையும், அயில் அம்பு அனைய உண்கண்—கூரிய அம்பினையொத்தமையெழுதியகண்களையும், கரும்பு அனையசெஞ்சொல்—கரும்பினையொத்தகுதலைச்சொல்லையுமுடைய,நவிலகன்னியர்—யாவரும்புகழுங்கன்னிப்பெண்கள்,பெரும்பகல்வருந்தினர்—உச்சிப்பகலில்வருந்திவழிச்சென்றாராதலினால், தெங்கின்குரும்பைகள் பொரும்பிறங்குமுலை—தெங்கின்குரும்பைகளோடுபோர்செய்யும் விளங்குமுலைகளையுடைய, செவிலிமங்கையர் குறங்கில் துயின்றார்—செவிலித்தாயரது தொடைகளில் கண்டுயில்கூர்ந்தார்கள்.

தமது நற்றாயின்பாங்கி, தம்மை வளர்த்த தாயாதலால் செவிலுமங்கையர் குறங்கில் துயின்றார் என்றார். 11

பூவகநிறைந்தபுளினத்திரள்கள்தோறும்
மாவகிரினுணகணர்மடப்பிடியின்வைகச்
சேவகமமைந்தசிறுகட்கரிமளென்னத்
தூவகலில்குந்தமறமைந்தர்கள்துயின்றார்

(இ-ள்.) பூஅகம்நிறைந்த புளினம்திரள்கள்தோறும்—தாமரைமலர்கள் முதலியனதமதிடத்துநிறைந்த மணற்குன்றுகள்தோறும், மாவகிரின் உண்கணர் மடப்பிடியின் வைக—மாவடுவின்பிளவினையொத்த கண்களையுடைய பெண்கள் இளமையமைந்த பெட்டையானைகளைப்போலசிவக்க, சேவகம் அமைந்தசிறுகண்கரிகள் என்ன—சேவகத்திலமைந்தசிறிய கண்களையுடைய ஆண்யானைகளைப்போல, தூ அகல் இல்குந்தம் மறம்மைந்தர்கள் துயின்றார்—பகைவருள் நீங்குதலில்லாதவேலையேந்திய வீரமுடைய ஆண்மக்கள்கண்டுயின்றாகள்.

சேவகம்—விலங்கின்படுக்கையிடம். 12

தகவும்மிகுதவமுமிவைதழுவ வுயர்கொழுநர்
முகமுமவரருளும் நுகர்சிலர்கள்துயர்முடுக
அகவுமிளமயில்களுயிரல சினவனையார்
மகவுமுலைவருடவிளமகளிர்கள் துயின்றார்.

(இ-ள்.) தகவும் மிகுதவமும் இவைதழுவஉயர் கொழுநர்—நடுநிலைமையும் மிக்கதவமும் ஆகிய இவைதம்மைத்தழுவ அவற்றால் உயர்ந்த தமதுகணவரது, முகமும் அவரருளும் நுகர் சிலர்கள்—முகப்பொலிவையும் அவர்களது கருணையையும் நிலைக்கும் சிலபெண்கள், துயர்முடுக—துன்பமிகுதூர, அகவும் இளமயில்கள் உயிர் அலசியன அனையார்—களிப்பாலாடும் இளமை வாய்ந்த மயில்கள் அவ்வாடலோய்ந்து உயிர்பதைத்தலையொத்தவராய், மகவு முலைவருட—பால்பருகும் மக்கள் குசுகத்தைநெருட, இளமகளிர்கள் துயின்றார்—இளமைவாய்ந்த அப்பெண்கள் துயில்கூர்ந்தார்கள்.

நடுநிலைமை முகத்தினும், தவம் அருளினும் அமர்தலால் முகமும் அவர் அருளும் நுகரெனவும், இராமன் வனம்புகுதலில் மிகுந்த துன்பத்தால்அது வொழிந்தமையாகலின் அகவும் இளமயில்கள் உயிர்அலசியன அனையார் என வுரைகூறினார். 13

மாகமணிவேதிகையின் மாதவிசெய்பந்தல்
கேகயநெடுங்குலமெனச் சிலர்கிடந்தார்
பூகவனமூடுபடுகர்ப்புளினமுன்றில்
தோகையிளவன்னநிரையிற்சிலர்துயின்றார்.

(இ-ள்.) மாதவிசெய்பந்தல்—குருக்கத்தியாலமைந்தபந்தல்வாய்ந்த, மாகமணிவேதிகையில்—புருடராகத்தால்செய்த திண்ணையில், கேகயம்நெடுங்குலம் என்ன—மயிற்கூட்டம்போல, சிலர்கிடந்தார்—சில பெண்கள் சோர்ந்து கிடந்தனர், பூகம் வனம்ஊடு—கமுகஞ்சோலையின் நடுவிலுள்ள, படுகர்புளினம்முன்றில்—தடாகத்திலுள்ள மணற்குன்றின் முற்றத்தில், தோகை இள அன்னம் நிரையில் சிலர் துயின்றார்—தோகையமைந்த இளமைவாய்ந்த அன்னப்பறவையின் வரிசையைப்போலசிலபெண்கள் துயில்கூர்ந்தார்கள்.

புருடராகத்தால் தேவேந்திரனுடைய நகரமும் அவன்கொலுமண்டபமும் அமைக்கப்பட்டுளவாகலால் அதனை மாகமணி என்றார்.

"மயனிந்தமணியினாலேயந்தரநாடவனகரும் அரசிருப்புமண்டபமுமமைத்தான்" என்பதனாலுணர்க.

மாகம்—விண்ணுலகு. 14

சம்பகநறும்பொழில்களிற்றருணவஞ்சிக்
கொம்பழுதொசிந்தனவெனச்சிலர்குழைந்தார்
வம்பளவுகொங்கையொடுவாலுகம்வளர்க்கும
அம்பவளவல்லிகளெனச்சிலரசைந்தார்.

(இ-ள்.) சம்பகம்நறும்பொழில்களில்—சம்பகமணம்கமழும் சோலைகளில், தருணம்வஞ்சிகொம்பு அழுது ஒசிந்தன என்ன—இளமைவாய்ந்தவஞ்சிக்கொம்புகள்அழுது துவண்டதுபோல, சிலர்குழைந்தார்—சிலர்உடல்வாடி ஒதுங்கினார்கள், வம்பு அளவு கொங்கையொடு—கச்சையணிந்த தனத்தோடு, வாலுகம்வளர்க்கும் அம்பவள வல்லிகள் என்ன—மணற்குன்றுகள் வளர்க்கும்அழகிய பவளக்கொடியைப்போல,அம்மணற்குன்றுகளில், சிலர்அசைந்தார்—சிலர் அசைந்துறங்கினார்கள். 15

குங்குமமலைக்குளிர்பனிக்குழுமியென்னத்
துங்கமுலையிற்றுகளுறச்சிலர்துயின்றார்
அங்கையணையிற்பொலிவழுங்கமுகமெல்லாம்
பங்கயமுகிழ்த்தனவெனச்சிலர்படிந்தார்.

(இ-ள்.) குங்குமமலை—குங்குமமலையில், குளிர்பனி குழுமி என்ன—குளிர்ந்தபனித்திவலை நெருங்கியிருந்தாற்போல, துங்கம்முலையில் துகள் உற சிலர் துயின்றார்—உயர்ந்த முலையில் துகள்படியச்சிலபேர் நித்திரைகூர்ந்தார்கள்; அங்கை அணையில்—உள்ளங்கையாகிய தலையணையில், முகம் எல்லாம் பொலிவு அழுங்க—தங்கள் முகமெல்லாம் பொலிவிழக்க, பங்கயம் முகிழ்த்தன என்ன—தாமரைகுவிந்தனபோல, சிலர்படிந்தார்—சிலர் நிலத்தின்மேற் படிந்துறங்கினார்கள். 16

தொடுத்தகலிடைச்சிலர் துவண்டனர்துயின்றார்
அடுக்கவடையிற்சில ரழிந்தனரயர்ந்தார்
உடுத்ததுகில் சற்றொருதலைச்சிலருறைந்தார்
படுத்ததளிரிற்சிலர்பசந்தன ரசந்தனரசந்தார்

(இ-ள்.) தொடுத்தகல் இடைசிலர் துவண்டனர் துயின்றார்—பணிதியமைந்த கற்றலத்தினிடத்துச்சிலர் துவண்டுநித்திரை கூர்ந்தார்கள், அடுத்த அடையில் சிலர் அழிந்தனர் அயர்ந்தார்—பாயலாக அமைத்த இலைப்பரப்பில் சிலர் மனமழிந்து அயர்ந்துறங்கினார், உடுத்த அகில் ஒருதலைச்சுற்று— உடுத்த ஆடையில் ஒருதலைமுன்தானைப்பரப்பில் சிலர் இருந்துறங்கினார்கள் படுத்த தளிரில் சிலர்பசந்தனர் அசந்தார் —பாயலாகப்படுதத தளிரின்மேல்சிலபெண்கள் நிறமாறிச்சோர்ந்துறங்கினார்கள். 17

ஏனையருமின்னணமிரங்கினருறங்கா
மானவனும்மந்திரிசுமந்திரனைவாவென்
றூனமில்பெருங்குணமொருங்குடையவுன்றால்
மேனிகழ்வதுண்டவுரைகேளெனவிளம்பும்.

(இ-ள்.) ஏனையரும் இன்னணம் இரங்கினர் உறங்கா—மற்றையோரும் இவ்வண்ணம் இரங்கிக்கண்டுயில்கூர, மானவனும் மந்திரி சுமந்திரனைவா என்று—மனுமாபிற்றோன்றிய இராமமூர்த்தியும் முதல் மந்திரியாகியசுமந்திரனைவாவென்றுகூறி, ஊனம் இல்பெருங்குணம ஒருங்குடைய உன்றால்மேல் நிகழ்வது உண்டு—குற்றமில்லாதபெருங்குணங்களை ஒருசேரஉடையஉன்றால் இனிநடப்பதொருசெய்தி உண்டு, அஉரைகேள் என்ன விளம்பும்—அச்செய்தியைக் கேளென்று கூறுவார்.

மானவன் மனுமாபிற்றோன்றினவன் என்னும்பொருள்மேல் நிற்றலால் தத்திதாந்தபதம். மந்திரத்தலைவருள் முதல்மந்திரியாயுள்ளோனுக்குச் சுமந்திரனென்பதுபட்டப்பெயராகலின் சுமந்திரனையென்றதற்கு முதல்மந்திரியென்றாம். 18

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பூண்டபேரன்பினாரைப்போக்குவதரிதுபோக்கா
தீண்டுநின்றேகல்பொல்லாதெந்தைநீயிரதமின்னே
தூண்டினைமீளநோக்கிச்சுவட்டையோர்ந்தென்னையங்கே
மீண்டனனென்னமீள்வரிதுநின்னைவேண்டிற்றென்றான்.

(இ-ள்.) பூண்டபேர் அன்பினாரைபோக்குவது அரிது—என்னிடத்துப்பூண்டபேரன்பினையுடைய இவர்களை என்னினின்றும் போக்குவது இயலாது, போக்காது ஈண்டுநின்று ஏகல் பொல்லாது—அவர்களைத் தத்தமிடத்திற் செலுத்தாது இவ்விடத்தினின்று யான்வனத்திற்செல்வதுகொடிது, எந்தைநீ—என்தந்தையையொப்பாய், நீஇன்னே இரதம் தூண்டினை மீள—நீ இப்பெ

முதுதேரைச்செலுத்தி நான்மீள்வதுபோல நகரத்திற்செல்லுக, சுவட்டைநோக்கி—அத்தேர்க்காற்சுவட்டினையாராய்ந்துபார்த்து,என்னை அங்கேமீண்டனன் என்னமீள்வர்—என்னை அவ்வயோத்திக்குச் சென்றனனென்றுகருதி நகரத்திற்குத் திரும்புவார்கள், இது நின்னைவேண்டிற்று என்றான் — இது தான்நான் உன்னிடத்திற்குறையிரந்து கூறுவதென்று கூறினன்.

மீள—அகரவீற்றுவியங்கோள் வினைமுற்று நின்னை எழனுருபுநிற்குமிடத்தில் இரண்டனுருபு நின்றது உருபு மயக்கம், 19

செவ்வியகுரிசில்கூறத்தேர்வலான்செப்புவானவ்
வெவ்வியதயிற்றீயவிதியினில்யமேலன்போலாம்
இவ்வயின்னினைநீக்கியின்னுயிர்நீர்ந்தின்றேகி
அவ்வயினனையகாண்டற்கமைதலாலளியனென்றான்.

(இ-ள்.) செவ்வியகுரிசில்கூற—நடுநிலைமையையுடைய இராமமூர்த்தி இவ்வாறு கூற, தேர்வலான் செப்புவான்—தேர் நடத்துதலில் வல்லவனாகிய சுமந்திரன் கூறுவான், அளியன்—தனியேனாகியநான், இவயின் நின்னை நீக்கி—இவ்விடத்து உன்னைநீக்கி, இன்று இன்னுயிர் நீர்ந்து—இப்பொழுது இனிய உயிர்போன்ற உன்னை நீங்கி, ஏகி—உடல்சென்று, அ வயின் அனைய காண்டற்கு அமைதலால்—அவ்வயோத்தியினிகழு மிக்கதுன்பச்செய்திகளைக்காண்பதற்கு நானமைதலால், அ வெவ்வியதாயில் தீய விதியினில் மேலென் போலாம்—அக்கொடிய செய்கையையுடைய கைகேசியினும் இன்றுநேர்ந்த விதியினும் மேம்பட்ட கொடியவனாவேன் போலும், என்றான் — என்று கூறினான்.

நீ உயிர்நானுடல் ஆதலால் நான் உன்னினின்று நீங்கிச்செல்லுதல் உடல் செல்லுதலோடொக்கும் என்பான் இவ்வயின் நின்னை நீக்கி இன்னுயிர் நீர்ந்தின்றேகி எனவும், அ வெவ்வியது ஆயில் எனப்பிரித்து அக்கொடியசெய்கையை யாராயில் எனப்பொருள் கொள்ளுதலும் ஒன்று. 20

கலிவிருத்தம்.

தேவியுமிளவலுந்தொடரச்செல்வனைப்
பூவியல்கானகம்புகவுய்த்தேனென்கோ
கோவினையுடன்கொடுகுறுகினேனென்கோ
யாவதுகூறுகேனிரும்பினெஞ்சனேன்.

(இ-ள்.) தேவியும் இளவலும் தொடர—சீதையும் இலக்குமணனும் பின்செல்ல,செல்வனைபூ இயல்கான் அகம்புக உய்த்தேன் என்கோ—இராமமூர்த்தியை மலரமைந்தகாட்டிற் செலுத்தினேனென்று வினவிய உன்தாய் மார்முதலியோர்க்குக்கூறுகேனோ, கோவினைஉடன்கொடுகுறுகினேன் என்கோ—இராமமூர்த்தியை என்னோடு கொண்டுவந்தேனென்று சொல்வேனோ, இரும்பில் நெஞ்சனேன்—இரும்பினையொத்தவலியமனத்தையுடைய யான், யாவதுகூறுகேன்—இச்செய்திகளுள் எதனையெடுத்துக்கூறுவேன்.

என்கு எதிர்காலத்தில்வந்ததன்மை யொருமைமுற்று 12

தாருடைமலரினுமொதுங்கத்தக்கிலா
வாருடைமுலையொடுமதுகைமைந்தரை
பாரிடைச்செலுத்தினேன்பழையநண்பினேன்
தேரிடைவந்தனென்றீதிலேனென்கோ.

(இ-ள்) தார் உடைய மலரினு ஒதுங்கதக்கிலாத—மாலையிலமையும் மலர்ப்பரப்பினும் ஒதுங்கிச்செல்லுதற்கு ஆற்றாத, வார்உடையமுலை ஒடும்—கச்சணிந்த முலையையுடைய சீதையோடும், மதுகைமைந்தரை—வலிமைய மைந்த இராம இலக்குமணர்களை, பழையநண்பினேன்—தொன்று தொட்டு ள்ளநட்பினையுடையயான், பார்இடைசெலுத்தினேன்—நிலவுலகின்மேல் செல்லப்போக்கி, தேர்இடைதீதிலேன்வந்தனென்என்கோ—நான்மட்டும்தேரின் மேல்தீதிலேனாக இங்கேவந்தேனென்றுன்னைவினவுவோர்க்குக் கூறுவேனோ

தொன்றுதொட்டுள்ள நட்பினர்,தமதுநட்டோர்க்குத் தீவருவந்த வழித் தாமும் அவரோடுகூடி அத்தீங்கு நுகர்வதாகத், தேரிற்செல்லுமியல்பினரைக் காட்டிற்காலாற்செல்லச்செலுத்தி, யான்தேரின்மேல்வருதலபேரிழுக்காதலி ல்தன்னையிகழ்ந்துகூறினன் என்பார்பழைய நண்பினேன் தேரிடைவந்தனெ ன்தீதிலேனென்கோ என்றனென்றார். 22

வன்புலக்கன்மனமதியில்வஞ்சனேன்
என்புலப்புறவுடைந்திரங்குமன்னன்பால்
உன்புலக்குரியசொல்லுணர்த்தச்செல்கெனோ
தென்புலக்கோமகன்றூதிற்செல்கெனோ.

(இ-ள்) வன்புலம்கல்மனம்மதி இல் வஞ்சனேன்—தாக்ஷிணிய மில்லாத கல்லையொத்த மனத்தையுடைய அறிவில்லாத வஞ்சமமைந்த நான், என்பு உலப்புஉற உடைந்து இரங்கும்மன்னன்பால்—எலும்புகள்கசிய நெக்குவிட்டுருகுந்தசரதனிடத்து, உன்புலக்குஉரியசொல்உணர்த்தசெல்கெனோ-உன் அறிவிற்கு இசைந்தரிய சொல்லைச்சொல்லச்செல்வேனோ, தென்புலம் கோமகன் தூதில்செல்கெனோ—தென்திசைக்குரிய இயமனது தூதுவரைப்போலச்செல்லக்கடவேனோ.

நீவனத்தில்செல்ல உடன்பட்டிருத்தலைக் கூறிய அன்றே அரசன்உயிர் விடுவானாதலால் உன்புலக்குரியசொல்உணர்த்தச்செல்கெனோதென்புலக்கோ மகன்தூதில்செல்கெனோ என்றான். அத்துச்சாரியை இடையில் தொக்கு நிற்றலால் புலக்குரியசெய்யுள்விகாரம் 23

நாற்றிசைமாந்தரும்நகரமாக்களும்
தேற்றினர்கொணர்வருன்சிறுவன்றன்னைபென்
றூற்றினவரசனையையவெய்யவென்
கூற்றுறழ்சொல்லினாற்கொலைசெய்வேன்கொலோ

(இ-ள்) நால்திசைமாந்தரும் நகரமாக்களும்—நான்கு திசையிலுள்ள மக்களும் இந்நகரத்திலுள்ள மக்களும், உன்சிறுவன்றன்னை தேற்றினர் கொணர்வர்என்று—உன்புத்திரனைமனந்தேற்றிக்கொண்டுவருவார்கள்என்று அ

குள்ளோர்கூறுதலால், ஆற்றின அரசனை—உயிர்சுமந்திருந்த அரசனை,ஐய—ஐயனே,வெய்யஎன்கூற்றுஉறழ்சொல்லினால்—இயமனையொத்தஉன துகொடுஞ்சொல்லால், கொலைசெய்வேன் கொலோ—அவர்களுளொருவனாகியயான்கொலைசெய் வேனோ.

உன்னோடுவந்த பலருமிங்கிருக்க நான் ஒருவன்முந்திச்சென்று பழிபூணவா என்பான்கூற்றுறழ் சொல்லினாற் கொலைசெய்வேன் கொலோ என்றான் என்றார் 24

அங்கிமேல்வேள்விசெய்தரிதிற்பெற்றசிங்
சிங்கவேறகன் றதென் றுணர்த்தச்செல்கேனோ
எங்கள்கோமகற்கினியென்னிற்கேகயன்
நங்கையேகடைமுறைநல்லள்போலுமால்.

(இ-ள்) எங்கள்கோமகன்கு—எங்களரசனாகியதசரதனுக்கு,அங்கி மேல் வேள்விசெய்து—யாகாக்கினிமேல்அவிப்பாகம்பெய்து, அரிதில்பெற்றசிங்க ஏறு—அரிதாகப்பெற்ற உன்னுடைய ஆண்சிங்கம்போன்ற இராமன், அகன்றது என்றுஉணர்த்தச்செல்கேனோ—வனத்தில் சென்றானென்றுதெரிவிக்கச் செல்வேனோ, இனிஎன் இல் கேகயன் நங்கையேகடை முறைநல்லள்போலும்—(ஆதலால்) என்னிலும் கேகயன்புத்திரியாகிய கைகேசியே நல்லவள் போலும்.

நீகாட்டிற்குச்செல்லக்கைகேசிவரம்பெற்றதொன்றே, நான் அரசன்உயிர் வாங்க நாட்டிற்குச் செல்வேனாயில் என்னிலும் அவள் நல்லவளல்லவா என்பான் என்னில்கடைமுறை நங்கையே நல்லள்என்றான்,பொருளாலுயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால் அகன்றதென அஃறிணைமுடிபு தந்தார்.

முடிவுறவின்னணமொழிந்தபின்னரும்
அடியுறத்தழுவினனழுங்குபேரரா
இடியுறத்துவளுவதென்னுமின்னலன்
படியுறப்புரண்டனன்பலவும்பன்னினான்

(இ-ள்) இன்னணம் முடிவுற மொழிந்தபின்னரும்—இவ்வாறுமுடிவு பெறக்கூறிய பின்னும், அடிஉறதழுவினன்—இராமனது திருவடியைப்பொருந்தத்தழுவி, அழுங்கு பேர் அரா இடிஉறதுவளுவது என்னும்இன்னலன்—வருந்தும் பெரும்பாம்புமேக மிடிக்கத்துவளுவதுபோலும் பெருந்துன்பத்தையுடையவனாகி, படிஉறப்புரண்டனன் பலவும் பன்னினான்—நிலவுலகிற் பொருந்தப்புரண்டு பலவும் புலம்பிக்கூறினான்.

தழுவினன்,புரண்டனன் தெரிநிலைமுற்றெச்சங்கள். இன்னலன்குறிப்பு முற்றெச்சம். 26

தடக்கையாலெடுத்தவற்றழுவிக்கண்ணநீர்
துடைத்துவேறிருத்திமற்றினையசொல்லினான்
அடக்குமைமபொடுயொடுகாணத்தப்புறங்
கடக்குமவாலுணர்விலுக்கறுருங்காட்சியான்.

(இ-ள்.) அடக்கும் ஐம்பொறி ஒடுகரணத்து அப்புறம்—அடங்கிய பஞ்சேந்திரியங்களுக்கும் அந்தக்கரணங்களுக்கும் மூலப்பிரகிருதிக்கும், கடக்கும்வால்உணர்விலுக்கு அணுகுங்காட்சியான்—அப்பாற்பட்டுநின்றமெய்யஞ்ஞானஉணர்ச்சிக்குப் புலப்படுங்காட்சியாயுள்ள இராமமூர்த்தி, தடக்கையால்அவன் எடுத்து தழுவிகண்ணநீர் துடைத்து வேறு இருத்தி—நீண்டகையால் சுமந்திரனையெடுத்துத்தழுவிக்கண்களினின்றுஒழுகும்நீரைத்துடைத்துவேறிருக்கச்செய்து, இனையச்சொல்லினன்-இத்தன்மையுடையசொற்களைக்கூறுவான்

ஒடு எண்ணிடைச்சொல்ஐம்புலமும் அந்தக்கரணமும் அடங்கியவிடத்து அவைதொழிற்படுவதற்குக் காரணமாயுள்ள மூலப்பகுதியும் அடங்க, மெய்யுணர்ச்சி முளைத்தலால் கரணத்தப்புறங்கடக்கும் வாலுணர்விலுக்குஎன்றார்,()

பிறத்தலென் றுற்றபின்பெறுவயாவையும்
திறத்துழியுணர்வதோர்செம்மையுள்ளத்தாய்
புறத்துறுபெரும்பழிபொதுவின்றெய்தலும்
அறத்திறமறத்தியோவவலமுண்டென்று.

(இ-ள். பிறத்தல்என்று உற்றபின்—பிறப்புவந்தபின், பெறுவயாவையும்—வருநன்மைதீமைகளெல்லாம்,திறத்துஉழிஉணர்வதுஓர்செம்மைஉள்ளத்தாய்—முறையால்வருவதென்றுணரும்ஒப்பில்லாத நடுநிலைமையையுடைய மனத்தையுடையாய், புறத்து உறு பெரும்பழிபொது இன்றுஎய்தலும்-புறத்தடையும்பெரும்பழி நம்மையுரித்தாகவந்தடைய,அவலம்உண்டென்று—துன்பமின்றுவந்ததென்று,அறத்திறம்மறத்தியோ—தருமப்பகுதியை மறக்கின்றாயோ

பழிபிறர்க்குரியதென்பார்புறத்துறுபெரும்பழியெனவும், அதுபொதுமைநீங்கிநமக்கே உரித்தாமென்பார் பொதுவின்றெய்தலும்எனவுங்கூறினார்.

முன்புநின் றிசைநிறீஇமுடிவுமுற்றிய
பின்புநின் றுறுதியைப்பயக்கும்பேரறம்
இன்பம்வந் துறுமெனினியதாயிடைத்
துன்பம்வந் துறுமெனிற்றுறக்கலாகுமோ.

(இ-ள்.) முன்புநின்று இசைநிறுவி—இம்மையில்நின்று புகழைநிறுத்தி, முடிவுமுற்றியபின்புநின்று உறுதியை பயக்கும்—அழிவுவந்தபின்புஒற்றித்துநின்று ஆன்மாவுக்குச் சுவர்க்கபோகத்தைத் தரும். பேர் அறம்—பெரிய அறச்செய்கை,இன்பம்வந்துஉறும் என்னில் இனியதுஆய்—நமக்குஇன்பம் கிட்டுமாயின் இனியதாய்இடை துன்பம்வந்து உறும் என்னில்—இடையே துன்பம்வருமானல்நாம் அச்செய்கையை, துறக்கல் ஆகுமோ—கைவிடக்கூடுமா கூடாதென்றபடி)

ஆன்மாவோடு கூடக்கலந்துளது என்பது தோன்றநின்றுஎன்றார். 29

நிறப்பெரும்படைக்கலம்நிறத்தினேருற
மறப்பயன்விளைக்குறும்வன்மையன்றரோ

இறம்பினுந்திருவெலாமிழப்பவெய்தினும்
துறப்பிலரறமெனல்சூரராவதே.

(இ-ள்.) திறம் பெரும்படைக்கலம்—ஒளியமைந்த பெரிய ஆயுதம், நிறத்தின் நேர் உற—மார்பிற்கு நேரேவர, மறம்பயன் விளைக்குஉறும் வன்மை—புறங்கொடாத வீரப்பயனைக் காட்டும் வலிமையை, இறப்பினும்—உயிரிழந்தாலும், திருஎல்லாம் இழப்ப எய்தினும்—தமது செல்வமெல்லாம் இழக்கவந்தாலும், துறப்பிலர்—கைவிடார் (அக்கைவிடாமையே)சூரர் அறமெனல் ஆவது—சூரர்களதுவீரதர்மமென்று சொல்லப்படுவது.

அன்று, அரோ அசைநிலை. 30

கான்புறஞ்சேரலிலருமைகாண்டலால்
வான்பிறங்கியபுகழ்மன்னர்தொல்குலம்
யான்பிறந்தறத்தினின்றிழுக்கிற்றென்னவோ
ஊன்றுறந்துயிர்குடிந்துழலுமவேலினாய்

(இ-ள்.) ஊன் துறந்து உயிர் குடித்துஉழலும் வேலினாய்—பகைவருடலை ஒழித்து அவர் உயிரைப் பருகிச் சுழன்று திரியும் வேலையுடைய சுமந்திரனே, கான்புறம் சேறலில்—காட்டினிடத்து யான்செல்லுதலில், அருமைகாண்டலால்—கூடாமையை நீ கருதுதலால், வான் பிறங்கிய புகழ் மன்னர்தொல்குலம்—வானளவுந் தோய்ந்து விளங்கிய கீர்த்தியையுடைய மனுமுதலிய அரசரது தொன்று தொட்டுள்ள சூரியமரபில், யான்பிறந்து அறத்தின்நின்று இழுக்கிற்று என்ன ஓ-யானொருவன் பிறத்தலால்தருமத்தினின்று அம்மரபு தவறியது என்று சொல்லவா நீகருதியது(கூறாய்)

உன்னுடன் பாட்டின் வழித்தாயான் நகர் புகுந்தால் தந்தைவாக்கியபரிபாலனங் கைவிட்டானென்னும் பழிமொழி நேரும் என்பார் யான் பிறந்தறத்தினின்றிழுக்கிற்றென்னவோ என்றார். 31

விளைக்கருமெய்ம்மையன்வனத்துள்விட்டனன்
மனைக்கரும்புதல்வனையென்றன்மன்னவன்
றனைக்கருந்தவமதுதலைக்கொண்டேகுதல்
எனக்கருந்தவமிதற்கிரங்கலெந்தைநீ,

(இ-ள்) விளைக்கு அரும்மெய்ம்மையன்—தேர் நடத்துதலில் வல்ல அரியஉண்மையையுடையசுமந்திரனென்போன்,மனைக்குஅரும்புதல்வனை—ஓர் குடியில் பெறுதற்கரியபுத்திரனை,வனத்துஉள் விட்டனன்என்றல்—வனத்தில் கொண்டுபோய் விட்டுவந்தனனென்று உலகிற் கூறுதல், மன்னவன் தனக்கு அருந்தவம்—அரசனுக்குச் செய்தற்கரிய தவமாம், அது தலைக்கொண்டு ஏகுதல்—அதனைத் தலைமேற்கொண்டு செல்லுதல், எனக்கு அருந்தவம்—எனக்குச் செய்தற்கரிய தவம், எந்தை நீ இரங்கல்—என் தந்தைபோல்வாய் இச் செய்திக்கு நீ யிரங்காதே.

என துபிதா அனுஞைவழி நீ நிற்பதும், யானின்றெழுகுதலும் எந்தை தவப்பயன் என்பார் இரங்கலெந்தை நீ என்றார்.

முந்தினைமுனிவனையிறைஞ்சிமுற்றுமென்
வந்தனைமுதலியமாற்றங்கூறினை
எந்தையையவனொடுமெய்தியீண்டென
சிந்தனையுணர்த்துதியென்றுசெப்புவாய்

(இ-ள்.) முனிவனை முந்தினை இறைஞ்சி—முனிவனை முற்பட்டு வணங்கி, முற்றும் என் வந்தனை முதலிய மாற்றம் கூறினை—முழுதும் என் வணக்கமுதலிய செய்திகளைக் கூறி, அவனொடும்எந்தையை எய்தி—அவ்வசிட்ட முனிவரோடு என் தந்தையை யடைந்து, ஈண்டு என சிந்தனை உணர்த்துதி என்று செப்புவாய்—இவ்விடத்து என்னுடைய கருத்துகளை அம்முனிவரால் என் தந்தைக்குத் தெரிவிப்பாயென்று யான் கூறியதாக வம்முனிவருக்குக் கூறுவாய்.

என என்பதில் நின்ற ஆறனுருபு பன்மையைக்கொண்டு முடியாது சிந்தனை என்னும் ஒருமையைக்கொண்டு முடிதல் பன்மையில் ஒருமை வந்த பால்வழுவமைதி. 33

முனிவனையெம்பியைமுறையினின்றரும்
புனிதவேதியர்க்குமேலுறைபுத்தேளிர்க்கும்
இனியனவிழைத்தியென்றியம்பியெற்பிரி
தனிமையுந்தீர்த்தியென்றுரைத்திதன்மையால்

(இ-ள்.) முனிவனை—வசிட்டமுனிவரால், எம்பியை முறையின் நின்று—பரதனாகிய என் தம்பியைக்கண்டு குலமுறையிற்றவறாது நின்று, அரும் புனிதவேதியர்க்கும் மேல்உறை புத்தேளிர்க்கும், பெறுதற்கரிய அந்தணர்களுக்கும்விண்ணுலகில்வசிக்கும் தேவர்களுக்கும், இனியன இழைத்தி என்று இயம்பி—இனிய காரியங்களைச் செய்வாய் என்று கூறி, என் பிரி தனிமையும் தீர்த்திஎன்று—அரசன் என்னைப்பிரிந்த பிரிவால்வந்த வருத்தத்தையும் தீர்ப்பாயென்று, தன்மையால் உரைத்தி—முறையாக என் தம்பிக்குக் கூறுவாய்.

அந்தணரால் வேள்விசெய்வித்தலும், அவ்வேள்வியி னவிப்பாகத்தால் தேவர்களுக்கு ஊட்டுதலும் நமது குலமுறை யென்பான் முறையினின்று எனவும், அது வழுவாது நீ செய்வது இனியதென்பான் இனியனஇழைத்தி எனவுங்கூறினார். முனிவனை மூன்றனுருபு நிற்குமிடத்து இரண்டனுருபு வந்தது உருபுமயக்கம். 34

வெவ்வியதன்னையால்விளைந்ததீண்டொரு
கவ்வையென்றிறையுந்தன்கருத்திலேக்கலன்
எவ்வருளென்வயின்வைத்ததின்சொலால்
அவ்வருளவள்வயினருளுகென்றியால்.

(இ-ள்.) ஈண்டு அன்னையால் விளைந்தது வெவ்வியது—இவ்விடத்து நமது தாயால் நிகழ்ந்தது கொடியது, ஒரு கவ்வை என்று இறையும் தன்

கருத்தின் நோக்கலன்—அது ஓர் பெருந்துன்பமென்று இறையளவும் தன் மனத்தில் இராமனெண்ணிலன், எ அருள் என்வயின் வைத்தது—எந்தக் கருணையை யென்னிடத்தில் வைத்திருக்கின்றாயோ, இன் சொல்லால் அ அருள் அவன் வயின் அருளுக என்றி—இனிய சொல்லால் அந்தக் கருணையை அந்த அன்னையிடத்துவைக்கக் கடவாய் என்று நான் சொன்னதாகச் சொல்லுவாய். 35

வேண்டினனிவ்வரமென்றுமேலவன்
ஈண்டருளெம்பிபாணிறுவியேகினை
பூண்டமாதவனொடுங்கோயில்புக்கெனை
தாண்டகைவேந்தனையவலமாற்றிபின்

(இ-ள்.) மேலவன் இவ்வரம்வேண்டினன் என்று — உன் முன்னோன் உன்னிடத்து இவ்வரத்தை வேண்டினானென்று, ஈண்டு அருள் எம்பிபால் திறுவி — இவ்விடத்துக் கருணையை யென் தம்பியினிடத்தி லிருத்தி, ஏகினை—நீ அப்பாற் சென்று, பூண்டமாதவன் ஒடும் கோயில் புக்கு—மேற்கொண்ட பெரிய தவத்தையுடைய வசிட்டமுனிவனோடும் கோயிலிற்சென்று, எனது ஆண்தகை வேந்தனை—என்னுடைய தந்தையாகிய ஆண் தன்மையையுடைய் அரசனாகிய தசரதனை, அவலம் ஆற்றி—துன்பத்தினின்று நீக்கி, பின்—பின்பு.

ஏகினை முற்றெச்சம்.

ஏழிரண்டாண்டுநீத்தீண்டவந்துனைத்
தாழ்குவன்றிருவடிதளரலீண்டென்றுச்
சூழிவெங்கடகளிற்றரசற்சொல்லிப்பின்
வாழிமாதவன்சொலான்மனந்தெருட்டுவாய்

(இ-ள்.) ஏழ் இரண்டு ஆண்டும் நீத்து ஈண்டவந்து உன்னை திருவடி தாழ்குவன்—பதினான்கு வருடமுங் கழித்து விரையவந்து உனது திருவடி வணங்குவேன், ஈண்டுதளரல்என்று—இவ்விடத்தே மனந் தளராதேயென்று, சூழிவெங்கடகளிறு அரசன்சொல்லி—முகபடாத்தையுடைய மிக்க மதமுடைய யானைச் சேனையையுடைய தசரதனுக்குச் சொல்லி, பின்மாதவன் சொல்லால் மனம்தெருட்டுவாய்-பின்பு வசிட்டமுனிவரது சொல்லால் அவ்வரசனது மனந்தெளியக் கூறுவாய்.

உனதின் சொல்லாலரசனுற்ற தொழியின் முனிவனைக்கொண்டு தேற்றுவாய் என்பான் பின் மாதவன்சொலான் மனந்தெருட்டுவாய் என்று கூறினான். தளரல் முன்னிலையொருமை யெதிர்மறையே வல்வினைமுற்று.

முறைமையாலெற்பயந்தெடுத்தமூவர்க்கும்
குறைவிலாவென்னெடுவணக்கங்கூறிப்பின்
இறைமகன்றுயர்துடைத்திருத்திமாடென்றான்
மறைகளைமறைந்துபோய்வனத்துள்வைகுவான்

(இ-ள்.) மறைகளை மறைந்துபோய் வனத்துஉள்வைகுவான்—வேதங்களுக்குப்புலப்படாது நின்று ஆரணியத்தில் தங்கும் இராமமூர்த்தி, முறைமை ஆல் என் பயந்துஎடுத்த மூவர்க்கும்—முறையாக என்னைப் பெற்றெடு

த்த கௌசலை முதலிய மூவர்க்கும், குறைவிலாத என் நெடுவணக்கம் கூறி—குறைவுபடாத எனது தீர்க்க தெண்டத்தைக் கூறி, பின் இறைமகன் துயர் துடைத்து—பின்பு தசரதனது துன்பத்தை நீக்கி, மாடு இருத்தி என்றான்—அவன் பக்கத்தி லிருப்பாயென்று சுமந்திரனை நோக்கிக் கூறினன்.

குறைவிலாவென்னெடு வணக்கம் என்றமையால் தீர்க்க தெண்டம் என்றாம். மறைகளை உருபுமயக்கம். 38

ஆள்வினையாண்மையிற்றிறம்பலன்றெனாத்
தாள்முதல்வணங்கியதனித்திண்டேர்வலான்
ஊழ்வினைவசத்துயிர்நிலையென்றுன்னுவான்
வாழ்வினைநோக்கியவணங்கிநோக்கினன்

(இ-ள்.) ஆள்வினை ஆண்மையில் திறம்பல் அன்று என்னு—எனது முயற்சி தேவரீரின் ஆண் தன்மையினின்று மாறுபடுமாவென்று கூறி, தாள் முதல் வணங்கியதனித்திண் தேர்வலான்—இராமனது திருவடியை வணங்கிய ஒப்பில்லாத திண்ணிய தேரினை நடத்துதலில் வல்லவனாகிய சுமந்திரன், உயிர் நிலை ஊழ்வினை வசத்து என்று உன்னுவான்—சரீரத்திற்கு வருஞ் சுக துக்கங்களை ஊழ்வினையின் வசப்பட்டது என்று கருதி, வாழ்வினைநோக்கியை வணங்கிநோக்கினன் — இவ்வாழ்க்கையின் வழியைநோக்கிய சீதாப்பிராட்டியை வணங்கிப்பார்த்தான்.

எனது முயற்சி தேவரீராணையினின்று மாறுபடாமை தோன்றத்திறம் புலன்றெனா எனவும், வினையவுறுப்புகளுக்குப் பாதமுதலாதலால் தாள்முதலெனவும், அரசவாழ்க்கையைத் துறந்து காட்டிற்கு வந்தும் இவ்வாழ்வை மறவாது நிற்றலால் வாழ்வினைநோக்கி யெனவுங் கூறினர். வாழ்வினை நோக்கி என்றதற்குத்தன்னைவழிப்படுவோர்க்கு வாழ்வினையருள்பவளெனினும் அமையும்.

அன்னவள்கூறுவாளரசற்கத்தையர்க்
கென்னுடைவணக்கமுன்னியமபியானுடைப்
பொன்னிறப்பூவையுங்கிளியும்போற்றுகென்
றுன்னுமென்றங்கையர்க்குணர்த்துவாயென்றாள்

(இ-ள்.) அன்னவள் கூறுவாள் — அச் சீதைசொல்லுகின்றாள், அரசன் கு அத்தையர்க்கு என் உடைய வணக்கம் முன் இயம்பி — மாமனாகிய தசரதனுக்கும் கௌசலை முதலிய அத்தைமார்க்கும் என்னுடைய வணக்கத்தை முன்னே கூறி, யான் உடையபொன் நிறம்பூவையுங் கிளியும் போற்றுக என்று—யான் பொருளாகவுடைய நாகணவாய்ப் புள்ளையுங்கிளியையும் போற்றக்கவிடரென்று, உன்னும் என் தங்கையர்க்கு உணர்த்துவாய் என்றாள்—என்னைக்கருதும் எனது தங்கைமார்க்குத் தெரிவிப்பாயென்று கூறினர். 40

தேவர்வலானவ்வுரைகேட்டுத்தீங்குறின்
யார்வலாருயிர்துறப்பெனிதன்றேயெனாப்
போர்வலான்றடிக்கவும்பொருமிவிம்மினன்
சோர்விலாளறிவிலாத்துயர்க்குச்சோர்கின்றான்

(இ-ள்.) தேர்வலான் அ உரைகேட்டு — தேரோட்டுதலில் வல்ல சுமந்திரன் அந்தவார்த்தையைக் கேட்டு, தீங்கு உறின் — ஒருபொருட்குக் கேடு வந்துற்றால், உயிர் துறப்புஅல்லார் யார்—தமதுயிர் விடுதலில் வல்லவெ வர், எளிது அன்றே என்று — அவ்வாறுவிடுதல் எளிதல்லவேயென்று கருதி, சோர்வு இல்லாள்—தனது மகிழ்ச்சியிற்குறைபடாத சீதாப்பிராட்டி, அறிவுஇல்லாத துயர்க்கு — மடமையாற்கூறிய துன்பத்திற்கு. சோர்கின் றான்—சோருஞ்சுமந்திரன், போர்வல்லான தடுக்க உம்—போரில்வல்ல இரா மன் தடுக்கவும், பொருமிவிம்மினான்—பொருமி அழுதான். 41

ஆறினன்போற்சிறிதவலமவ்வழி
வேறிலாவன்பினுய்விடைதந்தீகென
ஏறுசேவகற்றொழுதிளையமைந்தனைக்
கூறுவதியாதெனவினையகூறினான்

(இ-ள்.) சிறிது அவலம் ஆறினன்போல்—சிறிது துயரம் நீங்கினவன் போல, அவழிவேறுஇல்லாத அன்பினால்—அவ்விடத்தில் என்னிடத்துவேறு படாத அன்பையுடைய இராமனே, விடை தந்து ஈகஎன்று—விடைதரக்கட வாயென்று, ஏறுசேவகன்தொழுது—வீரமமைந்தஇராமனைவணங்கி, இளைய மைந்தனை கூறுவதுயாது என்ன—இலக்குமணனை நோக்கி நீ சொல்லுவது யாதென்று வினவ, இனைய கூறினான்—இத்தன்மையையுடைய செய்தியை இளையபெருமான் கூறுவார் 42

உரைசெய்தெங்கோமகற்குறுதியாக்கிய
தரைகெழுசெல்வத்தைத்தவிரமற்றொரு
விரைசெறிகுழலிமாட்டளித்தமெய்யனை
அரைசனென்றின்னமொன்றறையற்பாலதோ.

(இ-ள்.) எம் கோமகற்கு உரைசெய்து—எமதரசனாகிய இராமனுக்கு அரசுரிமை உனக்கேயென்றுகூறி, உறுதிஆக்கிய தரை கெழுசெல்வத்தை—வற்புறுத்திய அரசச்செல்வத்தை, தவிர—அவன் தவிர, மற்று ஒருவிரை செறிகுழலிமாடு அளித்தமெய்யனை—வேறொருவாசமிக்கக் கூந்தலையுடைய கைகேசியினிடத்துத் தந்த மெய்ம்மையுடைய தசரதனை, அரசன் என்று இன்னமும் ஒன்று அறையல்பாலது ஒ—மனுநீதி வழுவாத அரசனென்று கருதி இன்னமும் ஒரு செய்தியெடுத்துச் சொலலுந் தன்மையதோ.

இராமமூர்த்திக்கு அரசியல்தந்தேனென்றுபலருமறியவற்புறுத்திக்கூறி ப்பின்னர் ஓர் பெண்ணினிடத்துஅன்புடையவனுய்க்கூறியவார்த்தையினின் றுவழுவினேன் பொய்யனென்பது குறிப்பாற் போதரக்கூறுவார் தசரதனை மெய்யன்எனவும், தன்மகனுக்கு முறைவழுவஅரசியலைக் கவர்ந்தனளாதலா ல்சிற்றன்னையெனக் கூறக்கூசுவார் மற்றொருவிரைசெறி குழலிமாடு எனவு ம், அவனைக் கொடுங்கோலனெனக்கூறுவார் அரசனென்றின்னமுமறையற் பாலதோவெனவுங் கூறினர். 40

கானகமபறறுநமபுதலவனகாயுணப
போனகமபற்றியபொய்யின்மன்னற்கிய

கூனகம்பற்றியவுயிர்கொடின்னும்போய்
வானகம்பற்றிலாவலிமைகூறென்றான்.

(இ-ள்.) கான் அகம் பற்றி நல்புதல்வன் காய்உண்ண—கானகத்திற் சென்றுதனது சிரேஷ்டபுத்திரன் காயைத்தின்ன, இங்குஊன் அகம்பற்றிய உயிர்கொடு—இவ்விடத்து உடம்பினின்றும் பிரியாத உயிரைச் சுமந்துகொண்டு, போனகம்பற்றிய பொய்இல் மன்னன் த—அறுசுவையமைந்த வுணவையுண்டுமகிழுந் தசரதனுக்கு. இன்னும் போய்வான் அகம்பற்றியவாய்மை கூறுஎன்றான்—இன்னும் நிலவுலகத்தினின்று நீங்கி விண்ணுலகத்தையடையாதவன்மையை அவனுக்குச் சொல்லாயென்று கூறினான்.

தான் பெற்றபுத்திரருள் முன்பிறந்தவனும் நல்லொழுக்குடையானென்பது தோன்ற நற்புதல்வன் எனவும், அவன் காயுண்டுவாழ வனைய புத்திரர்களொடு அறுசுவை யுணவுண்டிருக்கின்ற கொடியோன் என்பது தோன்றப் பொய்யின் மன்னற்கு எனவும். தான்கவலையுளனுமிற் புத்திரனையின்று பிரிந்த சோகத்தாலுயிர் விடுவன் அஃதின்மையாலன்பிலனென்பது தோன்ற வானகம் பற்றியவலிமை கூறென்றான் எனவுங் கூறினான். 44

மின்னுடன்பிறந்தவாட்பரதவேந்தற்கு
மன்னுடன்பிறந்திலென்மண்கொண்டாள்கின்ற
தன்னுடன்பிறந்திலென்றம்பிமுன்னலென்
என்னுடன்பிறந்தயான்வலியெனென்றியால்.

(இ-ள்) மின் உடன் பிறந்தவாள் பரதவேந்தன் த — மின்னலோடு தோன்றியவாளை யேந்திய பரதனுக்கு, மன்உடன் பிறந்திலேன்—இராமனுடனும் பிறந்திலேன், மண்கொண்டு ஆள்கின்ற தன் உடன் பிறந்திலேன்—இனி மண்ணுலகத்தைக் கொண்டு ஆளப்போகிறஉன்னுடனும் பிறக்கிலேன் தம்பி முன் அல்லேன்—உனக்குத் தம்பியாக முன்னும் அல்லேன், என்னுடன் பிறந்த யான்—(துணைவரில்லாமையால்) என்னோடு பிறந்த யான், வலியென் என்றி—நானுயிரோ டிருக்கின்றேனென்று கூறாய்.

இராமமூர்த்தி அரசியலைத்துறந்து காட்டிற்குச்செல்லத்தொடங்கிய அன்றே அதற்குக்காரணமாயுள்ளவருயிரினை வாங்கியவ்வரசியலையவன்பால் நிறுவாமையால்மன்னுடன்பிறந்திலன்எனவும, அஃதியலாவிடினும் இராமமூர்த்தியின் தவவேடத்தை நோக்கியுமுயிர் துறந்திலேனுதலால என்னுடன் பிறந்த யான் வலியெனென்றியெனவுங கூறினான். 45

ஆரியனிளவலைநோக்கியய்யசிச்
சீரியவல்லனசெப்பலென்றபின்
பாரிடைவணங்கினன்பலைக்குமநெஞ்சினன்
தேரிடைவிந்தகன்சேறன்மேயினான்.

(இ-ள்.) ஆரியன் இளவலை நோக்கி—இராமமூர்த்தி இளையபெருமாளைப் பார்த்து, அய்ய இச்சீரிய அல்லனசெப்பல் என்றபின்—இந்தச்சிறந்த செய்திகளல்லாதனவற்றைக் கூறாதே என்று சொன்னபின், பார்இடை வணங்கி

னன் பதைக்கும் நெஞ்சினன்—நிலவுலகின்மேல் தண்டாகாரமாக வீழ்ந்து வணங்கிப் பதைபதைத்துவருந்தும் மனமுடையவனாய், தேர் இடைவித்தகன் சேறல் மேயினான்—தேரின்மேல் சுமந்திரன் செல்லத் தொடங்கினான். 46

கூட்டினன்றேர்ப்பொறிகூட்டிக்கோன்முறை
பூட்டினன்புரவியப்புரவிபோம்நெறி
காட்டினன்காட்டித்தன்கல்விமாட்சியால்
ஓட்டினனொருவருமுணர்வுறாமலே.

(இ-ள்.) தேர் பொறி கூட்டினன்—தேரின் யந்திரங்களைக் கூட்டினான் கூட்டிகோல்முறை புரவிபூட்டினன்—கூட்டிமுட்கோலேந்தி முறையேகுதிரைகளைத் தேரிற்பூட்டினான், அ புரவிபோம் நெறிகாட்டினன்—அக்குதிரைகள்நகரத்திற்குச் செல்லும் நெறியைக் காட்டினான், தன்கல்வி மாட்சியால் காட்டி ஒருவரும் உணர்வு உறாமல் ஓட்டினன்—தான்கற்ற கல்வியின்மாட்சிமையால் நகர்க்குச் சென்றமை காட்டிப் பின்நகரவாசிகளொருவரு முணராமல் தேரைநடத்தினான். 47

தையறன் கற்புந்தன்றகவுந்தம்பியும்
மையறுகருணையுமுணர்வும்வாய்மையும்
செய்யதன்வில்லுமேசேமமாகக்கொண்
டையனுமபோயினனல்லிடைப்பமே.

(இ-ள்.) தையல் தன் கற்பும் தன் தகவும் தம்பியும் மை அறு கருணையும் உணர்வும்வாய்மையும்—சானகியாரது கற்பினிலையையும் தனது நடுநிலைமையும் இளையபெருமாளும் குற்றமற்றசீவகருணையும் மெய்யுணர்ச்சியும்உண்மையும், செய்யதன் வில்லும்சேமம் ஆக கொண்டு—செவந்த தனதுவில்லுமே துணையாகக்கொண்டு, அல்லின் நாப்பண் ஐயனும் போயினான்—நடுஇராப்போதில் இராமமூர்த்தியுஞ்சென்றருளினான்.

உருவப் பொருளாகிய இளையபெருமாளும்வில்லும் தனக்குப் புறக்காவலாகநிற்றல்போலஅருவப்பொருளாகிய கற்பும்நடுநிலையும்சீவகருணையும்மெய்யுணர்ச்சியும் சத்தியமும்அகக்காவலாகநிற்றலால்சேமமாகக்கொண்டென்றார்

அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

பொய்வினைக்குதவும்வாழ்க்கையரக்கரைப்பொருந்தியன்னார்
செய்வினைக்குதவும்நட்டாற்செல்பவாத்தடுப்பதேய்க்கும்
மைவிளக்கியதேயன்னவயங்கிருடுரக்கவானம்
கைவிளக்கெடுத்ததென்னவந்ததுகடவுட்டிங்கள்.

(இ-ள்.) மை விளக்கியதே அன்ன வயங்கு இருள் துரக்க—மையை விளக்கிய தொப்ப விளங்கும் இருளையோட்ட, வானம் கை விளக்கு எடுத்தது என்ன கடவுள் திங்கள் வந்தது —ஆகாயமானது கை விளக்கேந்தியது போலத்தெய்வத்தன்மையையுடைய சந்திரன் உதயஞ் செய்தது, பொய் வினைக்கு உதவும் வாழ்க்கை அரக்கரை பொருந்தி—பொய்மைத் தொழிலுக்

குப் பயன்படும்வாழ்க்கையையுடைய இராட்சதர்களுக்குத் துணையாகப் பொருந்தி, அன்னார்செய்வினைக்கு உதவும் நட்பு ஆல் செல்பவர் தடுப்பதுவைக்கும்—அவ்வரக்கர்செய்யுந் தீத்தொழிலுக்கு உபகரிக்கும் நட்போடு அவர்க்குப் பற்றுக்கோடாகச் செல்வோரைத் தடுத்தலை யொக்கும்.

இருளையோட்டச் சந்திரன் உதயஞ்செய்ததைத் தீத்தொழில் செய்யச் செல்வோருக்குப் பற்றுக்கோடாகச் செல்வோரைத் தடுப்பதற்கு ஒக்குமெனக்கவி அத்தியவசயித்துக் கூறலால் தற்குறிப் பேற்றவணி. 49

மருமத்துத் தன்னையூன்றமறக்கொடும்பாவந்தீர்க்கும்
உருமொத்தசிலையிளையோரையொருப்படுத்துதவிநின்ற
கருமத்தின் விளைவையெண்ணிக்களிப்பொடுகாணவந்த
தருமத்தின்வதனமென்னப்பொலிந்ததுதனிவெண்டிங்கள்.

(இ-ள்.) தன்னை மருமத்து ஊன்றும் மறம் கொடும்பாவம் தீர்க்கும் உரும் ஒத்த சிலையிளையோரை—தனது மார்பில் வாள்போலூன்றிய கொலைத் தொழிலமைந்த கொடிய பாவச்செயலை வேரோடொழிக்கும் இடியை யொத்த வில்லையேந்திய இராம இலக்குமணர்களை, ஒருப்படுத்து உதவி நின்றகருமத்தின் விளைவை எண்ணி—(காட்டிற்குச் செல்ல அவர்களதுமனத்தை) ஒன்றுபடுத்தி யுதவியநல்வினையின் பயனைக்கருதி, களிப்பொடு காணவந்ததருமத்தின்வதனம் என்ன—களிப்போடு காண்பதற்குவந்த தரும தேவதையின் முகம்போல, தனிவெண் திங்கள் பொலிந்தது—ஒப்பில்லாத சந்திரன் விளங்கியது.

சந்திரோதயத்தைத் தருமதேவதையினதுமுகமாகக்கவி அத்தியவசயித்துக்கூறுதலால் தற்குறிப் பேற்றவணி. 50

காம்புயர்கானஞ்செல்லுங்கரியவன்வறுமைநோக்கித்
தேம்பினகுவிந்தபோலுஞ்செங்கழுநீருஞ்சேரைப்
பாம்பினதலையவாகிப்பரிந்தனகுவிந்துசாய்ந்த
ஆம்பலுமென்றபோதுநின்றபோதலர்வதுண்டோ.

(இ-ள்.) செங்கழுநீரும்—செங்கழுநீர்மலர்களும், காம்புஉயர்கானம்செல்லும் கரியவன்வறுமைநோக்கித் தேம்பின குவிந்தபோலும்—மூங்கிலாலுயர்ந்த காட்டிற்செல்லும் இராமமூர்த்தியினது வறுமையைநோக்கி வருந்திக்குவிந்த செயலையொக்கும், ஆம்பலும்—ஆம்பல்மலர்களும், சேரைபாம்பினதலைய ஆகிபரிந்தன குவிந்துசாய்ந்த—சேரைப்பாம்பினது தலையையொத்தனவாகிக்குவிந்து சாய்ந்தன, என்றபோது—என்றகாலத்தில், நின்றபோது அலர்வது உண்டோ அவையொழிந்தநின்றமலர்கள் மலர்வதுண்டா (குவிந்தன என்றபடி.)

நின்றபோது என்றது தாமரைமுதலியவற்றை, இவை இரவிற்குவியுமலர்களாதலால். சேரை என்பது ஒருவகைப்பாம்பு. 51

அஞ்சனக்குன்றமன்னவழகனுமழகன்றன்மேல்
எஞ்சலில்பொன்போர்த்தன்னவிளவலுமிந்துவெண்பான்
வெஞ்சிலைப்புருவத்தாடன்மெல்லடிக்கேற்பவெண்ணூற்
பஞ்சினைப்படுத்தாலென்னவெண்ணிலாப்பரப்பப்போனார்.

(இ-ள்.) இந்து என்பான்—சந்திரனென்று சொல்லப்படுவோன், வெஞ்சிலைபுருவத்தான்தன்மெல் அடிக்குஏற்ப—இராமமூர்த்தியேந்திய கொடிய வில்லையொத்த புருவத்தையுடைய சாநகியாரது மெல்லிய திருவடிக்குப்பொருந்த, வெள்நூல் பஞ்சு இடைபடுத்தால் என்னவெள்நிலா பரப்ப—வெள்ளிய நூல்நூற்றற்குக் கருவியாகியபஞ்சினையிடையே பரப்பினாற்போல வெள்ளிய கிரணத்தைப்பரப்ப, அஞ்சனம் குன்றம் அன்ன அழகனும்—நீலமலையையொத்த பேரழகையுடைய இவ்விராமமூர்த்தியும், அழகன் தன்மேல்எஞ்சல் இல் பொன்போர்த்தால் அன்ன இளவலும்போனார்—அவ்விராமமூர்த்திமேல்மாற்றுயர்ந்த பொன்போர்த்தாலென்னப் பின்னேசெல்லும் இளையபெருமாளும் சாநகியாரும் போனார்கள்.

இளையபெருமாள் பொன்னிறமுடையோன் ஆகலால்பொன்போர்த்தென்னஎன்றார். "கடல்கருமுகிலொளிர்கமலமதலரா-வடவரையுடன் வருசெயலெனமறையும்-தடவுதலறிவருதனி முதலவனும் புடை-வருமிளவலுமெனநிகர் புகல்வார்" எனப்பாலகாண்டத்தில் வருதல் காண்க. 52

சிறுநிலைமருங்குல்கொங்கையேந்தியசெல்வமென்னும்
நெறியிருங்கூந்தனங்கைசிறடிநீர்க்கொப்பூளின்
நறியனதொடர்ந்துசென்றுநடந்தெனினவையினீங்கும்
உறுவலியன்பினூங்கொன்றுண்டெனவுணர்வதுண்டோ.

(இ-ள்-) மருங்குல் சிறுநிலைகொங்கை ஏந்தியசெல்வம் என்னும்நெறி இருங்கூந்தல் நங்கை சிறு அடி—இடை சிறுகப்பருத்ததனத்தை ஏந்திய திருவென்று சொல்லப்படும் நெளிந்த நீண்ட கூந்தலையுடைய பெண்களிற்சிறந்த சாநகியாரதுசிற்றடி, நீர்கொப்பூளின்நறியன தொடர்ந்து சென்று நடந்தது என்னில்—நீரிலெழுந்தமொட்டுகளைப்போல அழகின்மென்மையனவாகஇராமமூர்த்தியின் பின்றொடர்ந்துசென்று நடந்ததானால், நவையில்நீங்கும் உறு வலி—குற்றத்தினின்று நீங்கிய மிக்கவலிமை, அன்பின் ஊங்குஒன்றுஉண்டு என உணர்வது உண்டோ—அன்பின் மிக்கது ஒன்றுண்டென்று அறியும்படி வேறுண்டா (இல்லை என்றபடி.)

பண்பியையடுத்து நின்ற சிறுநிலை என்னும் தொழிற்பெயர்வினையெச்சப்பொருளில் வந்தது. நடந்தெனில் தொகுத்தல் விகாரம். கொப்புள் கொப்பூள் நீட்டும் வழிநீட்டல். அனிச்சப்பூமேல் மிதிப்பினுங் கொப்புளங்கொள்ளுந்திருவடி காட்டில் இராமமூர்த்தியின் சென்றது என்றலால் அன்பின் மிகுதி அநுமானப் பிரமாணத்தால் உணரநின்றது. 53

பரிதிவானவனுங்கீழ்பாற்பருவரைபற்றாமுன்னம்
திருவினாயகனுந்தென்பால்யோசனையிரண்டுசென்றான்
அருவிபாய்கண்ணும்புண்ணாயழிகின்றமனமுந்தானும்
துரிதமான்றேரிற்போனான்செய்ததுசொல்லலுற்றாம்.

(இ-ன்.) பரிதிவானவனும்கீழ்பால் பருவரைபற்றாதமுன்னம்-சூரியனும் கீழ்த்திசையிலுள்ள உதயமலையில் அணுகாதற்குமுன்னமே, திருவின்நாயகனு

தென்பால் யோசனை இரண்டுசென்றான்—சீதாபிராட்டியாருக்கு நாயகனா கிய ஸ்ரீராமமூர்த்தியுந்தென்றிசைநோக்கி இரண்டுயோசனை தூரஞ்சென்றரு ளினன்— அருவிபாய் கண்ணும், அருவிபோல நீர்சிந்துங்கண்ணும்புண் ஆய் அழிகின்ற மனமும் தானும்—புண்பட்டுஅழியும்மனமுந்தானும், துரிதமான் தேரிற்போனான்—விரைந்துசெல்லுங்குதிரை பூட்டிய தேரின்மேற் செல்லு ஞ்சுமந்திரன், செய்தது சொல்லல் உற்றாம்—செய்த செய்தியைச் சொல்லல் தொடங்குவாம்

கண், மனம் என்னும் அஃறிணைப் பொருள்களோடுதான் என்னும்உயர் திணையாண்பால் விரவிச் சிறப்பால் போனான் என்னும் ஆண்பால் முடிபேற் றது திணைவழுவமைதி. 54

கடிகையோரிரண்டுமூன்றிற்கடிமதிலயோத்திகண்டான்
அடியிணைதொழுதானாதிமுனிவனையவனுமுற்ற
படியெலாங்கேட்டுநெஞ்சிற்பருவரலுழந்தான்முன்னை
முடிவெலாமுணர்ந்தானந்தோமுடிந்தனன்மன்னனென்றான்

(இ-ள்.) கடிகைஓரிரண்டுமூன்றில்—ஆறுநாழிகையில், கடிமதில்அயோ த்தி கண்டான்—காவல்பூண்டமதில்சூழ்ந்த அயோத்திநகரைக்கண்டு, ஆதி முனிவனை அடி இணை தொழுதான்— முதலில்வசிட்டமுனிவரை இரண்டுதிரு வடிகளையும்வணங்கினான், அவனும்உற்றபடிஎல்லாம்கேட்டுநெஞ்சில்பருவரல் உழந்தான்—அம்முனிவரும் நிகழ்ந்தவரலாறெல்லாங்கேட்டுமனத்தில் துன்பங் கூர்ந்து, முன்னை முடிவு எல்லாம் உணர்ந்தான்—முன்னை முடிந்து கிடக் கும் முடிவையெல்லாம் அறிந்தவராதலால், அந்தோமன்னன் முடிந்தனன் என்றான்—ஐயோதசரதன்வாளா இறந்தனனென்று இறங்கினர்.

முன்னொரு முனிவனால் தசரதனுக்கு நேர்ந்தசாபத்தை வசிட்டமுனிவர் உணர்ந்தவராதலால முன்னை முடிவெல்லா முணர்ந்தான் என்றார். 55

நின்றுயர்பழியையஞ்சிநேர்ந்திலன்றடுக்கவள்ளல்
ஒன்றும்நானுரைத்ததனோக்கான்றருமத்திற்குறுதிபார்ப்பான்
வென்றவருளரேமேலைவிதியினையென்றுவிம்மிப்
பொன்றிணிமன்னன்கோயில்சுமந்திரனோடும்போனான்.

(இ-ள்.) வள்ளல்நின்றுஉயர்பழியைஅஞ்சி—இராமமூர்த்தி இடைவிடா தேயாது நிற்கும்பழியை யஞ்சி, தடுக்க நேர்ந்திலன்—காட்டிற்குச் செல்லு தலையொழிகவெனத் தடுக்கவும்உடன் பட்டிலன், தருமத்திற்கு உறுதிபார்ப் பான்—தருமத்திற்கோருறுதி நோக்குவோனாதலால், நான் உரைத்தல் ஒன் றும்நோக்கான்—யான் தசரதன் பொருட்டுக் கூறிய செய்தியைச் சிறிதும் பார்க்காதவனாயினான், மேலைவிதியினை வென்றவர் உளரே என்று விம்மி— முன்னுள்ளவினைப்பயனை வென்றவர்யாவரென்றுபொருமி, மன்னன்பொன் திணி கோயில்சுமந்திரனோடும் போனான்—தசரதனது பொன்னாற்றிண்ணிய பணிதியமைந்ததிருக்கோயிலில் சுமந்திரனோடும் முனிவர் சென்றனர். 56

தேர்கொண்டுவள்ளல்வந்தானென்றுதஞ்சிந்தையுந்த
ஊர்கொண்டதிங்களென்னவன்னனையுழையர்சுற்ற

கார்கொண்டமேனி யானைக்கண்டிலர் கண்ணில்வற்றா
நீர்கொண்டநெடுந்தேர்ப்பாகனிலைகண்டே நிலைபிற்றீர்ந்தார்.

(இ-ள்) தேர் கொண்டு வள்ளல் வந்தான் என்று—தேரினைக் கொண்டு சுமந்திரன் வந்தானென்று, தம் சிந்தை உந்த—தமதுமனத்தைச் செலுத்தலால், திங்கள் ஊர்கொண்டது என்ன—சந்திரனைஊர்கோள் சூழ்ந்ததுபோல, மன்னனைஉழையர் சுற்ற—தசரதனைச்சூழ்ந்த மந்திரிகள்வந்துசூழ, கார்கொண்ட மேனியானை கண்டிலர்—மேகம்போலக் கருநிறம்வாய்ந்த திருமேனியையுடைய இராமமூர்த்தியைநோக்காமையால், கண்ணில்வற்றாத நீர்கொண்ட நெடும்தேர்பாகன் நிலைகண்டே நிலையில் தீர்ந்தார்—கண்ணினின்று நீரொழுக்கறாதநெடிய தேர்ப்பாகனது நிலையைக்கண்டுதத்தம் நிலையினின்று நீங்கித் தளர்ந்தார்கள்.

மந்திரிகட்கு ஆமாத்தியரென்பதுஓர் பரியாயநாமமாதலால்உழையரென்றதற்கு மந்திரிகளென்றாம். கண்டிலர் என்னும் வினைமுற்றினின்று பிரிந்த தொழிற் பெயர் மூன்றனுருபு ஏற்று நின்றது. 57

இரதம்வந்துற்றதென்றுஆங்கியாவருமியம்பலோடும்
வரதன்வந்துற்றானென்றுமன்னனுமயக்கந்தீர்ந்தான்
புரைதபுகமலநாட்டம்பொருக்கெனவிழித்துநோக்கி
விரதமாதவனைக்கண்டான்வீரன்வந்தனனோவென்றான்.

(இ-ள்.) இரதம் வந்து உற்றது என்று ஆங்குயாவரும் இயம்பலோடும்—தேர் வந்து அடைந்ததென்று அவ்விடத்து எல்லோருங் கூற, வரதன் வந்து உற்றான் என்று மன்னனும் மயக்கந்தீர்ந்தான்—இராமமூர்த்தி வந்தனனென்று தசரதனுஞ்சோகத்தினின்று நீங்கி, புரைதபுகமலநாட்டம்பொருக்கென விழித்து நோக்கி—குற்றத்தினின்று நீங்கியதாமரைமலரையொத்தகண்களை விரைந்து விழித்துப்பார்த்து, விரதம்மாதவனை கண்டான் வீரன்வந்தனனோ என்றான்—பெரிய தவத்தினை விரதமாகக்கொண்ட வசிட்டரைப்பார்த்து இராமன் வந்தனனோ என்று வினவினான். 58

இல்லையென்றுரைக்கலாற்றானேங்கினன்முனிவனின்றான்
நல்லவன்முகமேநம்பிநடந்திலனென்னும்மாற்றம்
சொல்லலுமரசன்சோர்ந்தான்றுயருறுமுனிவனுனிவ
வல்லல்காண்கில்லேனென்னுவாங்குநின்றகலப்போனான்.

(இ-ள்.) இல்லை என்று உரைக்கலாற்றான் ஏங்கினன் முனிவன் நின்றான்-இல்லை என்றுகூற ஆற்றாது இரங்கி வசிட்டமுனிவர் நின்றனர், நல்லவன் முகமேநம்பிநடந்திலன் என்னும் மாற்றம் சொல்லலும்—அம்முனிவரது முகமே இராமமூர்த்தி இங்குவந்திலனென்னும் வார்த்தையைக்கூற, அரசன் சோர்ந்தான்—தசரதன் சோர்ந்தனன், துயர்உறு முனிவன்—அதனைநோக்கித் துன்பமுற்ற வசிட்டமுனிவர், நான் இஅல்லல்காண்கில்லேன் என்னு—நானித்துன்பத்தைச் சிறிதும் பாரேனென்று, ஆங்கு நின்று அகலப்போனான்—அவ்விடத்துநின்று அப்பாற் சென்றனர்.

நடந்திலன் எனக் கவர்யொருள்பட நூலாசியர் ஆற்றாது கூறினர்எனக் கொள்க. 59

நாயகன்பின்னுந்தன்றேர்ப்பாகனைநோக்கிநம்பி
சேயனோவணியனோவென்றுரைத்தலுமனையான்செய்ய
வேயுயர்கானந்தானுந்தம்பியுமிதிலைப்பொன்னும்
போயினனென்றானென்றபோழ்தத்தேயாவிபோனான்.

(இ-ள்) நாயகன்பின்னும் தன்தேர்ப்பாகனைநோக்கி—தசரதன் பின்னுந் தனதுதேர்ப்பாகனாகியசுமந்திரனைநோக்கி, நம்பிசேயனோ அணியனோஎன்று உரைத்தலும்—இராமன்றூரத்திற் சென்றனனோ இங்கு வந்தனனோவென்று வினவ, அனையான்—அச்சுமந்திரன். செய்யவேய்உயர்கானம் தானும் தம்பியும் மிதிலைபொன்னும் போயினன் என்றான்—தீயாற்செந்நிறம் வாய்ந்த மூங்கில்களுயர்ந்தகாட்டில் தானும் இளையபெருமானும்சானகியாரும் சென்றருளினன் என்றுகூறினான், என்றபோழ்தத்து ஆவிபோனான்—என்றுகூறியகாலத்தில் உயிர்விட்டனன்.

தானும் தம்பியும்மிதிலைப் பொன்னும்போயினன்எனப்பால் விரவிச்சிறப்பினால் ஒரு முடிபேற்றது. 60

இந்திரன்முதல்வராயகடவுளர்யாருமீண்டிச்
சந்திரனனையதாங்கோர்மானத்தின்றலையிற்றாங்கி
வந்தனனெந்தைதந்தையெனமனங்களித்துவள்ளல்
உந்தியானுலகினும்பர்மீள்கிலாவுலகத்துய்த்தார்.

(இ-ள்.) இந்திரன் முதல்வர் ஆய கடவுளர்யாரும் ஈண்டி—இந்திரன் முதலாகிய தேவர்களெல்லாரும் நெருங்கி, சந்திரன் அனையது ஆங்கு ஓர்மானத்தின்தலையில் தாங்கி—சந்திரனையொத்த ஓர் விமானத்தினிடத்திலேற்றி எந்தைதந்தை வந்தனன் என்னமனம் களித்து—என்றந்தையாகிய இராமமூர்த்தியினதுதந்தைவந்தானென்று மனங்களிகூர்ந்து, வள்ளல்—அத்தசரதனை, உந்தியான்உலகின் உம்பர்மீள்கிலாத உலகத்துஉய்த்தார்—பிரமனது உலகத்துக்குமேலுள்ள பரமபதத்திற் செலுத்தினார்கள். 61

உயிர்ப்பிலன்றுடிப்புமில்லனென்றுணர்ந்துருவந்தீண்டி
அயிர்த்தனணோக்கிமன்னற்காருயிரின்மைதேறி
மயிற்குலமனையநங்கைகோசலைமறுகிவீழ்ந்தாள்
வெயிற்சுடுகோடைதன்னிலென்பிலாவுயிரின்வேவாள்.

(இ-ள்.) உயிர்ப்பிலன்—சிறிதுஞ்சுவாசமில்லான், துடிப்புஉம் இல்லன் என்று உணர்ந்து—சிறிதுங்கைகால் முதலிய அவையவங்கள் துடிப்புமில்லானென்று அறிந்து, நோக்கி உருவம் சீண்டி அயிர்த்தனள்—நோக்கிஅவனது உருவத்தைத்தீண்டிஐயங்கொண்டு,மன்னற்கு ஆர்உயிர் இன்மைதேறி மயில் குலம் அனையநங்கை கோசலைமறுகி வீழ்ந்தாள்—தசரதனுக்குப் பெறுதற்கரியஉயிர்போனமையைத்தெளிந்து மயிற்குலத்தையொத்தபெண்களிற்சிறந்தவளாகிய கௌசலாதேவி மனஞ்சுழன்று மேலேவிழுந்தனள், வெயில்சுடு கோடைதன்னில் என்பு இலாத உயிரின்வேவாள்—வெயிலாற் சுட்டுவருத்துங்

கோடைகாலத்தில் அகப்பட்ட எலும்பில்லாத கிருமியைப்போலவெதும்புவாளாயினள். 62

இருந்தவந்தணனோடெல்லாமீன்றவன் றன்னையீனப்
பெருந்தவஞ்செய்தநங்கைகணவனிற்பிரிந்துதெய்வ
மருந்திழந்தவரின்விம்மிமணிபிரியரவின்மாழ்கி
அருந்துணைபிரிந்தவன்றிற்பெடையெனவரற்றலுற்றாள்.

(இ-ள்.) இருந்த அந்தணனோடு எல்லாம் ஈன்றவன் தன்னை—தனது உந்தியிலிருந்தபிரமனோடு எல்லாவுலகங்களையும்பெற்றஇறைவனை, ஈனபெருந்தவம் செய்தநங்கை—பெறும்படி பெரியதவத்தைச்செய்த கௌசலாதேவி, கணவனில் பிரிந்து தெய்வமருந்து இழந்தவரின் விம்மி—கணவனினின்றும் பிரிந்துதேவருணவைப் பெற்றிழந்தவரைப்போலப் பொருமி, மணிபிரி அரவின் மாழ்கி—சிவரத்தினத்தையிழந்தபாம்பைப்போலமயங்கி அருந்துணைபிரிந்த அன்றில்பெடைஎன்ன அரற்றல்உற்றாள்—தனக்குரிய துணையாயிருந்தசேவலைப்பிரிந்த பேடைபோலக் கதறத்தொடங்கினாள்.

நரைதிரைமூப்பகலசாவாமருந்தினைப்பெற்றவர் இடையிலிழந்தால் அவருடையுந்துன்பிற்கு எல்லையின்றாதலால் தெய்வமருந்திழந்தாரின் விம்மியெனவும், தசரதனுயிராகவுந்தானுடலாகவுமிருந்து இன்றிழந்தமையால்மணிபிரியரவின்மாழ்கியெனவும், தனது துணைவனையிழந்தமையிற் கதறுதலால்துணைபிரிந்தவன்றிற்பெடையெனவெனவுங்கூறினார். 63

காப்பியக் கலித்துறை.

தானேதானேதஞ்சமிலாதான் றகைவில்லான்
போனான்போனானெங்களைநீத்திப்பொழுதென்றா
வானீர்சுண்டிமண்ணறவற்றிமறுகுற்ற
மீனெனவென்னமெய்தமோதிவிழுகின்றாள்.

(இ-ள்) தானே தஞ்சம் இலாதான்—தான்ஒருபற்றுக் கோடில்லாதவனாய், தானேதஞ்சம்உடையான்—தனக்குத்தானேபற்றுக்கோடுடையவனாய், தகைவு இல்லான்எங்களைநீத்து இப்பொழுதுபோனான் போனான் என்றா—நடுநிலைமையினின்றிகந்து இப்பொழுது எங்களைக்கைவிட்டு உயிர்கழிந்தான் உயிர்கழிந்தானென்று, வான்நீர்சுண்டிமண் அறவற்றி—பெரியநீர்சுண்டிமண்ணும் நீர்அறவறத்தலால், மறுகு உற்றமீனே என்ன—சுழற்சியுற்றமீனைப்போல, மெய்தமோதி விழுகின்றாள்—உயிர்சோர்ந்து தசரதன்மேல் விழுவாளாயினள்.

புத்திர பற்றுக்கோடாகவுயிர் துறந்திலானென்பாள் தானே தஞ்சமிலாதானெனவும், மரணத்தைத்தானே யடைந்தனனென்பாள் உடையானென்னும்உடன்பாட்டு வினையைச்சொல்லெச்சமாகக் கொண்டுதானேதஞ்சமுடையானெனவுங் கூறினாள். ஏகாரம் அசைநிலை. விழுகின்றாள் விரைவுபற்றிவந்த காலவழுவமைதி.

நன்றேநன்னாட்டுக்குவரின்நாட்டுயிர்காப்பார்
அன்றேமக்கட்பெற்றுயிர்வாழ்வார்க்கவமுண்டே

இன்றேவந்தின்டஞ்சலெனுமெம்மகனென்பான்
கொன்றானன்றோதந்தையையென்றாள்குலைகின்றாள்.

(இ-ள்.) நல்நாடு உய்க்குவர்—(சற்புத்திரர்கள் மறுமையில் தமது பிதாவை) முத்தியுலகிற் சேர்ப்பர், ஒன்றோ—அது வொன்றுதானா, இந்நாடுஉயிர் காப்பார் அன்றே—இம்மையில் இந்நிலவுலகில் அவர்களுயிரைக் காப்பரல்லவா, (ஆதலால்) மக்கள்பெற்று உயிர்வாழ்வார்க்கு அவம் உண்டே—சற்புத்திரரைப்பெற்று உயிர்வாழ்வார்க்கு ஓர்காலத்தாங் கெடுதியுண்டா, ஈண்டு இன்றேவந்து—இங்கு இப்பொழுதேவந்து, எம்மகன் என்பான் அஞ்சல் என்னுது—எமதுமகனென்று சொல்லப்படுவோன் அஞ்சாதேயென்று கூறாது, தந்தையை கொன்றான் அன்றோ என்றாள் குலைகின்றாள்—தனது பிதாவைக்கொன்றானல்லவாவென்று கூறிமனநிலை சோர்வாளாயினாள்.

தன்னோடு சுமுத்திராதேவி முதலாயினோரையும் உளப்படுத்திப்பன்மை தோன்ற எம்மகன் என்றமையால் இது மரபுவழுவாகாது. 65

நோயும்இன்றிநோன்கதிர்வாள்வேலிவையின்றி
மாயுஞ்செல்வம்மக்களினுலொமறமன்னன்
காயும்புள்ளிக்கற்கடநாகங்கனிவாழை
வேயும்போன்றானென்றுமயங்காவிழுகின்றாள்

(இ-ள்.) மறம் மன்னன்—வெற்றியையுடைய அரசன், நோயும்இன்றி—நோயுஞ் சற்றுமில்லாமல், நோன்கதிர் வாள்வேல் இவை இன்றி—பகைவர்மீசும்வலிய வொளிவாய்ந்த வாளும் வேலுமாகிய இவைகளாலுயிரிழத்தலுமில்லாமல், செல்வம் மக்களினால்—தனது செல்வத்தையொத்த புத்திரர்களால், மாயும்—மாய்ந்தான், காயும் புள்ளி கற்கடகம் நாகம் கனிவாழை வேயும்போன்றான் என்று—(ஆதலால்) வருத்தும் புள்ளியமைந்த நண்டையும் பாம்பையும் கனியீன்ற வாழையையும் மூங்கிலையும் ஒத்தானென்று, மயங்கா விழுகின்றாள்— மயங்கி அவன்மேல் விழுவாளாயினாள்.

ஓகாரம் அசைநிலைப்பொருட்டு. கற்கடகமென்றதில்ககரமும் எண்ணும்மையுந்தொகுத்தல் "நண்டு சிப்பிவேய்கதலி நாசமுறுங்காலத்தில்—கொண்டகருவளிக்குங் கொள்கைபோல்" என்றார் பிறரும். 66

வடித்தாழ்கூந்தற்கேகயன்மாதேமதியாலே
பிடித்தாய்வையம்பெற்றனைபேராவரமின்னே
முடித்தாயன்றேமந்திரமென்றாண்முகில்வாயின்
துடித்தாலென்னமன்னவன்மார்பிற்றுவள்கின்றான்

(இ-ள்.) வடி தாழ் கூந்தல்கேகயன்மாதே—வடிந்து தாழ்ந்த கூந்தலையுடையகேகயனது புத்திரியே. மதியாலேவையம் பிடித்தாய்—உன்னறிவாலே நிலவுலகைக்கைக்கொண்டாய், பேராவரம் பெற்றனை—கைக்கொள்ளுதற்குத்தவறாதவரத்தைமுன்னமேபெற்றுள்ளாய் அன்றே—அதனாலல்லவா, மந்திரம்இன்னே முடித்தாய் என்றாள்—உன்சூழ்ச்சியை இப்பொழுதேமுடித்தாயென்று கூறி, முகில்வாய் மின் துடித்தால் என்ன—மேகத்தினிடத்தில

மின்னல்வீழ்ந்து துடித்தாற்போல, மன்னவன்மார்பில்துவள்கின்கின்றாள்—தசரதன்மார்பின்மேல்வீழ்ந்து துவள்வாளாயினாள். 67

அருந்தேரானைச்சம்பரனைப்பண்டமர்வென்று
யிருந்தார்வானோருன்னருளாலேயினிதிந்நாள்
விருந்தாகின்றாயென்றனள்வேழத்தரசொன்றைப்
பெருந்தாளன்பிற்சூழ்பிடியென்னப்பிரிவுற்றாள்.

(இ-ள்) வேழத்து அரசு ஒன்றை—அரசயானையொன்றினை, பெருந்தாள் அன்பின் சூழ்பிடி என்ன—பெருமுயற்சிவாய்ந்த அன்போடுவிடாதுசூழ்ந்துபிரிந்தபெண்யானையைப்போல, பிரிவுற்றாள்—விடாது சூழ்ந்துபிரிந்தவளாகியகௌசலாதேவியானவள், அருந்தேரானை சம்பரனை—தடுத்தற்கரிய தேரையுடையவனாகிய சம்பராசுரனை, பண்டு அமர்வென்றாய்—முன்னாளில் போரில்வென்றாய், இந்நாள்—ஆதலால் இந்நாள்காறும், உன் அருளாலே வானோர் இனிது இருந்தார்—உனது அருளாலே இடையூறின்றித்தேவர்களிருந்தார்கள், விருந்து ஆகின்றாய் என்றனள்—அவர்களுக்கு விருந்தாயின்றுசென்றனையென்றுபுலம்பினாள்.

தேவேந்திரனதுவேண்டுகோளாற்சம்பராசுரனை வென்றவரலாற்றைமுன்னர்க்காண்க. உவமைக்கும் பொருட்கும் ஒற்றுமையுண்மையால்பொருளினொழிந்தவையுவமைக்குமேற்றிக்கூறினம். 68

வேள்விச்செல்வந்துய்த்திகொல்மெய்ம்மைத்துணையின்மை
சூழிச்செல்வந்துய்த்திகொல்தோலாமநுநூலின்
வாழிச்செல்வந்துய்த்திகொல்முன்னென்றனள்வானோர்
கேள்விச்செல்வந்துய்க்கவயிற்றோர்கிளைதந்தாள்.

(இ-ள்.) வானோர் கேள்விசெல்வம் துய்க்க—தேவர்கள் கேள்வியாகிய செல்வத்தைச் செவிப்புலனாகியவாயாலுண்ண, வயிறு ஓர்கிளைதந்தாள்—தனதுவயிற்றில்ஒருபுத்திரனைப் பெற்றெடுத்தகௌசலாதேவி, முன்—முற்பொழுது, வேள்விசெல்வம் துய்த்திகொல்—வேள்வியால்வரும்பயனை நீ இங்குநுகரவில்லையா, மெய்ம்மைதுணையின்மைசூழ் இசெல்வம் துய்த்திகொல்—உண்மையாகவுடன்பிறந்தாரின்றிச்சூழ்ந்த இந்த அரசச்செல்வத்தைநுகரவில்லையா, தோலாமநுநூலின் வாழ் இசெல்வம் துய்த்திகொல்—தோல்வியில்லாத மநுநூலின்வழியேவாழும் இவ்வரசியற்செல்வத்தைநுகரவில்லையா, என்றனள்—இவற்றுள் யாதுகுறையுளதென்று அங்குச் சென்றாயென்று கூறிப்புலம்பினள்.

தன்னோடுடன் பிறந்தாருளராயின் அரசியற் செல்வத்துக்கு இடையூறுண்மையின் அஃதின்றி யரசியலைச்செய்து இளைத்தவனுக்கு வானாட்டிலென்னசெல்வம் உளதென்பாள் துணையின்மை சூழிச்செல்வந் துய்த்திகொல்எனவும், வேள்வியாலாயபயனை இம்மை நுகர்ந்தவனுக்கு அங்கேயுள்ளது என்னென்பாள் வேள்விச்செல்வந் துய்த்திகொல் எனவும், மநுநூலின் வழியேயிந்நிலவுலகையாண்டு பயனுகர்ந்தவனுக்கு விண்ணுலகம்கையாளச்சென்றதுஎன்னையென்பாள் மநுநூலின் வாழிச்செல்வந் துய்த்திகொல்முன்எனவுங்கூறினள்.

வேள்விப்பயன் நுகர்ந்தது புத்திரகாமேட்டிசெய்து இராமமூர்த்தியைப்பெற்றமை. சொல்லினும்பொருளில்வந்தது. 69

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

ஆழிவேந்தன் பெருந்தேவியன்னையன்னையென்றழுதரற்றத்
தோழியன்ன சுமித்திரையுந் துளங்கிளங்கியுயிர்சோர
ஊழிதிரிவதெனக்கோயிலுலையும்வேலையொழிந்தமா
மழையுண்கட்டேவியருமயிலின்குழாத்தின்வந்திறைத்தார்

(இ-ள்) ஆழிவேந்தன் பெருந்தேவி—ஆஞ்ஞாசக்கிரத்தையுடைய தசரதனது தேவியருள் மூத்ததேவியாகிய கௌசலை, அன்னையன்னை அழுது அரற்ற—அவ்வாறுசொல்லிக்கதறவும், தோழி அன்ன சுமித்திரையும்—அக்கௌசலாதேவிக்கு உயிர்த்தோழியைப்பொத்த இளையதேவியாகிய சுமித்திரையும், துளங்கிளங்கி உயிர்சோர—மனநிலைகலங்கி அழுது உயிர்சோரவும், ஊழிதிரிவதென்னக்கோயில் உலையும்வேலை—ஊழிகாலத்தில் யாவும் நிலைதிரிதல் போல அரசன்கோயிலுள்ளார் மனநிலைகுலையுங் காலையில், மற்று ஒழிந்தமாமழை உண்கண் தேவியரும்—அவரொழிந்த மாவடுவின் பிளவையொன்ற கண்களையுடைய அறுபதினாயிரந்தேவியரும், மயிலின் குழாத்தின் வந்து இறைத்தார்—மயிலின் கூட்டம்போலவந்து கதறியழுதார்கள். 70

துஞ்சினானைத்தம்முயிரின் றுணைவனைக்கண்டார்துணுக்கத்தான்
நஞ்சுவர்ந்தாலெனவுடலம்நடுங்காநின்றாரென்றாலும்
அஞ்சியழுங்கிவிழுந்திலாரன்பிற்றறுகண்பிறிதுண்டோ
வஞ்சமில்லாமனத்தானைவானிற்றொடர்வான்மனம்வலித்தார்.

(இ-ள்.) துஞ்சினானைத்தம் உயிரின் துணைவனைக் கண்டார்—இறந்தவனும் தமதுயிர்க்கோர் இனிய துணைவனுமாயுள்ள தசரதனைக்கண்டு, நஞ்சுகவர்ந்தால் என்ன துணுக்கத்தான் உடலம் நடுங்காநின்றார் என்றாலும்—பாம்பின் நஞ்சு உடலிலேறி அவ்வுடலைக்கொல்லா கொண்டாற்போலத் தோன்றிய துண்ணென்ற துணுக்கத்தால் உடம்பு நடுங்குகின்றாராயினும், வஞ்சம் இல்லாத மனத்தானை—சிறிதும் வஞ்சனையில்லாத மனத்தினையுடைய தசரதனை, வான் இல்தொடர்வான் மனம்வலித்தார்—(இந்நிலவுலகில் தொடர்ந்துவாழ்ந்ததுபோல) விண்ணுலகிலுந்தொடர்ந்துவாழமனந்துணிந்தனராதலால், அஞ்சி அழுங்கி விழுந்திலர்—மனமஞ்சிப் புழுங்கியவன்மேல் விழுந்திலர், அன்பு இல் தறுகண்பிறிது உண்டோ—அன்பிலுங் கொடியது வேறொன்றுண்டோ, (இல்லையென்றபடி.)

உடல் நடுங்கினராயினும் தசரதன்மேல் வீழ்ந்து புரளாமைக்குக் காரணம் அவனொடுசெல்ல மனம்வலித்தமையால் அன்பிற்றறுகண் பிறிதுண்டோ எனவேற்றுப்பொருள்வைப்பணிதந்துகூறினர் "அன்புடையார் என்புமுரியர்பிறர்க்கு" எனவருதல்காண்க. 71

அளவுகொள்ளாக்கரும்பரப்பிலண்டருலகிலப்புறத்தில்
விளங்குமாதர்கற்பினரிவரின்யாவரெனநின்றார்

களங்கநீத்தமதிமுகத்தார்கானவெள்ளங்கால்கோப்பத்
துளங்கலில்லாத்தனிக்குன்றிற்றொக்கமயிலிற்சூழ்ந்திருந்தார்.

(இ-ள்) அளம்கொள் அளக்கர் இரும்பரப்பில்—உப்பளமமைந்த கடல் சூழ்ந்த பெரிய நிலவுலகின் பரப்பிலும், அண்டர் உலகில் அப்புறத்தில்—தேவருலகிலும் அதற்கப்பாலுள்ள வுலகத்திலும், விளங்குமாதர்கற்பினார்—விளங்கும் அழகிய கற்பினையுடைய பெண்களுள், இவரின் யாவர் எனநின்றார்—இவர்களைபோலக்கற்புடையவர்கள் யாரென்று கருதநின்ற, களங்கம்நீத்தமதிமுகத்தார்—குற்றத்தினின்றுநீங்கிய சந்திரனையொத்த முகத்தையுடைய அறுபதினாயிரம் பெண்களென்னும், கானவெள்ளம் கால்கோப்ப—கூட்டப் பரப்புஅக்கோயிலில்சிறிதும் இடமின்றாக, துளங்கல்இல்லாதனிகுன்றில்—நிலைகலங்குதலில்லாத வொப்பில்லாத பெரிய மலையில், தொக்க மயிலின் சூழ்ந்திருந்தார் — நெருங்கிய மயிற்கூட்டம்போல அரசனைவிடாது சூழ்ந்திருந்தார்கள்.

தசரதனொடு வானிற்செல்ல மனந்துணிந்தமையால் பெருங்கற்பினரென்பார் விளங்குமாதர்கற்பினார் இவரின்யாவரென நின்றார் எனவும், தசரதனை மலையாகவும், இவர்களை மயிலாகவுங் கூறுவார் தனிக்குன்றிற்றொக்கமயிலிற் சூழ்ந்திருந்தாரெனவுங் கூறினார். 72

கைத்தசொல்லாலுயிரிழந்தும்புதல்வற்பிரிந்துங்கடையோட
மெய்த்தவேந்தன்றிருவுடம்பைப்பிரியாதரற்றிவிட்டிலரால்
பித்தமயக்கார்சுறவெறியும்பிறவிப்பெரியகடல்கடக்க
உய்த்துமீண்டநாவாயிற்றாமும்போவாரொக்கின்றார்.

(இ-ள்.) கைத்த சொல்லால் உயிர்இழந்தும்—கைகேசியினது கசந்த சொல்லால்தனது உயிர்நீங்கியும், புதல்வன் பிரிந்தும்—பெறுதற்கரிய புத்திரனைப் பிரிந்தும், கடைஓட மெய்த்தவேந்தன்—கடைபோக மெய்ம்மையையுடைய அரசனது, திரு உடம்பை—அழகிய வுடம்பை, பிரியாது அரற்றிவிட்டிலர்—சிறிதும்பிரியாது கதறிஅவனைவிட்டு நீங்காதிருந்தவர்கள், பித்தம்மயக்குஆம் சுறவுஎறியும் பிறவிபெரிய கடல்கடக்க உய்த்து மீண்டநாவாயில்—வாதபித்த சிலேட்டுமங்களாகிய சுறாமீன்கள் கொன்றுவருத்தும்பிறவியாகிய பெரியகடலைக கடக்கச்செலுத்தித் திரும்பியமரக்கலத்தில், தாமும்போவார் ஒக்கின்றார்—தாமுமேறி உடன்போவாரையொத்தவராயினார்

பிறவியைக் கடலாகவுருவகஞ் செய்தமையால் வாதபித்தசிலேட்டுமங்களென்னும்பிணிகளைச்சுறாமீன்களாகவுருவகஞ்செய்தும், அவனோடுவான்செல்லஅறுபதினாயிரம் பெண்களும்மனம் வலித்திருந்தமையால் கடல்கடக்கவுய்த்துமீண்ட நாவாயிற்றாமும் போவாரொக்கின்றார் எனவுங் கூறினார். 73

மாதரார்களறுபதினாயிரருமுள்ளம்வலித்திருப்பக்
கோதில்குணத்துக்கோசலையுமிளையமாதுங்குழைந்தேங்க
சோதிமணித்தேர்ச்சுமந்திரனென்றரசன்றன்மைசொலவந்த
வேதமுனிவன்விதிசெய்தவினையைநோக்கிவிம்முவான்.

(இ-ள்.) மாதரார்கள் அறுபதினாயிரரும் உள்ளம் வலித்து இருப்ப—அறுபதினாயிரம்பெண்களும்வானிற்செல்லமனம்வலித்திருக்கவும், கோது இல் குணத்து கோசலையும் இளையமாதும் குழைந்து ஏங்க—குற்றமற்றகுணத்தையுடைய கௌசலாதேவிம் சுமத்திராதேவியும்மனங்குழைந்து இரங்கவும், சோதிமணி தேர்சுமந்திரன்சென்று அரசன் தன்மைசொல்ல—ஒளிவாய்ந்தஇரத்தினமழுத்திய தேரையுடைய சுமந்திரன்சென்று அரசனது தன்மையைச் சொல்ல, வந்த வேதமுனிவன் விதிசெய்த வினையைநோக்கி விம்முவான்—அங்குவந்த வேதங்களையுணர்ந்த வசிட்டமுனிவர் ஊழ்செய்த தீவினைப் பயனைநோக்கி மனம்பொருமுவார். 74

செய்யக்கடவசெயற்குரியசிறுவரீண்டையாரல்லர்
எய்தக்கடவபொருளெய்தா திகவாவென்னவியல்பென்ன
மையற்கொடியாண்மகனீண்டுவந்தான் முடித்துமற்றென்ன
தையற்கடலினின்றெடுத்தவனைத் தயிலக்கடலின்றலையுய்த்தான்

(இ-ள்.) செய்யக்கடவசெயற்கு உரியசிறுவர் ஈண்டையார் அல்லர்—ஈமக்கடன்களைச் செய்தற்குரிய புத்திரர்கள் இவ்விடத்திலுள்ளாரல்ல, எய்தக்கடவபொருள் எய்தாது இகவா என்ன — மக்களுடம்பெடுத்தோர்க்கு அடையக்கடவனவாகிய நன்மைதீமைகள் அடையாமல் நீங்கா எனவும் இயல்பு என்ன மையல் கொடியாள்மகன் ஈண்டுவந்தால்முடித்தும்என்ன—தனக்கு இயற்கைத்தொழிலென்று மயக்கம் விளைக்குங் கொடுந்தொழில்பூண்ட கைகேசியினது புத்திரன் இவ்விடத்து வந்தால் நீக்கடன்களை முடிப்போம் எனவும், அவனை தையல்கடல்நின்று எடுத்து—அந்தசரதனை அறுபதினாயிரந் தேவிமாராகிய கடற்பரப்பினின்றெடுத்து, தயிலக்கடலின்தலை உய்த்தான்-வாசமூட்டத் தயிலக்கடலிற் செலுத்தினான்.

உயிர்கழிந்த வுடம்புமுறுகியழியாது பதஞ்செய்ப வாசமூட்டுதல்வழக்கு ஆதலால் தையற்கடலின்றெடுத்தவனைத் தயிலக்கடலின்றலையுய்த்தானெனக்கூறினார் . 75

தேவிமாரைவற்குரிமைசெய்நாளிற்செந்தீயின்
ஆவிநீத்திரெனநீக்கியரிவைமார்களிருவரையும்
தாவில்கோயிற்றலையிருத்தித்தண்டார்ப்பரதற்கொண்டணைகென்
றேவினான்மன்னவனாணையெழுதிமுடங்கல்கொடுத்தவரை.

(இ-ள்.) தேவிமாரை—அறுபதினாயிரந்தேவிமார்களையும், இவற்கு உரிமை செய்யும் நாளில்—இத்தசரதனுக்குச் செய்தற்குரியகடன்களைச்செய்து முடித்தகாலையில், செந்தீயின் ஆவிநீத்திர் எனநீக்கி—செவந்த நெருப்பில் வீழ்ந்து உயிரைவிடுங்களென்று அத்தொழினின்றும் நீக்கி, அரிவைமார்கள் இருவரையும் தாவுஇல்கோயில் தலைஇருத்தி—கௌசலை சுமித்திரையென்னுமிரண்டு தேவிமாரையும் கெடுதலில்லாத கோயிலின்கண் தசரதன்பாலிருத்தி,மன்னவன் ஆணை முடங்கல் எழுதிகொடுத்து அவரை—தசரதன்ஆணையென்று ஓர் ஓலையெழுதிக்கொடுத்து அங்குள்ளதூதுவரை, தண்தார்ப

தன்கொண்டு அழையென்று ஏவினன் — கண்ணியமாலையணிந்த பரதனைக் கொண்டுவரக்கடவீரென்று வசிட்டமுனிவரேவினர்.

அறுபதினாயிரந் தேவிமாரும் அன்றே நெருப்பிற் பாயமுயன்றனர் ஆகலால் இன்றெழுமிகளை நீக்கினாரதலின் இவற்குரிமைசெய்புநாளிற் செந்தியின் — ஆவிநீத்திரெனநீக்கி என்றார். 76

போனாரவருங்கேகயர்கோன்பொன்மாநகரம்புகவெய்த
ஆனவறிவினருந்தவனுமறமார்பள்ளியதுசேர்ந்தான்
சேனாபதியிற்சுமந்திரனைச்செயற்பாற்குரியசெய்கென்னு
மேனாஞ்சொன்னமாந்தர்க்குவிளைந்ததினிநாம்விளம்புவாம்.

(இ-ள்.) கேகயர்கோன் பொன் மாநகரம் புகஎய்த அவரும்போனார்— கேகயநாட்டிலுள்ளோர் அரசனதுஇலக்குமிவசிக்கும் பெரிய நகரத்திற்போயடைய அத்தூதுவரும் விரைந்து சென்றார்கள், சுமந்திரனைசேனாபதியின்- சுமந்திரனாகிய முதல்மந்திரியைநோக்கிச் சேனாபதியைப்போல செயற்பாற்குரியசெய்க என்னு—குடிகட்குச் செய்தற்குரிய கடன்களை வழுவாது செய்யக்கடவாய்என்று கூறி, ஆன அறிவின் அருந்தவனும் அறம்ஆர்பள்ளி அதுசேர்ந்தான்—நீங்காதமெய்யுணர்ச்சியுடைய வசிட்டமுனிவரும் அறம் குடிகொண்டதவச்சாலையையடைந்தார், மேல்நாம்சொன்னமாந்தர்க்கு—முன் புநாம்கூறியமக்களுக்கு, விளைந்தது இனி நாம் விளம்புவாம்—நிகழ்ந்த செய்தியையினிநாமெடுத்துக் கூறுவோம்,

வசிட்டமுனிவர் சுமந்திரனைநோக்கி அச்சுமந்திரன் முதலிய அமைச்சர்களுக்குத் தலைமையையுடையோராதலால்செயற்பாற்குரியசெய்கென்னு எனவிடைதந்தும், சேனாபதி அரசனாணைக்கீழொழுங்கிநடப்பதுபோல நீ அரசனாணைக்கீழொழுங்கிக் குடிகளை நடத்துகவென்றனராதலால், சேனாபதியிற்செயற்பாற்குரிய செய்கென்னு எனவும் கூறினார்.

மீனீர்வேலைமுரசியம்பவிண்ணோரேத்தமண்ணிறைஞ்சத்
தூநீரொளிவாள்புடையிலங்கச்சுடர்த்தேரேறித்தோன்றினான்
வானேபுக்கானரும்புதல்வன்மக்களகன்றார்வருமளவும்
யானேகாப்பனிவ்வுலகையென்பான்போலவெறிகதிரோன்.

(இ-ள்.) அரும்புதல்வன்—நமது குலத்திற்றோன்றிய பெறுதற்கரிய தசரதன், வானேபுக்கான்—சுவர்க்கமடைந்தான், மக்கள் அகன்றார்—நமது மரபிற்றோன்றிய இராமமூர்த்தி முதலியமக்களும் காட்டிற்கும் வேற்றுநாட்டிற்கும்சென்றனர், வரும்அளவும்—அவர்கள் வருங்காறும், இஉலகையானே காப்பான் என்பான்போல—நானே இந்த உலகினைக்காப்பேனென்று கூறியெழுந்தவன்போல, எறிகதிரோன்—இருளையோட்டும் சூரியன், மீனநீர்வேலைமுரசு இயம்ப—மீன்களுலவும் நீர்மயமாகிய கடலென்னு முரசமுழங்கவும், விண்ணோர் ஏத்தமண் இறைஞ்ச—தேவர்கள் துதிக்கவும் நிலவுலகிலுள்ளவர்கள்வணங்கவும், தூநீர் ஒளிவாள்புடை இலங்க—புனிதத்தன்மை வாய்ந்ததனதுஒளியென்னும் உடைவாள் இடையினோர் பால்விளங்கவும், சுடர்தேர் ஏறிதோன்றினான்—ஒளியமைந்த தேர்மேலேறி உதயமானான்.

அரசன் புறப்படுங்கால் முரசியம்பலும் உலகினர் துதித்தலு முளதாதல் போலச், சூரியனெழுங்கால் வைகறையிற்கடலொலித்தலும் இருட்போதில் அரக்கர்செய்யும் துன்பத்தினின்று நீக்கினேனென்று விண்ணவர் துதித்தலும், இருட்போதில்தத்தம் செயலொழிந்தமக்கள் தாம் செய்யுங்கடன்களில்முயன்றெழுந்துவணங்கலுமுடைமையால் அரசற்குரிய சிறப்புத்தோன்றக் கூறினார். சூரியன் உதயஞ்செய்தலைத் தமது மரபிற்றோன்றிய மக்கள் வருங்காறும் அரசில் நானேசெய்வனென்று எழுந்ததை யொக்குமெனக்கவி அத்தியவசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்றவுவமையணி. 78

வருந்தாவண்ணம்வருந்தினார்மறந்தார்தம்மைவள்ளலுமங்
கிருந்தானென்றேயிருந்தார்களெல்லாமெழுந்தாரருளிருக்கும்
பெருந்தாமரைக்கட்கருமுகிலைப்பெயர்ந்தார்காணார்பேதுற்றார்[டார்
பொருந்தாநயனம்பொருந்திநமைப்பொன்றச்சூழ்ந்தவெனப்புரண்

(இ-ள்) வருந்தாதவண்ணம் வருந்தினார் தம்மைமறந்தார்—ஒருகால்வருந்துதலும் ஒழிதலுமின்றி அன்றுவருத்தங் கூர்ந்த நகரமாக்கள் தம்மைமறந்துதுயின்றார்கள், வள்ளலும் அங்கு இருந்தான் என்றேஇருந்தார்கள் எல்லாம் எழுந்தார்—இராமமூர்த்தியும் அங்கிருந்தானென்றே இருந்தவர்களெல்லாருந் தத்தந்துயிலினின்று மெழுந்தார்கள், அருள் இருக்கும்பெருந்தாமரைகங்கண் கருமுகிலைபெயர்ந்தார் காணார் பேதுற்றார்—அருள்குடிகொண்ட பெரிய தாமரைமலரையொத்த கண்களையுடைய இராமமூர்த்தியை அங்குப்பெயர்ந்து சென்று காணாதவராய்மயங்கி, பொருந்தாத நயனம்பொருந்தி—துன்பத்தால் துயில் கூடாதகண்கள் துயில்கூர்ந்து, நம்மைபொன்றசூழ்ந்த என்னபுரண்டார்—நம்மையுயிர்வாங்க ஆலோசித்தனவென்று நிலத்தின்மேல் வீழ்ந்துபுரண்டழுதார்கள்.

பெயர்ந்தார், காணார், பேதுற்றார், முற்றெச்சங்கள். இராமமூர்த்திவனத்திற்குச்சென்ற அன்றுதொட்டு, விடாததுன்புழக்கின்றாரென்பார் வருந்தாவண்ணம் வருந்தினாரெனவும், கண்கள் துயில்கூர்ந்து நம்மைக்கெடுத்தனவென்பார் பொருந்தா நயனம் பொருந்தி நமைப்போன்றச் சூழ்ந்தவெனவுங் கூறினார். 79

எட்டுத்திசையுமோடுவாரெழுவார்விழுவாரிடர்க்கடலுள்
விட்டுநீத்தானமையென்பார்வெய்யவலையன்வினையென்பார்
ஒட்டிப்படர்ந்ததண்டகமிவ்வுலகத்துளதன்றேயுலாவைச்
சுட்டிச்சேர்தலாற்றுதுமேல்தொடர்துந்தேரின் சுவடென்பார்.

(இ-ள்.) எட்டுதிசையும் ஓடுவார் எழுவார்—எட்டுத் திசைகளிலும் இராமமூர்த்தியை நாடவெழுவாரும், இடர்கடல் உள்விழுவார்—அங்குக்காணாமையால் துன்பக்கடலில் வீழ்ந்தழுந்துவோரும், நம்மைவிட்டு நீத்தான் என்பார்—நம்மை அவ்விராமமூர்த்தி இங்குவிட்டு நீங்கினார் என்பவரும், வெய்யவினை என்பார்—கொடிய தீவினையென்போரும், ஒட்டிபடர்ந்த தண்டகம் இ உலகத்து உளது அன்றே—அவ்விராமமூர்த்தி மறைந்துசென்ற தண்டகாரணியமும் இந்தவுலகத்திலுள்ளதல்லவா (ஆதலால்) உணர்வால் சுட்டிச்சேர்

தல்லூற்றுதுமேல்-நமது அறிவாயுள்ள இராமமூர்த்தியைக்குறித்துச் செல்லத்தொடங்குவோமானால், தேரின்சுவடுதொடர்தும் என்பார்—நோக்கால் வழியைத தொடர்ந்து சொல்லுவோமென்பவரும் ஆயினர். 80

தேரின்சுவடுநோக்குவார்திருமாநகரின்மிசைதிரிய
ஊருந்திகிரிக்குறியொற்றியுணர்ந்தாரெல்லாமுயிர்வந்தார்
யாருமஞ்சலையன்போயயோத்தியடைந்தானெனவசனிக்
காருங்கடலுமொருவழிக்கொண்டார்த்தவென்னக்கடிதார்த்தார்

(இ-ள்.) தேரின் சுவடுநோக்குவார்—அத்தேர்க்காற் சுவட்டைநோக்கி, திருமாநகரின்மிசைதிரிய—அதுபொலிவமைந்தநகரத்தின்மேல் திரிந்துசெல்ல, ஊரும்திகிரிகுறி ஒற்றிஉணர்ந்தார் எல்லாம்—ஊர்ந்தசக்கரத்தின் சுவட்டை அடியொற்றியறிந்தநகரவாசிகளெல்லாரும், உயிர்வந்தார்—சென்றவுயிர் மீளப்பெற்றவராய், யாரும்அஞ்சல்—எவரும் அஞ்சுதலொழிக, ஐயன் அயோத்திபோய் அடைந்தான் என்ன—இராமமூர்த்தி அயோத்திசென்றடைந்தாரென்று, அசனிகார் உம்கடல் உம்ஒருவழிகொண்டு ஆர்த்தஎன்ன—இடியையுடைய மேகமுங்கடலும் ஒருவழிக்கொண்டு ஒலித்தனபோல, கடிது ஆர்த்தார்—மிகவும் ஒலித்தார்கள்.

நகரின்மேல்மீண்ட தென்பதுதோன்ற நகரின்மிசைதிரிய என்றார். 81

மானவரவின்வாய்த்தீயவளைவாள்றொளைவாளெயிற்றின்வழி
ஆனகடுவுக்கருமருந்தாவருந்துமமுதம்பெற்றுய்ந்து
போனபொழுதிற்புகுந்தவுயிர்பொறுத்தார்பொருவரிய
வேனின்மதனைமதனழித்தான்மீண்டானென்னவாண்டையார்

(இ-ள்.) பொருவுஅரிய—ஒப்பில்லாத, வேனில்மதனைமதன்அழித்தான் மீண்டான்என்ன ஆண்டையார—வேனிற்காலத்துக்குரியமன்மதனைத்தனது அழகால் அவன்வலிமையை அழித்தஇராமமூர்த்திநகர்க்குத்திரும்பினான்என்று அவ்விடத்திலுள்ளோர், மான அரவின்வாய்—பெருமையமைந்தபாம்பினது வாயிலுள்ள, தீய வளைவான் தொளைவாள் எயிற்றின்வழிஆன கடுவுக்கு—கொடிய வளைவமைந்த பெரிய தொளைவாய்ந்த வாள்போன்ற பல்லின் வழிசிந்தியவிடத்துக்கு, அருமருந்து ஆகஅருந்தும் அமுதம்பெற்றுஉய்ந்து போனபொழுதில்—அடைதற்கரிய ஓர் மருந்தாகப்பருகும் அமிர்தத்தைப்பெற்றுப்பிழைத்தகாலத்தில், புகுந்த உயிர்பொறுத்தார் ஒத்தார்—மீண்டவுயிரைச்சுமந்தவரொத்தாராயினர். 82

ஆறுசெல்லச்செல்லத்தேராழிகண்டாரயலப்பால்
வேறுசென்றநெறிகாணார்விம்மாநின்றவுவகையராய்
மாறியுலகம்வகுத்தநாள்வரம்புகடதுமண்முழுதும்
ஏறியொடுங்குமெறிகடல்போலெயின்மாநகரமெய்தினார்.

(இ-ள்.) ஆறுசெல்லசெல்ல தேர்ஆழிகண்டார்—மீளும்வழியிற்செல்லுந்தோறும் செல்லுந்தோறும் தேர்ச்சுவட்டைக்கண்டு, அயல் அப்பால்வேறுசென்றநெறிகாணார்—அயலில்அப்புறம்வேறுவழியில்தேர்சென்றவழியைக்காணமையால்விம்மாநின்றஉவகையராய்—நகரிடத்தேதிரும்பினாரென்றுமிகுந்த

மகிழ்ச்சியையுடையவராய், மாறிஉலகம்வருத்தநாள்-உலகுநிலைதிரிதலால்சிரு ஷ்டித்த பின்னுளில். வரம்புகடந்தமண்முழுதும் ஏறி—தனது நிலைகடந்து மண்முழுதும் பரவி, ஒடுங்கும் எறிகடல்போல்—வழிநாளில் ஒடுங்கிய அலை யெறியுங்கடலைப்போல, எயில்மாநகரம் எய்தினர் மதில்சூழ்ந்தபெரியஅயோ த்தி நகரத்தை யடைந்தனர்.

ஊழிகாலத்தில்நிலைபெயர்ந்து பரவியகடல்சிருட்டிகாலத்தில்ஆணைவழி நிலைகடவாதுநிற்றலால் வரம்புகடந்து மண்முழுதும் எறியொடுங்குமெறி கடல்போல் என்றார். 83

புக்கா ரரசன்பொன்னுலகம்போனானென்னும்பொருள்கேட்டார்
உக்கார்நெஞ்சமுழுயிருக்கூறும்தகைமையாலுரைப்பரிதால
தக்கான்போனான்வனமென்னுந்தகையுமுணர்ந்தார்நிலையாவி
அக்காலத்தேயகலுமோஅவதியென்றொன்றுளதானல்

(இ-ள்) புக்கார் அரசன்பொன் உலகம்போனான்என்னும் பொருள்கேட் டார்—நகரிற்புகுந்து தயரதர் விண்ணுலகஞ்சென்றாரென்னுஞ் செய்தியைக் கேட்டு, நெஞ்சம் உக்கார் உயிர் உகுத்தார்—நெஞ்சமுருகிவுயிர்சோர்ந்தார்கள், உற்றது எம்மால உரைப்பு அரிது—அவர்களடைந்த சோகத்தையெம்மால் கூறுதலரிது, தக்கான்போனான் வனம்என்றுந் தகையும் உணர்ந்தார்—நடுவு நிலைமையையுடைய இராமமூர்த்தி வனத்திற்சென்றனரென்னுந் தன்மை யையுமறிந்தனர், அவதிஎன்றுஒன்று உளதுஆனால்—காலவரையறையென் றொன்றுளதாயின், நிலைஆவி அக்காலத்தே அகலுமோ—அவர்களுடம்பிலையா யுள்ள பிராணன் அப்பொழுதே வரையறையினின்று நீங்குமோ.

"அளந்தனபோக மவரவராற்றால்" என்று கூறியிருத்தலால், தாம் உயிர் விடக்கருதினும்கழியுமோவென்பார் அவதியென்றொன்றுளதானால்நிலையா வியக்காலத்தேயகலுமோ என்றார் 84

மன்னற்கல்லாவனம்போனமைந்தற்கல்லார்வாய்ந்தரிய
இன்னற்சிறையினிடைப்பட்டாரிருந்தார்நின்றவருந்தவனும்
உன்னற்கரியபழிக்கஞ்சியன்றேயொழிந்ததியானென்று
பன்னற்கரியபலநெறியும்பகர்ந்துபரிக்கின்றான்.

(இ-ள்.) மன்னற்கு—தயரதன் பொருட்டும், அல்லார் வனம்போன மைந்தற்கு—இருள்செறிந்த வனம்போன இராமமூர்த்தி பொருட்டும், அல் லார்—உடன்சென்ற நகரவாசிகளல்லாதவர்கள், வாய்ந்துஅரிய இன்னல்சிறை யின் இடைப்பட்டார் இருந்தார்—பெயர்த்தற்கரிய துன்பமாகிய சிறையினிட த்துச் சிமிழ்ப்புண்டவராயிருந்தனர், நின்ற அருந்தவனும்—அங்குநின்ற செய் தற்கரியதவத்தையுடைய வசிட்டமுனிவரும், உன்னற்குஅரிய பழிக்குஅஞ்சி அன்றேயான் ஒழிந்தது என்று—நினைத்தற்கரிய பழிக்கஞ்சியல்லவா யா னொழிந்ததென்று, பன்னற்குஅரியபலநெறியும் பகர்ந்து—சொல்லுதற்கரிய பலநீதிநெறிகளையும் எடுத்துக்கூறி, பரிக்கின்றான்—கௌசலைமுதலி யோர் மனப்பறைப்பினை யொழித்தார். 85

வெள்ளத்திடைவாழ்வடவனலையஞ்சிவேலைகடவாத
பள்ளக்கடலின்முனிபணியாற்பையுணகரம்வைகிடமேல்
வள்ளற்றாதைபணியென்னும்வானோர்தவத்தால்வயங்கிருளி
னள்ளிற்போனவரிசிலைக்கைநம்பிசெய்கைநடத்துவாம்.

(இ-ள்.) வெள்ளத்து இடைவாழ்வட அனலை அஞ்சி—தனதிடத்து வாழும் வடவாமுகாக்கினியை யஞ்சி, வேலைகடவாத பள்ளம் கடலின்—கரைகடவாத பள்ளம் வாய்ந்தகடலைப்போல, முனிபணியால்—வசிட்டமுனிவரது பணித்த இன்சொல்லால், பையுள்நகரம் வைகிட—துன்பக்கடலில் நகரிலுள்ளோர் ஆழ்ந்து மயங்க, மேல்—இனி, வள்ளல் தாதைபணிஎன்னும் வானோர் தவத்தால்—கொடுக்குந் தன்மைவாய்ந்த தயரதனது பணியென்னும் தேவர்கள் செய்ததவத்தினுல், வயங்கு இருளின் நள்ளில்போன வரிசிலைகைநம்பி செய்கை நடத்துவாம்—மிக்கநடு இருளில் காட்டிற்குச்சென்றகட்டமைந்த வில்லினையேந்திய கையையுடைய இராமமூர்த்தியினது செய்கையை இனியெடுத்துக்கூறுவாம்.

அரக்கர்செய்யுந்தீங்கொழித்தற்கே தயரதன்காட்டிற்குச்செல்லஏவியது முன்னார்க்குறையிறந்ததேவர்செய்த தவமாதலால் பணியென்னும் வானோர் தவத்தால் என்றார். ௮௬

தைலமாட்டுப்படலம்.

முற்றிற்று

ஆ. திருவிருத்தம் ௯௪௩

---

௮-வது கங்கைப்படலம்.

வெய்யோனொளிதன்மேனியின்விரிசோதியின்மறையப்
பொய்யோவெனுமிடையாளொடுமிளையானொடும்போனான்
மையோமரகதமோமறிகடலோமழைமுகிலோ
ஐயோவிவன்வடிவென்பதொரழியாவழகுடையான்

(இ-ள்.) மை ஓ மரகதம் ஓ மறிகடல் ஓ மழைமுகில் ஓ—அஞ்சனமோ மரகதமணியோ அலைகள் மடங்கிவரும் கடலோ சூற்கொண்டமேகமோ, இவன்வடிவு என்பது—இவனது வடிவென்று சொல்ல, ஓர் அழியாத அழகு உடையான்—ஓர் அழியாத அழகையுடைய இராமமூர்த்தி, வெய்யோன ஒளி—சூரியனுடைய ஒளியானது, தன்மேனியின் விரிசோதியின் மறைய—தனது திருமேனியின்கண்விரிந்த ஒளியால்மறைபட, பொய்யோ என்னும் இடையாளொடும்—இதுபொய்யோவென்று கண்டோர்மருளும் இடையையுடைய சானகியாரோடும், இளையானொடும் அய்யோபோனான்—இளையபெருமாளோடும் ஐயோ காட்டிற்சென்றான்

பொய்என்பது இன்மையாதலால் பொய்யோ வெனும் இடையாள்என்றார் அய்யோ இரக்கக்குறிப்பிடைச்சொல் ஓர் என்னும் பண்புச்சொல்இவனன்றியழகுடையோர் இன்மைமேனின்றது. இதுவருமிடந்தோறுங் கொள்க என்பது முற்சொற்சம் ௧

அளியன்னதொரறல்துன்னியகுழலாள்கடலமிர்தின்
தெளியன்னதொர்மொழியாணிறைதவமன்னதொர்செயலாள்
வெளியன்னதொரிடையாளொடும்விடையன்னதொர்நடையான்
களியன்னமுமடவன்னமும்நடமாடுவகண்டான்.

(இ-ள்.) அளி ஓர் அறல் அன்னது-வண்டினையும் ஒப்பில்லாத கருமணலையுமொத்த, துன்னிய குழலாள்—இடையின்றிநெருங்கிய கூந்தலையுடையவரும், கடல் அமிர்தின் தெளி அன்னது ஓர் மொழியாள்—கடலிற்றோன்றிய அமுதத்தெளிவு ஒன்றுதனக்கு ஒப்பாதலன்றி மற்றொன்றுந் தனக்கொப்பில்லாத சொல்லையுடையவரும், நிறைதவம் இன்னது ஓர் செயலாள்—நிறைந்த தவமே யுருக்கொண்டதொத்த ஒருசெயலையுடையவரும், வெளி அன்னது ஓர் இடையாளொடும்—ஆகாயத்தையொத்த இடையையுடையவருமாகிய சானகியாரோடும், விடை அன்னது ஓர்நடையாள்—காளையையொத்த ஒப்பில்லாத நடையையுடைய இராமமூர்த்தி, களி அன்னம் உம் மட அன்னம் உம்—களிப்பையுடைய சேவலன்னமும் மடமையையுடைய பெடையன்னமும், நடமாடுவ கண்டான்—இறுமாப்போடு உலவுதலை இராமமூர்த்தி கண்டருளினன்.

மக்கள் சஞ்சரித்தலை வழக்கில் நடமாடுகின்றாரென வழங்குதலால், அன்னத்திற்கு நடஞ்செய்தலின்மையின் நடமாடுவதென்றதற்கு இறுமாப்போடுலவுதலென்றாம். வெளி அருவமாகையால் வெளியன்ன தொரிடையாளெனவும், பெருமிதநடை யுடையோனாதலால் விடையன்னதொர் நடையான் எனவும், பிரியாதுறைதலால் களியன்னமும் மடவன்னமுமெனவுங் கூறினர். ஆடுவ தொழின்மேனிற்றலால் வினைமுற்றுப்பெயர். 2

அஞ்சம்பையுமய்யன்றனதலகம்பையுமளவா
நஞ்சங்களைவெலவாகியநயனங்களையுடையாள்
துஞ்சுங்களிவரிவண்டுகள்குழலின்படிசுழலும
கஞ்சங்களைமஞ்சன்கழனகுகின்றதுகண்டாள்.

(இ-ள்.) அஞ்சு அம்பையும் அய்யன் தனது அலகு அம்பையும் அளவா-மன்மதனேந்தியபஞ்சபாணங்களையும் இராமமூர்த்தியினதுகூரிய அம்பையும் தமக்கோருருவாகக்கொண்டு, நஞ்சங்களை வெல்ல ஆகிய—நஞ்சினை வெல்லவமைந்த,நயனங்களை உடையாள்—கண்களையுடைய சானகியார், களிதுஞ்சும் வரிவண்டுகள்—களிப்பொடு நிலைபெற்றவரியமைந்தவண்டுகள், குழலின்படி சுழலும்—பாவிலமைந்தகுழல்போலச் சுழன்றுதிரியும், கஞ்சங்களை மஞ்சன் கழல் நகுகின்றது கண்டாள்—தாமரைமலர்களை இராமமூர்த்தியினது திருவடிகள் அசதியாடுதலைப் பார்த்தார்.

அஞ்சம்பாவன தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலம். மைந்தன் மஞ்சன்போலி. 3

மாகந்தருமகரந்தருமளகந்தருமதியின்
பாகந்தருநுதலாளொடுபவளந்தருமிதழான்
மேகந்தனிவருகின்றதுமின்னோடெனமினிர்பூண்
நாகந்தனிவருகின்றதுபிடியோடெனநடவா.

(இ-ள்.) மாகந்தமும் மகரந்தமும் அளகம்—பெருமையமைந்த இயற்கைவாசனையையும் மலரிலுள்ள தாதினையும்வீசுங்கூந்தலையும், மதியின்பாகம் தருபூட்சலாடொடு—அர்த்தசந்திரன்காட்சியையொத்தநெற்றியையுமுடைய சாநகியாரோடு, பவளம் தரும் இதழான்—பவளத்தோற்றத்தை யொத்தஇதழையுடைய இராமமூர்த்தி, மேகம் மின்னோடு தனிவருகின்றது என்ன-மேகமானது மின்னலோடு நிகரின்றிவருதல்போலவும், மிளிர்பூண் நாகம்—விளங்கும் பூணணிந்த கொம்பினையுடைய ஆண்யானை, பிடியொடு தனிவருகின்றது என்ன—பெண்யானையோடு ஒப்பின்றி வருதல்போலவும், நடவா—நடந்து

இடக்கிற்கும் இடத்திலிசைப் பொருளிற்கும் ஒற்றுமையுண்மையால் இடத்திலிசைப் பொருளால் இடம்சான்றப் பூண்நாகமென உபசரித்தார். 4

தொளைகட்டிய கிளைமுட்டிய கருப்பஞ்சுவையமுதின்
கிளைகட்டிய கருவிக்கிளர் இசையிற்பசை நறவின்
விளைகட்டியின் மதுரித்தெழு கிளவிக்கிளர் விழிபோல்
வளைகட்டவர் தளைவிட்டெறி குவளைத்தொகை கண்டான்.

(இ-ள்) தொளைகட்டிய கிளைமுட்டிய கருப்புச்சுவை அமுதின்-தொளையமைந்த மேல்பக்குழலிலெழுந்த கருப்பியாகிய சுவைவாய்ந்த வமுதுபோலவும், கிளைகட்டிய கருவிகிளர் இசையில்—கைக்கிளையென்னும் இசையமைந்த நரப்புக் கருவியினிகழாநின்ற இசையைப்போலவும், பசைநறவின் விளைகட்டியின்—பசைவாய்ந்த மதுவால் விளைந்த கட்டியைப்போலவும், மதுரித்து எழுகிளவி-மதுரித்தெழாநின்ற சொல்லையுடைய சாநகியாரது, கிளர்விழிபோல்—விளங்கும் கண்களைப்போல, களைகட்டவர்—களைகளையும் மருதநிலப் பெண்கள், தளைவிட்டு எறிகுவளை தொகைகண்டான்—வயலினின்றும் விட்டெறியும் குவளைமலரின் கூட்டத்தைப்பார்த்தருளினான்.

கைக்கிளை என்பது கிளையெனநின்றது முதற்குறை. தளையெனவயலிற்கு வழங்குவது குழூஉக்குறி. 5

அரும்பேந்திய கலசத்துணை யமுதேந்திய மதமா
மருப்பேந்திய வெனலாமுலை மழையேந்திய குழலாள்
கரும்பேந்திர முதலாயின கண்டாளிடர் காணாள்
பொருப்பேந்திய தோளானொடு விளையாடினள் போனாள்.

(இ-ள்.) அரும்பு ஏந்திய—அரும்பினை யேந்தின, அமுதுகலசத்துணை ஏந்திய—அமுதநிறைந்த இரண்டுகலசங்களையேந்தின, மதமாமருப்புஏந்திய—யானையினதுகொம்பினை யேந்தின, என்னல்ஆம் முலை—என்றுசொல்ல அமைந்த தனத்தையும், மழை ஏந்திய குழலாள்—மேகம்போல நிறமமைந்த கூந்தலையுமுடைய சாநகியார், கரும்புஏந்திரம் முதலாயின கண்டாள்—கரும்பாலைமுதலியனவற்றைக்கண்டு, இடர்காணாள்—துன்பஞ்சிறிதுங் காணாது, பொருப்பு ஏந்தியதோளானொடு விளையாடினள் போனாள்—மலையையொத்த தோளையுடைய இராமமூர்த்தியோடு விளையாடிச் சென்றார்.

காடுநாடுபோலத் தோன்றுதலால் இடர்காணாள் விளையாடினள்போனாளெனவும். தனங்களை அரும்பெனவும், அமுதகலசமெனவும், யானைக்கொம்

பெனவுங் கூறவமைந்ததாதலால் எனலாமுலையெனப் பலபொருளுவமையணிபடக்கூறினார். கண்டாள், காணாள், விளையாடினள் முற்றெச்சங்கள். 6

பன்னந்துகடரளந்தொகுபடர்பந்திகள்படுநீர்
அன்னந்துயில்வதிதண்டலையயனந்துறைபுளினம்
சின்னந்தருமலர்தந்தனசெறிநந்தனவனம்நன்
பொன்னந்தியநதிகண்டுளமகிழ்ந்தனர்போனார்.

(இ-ள்.) பல் நந்துகள் தரளம் தொகுபந்திகள் படர்—பலசங்குகளும் முத்துகளும் நெருங்கிப் பலபந்திகளாகப் பரவிய, நீர் படு—நீர்நிறைந்தகுளங்களையும், அயல அன்னம் துயில்வதி தண்டலை—அதற்கயலில் அன்னந்துயில்கூர்ந்து தங்கும் சோலைகளையும், அயல்நந்து உறைபுளினம்—அதற்கயலில்சங்குகள் தங்குமணற்குன்றுகளையும் அயல்சின்னம் தரும்மலர் தந்தனசெறிநந்தவனம்—அதற்கயலில பலகுறிகளமைந்த மலர்கள்பூத்த நெருங்கியநந்தனவனங்களையும், அயல்நன் பொன்நந்திய நதிகண்டு—அதற்கயலில் நல்லபொற்கட்டிகள் விளையும் கங்காநதியையுங்கண்டு, உளம்மகிழ்ந்தனர் போனார்—மனமகிழ்ந்து சென்றார்கள்.

பலகுறியென்றது நிறத்தின் வேறுபாடுகளை. அயல்என்பதை இடைநிலைத்தீவக அணியாகக்கொண்டு ஏனையிடங்களிலும் கூட்டுக 7

கால்பாய்வனமுதுமேதிகள்கதிர்மேய்வனகடைவாய்ப்
பால்பாய்வனநறைபாய்வனமலர்வாயளிபடரச்
சேல்பாய்வனகயல்பாய்வனசெங்கான்மடவன்னம்
போல்பாய்புனன்மடவார்படிநெடுநாடவைபோனார்

(இ-ள்.) கால்பாய்வனமுது மேதிகள் — கால்வாயிற் பாய்ந்துழக்கும் பெரிய எருமைக்கடாக்கள், கதிர்மேய்வன கடைவாய் பால்பாய்வன—இளங்கதிர்களை மேய்தலால் கடைவாயினின்றும் அக் கதிரின்பால பாயவும், நறைபாய்வனமலர்வாய் அளிபடர—மதுவுடைந்து பாயும் மலரினிடத்து வண்டுகள்செல்லவும், சேல்பாய்வன கயல்பாய்வன—சேல்பாயவும் கயல்பாயவும், பாய்புனல்—பாய்ந்துசெல்லும் நீர்ப்பரப்பில், செங்கால்மட அன்னம்போல்—செவந்தகாலையுடைய இளமைவாய்ந்த அன்னப்பேடுகள்போல, மடவார்படி நெடுநாடு அவைபோனார்—பெண்கள் நீராடும், நெடிய கங்கைக் கரையைச் சேர்ந்த நாடுகளை அடைந்தார்கள்,

நீர்வளத்தால்அவையுளவாதல'ல் பால்பாய்வன அளிபடரச்சேல்பாய்வன கயல் பாய்வன என்றார். கால் பாய்வன நறை பாய்வன முற்றுகள் பெயரெச்சமாகவும், பின்னுள்ளன செயவெனெச்சமாகவும் வந்தன. மேய்வன என்னும் வினைமுற்றினின்று பிரிந்த தொழிற்பெயர், மூன்றனுருபேற்று நின்றது. 8

கலிவிருத்தம்.

பரிதிபற்றியபல்கலன்முற்றினர்
மருதவைப்பின்வளங்கெழுநாடொரீஇச்
சுருதிகற்றுயர்தோமிலர்சுற்றுறும்
விரிதிரைப்புனற்கங்கையைமேவினார்

(இ-ள்) பரிதிபற்றிய பல்கலன் முற்றினர்—சூரியனொளியைக்கவர்ந்த பல வாபரணங்களால் நிறைந்த இராமமூர்த்தி முதலிய மூவரும், மருதவைப்பின்வளம் கெழுநாடு ஒருவி—மருதநிலத்தின் வளமிக்க கங்கைக்கரையிலுள்ளநாடுகளைக்கடந்து சுருதிகற்று உயர்தோமிலர் சுற்றுஉறும்—வேதங்களைக் கற்றுணர்ந்த குற்றமில்லாத முனிவர்கள் சூழந்த, விரிதிரைபுனல்கங்கையைமேவினர் — விரிந்த அலையையுடைய நீர்மயமாகிய கங்காநதியையடைந்தார்கள்.

அரசமக்களாதலால் பல்கலன் முற்றினரென்றார். 9

கங்கையென் னுங்கடவுட்டிருநதி
தங்கிவைகுந்தபோ தனர்யாவரும்
எங்கள்செல்கதிவந்ததென்றேமுறு
அங்கணாயகற்காணவந்தண்மினார்

(இ-ள்) கங்கை என்னும் கடவுள் திருநதிதங்கி வைகும் தபோதனர் யாவரும் — கங்கையென்று சொல்லப்படும் தெய்வத்தன்மை வாய்ந்த சிறப்பமைந்த நதிக்கரையிற் றங்கிய தபோதனர்களெல்லாரும், எங்கள் செல்கதி வந்தது என்று ஏமுறு—நாங்கள் சென்றடையும் பரமபதம் எளிதாக வந்தருளியதென்று விரும்பி, அங்கண் நாயகன் காணவந்து அண்மினார்—அவ்விடத்து இராமமூர்த்தியைக் காணவந்தார்கள்.

அங்கண்நாயகன் என்பதற்கு அழகிய திருக்கண்களையுடையான் எனப்பொருள்கொள்ளினும் இழுக்காது. திருநதிதங்கி நதி கரைமேல் நிற்றலால விடாத விலக்கணை. எங்கள் யாங்களென்னும் இயல்பின்மேல் நிற்றலால் திரிந்ததின் றிரிபு. 10

பெண்ணினோக்குஞ்சுவையிற்பிறர்பிறர்க்
கெண்ணிநோக்கியியம்பருமின்பத்தைப்
பண்ணினோக்கும்பராவமுதைப்பசுங்
கண்ணினோக்கினருள்ளங்களிக்கின்றார்.

(இ-ள்) பிறர்பெண்ணில் நோக்கும் சுவையில்—பிறர்பெண்களிடத்து நுகர்ந்துணரும் காமச்சுவையினும், எண்ணிநோக்கி பிறர்க்கு இயம்பரும்இன்பத்தை—கருதிப்பார்த்துப்பிறர்க்குச்சொல்லுதற்கரியமேம்பட்ட இன்பத்தினை, பண் இல்நோக்கும் பராவமுதை—இசையிலமைந்த யாவரும் புகழும் அமுதினை, பசுங்கண் இல்நோக்கினர் உள்ளம் களிக்கின்றார்—தமது அரியகட்புலன்களாற் பார்த்துமனங்களிக்கின்றாராயினர்.

காமநுகர்ந்தோர்க்குத் தோன்றுமின்பம் இத்தன்மையதென்றுவாயாற் கூறுதற்கு அரியதுபோல இவரைவழிபட்டு அடைவோர்நுகருமின்பம் பெரிதாகலின்பெண்ணில் நோக்குஞ்சுவையில் பிறர்பிறர்க்கெண்ணிநோக்கியியம்பருமின்பத்தை எனவும், இசைவடிவாய்க் கேட்போர்க்குச் செவிப்புலனால் நுகரும்இன்பத்தைவிளைத்தலால்பண்ணில்நோக்கும்பராவமுதைஎனவும், அருமைபாராட்டிப் "பச்சைப்பிள்ளை" என்றாற்போலத்திரிசயப்படாத பொருளைத்திரிசயப்படக்கண்டு கண்களிகூர்தலால் பசுங்கண்ணினோக்கினருள்ளங்களிக்கின்றார் எனவுங் கூறினார் 11

எதிர்கொடேத்தினரின்னிசைபாடினர்
வெதிர்கொள்கோலினராடினர்வீரனை
கதிர்கொடாமரைக்கண்ணனைக்கண்ணினால்
மதுரவாரியமுதெனமாந்துவார்

(இ-ள்.) வெதிர்கொள் கோலினர்—திரிதண்ட மேந்திய முனிவர்கள், வீரனை கதிர்கொள் தாமரைகண்ணனை—நிகரில்லாதவீரனும்விளக்கம்அமைந்த தாமரைபோலுங் கண்களையுடையவனுமாகிய இராமமூர்த்தியை, எதிர்கொடேத்தினர் இன் இசைபாடினர் ஆடினர்—எதிர்கொண்டு துதித்து இனிய இசைப்பாடி. கண்ணினால்—தமது கட்புலன்களாகியவாய்களால், மதுரவாரி அமுது என்னமாந்துவார்—இனிய பாற்கடலிற்றோன்றிய வமுதினைப்பருகுவதுபோல அவனது பொலிவாகிய அமுதினைப் பருகுவாராயினார்கள்.

வீரனைகதிர்கொள்தாமரைக்கண்ணனைஒருபொருள்மேல்வந்தபலபெயர்.

மனையினீங்கியமக்களைவைகலும்
நினையுநெஞ்சினர்கண்டிலர்தேடுவார்
அனையர்வந்துறவாண்டெதிர்ந்தார்களில்
இனியமாதவப்பள்ளிகொணடெய்தினர்.

(இ-ள்) மனையில்நீங்கிய மக்களை—தமது வீட்டினின்று தப்பியபிள்ளைகளை, வைகலும்நினையும்நெஞ்சினர்கண்டிலர் தேடுவார்—நாடோறும்நினைந்துருகும் மனத்தினையுடையவராய் அம்மக்களைக்காணாதுதேடும் தாய்தந்தைமார் அனையர்வந்துஉறஆண்டுஎதிர்ந்தார்களில்—தப்பிய அப்பிள்ளைகள்தாமேவந்து மனையிலடைய அவ்விடத்துஎதிர்ந்த தாய்தந்தையர்களி கூர்தல்போல இராமமூர்த்தியைக்களிகூர்ந்தெதிர்ந்து இனியமாதவம்பள்ளிகொண்டு எய்தினர்—இன்பம்விளையும் பெரியதவச்சாலையில் கொண்டுவந்து அடைந்தார்கள்.

தமது மனையினின்று தப்பியபிள்ளையை நெடுநாள்காணாது தேடித்திரிவோர்தாமே அப்பிள்ளை வந்தடைய எதிர்ந்து தாய்தந்தையர் கொள்ளுமகிழ்ச்சிக் களவின்மைபோல, தமது மனத்தினிலங்கிய பரம்பொருளைக் காணாது வருந்தித் தேடியுழலும் முனிவர்களுக்கெதிரே, தாமே வந்தடைதலில் எதிர்ந்தார்களில் இனியமாதவப் பள்ளிகொணடெய்தினர் என்றார். 13

பொழியுங்கண்ணிற்புதுப்புனலாட்டினர்
மொழியுமின்சொலின்மொய்ம்மலர்சூட்டினர்
அழிவிலன்பெனுமாரமிர்தூட்டினர்
வழியில்வந்தவருத்தத்தைவாட்டினர்.

(இ-ள்) பொழியும் கண்ணில் புதுபுனல் ஆட்டினர்—இடைவிடாது கண்களினின்றுசொரியும்ஆனந்தபாஷ்பத்தால் நீராட்டி. மொழியும்இன்சொல்லின் மொய்மலர்சூட்டினர்—உபசரித்துக்கூறும் இனியசொற்களாகிய வாடாதமலரைச் சூட்டி, அழிவுஇல் அன்புஎன்னும் ஆரமுது ஊட்டினர்—அழிதலில்லாத தாம்கொண்ட அன்பென்னும் பெறுதற்கரிய அமுதத்தையூட்டி வழியில்வந்தவருத்தத்தைவாட்டினர்—வழியிலடைந்துவந்தமையால் விளைந்தவருத்தத்தைப் போக்கினார்கள்.

அவர்கள் கூறிய இன்சொல்லே மலராயிருத்தலில் இன்சொலின் மொய்ம்மலர் சூட்டினரென்றார். "ஆறுசென்றவெயர்" என்றார்போல வழியில்வந்த வருத்தமெனக்காரணகாரியம் பற்றிவந்தமையில் அவ்வாறுபொருள்கூறினும். ஆட்டினர். சூட்டினர், ஊட்டினர் முற்றெச்சங்கள். இது அகத்தாற்செய்யுமுகமன். 14

காயுங்கானிற்கிழங்குங்கனிகளும்
தூயதேடிக்கொணர்ந்தனர்தோன்றல்நீ
ஆயகங்கையரும்புனலாடினை
தீயையோம்பினைசெய்யமுதென்றனர்.

(இ-ள்.) காயும் கானில்கிழங்கும் கனிகளும் தூயதேடி கொணர்ந்தனர்—சுட்டுவருத்தும்காட்டிலுள்ள கிழங்குகளையும் கனிகளுள்ளும்சுவையையுடைய கனிகளையுந் தேடிககொண்டுவந்து, தோன்றல்நீ—எஙகளுக்கரசாயுள்ளவனேநீ, ஆயகங்கை அரும்புனல ஆடினை—அமைந்த அரிய கங்கையில் நீராடி, தீயைஓம்பினை அமுதுசெய் என்றனர்—நித்தியாக்கினியைவளர்த்து அமுதுசெய்யாயென்றுகூறினர்.

விருந்தினர்க்குஇது புறத்திற்செய்யும் முகமன். 15

மங்கையர்க்குவிளக்கன்னமானையும்
செங்கைபற்றினன்றேவருந்துன்பறப்
பங்கயத்தயன் பண்டுதன்பாதத்தின்
அங்கையிற்றருங்கங்கையினாடினான்

(இ-ள்.) மங்கையர்க்கு விளக்கு அன்னமானையும் செங்கைபற்றினன்—பெண்கள் குலத்துக்கு ஓர்தீபம்போன்ற சானகியாரைத் தனதுசெவந்தகைகளாற்பற்றி, தேவரும் துன்பு அற—தேவர்களும்கொண்டதுன்பத்தினின்று நீங்க. பங்கயத்துஅயன் அங்கையில்—தாமரையில வசிக்கும் பிரமன்தனது கையிலுள்ள கமண்டல நீரால், பண்டு தன்பாதத்தின் தரும் கங்கையின் ஆடினான்—பூர்வசதில் தனதுபாதத்தில் திருமஞ்சனஞ் செய்த கஙகையில் நீராடினான்.

திரிவிக்கிரம வடிவஙகொண்டருளிய காலத்தில் உலகினையளக்கமேலே நீட்டிய திருவடிக்குப்பிரமனாட்டிய திருமஞ்சனநீரேஇவ்வுலகில் கங்கையாய் வந்தமையால் பஙகயத்தயன்பண்டு தன்பாதத்தின் அங்கையிற்றரும் கங்கையினாடினான் என்றார். 16

கன்னிநீக்கருங்கங்கையுங்கைதொழாப்
பன்னிநீக்கருமபாதகம்பாருளோர்
என்னின்நீக்குவர்யானுமினறெந்நதை
உன்னின்நீங்கினனுய்ந்தனனியானென்றான்.

(இ-ள்) கன்னிநீக்கரும் கங்கையும் கைதொழா பன்னி—கன்னித்தன்மையினின்று நீங்குதலில்லாத கஙகையுங் கைகூப்பி வாழ்த்தி, பாருள்ளோர் நீக்கு அரும்பாதகம் என்னின் நீக்குவர்—உலகிலுள்ளோர் நீராடித்தமதுநீக்குதற்கரியபாதகத்தைஎன்னால் நீங்கிப்போக்கிக்கொள்ளுவர், யானும்—நானும், இன்று

என்தந்த உன்னின்—இப்போது என்னைப்பெற்றவுன்னால், யான் நீக்கினன் உய்ந்தனன் என்றான்—யான் அடைந்தபாதகத்தை நீக்கிப்பிழைத்தேன் என்றுகூறினான்.

திருவடியிற் றோன்றினமையால் எற்றந்தவுன்னினெனவும், அவர்கள் பாதகத்தை யேற்றுப் புண்ணியம் தந்தமையால்மேற்கொண்ட அப்பாதகத்தைநீக்கினன் எனவுங்கூறினார். (17)

வெங்கணாகக் கரத்தினன் வெண்ணிறக்
கங்கைவார்சடைக்கற்றையன் கற்புடை
மங்கைகாண நின்றாடுகின்றான் வகிர்த்
திங்கள்சூடியசெல்வனிற்றோன்றினான்.

(இ-ள்.) கற்புடைய மங்கைகாண நின்று ஆடுகின்றான்—கற்பினையுடைய சானகியார் காணநின்று நீராடுகின்ற இராமமூர்த்தி, வெம்கண் நாகம் கரத்தினன்—கொடிய கண்களையுடைய சர்ப்பகங்கணத்தை யணிந்த திருக்கரத்தையுடையவனும், வெள்நிறம் கங்கைவார் சடைகற்றையன்—வெள்ளிய நிறம்வாய்ந்த கங்கையை யணிந்த நீண்டசடை நெருக்கத்தையுடையவனுமாகிய, வகிர்திங்கள் சூடிய செல்வனில் தோன்றினான்—பிளவுபட்ட சந்திரனைச் சூடிய சிவபெருமானைப்போல யாவருக்கும் புலப்பட்டருளினன்.

சடாமுடியையுடைய இராமமூர்த்தி கங்கையினீராடுதலால் கங்கையைச் சூடிய சிவபெருமானைப்போலத் தோன்றினனென்றார். (18)

தள்ளுநீர்ப்பெருங்கங்கைத் தரங்கத்தால
வள்ளிநுண்ணிடைமாமலராளொடும்
வெள்ளிவெண்ணிறப்பாற்கடன் மேலைநாள்
பள்ளிநீங்கியபான்மையிற்றோன்றினான்.

(இ-ள்.) தள்ளும்நீர்பெருங்கங்கை தரங்கத்தால்—மணிகளையொதுக்கும் நீர்மயமாகிய பெரிய கங்கையின் அலையிடையில் (சானகியாரோடு நிற்றலால்,) வள்ளிநுண் இடைமாமலராளொடும்—கொடிபோலு நுண்ணிய இடையையுடைய பெருமைவாய்ந்த தாமரைமலரில் வசிக்கும் பெரிய பிராட்டியோடும், வெள்ளி வெள்நிறப் பாற்கடல்—வெள்ளியைப்போலும் வெள்ளிய நிறம்வாய்ந்த பாற்கடலில், மேலைநாள் பள்ளிநீங்கிய பான்மையில் தோன்றினான்—முன்னாளில் கூறும் அறிதுயிலினின்று நீங்கிய தன்மையைப்போல யாவர்க்கும் புலப்பட்டருளினான்.

வெள்ளிய கங்கையில் சானகியாரோடு நிற்றலால் வெள்ளிய பாற்கடலில் அறிதுயினீங்கிநின்ற திருமால்போலென்றார் (19)

வஞ்சிநாணவிடைக்குமடநடைக்
கஞ்சியன்னமொதுங்கவடியன்ன
கஞ்சநீரொளிப்பககயலுகப்
பஞ்சிமெல்லடிப்பாவையுமாடினாள்.

(இ-ள்.) இடைக்கு வஞ்சிநாண—இடைக்கு வஞ்சிக்கொடி நாணவும் அன்னம்மடநடைக்கு அஞ்சிஒதுங்க—தள்ளாடி நடக்கும் நடைக்கு அன்னம்

கங்கையார்க்கொருங்காளிந்தி தன்னொடும்
பொங்குநீர்ச்சுழிபோவனபோன்றவே

(இ-ள்) மங்கை வார் குழல்கற்றை மழைக்குலம்—சாநகியாரது நீண்ட கூந்தல் நெருக்கமாகிய மேகசாலமானது, தங்குநீர் இடை தாழ்ந்து குழைப்பன—தங்கியகங்கைநீரில்தாழ்ந்துகுழைதல், கங்கை ஆறொடுகாளிந்தியொடும்—கங்கைநதியோடு கலந்தகாளிந்திநதியோடும், பொங்கிநீர்சுழி போவனபோன்ற—பெருகியநீர் சுழித்துப்போதலை யொத்திருந்தன.

உம்மை இரண்டனுள் முன்னின்ற உம்மையை அசைநிலையாக்கிப் பின்னின்ற வும்மையை இறந்ததுதழீய எச்சவும்மையாகக்கொள்க. குழைப்பன போவன என்னும் வினைப்பெயர்கள்தொழிற்பெயர்மேல்நின்றன. காளிந்தி கருநிறமுடைமையால் கூந்தல்நீரில் வீழ்ந்து குழைதலைப்பொங்குநீர்ச் சுழி போவனபோன்ற என்றார் (23)

சுழிபட்டோங்கியதூங்கொலியாற்றுத்தன்
விழியிற்சேலுகள்வானிறவெள்ளத்து
முழுகித்தோன்றுகின்றான்முதற்பாற்கடல்
அழுவத்தன்றெழுவாளெனவாயினாள்.

(இ-ள்.) சுழிபட்டு ஓங்கிய ஒலி தூங்கு ஆறு—சுழித்தோங்கிய வொலி மிக்ககங்கைநதியில், தன் விழியில்சேல்உகள்—தனது கண்களைப்போலச் சேற்கண்டைகள்தாவும், வால்நிற வெள்ளத்துமுழுகி தோன்றுகின்றாள்—வெள்ளிய நிறத்தையுடையவெள்ளத்தில் மூழுகிமேலெழுந்த சாநகியார், முதல்பாற்கடல் அழுவத்துஅன்று எழுவாள்என்ன ஆயினாள்—முன்பு பாற்கடற்பரப்பில் அக்காலத்து எழுந்தவளைப்போலானாள்.

பாற்கடலில் முன்புதோன்றுதலால் பாற்கடலழுவத்தன் றெழுவாளென்னஆயினாளென்றார். கங்கைவெண்ணிறமுடைமையால்பாற்கடலென்றார் இது பண்புபற்றிய உவமையணி. (24)

செய்யதாமரைத்தாள்பண்டுதீண்டலால்
வெய்யபாதகந்தீர்ந்துவிளங்குவாள்
ஐயன்மேனியெலாமளைந்தாலினி
வையமாநரகத்திடைவைகுமே.

(இ-ள்) செய்ய தாமரைதாள் பண்டுதீண்டலால்—இறைவனது தாமரைபோன்ற திருவடியைமட்டும் முன்புபரிசித்தலால், வெய்யபாதகம் தீர்ந்து விளங்குவாள்—(தன்னிடத்து நீராடுவோரது) கொடியபாதகத்தை யொழித்து விளங்குங்கங்கையானவள், அய்யன்மேனிஎல்லாம் அளைந்தால்—அவ்விறைவன திருமேனிமுழுவதும் தீண்டினால், இனிவையம்மாநரகத்து இடை வைக்கும் ஏ— இனித்தன்னிடத்து நீராடும் நிலவுலகிலுள்ளோர்பெரியநரகத்தில்வசிப்பார்களா (வசியாரென்றபடி.)

துறைநறும்புனலாடிச்சுருதியோர்
உறையுளெய்தியுணர்வுடையோருணர்
இறைவற்கைதொழுதேந்தெரியோம்பிப்பின்
அறிஞர்காதற்கமைவிருந்தாகினான்

(இ-ள்.) துறை நறும்புனல் ஆடி—கங்கைத்துறையில் நறுமணங்கமழும் நீராடி, சுருதியோர் உறையுள் எய்தி—வேதத்தையோதியுணர்ந்த அந்தணரது பன்னசாலையை யடைந்து, உணர்வுஉடையோர் உணர்—அறிவுடையோருணரும், இறைவன் கைதொழுது—இறைவனைக் கைகூப்பி, ஏந்துஎரி ஓம்பி—நித்தியவேள்வியை வளர்த்து, பின் அறிஞர்காதற்கு அமைவிருந்து ஆகினான்—பின்பு அவ்வந்தணரது விருப்பிற்கமைந்த விருந்தாயமைந்தார்.

மூன்றாம் நிலையையுடையமுனிவர்கள் தீயோம்புதல்முறையாதலால்எரியோம்பியெனவும்,நேற்றுவளர்த்ததீயென்பதுதோன்றஏந்துஎனவுங்கூறினார்.

வருந்தித்தான் றரவந்தவமுதையும்
அருந்துநீரென் றமரரையூட்டினான்
விருந்துமெல்லட குண்டுவிளங்கினான்
திருந்தினார்வயிற் செய்தனதேயுமோ.

(இ-ள்.) தான்வருந்திதர—தான்மந்திரகிரியைத் தாங்கிக்கடைய, வந்த அமுதையும் நீர் அருந்தும் என்று—தோன்றிய வமுதத்தையும் நீங்கள் பருகுமென்று, அமரரைஊட்டினான்—தேவர்களுக்குமுன்னூட்டிய இராமமூர்த்தி விருந்துமெல் அடகுஉண்டு விளங்கினான்—முனிவரர் இன்று விருந்தாகத்தந்த ஓடதியென்னுமூலிகையையுண்டு பொலிந்துதோன்றினான், திருந்தினார்வயின் செய்தனதேயும் ஓ—அறிவாற்சிறந்த பெரியோரிடத்துக் காலத்தாற்செய்த நன்றிகள் ஒருகாலத்துந் தேயுமா (தேயாது என்றபடி.)

திருப்பாற்கடலைத் தேவாசுரர்கள் கடையுங்கால் மத்தாயுள்ள மந்திரகிரி அக்கடலுளாழுந்தத்திருமால் மச்சாவதாரங்கொண்டுதனது ஆயிரந்திருக்கரங்களால் கடைந்தருளினமையின் வருந்தித்தான்தரஎனவும், கடைதலாலெழுந்த வமுதினைத்தேவர்களுக்குப்பரிந்தூட்டினமையால் வந்தவமுதையும் அருந்தும்நீரென்றமரரையூட்டினானெனவும், அங்குவந்த முனிவர்களுக்குப் பாலைத்தயிராக்கும்புரையாயிருந்த ஓடதியென்னுமூலிகையைஅன்று அங்குப்பகிர்ந்துஅவர்களுக்குத் தந்தமையால் இன்றுஅந்த மூலிகையையவர்கள் கைம்மாறாகத் தந்தமையால் விருந்துமெல்லடகுண்டு விளங்கினான் எனவும், பின்சொல்லப்பட்ட செய்தனதேயா என்னும் பொருளால் முன்சொல்லப்பட்ட வர்ணியமாகிய சிறப்புட்பொருளைச் சாதித்தற்குவேற்றுப்பொருள்வைப்பணிதந்து கூறினமையால் திருந்தினார் வயிற்செய்தனதேயுமோ எனவும் கூறினார். (27)

ஆயகாலையி னாயிரமம்பிக்கு
நாயகன் போர்க்குகனெனு நாமத்தான்
தூயகங்கைத் துறைவிடுந் தொன்மையான்
காயும்வில்லினன் கற்றிரள்தோளினான்.

(இ-ள்.) ஆயகாலையில்—இவ்வாறமைந்த காலத்தில், ஆயிரம் அம்பிக்கு நாயகன்—ஆயிரம்படகுகளுக்குத் தலைவனாயுள்ள, போர்குகன் என்னும்நாமத்தான்—போர்த்தொழிலில் வல்லகுகனென்னும்பெயரையுடையான், தூயகங்கை துறைவிடும்தொன்மையான்—புனிதமாகியகங்கைக்கடத்தி அக்கரை

னுள்ள துறையிற்கொண்டுபோய்விடும் தொன்று தொட்டுள்ள வாழ்க்கையை யுடையவனும், காயும் வில்லினன்—வருத்தும் வில்லினையேந்தினவனும், கல்திரள் தோளினான்—கல்லைப்போலத் திரண்ட தோளையுடையவனும்.

வழிச்செல்வாரைக் கங்கையினின்றுங்கரையேற்றி அக்கரையில் விடுந்தொழிலினனாதலால் தூயகங்கைத்துறைவிடுந் தொன்மையான் எனக்கூறினார். (28)

துடியனாயினன் தோற்செருப்பார்த்தபேர்
அடியனற்செறிந்தன்னநிறத்தினான்
நெடியதானைநெருங்கலினீர்முகில்
இடியினோடெழுந்தாலன்னவீட்டினான்.

(இ-ள்.) துடியன்—உடுக்கையையுடையவனும், நாயினன்—நாய்க்கூட்டத்தையுடையவனும் தோல்செருப்பு ஆர்த்தபேர் அடியன்—தோலாலமைந்தசெருப்பைத்தொடுத்த பெரியகாலையுடையவனும், அல்செறிந்தாலன்ன நிறத்தினான்-இருட்படலம் ஓரிடத்திற்சிறந்து விளங்கினாற்போலநிறத்தையுடையவனும், நெடிய தானை நெருங்கலின்—அளவிறந்த வேட்டுவச்சேனைதன்னுடனெருங்கலால், நீர்முகில் இடியினோடு எழுந்தால் அன்னஈட்டினான்—கடனீர் பருகிய மேகம் இடியோடெழுந்தாலொத்த பெருமையையுடையவனும்.

ஈடு-பெருமை. தானை நெருக்கிலெழுந்தவோசை இடியாகவும், குகன் நீர்கொண்டமேகமாகவும் கூறுதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. (29)

கொம்புதுத்தரிகோட்டுமுறைமையன்
பம்பைபம்புபடையினன் பல்லவத்
தம்பனம்பிக்குநாதனழிகவுள்
தும்பியீட்டம்புரைகிளைசுற்றத்தான்

(இ-ள்.) கொம்பு துத்தரி கோட்டும் முறைமையன்—கொம்பையுந்துத்தரியையும் ஊதும் முறைமையையுடையவனும், பம்பை பம்பு படையினன்—பம்பையென்னும் வாச்சியமுடையவனும், பல்லவத்து அம்பன்—அளவில்லாத அம்பையுடையவனும், அம்பிக்கு நாதன்—படகுக்குத்தலைவனும், அழிகவுள் தும்பி ஈட்டம் புரைகிளை சுற்றத்தான்—மதத்தாலழியும் கபோலத்தையுடைய யானை கூட்டத்தை யொத்த சுற்றத்தையுடையவனும்

பல்லம் ஓரெண். வப்பிரத்தியன் பெற்றுப்பல்லவமென நின்றது. (30)

காழமிட்டகுறங்கினன் கங்கையின்
ஆழமிட்டநெடுமையினானரை
தாழவிட்டசெந்தோலன் தயங்குறச்
சூழவிட்டதொடுபுலிவாலினான்.

(இ-ள்.) காழம் இட்ட குறங்கினன்—சல்லடம்தொடுத்த தொடையையுடையவனும், கங்கையின் ஆழம் இட்ட நெடுமையினான்—கங்கையின் ஆழங்கண்டநீண்டவுருவத்தையுடையவனும், அரைதாழவிட்ட—இடையினின்றும் தாழவிட்ட, செந்தோலன்—செவந்ததோலாடையையுடையவனும், தயங்குஉறசூழவிட்டதொடுபுலிவாலினான்—இதன்மேல் விளங்கும்படி கச்சாகத்தொங்கவிட்டவஞ்சமமைந்த கொலைத்தொழிலையுடையபுலியின் வாலையுடையவனும்

தொடையளவுஞ்சல்லடமுடைமையால்-காழமிட்ட குறங்கினனென்றார்

பற்றொடுத்தன்னபல்சூழ்கவடியன்
கற்றொடுத்தன்னபோலுங்கழலினான்
அற்றொடுத்தன்னகுஞ்சியனாளியின்
நெற்றொடுத்தெரிந்தபுருவத்தான்.

(இ-ள்.) பல்தொடுத்தால் அன்னபல்சூழ் கவடியன்—பல்லினைநிரையாகத் தொடுத்தாலொத்த சூழ்கொண்ட பற்கோவையையுடையவனும், கல்தொடுத்தால் அன்னபோலுங்கழலினான்—மலையைத்தொடுத்தாலொத்த கட்டிய வீரகண்டையையுடையவனும், அல்தொடுத்தால் அன்ன குஞ்சியன்—இருளைத் தொடுத்தாலொத்த சிகையையுடையவனும், ஆளியின்—ஆளியைப்போல, நெல்தொடுத்து எரிந்த புருவத்தான்—நெற்கதிர்போலமைந்த எரிந்த புருவத்தையுடையவனும்.

கல்லாலமைந்த கண்டையையுடையோனாதலால் கற்றொடுத்தன்ன என்றார். கல்என்னும் ஒலிக்குறிப்பையே ஒருருவாகத் தொடுத்தாலன்ன எனப் பொருள் கொள்ளுதலுமொன்று. (32)

பெண்ணைவன்செறும்பிற்பிறங்கிச்செறி
வண்ணவன்மயிர்வார்ந்துயர்முன்கையன்
கண்ணகன்றடமார்பென்னுங்கல்லினான்
எண்ணெயுண்டவிருள்புரைமேனியான்.

(இ-ள்.) பெண்ணை வன் செறும்பில்—பனையினது வலியசெறும்பைப்போல, பிறங்கிசெறி வண்ணம் வன்மயிர்வார்ந்து உயர்முன்கையன், விளங்கிச் செறிந்த செந்நிறம்வாய்ந்தவலியமயிர்நீண்ட முன்கையையுடையவனும், கண்அகன் தடம்மார்பு என்னும் கல்லினன்—இடம்பரந்த பெரியமார்பு என்னுங் கல்லையுடையவனும், எண்ணெய் உண்ட இருள்புரைமேனியன்—எண்ணெயின் பசைவாய்ந்தஇருளையொத்த மேனியையுடையவனும்.

செறும்பு பனைமரத்தின்மேலுள்ள பொருக்கு. அது இக்காலத்தில் செதும்பென வழங்கும். (33)

கச்சொடார்த்தகறைக்கதிர்வாளினன்
நச்சராவினடுக்குறுநோக்கினன்
பிச்சராமன்னபேச்சினனிந்திரன்
வச்சிராயுதம்போலுமருங்கினன்

(இ-ள்.) கச்சுஒடு ஆர்த்த கறைகதிர்வாளினன்—கச்சோடு கட்டிய உதிரந்தோய்ந்த வுடைவாளையுடையவனும், நஞ்சுஅராவின்நடுக்குறுநோக்கினன்-நஞ்சினையுடைய பாம்பைப்போலப் பார்ப்போர்க்கு நடுக்கத்தையுறுத்தும் பார்வையையுடையவனும், பிச்சர்ஆம்அன்ன பேச்சினன்—பிச்சினையுடையோரையொத்த பேச்சினையுடையவனும், இந்திரன் வச்சிராயுதம்போலும் மருங்கினன்—தேவேந்திரனேந்தியவச்சிராயுதத்தையொத்த இடையையுடையவனும்.

இந்திரன் வச்சிராயுதம் இடைபோலச் சுருங்கியிருத்தலால் பெண்கள் இடைக்கு ஒப்புக்கூறுதலொன்று. இங்குக் கூறியது வன்மைநோக்கி யேற்ற

லால்வச்சிராயுதம்போலு மருங்கினான் எனவும், பித்தர்பேசும் வார்த்தை முன்னும் பின்னும் முரணுதல்போல இவன்வார்த்தையும் முரணுதலால் பித்தரன்னபேச்சினனெனவுங் கூறினார். (34)

ஊற்றமெய்ந்நறவுடனொடுமீனுகர்
நாற்றமேயநகையின்முகத்தினன்
சீற்றமின்றியுந்தீயெழநோக்குவான்
கூற்றமஞ்சக்குமுறுங்குரலினான்

(இ-ள்.) ஊற்றம்மெய்ந்நறவு ஊனொடுமீன் நுகர — ஊக்கும் மயக்கமமைந்த மதுவினையும் ஊனையும் மீனையும் நுகர்தலால, நாற்றம்மேய நகை இல்முகத்தினன் — புடைநாற்றமமைந்த ஒளியில்லாத முகத்தையுடையவனும், சீற்றம் இன்றியும் தீ எழநோக்குவான் — கோபமில்லாமலும் நெருப்பு பறக்கப்பார்க்கின்றவனும், கூற்றம் அஞ்சக் குமுறும் குரலினான் — இயமனஞ்சும் குரலினையுடையவனும்.

சிருங்கிபேரமெனத்திரைக்கங்கையின்
மருங்குதோன்றுநகருறைவாழ்க்கையான்
ஒருங்குதேனொடுமீனுபகாரத்தன்
இருந்தவள்ளலைக்காணவந்தெய்தினான்

(இ-ள்.) சிருங்கிபேரம் என்ன — சிருங்கிபேரமென்று, திரைகங்கையின் மருங்குதோன்றும் நகர் உறைவாழ்க்கையான் — அலையையுடைய கங்கையின் கரைப்பக்கத்திற்றோன்றும் நகரில்வாழும் வாழ்க்கையையுடையவனும், ஒருங்கு தேனொடுமீன் உபகாரத்தன் — ஒருசேரத் தேனையும் மீனையும் வந்தவிருந்தினர்க்கு உபசரிக்கும் உபகாரத்தையுடையவனுமாகிய குகன், இருந்தவள்ளலை காணவந்து எய்தினான் — அங்கிருந்தருளிய இராமமூர்த்தியைக்காண வந்தடைந்தான்.

வந்த விருந்தினரையுபசரிக்கும் இல்வாழ்க்கையையுடையவன் என்பார் உபகாரத்தன் என்றார் ஆயகாலையின் என்னுஞ் செய்யுள் தொடங்கி இச்செய்யுள் காறுங்குளகமாதலால் ஒருபொருள்மேல்வந்த பல்பெயரென்பதுதோன்ற எய்தினான் என ஒருவினை கொடுத்துக் கூறினார். (36)

சுற்றமப்புறநிற்கச்சுரிகையை
விற்றுறந்தரைவீக்கியவாளொழித்து
குற்றநீத்தமனத்தினனன்பினன்
நற்றவப்பள்ளிவாயிலைநண்ணினான்.

(இ-ள்) சுற்றம் அப்புறம்நிற்க — தனது உறவினர் அப்பால்நிற்க, சுரிகை விற்றுறந்து — சுட்டுவருத்தும் அம்பினையுடைய வில்லைக்கைவிட்டு, அரை வீக்கியவாள் ஒழித்து — இடையிற்கட்டிய உடைவாளையொழித்து, குற்றம் நீத்தமனத்தினன் — குற்றத்தினின்றும் நீங்கிய மனத்தையுடையவனும், அன்பினன் — அன்பினையுடையவனுமாகிய குகன், நற்றவப்பள்ளிவாயிலை நண்ணினான் — இராமமூர்த்தியினது தவச்சாலையின் வாயிலைவந்தடைந்தான்.

இராமமூர்த்தியின் கால்கீழ்ச் சரண்புகுந்தவனென்பதுதோன்றச் சுற்றமப்புறநிற்கவெனவும், ஏவிய ஏவலைச்செய்ய வந்தவனென்பதுதோன்ற அரை

வீக்கிய வாளொழித்து எனவும், அவ்வேலையை மூட்டின்றி முடிப்போனென்பதுதோன்ற- அற்றநீத்த மனத்தினன் எனவுங் கூறினார். (37)

கூவாமுன்னமிளையோன் குறுகிநீ
ஆவானாரெனவன்பி னிறைஞ்சினான்
தேவாநின்கழல் சேவிக்கவந்தனென்
நாவாய்வேட்டுவ னாயடியேனென்றான்

(இ-ள்.) கூவாமுன்னம் இளையோன் குறுகி—(வாயிலையடைந்து) கூவுதற்குமுன்னமே இளையபெருமாள் சென்று, நீ ஆவான் யார் என்ன—நீ யாவன் யார் என்றுவினவ, அன்பின் இறைஞ்சினான்-அன்போடுவணங்கி, தேவா நின் கழல் சேவிக்க வந்தனென்—தேவனே உனது திருவடியைச் சேவிக்கவந்தேன், நாய் அடியேன் நாவாய் வேட்டுவன் என்றான்—நாயிற்கடைப்பட்ட அடியேன் படகோட்டும் வேடனென்று கூறினான்.

அவனது உருவத்தினின்றுந் தோன்ற ஆவானென்ன ஒருமைப்பாலிலும் அவனது அன்பின் பொலிவுதோன்ற யாரெனப் பன்மைப்பாலிலும் வினவினாராதலால் ஆவான்யாரென்று வினவினார் யாரென்பதில் ஆகாரங்கெடுதல் புணர்ச்சியில் விகாரம். (38)

அறுசீர்க்கழிநெடிலடிவிருத்தம்.

நிற்றியீண் டென்றுபுக்கு நெடியவற் றொழுது தம்பி
கொற்றவநின்னைக்காணக் குறுகினனிமிர்ந்தகூட்டச்
சுற்றமுந்தானுமுள்ளந் தூயவன்றாயினல்லான்
எற்றுநீர்க்கங்கைநாவாய்க் கிறைகுகனொருவனென்றான்.

(இ-ள்.) ஈண்டுநிற்றியென்றுபுக்கு—இவ்விடத்தில் நிற்பாயென்றுபன்னசாலையிற் புகுந்து, தம்பிநெடியவன்தொழுது—இளையபெருமாள் இராமமூர்த்தியைவணங்கி, கொற்றவநின்னைகாணக் குறுகினன்—அரசனேயுன்னைத்தரிசிக்க வந்தான், நிமிர்ந்த சுற்றக்கூட்டமும் தானும் உள்ளந்தூயவன்—மிக்க சுற்றப்பரப்பும் தானும் மனந்தூய்மையையுடையான், தாயின்நல்லான்—தாயினுமுருகிய அன்பினையுடையவன், எற்றுநீர் கங்கைநாவாய்க்கு இறைகுகன் ஒருவன் என்றான்—கரையொடுமோதும்நீர்மயமாகியகங்கையிற்செலுத்தும்படகுகளுக்குத்தலைவனும் குகனென்னும் பெயரினையுடையவனும்உடையான் யான்ஒருவன் என்று கூறினான்.

"தோழியுந்தானும்வந்தாள்." என்றார்போலச் சுற்றமுந்தானுந் தூயவனெனவிரவாதெண்ணிஒருமுடிபு தந்தது தலைமைபற்றிவந்த மரபுவழுவமைதியெனவும், உள்ளந் தூயவனென்றது உயர்திணையோடுசேர்ந்த அஃறிணையுயர்திணைமுடிபேற்றுவந்த வழுவமைதியெனவுங்கொள்க.

அண்ணலும்விரும்பியென்பா லழைத்திநீயவனையென்றான்
பண்ணவன்வருகவென்னப் பரிவினன்விரைவிற்புக்கான்
கண்ணனைக்கண்ணினோக்கிக் கனிந்தனனிருண்டகுஞ்சி
மண்ணுறப்பணிந்துமேனி வளைத்துவாய்புதைத்துநின்றான்.

(இ-ள்.) அண்ணலும் விரும்பி நீ என்பால் அவனை அழைத்தி என்றான்—இராமமூர்த்தியும்விரும்பி நீ என்னிடத்தில்அக்குகனை அழைப்பாய்என்று அரு

வினான், பண்ணவன் வருக என்ன—இளையபெருமாளும் நீவரக்கடவாய் என்று கூற, பரிவினன் விரைவில் புக்கான்—குகன் அன்பினனாய் விரைந்து சென்று, கண்ணனைக் கண்ணில் நோக்கி-கரியநிறத்தையுடைய ராமமூர்த்தியைக் கண்களாற் கண்டு, கனிந்தனன்-மனங்கனிந்து, இருண்டகுஞ்சிமண் உறப் பணிந்து மேனிவளைத்து வாய்புதைத்து நின்றான்—இருணிறம்வாய்ந்த சிகை மண்ணிற்றோயப்பணிந்து தனதுமேனியை வளைத்து வாய்பொத்திக் குகன் நின்றான்.

கிருஷ்ணன் என்றது கண்ணன் எனவந்தது பிராகிருதச் சிதைவு. (40)

இருத்தியீண் டென்னலோடு மிருந்திலனெல்லைநீத்த
அருத்தியன் றேனுமீனு மமுதினுக் கமைவதாகத்
திருத்தினென் கொணர்ந்தே னென்கொல் திருவுளமென்ன வீரன்
விருத்தமாதவரை நோக்கி முறுவலன் விளம்பலுற்றான்.

(இ-ள்) ஈண்டு இருத்தி என்னலோடும்—இவ்விடத் திருப்பாயென்று விடைதந்தருள, எல்லைநீத்த அருத்தியன் இருந்திலன்—அளவுகடந்தவிருப்பமுடையோனிராது, தேனும்மீனும் அமுதினுக்கு அமைவதுஆக திருத்தினென்கொணர்ந்தேன்—தேனும் மீனும் திருவமுதினுக்கமையத் திருத்திக்கொண்டுவந்தேன், திருவுளம் எனகொல் என்ன—தேவரீர் திருவுளம்யாதென்று குறையிரந்துகூற, வீரன்—இராமமூர்த்தி, விருத்தமாதவரைநோக்கி-தொன்றுதொட்டுள்ள பெருமைவாய்ந்த தவத்தையுடை முனிவர்களைநோக்கி, முறுவலன் விளம்பலுற்றான்—புன்னகைசெய்து கூறத்தொடங்கினார்.

திருவுளத்திற் கமையுமோ என்பான் என்கொல் திருவுளம் என்னவென்றான். இருந்திலன், திருத்தினன் முற்றெச்சங்கள். (41)

அரியதா முவப்ப வுள்ளத் தன்பினா லமைந்தகாதல்
தெரிதரக் கொணர்ந்த தென்றா லமிர்தினுஞ் சீர்த்த தன்றே
பரிவினிற் றழீஇய வென்னிற் பவித்திர மெம்மனோர்க்கும்
உரியன வினிதி னாமு முண்டன மன்றே யென்றான்.

(இ-ள்.) உவப்ப—நாம்மகிழ்கூர, உள்ளத்துஅன்பின்ஆல் அமைந்தகாதல் தெரிதரகொணர்ந்தது—மனத்தில் முளைத்த அன்பாலமைந்த விருப்புப் புலப்பட நீ கொண்டுவந்தபொருள், அரியதுஆம்—அரியதாகும், என்றால்—ஆனால், அமிர்தினும் சீர்த்தது அன்றே—அது தேவருணவினுஞ் சிறந்ததல்லவா, பரிவினில் தழீஇய என்னில்—அன்போடு அதனை அங்கீகரித்த என்னைப்பார்க்கிலும், எம்மனோர்க்கும்உரியனபவித்திரம்—எம்போலியராகிய இம் முனிவரர்க்கு முரியனவாய்ப் புனிதமாகும், (ஆகலால்) இனிதினில் நாமும் உண்டனம் அன்றோ என்றான்—இனிதாகநாமுங் கைதொட்டோமல்லவா என்று இராமமூர்த்தி கூறியருளினான்.

அன்பின் காரியம் ஆசையாதலால் அன்பினாலமைந்த காதலெனவும், நீ விருந்தாகக் கொண்டுவந்த தேனும்மீனும் அன்போடமைந்த ஆசைப்பாட்டாலாதலால் அன்பினாலமைந்தகாதல் தெரிதரக்கொணர்ந்த தெனவும், அன்போடியைந்தது அரியதாதலால் அரியதாமெனவுங் கூறினார். (42)

சிங்கவேறனையவீரன் பின்னருஞ்செப்புவான்யாம்
இங்குறைந்தெறிநீர்க்கங்கையேறுதும்நாளையாணர்
பொங்குநின்சுற்றத்தோடும்போயுவந்தினிதுன்னூரில்
தங்கிநீநாவாயோடுஞ்சாருதிவிடியலென்றான்.

(இ-ள்.) சிங்கஏறு அனையவீரன் பின்னரும் செப்புவான்—ஆண்சிங்கத்தையொத்த இராமமூர்த்திபின்னுங் கூறியருளுவார், யாம்இங்குஉறைந்து—யாம்இன்று இங்குவசித்து, நாளைஎறிநீர்கங்கை ஏறுதும்—நாளைக்கு அலைவீசும் நீர்மயமாகியகங்கையைக் கடக்கப்படகில் ஏறுவோம், யாணர்பொங்கு நின் சுற்றத்தோடும்போய் உவந்து இனிதில் உன்னூரில் நீதங்கி—என்றும் புதுமை விளைக்கும் உனதுஉறவினரோடும் இன்றுபோய் மகிழ்கூர்ந்துஇனிதாக உன் ஊரில் நீதங்கி, நாவாயோடும் விடியல்சாருதி என்றான்—படகுகளோடும் நாளைக்குவிடியற்போதில் வருவாயென்று கூறியருளினார்.

அன்புதழுவிய சுற்றமென்பார் யாணர்பொங்கும் நின்சுற்றத்தோடும் என்றார். (43)

கார்குலாம்நிறத்தான்கூறக்காதலனுணர்த்துவானிப்
பார்குலாஞ்செல்வநின்னையிங்ஙனம்பார்த்தகண்ணை
ஈர்கிலாக்கள்வனேன்யானின்னலினிருக்கைநோக்கித்
தீர்கிலேனுனதையசெய்குவனடிமையென்றான்

(இ-ள்.) கார்குலாம் நிறத்தான் கூற—மேகம்போலுங் கரியநிறத்தையுடைய இராமமூர்த்திகூறியருள, காதலன் உணர்த்துவான்—மிக்கவிருப்பத்தையுடையகுகன்கூறுவான் இபார்குலாம் செல்வ—இந்நிலவுலகுகொண்டாடும் அருட்செல்வத்தையுடையவனே, இங்ஙனம்நின்னைபார்த்தகண்ணை ஈர்கிலாதகள்வனேன்யான்—இவ்விடத்து நின்னைத்தரிசித்தகண்களைப்பேர்க்காத கள்வனாகியயான், இன்னலின் இருக்கைநோக்கி தீர்கிலேன்—துன்பத்தோடு எனதூரைநோக்கி உன்னினின்று பிரிந்துசெல்கேன், அடிமை-யானே உனக்கடிமை ஆனது செய்குவன் ஐயஎன்றான்—உனது திருவடிக்கமைந்த தொழும்பினை ஐயனேசெய்து இங்கிருப்பேனென்று கூறினான்.

அரசக்கோலத்தைக் கைவிட்டுத் தவக்கோலத்தால் பொலிவிழந்த நின் றிருக்கோலத்தைக் கண்டும் அக்கண்ணைப்பேர்க்காது நின்றவன்னெஞ்சினனென்பான் ஈர்கிலாக் கள்வனேன்யான் என்று கூறினான். (44)

கோதைவிற்குரிசிலன்னான்கூறியகொள்கைகேட்டான்
சீதையைநோக்கித்தம்பிதிருமுகநோக்கித்தீராக்
காதலனாகுமென்றுகருணையின்மலர்ந்தகண்ணன்
யாதினுமினியநண்பவிருத்தியீண்டெம்மோடென்றான்.

(இ-ள்.) கோதைவில் குரிசில்—முன்கைத்தோற்கட்டியவில்லினையேந்தியஇராமமூர்த்தி, அன்னான்கூறியகொள்கைகேட்டான்—அக்குகன்சொன்னசொல்லைக் கேட்டு சீதையை நோக்கிதம்பி திருமுகம்நோக்கி—சானகியாரைப்பார்த்து இளையபெருமாள் திருமுகத்தையும் பார்த்து, தீராதகாதலன் ஆகும் என்றுகருணையின் மலர்ந்தகண்ணன்—நம்மிடத்து நீங்காத விருப்புடையனேயென்ற கிருபையோடு மலர்ந்தருளிய கண்களையுடையவனாய்,

யாதினும் இனியநண்ப—எப்பொருளினும் இனியநண்பனே, எம்மொடுஈண்டு இருதியென்றான்—எம்மோடு இவ்விடத்திருப்பாயென்றருளினன்.

கேட்டான் வினைமுற்றெச்சம். கண்ணன் குறிப்புமுற்றெச்சம். (45)

திருநகர்தீர்ந்தவண்ணமானவதெரித்தியென்னப்
பருவரல்தம்பிகூறப்பரிந்தவனடையுமெய்தி
இருகணீரருவிசோரகுகனுமாண்டிருந்தானென்னை
பெருநிலமகிழந்நோற்றுமபெற்றிலள்போலுமென்னா.

(இ-ள்.) மானவ—இளையபெருமானே, திருநகர் நீர்ந்தவண்ணம் தெரித்தியென்ன—பொலிவுவாய்ந்த அயோத்தியினின்றும் நாம்நீங்கியவகையைக் கூறுவாயென்றருள, பருவரல் தம்பிகூற—அத்துன்பச்செய்தியை அவ்விளையபெருமாளெடுத்துக்கூற, அவன்பரிந்துயையுளெய்தி—அக்குகன் வருந்தித் துன்பங்கூர்ந்து, இருகண நீர் அருவிசோர—இரண்டு கண்களினின்றும் நீர் அருவிபோலவொழுக, பெருநிலம்கிழத்திநோற்றும் என்னைபெற்றிலள்போலும்என்னா—பெரிய பூதேவிதன்னையாளநோற்றும் யாதுகாரணமோ பெருதொழிந்தாளென்றுகருதி, குகனும்ஆண்டு இருந்தான்—குகனும் அவ்விடத்திருந்தனன். (46)

விரியிருட்பகையையோட்டித்திசைகளைவென்றுமேனின்
றொருதனித்திகிரியுந்தியுயர்புகழ்நிறுவிநாளும்
இருநிலத்தெவர்க்குமுள்ளத்திருந்தனனென்னவீந்த
செருவலிவீரனென்னச்செங்கதிர்செல்வன்சென்றான்.

(இ-ள்.) விரி இருள் பகையைஓட்டி—பரந்தவிருள்போன்றபகைவரைத் துரத்தி, திசைகளைவென்று—திசைகளைத்தனது வலியால்வென்று, மேல்நின்று-அத்தாணிமேலிருந்து, ஒருதனிதிகிரி உந்தி—ஒப்பில்லாதசக்கரஞ்செலுத்திஉயர்புகழ் நிறுவி—உயர்ந்த, புகழைநாட்டி, நாளும் இருநிலத்து எவர்க்கும் உள்ளத்து இருந்தனன்என்ன—எந்நாளும் பெரியநிலவுலகில் யாவர்க்கும்மனத்திலிருந்த அரசனைப்போலவும், செருவீந்தவலிவீரன் என்ன—போரிலிறந்தவலிமைவாய்ந்த வீரனைப்போலவும், செங்கதிர்செல்வன்சென்றான்—சூரியன் அத்தமித்தனன்.

சூரியனுக்குக் கொள்ளும்போது இருட்பகை என்பதற்கு இருளாகிய பகையையெனவும், திசைகளைவென்று என்பதற்குத் திசைகளைத்தனது ஒளியால்விளக்கியெனவும், மேல்நின்று ஒருதனித்திகிரிஉந்தி என்பதற்கு விண்ணினின்று ஒருருள் பூண்டதேரைச் செலுத்தியெனவும் பொருள்கொள்க இது செம்மொழிச் சிலேடையணி. புகழாலென்றும் நிலைபெருதலால் எவர்க்கும் உள்ளத்திருந்தனன் என்றார். (47)

மாலைவாய்நியமஞ்செய்துமாபுளியியற்றிவைகல்
வேலைவாயமிர்தன்னானும்வீரனும்விரித்தநாணல்
மாலைவாய்ப்பாரின்பாயல்வைகினன்வரிவில்லேந்திக்
காலைவாயளவுந்தம்பியிமைப்பிலன்காத்துநின்றான்.

(இ-ள்.) மாலைவாய் நியமம்மரபுஉளிசெய்து—மாலைப்பொழுதில் தான் செய்யும்நியமங்களைமுறையேமுடித்து, இயற்றி—(வினைக்கடன்களையும்)செ

ய்து, வைகல்—அன்றிரவில், வேலைவாய் அமுது அன்னாளும்வீரனும்—கடலிற் றோன்றிய அமுதத்தையொத்த சானகியாரும் இராமமூர்த்தியும், மாலைவாய் விரித்தநாணல் பாரின்பாயல்வைகினன்—மாலைப்பொழுதில் நாணல்பரப்பிய நிலவுலகமாகிய பாயலில்தங்கினான். தம்பிவரிவில் ஏந்திகாலைவாய்அளவும்—இளையபெருமாள்கட்டமைந்த வில்லினைஏந்தி வைகறையளவும், இமைப்பு இலன்காத்துநின்றான்—இமைகொட்டாது காத்துநின்றனன்.

வைகல்என்பது அன்றைப்பகற்பொழுது கழிதல் என்னும் பொருண் மேனிற்றலால் தொழிலாகுபெயராயிருண்மேனின்றது பாரின் இன்வேண்டா வழிச்சாரியை. (48)

தும்பியின் குழாத்திற் சுற்றுஞ் சுற்றத்தன் விடுத்த வில்லன்
வெம்பிவெந் தழியா நின்ற நெஞ்சினன் விழித்த கண்ணன்
தம்பிநின் றானை நோக்கித் தலைமகன் றன்மை நோக்கி
அம்பியின் றலைவன் கண்ணீ ரருவிசோர் குன்றி னின்றான்.

(இ-ள்.) தும்பியின்குழாத்தின்சுற்றும் சுற்றத்தன்—யானையின் கூட்டம்போலச் சூழ்ந்த சுற்றத்தையுடையவனும், விடுத்தவில்லன்—வில்லைக்கைவிட்டவனும், வெம்பிவெந்து அழியாநின்ற நெஞ்சினன்—புழுங்கி வெந்த அழியாநின்றமனத்தையுடையவனும், விழித்தகண்ணன்—விழித்த கண்களையுடையவனுமாய், அம்பியின் தலைவன்—படகுகளுக்குத் தலைவனாகிய குகன், தம்பி நின்றானைநோக்கி தலைமகன் தன்மைநோக்கி—காத்துநின்ற இளையபெருமாளைப்பார்த்து இராமமூர்த்தியினது தன்மையையும்பார்த்து, கண்ணீர் அருவிசோர் குன்றின் நின்றான்—கண்ணீர் சொரிதலால் அருவி வீழும் மலையைப்போல நின்றனன்.

நீங்கிய நாணினள் என்றார்போல விடுத்தவில்லன் எனவந்தது பொருத்தமில் புணர்ச்சி. (49)

துறக்கமே முதல ஆய தூயன யாவை யேனும்
மறக்குமா றினைய லம்மா வரம்பிலாத் தோற்று மாக்கள்
இறக்குமா றிதுவென் பான்போன் முன்னைநா ளிறந்தான் பின்னாள்
பிறக்குமா றிதுவென் பான்போற் பிறந்தனன் பிறவா வெய்யோன்

(இ-ள்.) பிறவாதவெய்யோன்—(ஏனைத்தேவர்போலப்பிறவாதசூரியன்) துறக்கமேமுதலஆய தூயனயாவையேனும்—சுவர்க்கமுதலியனவாக வமைந்த புனிதமுடைய பதங்கள் எவையாயினும் மறக்கும் ஆறுநினையல்—(அவற்றை) மறக்கும் வண்ணம் விடயங்களை நினைத்த லொழியக்கடவர், வரம்புஇலதோற்றுமாக்கள்—அளவிறந்து பிறக்கும் மக்களுயிர் இறக்கும் ஆறுஇது என்பான்போல்—இறக்கும் வகை இதுவென்று காட்டுவான்போல, முன்னைநாள் இறந்தான்—முற்பொழுதில் அத்தமித்தவன், பின்னாள்பிறக்கும்ஆறுஇது என்பான்போல் பிறந்தனன்—வழிநாளில் பிறக்கும்வகை இதுதானென்று காட்டுவான்போல உதயஞ்செய்தான், அம்மா—இஃதோர் பெருவியப்பு.

நினையல் எதிர்மறைவியங்கோள் வினைமுற்று. சூரியனத்தமித்தலையும் உதயஞ்செய்தலையும் மாயையின்மறைப்பால் இறத்தலையும் பிறத்தலையும்மறந்

திருத்தலைக் காட்டுவானெனக்கவி அத்தியவசயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்ற உவமையணி. (50)

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

செஞ்சவே சேற்றிற் றோன்றுந் தாமரை தேரிற் றோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கின விரிந்த வேறோர்
அஞ்சன ஞாயி றன்னவையனை நோக்கிச் செய்ய
வஞ்சிவாழ் வதன மென்னுந் தாமரை மலர்ந்த தன்றே.

(இ-ள்) செஞ்சவே சேற்றிற் றோன்றும் தாமரை தேரிற் றோன்றும் வெஞ்சுடர்ச்செல்வன் மேனிநோக்கின விரிந்த-செவ்வனாகச்சேற்றிற்பிறந்து தோன்றின தாமரைகள் தேரின்மேலுதயஞ்செய்த செஞ்ஞாயிறது மேனியைநோக்கி விரிந்தன, வேறோர் அஞ்சனஞ்ஞாயிறு அன்ன ஐயனைநோக்கி—வேறுதயஞ் செய்த ஒப்பில்லாத கருஞாயிறுபோன்ற இராமமூர்த்தியைநோக்கி, செய்ய வஞ்சிவாழ்வதனம்என்னும் தாமரைமலர்ந்தது—செந்நிறம்வாய்ந்தவஞ்சிக்கொடிபோன்றசானகியாரது பொலிவமைந்த முகமென்னுந் தாமரைமலர்ந்தது.

தாமரைக்குப்பங்கயமென்பது ஓர்பெயராதலால்சேற்றிற்றோன்றுந் தாமரைஎனவும், கற்புடைமகளிர் காலையில்தமது கணவனை வணங்கியெழுதல் வழக்காதலால் வஞ்சிவாழ் வதனமென்னும் தாமரைமலர்ந்தது எனவுங் கூறினார். பிறிதினியை பின்மைநீக்கிநின்ற சூரியனுக்கெதிராகக் கருஞாயிறொன்று முளைத்தலால் வெஞ்சுடர்ச் செல்வன் என்றதற்குப் பிறிதினியைபு நீக்கியவிசேடந்தந்து செஞ்ஞாயிறு எனக்கொண்டாம். மேனியென்றது சூரியனது கிரணத்தை. (51)

நாண்முதற் கமைந்தயாவு நயந்தனனியற்றி நாமத்
தோண்முதற் கமைந்தவில்லான் மறையவர் தொடரப்போனான்
ஆண்முதற் கமைந்த கேண்மையன்பனை நோக்கியைய
கோண்முதற் கமைந்தநாவாய் கொணருதி விரைவினென்றான்.

(இ-ள்.) நாமம் தோள்முதற்கு அமைந்தவில்லான்—அச்சத்தைத்தருந் திருத்தோளின் சிகரத்தில்சாத்தியவில்லையேந்திய இராமமூர்த்தி, நாள்முதற்கு அமைந்தயாவும் நயந்தனன் இயற்றி—வைகறையிற் செய்தற்கமைந்த கடன்கள்யாவையும்விரும்பிச்செய்து, மறையவர் தொடரப்போனான்-முனிவர்கள் பின்தொடரச்சென்று, ஆண்முதற்கு அமைந்தகேண்மை அன்பனை நோக்கி—ஆண்பாலுக்கு (முற்றும்அமையவேண்டியவை) அமைந்தநட்பினையுடைய குகனைப்பார்த்து, ஐய—அன்பின்மேம்பட்டவனே கோள்முதற்கு அமைந்த நாவாய்விரைவின் கொணருதி என்றான்—கொண்டுபோதற்கமைந்த படகினை விரைவினில் கொண்டுவரக்கடவாயென்றருளினான்.

ஓர்நாளுக்குமுதல்காலையாகையால்நாண்முதற்குக்காலையெனவும், தோளுக்குமுதல் சிகரமாதலால் தோண்முதற்கு என்றதற்குத்தோளின்சிகரமெனவும்பொருள்கூறினாம். கு உருபுமயக்கம். (52)

ஒருபோகு கொச்சகம்.

ஏவியமொழிகேளாவிழிபுனல்பொழிகண்ணான்
ஆவியுமுலைகின்றானடியிணைபிரிகில்லான்

காவியின்மலர்காசாகடன்மழையனையானைத்
தேவியொடடிதாழாச்சிந்தனையுரைசெய்வான்.

(இ-ள்) எவியமொழிகேளா—ஏவியருளியசொல்லைக்கேட்டு, இழிபுன ல்பொழி கண்ணன்—இடைவிடாது நீர்சொரியும் கண்களையுடையவனும், ஆவியும்உலைகின்றான்—தனதுயிரும் ஊசல்போலப்போக்குவரவுடையவனும், அடியிணை பிரிகில்லான்—திருவடியைவிட்டுப் பிரிதற்கிசையாதவனுமாகிய குகன், காவியின்மலர்காசாகடல்மழை அனையானை—நீலோற்பலமலரையுங் காயாமலரையும் கடலையும் மேகத்தையுமொத்த கருநிறமுடைய இராம மூர்த்தியை, தேவியொடு அடிதாழா சிந்தனை உரைசெய்வான்—சானகியா ரோடுதிருவடிவணங்கித் தன்கருத்தைக் கூறுவான்.

கண்ணன், உலைகின்றான், பிரிகில்லான் ஒருபொருட்பன்மொழி இன் தவிர்வாழி வந்தசாரியை. (53)

பொய்ம்முறையிலமேயெம்புகலிடம்வனமேயாம்
கொய்ம்முறையுறுதாராய்குறைவிலமவலியேமால்
செய்ம்முறைகுற்றேவல்செய்குதுமடியோமை
இம்முறையுறவென்னவினிதிரும் நெடிதெம்மூர்.

(இ-ள்.) கொய்முறை உறுதாராய்—கொய்தமலரால் முறைபடத்தொடு த்த மாலையையுடைய இராமமூர்த்தியே, பொய்முறையிலமேம்—யாங்கள் பொய்யொழுக்கம்சற்றுமில்லேம், எமபுகலிடம்வனமே—எங்களுக்கு அடைக் கலமாயுள்ளவிடம்காடே. குறைவு இலம்—யாதொருபொருளிலும் குறைபா டில்லேம், வலியேம்—தோலாத வலிமையையுடையேம், செய்முறைகுற்றே வல் செய்குதும்—செய்யும் முறையே தேவரீர் குற்றேவலையும் செய்குவோம் இம்முறை—இங்குக்கூறிய முறையோடு, அடியோமை உறவுஎன்ன—அடி யோமாகிய எங்களை உறவினரென்று கருதி, நெடிதுஎம்ஊர் இனிதுஇரு— நெடும்பொழுதெல்லாம் எமதுஊரில் மகிழ்கூர்ந் திருந்தருளாய்.

மெய்யொழுக்கினரோடு கலந்திருக்கவேண்டுதலால் பொய்முறையில ரேமெனவும், தேவரீருக்குவனமே உறையுளாதலால் எம்புகலிடம் வனமே யெனவும், தேவரீர் வசிக்கவேண்டியவளவு பதினான்கு வருடமாதலால் நெடி தெனவுங் கூறினான். (54)

தேனுளதினையுண்டாற்தேவருந்நுகர்தற்காம்
ஊனுளதுணைநாயேமுயிருளவிளையாடக்
கானுளபுனலாடக்கங்கையுமுளதன்றோ
நானுளதனையும்நீயினிதிருநடவெம்பால்.

(இ-ள்.) தேன்உள்ள தினை உண்டு—பருகத்தேனுண்டு நுகரத்தினைமா வுண்டு, தேவரும் நுகர்தற்குஆம் ஊன்உள்ள—தேவரும் உண்ணுதற்கமைந்த தசையுண்டு, துணைநாயேம் உயிர்உள்ள—தேவரீர்க்குத் துணையாகநாயிற் கடைப்பட்ட எம்போலியரது உயிர்களும் காவலாய் உள்ளன, விளையாட கான்உள்ளது—விளையாடுதற்குக் காடுமுள்ளது, புனல்ஆட கங்கையும்உள் ளது அன்றோ—நீராடக்கங்கையு முள்ளதல்லவா, நான்உள்ளதனையும் (ஆத

லால்) அடியேனுள்ளவளவும், நீ இனிதுஇரு—நீ இனியதாய் இருந்தருள் வாய், எம்பால்நட—எமதுகுடிலுக்கு நடந்தருளாய்.

தன் இனத்தாரையும் உளப்படுத்திநாயேம் என்றமையால் உயிருளனைப் பன்மையீறுதோன்றக்கூறினன் காணுளது என்பதில் ஒன்றன்பால் விகுதி தொகுத்தல். (55)

தோலுளதுகில்போலுஞ்சுவையுளதொடர்மஞ்சம்
போலுள பரண்வைகும்புரையுளகடிதோடுங்
காலுள சிலைபூணுங் கையுளகலிவானின்
மேலுளபொருளேனுமிரைவொடுகொணர்வேமால்.

(இ-ள்.) துகில்போலும்தோல்உள—உடைபோலும்தோலுள்ளன, சுவை உளதொடர்மஞ்சம்போல்பரண்உள-தூவியாலமைந்த மஞ்சம்போலப்பரணுள் ளன, வைகும்புரைஉள்ள—குடியிருத்தற்குக்குடில்களுமுள்ளன, கடிதுஓடும் கால்உள்ள—(பெறுதற்கரிய பொருள்கொண்டுவர) விரைந்து செல்லுங்கால் களுள்ளன, சிலைபூணும் கைஉள்ள—(பகைவரிற்புறங்காண) வில்லேந்துங் கைகளுமுள்ளன. கலிவானின்மேல்உம்உள்ளபொருளேனும்—இந்நிலவுலகி லன்றிவிண்ணுலகிலுள்ள பொருளாயினும், விரைவொடு கொணர்வேம்— விரைந்துகொண்டுவருவோம்.

வானின் என்பதனிறுதியில் இறந்ததுதழீஇய எச்சவும்மைதொகுத்தல்.

ஐயிருபத்தோடைந்தாயிரருளராணை
செய்குநர்சிலைவேடர்தேவரின்வலியாரால்
உய்குதுமடியேமெங்குடிலிடையொருநாணீ
வைகுதியெனின்மேலோர்வாழ்விலையெனென்றான்.

(இ-ள்.) ஆணை செய்குநர் சிலைவேடர்—தேவரீர் ஆஞைசெய்ததைச் செய்யும் விற்லேந்திய வேடர்கள், ஐயிருபத்தோடு ஐந்தாயிரர்உளர்—இருபத் தையாயிரம் பேருண்டு, தேவரின்வலியார்—(தேவர்பகைவராய்) வந்து எதிர்ப் பினும் அவர்களோடு போரிலெதிர்க்கும் வன்மையையுடையார், அடியேம் உய்குதும்—சாயிற்கடைப்பட்டநாங்கள் கடைத்தேறுவோம், எம்குடில்இடை ஒருநாள் நீ வைகுதிஎனின்—எமதுகுடிசையில்ஒருநாள்நீ தங்கியருள்வாயா னல், மேலோர் வாழ்வுபிறிது இல்லை என்றான்—மறுமையில் வானடைந்து நாங்கள்வாழும் வாழ்க்கை பிறிதில்லையென்று கூறினான்.

தேவரீரோடு ஒருநாள் கூடிவாழும் இன்பத்தினும் மறுமையில் விண்ணு லகையடைந்து நீடுழிவாழும் வாழ்வுபெரிதல்லவென்பான் மேலோர் வாழ்வு பிறிதில்லைஎன்றான் என்றார். ஒடுஎன்னு மிடைச்சொல்லை ஐயிரு என்பத னோடுகூட்டுக. (57)

அண்ணலுமதுகேளாவகமகிழ்வுறுபுண்மிச்சான்
வெண்ணிறநகைசெய்தான் வீரனுமுரைபாமப்
புண்ணியநதியாடிப்புனிதரைவழிபாடுற்
றெண்ணியசிலநாளிற்குறுகுதுமினியென்றான்

(இ-ள்.) அண்ணலும் அது கேளா—இராமமூர்த்தியும் அதனைக்கேட்டு, அகம் நிறை அருள்மிக்கான்—திருவுளத்தில மிக்க அருள் நிறைந்து (வழிதல் போல) வெள்நிறநகைசெய்தான்—வெள்ளியபுன்னகைசெய்து, வீர—வீரனே, நின்உழை— உன்னிடத்து, யாம்அபுண்ணியநதிஆடி புனிதரைவழிபாடு உற்று—யாம் அச்சேய்மையிலுள்ள புண்ணியநதிகளிற்சென்று நீராடித் தூயவரைஅடைந்துவழிபாடுசெய்து, எண்ணிய சிலநாளில்இனிதுகுறுகுதும் என்றான்—வரையறைப்பட்ட சிலதினத்தில் உனதுகருத்தின்படிவந்தடைவோம் என்றருளினர்.

பதினான்கு வருடமென்பார் எண்ணிய சிலநாளெனவரையறைசெய்து கூறினர். (58)

சிந்தனையுணர்கிற்பான் சென்றனன் விரைவோடும்
தந்தனனெடுநாவாய்த் தாமரைநயனத்தான்
அந்தணர்தலைமேலெல்லாமருளுதிர்விடையென்னு
இந்துவினுதலாளோடிளவலோடினிதேறு.

(இ-ள்.) சிந்தனை உணர்கிற்பான்—இராமமூர்த்தியின் திருவுளம் அறியநின்றகுகன், விரைவோடும் சென்றனன் நெடு நாவாய்தந்தனன்—விரைந்து சென்றுநெடியபடகுகளைக் கொண்டுவந்துதவ, தாமரை நயனத்தான்—தாமரைமலர்போலுந் திருநயனங்களையுடைய இராமமூர்த்தி, அந்தணீர்தலைஎல்லாம் விடைஅருளுதிர்என்னு— அங்கு நின்றமுனிவர்களையெல்லாம் விடையருள்வீர்களென்று, இந்துவின் நுதலாள் ஓடுஇளவலோடு இனிது ஏறு—இளஞ்சந்திரனையொத்த நெற்றியையுடைய சானகியாரோடும் இளையபெருமாளோடும் இனிதாக ஆரோகணித்தருளி. (59)

விடுநதிகடிதென்றான் மெய்யுயிரனையானும்
முடுகினனெடுநாவாய் முரிதிரைநெடுநீர்வாய்
கடிதினில்மடவன்னக்கதியதுசெலநின்றார்
இடர்வுறமறையோருமெரியுறுமெழுகானார்.

(இ-ள்) நதிவிடு கடிது என்றான்—கங்காநதியில் விரைந்துசெலுத்துகவென்றருளினன், மெய்உயிர் அனையானும்—உடலுமுயிருமொத்த குகனும், நெடுநாவாய் முடுகினன்—நெடியபடகை விரைந்து செலுத்தினன், முரிதிரைநெடுநீர்வாய்—கரையொடுமோதிமுரிந்த அலைகளையுடைய பெருக்கில், கடிதினில் மடஅன்னம் கதியதுசெல்ல—விரைந்து இளமைவாய்ந்த அன்னத்தின்கதிபோற்செல்ல, நின்றார் இடர்வுஉற—கரையில்நின்ற வேடுவர்பிரிவால் துன்பங்கூற, மறையோரும் எரிஉறும் மெழுகானார்—(பின்வந்த)முனிவர்களுந்தீப்பட்ட மெழுகுபோலப் பிரிவென்னுந்தீயால் உருகினார்கள்.

அன்னக்கதியென்றது அன்னம் விரைந்து நடக்கும் நடையை. உவமைக்கும் பொருளுக்கும் ஒற்றுமையுண்மையால் உவமையின்றொழிலைப்பொருட்கேறறிப் பிரிவென்னுந் தீயென்றார். குகன் இராமமூர்த்திக்கு உடலும் உயிருமாய் நிற்றலால் மெய்யுயிரனையான் என்றார். கதியது அது பகுதிப்பொருள் விகுதி. (60)

(இ-ள்) முன்ப துன்பு உளது எனின் அன்றோ—முன்பு துன்ப மொன்றுளதானாலல்லவா, சுகம்பின்பு உளது—இன்பம் பின்னேயுள்ளது, அது அன்றி இடை உள்ளது—அதுவன்றி நடுவிலுமுள்ளது, மன்னும்பிரிவு உளதுஎன்ன உன்னேல்—நிலைபெற்றபிரிவு இன்றாளதென்றுகருதாதே, (இடையிலும் கடையிலும்நட்பேஉண்டாம்) ஒருநால்வேம்முன்பு உளெம்—நான் முதலசத்துருக்கனீறாகநான்கு புத்திரர்கள்சக்கிரவர்த்திக்கு முன்னே உள்ளோம், இனி—இனிமேல் முடிவுஉளது என உன்னா அன்புஉள்ள—முடிவு இதுவரைக்குமென்று கருதற்கமையாதஅன்புள்ள, நாம் ஓர் ஐவர்கள் உளர்ஆனோம்—நாமைவர்கள் (இன்று) ஆனோம்.

முன்பு துன்பமுகர்ந்தாலன்றி இடைகடையில்வரும் இன்பமோர் பொருளாகத் தோன்றாதென்பார் துன்புளதெனின் அன்றோசுகமுளததுவன் றிப்பின்புளதிடையெனவும். பிரிவுநேர்ந்தாலன்றி நட்பினருமைதோன்றா தென்பார்மன்னும் பிரிவுளதெனஉன்னேலெனவுங்கூறினார். (69)

படருறவுளனும்பிகானுறைபகலெல்லாம்
இடருறுபகையாமே யாரெனவுரியாய்நீ
சுடருறுவடிவேலாய்சொன்முறைகடவேல்யான்
வடதிசைவருகாலத்திவணுறைவருகின்றேன்.

(இ-ள்.) உம்பிபடர்உறஉளன்—உன்தம்பியாகிய இளையபெருமாளென் பின்வரஇருக்கின்றான். கான்உறை பகல்எல்லாம் இடர்உறுபகையா—கா ட்டில் வசிக்குங்காலமெல்லாம் எனக்குத்துன்பமிக்க பகையாயுள்ளனஎவை, யான்என்னஉரியாய் நீபோவாய்—நானேநீயென்று சொல்லுதற்குரியவனே, நீ போவாய், சுடர்உறு வடிவேலாய்—ஒளிமிக்கவடித்த வேலையேந்தியகுகனே சொல்முறை கடவேல்—நான்கூறும் ஆணையினின்றுநீகடவாதே யான்வட திசையைநோக்கி வருங்காலையில் உன்னிடத்தில் வருகின்றேன்.

உன்தம்பியாகிய இளையபெருமாள் என்பின்வருதலால் பகையாயுள்ள னவெனநீகூறியபொருள்எவையுள்ளன என்பார் படருறவுளனும்பிகானுறை பகலெல்லாம் இடருறுபகையாளனவும் நீயேயான்காணேனென அழைத்தா யென்பார்யானென்ன உரியாய் எனவுங்கூறினார். (70)

அங்குளகிளைகாவற்கமைதியினுளனும்பி
இங்குளகிளைகாவற்கியாருளருரைசெய்யாய்
உன்கிளையெனதன்றோவுறுதுயருறலாமோ
என்கிளையிதுகாவென்னேவலினிதென்றான்.

(இ-ள்.) நும்பி அங்குஉள்ளகிளைகாவற்கு அமைதியின்உளன்—என்தம் பியாகிய பரதாழ்வான் அயோத்தியிலுள்ள உறவினர்முதலியகுடிகளைக்காத் தற்கமைந்துள்ளான், இங்குஉள்ளகிளைகாவற்குயார் உளர் உரைசெய்யாய்— இக்காட்டிலுள்ள உறவினரைக்காத்தற்கு உன்னையன்றி யாருளர்கூறாய், உன்கிளைஎனது அன்றோ—உனது சுற்றம் எனது சுற்றமல்லவா, உறுதுயர் உறல்ஆம் ஓ—(அவர்களைக்காவாது என்பின்வருதலால் (அவர்கள்மிக்கதுய

ரத்தை யடையலாமோ, இதுஎன்கிளை—இச்சுற்றம்என்சுற்றம், என்வலின் இனிதுகா என்றார்—எனதேவலால் இனிதாகப்பாதுகாவாய் என்றுகூறினார்.

பணிமொழிகடவாதான்பருவயலிகவாதான்
பிணியுடையவனென்னும்பிரிவினன்விடைகொண்டான்
அணியிழைமயிலோடுமையனுமிளையோனும்
திணிமரநிறைகானிற்சேணுறநெறிசென்றார்.

(இ-ள்) பணிமொழி கடவாதான்—இராமமூர்த்தி பணித்தருளிய பணியைக்கடவாதவனும், பருவரல்இகவாதான்—துன்பத்தினின் நீங்காதவனும், பிணிஉடையவன் என்னும் பிரிவினன்—நோயுடையானென்று கூறும்பிரிதலையுடையவனுமாகியகுகன், விடைகொண்டான்—விடைபெற்றுச் சென்றனன், அணிஇழைமயிலோடும்—ஆபரணமணிந்தசானகியாரோடும், ஐயனும் இளையோனும்— இராமமூர்த்தியும் இளையபெருமானும், திணிமரம் நிறைகானில்—செகுபற்றிய மரங்கள்நெருங்கிய காட்டில், சேண்உற நெறிசென்றார் நெடுந்தூரஞ் சென்றனர்.

இராமமூர்த்தியைக் கண்டவளவிலேநேர்ந்ததுன்பம் மாறாதிருத்தலால் பருவரலிகவாதானெனவும், அத்துன்பத்தோடுபிரிவும்நேர்ந்தனனாதலால் பிணியுடையவனென்னும் பிரிவினனெனவுங் கூறினார். (72)

கங்கைப்படல முற்றிற்று

ஆக திருவிருத்தம் ககக.

## எவந வனம்புகு படலம்.

பூரியர்புணர்மாதர்பொதுமனமெனஎன்றும்
ஈரமுமுளதில்லென்றறிவருமிளவேனில்
ஆரியன்வரலோடும்முகளவியபீசுக்
காருறுகுறிமானக்காட்டியதவணெங்கும்.

(இ-ள்.) பூரியர்புணர்மாதர் பொதுமனம் என்ன—கீழ்மக்களைப்புணரும் விலைமாதருடைய பொதுத்தன்மைவாய்ந்த மனம்போல, ஈரமும் உளது இல் என்று—ஈரமும் உண்டு இல்லைஎன்று, அறிவு அரும் இளவேனில்—அறிதற்கரிய இளவேனிற்காலத்து, ஆரியன் வரலோடும்— இராமமூர்த்திவர, அவண் எங்கும்—அக்காடு எங்கும், அமுது அளவிய சீதம்காருஉறு குறிமான்காட்டியது—(அவ்வருகை) அக்காடெங்கும் நீரொடுகலந்த குளிர்ச்சிவாய்ந்தகார் காலம்வருங்குறிப்பை யொக்கக்காட்டியது.

அக்காடெங்கும் அவர்வருகையால் நீரொடுகலந்தசீதம்வாய்ந்தகார்காலம் வருங்குறியையொப்பக் காட்டியதுஎன்று அக்காட்டி மேல் எற்றிக்கூறுதலுமொன்று. இழிந்த மக்களாயினும் அவர்களாற்பொருள் வருகையொன்றே பெரிதுஎன்பது உட்கோளாதலால் பூரியர்புணர் மாதர்எனவும், அவர்கள் மனம்பொருள்பற்றி ஈரமுடைமைக்கும் ஈரமின்மைக்கும் பொதுவாய்நிற்றலால் பொதுமனமெனவும், பின்பனிக்காலத்திற்குப் பின்னிளவேனிற்காலமாதலால் அறிவருமிளவேனில் எனவுங் கூறினார். (1)

வெயிலிளநிலவேபோல் விரிகதிரிடைவீசப்
பயின்மரநிழலீனப் பனிபுரைதுளிமேகப்
புயல்தரவிளமென்கால் பூவளவியவெய்த
மயிலினநடமாடும் வழியினியனபோனார்

(இ-ள்.) வெயில் இள நிலவே போல் விரிகதிர் இடைவீச—சூரியனது வெயில்சந்திரனது இளநிலவைப்போல விரிந்தகிரணத்தையொருபால் வீசவும், பயில் மரம் நிழல் ஈன—நெருங்கியமரங்கள் ஒருபால்நிழல்தரவும், பனி புரை துளிமேகம் புயல்தர—பனித்துளியையொப்ப நீர்த்துளியைமேகம்ஒருபால்சொரியவும், இளமென்கால் பூ அளவியது எய்த—தென்றற்காற்றானது மலர்மணத்தோடுகலந்து ஒருபால்வரவும், மயில் இனம் நடம் ஆடும் வழி இனியன போனார்—மயிலின் கூட்டம்நடனஞ்செய்யும்வழியாக இன்பத்தைச்செய்யச் சென்றார்கள். (2)

மன்றலின்மலிகோதைமயிலியலிளமானே
இன்றுயில்வதிகோபத்தினம்விரிவனவென்றும்
கொன்றைகள்சொரிபோதின்குப்பைகொள்குலமாலை
பொன்றிணிமணிமானப்பொலிவனபலகாணாய்.

(இ-ள்.) மன்றலின் மலிகோதை மயில்இயல் இளமானே—வாசத்தால் மிக்ககூந்தலையுடைய மயில்போலுஞ் சாயலுடைய சானகியே, இன்துயில் வதிகோபத்து இனம் விரிவன—இனிய துயில்கூரும் இந்திரகோபத்தின்கூட்டம் பரந்துகிடப்பன, என்றும் கொன்றைகள் சொரிபோது இன்குப்பை கொள் குலமாலை—எவ்விடத்தும் கொன்றைமரங்கள் சிந்தும்மலரின் குப்பைகளின் கூட்டத்தின் வரிசை, பொன்திணிமணிமான பலபொலிவன காணாய்—பொன்னிற்பதித்த மாணிக்கத்தையொப்பப் பலவிடங்களிலும் விளங்குதலைப் பாராய்.

இந்திரகோபம் மாணிக்கமாகவும், கொன்றைமலர்கள் பொன்னாகவும் கூறுதலால் இது ஒப்புமைக்கூட்டவுவமையணி. (3)

பாணிளமிஞிறாகப் படுமழைமுழவாக
நாணினதொகுபீலிக்கோலினநடமாடல்
பூணியநின்சாயல்பொலிவதுபலகண்ணில்
காணியவெனலாகுங்களிமயிலவைகாணாய்

(இ-ள்.) பாண் இளமிஞிறு ஆக—இசைப்பண்ணை இளமைவாய்ந்தவண்டுகளின் ஒலியாகவும், படுமழை முழவு ஆக—ஒலிக்கும்மேகம் மத்தளமாகவும், நாணின தொகு பீலி கோலின நடம் ஆடல்—உன்சாயலுக்கு நாணங்கூர்ந்துநெருங்கியதோகைகளைக்கோலினவாய்மயில்கள்நடனஞ்செய்தலை, பூணிய நின் சாயல்—அமைந்தஉனதுசாயலை, பொலிவது பல கண்ணில் காணிய எனல் ஆகும் களிமயில் அவை காணாய்—விளங்கும்பல கண்களாற்காணும்படி என்றுசொல்லவமைந்தகளிப்பையுடைய மயில்களவை, அவற்றை நீபாராய்.

மயில்கள் தோகைகோலி ஆடுதலைச்சானகியாரது சாயலைத்தனது பல கண்களால் பார்க்கநிற்றலையொக்குமெனக் கவி அத்தியவசாயித்துக் கூறுதலால் தற்குறிப்பேற்றவணி. (4)

இடையர்களுடைய [illegible]ன்கன்றோடு - [illegible] பல, வின்கன்றுடன், விளையாடும்-விளையாடுகின்ற, களியனபல [illegible] அநேகம் பார்:

அண்டர்தம் மனைஆவின்கன்று என்பதற்கு சுவர்க்கத்திலுள்ள காமதேனு வின்கன்றுடனெனப்பொருள் கொள்ளுவாருமுளர். அன்னதின்மைக்குப்பொரு ந்தாமையுணர்க. விலங்கினைத்தினையும் வெல்லுந்திறமுடைய தென்பனைவிளங்க சிங்கத்தினை வயமா என்றும், காசானை என்பதற்கு இருள்சிந்திப்பின்றினவெல்லாம் பிடிஎன்றும் கூறினர். அண்டர்-அந்நிலமாக்கள்.

ஒன்றோடொன்று பகைப்பொருளாயுள்ளன பகைமையைமறந்து பிரியாது விளையாடின என்றமையால் அவ்வனத்தின் தெய்வத்தன்மை விளங்கி நிற்றல் காண்க. கஎ

அகில்புனைகுழன்மாதேயணியிழையெனலாகும்
நறுமலர்நிறைமாலைக்கொம்பர்கணதிதோறும்
துகில்புரைநறுநீரிற்றோய்வனதுறையாடும்
முகிழிளமுலையாரின்மூழ்குவபலகாணாய்.

(இ-ள்) அகில்புனைகுழல்மாதே! அகிற்புகை யூட்டப்பெற்ற கூந்தலினையுடையசானகீ—அணிஇழை எனல் ஆகும்- அணிந்துள்ள ஆபரணங்கள் என்று கூறத்தகும்—நறுமலர் நிறைமாலை கொம்பர்கள்-விரிந்தமலர்கள் நிறைந்தவரிசையான பூங்கொம்புகள், நதிதோறும- கானயாறுகள தோறும், துகில்புரை-(விரித்த) ஆடையையொதத, நறுநீரில், நல்லநீரில், தோயவன—மூழ்குவன, துறைஆடும்-கரைகளினின்று குதிதது விளையாடுகின்ற, முகிழ் இளமுலை ஆரின்-பூவரும்பு போன்றஇளமைவாய்ந்ததனங்களையுடைய பெணகளைப்போல, மூழ்குவ, மூழுகுதலை, பலகாணுய் அநேகங்களைப்பாராய்—எ-று.

சானகீ! பூங்கொம்பர்கள் இளமுலைமடவியராமொறுநீரின்மூழ்கி எழுதலைப் பாராய். என்றுன்பூங்கொம்பரைப்பெண்களாகவும் விரிநதமலர்மாலைகளை அணிஇழைகளாகவும கானியாற்று நீரினை விரிததசேலையாகவும பூங்கொம்பர்கள் காற்றலைசைந்து நீரின்மூழ்கி எழுதல் மகளிரின் நீர்விளையாட்டாகவும் உருவகம்செய்தலின் உருவகவணியாம். முல்லைக்குரியகொன்றையின்மலர்-கட்டியமாலைபோல் வதாதலின் நறுமலர் நிறைமாலைக்கொம்பர்—என்றார். அர்-போலி கஅ

முற்றுறுமுகைகிண்டிமுயல்கிலசிலதும்பி
விற்றிருநுதன்மாதேயம்மலர்விரிகோங்கின்
சுற்றுறுமலரேறித்துயில்வனசுடர்மின்னும்
பொற்றகடுறுநீலம்புரைவனபலகாணாய்.

(இ-ள்) விற்றிருநுதல்மாதே—வில்போலுமழகியநெற்றி[illegible] [illegible]முகைகிண்டி- [illegible]பு[illegible]

[illegible]

முயல்கிலசிலதும்பி-தேனுண்ணமுயலாத சிலவண்டுகள், அம்மலர்விரி கோங்கின்-அழகியபூவலர்ந்த கோங்கிலவின் சுற்றுறுமலர்ஏறி. சுற்றிலுமுள்ளவிரிந்தமல, கண்மீதே ஏறி, துயில்வன, தூங்குவன, சுடர்மின்னும்-ஒளிவீசுகின்ற, பொன்தகடுபொன்தட்டில், உறு-பதித்த, நீலம்புரைவனபல- நீலமணியை ஒப்பனபல, காணாய்-பாராய்—எ-று.

காளரும்புகளை மூக்காலுழுது தேனுண்ணாது சிலவண்டுகள் விரிந்த கோங்கலர்மீது இடத்தல் பொற்பாளத்தில் பதித்த நீலமணிபோலும் என்றுகூறினான். இதுவுமொன்றை யொன்றாக வுருவகித்தலின் உருவகவணி யாம். ௧௩

கூடியநறைவாயிற்கொண்டனவிழிகொள்ளா
மூடியகளிமன்னமுடுகினநெறிகாணா
ஆடியசிறைமாவண்டந்தரினிசைமுன்னாப்
பாடியபெடைகண்ணாவருவனபலகாணாய்.

(இ-ள்.) ஆடியசிறைமா பலவண்டு—அசைகின்ற இறகுகளையுடைய சிறந்தபலசாதிவண்டுகள், கூடியநறை வாயிற்கொண்டன- பொருந்தியமதுவினைதம் வாயிற்கொண்டனவாகி, விழிகொள்ளா மூடியகளிமன்ன-கண்கொள்ளாதமயக்கமேற, முடுகினநெறிகாணா-சென்றவழிதெரியாமல், அந்தரின்-குருடர்களைப்போல, பெடைபாடிய-பெண்வண்டுகள்பாடிய, இசைமுன்னா-இசையைக்குறிப்பாகக்கொண்டு, கண்ணா-அதுவேகண்ணாக, வருவனகாணாய் வருவன-பாராய்—எ-று.

ஆண்வண்டுகள் மதுவருந்திவிழிதிறக்க மாட்டாதனவயாய்வழிதமொறிப் பெண்வண்டுகளின்இசையைக்கேட்டுவருகின்றனஎன்பதுகருத்து.இன்உவமவுருபு.

கன்னியரணிகோலங்கற்றறிகுநரென்னப்
பொன்னணிநிறவேங்கைக்கொம்பர்கள்புதுமென்பூ
அன்னமென்னடையாய்நின்னளகநன்றுதலப்பும்
சின்னமென்மலர்மானச்சிந்துவபலகாணாய்.

(இ-ள்.) கன்னியர் அணிகோலம்—தேவமாதர்கள் தாமணிந்து கொள்ளுமலங்காரத்தினை, கற்றுஅறிகுநர்-என்ன கற்றுஅறிந்து கொள்பவர்களைப்போல, பொன்அணிநிறவேங்கை-பொன்னின் அழகியநிறத்தினையுடைய வேங்கைமரங்களின், பலகொம்பர்கள்-பலகிளைகள்,புதுமெல்பூ-புதியமெல்லியபூக்களை, அன்னம் மெல்நடைஆய்- அன்னம்போலுமெல்லிய நடையினையுடையாய், நின்அளகம்நல் நுதல் அப்பும்-உன்னுடைய அளகத்தோடுகூடின நல்லநெற்றியில் ஒட்டுகின்ற சிறியமெல்லியமலரை ஒப்ப, சிந்துவகாணாய். சிந்துவன பாராய்—எ-று.

அளகநன்னுதல் என்பதனை அளகமாகியநல்ல நுதல்எனவும்பொருள் கூறுவர். அளகமென்பது நெற்றியின்மேற்புறத்திற் சூழ்ந்துள்ள ஓரங்குல வளவுள்ள குந்தளம் என்னும் உரோமங்களாம். வேங்கையின் பூவனையபொன்னம்பொட்டுகளை நெற்றியிலணிவது வழக்கமாதலின் இவனும் நின்னுதலப்பும் சின்னமென் மலரென்றான்

அன்றியும் சிறியபூவிதழ்களை நெற்றியி லப்புதலாகக்கூறினுமிழுக்கின்றாம்.

மணங்கிளர்மலர்வாசமாருதம்வரவீசக்
கணங்கிளர்தருசுண்ணங்கல்லுடையனகானத்
தணங்கினுமினியாயுன்னணிவடமுலைமுன்றில்
சுணங்கினமவைமானத்துறுவனபலகாணாய்.

(இ-ள்) மணங்கிளர்மலர்வாசம்வர—மணத்தொடுங் கூடினபுட்பங்களின் வாசனைவராநிற்ப, மாருதம்வீச-காற்றுவீச, கணம்கிளர்தருசுண்ணம்-கூட்டமாக எழுந்தபூந்தாதுகள்,பலகல் உடையன-பலமலைகளிலே நீங்கு பொருந்துவன கானத்து அணங்கினும்இனியாய்-வனதேவதையினும் இனிமையானவளே!உன் வடம்அணிமுலைமுன்றில்-உன்னுடையமுத்தமாலைபணிந்த தனங்களின் முற் பக்கத்தில்,சுணங்கு இனம் அவைமான-(காணப்படுகின்ற) தேமற்கூட்டத்தினை ஒப்ப,துறுவன, சென்று பொருந்துவன,காணாய்-பாராய்—எ-று.

இனியாய் நின்றனத்துறுந்தேமலை யொப்பக்கற்கள்மீது பூந்தாதுகள்சென் றுபடி வனபாராய் என்றான். கற்களை தனமாகவும் பூந்தாதினை சுணங்காகவும் கூறாது, பூந்தாதின்செயலைசுணங்குகளையதாகக் கூறினமையினிது தற்குறிப்பேற் றஉவமையணி. கசு

அடியிணைபொறைகல்லாவென்றுகொலதரெங்கும்
இடையிடைமலர்சிந்துமினமாமிவைகாணாய்
கொடியிளைழவாசக்கொம்பர்கள்குயிலாயுன்
துடிபுரையிடைநாணித்துவள்வனவவைகாணாய்.

(இ-ள்.) குயிலாய்உன்—குயிலனையாய் உன்னுடைய, அடிஇணைபொறை கல்லாஎன்று-உபயபாதங்கள் மென்மையான இடங்களில்நடக்கக்கற்காதன என்று, இனமரம்இவை-கூட்டமான இந்தமரங்கள்,அதரெங்கும் இடைஇடை-வழிமுற் றிலும் இடையேஇடையே, மலர்சிந்தும், புட்பங்களைசிந்தாநிற்கும், காணாய்-பாராய்—(அன்றியும்,) கொடியின் ஒடு இளம்வாசம் கொம்பர்கள்-கொடிகளுட னே இளமையும் மணமும் பொருந்தியபூங்கொம்புகள், உன்துடிபுரை இடை நாணி- உனது உடுக்கைபோன்ற இடைக்காகவெட்கமுற்று,அவைதுவள்வன-அ வைகள் துவளுதலைகாணாய்-பாராய்—எ-று.

இனமரமென்பதற்கு ஒருசாதி மரமென்னினும் ஆம். கொல்அசை

இனமரங்கண்மலர் சிந்துதலும் கொடியும் வாசக்கொம்பருந் துவளுதலும் இயல்பாகவும் நின் அடியின் மென்மையையுணர்ந்தென்றும் நின்னிடைக்குநாணி என்றும் கூறுதலால் தற்குறிப்பேற்றவணியாம். கஎ

வாளபுரைவிழியாயுன்மலர்புரையடிமானத்
தாள்புரைதளிர்வைகுந்தகைஞிமிறிவைகாணாய்
கோள்புரையிருள்வாசக்குழல்புரைமழைகாணாய்
தோள்புரையிளவேயின்றெகுதிகளவைகாணாய்.

(இ-ள்.) வான்புரைவிழிஆய்—மான்போலுங்கண்ணினையுடையாய்,உன்மலர்அடிஅணிமான-உனதுதாமரைமலர்போன்ற கால்களிலணிந்துள்ள ஆபரணத்தினையொப்ப,தாள்புரைதளிர்வைகும் உன்பதமனைய- (அசோகின்) தளிரில்தங்குகின்ற,க்குஜஞிமிறுஇவைகாணாய்-தருக்கஅழகியஇந்தவண்டுகளைப்பாராய்,கோள்புரைஇருள்வாசம்சூழல்புரை-மிகுந்தவிருளனையவாசனைபொருந்தியகூந்தல்போலும்,மழைகாணாய், மேகங்களைப்பாராய்-தோள்புரை-தோளனைய, இளவேயின். இளமைவாய்ந்தமூங்கில்களின்,தொகுதிகள்அவை- கூட்டங்களை,காணாய்-பாராய்

இதனில் உவமையணியும் புகழ்பொருளுவமையணியும் தற்குறிப்பேற்றவணியுங்கலந்து வருதலாலிது கலவையணி விழியாய் அடியணிமானும் கூமிறினையும்குழல்புரையும்மழையினையும்தோள்போலுமிளவேயினையும்பார்என்றான்.

பூநனைசினைதுன்றிப்புள்ளிடையிடைபம்பி
நானிறநளிர்வல்லிக்கொடியளவிலமல்கி
மானினமயின்மாலைக்குயிலினம்வருகானம்
தீநிகர்தொழிலாடைத்திரைபொருவனபாராய்.

(இ-ள்.) பூநனைசினைதுன்றி—மலர்களும் அரும்புகளும் கிளைகளும்நெருங்கி, புள்இடைஇடை பம்பி-வண்டுகளிடையேஇடையேபரவி, நால்நிறநளிர் வல்லிக்கொடி-நாலுவிதநிறங்களையுடைய குளிர்ச்சிபொருந்திய வல்லிக்கொடிகள், அளவுஇலமல்கி-அளவற்றவாய்நிறைந்து, மான்இனம்-மான்கூட்டங்களும் மயில்மாலை-மயில்வரிசைகளும், குயிலினம்-கோகிலக்கூட்டங்களும், வருகானம் வருகின்ற காடானது,தொழில் - சித்திரித்த, தீநிகர்-நெருப்பெனச்செவந்த, திரை ஆடை,திரிச்சீலையை-பொருவனபாராய்-ஒப்பதலைப் பாராய்—எ-று.

காடெல்லாம்பூமுதலியவெருங்கிய திரைச்சீலையை ஒப்பனபாராய்என்பது கருத்து.நால் நிற நளிர் வல்லி என்பதற்கு தொங்குகின்றநிறத்தினையுடைய குளிர்ச்சிபொருந்தியகொடிகள்என்றுங் கூறலாம் இதுவும்-வனத்தினை திரைச்சீலைபோல்கூறினமையால் தற்குறிப்பணியாம். ௧௧

என்றனன்மடவாளோடினிதினில்விளையாடிப்
பொன்றிணிதிரடோளான்போயினனெறிபோதும்
சென்றதுகுடபாலத்திருமலையிதுவன்றோ
என்றனன்வினைவென்றோர்மேவிடமெனலோடும்.

(இ-ள்.) பொன்திணிதிரள்தோளான்—பொன்போலுந்திண்ணிய தோள்களையுடைய ஸ்ரீராமபிரான்.என்றனன்-இவ்வாறு வனத்தின் தன்மையைக்கூறினவனும் ,மடவாளோடு-இளமைவாய்ந்தசனகியுடன்,இனிதினில்விளையாடி-இனிமையாகவிளையாடிக்கொண்டு,நெறிபோயினன்வழி-யாய்ச்சென்றான், போதும்குடபால்அத்திருமலைசென்றது-சூரியனும் அத்தமனகிரியிற்சென்றது, (உடனே)இது அன்றோவினைவென்றோர் மேவுஇடம் என்றனன் - இவ்விடமன்றோ இருவினைகளையும் வென்றமுனிவர்கள் வாசஞ்செய்யும் இடம் என்று ஸ்ரீராமபிரான் கூறியருளினன், எனலோடும்-அச்சக்ரவர்த்திதிருமகனவ்வாறு கூறுதலும். எ-று.

போது என்பது ஆகுபெயராய் சூரியனுக்காகியது,போதுகாலம்,பொழுது என்பதன் முதனிலைநீண்டு இடைநிலைகெட்டு போதென்றாகியது என்பாருமுளர்.

அருத்தியினகம்விம்முமன்பினிநெடுநாளில்
திருத்தியவினைமுற்றிற்றென்றனன்றெரிகின்றான்
பரத்துவனெனுநாமப்பரமுனிபவநோயின்
மருத்துவனனையானைவரவெதிர்கொளவந்தான்.

(இ-ள்.) (அப்பொழுது) பரத்துவன்எனும் நாமம்பரமுனி—பரத்துவாசன் என்னும்பெயரினையுடைய சிறந்தமுனிவன், அருத்தியின் அகம் விம்மும்-அன்பினில் ஆசையினால் உள்ளேபூரிக்கின்றஅன்பினால், நெடுநாளில்திருத்திய நெடுகாலமாகச்செய்த,வினைமுற்றிற்றென்றனன்தவம்-நிறைவேறிற்றென்று,தெரிகின்றான்-அறிந்து, பவநோயின் மருத்துவன் அனையானை- சனனவியாதிக்குவைத்தியன் போன்றஸ்ரீராமபிரானை,எதிர்கொளவந்தான்- எதிரேற்குமாறுவந்தனன். எ

இது முதல் 3 பாடல் குளகம்.

பாரத்துவாசமகரிஷிக்கு ஸ்ரீராமபிரானுடைய திருவவதாரத்திறந்தெரியுமாதலின் நெடுநாளில் திருத்தியவினைமுற்றிற்று என்றுகூறினர். தம்மையடைந்தவர்களைவருத்தும்பிறவித்துன்பத்தினைநீக்குபவனாதலின்பெருமானைப்பவநோயின் மருத்துவனனையான் என்றார்.

என்றனன்தெரிகின்றான்என்பன முற்றெச்சங்கள்,பரமுனிஎன்பதற்கு பரமாகியமுனியெனவும் பரத்தைநாடுமுனி எனவும் ஒருசாரார்பொருள்கூறுவர் ஸ்ரீராமபிரான் ஞானாதி உயர்குணமுடையவனாதலை நன்குவிளக்க பவநோயின் மருத்துவன் என்றார். உக

குடையினனிமிர்கோலன்குண்டிகையினன்மூரிச்
சடையினனுரிமானின்சருமனன்மரநாரின்
உடையினன்மயிர்நாலுமுருவினனெறிபேணும்
நடையினன்மறைநாலுநடநவிறருநாவான்,

(இ-ள்.) குடையினன் (அப்பரத்துவாசமுனிவன்)—குடையினையுடையவனும்,நிமிர்கோலன்-தூக்கிப்பிடிக்கப்பட்ட வேணுதண்டத்தினையுடையவனும், குண்டிகையினன்-கமண்டலத்தினையுடையவனும், மூரிசடையினன் - செறிந்த சடையினையுடையவனும், - உரிமானின்சருமன் உரிக்கப்பெற்றமான்றோலினையுடையவனும், மரநாரின்உடையினன்-மரத்தின் நாராலாகிய ஆடையினையுடையவனும், மயிர்நாலும் உருவினன் உரோமங்கள் (வளர்ந்து) தொங்கப்பெற்ற சரீரத்தினையுடையவனும், நெறிபேணும் நடையினன்- மார்க்கங்களில்வைத்தபார்வையுடன் நடக்கின்றநடையினையுடையவனும், மறைநாலும் நடம்நவில்தருநாவான் மறைநாலும்நடிக்கின்றநாவினையுடையவனும், எ-று.

தண்டகமண்டலதாலபத்திராதிகள் அந்தணமுனிவர்க்கின்றியமையாச்சிறப்பினவாதலின் அவைகளுடன் சென்றானென்றாம்.நூ னுபேட்சையுள்ளவர்விரு

ம்பும்அசனமாதவின் இருட்டின அசினத்தின் தோலினையும் உடன்கொண்டுசெ ன்றானென்றும்கூறி பிராணிகள் ஊறடையாவண்ணங்கீழ்நோக்கி நடந்தானென் று அவன்சிவகாருணியவிளக்கத்தையும் அவனுச்சிரமாதிசெயல்களையும் இக்கவி னன்குவிளக்கியிருத்தல்காண்க வேதங்களிலவனுக்குள்ள ஆற்றலினைவிளக்குவா ன் மறைநாலும் நடம்நவில்தருநாவான் என்றனன். உ௨

செந்தழல்புரிசெல்வன்றிசைமுகமுனிசெவ்வே
தந்தனவுயிரெல்லாந்தன்னுயிரெனநல்கும்
அந்தணனுலகேழுமமைமயெனிமபரேசன்
உந்தியினுதவாமேயுதவிடுதொழில்வல்லான்.

(இ-ள்.) செந்தழல் புரிசெல்வன்—செவ்விய அக்கினியை பாதுகாத்தலாகிய செல்வத்தினையுடையவனும், திசைமுகமுனி-நான்முகப்பிரமன், செவ்வேதந்தன உயிர்எல்லாம்-முறையேபடைத்த உயிர்கண்முழுமையையும், தன்உயிர்என தன துயிரைப்போல, நல்கும்அந்தணன் விரும்புகின்ற அழகியதண்மையினையுடைய வனும், உலகுஏழும்எழுலகங்களையும்அருமைஎனின் அமைத்திஎன்றால் அமரே சன் உந்தியின் உதவாமே - தேவநாதன் திருநாபிக்கமலத்தின் வழித்தோன்றிப் படைக்காமல் - உதவிடும்தொழில்வல்லான், சிருட்டிக்குந்தொழிலில்வன்மையு டையவனும், எ-று.

இவன்அக்கினிகாரியஞ் செய்பவனும் சீவகாருண்ணியமுடையவனும் சிரு ட்டித்தொழிலினை எளிதியியற்றும் வல்லவனுமாக உள்ளான்என்பது கருத்து

அம்முனிவரலோடுமநகனுமலர்தூவி
மும்முறைதொழுதானம்முதல்வனுமெதிர்புல்லி
இம்முறையுருவோநானெய்துவதெனவுள்ளம்
விம்மினனிழிகண்ணீர்விழிவழியுகநின்றான்.

(இ-ள்.) அம்முனிவரல்ஒடும்—ஆகிய அந்தபரத்துவாசமுனிவன்வருதலும், அனகனும்-அவர் தூவிமும்முறைதொழுதான்-புண்ணியவடிவினனான ஸ்ரீராம பிரானும் மலர்களை அவன்அடிகளிலிட்டு மூன்றுமுறைவணங்கினான், அம்முதல் வனும்எதிர்புல்லி - உடனேஅப்பரத்துவாசமுனிவனும் ஸ்ரீராகவனைத்தழுவி, இம்முறைஉருவோ நான்எய்துவது இத்தகையதவக்கோலத்தினையுடையதிருவு ருவையோயான்தரிசிப்பது,எனஉள்ளம்விம்மின என்று கூறி மனப்பூரிப்புடை யவனாய்-இழிகண்ணீர் விழிவழிஉக-ஒழுகுகண்ணீர்விழியின்வழி சொட்டுச்சொ ட்டாகவிழ,நின்றான் - ஸ்ரீராமபிரானதுசொரூபத்திலீடுபட்டு நின்றனன், எ-று.

இம்முறைஉருவோ நானெய்துவது, என்பதற்கு பகவத்சொரூபதரிசன மின்னவெளிநிற்பெறயான்பக்குவனலனேஎன சேதனனுகியதனது இழிவினை யும்சித்தாகிய ஸ்ரீராமபிரான துயர்வினையுங்கருதி இம்முறைஉருவோ என்றான் எனினுமிழுக்காது. உ௪

அகலிடமெடிதானுமமைதியையதுதிரப்
புகலிடமெமதாகும்புரையிடையிதுநாளில்

தகவிலதவவேடந்தழுவினை வருவானேன்
இகலடுசிலைவீ ரவிளையவனொடுமென்றான்.

(இ-ள்.) அகலிடம் நெடிதுஆளும்அமைதியை—பூமிமுழுமையும்நீண்டகாலம் அரசாளத்தக்கபொறுப்பினைஉடையாய் அதுநீர,அவ்வரசாளுந்தன்மையிலகஉறு நாளில்-இப்பொழுது, தகவில-நினக்குத்தகுதியல்லாததான,தவவேடம்தழுவினை தவவேடந்தாங்கினவனாய்-இளையவனொடும், இலக்குமணனுடன்,எமதுபுகலிடம் ஆகும்புரைஇடை-எமதுவாசத்தலமான பன்னசாலைக்கு, இகல்அடுசிலைவீர, வருவான்-ஏன்பகைவர்களை நாசஞ்செய்கின்ற விற்படையினையுடைய வீரனே!எதற்காகவந்தனைஎன்று-பரத்துவாசமுனிவன் கேட்டான்?. எ-று.

உனதுசொரூபவிலக்கணத்தினை ஆராய்ந்தால்நீபன்னாளாண்டுஇவ்வுலகினை யாளவேண்டியஉத்தம இலக்கணங்களையுடையவனாகவிருக்கின்றாய்; நினது இந்த அவதாரசரீரத்திற்கு இப்பொழுது வயதுசிறிதன்றிமிகுதியாகவாகவில்லை நின்குலத்தவர்கள் முதுமைப்பருவத்தில் முனிவரியலையடையுமாறு நீயடையாது இளமைப்பருவத்திற்குத்தகாத தவக்கோலங்கொண்டு ஏன்வந்தாய் என்று பகவானைப்பார்த்து இவன் தசரதன்மகனென்னு முறைமைக்கேற்ப வினவினனென்க எமக்கேயுரியது வனவாழ்க்கை உனக்கேனிதுஎன்பதாதி நயங்கந்தொனித்தல் காண்க. உ௫

உற்றுளபொருளெல்லாமுணர்வுறவுரைசெய்தான்
நற்றவமுனியந்தோவிதிதருநவையென்பான்
இற்றதுசெயலுண்டோவினியெனவிடர்கொண்டான்
பெற்றிலடவமந்தோபெருநிலமகளென்றான்.

(இ-ள்.) உற்றுளபொருள்எல்லாம்—நடந்தசெயலனைத்தும், உணர்வுற உரைசெய்தான் - முனிவனுணருமாறுவிரித்துக்கூறினான்,நல்தவமுனி அந்தோ விதிதருநவைஎன்பான், (வனம்வந்தவரலாறுகளைக் கேட்டுணர்ந்தஅந்த) நல்லதவத்தினையுடையபரத்துவாசன்ஐயோஇது விதியால்வந்த குற்றமென்று,இற்றதுசெயல்உண்டோஇனிஎன இடர்கொண்டான்-இச்செயற்கு இனி ஒருபரிகாரமுமுளவோஎனவருந்தி,அந்தோ பெருநிலமகள் தவம்பெற்றிலள்என்றான்-ஐயோ பெரியபூமிப்பிராட்டிஇவனைமணந்துவாழுதற்குத்தவஞ் செய்தாளில்லை என்று கூறினான். எ-று.

இற்றதுசெயல் என்பதற்கு இவன் இக்கோலமேய்தினமையால் உலகத்தியற்கைமாறுபட்டது இனிஉண்டோ மாறுபட்டஇயற்கை மீண்டுமுண்டாகுதல் என்றுவருந்தினனெனினுமாம்.

புருஷோத்தமனாகிய இவனைநாயகனாகக்கொண்டுவாழ்ந்தால்பெருநிலமகள் மிகுந்தசெழிப்பினளாவள் தற்போதவனுக்கிவன்தலைவனாகக்கிடையாமையாலவளைத்தவஞ்செய்யாதவளென்று இகழ்ந்தனன் இவன்தவமுடையார்மாட்டன்றி பிறர்மாட்டணுகானென்பதுண்மையாதலினங்ஙன முரைத்தானென்க. உசு

துப்புறழ்துவர்வாயின் றூய்மொழியயிலோடும்
அப்புறுகடன்ஞாலமாளுதிகடிதென்று
ஒப்பறுமரசன்னையுயர்வனமுறவேகென்
றெப்பரிசுயிருய்ந்தானென் றுணையவனென்றான்.

(இ-ள்.) துப்புறழ்துவர்வாயின் தூய்மொழிமயில் ஓடும்—பவளம்போலுஞ் செந்நிறம்வாய்ந்தவாயினையும் பரிசுத்தம்பொருந்தியவசனங்களையு முடையமயில் போலுஞ்சாயலினளான இவளுடன், அப்புறுகடல்ஞாலம்ஆளுதிகடிதுஎன்று-நீரினையுடைய கடலாற்சூழப்பெற்ற உலகினைவிரைந்தாளுவாயாக என,ஆசிகூறி என்துணை ஒப்பறும் அரசு அவன்-எனது நண்பனான ஒப்பற்ற அச்சக்கரவர்த்தியாகிய அத்தசரதன், உன்னை உயர் வனம் உற ஏகுஎன்றுஉன்றனை, உயர்ந்தகாட்டிற்குச்செல்கஎன்று கூறி,எப்பரிசுஉயிர் உய்ந்தான்-எந்தவிதமாகதன்னுயிரைக் காப்பாற்றிக் கொண்டான். எ-று.

துப்புறழ்மயில்போலும் மெனவுவமைகளைவிரித்துரைத்தமையிலிதுவிரிவுவமையணி

பரத்துவாசன் தயரதசக்கர வர்த்தியை நீண்டகாலமாக அறிந்துள்ளவனும் நண்பனும்ஆதலால் என்துணைஅவன்என்றார் அறுபதினாயிரம்வருடகாலமாக இல்லாதிருந்தபிள்ளைக்கலியைத்தீர்த்த பெருமானாகிய இவனைப்பிரிந்தது சாலவியக்கத்தக்கவிடயமாதலின் எப்படி உயிர் உய்ந்தான் என்றார். உஎ

அல்லலுமுளவின்பமனுகலுமுளவன்றோ
நல்லவுமுளசெய்யுநவைகளுமுளவந்தோ
இல்லையோர்பயனுனின்றிடருறுமிதினென்னப்
புல்லினனுடனேகொண்டினிதுறைபுரைபுக்கான்.

(இ-ள்.) அல்லலும்உள—இவவுலகவாழ்வில் துன்பமுமுளது,இன்பம் அனுகலும் உளஅன்றோ- துன்பமன்றி இன்பமுண்டாதலும் உளவாம்,நல்லவும் உள - நல்லவைகளும்உள - செய்யும் நவைகளும்உள - அநுபவிக்கச்செய்கின்ற தீமைகளும்உள, அந்தோ-ஐயொ,நான் இன்று இடர் உறும்இதின் நான் இன்றுவருந்தும் இதனில்,ஓர்பயன் இல்லை-யாதொருபிரயோசனமும் கிடையாது,என்றான்-என்றகூறி புல்லினன்-பின்னும்இராமபிரானைகட்டித்தழுவி,உடனேகொண்டு,இனிதுஉறைபுரைபுக்கான்-உடனழைத்துக்கொண்டு தான்சுகமாக வாசஞ்செய்கின்ற பன்னசாலைக்குட்புகுந்தான்.எ-று.

இன்பமுந்துன்பமும்நல்லவுந்தீயவும் விரவிவருமெனப்பலவிடயங்களைஅடுக்கியுரைத்தமையாலிதுகூட்டவணி இதனைவடநூலார்ஸமுச்சயாலங்காரம்என்பர்

புக்குறைவிடநல்கிப்பூசனைமுறைபேணித்
தக்கனகனிகாயுந்தந்துரைதருமன்பால்
தொக்கனன்முறைகூறித்தூயவனுயிர்போலும்
மக்களினருளுற்றான்மைந்தருமகிழ்வுற்றார்.

(இ-ள்.) தூயவன்புக்கு உறைவிடம்நல்கி—பரிசுத்தனாகிய அம்முனிவன் இவர்களுடன் பன்னசாலைக்குட்பிரவேசித்து அவர்கள்தங்கியிருத்தற்குத் தனியிடமளித்து, பூசனைமுறைபேணி-அதிதிகளை உபசரிக்குமுறைப்படி உபசரித்து, தக்கனகனிகாயும் தந்து-உணவிற்குசிதமான கனிகளையும் காய்களையும் கொடுத்து, உளதாரும் அன்பால்தொக்கநல்முறைகூறி - சொல்லப்பட்ட அன்பினால் பொருந்தியநல்ல உபசாரவசனங்களை உரைத்து, உயிர்போலும் மக்களின் அருள் உற்றான் - தன்னுயிரனைய தன்மக்களைப்போல பாவித்து இரக்கங்காட்டினான், மைந்தர்உம் - (பரத்துவாசனுடைய இச்செயல்களைக்கண்டு)இராமலட்சுமணர்களுஞ்சந்தோஷமடைந்தார்கள். எ-று.

பூசனைமுறைபேணல் என்றது அதிதிகளையுபசரிக்குமுறையி லுபசரித்தல் அரசவதிதியாகிய இராமபிரானுக்கு பார்ப்பனமுனிவரானபரத்துவாசர் எவ்வண்ணஞ்செயதல்கூடுமோ அவ்வண்ணஞ் செய்தனனென்பதைவிளக்க "பூசனைமுறை பேணி" என்றார்

உயிர்போலும் மக்களில் என்பதற்கு உயிரனையஅம்மக்களிடத்தில் என்று கூறுவரொருசாரார். உ௯

வைகினர்கதிர் நாறுமளவையின் மறையோனும்
உய்குவமிவனோடியாமுடனுறைதலினென்பான்
செய்தனனினிதெல்லாஞ்செல்வனைமுகமுன்னாக்
கொய்குலமலர்மார்ப கூறுவதுளதென்றான்.

(இ-ள்.) வைகினர்கதிர் நாறும் அளவையின்—பிராட்டியுடன் ஸ்ரீராமலட்சுமணர்கள் சூரியோதயபரியந்தம் அவ்வாசிரமத்திலேயே இருந்தார்கள், மறையோனும்-பரத்துவாசமுனிவனும், இவனொடுயாம் உடன் உறைதலின் உய்குவம்என்பான்-இவ்விராகவனுடன் நாம்கலந்துவாசஞ்செய்வதனால் உய்வேம்என்று கருதி, இனிதெல்லாம்செய்தனன்-இனிமையானகாரியங்களை எல்லாம்செய்து செல்வனைமுகம்உன்னா-ஸ்ரீராமபிரானுடைய திருமுகத்தினைப்பார்த்து, கொய்குல மலர்மார்ப-பறித்தெடுத்துக்கட்டிய சிரேட்டமான மலர்மாலையணிந்த மார்பினையுடையாய், கூறுவது உளது என்றான்-சொல்லவேண்டியது ஒன்றுளது என்று கூறினான். எ-று.

ஸ்ரீராமபிரானது திருவவதார முறைமையினை உணர்ந்துள்ளவர்பரத்துவாசர் என்றுவிளக்குவான் ஆசிரியர் "உய்குவமிவனொடியாமுட னுறைதலில் னென்பான்" என்றார். என்பான்செய்தனன் இவைமுற்றெச்சங்கள். உய்தல்நிரதிசயஇன்பவீடடைதல் ௩0

வேறு.

நிறைநீர்மலர்நெடுங்கனிகிழங்குகாய்நேர்ந்த
குறையுந்தீயவைதூயவைகுறைவிலவெய்மோ
டுறையுமிவ்வழியொருங்கினிதுயர்தவமுயல்வார்க்
கிறையுமீதலாதினியதோரிடமரிதின்னும்.

(இ-ள்.) இவ்வழி—இவ்விடத்தில், சேர்ந்த நீர்மலர்செங்கனி கிழங்குகாய்நிறையும்-விரும்பப்பட்டநீரும்மலரும்செடியபழங்களும்கிழங்குகளும்காய்களும் நிரம்பிநிற்கும், தீயவைகுறையும்-கொடியபொருள்கள்சுருங்கும், தூயவைகுறைவில-பரிசுத்தமானபொருள்கள்மிகுதியாகவுள்ளன, எம்மொடு-எம்முடன், ஒருங்கு இனில் உறையும்-எம்முடனொன்றாக வசித்து, உயர்தவம்முயல்வார்கு-உயர்ந்ததவத்தினைச்செய்பவர்களுக்கு, ஈது அலாது-இதனையன்றி, அரிது இனியது ஓர்இடம்-அருமையாகும் இனிமையான வேறோரிடம், இனும்-அன்றியும் எ-று.

இதுவுமிதற் கடுத்தபாடலும்குளகம்

அருந்தவஞ்செய்வார்க்கு நன்னீருநன்மலருநற்காயுமிக்குடைய நல்லிடமாய் புலிமுதலியதீயவிலங்குகளின் கொடுமை வேடர்முதலியவர்களால் வெகுதுன்பமாதியவின்றி, கருமான்முதலியநல்விலங்குகள் உலவுதலும்நற்றீர்த்தமுடைமையும்மே வண்டுமெனப்பண்டையோர்கருதியாங்கிது சாலச்சிச்சிறந்தது ஆதலினென்னுடனிருத்தி என்றுபலநன்னூனியாயங்களைத்தழுவிப் பரத்துவாசனுரைத்தானென்றிச்கவிவிளக்குதல்காண்க. ௬௧

கங்கையாளொடுகரியவளாமகள் கலந்த
சங்கமாதலிற்பிரியலென்றமரைச்செங்கண்
அங்கநாயகவயனுக்குமருப்பெறற்றீர்த்தம்
எங்கள்போலியர்தரத்ததன் றிருத்திரீண்டென்றான்.

(இ-ள்.) கங்கையாள் ஒடு கரியவள் நாமகள் கலந்தசங்கம் ஆதலின் - கங்காநதியுடன்யமுனையும் சரசுவதியும் சேர்ந்தசங்கமுகம் ஆதலால், பிரியலன்-யான்நீங்காது இவ்விடத்தில் வாசஞ் செய்கின்றேன், தாமரைசெங்கண் அங்கநாயக-தாமரைமலர்போலுஞ்செவ்விய நயனங்களை அங்கமாகவுடையஸ்ரீராமனே, அயனுக்கும்- பிரமதேவனுக்கும், அரும்பெறல் தீர்த்தம்-கிடைத்தற்கரியஇத்தீர்த்தம், எங்கள்போலியர்தரத்தது அன்று- எங்களை ஒத்தவர்களால் எளிதிற்கிடைத்துமுழுகுந்தன்மையினதன்று, ஆதலின் ஈண்டு இருத்திர் என்றான்-ஆலதால்இவ்விடத்தில்இருங்கள் என்று கூறினான். எ-று.

தேவநதிகளிலொன்றின் அருகிலுள்ளவனங்கிடைப்பதே அருமை இதுகங்கையமுனை சரசுவதி என்னு மூன்றுதிவ்யநதிகளின் சேர்க்கையினையுடைய இடம்இவ்விடம் பிரமேந்திராதிகட்கும் அரியவிடம் யான்முன்னைநல்வினையாலீண்டிருக்கின்றேன் ஆதலினிராகவனே என்னுடன் இருத்தி என்றான் பரத்துவாசன்என்பது கருத்து. ௬௨

பூண்டமாதவனவ்வழிவிரும்பினன்புகல
நீண்டதன்றிதுநிறைபுனனாட்டுக்குநடுவாம்
மாண்டசிந்தையவிவ்வழிவைகுவெனென்றால்
ஈண்டயாவருநெருங்குவரென்றனனிராமன்.

(இ-ள்.) பூண்டமாதவன் அவ்வழி விரும்பினன்புகல- தவநியம் பூண்டபரத்துவாசமுனிவன் அவ்வண்ணம் விருப்பங்கொண்டுரைத்தலும், இராமன்-இரா

கவன், மாண்டசிந்தைய- ஒடுங்கியமனதினையுடையோய், நிறைபுனல்நாட்டுக்கு-நீர்வளம் பொருந்திய எனதுகோசலநாட்டிற்கு, இதுநீண்டது அன்று-தூரத்திலுள்ளதன்றும், நணியதும்-பக்கத்திலுள்ளது, இவ்வழிவைகுவன் என்றால்-யான்இவ்விடத்தில் இருப்பேன் ஆனால், ஈண்டையாவரும் நெருங்குவர் என்றனன்-என்னைக்காணக்கருதி அக்கோசலநாட்டிலுள்ளார் அனைவரும் இங்குவந்து நெருங்குவார்கள் என்று கூறினன். எ-று.

முனிவர்சிந்தைக்கு ஒடுக்கமே மாட்சிமையாதலின் மாண்டசிந்தைய எனபதற்கு ஒடுங்கியசிந்தையோய் என்றோம். பிரவிருத்தி நிவிருத்தி யாதிகளினியல்பறியாதார் பலபடக்கூறுவர் "அண்மையினியல்பு" மென்பதால் சிந்தையஎன்பது ஈறுகெட்டு விளியேற்றது. ௧௩

ஆவதுள்ளதேயையகேளாயிரண்டமைந்த
காவதப்பொழிற்கப்புறங்கழிந்தபின்காண்டி
மேவுகாதலின்வைகுதிவிண்ணினுமினிதால்
தேவர்கைதொழுஞ்சித்திரகூடமென்றுளதால்.

(இ-ள்.) ஆவதுஉள்ளதுஎ— நீகூறியது உண்மையே ஆம், ஐயகேள்-இராகவனேகேட்பாயாக, ஐயிரண்டு அமைந்தகாவதப்பொழிற்கு அப்புறங்கழிந்தபின்-பதின்காவததூரம் இந்தப்பூமியைவிட்டுச்சென்றால், தேவர்கைதொழும் சித்திரகூடம் என்று உளது-தேவர்கள்வணங்கும் சித்திரகூடம் என்றமலையொன்றுஇருக்கின்றது, காண்டி-அதனைக்காண்பாய், விண்ணினும் இனிது ஆல்-அதுவானுலகத்திலும் இனிமையானது, ஆகலின் மேவுகாதலின்வைகுதி- அதனால்பொருந்தியவிருப்பதுடன்அவ்விடத்தில் இருப்பாயாக. எ-று. ஆல் அசை.

பொழிலென்றுபூமிக்கும் பெயராதலின்-பூமிஎன்றும் வனமென்றேனும் சோலைஎன்றேனும் உரைக்கினும் பொருந்தும் ஆல்இரண்டும் ஈற்றசைகள்.

சுவர்க்க உலகத்திலுள்ளதேவர்கள் இருப்பிடமாகக்கொள்ளுவார்கள் சித்திரகூடத்தினைதேவர்கள் வணங்குவார்கள் ஆதலின் சுவர்க்கத்திலும் இதுஉயர்ந்ததாகியதுஇதனைவிளக்க, விண்ணினும் இனிது எ-ம்-தேவர்கைதொழும் என்றுங்கூறினர். ௧௪

என்றுகாதலினேயினனடிதொழுதேத்திக்
கொன்றைவேய்ங்குழற்கோவலர்முல்லையங்குடுமி
சென்றுசெங்கதிர்ச்செல்வனுநடுவுறச்சிறுமான்
கன்றுநீர்நுகர்காளிந்தியெனுநதிகண்டார்.

(இ-ள்.) என்றுகாதலின் ஏயினன்—என்றுகூறிவிருப்பத்துடன் அநுப்பினான், அடிதொழுது ஏத்தி-அவர்களும் அப்பரத்துவாசமுனிவருடையபாதங்களை வணங்கித்துதித்து, கொன்றைவேய்ங்குழல் கோவலர்முல்லை அம்குடுமி சென்று-கொன்றைக் குழலினையும் வேய்ங்குழலினையுமுடைய இடையர்களின் முல்லை

வத்தினிறுதியிற்சென்று, செங்கதிர்செல்வனும் கடேஉற-செவ்வியகிரணங்களையுடைய சூரியனும் வானநடுவினை அடைய, சிறுமான்கன்று நீர்நுகர்-சிறியமானின்கன்றுகள் நீரருந்துகின்ற, காளிந்தி எனும் நதிகண்டார்-யமுனை என்னும் ஆற்றினைக்கண்டார்கள். எ-று.

கொன்றைக்குழலும் வேய்ங்குழலும் இடைக்குலமாக்களின் இன்னிசைக்குழல் களாதலின் கொன்றைவேய்ங்குழல் என்றார் இதனை "கொன்றையந்தீங்குழல் கேளாமோதோழி" எனச்சிலப்பதிகாரத்து வருதல் கொண்டுணர்க. ௩௫

ஆறுகண்டனரகமகிழ்ந்திறைஞ்சினரறிந்து
நீறுதோய்மணிமேனியர்நெடும்புனல்படிகதார்
ஊறுமென்கனிகிழங்கினோடுண்டுநீருண்டார்
ஏறியேகுவதெங்ஙனமென்றலுமிளையோன்.

(இ-ள்.) ஆறுகண்டனர் அறிந்து அகம்மகிழ்ந்து இறைஞ்சினர்—யமுனைஆற்றினைக்கண்டுணர்ந்து சந்தோஷித்துவணங்கி,நீறுதோய்மணிமேனியர்-நீறுபடிந்தஅழகியதிருமேனியினர்கள், நெடும்புனல்படிந்தார்-பிரவாகமானஅத்தீர்த்தில் முழுகி,ஊறும்மென்கனி கிழங்கின் ஒடு உண்டு நீர்உண்டார் -தேனூறியமெல்லியபழங்களை கிழங்கொடுகலந்துண்டு நீரருந்தினவர்கள், ஏறி ஏகுவது எங்ஙனம் என்றலும்-இதனைக்கடந்து செல்வது எவ்வாறு என்று கூறுதலும், இளையோன் இலக்குமணன். எ-று. உண்டார் வினையாலனையும்பெயர்

இறைஞ்சினர்படிந்தார் முற்றெச்சங்கள், ஊறும்மென்கனி, சுவையூறியமெல்லியகனி யென்றுமாம்.

யமுனாநதியானது தெய்வஉருவமானதாகப்பாவிக்கப்படுதலின் வணங்கினார்கள் என்றுணர்க. ௩௬

வாங்குவேய்ங்கழைதுணித்தனன்மாணையின்கொடியால்
ஓங்குதெப்பமொன்றமைத்ததினும்பரினுலம்போல்
வீங்குதோளண்ணறேவியோடினிதுவீற்றிருப்ப
நீங்கினானந்தநெடுநதியிருகையானீந்தி.

(இ-ள்.) வாங்குவேய்ங்கழை துணித்தனன்—வளர்ந்தவேய்ங்கழை என்னுமொருசாதி மூங்கிலினைவெட்டி, மாணையின்கொடியால் ஓங்குதெப்பம் ஒன்று அமைத்து-மாணையின்கொடியினால் உயர்ந்ததெப்பமொன்றினைச்செய்து, அதின்உம்பரின் உலம்போல்வீங்குதோள் அண்ணல்தேவிஒடு-அதன்மீதுதிரண்டகற்போலும்பருத்ததோள்களையுடைய இராகவன்தன்நாயகியுடன், இனிதுவீற்றிருப்ப-செவ்வனே ஏறிஇரா சிற்ப, அந்த நெடுநதி-அப்பெரியஆற்றினை இருகையால் நீந்தி நீங்கினான் - இருகரங்களால் நீந்திக்கடந்தனன். எ-று.

தெப்பத்தினைத்தள்ளிக் கொண்டு நீந்தியக்கரை அடைந்தான் என்பது கருத்து.

வேய்ங்கழை ஒருசாதி மூங்கில்விசேடம் மாணை ஒருசாதிக்கொடிவிசேடம்

ஆலைபாய்வயலயோத்தியராண்டகைக்கிளையான்
மாலைமால்வரைத்தோளெனுமந்தரந்திரியக்
காலைவேலையைக்கடந்ததுகழிந்தநீர்கடிதின்
மேலைவேலையிற்பாய்ந்ததுமீண்டநீர்வெள்ளம்.

(இ-ள்.) ஆலைபாய்வயல்—கரும்புகள் மிகுதியாகஉடைய வயல்சூழ்ந்த, அயோத்தியர்ஆண்தகைக்கு இளையான்- அயோத்தியர் தலைவனுன ஸ்ரீராமபிரானுக்குஇளையவன், மாலைமால்வரைதோள் எனும்மந்தரம்திரிய-மாலையணிந்த பெரிய மலையாகியதோளென்னும் மந்தரமலையானது நீந்துதலால் சுழலாநிற்ப, கழிந்தநீர்- விலகியோடியநீர், காலைவேலையைகடந்தது-கீழ்க்கடலைக்கடந்து சென்றது, கடிதின்மீண்டநீர்வெள்ளம்-விரைந்துதிரும்பின சலப்பிரவாகம், மேலைவேலையில்பாய்ந்தது - மேற்கடலிற்சென்றுபுகுந்தது.எ-று,

இதனாலவன் நீந்தலின்றிறம் வெளிப்படுதல் காண்க, காலை பொழுதினைக் காட்டுவதாதலின் ஆகுபெயராய் கீழ்க்கடற்காகியது

ஆலைபாய் என்பதற்கு, கருப்பாலைகளை மிகுதியாக உடைய என்னினு மிழுக்காது

இடதுகரம்துழாவும்போது சழிந்தநீர்காலைவேலையையும்,வலதுகரந்துழாவும்போது மீண்டநீர்மேலைவேலையையும் அடைந்தது என்றுங் கூறலாம்.　௩௭

அனையரப்புனலேறினரக்கரையணைந்தார்
புனையும்வற்கலைபொற்பினர்நெடுநெறிபோனர்
சினையுமூலமும்வேரும்வெந்திருநிலந்தீய்ந்து
நினையுநெஞ்சமுஞ்சுடுவதோர்நெடுஞ்சுரநேர்ந்தார்.

(இ-ள்) அனையர் அப்புனல்எறினர் அக்கரை அடைந்தார்—அவர்கள் அத்தன்மையராய்அவ்வாற்றைக்கடந்துமறுகரையை அடைந்து,புனையும் வற்கலைபொற்பினர்,தரிக்கப்பெற்றமரவுரியினையுடைய அவ்வழகினர், நெடுநெறிபோனர்-நெடுந்தூரஞ்சென்றவர்கள், சினையும் மூலமும் வேரும்வெந்து இருநிலம்தீய்ந்து-கிளைகளும் மூலங்களும் வேர்களும் வெந்து பெரியபூமியும் கருகி,நினையும் நெஞ்சமும்-எண்ணுகின்றமனதும்,சுடுவதுஓர்-சுடுவதாகியஒரு,நெடுஞ்சுரம் நேர்ந்தார்-பெரியபாலை வனத்தினைக்கண்டார்கள். எ-று.

பாலைவனத்திற்கெல்லாம் பட்டமரமுங்கானனீரும் பருக்கைக்கற்களும் கிழப்பாம்புகளும் இருத்தல்வழக்கமாயினும் இது பாலைவனங்களிலில் மிகவுங்கொடியதுஎன்றும் மிகவும் பெரியது எனறும் விளக்குவார், "நினையும் நெஞ்சமுஞ் சுடுவதோர்நெடுஞ்சுரம்"—என்றார்.　௩௮

நீங்கலாற்றளள்சனகியென்றன்னவர்நினைய
ஓங்குவெய்யவனுடுபதியெனக்கதிருகுத்தான்
தாங்குவேங்கடத்துலவைகடமைழகொண்டுதழைத்த
பாங்குவேங்கனல்பங்கயவனங்களாய்ப்பரந்த.

(இ-ள்) நீங்கல் ஆற்றலள்சனகி என்று அன்னவர்நினைய-இவ்வனத்தினைக் கடத்தற்குசீதாபிராட்டியார் வன்மையுடையவளல்லள்என்று அவ்விராமலட்சுமணர் கள்நினைத்ததும் (உடனே), ஓங்குவெய்யவன் உடுபதி எனகதிர் உகுத்தான்-உயர்ந்தசூரியன் சந்திரனைப்போல சீதளகிரணங்களைவிடுத்தனன்-வேங்கடத்து தாங்கு உலவைகள் - வெந்தவப்பாலைக்காட்டினுற்பரிக்கப்பெற்று நின்றபட்ட மரங்கள், தழைகொண்டு-தழைத்ததழைகளைத்தம்மிடத்துக்கொண்டுதழைத்தன, பாங்குவேம்கனல்-பக்கங்களில் எரிந்துகொண்டிருந்தகாடாக்கினிகள், பங்கயவனங்களாய்பரந்த - தாமரையோடைகளாக மாறிப்பரவின. எ-று.

நீங்கல் ஆற்றலள்சனகி என்றன்னவன் நினையஎன்றும்பாட பேதம் ௩௯

வறுத்துவித்தியவனையனவல்லயிற்பரல்கள்
பறித்துவித்தியமலரெனக் குளிர்ந்தன பசந்த
இறுத்தெரிந்தனவல்லிகளிளந்தளிரீன்ற
கறுத்தவாளரவெயிற்றினுளமுதுகக்களித்த.

(இ-ள்) வறுத்துவித்திய அனையனவல் அயில்பரல்கள்—வறுத்து விதைத்தாலனையவலியகூரிய பருக்கைக்கற்கள், பறித்துவித்திய மலர் என-பறித்துப்பரப்பியமலர்களைப்போல, குளிர்ந்தபசந்த-குளிர்ந்து மிருதுவாயின, இறுத்து எரிந்தனவல்லிகள்-பட்டெரிந்தனவாகிய கொடிகள், இளந்தளிர் ஈன்ற-இளயதளிர்களைத்தளிர்த்தன, கறுத்தவாள் அரவெயிற்றினுள் கருமையடைந்த கொலைத்தொழிலினையுடையபாம்புகளின் பற்களினுள், அமுதுகக்களித்த-அமிர்தமொழுகாநிற்பக்களித்தன. எ-று.

சுவையும் கூர்மையும் முரடுமாகவுள்ளனவாதலின் பரல்களை, வறுத்துவித்தியவனையனவல்லயிற்பரல்'' என்றார். அனையனஒப்பில்போலி

குளிர்ச்சியும், மென்மையும்பொருந்தினமையின், மலர் என-என்றார்

தன்னிடத்திதுகாறுமுண்டாகும் விடம்தன்னையுந் துன்புறுத்துவபோல துன்புறுத்தாது இன்புறுத்தியமையான்-அரவங்கள் களித்தனஎன்றுணர்க ௪௰

குழுமிமேகங்கள்குமுறினகுளிர்துளிகொணர்ந்த
முழுவில்வேடருமுனிவரின்முனிவிலருயிரைத்
தழுவிநின்றனபசியிலபகையிலதணிந்த
உழுவையின்முலைமானிளங்கன்றுகளுண்ட.

(இ-ள்.) குழுமிமேகங்கள்—மேகங்கள் நெருங்கி,குமுறின குளிர்துளி கொணர்ந்த-குமுறினவாய்குளிர்ச்சிபொருந்திய நீர்த்துளிகளைகொண்டுவந்தன, முழுவில்வேடரும்-பெரிய வில்லினை உடைய வேடர்களும், முனிவரின் முனிவிலர் - முனிவர்களைப் போல சாந்தசீலர்களானார்கள், உயிரை தழுவி நின்றன பசியில பகையிலதணிந்த உழுவையின்முலை - எல்லாவுயிர்களுடனு நட்புக்கொண்டு பசியின்றிப்பகையுமின்றி சாதுவாகியபுலிகளின் பால்மடிகளில்-இளமான்கன்றுகள் உண்ட-இளயமானின் கன்றுகள்பாலுண்டன. எ-று.

பாலைமுல்லையாகமாறி யதன்றியும் அதன்கருப்பொருளான, இழப்புவிழுந லிய முனிவர்செயலையடைந்து நின்றமைகாண்க

இதுகாறும் வழக்கமில்லாத அப்பாலைக்கன்று மேகங்கள் நீர்த்துளிகளுடன் வந்தன என்பார் கொணர்ந்த-என்றார். ௪௨

கல்லளைக்கிடந்தகடுவெந்தயர்கின்றகதழ்பாம்
பல்லலுற்றிலவலைபுனற்கிடந்தனவனைய
வல்லையுற்றவேய்புற்றொடுமெரிவனமணிவாழ்
புல்லெயிற்றிளங்கன்னியர்தோளெனப்பொலிந்த.

(இ-ள்) கல்அளைகிடந்த—துறுகற்களின் முழைகளிற்கிடந்த, கடுவெந்து அயர்கின்ற கதழ்பாம்பு - விடத்தால் தீய்ந்து வருந்துகின்ற சீற்றத்தினையுடைய பாம்புகள், அல்லல் உற்றில அலைபுனல் கிடந்தஅன அனைய-வருத்தமடையாமல் அலைகளையுடைய நீரிற்கிடந்தாற்போலாயின, புற்றொடும் எரிவனவல்லை உற்றமணிவாழ்வேய்-புற்றுகளுடன் எரிவனவாய், மேட்டுபுறங்களில் நின்றமுத்துக்களையுடையமுதிர்மூங்கில்கள், இளங்கன்னியர் -இளம்பெண்களின், தோள் எனபொலிந்த- தோள்களைப்போல விளங்கின. எ-று.

அப்பாலையில் முன்னர் வருந்திக்கிடந்த பெரும்பாம்புகள் நீர்ப்பாம்புகளைமானக்குளிர்ச்சியுற்றனமுதிர்வேய்கள் இளவேய்களாயின.என்பதுகருத்து. ௪௩

படர்ந்தெழுந்தபுல்பசுந்நிறக்கம்பளம்பரப்பிக்
கிடந்தபோன்றனகேகையந்தோகைகள்கிளர
மடந்தைமாரெனநாடகம்வயின்றொறுநவின்ற
தொடர்ந்தபாணரிற்பாங்கிசைமுரன்றனதும்பி.

(இ-ள்) படர்ந்துஎழுந்த பசும்புல்—படர்ச்சியாகமுளைத்த பசியபுற்கள், பசு நிறக்கம்பளம் பரப்பிகிடந்தபோன்றன-பச்சைநிறமுள்ள கம்பளத்தினைப்பரப்பியிட்டாற்போலதோன்றின-கேகயம் தோகைகள் கிளர்மடந்தைமார் என - கேகயப்பறவைகளும் மயில்களும் விளங்கும்படி நடனமாதர்களைப்போல, வயின்தொறும்-இடங்கள் தோறும், நாடகம்நவின்ற-நாட்கம்ஆடின - தும்பிபாங்கரின். தொடர்ந்த பாணரில் முரன்றன வண்டுகள் அவைகளின் பக்கங்களின் நடனமாதரைப்பின் பற்றிப்பாடும் பாணர்களையொப்ப இசைபாடின' எ-று.

பச்சைப்புற்கள்கம் பள்ளங்களை யொப்பக்காணப்பட்டன கேகயமும்தோகையும் நடனமாதரையொப்ப நடித்தனவண்டுகள் பாணரையொப்ப இசைபாடின இசைபாடல்-ரீங்காரஞ்செய்தல். பாலைவனம் நடனவரங்கு போலாகியது என்று கருத்து. ௪௪

காலமின்றியுங்கனிந்தனகனிநெடுங்கந்தம்
மூலமின்றியுமுகிழ்த்தனநிலனுறமுழுதும்
கோலமங்கையரொத்தனகொம்பர்களின்பச்
சீலமன்றியுஞ்செய்தவம்வேறுமொன்றுளதோ.

(இ-ள்.) காலம் இன்றியும் கனிந்தனகனி — கனியுங்காலமல்லாதிருக் தும் கனிகள்கனிந்தன, செடுக்கந்தம் மூலம் இன்றியும் - செடியகிழங்கும்வேரும் இல்லாதிருந்தும், நிலன்உறமுழுதும் முகிழ்த்தன-அப்பூமிமுழுமையும் கொடி செடிகள் உண்டாயின, கொம்பர்கள் கோலமங்கையர்ஒத்தன-மரக்கிளைகள் அலங்காரஞ்செய்து நிற்கும்மங்கையர்களை ஒப்பாகவிளங்கின, சீலம்அன்றியும்-ஒழுக்கமல்லாமலும், செய்தவம் வேறும் உளதோ-ஒழுக்கத்தினையன்றிச் செய்யப்படுந்தவம் வேறேஉளதோஇல்லை. எ-று.

இவ்விதமாறுபாடுகளெல்லாம் சானகியின் ஒழுக்கங் காரணமாகஉண்டாகியது என்பதுகருத்து. சானகியின் ஒழுக்கங்காரணமாக வென்பதனினும்ராகவனதொழுக்கங்காரணமாகவந்ததென்பது சிறக்குமேயெனிற் சிறக்ாதுசனகியே பாலையைக்கடக்க வருந்துமுறவேண்டியவள்அவள்மெல்லியல் இராகவனுதியர்க்குமுன்னரும்வனசஞ்சாரமுண்டாகியபோது இங்ஙனநில மாறுபாடு கேடகப்படாமையானும் அண்ணல் அதிவீரனும் அதிபலமகாபலாதி மந்திரசித்தனும்ஆதலாலும் இளையோனும் அத்தகையசித்தனேஆதலானும் நீங்கல் ஆற்றலள்சனகி என்றே இவர்கள்கூறியிருத்தலானும், ஒழுக்கமென்றது சானகியின் ஒழுக்கமென்றும்-விரிக்கிற்பெருகும். சரு

ஒழுக்கமே தவமாதலின் "சீலமன்றியும்செய்தவம் வேறுளதோ" என்றார்.

எயினர்தங்கிடமிருடிகளிருப்பிடமேய்ந்த
வயின்வயின்றொறுமணிசிறக்கோபங்கண்மலர்ந்த
பயின்மரந்தொறும்பரிந்தனபேடையைப்பயிலுங்
குயிலிரங்கினகுருந்தநின்றரும்பினமுருந்தம்.

(இ-ள்) எயினர்தங்கிடம்—வேடர்வாசம்செய்யும் இடங்கள், இருடிகள்இருப்பிடமேய்ந்த-முனிவர்கள்வாசஞ்செய்யும் ஆசிரமங்களைஒத்தன, வயின்வயின்தொறும்-இடங்கள்தோறும் இடங்கள்தோறும், மணிசிறக்கோபங்கள் மலர்ந்த-மாணிக்கங்களை ஒத்த இந்திரகோபப்பூச்சிகளுண்டாயின, பயில் மரம்தொறும்-பொருந்திய மரங்களிலெல்லாம்பயிலும் குயில்-வாசஞ்செய்கின்றஆண்குயில், பேடையைபரிந்தன இரங்கின - பெண்குயில்களை நினைந்து-பரிந்து கூவின, குருந்தம் நின்று அரும்பின முருந்தம்- குருந்தமரங்களில்நின்றும்பறவைகள், இறகின் அடிப்புறம் போன்ற அரும்புகள் உண்டாயின.

கொலையும் புலையுமுடையவேடர்கள் சீவகாருண்ணியாதி ஒழுக்கங்களைக் கைப்பற்றினரென்பதனை விளக்க-எயினர் தங்கிட மிருடிகளிருப்பிட மேய்ந்த என்றார். சசு

பந்தருட்புரைபாசறைப்பொருள்வயிற்பருவம்
தந்தகேள்வரையுயிருறத்தழுவினர்பிரிந்த
கந்தவோதியர்சிந்தையிற்கொதிப்பதக்கழலோர்
வந்தபோதவர்மனமெனக்குளிர்ந்ததவ்வனமே.

## அ-வது. சித்திரகூடப்படலம்.



நினையுந்தேவர்க்குநமக்குமொத்தொருநெறிநின்ற
அனகனங்கணனுயிரம்பெயருடையமலன்
சனகன்மாமடமயிற்கந்தச்சந்தனஞ்செறிந்த
கனகமால்வரையியல்பெலாந்தெரிவுறக்காட்டும்.

(இ-ள்.) நினையும் தேவர்க்கும்—தியானஞ்செய்கின்ற தேவர்களுக்கும், நமக்கும்-நம்போல்வார்க்கும், ஒத்து ஒருநெறிநின்ற-ஒத்து ஒருவழியாகநின்ற, அனகன்-பாவரகிதனும், அங்கணன்-அழகியகண்களையுடையவனும், ஆயிரம்பெயர் உடை - சஹஸ்ரநாமங்களையுடைய, அமலன்-நிர்மலனான ஸ்ரீராமபிரான், சனகன்மாமடமயில்கு-சனகராசனுடைய மகளானசிறந்த இளமைவாய்ந்தமயில்போலும்சீதாபிராட்டிக்கு, சந்தனம்செறிந்த-சந்தனமரங்கள்நெருங்கியுள்ள அந்த, கனகமால்வரை-பொன்மயமானபெரியசித்ரகூடமலையின், இயல்பெலாம்-தன்மைமுழுமையும், தெரிவுற-அறியும்வண்ணம், காட்டும் காட்டாநிற்பான் எ-று.

நமக்கும் என்பதற்கு, அடியோங்களுக்கும் எனக்கூறுவாருமுளர்.

இராவணனாதிகளின் துன்பங்களையகற்றல்வேண்டுமெனப்பணிந்திரக்கும்தேவர்கட்கும், இரவாதிருக்குநமக்குந்துன்பநிவர்த்திசெய்வதிலொருதன்மையுடையனென்பார், நினைக்குந்தேவர்க்குநமக்கும்-என்றார், அநகன்-அகமில்லாதவன், அகம் பாவம் அநகம்-பாவமின்மை, ஆதலின், அநகன் என்பதற்குபாவரகிதன் என்றும்.

வாளும்வேலும்விட்டளாயினவனையகண்மயிலே
தாளினேலமுமாலமுந்தொடர்ந்தருசாரல்
நீளமாமலைதுயில்வனநீருண்டகமஞ்சூற்
காளமேகமுநாகமுந்தெரிகிலகாணாய்.

(இ-ள்.) வாளும் வேலும் விட்டு—வாட்படையும் வேற்படையும் ஒளிவீசி, அளாயின அனைய - கலந்தாற்போன்ற, கண்மயிலே-கண்களையுடைய மயில்போல்வாய், தாளின்ஏலமும் மாலமும்-அடிப்புறங்களிற் காய்க்கின்ற ஏலச்செடிகளும் பச்சிலைமரங்களும், தொடர்தருசாரல்-வரிசையாகப்பொருந்தியுள்ள அடிவாரத்தினையுடைய, நீளமாமலை-நீண்டபெரியமலையில், துயில்வன-தூங்குகின்ற, நீர் உண்ட கமஞ்சூல்காளமேகமும் நாகமும்-நீர் அருந்தி நிறைந்தசூலடைந்த கரியமேகமும் அம்மலையும், தெரிகிலகாணாய்-வேற்றுமைதெரியாமையைப் பாராய். எ-று. உ

குருதிவாளெனச்செவ்வரிபரந்தகட்குயிலே
மருவிமால்வரையும்பரிற்குதிக்கின்றவருடை
சுருதிபோற்றெளிமரகதக்கொழுஞ்சுடர்சுற்றப்
பருதிவானவன்பசும்பரிபுரைவனபாராய்.

(இ-ள்.) குருதிவாள்என—இரத்தந்தோய்ந்த வாட்படைபோல, செவ்வரி பரந்தகண்குயிலே - செந்நிறமான அரிபரந்த கண்களையுடையகுயில்போல்வாய்

மால்வரை மருவி-பெரியமலையிற்பொருந்தி, உம்பரில்குதிக்கின்றவருடை-மேலே தாவுகின்றயாகெள், சுருதிபோல்தெளி-வேதம்போலும் தெளிவினையுடைய, மரகதம் செழும்சுடர் சுற்ற-மரகதக்கல்லின் செழுமையான ஒளிசூழ்ந்துகொள்ள, பருதிவானவன்-சூரியனுடைய, பசும்பரிபுரைவன-பச்சைக்குதிரையையொப்பன, பாராய்-காணுய். எ-று. ந

வடங்கொள்பூண்முலைமடமயிலேமைதக்கதமா
அடங்குபேழ்வயிற்றரவுரியமைதொறுந்தொடக்கித்
தடங்கடோறுநின்றுடுவதண்டலையயோத்தி
நடங்குமாளிகைத்துகிற்கொடிநிகர்ப்பனநோக்காய்

(இ-ள்.) வடங்கொள் பூண்முலைமடம் மயிலே—ஆரமணியா லமைக்கப்பெற்றஆபரணமணிந்த தனபாரங்களையுடைய இளமயிலனையாய், மதம்கதம்மா-மதத்தினையும் சீற்றத்தினையுமுடைய யானை, அடங்கும்பேழ் வயிற்று அரவு உரி- அடங்குகின்ற பெரிய வயிற்றினையுடைய பெரும்பாம்பின்தோல், அமைதொறும் தொடக்கி - மூங்கில்கள்தோறும் தொடக்குண்டு, தடங்கள்தோறும் நின்று ஆடுவ-வழிகள்தோறும் நின்றாடுவன, தண்டலைஅயோத்தி-சோலைசூழ்ந்தஅயோத்திமாநகரத்தில், மாளிகை நடங்கும்-மாடங்கள்தோறும்அசைகின்ற, துகில்கொடி நிகர்ப்பனபாராய்- துகிலாலாகிய கொடிகளையொப்பனகாணுய். எ-று.

உவரிவாயன்றிப்பாற்கடலுதவியவமுதே
துவரினீண்மணித்தடந்தொறுமிடந்தொறுந்துவன்றிக்
கவரிபாணிறவால்புடைபெயர்வனசாரற்
பவளமால்வரையருவியைப்பொருவியபாராய்.

(இ-ள்.) உவரிவாய் அன்றி—உப்புக்கடலின்றி, பால்கடல் உதவிய அமுதே-பாலாழி அளித்த அமுதமனையாய், துவரின்நீள்மணிதடந்தோறும் - செந்நிறமணிகளைமிகுதியாகவுடைய வழிகளிலும் -இடந்தோறும், மற்றிடங்களிலும், துவன்றி-நெருங்கி, கவரிபால்நிறவால்சாரலில் புடைபெயர்வன-கவரிமிருகங்களின் பால்போலும் வெண்ணிறமான வால்கள் விரைவிலசையாநிற்பன, பவளமால்வரை அருவியை - பவளத்தாலாகிய பெரிய மலையினின்றும் ஒழுகும் அருவியை, பொருவியபாராய்-ஒத்தனகாணுய். எ-று. ௫

சலந்தலைக்கொண்டசீயத்தாற்றனிமதக்கதமா
உலந்துவீழ்தலிற்சிந்தினவுதிரத்தின்மடவார்
புலந்தகாலையற்றுக்கனக்குங்குமப்பொதியில்
கலந்தமுத்தெனவேழமுத்திமைப்பனகாணுய்.

(இ-ள்.) சலம்தலைகொண்ட—விடாதகோபத்தினை மேற்கொண்ட, சீயத்தால்-சிங்கத்தினுல், தனிகதமா-ஒப்பற்ற சீற்றத்தினையுடையயானை, உலந்துவீழ்

தலில்-இறந்துவிழும்பொழுது, சிந்தின உதிரத்தில்-சிதறினஇரத்தத்தில், மடவார் புலந்தகாலே-பெண்கள் ஊடியபோது, அற்றுஉக்க-அற்றுச்சிதறி, குங்குமப் பொதியில்கலந்த-குங்குமக்குவாலில்கலந்த, முத்தென-முத்தைப்போல, வேழமுத்து இமைப்பன பாராய்- யானைமத்தகமுத்துகள் தந்தமுத்துக்கள் முதலியமுத்துக்கள் பிரகாசிப்பன காணாய். எ-று.

நீண்டமால்வரைமதியுறநெடுமுடிநிவந்த
தூண்டுமாமணிச்சுடரதன்கற்றையிற்சொருக
மாண்டவானிறவருவியர்மழவிடைப்பாகன்
காண்டகுஞ்சடைக்கங்கையைநிகர்ப்பனகாணாய்

(இ-ள்.) நீண்டமால்வரை நெடுமுடி=உயர்ந்தமாட்சிமையான பெரியவிம மலையின்உச்சியில், மதியுற-சந்திரன்வந்துதங்க, மாமணிதூண்டுச்நிவந்த சுடர் சிறந்தமணிகளால் மேலெழுப்பப்பெற்ற உயர்ந்தஒளியானது, அதன்கற்றையில் சொருக, அச்சந்திரனுடைய கிரணக்கற்றையில் சென்றுபொருந்தாநிற்ப-மாண்டவால் நிறஅருவி-மாட்சிமையான வெள்ளைநிறத்தினையுடைய அருவியானது, அமழவிடைபாகன்-அந்தஇளமைவாய்ந்த இடபத்தினையுடைய சிவபெருமானது, காண்தகும்-காணத்தக்க,சடைகங்கையை-சடையில்தரித்தகங்காநதியை நிகர்ப்பன காணாய்-ஒப்பனபாராய். எ-று. ௭

தொட்டமாசுணஞ்சுடரொளிமணியொடுதூங்கி
விட்டசென்றனவிடாமதமழையனவேழம்
வட்டவேங்கையின்மலரொடுநனைந்தனவயங்கும்
பட்டநெற்றியிற்சுற்றியபோல்வனபாராய்.

(இ-ள்.) மாசுணம் தூங்கிவிட்டசென்றன—பாம்புகள் கக்கிவிட்டுசென்ற, சுடர் ஒளிமணியொடுதொட்ட ஒளிவிளங்குகின்ற மணிகளுடனே பொருந்தின, விடாமதமழையன வேழம், நீங்காமதமழையினையுடைய யானைகள்-வட்டம் வேங்கையின்மலர் ஒடும் நனைந்தன, வட்டமான வேங்கையின் அலர்களுடன் நெருங்குகின்றன, வயங்கும்பட்டம்நெற்றியில் - விளங்காநின்ற பட்டமானது நெற்றியினிடத்தில்,சுற்றியபோல்வன பாராய் - சுற்றினதுபோல்வன காணாய். எ-று.

இழைந்தநூலினைமணிக்குடஞ்சுமக்கின்றதென்ன
குழைந்தநுண்ணிடைக்குவிஇளவனமுலைக்கொம்பே
தழைந்தசந்தனச்சோலைதன்செலவினைத்தடுப்ப
நுழைந்துபோகின்றதொக்கின்றமதியினைநோக்காய்.

(இ-ள்.) இழைந்த மிகவுநுணுகிய—நூல்இனை மணிக்குடம் சுமக்கின்றது என்னநூலானது இரண்டு அரதனகலசங்களைசுமந்து நின்றாற்போல, குழைந்த நுண் இடை குவிஇளவன முலைகொம்பே-துவளுகின்றநுணுகிய இடையினையும் குவிந்தஇளமைவாய்ந்த அழகிய தனபாரங்களையும் உடைய பூங்கொம்பு போல்

சீலமின்னதென்றருந்ததிக்கருளியதிருவே
நீலவண்டினம்படிந்தெழவளைந்துடனிமிர்வ
சோலைவேங்கையின்கொம்பர்கள்பொன்மலர்தூவிக்
காலினிற்றொழுதெழுவனநிகர்ப்பனகாணுய்.

(இ-ள்.) சீலம் இன்னதுஎன்று அருந்ததிக்கு அருளியதிருவே—ஒழுக்கத்தினை இவ்விதமானதுஎன்று அருந்ததிக்கு உபதேசித்ததிருவனையாய், நீலம்வண்டுஇனம்-நீலவன்னமானவண்டின் கூட்டங்கள், படிந்துஎழ-மொய்த்துமேலெழு, வளைந்துஉடன்நிமிர்வ-அவைபடியுங்கால் வளைந்து அவைஎழுங்கால் நிமிர்வனவாகிய, கோலம் வேங்கைஇன - அழகியவேங்கைமரங்களின், கொம்பர்கள்-கொம்புகள், பொன்மலர் தூவி - பொன்போன்றமலர்களை இறைத்து, காலில்நின் தொழுதுஎழுவன - கால்களில் பின்னைவணங்கி எழுவதனை, நிகர்ப்பன காணுய்-ஒப்பனபாராய். எ-று. கக

விற்கொள்வாணுதல்விளங்கிழையிளந்தளிர்க்கொழுந்தே
எற்கொண்மால்வரையும்பரினிருப்புனங்காக்குங்
கொற்கொள்வேற்கணூர்குரீஇயினத்தெறிகுருவிந்தக்
கற்கள்வானிடைமீனெனவீழ்வனகாணுய்.

(இ-ள்.) வில்கொள்வாள் நுதல்—வில்லினை ஒத்தஒளிபொருந்திய நுதலினையும், விளங்குஇழை-பிரகாசிக்கின்ற ஆபரணமணிந்த, இளம்தளிர்கொழுந்தே-இளந்தளிர்க்கொழுந்தனையாய், எல்கொள்மால்வரை உம்பரின்-சூரியனைத்தன்மீது கொள்ளும்பெரியமலையினுச்சியில், இருப்புனம் காக்கும்-பெரியதினைப்புனத்தினைக்காக்கின்ற, கொல்கொள்வேல்கணூர் - கொலையைத்தலையிற்கொண்டுள்ள வேற்படைபோலுங்கண்களையுடைய குறமடைந்தையர், குரீஇஇனத்து-குருவிகளின்கூட்டத்தில், எறிகுருவிந்தக்கற்கள்-எறிந்தகுருவிந்தமென்னும்மணிகள், வானிடைமீன்என-ஆகாயத்தின்கண்ணுள்ள நட்சத்திரங்களின் வீழ்ச்சியைப்போல-வீழ்வனகாணுய்-வீழ்தலைப்பாராய் எ-று. கஎ

வரிகொளொண்சிலையவர்தங்கவணிச்சியின்மறிந்த
பரியகாரகில்சுடநிமிர்பசும்புகைப்படலம்
அரியவேதியராகுதிப்புகையொடுமளவிக்
கரியமால்வரைக்கொழுந்தெனப்படர்வனகாணுய்.

(இ-ள்.) வரிகொள் ஒள்சிலை—கட்டப்பட்ட ஒள்ளியவில்லினையுடைய, வயவர்தம்கணிச்சியின்-வீரர்களான வேடுவர்களுடையகோடரிகளால் மறிந்தபரியகார் அகில்-விழுந்தபெரியகரிய அகில்கள், சுடநிமிர் பசும்புகைபடலம், சுடுதலாலுண்டாகிமேற்செல்லுகின்ற பசியபுகையின் படலங்கள், அரியவேதியர் ஆகுதிபுகையொடும் அளவி-அருமையானமறையோர்களின் ஆகுதிப்புகையுடையனே கந்து, கரியமால்வரைகொழுந்துஎன-கரியபெரியமலையின் கொழுந்தைப்போலப் படர்வன, செல்வன, காணுய் பாராய். எ-று. கஅ

மணவலையைகூந்தலினின்றும்,கழித்து நீக்கிய-கழித்தகற்றிய, கற்பகநறுமலர்-கற்பகத்தின் நல்லமாலை, மாமணிகொழித்த-சிறந்தமணிகளைச்சிதறுகின்ற, அருவியொடிழிவனகாணாய், அருவியுடன்கலந்து இறங்குவனபாராய். எ-று. உ௪

அறைகழற்சிலைக்குன்றவரகன்புனங்காவற்
பறையெடுத்தொருகடுவனின்றடிப்பதுபாராய்
பிறையையெட்டினள்பிடித்திதற்கிதுபிழையென்னாக்
கறைதுடைக்குறுபேதையோர்கொடிச்சியைக்காணாய்.

(இ-ள்.) அறைகழல்சிலைகுன்றவர்—சத்திக்கின்றவீரகண்டையணிந்தகாலினையும்வில்லினையும்உடையவேடுவர்களின், அகன்புனம் காவல்பறை-அகலமான புனத்திற்குக்காவலாக முழக்குதற்குவைத்திருக்கும்பறைஎன்னும் தோற்கருவியினை, ஒருகடுவன்எடுத்து-ஒரு ஆண்குரங்குஎடுத்து, அடிப்பதுபராய்-அடிப்பதனைப் பாராய், பிறையைஎட்டினள் பிடித்து- இளம்பிறையை எட்டிப்பிடித்து, இதற்கு இதுபிழைஎன்னா-இச்சந்திரனுக்கு இதுகூடாது என்று, கறைதுடைக்குறு-களங்கத்தினைத்துடைக்கின்ற, பேதையோர்கொடிச்சியைகாணாய்-அறிவிலியானஒருவேடிச்சியைப்பாராய். எ-று.

அடுத்தபல்பகலன்பரிற்பிரிந்தவரென்ப
தெடுத்துநந்தமக்கியம்புவதெனக்கரிந்திருண்ட
தொடுத்தமாதவிச்சூழலிற்சூரமகளிர்
படுத்துவைகியபல்லவசயனங்கள்பாராய்.

(இ-ள்.) அடுத்தபல்பகல்—ஒன்றோடொன்றுவிடாது வரும்பலதினங்கள், அன்பரில் பிரிந்தவர்என்பது-தலைவரிற்பிரிந்திருந்தவர்களென்பதனை, எடுத்துநங்கட்குஇயம்புவது என-நமக்கெடுத்துக்கூறுமாறுபோல - தொடுத்தமாதவிசூழலில் ஒன்றுடனொன்று பின்னிக்கிடக்கின்ற குருக்கத்திச்சோலையில், சூரமகளிர்-சூரமகளிர்என்னும் பெண்கள், படுத்துவைகிய - சயனித்திருந்த, கரிந்து இருண்ட கருகி - இருணிறமான, பல்லவசயனங்கள் - தளிர்களானபடுக்கைகளை, பாராய் காணாய். எ-று. உ௫

தலைவரின்மையாலுண்டான காமசுரத்தால் பல்லவசயனம் வதங்கிப்பதனழிந்தது என்றுணர்க.

நினைந்தபோதினுமமிர்தொக்குநேரிழைநிறைதேன்
வனைந்தவேங்கையிற்கோங்கினில்வயின்றொறுந்தொடுத்துக்
குனிந்தவூசலிற்கொடிச்சியரெடுத்தவின்குறிஞ்சிக்
கனிந்தபாடல்கேட்டணமாவருவனகாணாய்.

(இ-ள்) நினைந்தபோதினும்—எண்ணினும், அமிர்து ஒக்கும் நேரிழை-அமிர்தினை ஒத்துவிளங்கும்சனகி, நிறைதேன்வனைந்த வேங்கையின்-நிரம்பியதேனீக்களால் அலங்கரிக்கப்பட்டவேங்கைமரங்களிலும், கோங்கினில்-கோங்கிலவமரங்களிலும், வயின்தொறும் தொடுத்து குனிந்தஊசலில் - இடங்கள்தோறும் கட்டி

தாழ்ந்துவிளங்குகின்ற ஊஞ்சல்களில், கொடிச்சியர் எடுத்தஇனிகுறிஞ்சி-குறத்தியர்கள் தூக்கியஇன்யகுறிஞ்சிப் பண்ணினையுடைய, களிர்தபாடல்-களிவினையுடைய ஊஞ்சற் பாட்டினைகேட்டு, அசுணமாவருவக் காணாய் - அசுணமாஎன்னும் பறவைவருவனபாராய். எ-று. ௨௪

அசுணமாவென்பது இசையில் விருப்பமுள்ள ஒருசாதிப்பறவைக்குபெயர் கேகயப்புள் என்றுங்கூறுவர்

இலவுமிந்திரகோபமும்புரையிதழினியோய்
அலவுறுதண்டுளியருவிநீரரம்பையராடக்
கலவைசாந்துசெங்குங்குமங்கற்பகங்கொடுத்த
பலவுந்தோய்தலிற்பரிமளங்கமழ்வனபாராய்.

(இ-ள்.) இலவும் இந்திரகோபமும் புரைஇதழ் இனியோய்—இலவலரினையும் இந்திரகோபத்தினையும் ஒத்தஅதரத்தினைஉடைய இனிமையானவனே, அலவும்துண்துளி-அசைகின்ற நுண்ணிய துளிகளையுடைய, அருவிநீர் - அருவிநீரானது, அரம்பையர்ஆட - அரம்பைமாதர் குளிக்க, கலவைச்சாந்து செங்குங்குமம்-கலவையாக அமைக்கப்பெற்ற சந்தனமும் செந்நிறமான குங்குமமும், கற்பகங்கொடுத்த-கற்பமளித்த, பலவும் தோய்தலில்-மலர்மாலைமுதலியபலபொருள்களும்தோய்தலினால்,பரிமளம் கமழ்வன பாராய்-நறுமணம் வீசுவனபாராய். எ-று.
அலையும் எனற்பாலது-எதுகைநோக்கி அலவுமென்றாயது, எ-று. ௨௫

செம்பொனாற்செய்துகுலிகமிட்டெழுதியசெப்போர்
கொம்பர்தாங்கியதெனப்பொலிவனமுலைக்கொடியே
அம்பொன்மால்வரையலர்கதிருச்சிசென்றணுகப்
பைம்பொன்மாமுடிமிலைச்சியதொப்பதுபாராய்.

(இ-ள்.) செம்பொனால் செய்து—செவ்வியபொன்னினால்செய்து,குலிகம் இட்டெழுதிய-இங்குலிகவண்ணந்தீட்டிய, செப்பு ஓர் கொம்பர்தாங்கியது என-செப்பினை ஒருபூங்கொம்பு ஏந்திநின்றாற்போல, பொலிவனமுலைகொடியே-விளங்குகின்ற அழகிய தனபாரங்களையுடைய கொடிபோல்வாய்; அம்பொன்மால்வரைஉச்சி-அழகிய பொன்வடிவமான இம்மலையின் தலையில், அலர்கதிர்சென்று அணுக-விளங்காநின்ற சூரியன்வந்து பொருந்த, பைம்பொன்மாமுடி-பசியபொன்னாலாகியசிறந்தமகுடத்தினை, மிலைச்சியது ஒப்பதுபாராய்-தரித்ததனை ஒப்பதைக்காணாய். எ-று. ௨௬

மடந்தைமார்களிற்றிலதமேமணிநிறத்திணிகல்
தொடர்ந்தபாறையில்வேயினஞ்சொரிகதிர்முத்தம்
இடந்தொறுங்கிடந்திமைப்பனவெக்களஞ்செக்கர்
படர்ந்தவானிடைத்தாரகைநிகர்ப்பனபாராய்.

(இ-ள்.) மடந்தைமார்களில்—பெண்களுள், திலதமே-திலதம் போன்றவளே, மணிநிறம்திணிகல்-செம்மணிபோலும் நிறத்தினையுடைய அழுத்தமான

கற்கள், தொடர்ந்த பாறையில்-தொடர்ந்துள்ளபாறைகளில்,வேய்இனம் சொரி கதிர்முத்தம்-மூங்கில் கூட்டங்கள் சொரிகின்ற ஒளியினையுடைய முத்துக்கள், இடந்தொறும் கிடந்து இமைப்பன, இடங்கள்தோறும் கிடந்து விளங்குவன, எச்சு.இளஞ்செக்கர் தொடர்ந்த வானிடை-உயர்ந்த இளஞ்செக்கர்தோன்றிய ஆகாயத்தில், தாரகைநிகர்ப்பனபாராய்-நட்சத்திரங்களை ஒப்பனபாராய். எ-று.

குழலுநுண்டொளைவேயினுங்குறிநரம்பெறிவுற்
றெழுவுதண்டமிழ்யாழினுமினியசொற்கிளியே
முழுவதும்மலர்விரியநாண்முருக்கிடைமிடைந்த
பழுவம்வெங்கனற்கதுவியதொப்பனபாராய்.

(இ-ள்) குழலு நுண்டொளை வேயினும்—நெருங்கியநுண்ணியதொளைகளை யுடைய வேய்ங்குழலினும், குறிநரம்பு எறிவுற்று எழுவுதண்தமிழ்யாழினும்-குறிக்கப்பட்டநரம்பிதனைத்தட்ட எழுப்புகின்ற குளிர்ந்த இனிமையானயாழோசையினும்,இனியசொல்கிளியே - இனிமையான சொல்லினையுடைய கிளிபோல்வாய்-முருக்கிடை நாண்மலர் முழுவதும் விரிய - முருக்கமரங்களில் நாண்மலர்கள்முழுமையும் அலர, மிடைந்த பழுவம் - நெருங்கியவனமானது, வெங்கனல் கதுவியது ஒப்பனபாராய்-வெவ்வியதீபற்றிக் கொண்டதை ஒப்பனபாராய்.

முருக்கிலிது செம்முருக்கென்றுணர்க.

வளைகள்காந்தளிற்பெய்தனவளையகைம்மயிலே
தொளைகொடாழ்தடக்கைநெடுந்தருத்தியிற்றூக்கி
அளவின்மூப்பினரருந்தவர்க்கருவிநீர்கொணர்ந்து
களபமால்கரிகுண்டிகைசொரிவனகாணாய்.

(இ-ள்.) வளைகள் காந்தளில் பெய்தனைய—வளையல்களை காந்தண் மலரிலிட்டுவைத்தாற்போன்ற, கைம்மயிலே-கைகளையுடைய மயில் போல்வாய், களபமால்கரி-களபமென்னும் பெயரினவான சிறந்தயானைகள், தொளைகொள்-துவாரம்பொருந்திய, தாழ்தடக்கை-தாழ்ந்தவிசாலமான கைஎன்கிற, நெடுந்தருத்தியில் தூக்கி-நெடியதுருத்தியிலெடுத்து, அளவுஇல்மூப்பினர்-மிகவும்முதிர்ந்த, அருந்தவர்க்கு, அருமையான தவசிகட்கு-அருவிநீர்கொணர்ந்து, அருவிநீரினை கொண்டுவந்து குண்டிகை சொரிவனபாராய் - கமண்டலத்தில்விடுவனபாராய்.

வடுவின்மாவகிரிவையெனப்பொலிந்தகண்மயிலே
இடுகுகண்ணினரிடருறுமூப்பினரேக
நெடுகுகூனல்வானீட்டினவுருகுறுநெஞ்சக்
கடுவன்மாதவர்க்கருநெறிகாட்டுவகாணாய்.

(இ-ள்) மாவடுவின்வகிர் இவைஎன பொலிந்த—மாம்பிஞ்சின் பிளவுஇவையென்று கூறுமாறு பொலிந்த, கண்மயிலே - கண்களையுடைய மயில் போல்வாய், இடுகுகண்ணினர் - மூடப்பெற்றகண்களையுடையவர்களும், இடர்உறு - வருந்துகின்றவர்களும், மூப்பினர் - வயது முதிர்ந்தவர்களுமாகிய,

மாதவர்க்கு மிகுந்ததவமுடையவர்களுக்கு, ஏகல்-செல்லுதற்கு, அருநெறி-அரியமார்க்கத்தினை, உருகுஉறு நெஞ்சம்கடுவன் - உருகுகின்ற உள்ளத்தினையுடைய ஆண்குரங்குகள், நெடுகூனல்வால் நீட்டின-நெடியவளைந்தவால்களை நீட்டி, காட்டுவகாணாய்-காட்டுகின்றனபாராய்: எ-று. ௧௦

பாந்தடேரிவைபழிபடப்பரந்தபேரல்குல்
ஏந்துநூன்மணிமார்பினராகுதிக்கியைந்த
கூந்தன்மென்மயிற்குறுகினநெடுஞ்சிறைகோலிக்
காந்துகுண்டத்தின்வயங்கெரியெழப்புவகாணாய்.

(இ-ள்) பாந்தளதேர்இவை பழிபடப்பரந்த—பாம்புந்தேருமுதலிய இவைகள் பழிப்படையுமாறு அகன்ற, அல்குல்-அல்குலினையுடையாய், ஏந்துநூல் மணிமார்பினர்-நூலேந்திய அழகியமார்பினையுடையமுனிவர்கள்செய்யும், ஆகுதிக்கு-ஓமாகுதிக்கு, இயைந்தகாந்து குண்டத்தின்-பொருந்திய ஒளிவிடுகின்ற அக்கினிகுண்டத்தில், வயங்குஎரி-விளங்குகின்ற அக்கினியை, கூந்தல்மெல்மயில் குறுகினநெடும் சிறைகோலி-தோகையினையுடைய மெல்லிய மயில்கள்சென்று, நெடியஇறகால்விசிறி, எழுப்புவகாணாய்-சோலிக்கச்செய்தலைப்பாராய் எ-று.

அலம்புவார்குழலாய்மயிற்பெண்ணருங்கலமே
நலம்பெய்வேதியர்மார்பிறைக்கியைவுறநாடிச்
சிலம்பிபஞ்சினிற்சிக்கறத்தெரிந்தநூறோராம்
பலம்பெய்மந்திகளுடன்வந்துகொடுப்பனபாராய்.

(இ-ள்) அலம்பும் வார்குழல்—அசைகின்ற நீண்டகூந்தலினையும், ஆய்மயில் பெண் அருங்கலமே-அரியமயிலின் சாயலினையும் உடையபெண்களுள்ஆபரணம் போல்பவளே, நலம்பெய்வேதியர்-நன்மையைச்செய்கின்ற பிராமணர்களுடைய, மார்பினுக்கு-மார்பத்திற்கு, இயைவுஉறநாடி-பொருந்தும்வண்ணம்ஆராய்ந்து, சிலம்பி-சிலம்பிப்பூச்சிகளின், பஞ்சினில் சிக்கறதெரிந்தநூல்-பஞ்சினுள்சிக்கின்றி அமைத்தநூல்களை, தேன்மாம்பலம்பெய்-தேன்மாம்பழங்களைக் கொடுக்கின்ற, மந்திகள்-குரங்குகள், கொடுப்பனபாராய்-கொடுப்பனபாராய் எ-று. ௧௨

தெரிவைமார்க்கொருகட்டளையெனச்செய்ததிருவே
பெரியமாக்களிற்பலாக்களிற்பிறங்கியவாழை
அரியமாக்கனிகடுவன்களன்புகொண்டளிப்பக்
கரியமாகிழங்ககழ்ந்தனகொணர்வனகாணாய்.

(இ-ள்.) தெரிவை மார்க்கு—பெண்களுக்கு, ஒருகட்டளைஎன செய்த திருவே-ஒரு உரைகல்லைப்போலஅமைக்கப்பட்ட திருமகளே, பெரியமாகளில்-பெரியமாமரங்களிலும், பலாகளில்-பலாமரங்களிலும், பிறங்கியவாழை-விளங்குகின்ற வாழைகளிலும் உள்ள, அரியமாகனி-அருமையான சிறந்தபழங்களை, கடுவன்கள்-ஆண்குரங்குகள், அன்புகொண்டு அளிப்ப-அன்புகொண்டு முனிவர்கட்கு அளிப்பனவும், கரியமா-காட்டுப்பன்றிகள், கிழங்குஅகழ்ந்து-கிழங்குகளைத் தோண்டி, கொணர்வனகாணாய்-கொண்டுவருதலையும்பாராய், எ-று. ௧௩

ஐவனக்குரறினைக்கதிரிறுங்கவையவரை
மெய்வணக்குறுவேயினமீன்றமெல்லரிசி
பொய்வணக்கியமாதவர்புரைதொறும்புகுந்தன்
கைவணத்தவாய்க்கிள்ளைதந்தளிப்பனகாணாய்.

(இ-ள்.) ஐவனக்குரல்—மலைநெல்லின் கதிர்க் குலைகளையும், தினைக்கதிர்-தினையின்கதிர்களையும், இறுங்கு-மக்காசோளத்தினையும், அவரை-அவரைக்காய்களையும், மெய்வணக்குறுவேய் இனம்ஈன்றமெல்அரிசி-காலையிலுடலைவளைத்து நிற்பதாகியமூங்கிலின் சாதிகள் உதிர்த்த மெல்லியஅரிசிகளையும், பொய்வணக்கிய-பொய்யினை அடக்கிய, மாதவர்புரைதொறும்-முனிவர்களின் ஆசிரமங்கள் தோறும், புகுந்து-சென்று, உன்கைவணத்தவாய்க்கிளளை-உனதுகைநகத்தின் நிறமானவாயினையுடைய கிளிகள், தந்தளிப்பனகாணாய்-கொடுப்பனபாராய்,

அவை-பகுதிபொருள்விகுதி, தந்தளிப்பன-ஒருமொழி.

இடிகொள்வேழத்தையெயிற்றொடுமுடனுடன்விழுங்கும்
கடியமாசுணங்கற்றறிந்தவரெனவடங்கிச்
சடைகொள்சென்னியர்தாழ்விலர்தாமிதித்தேறப்
படிகடாமெனத்தாழ்வரைகிடப்பனபாராய்.

(இ-ள்.) இடிகொள்—இடிபோலுஞ்சொளியினையுடைய, வேழத்தை எயிற்றுடன்-யானையைக்கொம்புடன், விழுங்கும்-விழுங்குகின்றகொடியபாம்புகள், கற்றுஅறிந்தவர்என அடங்கி-கற்கவேண்டிய வைகளைக்கற்று அடங்கினவர்களைப்போல அடங்கி, சடைகொள்சென்னியர்-சடையினையுடையதலையினரான முனிவர், தாழ்விலர்தாம் மிதித்து ஏற-தாழ்க்காது மிதித்துஏறுதற்கு படிகள்தாம்என-படிகளைப்போல, தாழ்வரை கிடப்பனபாராய்-அடிவாரத்தில் கிடத்தலைக்காணாய், எ-று, தாமிரண்டும் அசைகள். கடு

அசும்புபாய்வரையருந்தவமுடித்தவர்துணைக்கட்
டசும்புவேய்ந்தவரொத்தவர்தமக்குவிண்டருவான்
விசும்புதூர்ப்பனவாமெனவெயிலெனவிளங்கும்
பசும்பொன்மானங்கள்போவனவருவனபாராய்.

(இ-ள்.) அசும்புபாய்வரை—வழுவழுதத நீர்கசிந்துபாய்தலையுடையஇம்மலையில், அருந்தவம்முடித்தவர்தமக்கும்-அரியதவத்தினைமுடித்தவர்களுக்கும், துணைகண்-இருவிழிகளும், கசும்புவேய்ந்தவர்ஒத்தவர்தமக்கும்-பொன்னிறவியற்றப்பட்டாங்கு மூடப்பெற்றவர்கட்கும், விண்தருவான்-சுவர்க்கத்தினை அளிக்கும் பொருட்டும், விசும்புதூர்ப்பன ஆம்என-விண்ணினைநிறைத்தமையையொப்ப, வெயில்எனவிளங்கும்-சூரியனைப்போல பிரகாசிக்கின்ற, பசும்பொன் மானங்கள்-பசியபொன்விமானங்கள், போவனவருவனபாராய்-போவனவும்வருவனவும்பாராய், எ-று.

இனையயாவையுமேந்திழைக்கியம்பினன்காட்டி
அனையமால்வரையருந்தவரெதிர்வரவணங்கி

வினையினீக்கியவேதியர்விருந்தினனுனன்
மனையின்மெய்யெனுமாதவம்புரிந்தவன்மைந்தன்.

(இ-ள்.) இனையயாவையும்—இத்தகைய வகைத்தினையும், எந்திழைக்கு இயம்பினன்காட்டி-சானகிக்குரைத்துக்காட்டி, அனையமால்வரை அருந்தவர்-அந்தப்பெரியமலையில் வசிக்குமரியமுனிவர்கள், எதிர்வர-எதிரேவர, வணங்கி அவர்களைநமஸ்கரித்து, வினையின் நீங்கிய-வினைகளினின்றும் விலகின, வேதியர் விருந்தினன் ஆனான்-அம்மறையவர்களின் அதிதியாகவானான், மனையில் மெய் எனும் மாதவம்புரிந்தவன்மைந்தன்-இல்லறத்திலிருந்து உண்மை விரதமே உயர்ந்த தவமாகக்கொண்டிருந்த சக்கரவர்த்தி திருமகன். எ-று. ௰௭

இல்லறமுறையில் வழுவாசவனுதலின்-மெய்யெனுமாதவன் என்றார்,

வேறு.

மாவியலுதயமார்துளபவானவன்
மேவியபகையிருளவுணர்வீய்ந்துகக்
காவியல்குடவரைக்காலநேமிமேல்
ஏவியதிகிரிபோலிரவியேகினான்.

(இ-ள்.) மாஇயல் உதயம் ஆர் துளபவானவன்—சிறந்தநன்மைகளையுண்டாக்குகின்ற துளபமாலையையணிந்த திருமால், மேவியபகை இருள் அவுணர் வீய்ந்துஉக-பொருந்திய இருட்பகைவராகிய அசுரர்கள்கெட்டழிய, காஇயல்குடவரைகால நேமிமேல்-சோலைகளோடு கூடிய அஸ்தகிரியாகிய காலநேமி என்னும்அசுரன்மீது, ஏவியதிகிரிபோல் - விட்டசக்கரம்போல், இரவிஏகினான்-சூரியன்சென்றான். எ-று. ௰௮

இனி-மாவியலுதையமார்துளபவானவன் என்பதற்கு - மகத்தான இயல்பினையுடைய உதயகிரியாகிய நாரணன் என்று கூறினும்அமையும்.

சக்கரந்தானவனுடலிற்றாக்குற
எக்கியசோரியிற்பரந்ததெங்கணும்
செக்கரத்தீயவன்வாயிற்றீர்ந்துவே
றுக்கவான்றனியெயிறொத்ததிந்துவே.

(இ-ள்.) சக்கரம்வானவன் உடலில்தாக்குற—சக்கரமானது அவ்அசுரன் உடலிற்பட, எக்கியசோரியில்-ஒழுகிய இரத்தத்தைப்போல, செக்கர் எங்கணும் பரந்தது-செவ்வானம் எவ்விடத்திலும்பரவியது, அத்தீயவன்வாய்ல்தீர்ந்துவேறு உக்க-அக்கொடியவனதுவாயினின்றும் நீங்கி வேறாகவிழுந்த, வான்தனிஎயிறு ஒத்தது இந்து-பெரியஒரு வக்கிரதந்தத்தினை ஒத்தது சந்திரன். எ-று. ௰௯

செவ்வானம் அசுரனிரத்தம் போலவும் சந்திரன் வக்கிரதந்தம்போலவும் இருந்தது என்பது கருத்து.

ஆனனமகளிருக்களித்ததாமரைப்
பூநனிமுகிழ்த்தனபுலரிபோனபின்
மீனெனவிளங்கியவெள்ளியாம்பல்வீ
வானெனமணித்தடமலர்ந்தவெங்குமே.

(இ-ள்.) ஆனனம் மகளிருக்கு அளித்ததாமரைப்பூ—முகத்தினை பெண்களுக்களித்த தாமரைமலர்கள், நனி முகிழ்த்தன-மிகவுங்குவிந்தன, புலரிபோனபின்மீன்என-வைகறைப்பொழுது கழிந்தபின்னர் நட்சத்திரங்களைபபோல, விளங்கிய வெள்ளிஆம்பல்வீ - பிரகாசித்த வெள்ளாம்பல் புட்பங்கள், வான் எனமணிதடம் எங்கும் மலர்ந்த-ஆகாயத்திற்போல நீரினையுடைய தடாகங்கள் முழுதிலு மலர்ந்தன. எ-று. சு0

மந்தியுங்கடுவனுமரங்கணோக்கின
தந்தியும்பிடிகளுந்தடங்கணோக்கின
நிந்தையில்சகுந்தங்கணீளநோக்கின
அந்தியைநோக்கினனறிவைநோக்கினன்.

(இ-ள்.) மந்தியும் கடுவனும்—பெண்குரங்குகளும்ஆண்குரங்குகளும், மரங்கள்நோக்கின-மரங்களைப்பார்த்தன, தந்தியும் பிடிகளும் தடங்கள் நோக்கின-ஆண்யானைகளும் பெண்யானைகளும் மலைப்பக்கங்களைநாடின, நிந்தைஇல்சகுந்தங்கள்-இழிவற்றபறவைகள், நீளம் நோக்கின-தூரமானதஞ்சேக்கைகளை பார்த்தன, (அப்பொழுது) அறிவைநோக்கினன்அந்தியைநோக்கினன்-ஞானதரிசனியான ஸ்ரீராமபிரான் அவ்வந்திப்பொழுதினைக்கண்டான். எ-று. சுக

மொய்யுறுநறுமலர்முகிழ்த்தவாஞ்சில
மையறுநறுமலர்மலர்ந்தவாஞ்சில
அய்யனோடிளவற்குமமிழ்தனாளுக்கும்
கய்களுங்கண்களுங்கமலப்போன்றவே.

(இ-ள்.) மொய்யுறு—வண்டுகள்பொருந்திய, நறுமலர்சில-நல்லமலர்சில, முகிழ்த்தஆம்-குவிந்தன, மையறு நறுமலர்சில மலர்ந்தஆம் - குற்றமற்ற நல்ல மலர்கள்சிலமலர்ந்தன, அப்பொழுதுஐயனொடுஇளவற்கும் அமுதுஅனாளுக்கும்-ஸ்ரீராமபிரானுடன் இலக்குமணனுக்கும்சானகிக்கும், கைகளும் கண்களும் கமலம்போன்ற-அத்தங்களுநயனங்களு கமலமலரினையவாயின, எ-று. சுஉ

கைஎனற்பாலது எதுகையையும் சந்தத்தினையுநோக்கி கய் என நின்றது கய்-போலி,

மாலைவந்தகன்றபின்மருங்கிலாளொடும்
வேலைவந்துறைவிடமேயதாமெனக்
கோலைவந்தமிழ்சிலைத்தம்பிகோலிய
சாலைவந்தெய்தினன்றவத்தினெய்தினன்.

(இ-ள்.) கோலேவந்து உமிழ்சிலை—அம்புகளைவெளிப்படுத்துகின்ற, விற்படையினையுடைய, தம்பி-இலக்குமணன், கோலிய-இயற்றிய, சாலே-பன்னசாலையில், வேலைவந்து உறைவு இடம்மேயது ஆம்என-கடலோரிடத்துவந்து தங்கினாற் போல, மாலைவந்து அகன்றபின்-மாலைப்பொழுது கழிந்தவுடனே, மருங்கிலாளொடும் - இல்லையென்று கூறத்தக்க இடையினளான சீதாபிராட்டியுடனே, வந்து எய்தினன்-வந்துசேர்ந்தான், தவத்தின் எய்தினன்-தவநிலையில் நிற்பான் போந்த ஸ்ரீராமபிரான், எ-று. கோலேவந்து ஒருமொழி. ௪௩

நெடுங்கழைக்குறுந்துணிநிறுவிமேனிரைத்
தொடுங்கலினெடுமுகடொழுக்கியூழுற
இடுங்கலில்கைவிசித்தேற்றியெங்கணும்
முடங்கலில்வரிச்சமேல்விரிச்சமூட்டியே.

(இ-ள்) நெடுங்கழை குறுந்துணி நிறுவி—நெடியமூங்கில்களின் சிறுதுண்டுகளைத்துணாகநட்டு, மேல்நிரைத்து - மேலிடவேண்டிய மூங்கில்களை இட்டு, ஒடுங்கலில்நெ-விசாலமான, நெடுமுகடு-நீண்டமுகட்டினை, ஒழுக்கி-இட்டு, ஊழ் உற-வரிசையாக, இடுங்கல் இல்கைவிசித்து-ஒடுக்கமற்ற கைக்கழிகளைக்கட்டி, ஏற்றி-உயர்த்தி, எங்கணும்-எவ்விடத்திலும், முடங்கல் இல்வரிச்சு மேல்விரிச்சு-வளைவில்லாத வரிச்சல்களை மேலேபரப்பிமூட்டி, சேர்த்து எ-று. ஏகாரம் ஈற்றசை-இதுமுதல்நான்குபாடல் குளகம், ௪௪

தேக்கடைப்படலையிற்செறிவுசெய்துபின்
பூக்கிளர்நாணலின் புல்லுவேய்ந்துகீழ்
தூக்கியவேய்களிற்சுவருஞ்சுற்றுறப்
போக்கிமண்ணெறிந்தலைபுனலிற்றீற்றியே.

(இ-ள்.) தேக்கு அடை படலேயில்—தேக்கிலைகளின் கூட்டத்தால், செறிவுசெய்து-நெருங்கக்கட்டி, பின்-அதன்பின்னர், பூகிளர்நாணலின் புல்லுவேய்ந்து-பூவிளங்குகின்ற நாணற்புதரின்புல்லினால்மேய்ந்து, கீழ்-அடியில், தூக்கிய வேய்களில்-உயர்த்தப்பட்ட மூங்கில்களால், சுவரும் சுற்றுஉறபோக்கி-சுவரினையும் முழுவதும்அமைத்து, மண்எறிந்து - மண் அறைந்து, அலைபுனலில் தீற்றி-அம்மண்ணினை நீரால்மெழுகி. எ-று. ஏகாரம்-அசை. ௪௫

வேறிடமியற்றினன்மிதிலைநாடிக்கும்
கூறினநெறிமுறைகுயிற்றிக்குங்குமச்
சேறுகொண்டழகுறத்திருத்திதிண்சுவர்
ஆறிடுமணியொடுங்கனகமப்பியே.

(இ-ள்) மிதிலைநாடிக்கும்—மிதிலைநாட்டினையுடையசானகிப்பிராட்டிக்கும், வேறுஇடம் இயற்றினன்-வேறேஇடம் அமைத்தனன், எங்ஙனமெனில் கூறிய நெறிமுறைகுயிற்றி-முன்சொன்ன முறைப்படியே எல்லாமமைத்து, குங்குமச் சேறு கொண்டு அழகுஉற திண்சுவர் திருத்தி - குங்குமம்போன்ற சேற்றினால்

அழகுண்டாம் வண்ணம்கலியசுவரினைச்செப்பஞ்செய்து, ஆறிமெணி ஒடேம் கனகம் அப்பி-கானயாறுகள் சிதறியமணிகளுடன் பொற்பொடியுமச்சுவற்றின் மீது அப்பி. எ-று. சசு

மயிலுடைப்பீலியின்விதானமேல்வகுத்
தயிலுடைச்சுரிகையாலருகுதூக்கறுத்
தெயிலிளங்கழைகளாலியற்றியாறிடு
செயலுடைப்புதுமலர்பொற்பச்சிந்தியே.

(இ-ள்) மயில்உடை — பீலியின்விதானம்—மயிலின் தோகைகளால் விதானத்தினை, மேல்வகுத்து-மேற்புறத்திற்செய்து, அயில்உடை சுரிகையால்-கூரினையுடைய உடைபவாளினால், அருகு-பக்கங்களிலுள்ள, தூக்குஅறுத்து-தொங்கு நாணல் முதலியவைகளை அரிந்து, இளங்கழைகளால் எயில்இயற்றி-இளமூங்கில்களால்மதிலமைத்து, ஆறிடு-ஆறுகள்சந்த,செயல்உடை-நல்லியல்பினையுடைய, புது மலர்-புதியபுட்பங்களை, பொற்பசிந்தி-அழகாகச்சிதறி. எ-று. ஏகாரம்-ஈற்றசை.

இன்னணமிளையவனிழைத்தசாலையில்
பொன்னிறத்திருவொடுங்குடிபுக்கானரோ
நன்னெடுந்திசைமுகனகத்துநம்பனோர்க்
குன்னருமுயிருளுமொக்கவைகுவான்,

(இ-ள்) இன்னணம்—இவ்வாறு, இளையவன்இழைந்த - இலக்குமணன் செய்த, சாலையில்-பன்னசாலையில், நல்நெடும் திசைமுகன்அகத்தும்-நல்லநெடிய திசைகளில் முகங்களையுடைய பிரமதேவனுள்ளத்திலும், நம்அனோர்க்குஉன் அரும்-நம்மையொத்தவர்களால் இத்தகையதென தீர்மானித்தல்கூடாத, உயிர்உளும்-சேதனனிலும், ஒக்க-சமானமாக, வைகுவான்-இருக்கின்ற ஸ்ரீராமபிரான், பொன்நிறம் திருஒடும் - சொன்னப்போலுஞ சாயலினளான சீதாபிராட்டியுடனே, குடிபுக்கான்-வாசஞ்செய்தனன் எ-று. அரோ-அசை. சஅ

வேறு.

மாயநீங்கியசிந்தனைமாமறை
தூயபாற்கடல்வைகுந்தஞ்சொல்லலாம்
ஆயசாலையருப்பெறலன்பினன்
நேயநெஞ்சின்விருப்பநிரப்பினான்.

(இ-ள்) மாயம்நீங்கிய—மாயத்தில்நின்றும்நீங்கிய, சிந்தனை-சிந்தனையும், மாமறை-சிறந்தவேதமும், தூயபால்கடல-பரிசுத்தமானபாலாழியும், வைகுந்தம்-வைகுந்தநகரமும், சொல்லல்ஆம்-ஒப்பாகவுரைக்கக்கூடிய, ஆயசாலை-அந்தபன்னசாலையை, அரும்பெறல்அன்பினன்-பெறுதற்கரிய அன்பினையுடைய இளையோனுடைய, நேயம்நெஞ்சின்-விருப்பத்தினையுடைய உள்ளத்தைப்போல, விரும்பி-தானும்விருப்பங்கொண்டு,நிரப்பினான்-பூர்த்திசெய்தான், எ-று. சசு

இலக்குமணன் விருப்பத்துடன் அமைத்தசாலையில்தானும் விருப்பத்துடன் சென்றிருந்தான் என்பதுகருத்து.

மேவுகானமிதிலையர்கோன்மகள்
பூவின்மெல்லியபாதமும்போந்தன
தாவிலெம்பிகைகசாலைசமைத்தன
யாவையாதுமிலார்க்கியையாதவே.

(இ-ள்) மிதிலையர்கோன்மகள்—மிதிலாநாட்டிற்கிறைவனுடைய மகளான இச்சீதையின், பூவின்மெல்லியபாதமும்- அனிச்சம்பூவினும் மேன்மையான கால்களும், மேவுகானமும்போந்தன-பொருந்திய காட்டினையும்அடைந்தன, எம்பி-என்றம்பியினுடைய, தாவில்கைகள்-கெடாதகைகள், சாலைசமைத்தன-பன்னசாலையையுண்டாக்கின, யாதும்இலார்க்கு ஒன்றுமற்றவர்களுக்கு, யாவை இயையாத-இயையாதவையாவை, எ அதனை எ-று. ௫0

இலார்க்கெலாமியையுமென்றாகூறினன்-என்பதுகருத்து.

இயையாதன என்பதின் விகுதிகெட்டது.

என்றுசிந்தித்திளையவற்பார்த்து
குன்றுபோலுங்குவவியதோளினாய்
என்றுகற்றனைநீயிதுபோலென்றான்
துன்றுதாமரைக்கண்பனிசோர்கின்றான்.

(இ-ள்) துன்றுதாமரைக் கண்பனிசோர்கின்றான் நெருங்கிய தாமரைஇதழ் போலுங் கண்களினின்றும் நீர்சொரா நின்ற சீராமபிரான், என்றுசிந்தித்து-என ஆலோசித்து, இளையவற்பார்த்து-தம்பியான இலக்குமணனைப்பார்த்து, இருகுன்றுபோலும் குவவியதோளினாய் இரண்டுமலைகளைப்போலதிரண்டு விளங்குந் தோள்களையுடையாய், நீஇதுபோல் இன்று செய்த இவ்வேலையைப்போலசெய்தற்கு, என்றுகற்றனைஎன்றான் எப்பொழுது பழகினை என்றுகேட்டான். எ-று.

அரசிளங்கோவாகிய இலக்குமணன் வனத்தைப் பிரிந்திருந்தநாள் இன்மையால் அவன் பன்னசாலையமைத்தலாகிய இத்தொழிலை எப்படியறிந்தானென்று வியப்புற்றமையின் "குன்றுபோலுங் குவவியதோளினாய் என்று கற்றனை நீ இதுபோல்" என்றான் என்க.

அடருஞ்செல்வமளித்தவனாணையால்
படருநல்லறம்பாலித்திரவியில்
சுடருமெய்ப்புகழ்சூடினனென்பதென்
இடருனக்கிழைத்தேனெடுநாளென்றான்.

(இ-ள்) அடருஞ்செல்வம் அளித்தவன்—நெருங்கிய விராச்சியசம்பத்தினை எனக்குக்கொடுத்த சக்கரவர்த்தியின், ஆணையால்-கட்டளையால், படரும்நல்அறம் பாலித்து-மேன்மேலும்பெருகுகின்ற நல்லதருமத்தினைக்காத்து, இரவியிற்சுடருமெய்ப்புகழ்சூடினன் என்பதுஎன்-சூரியனிலும் அதிகமாகப் பிரகாசிக்கின்ற உண்மைப்புகழினை யானுடையவனானேனென்றுகூறுவதிற்பயனென்னை, இடர் உனக்குநெடுநாள் இழைத்தேன்என்றான் - துன்பத்தினைஉனக்கு அதிககாலம் செய்தவனாயினேன் என்றுகூறினன். எ-று. ௫௨

அந்தவாய்மொழியையனியம்பலும்
நொந்தசிந்தையிளையவனோக்கினால்
எந்தைகாண்டியிடரினுக்கங்குரம்
முந்திவந்துமுளைத்ததன்றோவென்றான்.

(இ-ள்.) அந்தவாய்மொழி—அவ்விதமானவசனத்தினை, ஐயன் இயம்பலும்-ஸ்ரீராமபிரான்கூறுதலும், நொந்தசிந்தை இளையவன்-வருந்தியமனதினனான இலக்குமணன், நோக்கினால்-பார்க்குமிடத்தில், (அதாவது ஆலோசித்தால்) எந்தை காண்டி-எம்பெருமானே, இடரினுக்கு - இந்தத்துன்பத்திற்கு, அங்குரம்-விதையானது, முந்திவந்து முளைத்தது அன்றோ-முதலில்வந்துபிறந்தது அன்றோ, என்றான்-என்றுகூறினான். எ-று. ௫௩

முந்திவந்துமுளைத்தல் தசரதனுக்குமூத்தகுமாரனாக தோன்றுதல் பரதன்மூத்தவனாகப்பிறந்திருந்தால் இந்தவிதமான வனவாசத்தேவரிருசகு வராதென்பது அவன்கருத்து.

ஆகசெய்தக்கதில்லையறத்தினின்
றேகலென்பதரிதென்றெண்ணினான்
ஓகைகொண்டவனுள்ளிடர்நோக்கினான்
சோகபங்கந்துடைப்பரிதாமென.

(இ-ள்.) ஆகசெய்தக்கது இல்லை-(இவனுக்குநேருண்டாமாறு) செய்த்தக்கது இங்கு ஒன்றுமில்லை, அறத்தினின்று-தன்மமார்க்கத்தினைக்கடந்து, ஏகல் போதல் என்றும் அரிது - எப்பொழுதும் அருமையானது, என்பது எண்ணினான்-என்றுள்ளதனை நினைத்த ஸ்ரீராமபிரான், ஓகைகொண்டு - சந்தோஷத்துடன், அவன்-அந்த இளையவனது, உள் இடர்-மனோவியாகூலத்தினை, நோக்கினான்-பார்த்து, சோகபங்கம்-துக்கமாகிய அளற்றினை, துடைப்பரிது-நீக்குதலரிதாகும், என-என்று எ-று. நோக்கினான் முற்றெச்சம், ஆல் அசை. ௫௪

பின்னுந்தம்பியைநோக்கிப்பெரியவன்
மன்னுஞ்செல்வத்திற்குண்டுவரம்பிதற்
கென்னகேடுண்டிவ்வெல்லையிலின்பத்தை
உன்னுமேல்வருமூதியத்தோடென்றான்.

(இ-ள்.) பெரியவன்-ஸ்ரீராமபிரான், பின்னும் தம்பியைநோக்கி-பின்னரும் இளையவனைப்பார்த்து, மன்னும்-ஒருவனிடத்தில்வந்து பொருந்துகின்ற, செல்வத்திற்கு-ஸம்பத்திற்கு, வரம்பு உண்டு-எல்லையுளது, இதற்கு-இவ்வனவாசத்திற்கு, கேடு என்ன உண்டு-அழிவு என்ன இருக்கின்றது, இவ் எல்லையில் இப்பொழுது, இவ் இன்பத்தை-உனக்குண்டாயிருக்கிற இந்த துன்பத்தினை, மேல்வரும் ஊதியத்தோடு-எதிர்காலத்தில் வரப்போகின்ற ராச்சிய லாபத்தினுடன், உன்-சமமாக நினை, என்றான்-என்று திருவாய் மலர்ந்தான். எ-று. ௫௫

தேற்றித்தம்பியைத்தேவருங்கைதொழ
நோற்றிருந்தனனேன்சிலையோனிப்பால்

ஆற்றன்மாதவனாணையிற்போனவர்
கூற்றினுற்றதுகூறலுற்றாமரோ.

(இ-ள்.) கோன்சிலையோன்—வன்மைபொருந்திய விற்படையினையுடைய ஸ்ரீராமபிரான், தம்பியைதேற்றி-இளையாழ்வானைத் தேறுதல்செய்து, தேவரும் கைதொழ-தேவர்களும் வணங்க, நோற்று இருந்தனன்-தவஞ்செய்திருந்தனன், இப்பால் (இது நிற்க.) இப்புறம், ஆற்றல்மாதவன் ஆணையில் - செய்யப்படுகின்ற சிறந்த தவத்தினையுடைய வசிட்டமுனிவின் கட்டளையால், போனவர்கூற்றின் உற்றது-சென்றவர்கள் சொல்லினால் உண்டானதை, கூறல் உற்றாம்-சொல்லுகின்றாம். எ-று. ௫௯

சித்திரகூடப்படலம் முற்றிற்று.

திருவிருத்தம்-[illegible]

௰-வது. பள்ளிப்படைப்படலம்.

பொருவில்தூதவர்போயினர்பொய்யிலா
இரவுநன்பகலுங்கடிதேகினார்
பரதன்கோயிலுற்றார்படிகாவலோரை
வரவுசொல்லுதிர்மன்னவற்கென்றனர்.

(இ-ள்.) பொய் இலா [illegible], பொருவுஇல் தூதவர்-ஒப்பற்ற தூதர்கள், போயினர் சென்று, இரவும ராத்திரியும், நன்பகலும்-நல்லபகலும் கடிது ஏகினர்-விரைந்து நடந்து, பரதன்கோயில் உற்றார் பரதாழ்வானுடைய அரண்மனையை யடைந்து, படிகாவலோரை வாயில் காவலர்களை, எம் வரவு-எங்கள் வருகையை, மன்னவர்க்கு அரசனுக்கு, சொல்லுதிர் என்றனர்-உரையுங்களென்று கூறினார்கள். எ-று. ௧

போயினர் ஏகினர் உற்றார் என்பன முற்றெச்சங்கள். ஏகாரம் தேற்றம்.

தூதர்வந்தனருந்தைசொல்லோடெனக்
காதன்முந்திக்களிக்கின்றசிந்தையான்
போதுகென்னப்புக்கவர்கைதொழத்
தீதிலன்கொறிருமுடியோனென்றான்.

(இ-ள்.) உந்தைசொல் ஒடு தூதர்வந்தனர் என-உங்கள் தந்தையின் கட்டளையுடன் தூதர்கள் இங்குவந்திருக்கின்றனர் எனறுபடிகாவலர்கூற, காதல்முந்தி களிக்கின்ற சிந்தையான். ஆசைமிகுந்து களிக்காநின்ற உள்ளத்தினையுடைய பரதாழ்வான், போதுகஎன்ன-அவர்கள் இங்குவரக்கடவர் என்று கூறியிருப்ப, அவர்புக்குகைதொழ-அத்தூதர்கள் சென்றுவணங்க, தீது இலன்கொல்-குற்ற

மில்லாதவன் தானோ, திருமுடியோன்-சக்கரவர்த்தி, என்றான்-என்று கேட்டனன். எ-று. உ

வலியனென்றவர்கூறமகிழ்ந்தனன்
இலைகொள்பூணிளங்கோனெம்பிரானொடும்
உலைவில்செல்வத்தனோவெனவுண்டெனத்
தலையினேந்தினன்றாழ்தடக்கைகளே.

(இ-ள்.) வலியன் என்று-வன்மையுடையவனே என, அவர்கூற-அத்தூதர்களுரையாநிற்ப, மகிழ்ந்தனன்-சந்தோஷித்தவனாகிய பரதாழ்வான், இலைகொள் பூண்-இலைவடிவமான ஆபரணங்களையுடைய, இளங்கோன்-இலக்குமணன், எம்பிரானொடும்-எமது பெருமானாகிய ஸ்ரீராமனுடன், உலைவு இல்-கெடுதலில்லாத, செல்வத்தனோஎன-செல்வத்தினையுடையனோ, என்று வினவ, உண்டெனா-ஆமென்றுரைக்க, தாழ்தடக்கைகள்-நீண்ட விசாலமான தனது அத்தங்களை, தலையில் ஏந்தினன் தலைமீது எற்றிக்குவித்தனன். எ-று.

இனி இலைகொள் பூணிளங்கோன் எம்பிரானொடும் உலைவில் செல்வத்தனோ என்பதற்கு-இலைபூகப்பை [illegible] பூணினையுடைய [illegible] எமது சகையாரான சக்கரவர்த்தியுடன் கொடாத [illegible] இருக்கின்றாரோ என வினவினான் [illegible].

எம்பிரானொடும் உலைவுறும் [illegible] சக்கரவர்த்தி இருக்கும் பொழுதே இராச்சியாபிஷேக [illegible] ஸ்ரீராமபிரானை விரும்பம் உள்ளயன் பரதா [illegible].

மற்று [illegible]
உற்றதன்மையினு [illegible]
இற்றதாகுமொழுதருமேனியாய்
கொற்றவன்றன்றிருமுகங்கொள்கென்றார்.

(இ-ள்.) மற்றும் சுற்றத்தா [illegible] சுற்றத்தவர்களாய் ஆங்கிருப்பவர்க்கும், உள்ள தன்மை-உண்டாகிய தன்மையினை, வரன் முறைவினவி-கேட்கவேண்டு முறைமையே கேட்டு, [illegible] அவர்களெல்லாரும் சுகமாகவிருத்தலால் சந்தோஷித்தபின், எழுதரும மேனியாய் (அத்தூதுவர்.) எழுதற்கரிய திருமேனியினையுடையோய், கொற்றவன் திருமுகம்-அரசனளித்த திருமுகம் இற்றது ஆகும்-இதுவாகும், கொள்கென்றார் வாங்கிக்கொள்க எனக்கூறினார்கள். எ-று.

பரதாழ்வான் அயோத்தியிலுள்ளார் பலரையும் வினவி சந்தோஷமடைந்த பின்னர் தூதுவர் ஓலை நீட்டிடுமொன்க.

என்றுகூறலுமேத்தியிறைஞ்சினன்
பொன்றிணிந்தபொருவிறடக்கையால்

நின்றுவாங்கியுருகியநெஞ்சினான்
துன்றுநாண்மலர்ச்சென்னியிற்சூடினான்.

(இ-ள்.) என்று கூறலும்-தூதுவர் இவ்வாறு கூறுதலும், ஏத்தி இறைஞ்சினான்-துதித்துவணங்கி, பொன் திணிந்தபொழுவு இல் தடம் கை ஆல்-பொன்னணிகள் நெருங்கிவிளங்குகின்ற ஒப்பற்ற விசாலமானகையினால், நின்று வாங்கி-எழுந்துநின்று வாங்கி, உருகியநெஞ்சினான்-இளகிய நெஞ்சினையுடைய பரதாழ்வான், நாண்மலர் துன்று-அன்றலர்ந்தமலர்கள் நெருங்கிய, சென்னியில் சூடினான்-தலைமீதுகொண்டனன். எ-று. ௫

சூடிச்சந்தனந்தோய்த்துடைநாற்றமண்
மூடுகோட்டின்முடங்கனிமிர்த்ததன்
ஏடுநோக்கிவந்தெய்தியதூதர்க்குக்
கோடிகோடிநிதியங்கொடுத்தனன்.

(இ-ள்.) சூடி-அவ்வாறு தலைமீதுகொண்டு, சந்தனம் தோய்த்துடை-சந்தனத்திற்றோய்க்கப்பெற்றதும், சுற்றிய சுற்றிலும், மண்மூடு-மண்ணினால் மூடப்பெற்றதுமான, கோட்டின்-மேன்முடியினையுடைய, முடங்கல்-ஓலையை, நிமிர்த்தனன் அதனை நோக்கி விரித்து ஒப்புப்பார்த்து, வந்து எய்திய தூதர்க்கு-அயோத்தியினின்றும் திருமுகம்கொண்டுவந்த அத்தூதர்களுக்கு, நிதியம்-பணம், கோடியேனும்-கோடி கணக்கிலாகவும், கொடுத்தனன்-அளித்தனன். எ-று. ௬

ஈண்டுநோக்கமென்பது முத்திரையை ஆராய்தல். முத்திரையை ஒப்பெனக் கூறுவது வழக்கம்.

வாணிலாநகைதோன்றமயிர்ப்புறம்
பூணவானுயர்காதலிற்பொங்கினான்
தாணிலாமலர்தூவினன்றம்முனைக்
காணலாமெனுமாசைகடாவவே.

(இ-ள்.) தம்முனை-தமையனாகிய ஸ்ரீராமனை, காணல் ஆம் எனும்-பார்க்கக்கூடும் என்கின்ற, ஆசை-விருப்பமானது, கடாவ-செலுத்த, வாள்நிலா நகை தோன்ற-ஒளிபொருந்திய சந்திரிகைபோன்ற நகைவெளிப்பட, மயிர்புறம்பூண-மயிர்கூச்சல்உண்டாக, வானுயர் வானிலும் உயர்ந்த, காதலில் ஆசையினால்-பொங்கினான் மகிழ்ந்தபரதாழ்வான், தாள் நிலாமலர் தூவினன்-காலில்பொருந்தும்படி நீரைச்சிந்தினான். எ-று. ௭

தாள்நிலாம் மலர்தூவினன் என்பதற்கு ஸ்ரீராமனுடைய திருவடியிலாமாறு புட்பார்ச்சனைசெய்தனன் என்று கொள்ளினுமாம்.

எழுகசேனையென்றேவினனெய்தினன்
தொழுதுகேகயர்கோமகனைச்சொல்லொடும்
தழுவுதேரிடைத்தம்பியொடேறினான்
பொழுதுநாளுங்குறித்திலன்போயினான்.

(இ-ள்.) எழுகசேனை என்று ஏவினன்—அயோத்திக்கு சேனைகள் எழுக என்றுகட்டளையிட்டு, கேகயர்கோமகன்-கேகயராசனை,தொழுது-வணங்கி,சொல்லும்-அவன் சம்மதவுரையுடன்,தழுவுதேரிடை-தானேறிச்செல்லும் இரதத்தில், தம்பி ஒடு ஏறினன்-சத்துருக்கன் உடனே ஏறி, பொழுது-புறப்படுதேற்குரிய காலத்தினையும், நாளும்-நட்சத்திரத்தையும், குறித்திலன் போயினன்-பாராது சென்றனன். எ-று. எய்தினன் ஏறினன். இரண்டும் முற்றெச்சங்கள். அ

யானைசுற்றினதேரினைத்தீண்டின
மானவேந்தர்குழுவினர்வாளுடைத்
தானைசூழ்ந்தனசங்குமுரன்றன
மீனவேலையின்விம்மினபேரியே.

(இ-ள்.) யானைசுற்றின-(இவன் செல்லுங்கால்) யானைப்படைகள் சூழ்ந்துசென்றன, தேர்இனைத்து ஈண்டின-தேர்கள் இனைச்சலுடன் நெருங்கின, மானவேந்தர் குழுவினர்-வன்மைபொருந்திய அரசகூட்டத்துடன்,வாள்உடை-வாட்படையினை உடைய, தானைசூழ்ந்தன-சேனைகள்சூழ்ந்தன. சங்குமுரன்றன-சங்குகள்முழங்கின, பேரி-பேரிகைகள், மீனவேலையின் மீன்களையுடைய கடலைவிடவும், விம்மின-பேரொலிகாட்டின. எ-று.

கொடிநெருங்கினதொங்கல்குழுமின
வடிநெடுங்கண்மடந்தையரூர்மடப்
பிடிதுவன்றினபூணொளிபோர்ந்தன
இடிதுவன்றினமின்னெனவெங்குமே.

(இ-ள்.) எங்கும்—எவ்விடங்களிலும், கொடிநெருங்கின-கொடிகள்நெருங்கின. தொங்கல்-குடைகள், குழுமின-நெருங்கின, வடிநெடும் கண்மடந்தையர்-அம்புபோன்ற நீண்ட கண்ணினையுடைய பெண்கள், ஊர்-ஏறிநடத்துகின்ற, மடம்பிடிதுவன்றின-இளமைவாய்ந்த பெண்யானைகள் நெருங்கின, இடிதுவன்றினமின் என-மேகத்தில் தோன்றிய மின்னலையொப்ப, பூண் ஒளிபோர்ந்தன-ஆபரணங்களின் ஒளிகள் விளங்கின. எ-று. ௧0

பண்டியங்கள்பரந்தனபல்லியம்
கொண்டியம்பினகொண்டலிற்கோதையில்
வண்டியம்பினவாளியின்வாவுறும்
செண்டியங்குபரியுஞ்செறிந்தவே.

இ-ள். பண்டியங்கள்-வண்டிகள், பரந்தன-பரந்துசென்றன, கொண்டலில்-மேகத்தொனிபோல, பல்இயம்கொண்டு இயம்பின-பலவாத்தியங்கள் தொனிகொண்டு சத்தித்தன, கோதையில் வண்டுஇயம்பின - மாலைகளில் வண்டுகள் முழங்கின, வாளியின்வாவுறும்-சரவேகமாகச் செல்கின்ற, செண்டு இயங்கு பரியும்-வையாளியாகச்செல்கின்ற குதிரைகளும், செறிந்த-நெருங்கின. எ-று.

தொளைமுகத்திற்சுருதிவிளம்பின
இளைமுகத்தினனும்பரினேகிட
விளைமுகத்தனல்வேலையின்மீதுசெல்
வளைமுகத்தனவாசியும்வந்தவே.

இ-ள். தொளைமுகத்தில்-பொள்ளாங்குழலில், சுருதிவிளம்பின-இராகங்கள் பாடப்பட்டன, இளைமுகத்தினன்-இளைத்தமுகத்தினையுடைய் சக்கரவர்த்தி, உம்பரின்ஏகிட-சுவர்க்கத்திற்குசெல்ல, அனல்விளைமுகத்த - அக்கினியுண்டாகின்ற முகத்தினையுடைய, வேலையின்மீதுசெல்-கடலின்மேற்செல்லுகின்ற, வளைமுகத்தன-வளைந்த முகத்தனவாகிய, வாசியுமவந்த-குதிரைகளும் வந்தன

வேலையின்மீதுசெல் என்பதற்கு - கடலினுமதிகமாகச்செல்கின்ற என்னினுமாம்.

வில்லின்வேதியர்வாள்செறிவித்தகர்
மல்லின்மல்லர்சுரிகையின்வல்லவர்
கொல்லும்வேல்குந்தங்கற்றுயர்கொற்றவர்
தொல்லைவாரணப்பாகருஞ்சுற்றினர்.

இ-ள். வில்லின்வேதியர்-தனுர்வேதமுணர்ந்தவர்களும், வாள்செறிவித்தகர்-வாட்படைபேர்கிய விற்பன்னர்களும், மல்லின்மல்லர்-மல்லயுத்தப் பழக்கமுள்ளவர்களும், சுரிகையின்வல்லவர்-உடைவாட்போரில் வல்லுநரும், கொல்லும்வேல் குந்தம்கற்றுயர்-பகைவர்களைக் கொல்லுகின்ற வேற்படை குந்தப்படைமுதலியவைகளைக் கற்றுயர்ந்த, கொற்றவர்-அரசர்களும், தொல்லை-பழமையான, வாரணப்பாகரும்-யானைப்பாகர்களும், சுற்றினர்-சூழ்ந்தார்கள். எ-று. கரு

எறிபகட்டினமாடுகளேற்றைமா
குறிகொள்கோழிசிவல்குறும்பூழ்நெடும்
பொறிமயிர்க்கவுதாரிகள்போற்றுநர்
நெறியின்மாக்களுமுந்திநெருங்கினர்.

இ-ள். எறிபகடுஇனம்-சண்டைப்பட்ட டின் இனங்களையும், ஆடுகள்-யாடுகளையும், ஏற்றைமா-மற்றைய ஆண்விலங்குகளையும், குறிகொள்கோழி-புள்ளிகளையுடைய கோழிகளையும்,சிவல்-சிவல்களையும்,குறும்பூழ்-காடைகளையும்,கவுதாரி-கவுதாரிகளையும், போற்றுநர்-வளர்க்கின்ற, நெறியின்மாக்களும்-முறையினையுடைய மனிதர்களும்,முந்திநெருங்கினர்-முற்பட்டு நெருங்கிச்சென்றார்கள்.

நிறைந்தமாந்தர்நெருங்கினர்நெஞ்சினில்
பறந்துபோதுங்கொலென்றுபதைக்கின்றார்
பிறந்துதேவருணர்ந்துபெயர்ந்துமுன்
உறைந்தவாறுறுவார்களையொக்கின்றார்.

இ-ள். நிறைமாந்தர்-இவ்வாறு நிறைந்தமனிதர்கள், நெருங்கினர்[illegible] கொருவர்நெருங்கினவர்களாகி, நெஞ்சினில்-மனோவேகத்தில், பறந்துபோதும்-

ஓதுகின்றிலகிள்ளையுமோதியர்
தூதுசென்றிலவந்திலதோழர்பால்
மோதுகின்றிலபேரிமுழாவிழா
போதுகின்றிலபொன்னணிவீதியே.

(இ-ள்.) கிள்ளையும்—கிளிகளும், ஓதுகின்றில-பேசுகின்றில,ஓதியர் தூது சென்றில-பெண்களுக்குத் தூதாகப்போயில, தோழர்பால்வந்தில-தோழர்களைநாடிவந்தில,பேரிமுழா-பேரிகைகளும்மத்தளங்களும், மோதுகின்றில - அடிக்கப்படவின்று,பொன்அணிவீதி-பொன்மயமாய அழகியவீதிகளில், விழாபோதுகின்றில-திருவிழாநடக்கின்றில. எ-று. ௨௩

பாடனீத்தனபண்டொடர்பண்குழல்
ஆடனீத்தவரங்கொடகன்புனல்
சூடனீத்தனசூடிகைசூளிகை
மாடநீத்தனமங்கலவள்ளையே.

(இ-ள்.) பாடல்—பாடுதலை, நீத்தன-விட்டிருந்தன, பண்தொடர்-இராகவரிசைகளும்,பண்குழல்-அமைக்கப்பெற்ற-பொள்ளாங்குழலாதியவும்,ஆடல்நீத்த-ஆடுதலையொழிந்தன, அரங்கொடு-நாடகசாலைகளுடன், அகல்புனல்-மிகுந்தநீர்நிலைகளும்,சூடல்நீத்தனசூடிகைசூளிகை-சூடுதலையொழிந்தனமகுடங்களும் சூளிகைகளும், மாடம்-மாளிகைகள், நீத்தன-ஒழிந்தன, மங்கலவள்ளை-மங்கலகரமானவள்ளைப்பாட்டினை. எ-று. ௨௪

மங்கலவள்ளை என்பதற்கு - மங்கலமும் வள்ளைப்பாட்டும் என்றுங் கூறுவர். வள்ளை-உலக்கைப்பாட்டு.

நகையிழந்தனவாண்முகநாறகிற்
புகையிழந்தனமாளிகைபொங்கழற்
சிகையிழந்தனதீவிகைதேமலர்த்
தொகையிழந்தனகோதையரோதியே.

(இ-ள்.) வாள்முகம்—ஒளிபொருந்தியமுகங்கள், நகைஇழந்தன-நகைப்பினைஇழந்தன, மாளிகை-மாளிகைகள், நாறு-மணம்வீசுகின்ற, அகில்புகை-அகிலின்புகையை, இழந்தன-இழந்துகின்றன,தீவிகை-விளக்குகள், பொங்கு-பிரகாசிக்கின்ற, அழல்சிகை-அழலின்சுடரினை, இழந்தன-இழந்துநின்றன, கோதையர்ஓதி-மடவார்கூந்தல்கள்,தேன்மலர்தொகைஇழந்தன-மதுவொழுமலர்ந்தமலர்க்கூட்டங்களைஇழந்தன. எ-று.

அலர்ந்தபைங்கூழகன்குளக்கீழன
மலர்ந்தவாயிற்புனல்வழங்காமையால்
உலர்ந்தவன்கண்ணுலோபர்கடைத்தலை
புலர்ந்துகிற்கும்பரிசிலர்போலவே.

(இ-ள்.) வன்கண்உலோபர்-இரக்கமற்ற உலோபிகளின், கடைத்தலை-தலைக்கடையில், புலர்ந்துகிற்கும்-முகம் வாடிகிற்கின்ற, பரிசிலர்போல-இரப்பாள

மைரப்போன்ற, அலர்ந்த-இலைவெடித்துநிற்கின்ற, பைங்கூழ-பயிர்கள், அகன்குளம்கீழன-அகன்ற குளங்களின் கீழ்ப்புறத்துள்ள, மலர்த்தவாயில்-அகன்றமதகுகளின்வழி,புனல்வழங்காமையால்-நீர்பாயாமையால், உலர்ந்த-உலர்ந்தன. எ-று.

மிகுந்த நீரினையுடைய குளத்தின் கீழிருந்தும் நீர்வழக்கின்மையால் உலர்ந்த நெற்பயிர் - உலோபர்கடைத்தலை நிற்கும் பரிசிலர்க்குவமையாயின.

நாவிநீத்தருநல்வளந்துன்னிய
பூவிநீத்தெனநாடுபொலிவொரீஇத்
தேவிநீத்தருஞ்சேணெறிதாவிட
ஆவிநீத்தவுடலெனலாயதே.

(இ-ள்.) நாவிநீத்த அரும் நல்வளம்துன்னிய—நாவியையும் மணத்தில் ஒப்பின்றென்று அகற்றிய உயர்ந்தவாசனையினையுடைய நல்ல வளப்பம்பொருந்திய, பூவின் நீத்தன—தாமரைமலரைத்துறந்தாற்போல, தேவிநீத்து-சீதாபிராட்டிதுறந்து, அரும்சேண்நெறிதாவிட-அரியதூரமாகிய வழிச்செல்ல, நாடுபொலிவுஒரீஇ-கோசலநாடு அழகைப்போக்கி, ஆவிநீத்த-உயிர்துறந்த, உடல்என ஆயது-உடலைப்போலவாயது. எ-று. ௨௭

என்றநாட்டினைநோக்கியிடருழந்
தொன்றுமுற்றதுணர்ந்திலனுன்னுவான்
சென்றுகேட்பதோர்தீங்குளதாமெனா
நின்றுநின்றுநெடிதுயிர்த்தானரோ.

(இ-ள்) என்றநாட்டினை—இவ்வாறு பொலிவழிந்ததாகக்கூறியகோசலநாட்டினை, நோக்கி-பார்த்து, இடருழந்து-வருந்தி, உற்றதுஒன்றும் உணர்ந்திலன்-நடந்ததொன்றும் அறியாதவன், சென்றுகேட்பதுஓர் - சென்றுகேட்பதானஒரு, தீங்குஉளது ஆம்என உன்னுவான்-தீமையுளதுஎன்று எண்ணுகின்றவனாய், நின்றுநின்று-ஒவ்வொருஇடங்களிலும் நின்றுநின்று, நெடிதுஉயிர்த்தான்-பெருமூச்செறிந்தான். எ-று. அரோ-அசை. ௨௮

மீண்டுமெய்தியம்மெய்யெனுநல்லணி
பூண்டவேந்தன்றிருமகன்புந்திதான்
தூண்டுதேரினுமுந்துறத்தூங்குவான்
நீண்டவாயினெடுநகர்நோக்கினான்.

(இ-ள்.) மீண்டுமெய்தி—பின்னும்சென்று, அம்மெய்எனும் நல்அணி-அந்தஉண்மையாகிய நல்லஆபரணத்தினை, பூண்டவேந்தன்-தரித்தசக்கரவர்த்தியின்,திருமகன்புந்தி-புத்திரனாகியபரதாழ்வானுடையபுத்தியானது, தூண்டுதேரினும்-ஓட்டப்படுகின்றஇரதத்தினும், முந்துஉற-முன்னேசெல்ல, வான்தூங்கு-மேகங்கள்வந்துதாழ்கின்ற, நீண்டவாயில்-உயர்ந்தகோபுரவாசலினையுடைய,நெடுநகர்நோக்கினான்-அயோத்திநகரினைக்கண்டனன். எ-று. ௨௯

அண்டமுற்றுந்திரிந்தயர்ந்தாயமு
துண்டுபோதியென்றொண்கதிர்ச்செல்வனை
விண்டொடர்ந்துவிலக்குவபோல்வன
கண்டிலன்கொடியின்னெடுங்கானமே.

(இ-ள்.) கொடியின் நெடுங்கானம்—கொடிகளின் நீண்டகாடுகள், அண்டம் முற்றும்திரிந்து-அண்டம் முழுதிலுஞ் சஞ்சரித்து, அயர்ந்தாய்-இளைத்தனை, அமுதுஉண்டுபோதி-நீருந்திச்செல்வாயாக, என்று-என, ஒண்கதிர்செல்வனை-ஒள்ளியகதிர்களையுடைய சூரியனை, விண்தொடர்ந்து-ஆகாயத்தை அடைந்து, விலக்குவபோல்வனகண்டிலன் - விலக்குவனபோல வசைதலைக்கண்டிலன்.

ஈட்டுநன்புகழ்க்கீட்டியயாவையும்
வேட்டவேட்டவர்கொண்மின்விரைந்தெனக்
கோட்டிமாக்களைக்கூவுவபோல்வன
கேட்டிலன்முரசின்கிளரோதையே.

(இ-ள்.) ஈட்டு—சேர்க்கப்பட்ட, நன்புகழ்க்கு-நலல புகழிற்கு, ஈட்டிய யாவையும்-சேகரித்துள்ள வனைத்தும், வேட்டவேட்டவர் -விரும்பினவர்கள், விரைந்துகொள்மின் என - சீக்கிரம் வாங்கிக்கொள்ளுங்களென்று, கோட்டி - கோட்டியான, மாக்களை-மனிதர்களை, கூவுவபோல்வன-அழைப்பனபோன்ற, முரசின்கிளர்ஓதை-முரசினுடைய உயர்ந்த சத்தத்தினை, கேட்டிலன்-கேட்டா னில்லை. எ-று.

கள்ளைமாக்கவர்கண்ணியன்கண்டிலன்
பிள்ளைமாக்களிறும்பிடியீட்டமும்
வள்ளைமாக்கணிதியும்வயிரியர்
கொள்ளைமாக்களிற்கொண்டனரேகவே.

(இ-ள்.) பிள்ளைமாகளிறும்பிடி ஈட்டமும் - இளமைவாய்ந்த சிறந்த ஆண் யானைகளையும் பெண்யானைகளின் கூட்டங்களையும், வள்ளைமாக்கள் - மங்கல பாடகர்கள் பெறுகின்ற, நிதியும்-பொன்னும், வயிரியர்-பாணர், கொள்ளைமாக்களில்-கொள்ளையாடு மனிதர்களைப்போல, கொண்டனர் ஏக-கொண்டுசெல்ல கள்ளை-தேனினை, மாகவர் - வண்டுகளபகரிக்கின்ற, கண்ணியன் - மாலையினையுடைய பரதாழ்வான், கண்டிலன்-கண்டானில்லை. எ-று.

காவன்மன்னவன்கான்முளைகண்டிலன்
ஆவுமாவுமழிகவுள்வேழமும்
மேவுகாதனிதியும்வெறுக்கையும்
பூவின்வானவர்கொண்டனர்போகவே.

(இ-ள்.) ஆவும்-பசுக்களும், மாவும் - குதிரையும், அழிகவுள் வேழமும் - மதநீரொழுகின்ற கன்னத்தினையுடைய யானையும், காதல்மேவு நிதியும் - ஆசை பொருந்திய செல்வமும், வெறுக்கையும்-பொன்னும், பூவின் வானவர் - பிரா

மர்கள், கொண்டனர்போக-வாங்கிக்கொண்டுசெல்ல, காவல் மன்னவன்-கோசல நாட்டினைக்காக்கின்ற அரசனான தசரதனுடைய, கான்முளை-புத்திரன், கண்டிலன் - கண்டானில்லை. எ-று.

சூழமைந்தசுரும்புநரம்புந்தம்
ஏழமைந்தவிசையிசையாமையால்
மாழையுண்கண்மயிலெனுஞ்சாயலார்
கூழைபோன்றபொருநர்குழாங்களே.

(இ-ள்.) பொருநர் குழாங்கள் - கூத்தரின் கூட்டங்கள். சூழ் அமைந்த சுற்றிலும்பொருந்திய, சுரும்பும் நரம்பும் - வண்டுகளும் நரம்புகளும், தம் - தம்முடை, ஏழமைந்த-ஏழாகப்பொருந்திய, இசை இசையாமையால், - இசையைப்பாடாமையினால், மாழை உண்கண்மயில் எனும் சாயலார் - மாவடுவகிரனையவும்மையுண்பவுமான கண்களையும் மயிற்சாயலினையும் உடைய பெண்களின், கூழைபோன்ற-கூந்தலை ஒத்தனர். எ-று.

தேருமாவுங்களிறுஞ்சிவிகையும்
ஊரும்பண்டியுமூருநரின்மையால்
யாருமின்றியெழிலழிவீதிகள்
வாரியின்றியவாலுகவாற்றினே.

(இ-ள்.) தேரும்-இரதங்களும், மாவும் - குதிரைகளும், களிறும் - யானைகளும், சிவிகையும் - தண்டிகைகளும், ஊரும்பண்டியும் - ஏறிநடாத்துகின்ற வண்டிகளும், ஊருநர்-ஏறிச்செல்பவர்கள், இன்மையால் - இல்லாமையால், யாரும் இன்றி-எவருமில்லாமல், எழில் அழிவீதிகள் - அழகழிந்த தெருக்கள், வாரி இன்று இயல்-நீரில்லாமல் இருக்கிற, வாலுகஆற்றின் - மணன்மாத்திரம் பொருந்திய ஆற்றினையொத்தது. எ-று. ௯௬

அன்னதன்மையநகர்நோக்கினன்
பின்னையப்பெரியோர்தம்பெருந்தகை
மன்னன்வைகும்வளநகர்போலுமீ
தென்னதன்மையிளையவனேயென்றான்.

(இ-ள்.) அன்னதன்மை—அத்தன்மையவான பொலிவிழந்த, அநகர்நோக்கினன்-உள்நகத்தினைப்பார்த்து, பின்னை அப்பெரியோர்தம்பெருந்தகை-பின்னர் அந்த பெரியவர்களுள் பெருந்தகையானான, மன்னன் வைகும்-சக்கரவர்த்தி இருக்கின்ற, வளநகர்போலும்-வளப்பம்பொருந்திய அயோத்திநகரந்தானோ, என்னதன்மைஇது-என்னதன்மையிது, இளையவனே - (சத்துருக்கினனாகிய) தம்பியே, என்றான்-என்று கூறினான். எ-று. ௯௭

வேற்றடங்கலர்விண்ணுறவென்றிடும்
கூற்றடங்கப்பொருநெடுங்கோளினாய்

சேற்றடங்கட்டிருவொடுநீங்கிய
பாற்றடங்கடலொத்ததுபாரென்றான்.

(இ-ள்.) வேற்று அடங்கலர்—வேறாகிய பகைவர்கள், விண்உற-வீரசுவர்க்கமடைய, வென்றிடும்-அவர்களை வெல்கின்ற, கூற்று அடங்க-எமனும் அடங்குமாறு, பொரும் - போர்புரிகின்ற, நெடுங்கோளினாய் - நெடியகொள்கையினை உடையாய், சேல்தடம்கண்திரு ஒடும் நீங்கிய - மீன்போலுமகன்ற கண்களையுடைய திருமகளுடனேயகன்ற, பால்தடம் கடல் ஒத்தது - பான்மயமான அகன்ற கடலை இவ்அயோத்தியொத்தது, பார் என்றான்-நீபார் என்று கூறினான்.

குருமணிப்பூணரசிளங்கோளரி
இருகைகூப்பியிறைஞ்சினனெய்திய
தொருவகைத்தன்றுறுதுயரூழிவாழ்
திருநகர்த்திருதீர்ந்தனளாமென்றான்.

(இ-ள்.) குருமணிபூண் அரசு இளங்கோளரி—சிறந்தங்கிய அரதனமணிகளாலாகிய ஆபரணங்களை அணிந்த சிங்கவேறுபோன்ற இளவரசனாகிய சத்துருக்கினன், இருகைகூப்பி இறைஞ்சினன் - இருகரங்களையுங்குவித்து வணங்கி, எய்தியது - இந்நகர்க்குண்டாகியது, ஒருவகைத்து அன்று உறுதுயர்-ஒருதன்மையானதன்று உண்டாகியதுன்பம், ஊழிவாழி - ஊழிகாலபரியந்தம் அழியாதிருக்கின்ற, திருநகர்திரு - இவ்வயோத்திநகரத்தினிலக்குமி, தீர்ந்தனள் ஆம்-விலகிப்போயிருக்கலாம், என்றான்-என்றுகூறினான். எ-று. ௩௮

அனையவேலையிலக்கடைத்தோரண
மனையினீணெடுமங்கலவீதிகள்
நினையுமாத்திரத்தேகியநேமியான்
தனையனுந்தந்தைசார்விடமேவினான்.

(இ-ள்.) அனையவேலையில்—அவ்வாறாகிய சமயத்தில், அகடைதோரண மனையின்நீள்-அந்ததலைவாசல்களில் தோரணங்களாலலங்கரிக்கபட்ட மாளிகைகளாலுயர்ந்த, மங்கலவீதிகள்-மங்கலகரமானவீதிகளை, நினையும்மாத்திரத்து ஏகி-நினைக்குமுன்னேகடந்து, அநேமியான்தநயனும்-அந்த சக்கரத்தினையுடைய தசரதன் திருக்குமாரனும், தந்தைசார்விடம் - பிதா இருக்கும் இடத்தை, மேவினான்-அடைந்தான் எ-று. ௩௯

விருப்பினெய்தினன்வெந்திறல்வேந்தனை
இருப்புகல்லிடமெங்கணுங்கண்டிலன்
அருப்பமன்றிதென்றையுறவெய்தினான்
பொருப்புநாணவுயர்ந்தபுயத்தினான்.

(இ-ள்.) பொருப்புநாண—மலையும்வெள்குமாறு, உயர்ந்தபுயத்தினான் - உயர்ந்ததோள்களையுடைய பரதாழ்வான், விருப்பில்எய்தினன்-விருப்பத்துடன் சென்று, வெம்திறல்வேந்தனை - வெவ்விய வீரத்தினையுடைய அரசனை, நல்

இருப்பு இடம்எங்கணும் - அவனுடைய நல்லவாசனத்திலெவ்விடத்திலும், ண்டிலன்-கண்டானில்லை, இது அருப்பம் அன்றுஎன - இது மனக்கிளர்ச்சியை த்தரும் விடயம்அன்று என்று, ஐயுறவுஎய்தினன்-சந்தேகங்கொண்டான். எ-று.

ஆயகாலையிலையனைநாடித்தன்
தூயகையிற்றொழுதுறுவான்றனை
கூயளன்னைகுறுகுதிரீண்டென
வேய்கொடோளியொருத்திவிளம்பினள்.

(இ-ள்.) தன் ஐயனைநாடி—தனது தந்தையைநினைத்து, தூயகையில்-பரிசுத்தமானகையினால், தொழல்உறுவான்தனை - வணங்குதலைச்செய்கின்றவனை, ஆயகாலையில்-அப்பொழுது, வேய்கொள்தோளிஒருத்தி - மூங்கில்போலுந்தோளினையுடைய ஒருமாது, அன்னை—உங்கள்தாயார், கூயள்-அழைத்தனள், ஈண்டு குறுகதிர்என - இங்குவாருங்கள் என்று, விளம்பினள்-உரைத்தாள். எ-று.

வந்துதாயையடியில்வணங்கலும்
சிந்தையாரத்தழுவினடீதிலர்
எந்தையென்னையரெங்கையரென்றனள்
அந்தமில்குணத்தானுமதாமென்றான்.

(இ-ள்.) வந்துதாயை அடியில்வணங்கலும்—(அழைத்தவளுடன்) வந்து அன்னையின் கால்களில் வணங்குதலும், சிந்தைஆர தழுவினள்-மனபூர்த்தியாகத் தழுவினவள், தீதிலர்—குற்றமற்றவர்கள் தானு, எந்தை-எனது தந்தையும், என்னையர் - எனது அன்னைமார்களும், எங்கையர்-என்னுடன்பிறந்தவர்களும், என்றனள் - என்றுகேட்டனள், அந்தம்இல் குணத்தானும்-அழிவற்ற குணத்தினையுடைய பரதாழ்வானும், அது - நீகேட்டது, ஆம்என்றான் - உள்ளதே என்று கூறினன். எ-று. ௪௨

அந்தமில் குணத்தானென்பதற்கு - பிதாவினைக் காணுமையாலழகழிக்துள்ள எண்ணத்தினையுடையவன் என்று கூறினும் ஆம்.

வேறு.

மூண்டெழுகாதலான்முளரித்தாடொழ
வேண்டினெனெய்தினனுள்ளம்விம்முமால்
ஆண்டகைநெடுமுடியரசர்கோமகன்
யாண்டையான்பணித்திரென்றிருகைகூப்பினன்.

(இ-ள்.) மூண்டு எழுகாதலால்—மேலும் மேலும் அதிகரியாநின்ற ஆசையால், ஆண்டகை நெடுமுடி அரசர்கோமகன்- எமதாண்டகையாகிய நெடிய முடியினையுடைய சக்கரவர்த்தி, யாண்டையான் - எவ்விடத்துளான், பணித்திர்-அருளிச்செயுங்கள், முளரிதாள் தொழவேண்டினேன் - அவரது தாமரைமலர்

பொன்றதிருவடிகளைவணங்க விரும்புகின்றேன், எய்தினேன்-அதற்காகவே வந்தேன், உள்ளம் விம்மும்ஆல் - என்மனம் விம்முகின்றது. எ-று. ௪௩

ஆல்அசை - யான் அரசர்க்கரசனைவணங்க விரும்பி இங்குப்போந்தேன். அக்குறை நிறைவேறுமையால் என்மனம் வருந்துகின்றது. ஆதலின் அம்மன்னவனிருக்குமிடத்தினை உரையுங்கள் என்றான் - என்பது கருத்து.

ஆனவனுரைசெயவழிவில்சிந்தையாள்
தானவர்வலிதவநிமிர்ந்ததானையத்
தேனமர்தெரியலான்றேவர்கைதொழ
வானகமெய்தினான்வருந்தனீயென்றாள்.

(இ-ள்.) ஆனவன் உரைசெய—பரதாழ்வானிவ்வாறுகூற, அழிவு இல் சிந்தையாள்-கெடாத எண்ணத்தினையுடையகைகேயி, தானவர் வலிதவநிமிர்ந்த தானை - அசுரர்வன்மைகெடப்பொருத உயர்ச்சியினையும் சைனியத்தினையும் உடைய, அதேனமர்தெரியலான் - அந்த தேன்பொருந்திய மலர்மாலையினையுடைய சக்கரவர்த்தி, தேவர்கைதொழ-தேவர்கள்வணங்க, வானகம் எய்தினான்-விண்ணுலகடைந்தான், நீவருந்தல் என்றாள்-அதற்காக நீ வருந்தாதே என்று கூறினாள். எ-று. ௪௪

எறிந்தனகடியசொற்செவியுளெய்தலும்
நெறிந்தலர்குஞ்சியானெடிதுவீழ்ந்தனன்
அறிந்திலனுயிர்த்திலனசனியேற்றிறால்
மறிந்துயர்மராமரமண்ணுற்றென்னவே.

(இ-ள்.) எறிந்து அனகடியசொல்—எறிந்தாற்போன்ற கொடியசொல்லானது, செவிஉள் எய்தலும்-காதினில் நுழைதலும், நெறிந்து அலர்குஞ்சியான்-நெறித்து விரிந்துகிடக்கின்ற சிகையினையுடைய பரதாழ்வான், அசனி ஏற்றிறால்-ஆண் இடியினால், உயர்மராமரம்-உயர்ந்த மராமரமானது, மண்உற்று என்ன-மண்ணில்விழுந்தாற்போல, நெடிதுவீழ்ந்தனன்-நீளமாகவிழுந்து, அறிந்திலன் உயிர்த்திலன்-உணர்ச்சியும் உயிர்ப்பும் இல்லாதவனாகக்கிடந்தனன். எ-று.

வாயொளிமழுங்கத்தன்மலர்ந்ததாமரை
ஆயலர்நயனங்களருவிசோர்தரத்
தீயெரிசெவியில்வைத்தனையதீயசொல்
நீயலதுரைசெயநினைப்பரோவென்றான்.

(இ-ள்.) வாய்ஒளி மழுங்க—வாயானது ஒளிமழுங்கவும், மலர்ந்ததாமரையாய் - விரிந்ததாமரைமலர்போலவாகி, அலர் நயனங்கள் - திறக்கப்பட்ட கண்களில், அருவிசோர்தர - அருவி ஒழுக, தீஎரி செவியில் வைத்து அனையதீயசொல் - எரிகின்ற நெருப்பினைக் காதினுட்சொருகினாற்போல கொடியசொல்லினை, நீயலது-உன்னையல்லது பிறர், உரைசெயநினைவரோ-சொல்லுதற்கு எண்ணுவார்களோ, என்றான்-என்றுகூறினான். எ-று. ௪௫

எழுந்தனனேங்கினனிரங்கிப்பின்னரும்
விழுந்தனன்விம்மினன்வெய்துயிர்த்தனன்
அழிந்தனனாற்றினனாற்றியின்னன
மொழிந்தனன்பின்னருமுருவிற்செவ்வியான்.

(இ-ள்.) பின்னரும் உருவில் செவ்வியான்—பின்னும் உருவிலழகினனான பரதாழ்வான், எழுந்தனன் - எழுந்தான், ஏங்கினன்-ஏங்கினான், இரங்கி பின்னரும் விழுந்தனன்-வருந்திப் பின்னுங் கீழ்விழுந்தான், விம்மினன்-விம்மினான் வெய்துயிர்த்தனன்-பெருமூச்சுவிட்டனன், அழிந்தனன்-நிலையழிந்தனன், ஆற்றினன்-இளைந்தழுதனன், ஆற்றி இன்னனமொழிந்தனன்-இளைந்தழுது இவ்வாறு கூறினான். எ-று. ௬௭

அழுந்தனன் என்றுபாடமாயின் அழுதனனென்பது எதுகைநோக்கி அழுந்தனனென்று ஆயதெனக்கொள்க.

அறந்தனைவேரறுத்தருளைக்கொன்றனை
சிறந்தநின்றண்ணளித்திருவைத்தேசழித்
திறந்தனையாவெனிலிறைவநீதியை
மறந்தனையுனக்கினி [illegible].

இ-ள். இறைவ—மன்னவனே, அறந்தனை-தருமத்தினை, வேர் அறுத்து - முழுதுங்கெடுத்து, அருளை கொன்றனை-[illegible], சிறந்தநின்-சிறப்பினையுடைய வுனது, தண் அளி திருவை-[illegible] செல்வத்தினை, தேசழித்து-ஒளிகெடுத்து, இறந்தனை ஆயினில் - இறந்தாயானால், நீதியைமறந்தனை-நீதியைமறந்தாய், உனக்கு [illegible]-உனக்கிதனினும் குற்றம் வேறே உளதோ. எ-று. ௬௮

நீ இருக்கும்பொழுதிருந்த [illegible] இன்மையால் நின்பிரிவு அறத்தினை அழித்தலாகிய செய்கை [illegible] எ-று.

சினக்குறும்பெறிந்தெழுகாமத்தீயவித்
தினக்குறும்பியாவையுமெற்றியாவர்க்கும்
மனக்குறுநெறிசெலும்வள்ளியோய்மறந்
துனக்குறுநெறிசெலலொழுக்கின்பாலதோ.

(இ-ள்.) சினக்குறும்பு எறிந்து—சினமாகிய குறும்புகளை அழித்து, எழு காமம் தீ அவித்து - உண்டாகின்ற காமமாகிய தீயினை அவித்து, இனக்குறும்பு யாவையும் எற்றி - கூட்டமானவெல்லாப் பகைகளையும் அழித்து, யாவர்க்கும் - எத்தகையோருக்கும், மனக்கு உறுநெறிசெலும் - மனதிற்கு இனிமையான மார்க்கத்திற் செல்லுகின்ற, வள்ளியோய் வள்ளலே, மறந்து - எங்களை மறந்து, உனக்குறுநெறிசெலல் - உனக்குற்ற மார்க்கத்திற்போதல், ஒழுக்கின்பாலதோ - முறையின் பாற்பட்டதோ! எ-று.

முதலவன்முதலியமுந்தையோர்பழங்
கதையையும்புதுக்கியதலைவன்கண்ணுடை

நுதலவன்சிலைவலிநோன்மைநூறிய
புதல்வனையெங்ஙனம்பிரிந்துபோயினாய்.

(இ-ள்.) முதலவன்முதலிய—நங்குலத்திற்கு முதல்வனாகிய இட்சவாகு முதலிய, முந்தையோர் - பூருவீகர்களின், பழங்கதையையும் - பழயசரித்திரத்தினையும், புதுக்கிய - புதுமைப்படுத்திய,தலைவன்-முதன்மையினையுடைய,கண்ணுடைநுதலவன்-நெற்றிக்கண்ணினை உடைய உருத்திரனது, சிலைவலின்னோன்மை-தநுசின்வன்மையை, நூறியதலைவனை - அழித்த ஸ்ரீராமபிரானை, எங்ஙனம்-எவ்வாறு, பிரிந்துபோயினாய்-பிரிந்துசென்றனை. எ-று. ௫௦

செவ்வழியுருட்டியதிகிரிமன்னவ
எவ்வழிமரபினுமிரவலாளர்தாம்
இவ்வழியுலகினிலின்மைநண்பினோர்
அவ்வழியுலகினுமுளர்கொலோவையா.

(இ-ள்.) செவ்வழி—நீதிமார்க்கமாக, உருட்டிய - செலுத்திய,திகிரிமன்னவ-சக்கரத்தினையுடைய அரசனே ? எவ்வழிமரபினும் - எவ்விதமான மரபினும், இரவலாளர்தாம் - இரவலர், இவ்வழி உலகினில் இன்மை - இந்தஉலகினில் இல்லாமையால், நண்பினோர்-அவ்விரவலராகிய நட்புடையோர், ஐயா - ஐயனே, அவ்வழி உலகினும் - அந்த உலகத்தினும், உளர்கொல் - இருக்கின்றார்களா. எ-று. ௫௧

பற்பகனிழற்றுநின்கவிகைபாய்நிழல்
நிற்பனபல்லுயிருணங்கநீநெடுங்
கற்பகநறுநிழல்காதலித்தியோ
மற்பகமலர்ந்ததோண்மன்னர்மன்னனே.

(இ-ள்.) மல்பகமலர்ந்ததோள்-மல்யுத்தம் புரிபவர்கள்கெட வீங்கியதோள்களையுடைய, மன்னர்மன்னனே-அரசர்க்கரசனே, பல்பகல்-அநேககாலமாக, நிழற்றும்-நிழலைச்செய்கின்ற, கவிகைபாய்நிழல் நிற்பன - குடையின்பரவிய நிழலில் நிற்பனவாகிய, பல்உயிர் உணங்க-அநேகமுயிர்கள் வருந்த, நீ நெடுங்கற்பக நறுநிழல் - நீ நெடியகற்பகத்தின் நறியநிழலை, காதலித்தியோ - விரும்பினையோ. எ-று. ௫௨

இம்பர்நின்றேகினையிருக்குஞ்சார்பிழந்
தும்பர்வந்துன்கழலொதுங்கினார்கொலாம்
சம்பரனனையவத்தானைத்தானவர்
அம்பரத்தின்னமுமுளர்கொலாமையா.

(இ-ள்.) இருக்கும் சார்பு இழந்து—இருக்கும் இடம் இழந்து, உம்பர்வந்து-தேவர்கள்வந்து, உன்கழல் ஒதுங்கினார்கொலாம், உனது பாதநிழலையடைந்தார்களா யிருக்கலாம், சம்பரன் அனைய - சம்பராசுரனையொத்த, அதானைதான

வர்-அந்தசைநியங்களையுடைய அரசர்கள், இன்னமும் அம்பரத்து உளர்கொல்-இன்னமும் சுவர்க்கத்திலுள்ளார்களோ, ஐயா-ஐயனே. எ-று. ௫௩

இயங்கெழுதானையரிறுத்தமாத்திறை
உயங்கலின்மறையவர்க்குதவியும்பரின்
அயங்கெழுவேள்வியோடமரர்க்காக்கிய
வயங்கெரிவளர்த்தனைவைகவல்லையோ.

(இ-ள்.) இயம்கெழுதானையர்—வாச்சியங்களுடனே விளங்குகின்ற சைநியங்களையுடைய அரசர்கள், இறுத்தமாத்திறை-அளித்தசிறந்தகப்பங்கள், உயங்கலில்மறையவர்க்கு-வருத்தமற்ற மறையோர்களுக்கு, உதவி-அவைகளைக்கொடுத்து, உம்பரின்-நீசென்ற சுவர்க்கத்தில், அயங்கெழுவேள்வி ஒடு-அயத்தொடு விளங்குகின்ற யாகத்துடன், அமரர்க்கு ஆக்கிய-தேவர்களின் பொருட்டுச்செய்த, வயங்கு எரி-விளங்குகின்ற நித்தியாக்கினியை, வளர்த்தனை வைகவல்லையோ-வளர்த்துக்கொண்டிருத்தற்கு கூடுமோ. எ-று. ௫௪

இவ்வுலகினில் நீ இருந்தால் அந்தணர்க்கீதல் அயமேதம்புரிதல் நித்தியாக்கினிவளர்த்தல் முதலிய காரியங்களைச் செய்வையேஅங்கவையொன்றுங்கூடாதே என்று கூறினன் என்பது கருதது.

ஏழுயர்மதகளிற்றிறைவவேகினை
வாழியகரியவன்வறியன்கையெனப்
பாழியம்புயத்துநின்பணியினீங்கிலா
ஆழியையினியவற்களிக்கவெண்ணியோ.

(இ-ள்.) வறியன் கைஎன—தரித்திரனுடைய கைகளைப்போல, பாழியம் புயத்து நின்பணிஇன் நீங்குஅலா-பருத்ததோள்களையுடையநினதுகட்டளையை விட்டகலாத, ஆழியை - ஆக்கினைசக்கரத்தினை, கரியவன்-கரியவனான, இனியவன்கு-இனிமையினையுடைய ஸ்ரீராமபிரானுக்கு, அளிக்க எண்ணியோ-அளிக்குமாறு கருதியோ-ஏழுயர்மதம்களிறு இறையவ - ஏழிட முயர்ந்த அரசு வாகினையுடைய இறைவனே, ஏகினை வாழிய-விண்ணுலகஞ்சென்றனை. எ-று. ௫௫
வாழிய முன்னிலை அசை.

பற்றிலைதவத்தினிற்பயந்தமைந்தற்கு
முற்றுலகளித்ததுமுறையினெய்திய
கொற்றவன்முடிமணக்கோலங்காணவும்
பெற்றிலைபோலுநின்பெரியகண்களால்.

(இ-ள்) பற்று இலைதவத்தினில்—பற்று இல்லையான தவத்தினால், பயந்த மைந்தற்கு-பெற்ற பிள்ளைக்கு, முற்றுலகு அளித்து - உலகமுழுமையும் அளித்து, அது முறையின் எய்திய-அவ் அளித்தல் முறையினால்பெற்ற, கொற்றவன் முடிமணம் கோலம் காணவும் பெற்றிலை - இராமபிரானுடைய மகுடதாரண

மணக்கோலத்தினைக் காணவும் பெற்றாயில்லை, நின்பெரிய கண்களால்-நினதுபெரிய நயனங்களால், எ-று. ௫௬

முறையின் எய்திய கொற்றவன்முடி மணக்கோலம் என்பதற்கு இராகவா குகாலத்தொட்டு முறையேவருமகுட மணக்கோலம் என்னினும் இழுக்காது.

ஆற்றலனின்னனபன்னியாவலித்
தூற்றுறுகண்ணினனுருகுவான்றனைத்
தேற்றினளொருவகைசிறிதுதேறிய
கூற்றுறழ்வரிசிலைக்குரிசில்கூறுவான்.

இ-ள். ஆற்றலன்—சக்கரவர்த்தியின்பிரிவிற்குப்பொறுக்காத பரதாழ்வான், இன்னனபன்னி ஆவலித்து-இவ்வாறு பலபடக்கூறி அழுது, ஊற்றுறுகண்ணினன்-ஊற்றுப்போல நீர்சுரக்கின்ற கண்ணையுடையனாகி, உருகுவான்தனைத்தேற்றினள் ஒருவகை-மனமுருகுமவனை ... கைகேயியானவள் தானே ஒருவாறு தேற்றினாள், சிறிதுதேறிய-... தேறிய, கூற்றுஉறழ்-எமனையொத்த, வரிசிலைக்குரிசில்-கட்டமைந்த வில்லினையுடையவன், கூறுவான்-சொலவான், எ-று. ௫௭

ஆற்றலனாய்ப்பன்னி ஆவலித்து ஊற்றுறுகண்ணினனாய் உருகுவானை ஒருவகை தேற்றினள் சிறிது தேறியவரிசிற்குரிசில் ... கூறுவான் என்பது கருத்து தேற்றினன் என்று பாடமாயின் தன்னைத்தானே ஒருவாறு தேற்றிக்கொண்டானென்க.

எந்தையும்யாயுமெம்பிரானுமெம்முனும்
அந்தமில்பெருங்குணத்திராமனாதலால்
வந்தனையவன்கழல்வைத்தபோதலால்
சிந்தைவெங்கொடுந்துயர்தீர்கலாதென்றான்.

(இ-ள்) எந்தையும்—எனது தந்தையும், யாயும்-தாயும், எம்பிரானும்-எமது கர்த்தாவும், எம்முனும் - எனது தமையனும், அந்தம் இல்பெருங்குணத்து இராமன் ஆதலால்-அளவற்ற உயர்குணத்தினையுடைய ஸ்ரீராமனே ஆதலால், அவன்கழல் - அவனுடைய பாதங்களை, வந்தனைவைத்தபோது அலால் - வணக்கஞ்செய்த பொழுதன்றி, சிந்தை - என்மனதிலுண்டாகிய, வெங்கொடுந்துயர்-வெவ்விய கொடியதுன்பம், தீர்கலாது - நீங்காது, என்றான்-என்றுகூறினான்.

அவ்வுரைகேட்டலுமசனியேறெனை
வெவ்வுரைவல்லவள்மீட்டுங்கூறுவாள்
தெவ்வடுசிலையினாய்தேவிதம்பியென்
றிவ்விருவோரொடுங்கானத்தானென்றாள்.

(இ-ள்) அவ்வுரை கேட்டலும்-அம்மொழியைக்கேட்ட உடனே, அசனிஏறெனவெவ்வுரைவல்லவள் - ஆணிடிபோல கொடுஞ்சொற்கூறுதலின் வல்லவளான கைகேயி, மீட்டுங்கூறுவாள் - பின்னருமுரைக்கின்றாள், தெவ்வடுசிலை

வீனாய்-பகைவர்களைக்கொல்லுகின்ற விற்படையினையுடையாய், தேவிதம்பி என்று இவ் இருவோரொடும் - தேவியும் தம்பியுமாகிய இருவர்களுடனே, கானத்தான் என்றாள் - இராமன் காட்டினிடத்தான் என்று கூறினாள். எ-று.

வனத்தினனென்றவனிசைத்தமாற்றத்தை
நினைத்தனனிருந்தனனெருப்புண்டானென
வினைத்திறம்யாதினிவிளைவதின்னமும்
எனைத்துளகேட்பனதுன்பம்யானென்றான்.

(இ-ள்.) வனத்தினன் என்று அவன் இசைத்த மாற்றத்தை—ஸ்ரீராமபிரான் வனத்தினிடத்தான் என்று அவனைக்கூறி உரைத்த வசனத்தினை, நெருப்பு உண்டான் என-நெருப்பினை உண்டவனைப்போல, நினைத்தனன் இருந்தனன்-நினைத்துக்கொண்டிருந்தான், வினைத்திறம் யாது இனி விளைவது-என்னசெயல் இனி உண்டாகப்போகிறது, யான்-நான், இன்னமும் - இனிமேலும், எனைத்து உள துன்பம் கேட்பன, எவ்வளவுள்ளன துன்பங் கேட்கவேண்டுவன, என்றான்-என்று கூறினான் எ-று. ௬0

ஏங்கினவிம்மலோடிருந்தவேந்தனைப்
பூங்கழற்காவலன்வனத்துப்போயது
நீங்கிழைத்ததனிலோதெய்வன்றியோ
ஓங்கியவிதியினோயாதினோவெனு.

இ-ள். ஏங்கிய விம்மலொடு இருந்த வேந்தன்—ஏக்கமான விசனத்துடனிருந்த பரதாழ்வான், அப்பூங்கழல்காவலன்-அந்த வீரகண்டையணிந்த கால்களையுடைய ராமபிரான், வனத்துப்போயது காட்டிற்குச்சென்றது, நீங்கு இழைத்ததனினோ-குற்றஞ்செய்தமையாலோ, ஓங்கியவிதியினோ - உயர்ந்தவிதியினாலோ, யாதினோ எனு-எதனாலென்று. எ-று. ௬௧

எங்கினதீயன வென்றுமிவ்விரண்டு பாடலுங்குளகம்.

தீயனவிராமனேசெய்யுமேலவை
தாய்செயலல்லவோதலத்துளோர்க்கெலாம்
போயதுதாதைவிண்புக்கபின்னரோ
ஆயதன்முன்னரோவருளுவீரென்றான்.

இ-ள். தீயவை இராமனேசெய்யுமேல்—தீயகாரியங்களை இராகவனே செய்வானானால், தலத்துளோர்க்கெலாம் அவை தாய்செயல் அலவோ - இவ்வுலகிலுள்ளார் யாவருக்கும் அவை தாயின் செயலாயன்றோ ஆகும், போயது-வனத்திற்குச்சென்றது, தாதைவிண்புக்கபின்னரோ-தந்தை சுவர்க்கம்புக்க பின்னரோ, ஆயதன் முன்னரோ-அதற்குமுன்னேயோ, அருளுவீர் என்றான்-உரையுங்கள் என்றுகூறினான். எ-று. ௬௨

குருக்களையிகழ்தலினன்றுகூறிய
செருக்கினலன்றொருதெய்த்தாலுமன்
றருக்கனேயனையவவ்வரசர்கோமகன்
இருக்கவேவனத்தவனேகினனென்றாள்,

இ-ள். குருக்களை இகழ்தலின்அன்று—தந்தை தாய் ஆசிரியன் முதலிய குருக்களை இகழ்தலாலன்று, கூறிய செருக்கினால் அன்று-சொல்லப்பட்டசெருக்கினாலுமன்று, ஒருதெய்வத்தாலும் அன்று - ஒப்பற்ற தெய்வத்தினாலுமன்று, அருக்கனே அனைய-சூரியனையே ஒத்த, அவ்அரசர்கோமன் இருக்கவே-அச்சக்கரவர்த்தி இருக்கும்பொழுதே, அவன் வனத்து ஏகினன்-அவ் இராமன் காட்டிற்குச்சென்றான், என்றாள்-என்று கைகேயிகூறினாள். எ-று. ௬௩

குற்றமொன்றில்லையேற்கொதித்துவேறுளோர்
செற்றதுமில்லையேற்றெய்வத்தாலன்றேல்
பெற்றவனிருக்கவேபிள்ளைகான்புக
உற்றதென்பின்னவனுலந்ததென்னென்றான்.

(இ-ள்.)குற்றம்ஒன்றுஇல்லையேல்—ஒருகுற்றமுமில்லையானால், கொதித்து வேறுஉளோர் செற்றதும இல்லையேல்-கோபித்து அயலவர்கள் தண்டித்ததுமில்லையானல், தெய்வத்தால்அன்றேல்-கடவுளாலல்லவானால், பெற்றவன்இருக்கவே பிள்ளைகான்புக உற்றதுஎன்-தந்தைஇருக்கும்பொழுதே மைந்தன்காட்டைடைதற்குஉண்டாகியதுஎன்னை, பின்அவன்உலாந்தது என்என்றான்-பின்னர்அத்தந்தைஇறந்தது ஏன்என்றுகேட்டான். எ-று. ௬௪

வாக்கினல்வரந்தரக்கொண்டுமைந்தனைப்
போக்கினேன்வனத்திடைபோக்கிப்பாருனக்
காக்கினேனவனதுபொறுக்கலாமையால்
நீக்கினான்றன்னுயிர்நேமிவேந்தென்றாள்.

(இ-ள்.) அவன்வாக்கினல்—அச்சக்கரவர்த்தியின் வாக்கினாலேயே, வரந்தரகொண்டு-வரங்கொடுக்கப்பெற்றுக்கொண்டு, மைந்தனை வனத்திடைபோக்கினேன்-இராகவனை காட்டுக்குஅனுப்பினேன்,பார்உனக்குஆக்கினேன்-இந்தப்பூமியைஉனக்காகச்செய்தேன்,நேமிவேந்து அதுபொறுக்கலாமையால்-ஆக்கினைச்சக்கரத்தினையுடைய அவ்வரசன் அதற்கு மனந்தாளாதவனாய், தன் உயிர்நீக்கினன் என்றாள்-தனதுயிரைவிடுத்தனன் என்று கூறினாள். எ-று. ௬௫

சூடினமலர்க்கரஞ்சொல்லின்முன்செவி
கூடினபுருவங்கள்குதித்துக்கூத்துநின்
றாடினவுயிர்ப்பினோடழற்கொழுந்துகள்
ஓடினவுமிழ்ந்தனவுதிரங்கண்களே.

(இ-ள்.) சொல்லின்முன்—கைகேயி இச்சொற்களைக்கூறி முடித்தற்குமுன்னே, சூடினமலர்கரம்-தலைமீது குவித்திருந்தமலரனையகரங்கள், செவிகூடி

ள்-காதுகளை அடைத்தன, புருவங்கள்குதித்துநின்று கூத்தாடின-புருவங்கள் குதித்துக்குதித்து நடனம்புரிந்தன, உயிர்ப்பின் ஓடு அழல்கொழுந்துகள்ஓடின-பெருமூச்சுடனே தீச்சுவாலைகள்ஓடின, கண்கள்உதிரம்உமிழ்ந்தன-நேத்திரங்கள் இரத்தங்கக்கின. எ-று. ௬௬

துடித்தனகபோலங்கள்சுற்றுந்தீச்சுடர்
பொடித்தனமயிர்த்தொளைபுகையும்போர்த்தது
மடித்ததுவாய்நெடுமழைக்கைம்மண்பக
அடித்தனவொன்றொடொன்றசனியஞ்சவே.

(இ-ள்.) துடித்தனகபோலங்கள்-கபோலங்கள்துடித்தன, மயிர்தொளைசுற்றும் தீசுடர்பொடித்தன-உரோமத்துவாரங்கள்தோறும் அக்கினிப்பொறிகளுண்டாயின, புகையும்போர்த்தது-புகையும் சூழ்ந்துகொண்டது, வாய்மடித்தன-வாயிதழ்கள்மடித்தன, மழைகை-மழைபோலுமீகையையுடைய அத்தங்கள், ஒன்றொடொன்று அசனிஅஞ்சமண்பகஅடித்தன-ஒன்றுடனொன்று இடியுமஞ்சுமாறு பூமிவெடிக்கஅடித்தன. எ-று. ஏகாரம் ஈற்றசை. ௬௭

பாதங்கள்பெயர்தொறும்பாருமேருவும்
போதங்கொணெடுந்தனிப்பொருவில்கூம்பொடு
மாதங்கம்வருகலமறுகிக்கால்பொர
ஓதங்கொள்கடலினின்றலைவபோன்றவே.

(இ-ள்.) பாதங்கள்பெயர்தொறும்—இவன் அடிகளைப் பெயர்த்துவைக்குந்தோறும், பாரும்மேருவும்-பூமியுமதன்நடுவணதானமகாமேருவும்,நெடுந்தனிபொருவில் கூம்பொடு-நெடியவொன்றான ஒப்பற்றபாய்மரங்களுடன், போதம்கொண்மாதங்கம்-கன்றுகளையுடையயானைகள், வருகலம்-வராநின்றகப்பல், கால்பொர-காற்றுவீச, ஓதங்கொள்கடலில்நின்று-அலைகளையுடைய கடலிலேநின்று, மறுகிஉலைவபோன்ற-மறுகுதலடைந்து அசைதலைஒத்தன. எ-று. ௬௮

ஏகாரம் ஈற்றசை.

அஞ்சினர்வானவரவுணரச்சத்தால்
துஞ்சினரெனைப்பலசொரிமதத்தொளை
எஞ்சினதிசைக்கரியிரவிமீண்டனன்
வெஞ்சினக்கூற்றுந்தன்விழிபுதைத்ததே.

(இ-ள்.) அஞ்சினர் வானவர்—அஞ்சினார்கள் தேவர்கள், அவுணர் அச்சத்தால் துஞ்சினர்-அசுரர்கள் அச்சத்தினால் வாட்டமுற்றார்கள், பலஎனை-அநேகங்களை உரைப்பதனுலென்னையுளது, திசைக்கரி-திக்கயங்களின், மதம்சொரி-மதத்தினை யூற்றுகின்ற, தொளைஎஞ்சின-துவாரங்கள்சிறுத்தன, இரவிமீண்டனன் - சூரியன்தன்னிலையில் நில்லாததிரும்பினான், வெஞ்சினம்கூற்றும்-வெவ்விய கோபத்தினையுடையகூற்றமும், தன்விழிபுதைத்தது-தனதுகண்களைமூடியது. எ-று.

இவனுக்குண்டாகிய கோபத்தினைக்கண்டு தேவர் அசுரர் சூரியன்முதலி யோர் நடுங்கினார்கள் அன்றியும் திக்கயங்களும் கூற்றமும் நடுங்கினவென்பது கரு து. கூற்றம்என அஃறிணையிலுரைத்ததற்கேற்ப புதைத்ததுவென்றார்.

ஏகாரம் ஈற்றசை.

குலமுதல்வனாகிய நீ கண்டிருந்தும் இச்செயல் தகாதெனத் தடைசெய்யாதி ருத்தல் கிற்கழகோஎன என்னை நோக்கி ஒருவோ கேட்டாலுங்கேட்பான் என் னும்அச்சமுடையவனானமைபால் இராவி நீளைடனன் எனவிரிக்க.

கொடியவெங்கோபத்தாற்கொதித்தகோளரி
கடியவடாயெனக்கருதுகின்றிலன்
நெடியவன்முனியுமெனநாரறிநின்றனன்
இடியுருமனையவெம்மொழியியம்புவான்.

(இ-ள்.) கொடியவெம்கோபத்தால்—கொடுமையான பொல்லாதகோபத் தினால், கொதித்தகோளரி-கொதிப்படைந்த சிங்கம்போன்ற பரதாழ்வான், கடிய வள்-வன்னெஞ்சினளான கைகேயியை, தாயான பெற்றமாதாஎன்று, கரு துகின்றிலன்-எண்ணுகின்றிலன், நெடியவன்-ஸ்ரீராமன், முனியுமென்று-கோ பங்கொள்ளுவானென, அஞ்சிநின்றனன்-அஞ்சிநின்று, இடியுருமனைய-ஆணி டிபோன்ற, வெம்மொழி-கொடுமொழிகளை, இயம்புவான்-சொல்கின்றான்.

மாண்டனனெந்தையென்றார் முன்பாதவம்
பூண்டனனின்கொடும்புணர்ப்பினாலென்றால்
கீண்டிலென்வாயதுகேட்டுநின்றயான்
ஆண்டனனேயன்றேவரசையான்.

(இ-ள்.) நின்கொடும்புணர்ப்பினால்—நினது கொடியவஞ்சனையினால், எந் தை-எனதுதந்தை, மாண்டனன் - இறந்தனன், என்றபமுன் எனதுதமையன், மாதவம்பூண்டனன்-பெரியதவவியாபாரத்தை கைக்கொண்டனன், என்றால்- ஆனால், அதுகேட்டும்-அவர்கள் அவ்வாறுபட்டதனைக்கேட்டும், வாய்கீண்டிலன்-வா யைப்பிளவாமல், நின்றயான்-சும்மா நின்றயான், ஆசையால்-விருப்பத்தினால், அர சை-இவ்வரசினை, ஆண்டனனே அன்றோ ஆண்டவனே அல்லவோ- எ-று.

தம்-சாரியை.

நீயினமிருந்தனையானுநின்றனன்
ஏயெனுமாத்திரத்தெற்றுகிற்றிலேன்
ஆயகன்முனியுமென்றஞ்சினேனலால்
தாயெனும்பெயரெனைத்தடுக்கற்பாலதோ.

(இ-ள்.) நீயினம்இருந்தாய்—நீயின்னமுமிருந்தாய், யானும்நின்றனன்- யானும் நின்னெதிரில்நின்றன், ஏஎனுமமாத்திரத்து-ஏஎன்றுகூறுவதற்குள்.எற்று கிறுஇலேன்-எறிந்தேனிலலே, ஆயகன்-தலைமையனாகிய இராகவன், முனியுமெ ன்று-கோபித்துக்கொள்ளுவானென, அஞ்சினேன்அலால்-அஞ்சினேனேயன்றி

தாய்எனும்பெயர்-மாதாவென்னுநாமம், எனைதடுக்கற்பாலதோ-என்னைநடைசெயுந்தன்மையினதோ. எ-று. எஉ

மாளவுமுளனொருமன்னன்வன்சொலால்
மீளவுமுளனொருவீரன்மேயபார்
ஆளவுமுளனொருபரதனாகினால்
கோளலதறநெறிகுறையுண்டாகுமோ.

(இ-ள்.) வன்சொலால்—இவளது கொடியமொழியினால், ஒருமன்னன்-ஒப்பற்றசக்கரவர்த்தி, மாளவும்உளன் - இறக்கவும்ஆயினான், ஒருவீரன்-ஒப்பற்ற ஸ்ரீராமபிரான், மீளவும்உளன் - அரசாளுவதினின்றும் நீங்கவேண்டியவனுமாயினான், ஒருபரதன்-பரதனென்கிறஒருவன், பார்ஆளவும் உளன்ஆகினான்-இந்தப் பூமியை ஆளவும்இருந்தேனானால், கோள்அலது-இவ்வுடைமை வேண்டுகோளேஅன்றி, அறநெறிகுறைஉண்டாகுமோ-இவ்விஷயத்தில்தருமமார்க்கமானது குறைவுபட்டது ஆகுமோஆகாது. எ-று. எங

சூழியுடைத்தாயுடைக்கொடியசூழ்ச்சியால்
வழியுடைத்தாய்வருமரபைமாய்த்தொரு
பழியுடைத்தாக்கினன்பரதனென்பெனும்
மொழியுடைத்தாக்கலின்முறைமைவேறுண்டோ.

(இ-ள்.) சூழிஉடைதாய் உடை - சூழ்ச்சியையுடைய மாதாவினுடைய, கொடிய சூழ்ச்சியால்-கொடுமையான வஞ்சனையினால், வழிஉடைத்து ஆய்வரும் - சூரியன் முதற்கொண்டு பாரம்பரியமாகவருகின்ற, மரபை-மரபினை, மாய்த்து-கெடுத்து, பரதன்-முன்னேயில் பரதனென்பவன், பழிஉடைத்து ஆக்கினன்-பழி உடையதாகச்செய்தான், எனும்-என்றுகூறப்படுகின்ற, மொழி உடைத்து ஆக்கலின் - சொல்லுடையதாகச்செய்தலினும், வேறுமுறைமை உண்டோ-வேறே நீதியும் உளதோ, இல்லையென்றபடி. எ-று. எச

வேறு.

நோயீரல்லீர்நுங்கணவன்றன்னுயிருண்டீர்
பேயீரேநீரின்னமிருக்கப்பெறுவீரே
மாயீர்மாயாவன்பழிதந்தீர்முலைதந்தீர்
தாயீரேநீரின்னுமெனக்கென்தருவீரே.

(இ-ள்.) நும்கணவன்-உம்முடைய நாயகனுடைய, உயிர்உண்டீர்-பிராணனை உண்ணுதல்செய்தீர், நீர்நோயீர் அல்லீர்-நீங்கள் இதற்காக விசனமுடையவராக காணப்படவில்லை, இன்னம் இருக்கப்பெறுவீர்-இன்னமும் உயிர்வாழப்பெறுவீர், மாயீர்-சாவாதிருப்பவரோ, மாயாவன்பழி-கெடாத வலியபழியினை, தந்தீர்-எமக்குக்கொடுத்தீர், முலைதந்தீர்-பாலளித்தவரே, நீர்தாயீரே - நீர் எனக்கு அன்னையோ, இன்னும் எனக்கு என்தருவீர் - இன்னமும் என்றனக்கு என்ன கொடுக்கப்போகின்றீர்கள். எ-று. எரு

கைகேயியாரே நீவிர் எனக்கன்னையாயிருந்திவ்வளவு துன்பங்களையுந் தந்தீர் இன்னம் என் தரவிருக்கின்றீர் சக்கரவர்த்தியை இறக்கச்செய்து நீருயிருடனிருத்தலால் என்னையன் இறந்துபடுதல் நலமாமே என்பனவாதிமொழிகளை விசழ்ந்தானென்பது கருத்து.

ஒன்றும்பொய்யாமன்னனையாயா லுயிரோடும்
நின்றுந்தீரவன்பழிகொண்டுந்திருவெய்தி
என்றுந்நீரேவாழ்வுவந்தீரவனேகக்
கன்றுந்தாயும்போவனகண்டுங்கழியீரோ.

(இ-ள்.) ஒன்றும்-யாதொன்றிலும், பொய்யாமன்னனை - பொய்க்காத அரசனை, உயிர்ஒடும்நின்றும்-உயிருடனேநின்றும், தீராவன்பழிகொண்டும்-நீங்காத கொடியவலிய பழியை கைக்கொண்டும், திரு எய்தி-இவ்விராச்சியசம்பத்தினையடைந்து, என்றும்நீரேவாழ்வுவந்தீர்-எப்பொழுதும்நீரே இருந்துவாழுமாறு மகிழ்ந்துநின்றீர், அவன்ஏக - அவ்விராகவன் வனஞ்செல்ல, கன்றும்-இலக்குமணனாகிய கன்றும், தாயும் - மாதாவான சீதையும், போவனகண்டும்-உடன்செல்வதனைப்பார்த்தும், கழியீர்-இறவாதிருக்கின்றீர். எ-று. ௭௬

அவன் ஏக அவ்விராகவன் வனஞ்செல்ல கன்றும் - வருந்துகின்ற-தாயும் மாதாவானசீதையும் எனக்கூறினுமாம்.

இறந்தான்றந்தையீந்தவரத்துக்கிழிவென்று
அறந்தானீதென்றன்னவன்மைந்தனரசெல்லாம்
துறந்தான்றாயின்சூழ்ச்சியின்ஞாலமவனோடும்
பிறந்தானுண்டானென்னுமிதென்றாற்பெறலாமே.

(இ-ள்) தாயின்சூழ்ச்சியின்—மாதாசெய்த வஞ்சனையால், தந்தை இறந்தான்-பிதாவிறந்தனன், அன்னவன்மைந்தன்-அவ்விறந்த தந்தையின் மூத்தகுமாரன், ஈய்ந்தவரத்துக்கு-தந்தைகொடுத்தவரத்திற்கு, இழிவென்று-இழிவாகுமென்று, ஈது அறந்தான் என்று - இப்பிதுர்வாக்கிய பரிபாலனம் தருமமேயாகுமென்று, அரசு எல்லாம்-அரசுமுழுதும், துறந்தான்-துறந்தனன், ஞாலம்-அவன்துறந்தபூமியை, அவனோடும் பிறந்தான்-அத்துறந்தவனுடன்பிறந்தவன், ஆண்டான் என்னுமிது-ஆண்டான்என்னும்இப்பெயர், என்றால் பெறல்ஆம்-என்றனுல்பெறுதல்கூடும், கூடாதென்றபடி. எ-று. ௭௭

மாளும்மென்றேதந்தையையுன்னுவசைகொண்டாள்
கோளும்பென்னுலேயெனக்கொண்டானதுவன்றேல்
மீளும்மன்றேயென்னையுமெய்யேயுலகெல்லாம்
ஆளும்மென்றேபோயினனன்றோவரசாள்வான்.

(இ-ள்.) அரசு ஆள்வான்—இவ் அரசினை ஆள்வானிருந்த இராகவன், தந்தையைமாளும்என்றேஉன்னு-தகப்பனை இறப்பானென்றே நினைத்து, வசைகொ

ண்டாள்கோளும்-பழிபூண்டு இக்கைகேயின் வரம்வாங்குதலாகியகொள்கையும், என்றாலெனல்கொண்டான்-என்றனுலேயென்பதை உட்கொண்டான், அது அன்றேல்-அப்படி இல்லாதுபோனால், அன்றேமீளும்-சக்கரவர்த்திஇறந்த அத்தினமே திருப்பிவந்திருப்பான், என்னையும்-என்றனையும், மெய்யே-உண்மையாக, உலகுஎல்லாம்-உலகமுழுமையும், ஆளுடையனே-ஆளுவான்எனவே, போயினன்-கருதிச்சென்றனன். எ-று. ௭௮

ஓதாநின்றதொல்குலமன்னனுணர்வப்பால்
யாதானுந்தானாகவெனக்கேபணிசெய்வான்
தீதாநின்றசிந்தனைசெய்தானவனென்னப்
போதாதோவென்றாயிவள்கொண்டபுகழம்மா.

(இ-ள்) ஓதாநின்ற தொல்குலமன்னன்—உரைக்கப்பட்ட பழைய சூரிய குலத்தரசன், உணர்வு-எண்ணமானது, அப்பால்யாதானுந்தான்ஆக-பின்னானது வேணும்ஆருக, எனக்கே-என்றனக்கே, பணிசெய்வான்-பணிகளைச்செய்தற்கு, தீது ஆநின்றசிந்தனை செய்தான்-குற்றமாகியநினைவினைக்கொண்டான், அவன்என்ன அப்பரதன்என்றுகூற, போதாதோ-இன்னம் வேண்டுமோ, என்தாய்இவள்-என் யாதாவாகிய இவள், கொண்டபுகழ்அம்மா-ஏற்றுக்கொண்டபுகழானது, எ-று.

அம்மா-வியப்பினை இகழ்ந்துகாட்டிய இடைச்சொல்.

உய்யாநின்றேனின்னமுமென்முன்னுடன்வந்தான
கய்யார்கல்லைப்புல்லடகுண்ணக்கவலோர்ந்தி
வெய்யோனானின்சாலியின்வெண்சோறமுதென்ன
நெய்யோடுண்ணாநின்றதுநின்றார்நினையாரோ.

(இ-ள்.) இன்னமும் உய்யாநின்றேன்—இன்னமும் உயிர்தரித்திருக்கின்றேன், என்முன் உடன்வந்தான்-தமையனாகிய சகோதரனான இராகவன், கையார்கல்லை-கையிற்பொருந்திய தொன்னையில், புல்அடகுஉண்ண-இழிந்தகீரைமுதலியவைகளை அருந்த, வெய்யோன்நான்-கொடியவனாகியயான், இன்சாலியின் வெண்சோறு-இனிய சம்பாவரிசியால்சமைக்கப்பட்ட வெள்ளியஅன்னத்தினை, அமுதுஎன்ன-அமிர்தத்தைப்போல, நெய்யொடு-நெய்யுடன், உண்ணாநின்றது-உண்ணுகின்றது, நின்றார்-இவ்வுலகிலிருப்பவர்கள், நினையாரோ-எண்ணார்களோ. எ-று. ஓகாரம்-துணிவுப்பொருட்டு. ௮௰

வில்லார்தோளான்மேவினன்வெங்கானகமென்ன
நல்லானன்றேதுஞ்சினனஞ்சேயனையாளைக்
கொல்லேன்மாயேன்வன்பழியாலேகுறைவற்றேன்
அல்லேனானேனன்புடையார்போலழுகின்றேன்.

(இ-ள்.) வில்லார்தோளான்—கோதண்டமேந்திய தோளினனான இராகவன், வெம்கானகம்-கொடியகாட்டினை, மேவினன்என்ன-அடைந்தான்என்று, நல்லான் அன்றேதுஞ்சினன்-சக்கரவர்த்தி அன்றே இறந்தான், நஞ்சேஅனையாளை-விடம்போன்ற கைகேயியை, கொல்லேன்-கொல்லாதவனாக இருக்கின்றே

ஆண்டகைகோசலையருகரெய்தினன்
மீண்டுமண்கிழிதரவீழ்ந்துகேழ்கிளர்
காண்டகுதடக்கையிற்கமலச்சிறடி
பூண்டனன்கிடந்தனன்புலம்பினனரோ.

(இ-ள்.) ஆண்டகை—ஆண்டன்மையினையுடைய பரதன், கோசலைஅருகர் எய்தினன்-கோசலாதேவியினருகிற்சென்று, மீண்டும்-முன்விழுந்ததுபோலவே பின்னும், மண்கிழிதரவிழுந்து-மண்கிழிபடுமாறுவிழுந்து, கேழ்கிளர்காண்தகுதடம்கையில்-நிறம்விளங்குகின்ற பார்க்கத்தக்க அழகிய விசாலமான அத்தங்களால், கமலச்சிறடி-கோசலையின் தாமரைமலர்போன்ற சிறியபாதங்களை, பூண்டனன்-பற்றினவனாய், கிடந்தனன்புலம்பினன்-கிடந்தழுதான். எ-று. ௮௮

அரோ-அசை. கிடந்தனன்முற்றெச்சம்.

எந்தையெவ்வுலகுளானெம்முன்யாண்டையான்
வந்ததுதமியெனிம்மறுக்கங்காணவோ
சிந்தையினுறுதுயர்நீர்க்கிராலெனும்
அந்தரத்தமரருமழுதுசோரவே.

(இ-ள்.) எந்தை—என்தந்தை, எவ்வுலகுஉளான்-எந்தஉலகத்தில் இருக்கின்றான், எம்முன்யாண்டையான்-என்தமையன் எவ்விடத்திலிருக்கின்றான், தமியேன் இம்மறுக்கம் காணவோவந்தது-அடியேன் இத்துன்பங்காணத்தானோ அங்குநின்றும்வந்தது, அந்தரத்து அமரரும் அழுதுசோர - ஆகாயவுலகிலுள்ள தேவர்களும் அழுதுசோரும்வண்ணம், சிந்தையின் உறுதுயர்-என் மனதிலுண்டாகிய துன்பத்தினை, நீக்குதிரால்எனும்-நீக்குவீராகவென்று கூறுவான். எ-று.

ஆல்-அசை.

அடித்தலங்கண்டிலென்யானென்னையைப்
படித்தலங்காவலன்பெயரற்பாலனே
பிடித்திலிர்போலுநீர்பிழைத்திராலெனும்
பொடித்தலந்தோளுறப்புரண்டுசோர்கின்றான்.

(இ-ள்.) பொடிதலம் தோள்உறபுரண்டு சோர்கின்றான்—தரையிலுள்ள புழுதிகள் தோள்களினிடத்ததாக அழுது சோர்கின்றவன், யான்என்னையை அடித்தலம்கண்டிலேன்-நான் என்தந்தையின் திருவடிகளைக் காணாதவனாயினேன், படிதலம்காவலன்-உலகினிடத்தைக்காக்குமன்னன், பெயரல்பாலனே-இவ்வுலகினைவிட்டுப் போகத்தக்கவனோ, நீர்பிடித்திலர்போலும்-நீர் தடைசெய்தீரில்லை, பிழைத்திரா-தவறிப்போயினீரா, எனும்-என்று கூறுவான். எ-று. ௯௰

படித்தலம் காவலனென்பதற்கு-ஸ்ரீராமபிரான என்பாருமுளர்.

கொடியவர்யாவருஞ்சூழ்ங்கள்வேரற
நொடிகுவென்யானதுநுவல்வதென்கொனம்

கடியவள்வயிற்றினிற்பிறந்தகள்வனேன்
முடிகுவனருந்துயர்முடியவென்னுமால்:

(இ-ள்.) கொடியவர் யாவரும்—கொடியவர்களெல்லாம், குலங்கள்வேர் அறகொடிகுவன்யான்-வம்சங்கள் வேரற்றுப்போம்வண்ணம் அழிப்பேனியான், அதுவு வல்லது எங்ஙனம் - அதனைஎவ்வாறு கூறுவது, கடியவள்வயிற்றினில்- கொடியவளுடைய வுதரத்தில், பிறந்தகள்வனேன்-பிறந்தகள்வனாகியயான், முடிகுவன்-இறப்பேன், அருந்துயர்முடிய - அரியதுன்பம் நீங்க, என்னும்-என்று கூறுவான், எ-று. ஆல் அசை ௩௧

இரதமொன்றூர்ந்துபாரிருளைநீக்குமவ்
வரதனிலொளிபெறவளர்ந்ததொல்குலம்
பரதனென்றொருபழிபடைத்ததென்னுமால்
மரகதமலையெனவளர்ந்ததோளினான்.

(இ-ள்.) மரகதமலைஎன வளர்ந்ததோளினான்-மரகதமலைபோல வளர்ந்த தோள்களையுடைய பரதன், இரதம்ஒன்று ஊர்ந்து—ஒருதேரினைநடத்தி, பார் இருளைநீக்கும்-பூமியிலுள்ள இருட்டினை அகற்றுகின்ற, அவ்வரதனில் - அந்த சூரியனிலும், ஒளிபெறவளர்ந்த தொல்குலம் - ஒளிபெறுமாறு வளர்ந்தபழைய விக்குலமானது, பரதன்என்ற ஒருபழி - பரதனென்னும் ஒருபழியை, படைத்தது என்னும்-உண்டாக்கிக்கொண்டது என்றுகூறுவான், எ-று. ௩௨

ஆல் அசை.

வாளொடுதானையான்வானில்வைகிடக்
காடொருதலைமகனெய்தக்கண்ணிலா
நாடொருதுயரிடையுழவதேயெனுந்
தாடொடுதடக்கையந்தருமபோயனான்.

(இ-ள்.) தாள்தொடுதடம் கைஅதருமமோஅனான்-பாதம்வரைக்கும் நீண்டு விளங்குகின்ற பெரியகைகளையுடைய அந்தருமம்போன்ற பரதாழ்வான், வாள் தொடுதானையான்—வாட்படையேந்தியசேனைகளையுடையசக்கரவர்த்தி,வானில் வைகிட -சுவர்க்கத்திலிருக்க,காடு-காட்டினை, ஒருதலைமகன்எய்த-ஒப்பற்ற மூத்த மகனடைய, கண்இலாநாடு-கண்ணற்ற இத்தேயம், ஒருதுயரிடை-அரசனில் லாத ஒருதுன்பத்தில் வருந்துவதோ, எனும்-துக்கப்படுவதோஎன்று கூறுவான்.

புலம்புறுகுரிசிறன்புலர்வுநோக்கினாள்
குலம்பொறைகற்பிவைசுமந்தகோசலை
நிலம்பொறையாற்றலனெஞ்சங்காய்தெனுச்
சலம்பிறிதுறமனந்தளர்ந்துகூறுவாள்.

(இ-ள்) குலம்பொறைகற்பு இவை சுமந்தகோசலை—குலமும் பொறுமை யும் கறபும் ஆகிய இவைகளையுடைய கோசலாதேவி, புலம்புறு-தன்னெதி

ரே விழுந்தழுகின்ற, குரிசில்தன்-பரதனுடைய, புலர்வுநோக்கினள்-துன்பத்தினைப்பார்த்தாள், நிலைப்பொறைஆற்றலன்-இவன் இவ்வுலகினை ஆளான், நெஞ்சம்தூய்துளனு-இவன்மனம் பரிசுத்தமானதுஎன்று, சலம்பிறிதுற - விடார்தகோபமானது விலகிநிற்க, மனம்தளர்ந்து-மனம்நெகிழ்ந்து, கூறுவாள்-சொல்லுவாள்.

மையறுமனத்தொருமாசுளானலன்
செய்யனேயென்பதுதேருஞ்சிந்தையாள்
கய்கையர்கோமகளிழைத்தகைதவம்
அய்யநீயறிந்திலைபோலுமாலென்றாள்.

(இ-ள்.) மைஅறுமனத்து—களங்கமற்றமனத்தில்,ஒருமாசுஉளான்அலன்-ஒருகுற்றமும்உள்ளவனல்லன், செய்யனேஎன்பது-சரியானவனேஎன்பதை,தேருஞ்சிந்தையாள் உணர்ந்தகோசலாதேவி, கைகையர்கோமகள்-கேகயராசபுத்திரியான நின்அன்னை, இழைத்தகைதவம்-செய்தவஞ்சனை, ஐய-பரதனே, நீஅறிந்திலைபோலும் ஆம்என்றாள்-நீ அறிந்தாயில்லைபோலும என்றுகூறினள். எ-று.

தாளுறுகுரிசிலத்தாய்சொற்கேட்டலும்
கோளுறுமடங்கலிற்குமுறிவிம்முவான்
நாளுறுநல்லறநடுங்கநாவினால்
சூளுறுகட்டுரைசொல்லலும்போயினான்.

(இ-ள்.) தாள்உறுகுரிசில்—காலருகில்கிடக்கின்ற பரதாழ்வான், அத்தாய்சொல்கேட்டலும்-அந்த தாயின் சொல்லினைக்கேட்டவுடனே, கோள்உறும்மடங்கலில்-வன்மைபொருந்திய சிங்கத்தினைப்போல,குமுறிவிம்முவான்-இரைந்து அழுமவன்,நாள்உறுநல் அறம்நடுங்க-அந்நாளிலுள்ள நல்ல தருமதேவதையானது நடுங்க, நாவினால்-தனதுநாவினால், சூளுறு-சபதமான, கட்டுரை-உறுதியானமொழிகளை, சொல்லல்மேயினான்-கூறததொடங்கினான் எ-று. ௯௬
கோளுறுமடங்கல் என்பதற்கு-தடையுண்டசிங்கம் என்றுங் கூறுவார்.

அறங்கெடமுயன்றவனருளினெஞ்சினன்
பிறன்கடைநின்றவன்பிறரைச்சீறினோன்
மறங்கொடுமன்னுயிர்கொன்றுவாழ்ந்தவன்
துறந்தமாதவர்க்கருந்துயரஞ்சூழ்ந்துளோன்.

(இ-ள்.) அறங்கெடமுயன்றவன்—தருமத்தை அழிக்க முயற்சிசெய்தவனும், அருள்இல்நெஞ்சினன்-இரக்கமற்ற மனமுடையவனும், பிறன்கடைநின்றவன்-அன்னியனுடைய கடைவாயிலினின்றவனும், பிறரைச்சீறினோன் - அயலாரைக்கோபித்தவனும், மறம்கொடுமன்உயிர்-சீற்றம்கொண்டு உலகிலுள்ள உயிர்களை,கொன்றுவாழ்ந்தவன்-கொலைசெய்து வாழ்ந்தவனும்,துறந்தமாதவர்க்கு-துறவறத்தினை அடைந்த பெரிய தவசிகளுக்கு, அருந்துயரம் சூழ்ந்துஉளோன்-அரியதுன்பத்தினைச்செய்தவனும். எ-று. இதுமுதல் ஐந்துபாடல்குளகம்.

அறவழிநில்லாததனைக் கெடுக்கமுயன்றவன் பாவியாய் நரகமடைவானாதலால்-யானும் மூத்தவனுளவேண்டிய வுலகினை தருமத்திற்கு விரோதமாக அபக

ரிக்க முயன்றேனுயின் அறங்கெடமுயன்ற பாவிஅடையும் நரகினை அடைகின்றேனென்பான் அறங்கெடமுயன்றவன் என்றானென்க.

பிறன்கடைநிற்ற லாண்டன்மைக்கழிவுமிழிவுமாம். தகுதியுடைய ஒருவனவ்வண்ணநின்றால்பாவியாவான் யானும்இராகவன்திறத்து, தவறுதலுடையேனுகில்-பிறன்கடைநின்ற பாவியான அவனடையுங்கதிக் காளாகின்றேனென்றானென்க.

இரக்கமற்றவன் கொடும்பாவியாதலி னவனடைகின்ற நரகினை வஞ்சனையுடையனுயின் அடைகின்றேனென்பான் அருளில்லாத நெஞ்சினன் என்றான்-என்க.

குரவரைமகளிரைவாளிற்கொன்றுளோன்
புரவலனுறுபொருள்புனைவில்வாரினேன்
விரவலர்வெரிநிடைவிழிக்கமீண்டுளோன்
இரவலர்நிதியெறிந்துவெளவினேன்.

(இ-ள்.) குரவரை—ஆசாரியரையும், மகளிரை,- பெண்களையும், வாளில் கொன்றுளோன்-வாளாயுதத்தினுல்கொன்றவனும், புரவலன்உறுபொருள்-அரசனடையவேண்டிய பொருளினை, புனைவில்-வஞ்சனையினுல், வாரினேன்-வாரினவனும், விரவலர்வெரிநிடைவிழிக்க - பகைவர் முதுகினிடம்காண, மீண்டுளோன்-போரில் திரும்பிவந்தவனும், இரவலர்நிதி-இரப்பாளரின் அரியநிதியை, எறிந்து வவ்வினேன்-அவர்களை கொன்றபகரித்தவனும். எ-று. கூஅ

புரவலன் உறுபொருள் புனைவில் வாரினேன்—என்பதற்கு-காப்பாற்றுந்திறமற்றவனிடத்தில் உள்ளபொருளினை நான் காப்பாற்றித தருகின்றேனென்பதாதி தந்திரமொழிகளால் அபகரித்தவன்-எ-ம்-கூறலாம்.

அநாதைகள் முதலியவர்களின் பொருள்களும் பொது நிலமாதிகளிற்கிடைக்கும்பொருள்களும் அரசனதாகவும் பொய்யுரிமைகாட்டி அபகரிப்பவன் பாவியாய் நரகமுறுவன் ஆதலின் அவனையொப்ப யானுமாகின்றேனென்பான். புரவலனுறுபொருள் புனைவில் வாரினேன்-என்றான்.

தன்னுயிர்போகவரினும் பகைவருக்குப் புறமுதுகுகாட்டல் ஆண்டன்மைக்குஞ், சத்திரிய வீரமுறைக்கும் விரோதமாதலின் அத்தகையோன் அனைவராலும் பழிப்படைகின்றான், பாவியுமாகின்றான் புண்ணிய உலகினையும் அடையாதகல்கின்றான் அவ்வாறே யானும் ஸ்ரீராமன் விஷயத்தில் கைதவமுடையவனுகின்றேனெனபான், "விரவலர்வெரிநிடை விழிக்கமீண்டுளோன்" என்றான். விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டவனை மடவாரும் இகழாநிற்பர். ஸ்ரீராமன் விஷயத்தில் கைதவம் யான் இயற்றியுளனேல் அத்தகைய வீரங்கெட்டவனுகின்றேன் என்பான். "விரவலர் வெரிநிடைவிழிக்க மீண்டுளோன்" என்றான்.

யாசகர் என்பார் ஏழைகள், அன்னோர் வெகு கஷ்டப்பட்டு பற்பலரிடத்து நின்றுஞ் சேகரிக்கின்ற பொருளாதலின், இரவலர் நிதியை அருநிதி என்றனர்.

இரவலரின்அருநிதிக்காகஅவ்விரவலரைக்கொன்றவன்இரக்கமற்றகொடிய பாவியாய் மீளா நரகினுக்கு ஆளாவான். அத்தகைய அநீதியினை யுடைய பாவி அடையுங் கதியை ஸ்ரீராமன் விஷயத்தில் தவறி இருந்தால் யான் அடைகின்றேன் என்பான், "இரவல ரருநிதி எறிந்து வௌவினேன்" என்றான்.

இனி இரவலர் என்பதற்கு, இரத்தலை அல்லாதவர்கள் என்று பொருளாக்கி யாசிக்குந் தொழிலில்லாத கிரகஸ்தர்களுடைய அருமையான பொருள்களை அன்னோரைக் கொன்று அபகரித்தவன்போல யானு மாகின்றேனென்றானென்னினுமாம். பிரமசாரியும், சன்னியாசியும் இரப்பினை உடையவராதலின் இரவலர் என்பதற்கு கிரகஸ்தர் என்றும். அன்றியும்,

இரவலர் அருநிதி எறிந்து வவ்வினேன் என்பதற்கு,அருநிதி எறிந்து பூர்வீகர்கள் அருமையாகச்சம்பாதித்த அருமையான திரவியங்களை அநுசிதவிடயங்களிற் செலவிட்டு, இரவு அலர்-இரத்தலையும் பழிச்சொல்லையும், வவ்வினேன்-விரைந்துகொண்டவன், செல்லுங் கதியிற் செல்வேன் என்றனன் என்னினுமாம். இரவலர் என்பதற்கு-இரத்தலாகிய அலர் எனினு மிழுக்காது.

மநுமுதலிய நீதிநூலாளர் ஆசாரியன் குற்றஞ்செய்யினும் பெண்கள்குற்றஞ்செய்யினும் அவர்களைக் கொலைபுரிதல்கூடாது என்று விதித்திருக்கின்றார்கள். அம்முறைக்குமாறி நடப்பவன் பாவியாகின்றானாதலின் பரதாழ்வானும்-'கைகயர் கோமகளிழைத்த கைதவம் ஐயநீ அறிந்திலைபோலு மென்றுகேட்ட கோசலாதேவியைப் பார்த்து அதயானறியநடந்த கைதவமாயின் நீதிவழுவினவனுகின்றேனென்பான் குரவரை மகளிரை வாளிற்கொன்றுளோன் என்பனவாதிமொழிகளால் ஸ்ரீராமத்துரோகிஆதலால் யானிப்பழிக்காளாகின்றேன் என்றான் என்க.

தழைத்ததண்டுளவினோன்றலைவனல்லனென்
றழைத்தவனறநெறியந்தணாளரில்
பிழைத்தவன்பிழைப்பிலாமறையைப்பேணலா
திழைத்தவன்பொய்யெனுமிழுதைநெஞ்சினேன்.

(இ-ள்.) தழைத்ததண்துளவினோன்தலைவன் அல்லன்என்றுஅழைத்தவன்-தழைத்த குளிர்ச்சியினையுடைய துளவமாலையினனான நாராயணனை முதல்வன் அல்லன்என்று கூறினவனும், அறநெறிஅந்தணாளரில் பிழைத்தவன்-தருமமார்க்கத்தினை மறையவரிடத்தில் தவறினவனும், பிழைப்பிலா-தவறுதலற்ற, மறையைப்பேணலாது-வேதத்தினை அங்கீகரியாது, இழைத்தவன் - அவைதிகமாக எதையும் செய்பவன், பொய்எனும்இழுதை-பொய்என்கிற அறிவின்மையினையுடைய, நெஞ்சினேன்-மனம்உடையவனும். எ-று. ௧௧

வாடாமையும், குளிர்ச்சி நீங்காமையும் என்று முடையதாதலின் நாரணன் தோளணி மாலையான துளவத்தினை தழைத்த தண்டுளவு என்றார். வேத வேதாந்தங்களெல்லாம் நாரணனைத் தலைவனென்றுரையாநிற்ப அவைகட்கு மாறாய் நாரணனைத் தலைவன் அல்லன் என்பவன் வேதவிரோதியும், பாவியுமாய்

மீனாகரகத்துக்கு ஆளாமாறு யானும் ஸ்ரீராமத்துரோகஞ் செய்திருந்தால் ஆகின்றேனென்பான். "தழைத்த தண்ணளவிலேன் தலைவனல்லனென்றழைத்தவன்' என்றான்.

அன்னிய தேவர்களுக்கூப் பரத்துவங் கூறுபவர்களும், பரத்துவமுடைய தேவனே இல்லை. நாரணாதி தேவர்களும் கன்மானுபவிகளே ஆவார் என்னும் ஆருகதஜைமினியாதிகளின் கொள்கையினரும், கடவுளே இல்லை என்னும் நாஸ்திகரும் எக்கதி அடைவார்களோ அக்கதியை ஸ்ரீராமத் துரோகியானால் யானும் அடைகின்றேனென்பான், தழைத்த தண்டளவிலேன் தலைவனல்லன் என்றழைத்தவன் என்றான். ஒருவனுரைக்குஞ்சொல் மற்றொருவனுக்குப் பிடிக்காததானால் கூச்சலென்பன், நாரணனைத் தலைவனல்லன் என்றுரைத்தல் தனக்குடன்பாடன்மையைவிளக்க அழைத்தவன் என்றான். அழைத்தல்-கூச்சலிடுதல்

பிறரிடத்தில் தவறி நடக்கினும் எத்தகையோனும் மறையவரிடத்து நீதி முறைக்குத் தவறிநடத்தல்கூடாது அங்ஙனந்தவறிநடப்பவன் பாவியாமாறு சற்றும் பிழைத்தல் கூடாத ஸ்ரீராமபிரானிடம் யான் பிழைத்தேனாயின் அந்தணரிடத்தறம்பிழைத்தபாவி யாகின்றேனென்பான், அறநெறி அந்தணரில் பிழைத்தவன் என்றான்.

அறநெறி அந்தணாளரில்பிழைத்தவன் என்பதற்கு, அறநெறி-தருமவழியில் நடக்கின்ற,அந்தணாளரில்-அழகியதண்மையினையுடையவரிடத்தில்,(அழகியதண்மை-சீவகாருண்யம்) பிழைத்தவன்-தவறினவன்,என்றும்நெறிஅற-நன்மார்க்கம் முற்றிலும்கெட, அந்தணாளரில்-பிராமணரிடத்தில், பிழைத்தவன் - தவறினவன்என்றும்.

அந்தணாளரில்-குலத்தினாலும், ஒழுக்கத்தினாலுமுயர்ந்தமறையாளர்களையொப்ப, நெறி அற-தன்சாதி ஒழுக்கங்கெட, பிழைத்தவன்-பார்ப்பனவேடந் தாங்கிப்பிழைத்தவன், என்று முரைக்கலாம் (பிழைத்தல், சீவித்தல்) தனக்குரியதல்லாப் பார்ப்பன ஒழுக்கந்தாங்கிப் பிழைக்கும் கீழ்மகன் நரகிற்குரியன் அவ்வாறு எனக்குரிமையற்ற இராசமுடி சூடலில் யான் என்றிறம்விட்டு ஸ்ரீராமனைப் பிழைத்தவனாகில் பாவியாகின்றேன் என்பான். அறநெறி அந்தணாளரில் பிழைத்தவன் என்றான்.

மூதன்மையினையுடைய சுருதிப்பிரமாணத்தினை இகழ்ந்து அவைதிகமாக எதையுஞ்செய்பவன் சாஸ்திர விரோதியாய் பாவியாமாறு யானும் ஸ்ரீராமத்துரோகஞ்செய்திருந்தால் ஆகின்றேன் என்பான். பிழைப்பிலாமறையைப் பேணாதிழைத்தவன் என்றான்.

புராணேதிகாசங்களிலும் பிறநூல்களிலு முண்டாகு மையங்களையகற்றித் தனக்கோரு தாரணந்தேடாது நிற்பதொன்றாதலின் வேதத்தினைப் பிழைப்பிலா மறை என்றார்.

பிரமாணதாரதம்மியந் தெரியாதும் தோற்றத்தின்றன்மையை யுணராதும் தன்னிட்டம்போல சிற்சில வாக்கியங்களை உண்டாக்கி அவைகளை வேதவசனம்

போலகள்ளங்கூறித்திரிபவர்களும்,வேதத்தின் நித்தியத்துவமும் ஈசுரத்துவமும் முதலியவையுணராததனாலுண்டாக்கப்பட்டவசனம்போன்றெண்ணுபவனும் உண்மையுணராவிழிஞருமாறுயானும்ஸ்ரீராமன்விஷயத்தில்தவறிஇருந்தால்ஆகின்றேனென்பான். பிழைப்பிலா மறையைப்பேணலாது இழைத்தவன்என்றான்.

இனி, பிழைப்பிலா மறையையென்பதற்கு பிழைப்பு இலா-சுவர்க்கமுதலிய நல் இடங்களை அடைந்து உய்ச்சிவிசுதற்கு முடியாத, மறையை-காமாதிகளான இரகசிய கருமங்களை, பேணலாது-அடக்கிக்கொள்ளாமல், இழைத்தவன்-செய்தவன், என்னினுமாம். இவ்வாறு புரிபவனும் பாவியாதலின் அவன்கதி எனக்காகும் என்றான் என்க.

ஒருவனுள்ளில் இருக்கவேண்டுவது மெய்யாக பொய்யினைத்தாங்கிய உள்ளம் இழிவுடையதென்றும் அதுபாவஇருதயமென்றும் குறிப்பிப்பான்நெஞ்சிழுதைஎன்றார். பொய்யெனும்இழுதையினையுடையநெஞ்சினேனென்பாவியாமாறு யானும் ஸ்ரீராமன் விஷயத்தில் பிழைபுரிந்தால் ஆகின்றேன் என்பான். பொய் எனும் இழுதை நெஞ்சினேன் என்றான். பொய் பஞ்சமகாபாதகங்களில் ஒன்று

தாய்பசியுழந்துயிர்தளரத்தான்றனி
யாய்பெரும்பாழ்வயிறளிக்குர்பாவியும்
நாயகன்படநடந்தவனுநண்ணுமத்
தீயெரிநரகத்துக்கடிதுசெல்கயான்.

(இ-ள்.) தாய்பசிஉழந்து உயிர்தளர-அன்னைபசியினால் வருந்தி உயிர் தளராநிற்ப, தான்தனியாய் பெரும்பாழ்வயிறு அளிக்கும்பாவியும் - தான், தன்னுடைய ஒன்றான பெரிய பாழும்வயிற்றினைக்காக்கின்ற பாவியும், நாயகன்பட-எசமானன் அழிந்தொழிய, நடந்தவனும்-தன்னுயிரைக் காத்தோடினவனும், நண்ணும்-அடைகின்ற, அதீஎரிநரகத்து-அந்த தீயெரிகின்ற நரகத்தில், யான கடிதுசெல்க-யான் விரைந்துசெல்வேனாக. எ-று. ௪௦

கிரகஸ்தனானவன் வைசுவ தேவத்திற்குமுன்மாதாமுதலிய முதியவர்களையுண்பித்துப் பின்னர்த் தானுண்ணல் வேண்டு மென்பது விதியாகவும், அதற்கு மாறாய் பெற்றதாய் பசியொடு வருந்தி உயிர் தளரா நிற்ப அதனைப் பொருட்படுத்தாது தான் தனித்துத் தனது பசி தீர உண்பவன் பெரும்பாவியாய் நரகடைவன். யானும் ஸ்ரீராமத்துரோகஞ்செய்திருப்பேனாயின் அப்பாவி அடையுங் கதியையே அடைகின்றேனென்பான்.

தாய்பசிஉழந்து உயிர்தளரஎன்றான். அன்னைமுதலானோருக்கு முன்னூட்டாது தானுண்ணு மூண் பலனற்றதாகலில் ஆய்பெரும்பாழ்வயிறளிக்கும்பாவி என்று இகழ்ந்து காட்டினார்.

எசமானனைக் காத்தல் புரியாது தன்னுயிரினைக் காப்பது காரியமாக எசமானை அபாயத்தில்விட்டுச்சென்றவன் பாவியாய் நரகடையுமாறு யானும் ஸ்ரீராமனுக்கு வஞ்சனை நினைத்திருப்பேனாயின் அப்பாவியின் கதியை அடைகின்றே

னென்பான். நாயகன் படநடந்தவனும் நண்ணும் அத்தியெரி நரகத்துக்கடிது செல்க யான் என்ருன். அன்னையை ஆதரியாதபாவியும் எசமானத் துரோகியும் கொடும்பாவிகளென்பது ஆசிரியர் கருத்து.

தாளினிலடைந்தவர் தம்மைத்தர்க்கொரு
கோளுறவஞ்சினன்கொடுத்தபேதையும்
நாளினுமறமறந்தவனுநண்ணுறும்
மீளருநரகிடைக்கடிதுவீழ்கயான்.

(இ-ள்.) தாளினில் அடைந்தவர்தம்மை-தங்காலிலடைக்கலமாகவடைந்தவர்களை, தற்குஒருகோள்உற-தனக்கொருகெடுதிவர, அஞ்சினன்கொடுத்தபேதையும்-பயந்துகொடுத்த பேதையும், நாளினும்-எவ்வொருதினத்திலும், அறம்மறந்தவனும்-தருமத்தினைமறந்தவனும், நண்ணுறும்-அடைகின்ற, மீள்அருநரகிடை-மீளுதற்கரியநரகத்தில், கடிதுவீழ்கயான்-விரைந்து யான் வீழ்வேனாக. எ-று.

அடைக்கலம் புகுந்தவனைக் காக்கவேண்டுமானாலும் அவனை ஆதரிக்க வேண்டுவது அபயாஸ்த்த மளித்தவன் கடமை, அங்ஙனமாக; அடைக்கலம் புகுந்தவனிமித்தம் தனக்கொரு கெடுதி உண்டாகும்போலத் தோற்றினால் அடைக்கலமானவனை எதிரியினிடத்துக் கொடுத்தவன் பேதையும், பாவியும் ஆகி நரகெய்துவன் அவ்வாறே யானும் ஸ்ரீராமபிரானுக்குத் துரோகஞ் செய்தா லாகின்றேனென்பான். "தாளினிலடைந்தவர்தங்கொரு கோளுறவஞ்சினன் கொடுத்த பேதையும்' என்ருன்.

தினமும் அறவழி நிற்க இயலாதான் நன்னாட்களிலேனும் அறவழி நிற்றல் வேண்டும் அங்ஙனஞ்செய்யாதவன் பாவியேயாவான். ஒரு கிரகஸ்தன் தினமும் பிதிர்க்கடன் செலுத்துதல் வேண்டும். அது மாட்டாமை அமாவாசைமுதலிய தினங்களிலேனும் பிதிர்க்கடன் செலுத்தல் வேண்டும். அதுவும் இயலாதேல் பிதிர்க்களின் திதிகளிலேனும் அவர்களைப் பூசித்தல் வேண்டும். அதுவும் முடியாதேல் மஹாளயம் என்னும் புரட்டாசி அமாவாசியிலேனும் பிதிர்பூசைசெய்தல்வேண்டும். அத்தகைய நன்னாளினும் பிதிர்பூசைசெய்யாதவன் பாவியேயாவான். இதுபோலவே மற்றையதேவபூசையினும் ஆம். ஆதலின் நன்னாளிலாயினும் தனது, கிரகஸ்ததருமங்களை இயற்றல்வேண்டும். அங்ஙனம் இயற்றிலாதபாவி அடையுங்கதியை ஸ்ரீராமத்துரோகிபாடல் யானடைகின்றேன் என்பான், நாளினுமறமறந்தவனும் நண்ணுறும்மீளருநரகிடை கடிது வீழ்க யான் என்ருன். என்றுமுரைக்கலாம், இங்ஙனமுரைக்குங்கால், நாளினும்-புண்ணிய தினங்களினும் அறம்-குலதருமஆசிரமதருமங்களை, மறந்தவனும்-செய்ய மறந்தவனும், என்று கூறிக்கொள்க.

பொய்க்கரிகூறினேன்போருக்கஞ்சினேன்
கைக்கொளுமடைக்கலங்கரந்துவவ்வினேன்
எய்த்திடத்திடர்செய்தோனென்றின்னோர்புகும்
மெய்க்கொடுநரகிடைவிரைவின்வீழ்கயான்.

(இ-ள்) பொய்க்கரிகூறினேன்—பொய்சாக்ஷிசொன்னவனும், போருக்கு அஞ்சினேன்-சண்டைக்குப் பயந்தவனும், கைகொளும் அடைக்கலம்-அங்கீகரித்திருந்த அடைக்கலப்பொருளினை, கரந்துவவ்வினேன் - மறைந்தபகரித்தவனும், எய்த்திடத்து இடர்செய்தோன் - இளைத்தஇடத்தில் இடர்செய்தவனும், என்று இன்னோர்புகும்-என்றுகூறிய இவர்களடைகின்ற, மெய்கொடுநரகிடை - உண்மையான கொடியநரகத்தில், யான்விரைவின்வீழ்க-யான்சீக்கிரம் வீழ்வேனாக.

உண்மையையுரைப்பதை ஒழித்துப்பொய்யுரைத்தவனும் அஞ்சாதுநின்று பொராமல் யுத்தத்தில் அச்சமடைந்தவனும் அடைக்கலப்பொருளை அளித்தலை ஒழித்தவனும் இளைத்தார்க்கிடர்செய்தவனும் ஆகியஇவர்கள் பாவிகளாதலின் இவர்கள் அடையுநரகினை ஸ்ரீராமத்துரோகியானால் யானும் சீக்கிரம்அடைகின்றேனென்பான், பொய்க்கரிகூறினேன் போருகாஞ்சினேன் கைக்கொளுமடைக்கலங் கரந்துவவ்வினேன். எய்த்திடத்திடர் செய்தோனென் றின்னோர்புகும் மெய்கொடுநரகிடை விரைவினில்வீழ்க என்றான்.

பொய்க்கரியுரைத்தலும் போருக்கஞ்சலும் கைக்கொளு மடைக்கலங்கரந்துவவ்வலுமெய்த்திடத்திடர் புரிந்திடுதலு ம க்ஷத்திரியதருமவிரோதமென்பது முக்கியகருத்தாம இவைவீரமரபோர் செயலாதலில்லென்க.

அந்தணருறையுளையனலியூட்டினேன்.
மைந்தரைக்கொன் றுளோன்வழக்கிற்பொய்த்துளோன்
நிந்தனைதேவரைநிகழ்த்தினேன்புகும்
வெந்துயர்நரகத்துவீழ்கயானுமே.

(இ-ள்.) அந்தணர் உறையுளை—பிராமணர்களின்வீடுகளை, அனலிஊட்டினேன்-நெருப்பூட்டினவனும், மைந்தரைகொன்றுளோன் - சிசுவதைசெய்தவனும், வழக்கில் பொய்த்துளோன்-வழக்கினில் பொய்கூறினவனும், தேவரை நிந்தனைநிகழ்த்தினேன் - தேவர்களை இகழ்ந்தவனும், புகும்வெந்துயர்நரகத்து அடைகின்ற கொடியதுன்பத்தினையுடைய நரகத்தில், யானும்வீழ்க-யானும்வீழ்வேனாக. ௧0௩

அந்தணருறையுளை யனலியூட்டினேன் பிரமத்தோஷியும், மைந்தரைகொன்றுளோன் - சிசுவத்திசெய்த மகாபாதகனும், வழக்கிற்பொய்த்தவன் அநீதனும், நிந்தனைதேவரைநிகழ்த்தினேன்-தேவதூஷகனும் ஆதலின் அப்பாவிகளடையுநரகினை ஸ்ரீராமதுரோகியானால் யானும்அடைகின்றேனென்பான். புகும்வெந்துயர் நரகத்துவீழ்கயானுமேஎனைறான்.

கன்றுயிரோய்ந்துகக்கறந்துபாலுண்டோன்
மன்றிடைப்பிறர்பொருண்மறைத்துவவ்வினேன்
நன்றியைமறந்திடுநயமிலாவினேன்
என்றிவருறுநரகென்னதாகவே.

(இ-ள்.) கன்றுஉயிர்—கன்றின் உயிரானது, ஓய்ந்துக-ஒடுங்கிக்கெட; பால் கறந்துஉண்டோன்-பால்கறந்து உண்டவனும், மன்றிடை-அரசசபையில், பிற

பொருள்-அயலார்பொருளை, மறைத்தவவ்வினைஞன்-மறைத்துஅபகரித்தவனும் நன்றியைமறந்திடும்-செய்ந்நன்றியை மறக்கின்ற, நயம்இல்லாவினைஞன்-நயமற்றநாவினையுடையவனும், என்றுஇவர் - என்றுங்கூறும் இவர்கள், உறுநரகு-அடைகின்ற நரகமானது, என்னதாக-என்னுடையதாகுக. எ-று. ௧௦௪

கன்றுயிரோய்ந்துகக்கறந்து பாலுண்டவன் சீவகாருணியமற்ற கோகாதகனும், மன்றிடைப்பிறர்பொருள்மறைத்த வவ்வினைஞன் இராசத்துரோகியும், நன்றியைமறந்திடு நயமினாவினைஞன். நன்றிகெட்டவனும், ஆதலின் இக்கொடியர்அடையு நரகினை ஸ்ரீராமத்துரோகியானால் யானுமடைகின்றேன் என்றான் என்க.

ஆறுதன்னுடன்வருமஞ்சொன்மாதரை
ஊறுகொண்டலைக்கத்தன்னுயிர்கொண்டேகினோன்
சோறுதன்னயலுளோர்பசிக்கத்துய்த்துளோன்
ஏறுமக்கதியிடையானுமேறவே.

(இ-ள்.) ஆறுதன்னுடன்வரும்—வழியில் தன்னுடன்வருகின்ற, அம்சொல் மாதரை-அழகிய சொல்லினையுடைய பெண்களை, ஊறுகொண்டு அலைக்க-பிறர் தொட்டுவருத்த, தன்உயிர்-தனதுயிரை, கொண்டேகினோன் - காப்பாற்றிக்கொண்டு சென்றவனும், சோறு-சோற்றினை, தனஅயல்உளோர்-தனதருகிலிருப்பவர்கள், பசிக்கத்துய்த்துளோன்-பசிக்க உண்டவனும், ஏறும அக்கதியிடை-அடைகின்ற அக்கதியினிடத்தில், யானும்ஏற-யானும் அடைவனாக. எ-று ௧௦௫

ஆறுதன்னுடன் வருமஞ்சொன்மாதரை ஊறுகொண்டலைக்கத் தன்னுயிர் கொண்டேகினவன்-ஆண்டன்மையற்ற கோழையனும், சோறுதன்அயலுளோர் பசிக்கத்துய்த்துளோன், விருந்தினையுபசரியாதவனும் ஆதலின் இக்கொடியாரடையுங்கதியினை ஸ்ரீராமத்துரோகியானால் யானுமடைகின்றேனென்றான்.

பெண்கள் வன்மையற்றவங்கத்தினரும் ஆண்கள் வன்மையுற்ற வங்கத்தினருமாதலின் பெண்களைஆண்கள் காப்பாற்றுதல் வேண்டுமென்பது நீதிநெற்றணிபு ஆபத்தினின்றும் பெண்களை நிவிர்த்திக்கமுயலாதவன் பாவியாதலின் பரதாழ்வானும் அங்ஙனங்கூறினனென்க.

எஃகெறிசெருமுகத்தேற்றதெவ்வருக்
கொஃகினனுயிர்வளர்த்துண்ணுமாசையான்
அஃகலிலறநெறியாக்கியோன்பொருள்
வெஃகியமன்னன்வீழ்நரகின்வீழ்கயான்.

(இ-ள்.) எஃகெறிசெருமுகத்து-எஃகினைஎறியப்படுகின்றசண்டைமுகத்து ஏற்றதெவ்வருக்கு-எதிர்த்த பகைவருக்கு, ஒஃகினன்-அஞ்சினவனாகி, உயிர்வளர்த்து-உயிரைவளர்த்து, உண்ணும்ஆசையான்-உண்ணுகின்றஆசையினையுடையவனும், அஃகல்இல்-சுருங்காத, அறநெறி-தருமத்தினை, ஆக்கியோன்-வளர்த்தவனுடைய, பொருள்-செல்வத்தினை, வெஃகியமன்னன் - விரும்பியஅரசனும், வீழ்நரகின்-வீழுகின்றநரகத்தில் வீழ்கயான் யான் வீழ்வேனாக. எ-று. ௧௦௬

போருக்கஞ்சி உயிரைக்காத்தோம் பல்வீரத்திற்கு விரோதமாய் வீரசுவர்க்கத்தினை ஒழிப்பதாய் க்ஷத்திரியருக்கிழிந்த விஷயமாதலின் ஸ்ரீராமத்துரோகஞ்செய்திருந்தால் யான் போருக்கஞ்சியுயிரோம்பிய பாவியடையுங்கதியை அடைகின்றேனென்பான் எஃகெறி செருமுகத்தேற்ற தெவ்வருக்கொஃகினனுயிர்வளர்த்துண்ணுமாசையான் என்றான்.

அரசனானவன் அநீதமாக நடப்பவர்களின் பொருளிற்போல நீதியாயும் தருமஞ்செய்பவனாயு முள்ளவன்பொருளை அபகரித்தல்கூடாது அங்ஙனஞ்செய்தானேல் அவ்வரசன்பாவியாவான் ஸ்ரீராமத்துரோகம் செய்திருந்தால் யானும் அவ்வாறுஅவனடையுங் கொடியநரகினை யடைவேனென்பான் "அஃகவிலறநெறியாக்கியோன்பொருள் வெஃகியமன்னன் வீழ்நரகில் வீழ்கயான் என்றான்.

...மம்என்று மழிபாசிதிய பொருளாதலைவிளக்குவான் அஃகவிலறநெறியென்றனர்.

அழிவருமாசியலெய்தியாகுமென்
றிழிவருசிறுதொழிலியற்றியாண்டதின்
வழிவருதருமத்தைமறந்துமாற்றெரு
பழிவருநெறிபடர்பதகனாகயான்.

(இ-ள்.) அழிவரும்—அழிவற்ற, ஆசியல்எய்தி-இராசாங்கத்தினை அடைந்து, ஆகுமென்று-எதுவுமாகுமென, இழிவருசிறுதொழில்இயற்றி - இழிவினையுண்டாக்குகின்ற சிறியதொழில்களைச்செய்து, ஆண்டதின்வழிவரு தருமத்தைமறந்து-அவ்விடத்திலவ்வரசுநெறியாலுண்டாகுந் தருமத்தினைமறந்து, மாற்றெரு-வேறான, பழிபடர்-பழிபடர்ந்த, நெறிபடர்-மார்க்கத்திற் செல்லுகின்ற, பதகன்ஆகயான்-இழிஞனாக யானுமாவேனாக. எ-று. ௧௦௭

தனக்கு அரசிருத்தலால் எதுவுஞ்செய்யலாமெனத்துணிந்து பாவத்தொழில்களைச்செய்தரசன் அநீதனாய்ப்பாவியாய் நரகெய்துவான் அவ்வாறு ஸ்ரீராமத்துரோகியானால் யானுமாகின்றேனென்பான். பழிவருநெறி படர் பதகன் ஆகயான் என்றான்.

தஞ்சமென்றொதுங்கினர் தனதுபாருளோர்
எஞ்சலின்மறுக்கினோடிரியல்போயுற
வஞ்சிசென்றிறுத்தவன்வாகைமீக்கொள
அஞ்சினமன்னவனாகயானுமே.

(இ-ள்.) தஞ்சமென்றொதுங்கினோர் தனதுபாருளோர்-அடைக்கலமெனஒதுங்கினவர்களின்பூமியிலுள்ளவர்கள், எஞ்சலில்மறுக்கினொடு இரியல்போயுற-குறைபாத அச்சத்துடனே விலகிச்செல்லாநிற்க, வஞ்சிசென்றிறுத்தவன்-வஞ்சிமாலைசூடிவந்தோன், வாகைமீக்கொள-வாகைமாலையையேமேலேசூடும்படி, அஞ்சினமன்னவன்ஆக யானும்-பயந்தஅரசனை யானும ஒப்பாக ஆவேனாக. எ-று.

* வஞ்சி-பகைவர்மேற் செல்வோரணிமாலை, வாகை-வென்றோரணிமாலை.

கன்னியையழிசெயக்கருதினேன்குரு
பன்னியைநோக்கினேன்பருகினேனறா
பொன்னிகழ்களவினிற்பொருந்தினேனெனா
இன்னவருறுகதியென்னதாகவே.

(இ-ள்.) கன்னியை அழிசெயக்கருதினேன்—கன்னிகையை கற்பழிக்க நினைத்தவனும், குருபன்னியைநோக்கினேன்-ஆசாரியன்மனைவியை விரும்பிப் பார்த்தவனும், நறைபருகினேன்-கள்குடித்தவனும், பொன்இகழ்களவினில்பொருந்தினேன் - பொன்னினை இகழ்ச்சிபொருந்திய களவினாலடைபவனும், என இன்னவர்-என்றுகூறிய இவர்கள், உறுகதியென்னதாக-அடையுங்கதியெனதாகுக.

யான் ஸ்ரீராமனுக்குத் துரோகஞ்செய்ய நினைத்திருந்தேனானால் கன்னிப் பெண்ணை கற்பழிக்க நினைத்தபாவியும், ஆசாரியன்மனைவியை இச்சித்தபாவியும் யாகத்திலன்றி மதுவருந்தியபாவியும் பொன்திருடியபாவியும் அடையுங்கதியினை அடைகின்றேனென்று கூறினனென்பது கருத்து.

ஊணலையுண்வழிநாயினுண்டவன்
ஆணலன்பெண்ணலனார்கொனாவெனா
நாணலனரகமுண்டென்றநல்லுரை
பேணலன்பிறர்பழிபிதற்றியாகயான்.

(இ-ள்.) ஊண்கலவுண்வழி—நல்லுணவருந்தும்பொழுது, நாயின்உண்டவன்-நாய்போல பிறர்க்களியாதுண்டவனும், ஆணலன்பெண்அலன் - ஆணும் பெண்ணுமல்லாதவனும், ஆர்கொல் ஆர்கொனாவெனாநாணலன் - எவர்கொலுரியவரோ என்று நாணாதவனும், நரகம்உண்டென்றநல்உரை-நரகம்உண்டென்கின்ற நல்ல வசனத்தினை, பேணலன்-அங்கீகரியாதவனும், பிறர்பழிபிதற்றி- அயலார்பழிகளையுரைப்பவனும், ஆகயான்-யான் ஆவேனாக. எ-று. ௧௪0

ஸ்ரீராமத்துரோகம் யான்செய்திருப்பேனாயின் பிறர்க்களியாதருந்தியபாவியும் ஆணும்பெண்ணுங்கெட்டபாவியும் சுவர்க்கநரகங்களும் புண்ணியபாவங்களுமுண்டென்று நாத்திகபுத்திபெற்றபாவியும் பிறர் குற்றங்கூறித் திரிபாவியும் அடையுங்கதிகளை அடைகின்றேனென்றனனென்பது கருத்து.

மறுவிறுதொல்குலங்களைமாசிட்டேற்றினேன்
சிறுவிலையெளியவருணவுசிந்தினேன்
நறியனவயலவர்நாவினீர்வர
உறுபதநுங்கியவொருவனாகயான்.

(இ-ள்.) மறுவுஇல்—களங்கமில்லாத, தொல்குலங்களை - பழைய குலங்களை, மாசுஇட்டேற்றினேன் - குற்றத்திற்குள்ளாக்கினவனும், சிறுவிலை-சொற்பமான கூலியினையுடைய, எளியவர்உணவு - ஏழைகளின் போசனங்களை, சிந்தினேன்-அழித்தவனும், அயலவர்நாவில் - அன்னியர்களுடைய நாவினின்,

நறியனநீர்வர-நல்லநீர்வர, உறுபதம் - உணவினை, நுங்கியஒருவன்யான்ஆக- உண்டஒருவனும் யான் ஆகுக. எ-று. ௧௧௧

யான் ஸ்ரீராமத்துரோகஞ்செய்திருப்பேனாயின் இல்லாதகுற்றங்களை நற்குலங்கண்மீதேற்றியபாவியும் கூலிவேலைசெய்து உடலைவளர்க்கு மேழைகளினுணுக்களைக்கெடுத்தபாவியும் அயலார்நாவினீரூற அவர்களெதிரே இனியதின்பண்டங்களைத்தின்றபாவியும் அடையுங்கதியினை அடைகின்றேனென்றான் என்பதுகருத்து.

வில்லினும்வாளினும்விரிந்தவாண்டொழில்
புல்லிடையுகுத்தனென்பொய்மையாக்கையைச்
சில்பகலோம்புவான்செறுநர்சீறிய
இல்லிடையிடுபதமேற்க வென்கையால்.

(இ-ள்.) வில்லினும் வாளினும்விரிந்த ஆண்தொழில்—விற்படையினும் வாட்படையினும் அதிகமாகப்பொருந்திய தனது ஆண்டன்மையை, புல்லிடை உகுத்தனன்-அற்பத்தில்விடுத்து,பொய்மையாக்கையை-பொய்யாகிய உடலினை, சில்பகல் ஓம்புவான்-சிலகாலம் காப்பாற்றுவான், சீறியசெறுநர்இல்லிடை- தன்னைப்பகைத்த பகைவர்வீட்டினில், இடுபதம் ஏற்கஎன்கையால்-இடுகின்றசோற்றினைஎன்கையினால் ஏற்பேனாக-எ-று. ௧௧௨

யான் ஸ்ரீராமத்துரோகியானால் வில்வன்மை வாள்வன்மையாதிகளைபுல்லிலுகுத்துப் பொய்யான இவ்வுடலினைச் சிறிதுகாலத்திற்குக்காப்பான். தம்பகைவரில்லிலேயே இரந்துண்ணுந் தன்மையை யானடைகின்றேனென்றுகூறினான் என்பதுகருத்து.

ஏற்றவற்கொருபொருளுள்ளதின்றென்று
மாற்றலனுதலவன்வரம்பில்பல்பகல்
ஆற்றினனுழற்றுமோராதனெய்துமக்
கூற்றுறுநரகினோர்கூறுகொள்கயான்.

(இ-ள்.) ஒருபொருள் ஏற்றவற்கு—தன்னிடமுள்ள ஒருபொருளினை யாசித்தவனுக்கு, உள்ளது இன்றுஎன்றுமாற்றலன்-உண்டுஇல்லையென்ன ஒரேதரமாயொழிக்காமல், உதவலன்-கொடுக்காதவனாய், வரம்பில்பல்பகல் - வரம்பற்ற அநேகதினங்கள், ஆற்றினன்சுழற்றும்-பொறுத்துப்பொறுத்து உழற்றுகின்ற, ஓர் ஆதனெய்தும் - ஒருஅறிவிலிஅடைகின்ற, அக்கூற்றுறுநரகின் ஓர்கூறுயான் கொள்க-அந்த யமனுடைய இருப்பிடத்திலுள்ள நரகத்தின் ஒரு பகுதியை யானடைவேனாக. எ-று. ௧௧௩

இரந்தார்க் கொருபொருளுளதிலதென்று அளித்தும் அகற்றியும் விடாமல் பற்பலநாளிழுத்தடித்தபாவி அடையுங்கதியினை யானடைகின்றேனென்றுகூறினான் என்பதுகருத்து.

பிணிக்குறுமுடையுடல்பேணிப்பேணிலார்த்
துணிக்குறுவயிரவாடடக்கைதூக்கிப்போய்
மணிக்குறுநகையிளமங்கைமார்கண்முன்
தணிக்குறுபகைஞரைத்தாழ்கவென்றலை.

(இ-ள்.) பிணிக்குறு—கட்டப்பட்ட, முடைஉடல்பேணி - முடைநாற்றத்தினையுடைய உடலினைவிரும்பி, பேணிலார்-பகைவர்களை, துணிக்குறுவயிரவாள்-வெட்டுகின்ற வயிரவாட் படையை, தடம்கைதூக்கிப்போய் - அகன்றகையிலெடுத்துச்சென்று, குறுமணிநகை இளமங்கைமார்முன்-சிறியமணிகள்போலு நகையினையுடைய இளம்பெண்களின் எதிரே, பகைஞரை என்தலைதாழ்க-சத்துருக்களை என்தலை வணங்குக. எ-று. ௧௧௪

யான் ஸ்ரீராமத்துரோகஞ் செய்திருப்பேனாகில் க்ஷத்திரியர்க்குரிய வீரத்தினைவிடுத்து வாட்படையைத் தலைகீழாகப்பிடித்து பெண்கள்சிரிக்கப் பகைவரை என்தலை வணங்கட்டுமென்றுகூறினான் என்பதுகருத்து.

கரும்பலர்செந்நெலங்கழனிக்கானநா
டருப்பகைகவர்ந்துணவாவிபேணினென்
இரும்பலர்நெடுந்தளைபிணித்தகாலொடும்
விரும்பலர்முகத்தெதிர் விழித்துநிற்கயான்.

(இ-ள்.) கரும்பலர்செந்நெல்அம்கழனி—கரும்புகள் அலர்ந்தஅழகிய செந்நெற்கழனிகளையுடைய, கானநாடு-சோலைசூழ்ந்தநாட்டினை, அருப்பகைகவர்ந்து உண-அரிய பகைவர் அபகரித்து அநுபவிக்க, ஆவிபேணினென்-உயிர்சுமந்து, இரும்பு அலர் நெடும்தளை பிணித்தகாலொடும் - இரும்பாலாகிய நெடியவிலங்கினை இழுக்கப்பட்டகாலுடன், விரும்பலர்முகத்துஎதிர்-பகைவர்முகத்தெதிரே, யான் விழித்துநிற்க-யான் விழித்துநிற்பேனாக. எ-று. ௧௧௫

யான் ஸ்ரீராமத்துரோகியானால் எனதுநாட்டினைப் பகைவர் கைக்கொண்டு என்னை கால்விலங்கிட்டுப் பகைவர்சிறைப்படுத்த யான் கால்விலங்குடன் பகைவர்முகத்தின் விழிக்கின்றவனாவேனாக.

வேறு.

தீயனகொடியவள்செய்தசெய்கையை
நாயினேனுணரினன்னெறியினீங்கலாத்
தூயவர்க்கிடரிழைத்துழலுந்தோமுடை
ஆயவர்வீழ்கதியதனின்வீழ்கயான்,

(இ-ள்.) தீயினும்-நெருப்பினும், கொடியவள்-பொல்லாதவளானகைகேயி, செய்த செய்கையை-செய்துள்ள கெட்டசெயல்களை, நாயினேன் - அடியேன்,

உணரின்-அறிந்திருந்தால், நல்நெறியில்-நல்மார்க்கத்தில்நின்றும் நீங்காத, தூயவர்க்கு-பரிசுத்தமானவர்களுக்கு, இடர்இழைத்து-துன்பஞ்செய்து, உழலும்-திரிகின்ற, தோம்உடை-குற்றத்தினையுடைய, ஆயவர்-அவர்கள், வீழ்கதியதனில்-விழுகின்றநரககதியில், வீழ்கயான்-யான்வீழ்வேனாக-எ-று. ௧௧௬

தூயவாசகஞ்சொன்னதோன்றலைத்
தீயகானகந்திருவினீங்கிமுன்
போயினான்வரக்கண்டபொம்மலாள்
ஆயகாதலாளழுதுபுல்லினாள்.

(இ-ள்.) தூயவாசகம்சொன்ன—பரிசுத்தமானவசனங்களையுரைத்த, தோன்றலை-பரதாழ்வானை, தீயகானகம்-கொடியகாட்டினை, திருவின்நீங்கி - இராச்சிய சம்பத்தினைவிடுத்து, போயினான்-சென்ற ஸ்ரீராமனை, வரக்கண்டபொம்மலாள் ஆய-திரும்பிவரக்கண்ட சந்தோஷத்தினளாகிய, காதலாள்-ஆசையுடையகோசலாதேவி, அழுதுபுல்லினாள்-அழுதுகொண்டே அவனைக் கட்டித்தழுவினாள்.

செம்மைநன்மனத்தண்ணல்செய்கையும்
அம்மைதீமையுமறிதறேற்றினாள்
கொம்மைவெம்முலைகுழறுபாலொழுக
விம்மல்விம்மநின்றழுதுவீங்கினாள்.

(இ-ள்.) செம்மைநன்மனத்து—செவ்விய நல்ல மனத்தினையுடைய, அண்ணல்செய்கையும்-பரதாழ்வானுடைய செய்கையும், அம்மைதீமையும்-அவன் தாயானகைகேயியின்கொடுமையையும், அறிதல்தேற்றினாள்-அறிந்துகொண்டவள், கொம்மைவெம்முலை குழறுபால்உக-பருத்த வெம்மையான தனங்களில் குழறுதலுடன் பாலொழுக, விம்மல்விம்ம - விம்முதலதிகரிக்க, நின்றழுதுவீங்கினாள்-அவனெதிரேநின்று அழுதுவீங்கினாள். எ-று. ௧௧௮

முன்னைநங்குலமுதலுளோர்கடாம்
பின்னையாவரோநிகர்க்குநீர்மையார்
மன்னர்மன்னவாவென்றுவாழ்த்தினாள்
உன்னவுன்னநைந்துருகிவிம்முவாள்.

(இ-ள்.) உன்னஉன்ன—பரதாழ்வான் செயல்களை நினைக்கநினைக்க, உருகிவிம்முவாள்-உருகிவிம்முகின்ற கோசலாதேவி, மன்னர்மன்னவா-அரசர்க்கரசனான பரதனே, முன்னைநங்குலமுதலுளோர்தாம்-முதலிலிருந்த உனது குலமுதல்வர்களில், நின்னையாவர் நிகர்க்கும் நீர்மையார்-உன்னை எவர் ஒப்பாகுந்தன்மையினையுடையார், என்று வாழ்த்தினாள்-என்றுகூறி ஆசிர்வதித்தனள். எ-று

உன்னவுன்னநைந்துருகுமன்புகூர்
அன்னைதாளில்வீழ்ந்திளையவண்ணலும்

சொன்னநீர்மையாற்றொழுதுமாழ்கினான்
இன்னவேலைவாய்முனிவனெய்தினான்.

(இ-ள்.) உன்னஉன்ன—நினைக்கநினைக்க, நைந்துருகு-நைந்துருகுகின்ற, அன்புகூர் அன்னைதாளில்-அன்புபொருந்திய தாயின்பாதங்களில், இளையஅண்ணலும் விழுந்து-இளவரசனான பரதாழ்வானும் விழுந்து, சொன்னநீர்மையால்-முன்சொன்னமுறைப்படி, தொழுதுமாழ்கினான்-வணங்கிவருந்தினான், இன்னவேலைவாய்-இவ்வாறான்சமயத்தில், முனிவனெய்தினான்-வசிட்டமுனிவன்வந்தான்.

வந்தமாதவன்றாளில்வள்ளல்வீழ்ந்
தெந்தையாண்டையானியம்புவீரெனா
நொந்துமாழ்கினானுவல்லதோர்கிலா
வந்தமாதவனழுதுபுல்லினான்.

(இ-ள்.) வந்த மாதவன்றாளில்—வந்த வசிட்டமுனிவனுடைய பாதங்களில், வள்ளல்வீழ்ந்து-பரதாழ்வான் விழுந்து, எந்தையாண்டையான்-என்றந்தை எவ்விடத்திலிருக்கின்றான், இயம்புவீரென-உரைப்பீராகவென்று, நொந்துமாழ்கினான்-வருந்திஅழுதான், நுவல்வது-அவனுக்குரைக்கும் பதிலினை, ஓர்கிலா அந்த மாதவன்-உணராத அந்த வசிட்டமுனிவன், அழுதுபுல்லினான்-விசனத்துடன் அவனைக்கட்டி அணைத்தான். எ-று. கஉக

மறுவின்மைந்தனே வள்ளலுந்தையார்
இறுதியெய்தினாரேழிரண்டின
சிறுவர்செய்கடன்செய்துதீர்த்தியென்
றுறுவன்மேயினானுரையின்மேயினான்.

(இ-ள்.) மறுஇல்மைந்தனே—குற்றமற்றபரதனே, வள்ளல்உந்தையார்-வள்ளலான உனதுதந்தை, இறுதியெய்தி-இறுதிஅடைந்து, நாள்ஏழிரண்டின-இன்று பதினான்குநாளாயின, சிறுவர்செய்கடன் - புத்திரர்கள்செய்யவேண்டிய அந்தியகடனை, செய்துதீர்த்திஎன்று-செய்துதீர்ப்பாயென, உரையின்மேயினான்-உரையாடியிருந்தபரதாழ்வான், உறுவல்மேயினான்-துன்பமடைந்தனன். கஉஉ

அன்னையேவினாளடியிறைஞ்சினான்
பொன்னின்வார்சடைப்புனிதனோடுப்போய்த்
தன்னைநல்கியத்தருமநல்கினான்
பன்னுதொல்லறைப்படிவநோக்கினான்.

(இ-ள்.) அன்னை ஏவினாள்—கோசலாதேவிசெல்கவென அனுப்பினாள், அடி இறைஞ்சினான்-அவள் கால்களைவணங்கி, பொன்னின்வார்சடை புனிதனொடும் போய்-பொன்போலு நிறங்கொண்டு நீண்ட சடையினையுடைய வசிட்டனுடனேசென்று, தன்னைநல்கி-தன்னைப் பெற்றவனும், அத்தருமம் நல்கினான் - அ

தப்பழயதருமத்தினை உண்டாக்கினவனுமாகிய சக்கரவர்த்தியின், பன்னு-எண்ணைத்தோணியிலிடப்பட்ட, தொல்-பழைமையான, அறப்படிவம்-தருமரூபமான உருவத்தினை, நோக்கினுன்-பார்த்தான். எ-று. கஉங

மண்ணின்மேல்விழுந்தலறிமாழ்குவான்
அண்ணலாழியானவனிகாவலான்
எண்ணெயுண்டபொன்னெழில்கொண்மேனியைக்
கண்ணநீரினுற்கழுவியாட்டினுன்.

(இ-ள்.) மண்ணின்மேல்விழுந்து—பூமியின்மீதுவிழுந்து, அலறிமாழ்குவான்-அலறி அழுபவனுன பரதாழ்வான், அண்ணல்ஆழியான் - தெய்வீகமான சக்கரத்தினையுடையவனும், அவனிகாவலான்-உலகபாலகனும் ஆகிய சக்கரவர்த்தியின், எண்ணெய்உண்ட-எண்ணெய்தோய்ந்த, பொன்எழில்கொள்மேனியை-பொன்சாயலினையுடைய உருவத்தினை, கண்ணநீரினுல்கழுவிஆட்டினுன்-நயனநீரினுல் கழுவி அபிஷேகித்தனன். எ-று. கஉச

பற்றிஅவ்வயின்பரிவின்வாங்கினுர்
சுற்றுநான்மறைத்துறைசெய்கேள்வியார்
கொற்றமண்கணை குமுறமன்னனை
மற்றோர்பொன்னின்மாமானமேற்றினுர்.

(இ-ள்.) மன்னனை—சக்கரவர்த்தியை, அவ்வயின்பற்றி பரிவின்வாங்கினுர்-அவ்விடத்தினின்றும் விசனத்துடனெடுத்து, நான்மறைதுறைசெய் கேள்வியார்சுற்ற-சதுர்வேதவழியாக எல்லா சடங்கினையும் இயற்றும் அந்தணர் சூழ்ந்துவராநிற்ப, கொற்றமண்கணைகுமுற-வெற்றியினைக்குறிக்கின்ற மண்கணையென்னும்பழவமானது குமுறுநிற்ப, மற்றோர்-வேறேஒரு, பொன்னின்மாமானம்-பொன்னுலாகிய சிறந்தவிமானத்தில், ஏற்றினுர்-ஏற்றினுர்கள். எ-று. கஉரு

கரைசெய்வேலைபோலகரிகையெடுத்
துரைசெய்பூசலிட்டுயிர்துளங்குற
அரைசவேலைசூழ்ந்தழுதுகைதொழப்
புரைசயானையிற்கொண்டுபோயினுர்,

(இ-ள்.) கரைசெய்வேலைபோல்-ஒலியாநின்றகடலைப்போல, நகரிகைஎடுத்துஉரைசெய்-அவ்வூரானது எடுத்துக்கூறுதலாகிய, பூசலிட்டு-ஆரவாரத்தினையுண்டாக்கி, உயிர்துளங்குற-உயிர்கலங்காநிற்ப, அரைசவேலைசூழ்ந்து-அரசர்களின்கூட்டமானது கடல்போற்சூழ்ந்து, அழுதுகைதொழ-அழுதுகைதொழாநிற்ப, புரைசைஆனையில் - கழுத்துக்கயிற்றினையுடைய யானையின்மீதுஏற்றி, கொண்டுபோயினுர்-கொண்டுசென்ருர்கள். எ-று. கஉசு

உந்துபொற்றடந்தேர்வலானெடும்
மந்திரப்பெருந்தலைவர்மற்றுளோர்

தந்திரத்தனித்தலைவர்நண்பினோர்
வந்துசுற்றமுற்றழுதுமாழ்கினார்.

(இ-ள்.) உந்தும்பொன்தடம்தேர்வலானொடும் - ஓட்டப்படுகின்றபொன்மய மானஇரதவல்லவனான சுமந்திரனுடனே, மந்திரபபெருந்தலைவர்-மந்திரிகளாகிய பெரியதலைவர்களும், மற்றுஉள்ளோர்-இன்னமுமுள்ளவர்களும், தந்திரத்தனித்தலைவர்-சேனைகளின் ஒப்பற்றதலைவர்களும், நண்பினோர்-சிநேகிதர்களும், வந்து-வராநின்று, சுற்றமுற்று-சுற்றிலுஞ்சூழ்ந்து, அழுதுமாழ்கினார்-வாய்விட்டழுது வருந்தினார்கள்-எ-று. ௧௨௭

தேரோட்டுவதனில் நிகரற்றவனாதலின் சுமந்திரனை "உந்துபொற்றடந்தேர் வலான்என்றார்" மந்திரப்பெருந்தலைவரொன்றது மற்றையமந்திரிகளை தடந்தேர் வலானென்பதற்கு-அதிரதவீரன்என்றுங் கொள்ளலாம். நண்பினர்என்பதற்கு-அரசர்கட்குரிய பார்ப்பனத்தோழர் சூத்திரத்தோழர் ஆகியர்களை என்னினுமாம்.

சங்கும்பேரியுந்தழுவுஞ்சின்னமும்
எங்குமெங்குநின்றிரங்கியேங்குவ
மங்குறோய்நகர்மகளிராமெனப்
பொங்குகண்புடைத்தழுவபோன்றவே.

(இ-ள்.) சங்கும்பேரியும் - சங்கங்களும்பேரிகைகளும், தழுவுசின்னமும்-பொருந்தியசின்னங்களும், எங்குமெங்குநின்று இரங்கியேங்கும் - ஒவ்வோரிடங்களிலும் இரக்கங்காட்டிஒலிப்பன, மங்குல்தோய்நகர்-மேகந்தவழுகின்றஅவ் அயோத்திமாநகரமானது, மகளிர்ஆம்என-பெண்களைப்போல, பொங்குகண்புடைத்து-பிரகாசிக்கின்றகண்களில்அடித்துக்கொண்டு, அழுவபோன்ற-அழுதலையொத்தன. எ-று. ௧௨௮

மாவும்யானையும்வயங்குதேர்களும்
கோவுநான்மறைக்குழுவுமுன்செலத்
தேவிமாரொடுங்கொண்டுதெண்டிரை
தாவுவார்புனற்சரயுவெய்தினார்.

(இ-ள்.) மாவும்யானையும்-குதிரைகளும்யானைகளும், வயங்குதேர்களும்-விளங்குகின்றஇரதங்களும், கோவும்-அரசர்குழாமும், நான்மறைக்குழுவும்-நான்குவேதங்களையும் உணர்ந்த அந்தணர்கூட்டமும், முன்செல - முன்னேசெல்லாநிற்ப, தேவிமாரோடுங்கொண்டு-அரசனது மனைவிமார்களுடனும் அரசனையெடுத்துக்கொண்டு, தெண்திரை - தெளிந்த அலைகளையுடைய, தாவுவார்புனல்சரயு-கரையிற்றாவுகின்ற ஒழுகினையுடையநீர்நிறைந்த சரயுநதியை, எய்தினார்-அடைந்தார். எ-று. ௧௨௯

எய்தினாலுளோர்மொழிந்தயாவையும்
செய்துதீக்கலந்திருத்திச்செல்வனை
வெய்தினேற்றினார்வீரனுந்தைபால்
பொய்யின்மாக்கடன்கழித்திபோந்தென்றார்.

(இ-ள்.) எய்தி-சரயுவின்கரையை அடைந்து, நூலுளோர்மொழிந்தயாவை யுஞ்செய்து - சாத்திரவாராய்ச்சி யுடையவர்கள்கூறிய சடங்குகளைத்தினையுஞ்செய்து, தீக்கலந்திருத்தி-தீக்கலத்தினைசெப்பஞ்செய்து, செல்வனை-சக்கரவர்த்தியை, வெய்தினெற்றிஞர்-விரைவாகஎற்றினவர்கள், வீரநுந்தைபால்போந்து-வீரனே உன்தந்தையினருகில்வந்து, பொய்இல்மா கடன்கழித்திஎன்றூர்-உண்மையான சிறந்தசடங்கினை கழிப்பாயாகஎன்றுகூறினூர்கள். எ-று. ௧௩0

என்னும்வேலையிலெழுந்தவீரனை
அன்னைதீமையாலரசனின்னையும்
துன்னுதுன்பத்தாற்றுறந்துபோயினுன்
முன்னரேயெனமுனிவன்கூறினுன்.

(இ-ள்.) என்னும்வேலையில்-என்றுகூறியவுடனே, எழுந்தவீரனை-சடங்கு செய்வானெழுந்தபரதனை, முனிவன்-வசிட்டன்பார்த்து, அன்னைதீமையால்-நின்மாதாசெய்தகொடுமையால், அரசன்நின்னையும்-சக்கரவர்த்திஉன்னையும், துன்னுதுன்பத்தால்-உண்டாக்கியதுக்கத்தினுல், முன்னரேநின்னையுந்துறந்துபோயினுன்-விண்ணடைபுகுதற்குமுன்னமேவேண்டாமெனவெறுத்துச்சென்றனன்-எ-

துறந்துபோயினுனெனவேதோன்றனீ
பிறந்துபோறம்பிழைத்ததென்றல்போல்
இறந்துபோயினுனிருந்ததாண்டது
மறந்துவேறொருமைந்தனுங்கொலார்.

(இ-ள்.) தோன்றல்-பரதனே, நீபிறந்து-நீசனித்து, பேர்அறம்பிழைத்தது என்றல்போல்-பெரியதருமமானது தவறிப்போயிற்றென்றல்போல், இறந்துபோயினுன்-இறந்துசென்ற தசரதமன்னவன், ஆண்டுதுறந்து-அப்பொழுது உன்னை மைந்தனுகாயெனத்தள்ளிச்சென்றனன், அதுஇருந்தது-அதுஎன்மனத்திலிருந்தது, மறந்துவேறுஒருமைந்தன் ஆம் - ஈமகடவிர்த்திசெய்தவனைவிட்டு சத்துருக்கனன்செய்வானுக. எ று. ௧௩௨

இடிக்கண்வாளராவிடைவதாமெனுப்
படிக்கண்வீழ்ந்தகம்பதைக்குநெஞ்சினுன்
தடுக்கலாகலாத்துயரந்தன்னுளே
துடிக்கவிம்மிநின்றழுதுசொல்லுவான்.

(இ-ள்.) இடிக்கண்ட-இடிவிழுந்தஇடத்து, வாள்அரா இடைவது ஆம்என-ஒளியினையுடைய நாகமானது இடைந்தாற்போல, படிகண்வீழ்ந்து-பூமியினிடத்துவிழுந்து, அகம்பதைக்கும்நெஞ்சினுன்-உள்ளந்துடிக்கின்ற நெஞ்சினையுடையவன், தடுக்கல்ஆகலா-தடுத்தற்குக்கூடாத, துயரம்-துன்பம், தன்உள்ளேதுடிக்க-தன்னுக்குள்துடியாநிற்ப, விம்மிநின்று அழுதுசொல்லுவான் - விம்முதலுடன்நின்று அழுதுகூறுவான். எ-று. ௧௩௩

உரைசெய்மன்னன்மற்றுன்னிலென்னில்யார்
இரவிதன்குலத்தெந்தைமுந்தையோர்
பிரதபூசனைக்குரியபேறிலேன்
அரைசுசெய்யவோவாவதாயினேன்.

(இ-ள்.) உரைசெய்மன்னன் - சொல்லப்படுகிறஅரசன், மற்றுஉன்னில்- பின்னாலோசிக்குமிடத்து, என்னில்யார்-என்னைவிடவேறுயாவர், இரவிதன் குலத்து-சூரியவமிசத்திற்பிறந்த, எந்தைமுந்தையோர் - என்றந்தைக்குபூர்வீகர் களின்வழக்கப்படி, பிரதபூசனைக்கு-பிரேதபூசனைக்கு, உரியபேறு இலேன்-உரி மையான பேறு இல்லாதவனாக இருக்கின்றேன், அரைசுசெய்யவோ ஆவது ஆயி னேன்-அரைசுசெய்வதோ ஆகிறது ஆயினேன்-எ-று. ௧௩௪

பூவினான்முகன்புதல்வனாதியாம்
தாவின்மன்னர்தந்தருமநீதியால்
தேவராயினார்சிறுவனாகியே
ஆவநான்பிறந்தவத்தனைவா.

(இ-ள்.) பூவில்நான்முகன்புதல்வன் ஆதியாம் - தாமரைமலரிலிருக்கின்ற சதுர்முகனுடையபுத்திரனாகியசுவாயம்புமுதலாகிய, தாவில்மன்னர்-கெடாத அரசர்கள், தம்தருமநீதியால் தேவர்ஆயினார்-தமது தருமநீதியினால்தேவர்களாயி னார்கள், ஆவ-ஐயோ, நான்சிறுவனாகி-நான்சிறியவனாகி, பிறந்த அத்தனை- சனித்த அவ்வண்ணம், ஆனவா-இருந்தபடி-எ-று. ௧௩௫

துன்றுதாள்வளர்சுமந்ததாழையில்
பன்னுவான்குலைப்பதடியாயினேன்
என்னையென்னையீன்றுகாத்தவென்
அன்னையாரெனக்கழகுசெய்தவா.

(இ-ள்.) துன்றும்-நெருங்கிய, தாள்வளர்-அடிவளர்த்தினை, சுமந்ததாழை யில்-பொறுத்ததென்னையில், பன்னும்வான்குலை-உரைக்கப்பெறுகின்ற சிறந்த குலைக்கண், பதடு ஆயினேன்-பதராக ஆயினேன். என்னை-இத்தன்னை, என்னை யீன்றுகாத்த-என்னைப்பெற்றுவளர்த்த, என் அன்னையார் - எனது தாயார், எனக்கு அழகுசெய்தவா-என்றனக்கு அழகுசெய்தபடி-எ-று. ௧௩௬

என்றுகூறிநொந்திடரின்மூழ்குறாத்
துன்றுதாரவற்கிளையதோன்றலெல்
அன்றுநேர்கடனமைவதாக்கினான்
நின்றுநான்மறைநெறிசெய்நீர்மையான்.

(இ-ள்.) என்றுகூறிநொந்து-என்றுரைத்துவருந்தி, இடரின்மூழ்குறா-து ன்பத்திலழுந்தியிருக்கின்ற, அ துன்றுதாரவற்கு - அந்த நெருங்கியமாலையினையு

டைய பரதாழ்வானுக்கு, இளையதோன்றலால்-தம்பியாகிய சத்துருக்கனுல், அன்றுநேர்கடன்-அன்றுசெய்யவேண்டிய கடன்களை, நான்மறைநெறிநின்று-நான்கு வேதமார்க்கப்படியேநின்று, செய்நீர்மையான்-எச்சடங்குகளையும் நடத்துகின்ற தன்மையினையுடைய வசிட்டமுனிவன், அமைவது ஆக்கினன்-பொருந்தச்செய்தனன்-எ-று. கநஎ

இழையுமாரமுமிடையுமின்னிடக்
குழையுமாமலர்க்கொம்பனர்கடாம்
தழையின்முண்டகந்தழுவுகானிடை
முழையின்மஞ்ஞைபோலெரியின்மூழ்கினர்.

(இ-ள்.) குழையும்-குண்டலங்களும், ஆரமும்-ஆரங்களும், இடையும்-இடையும், மின்னிட-ஒளிவீச, குழையும்மாமலர்க்கொம்பு அனர்கள்தாம் - தழைந்த சிறந்தமலர்க்கொம்புபோன்ற பெண்கள், தழையின் முண்டகம்தழுவுகானிடை-அலர்ந்த முருக்கமரங்கள்பொருந்திய வனத்தில், முழையில்மஞ்ஞைபோல-குகையிற்புகுமயில்களைப்போல, எரியின்மூழ்கினர்-தீயிற்குளித்தார்கள்-எ-று. கநஅ

ஈண்டெரியிற் புகுந்தார் என்றது சக்கரவர்த்தியின் மனைவியரான அறுபதினுயிரவரை.

அங்கிநீரினுங்குளிரவம்புயம்
திங்கள்வாண்முகந்திருவிளங்குற
சங்கைதீர்ந்துதங்கணவர்பின்செலும்
நங்கைமார்புகுமுலகநண்ணினர்.

(இ-ள்.) அங்கி - அக்கினியானது, நீரினுங்குளிர - சலத்தினுஞ் சீதளமாகி நிற்க, அம்புயம் - தாமரைமலர்போலும், திங்கள்வாண்முகம் - சந்திரகலைவிளங்கு முகம், திருவிளங்குற-அழகுவிளங்க, சங்கைதீர்ந்து-சந்தேகமின்றி, தம்கணவர் பின்செலும் - தமது நாயகருக்குப்பின் உடன்கட்டையேறிச் செல்லுகின்ற, நங்கைமார்புகும்-பெண்கள் அடைகின்ற, உலகம் - புண்ணியவுலகத்தினை, நண்ணினர்-அடைந்தனர்-எ-று. கநகூ

அனையசெய்கையாலரசர்கோமகற்
கினையதன்மையாலிமையவசெய்துபின்
மனையினெய்தினன்மரபின்வாழ்வினை
வினையினெய்துமோர்பிணியின்வேலையான்.

(இ-ள்.) அனையசெய்கையான்-அவ்வாறான செய்கையான், அரசர்கோமகற்கு-தசரதச்சக்கரவர்த்திக்கு, இமைய-பொருந்துவன, இனையதன்மையாற்-சத்துருக்கனைக்கொண்டு நடத்துதலாகிய இவ்விதத்தால், செய்து - நிறைவேற்றி, பின்-பின்னர், மரபின்வாழ்வினை-மரபாகவந்த வாழ்வை, வினையின்எய்தும்-தீவினையால் அடைகின்ற, ஓர்பிணியின்வேலையான்-ஒப்பற்ற துக்கசமுத்திரமாகக்கொண்டபரதாழ்வான், மனையில்எய்தினன்-அரண்மனையைஅடைந்தான்-எ-று. கச0

ஐந்துமைந்துநாளூழியாமென
மைந்தன்வெந்துயர்க்கடலின்வைகினான்
தந்தைதன்வயிற்றருமம்யாவையும்
முந்துநூலுளோர்முறையின்முற்றினான்.

(இ-ள்.) ஐந்தும்ஐந்தும்நாள்-புலையினையுடைய பத்துத்தினங்களும், ஊழி ஆம்என - ஒரு ஊழிக்காலம்என்னுமாறு, மைந்தன் - பரதாழ்வான், வெந்துயர்க் கடலில் [illegible] - வெவ்விய துக்கசமுத்திரத்தில் மூழ்கியிருந்தான், முந்துநூலுளோர் - முற்பட்ட நூலறிவினையுடைய வசிட்டன்முதலியவர்களால், தந்தை தன்வயின் - தனது பிதாவின்சார்பாயுள்ள, தருமம்யாவையும் - பிதிர்க்கடன்கள் எல்லாவற்றையும், முறையின்முற்றினான் - முறையாகநிறைவேற்றினான் - எ-று. ௧௩௪

முற்றுமுற்றுவித்துதவிமும்மைநூல்
சுற்றம்யாவையுந்தொடரத்தோன்றினான்
வெற்றிமாதவன்வினைமுடித்தவன்
கொற்றவேனெடுங்குமரன்கூடினான்.

(இ-ள்.) முற்றும்-பிதிர்க்கடன்களனைத்தும், முற்றுவித்து-சத்துருக்கனைக் கொண்டு நிறைவேற்றி, மும்மைநூல் - முப்புரிநூலினையுடைய, உதவிச்சுற்றம் யாவையும் - உதவியான புரோகிதர்முதலிய சுற்றங்களெல்லாம், தொடர - பின் தொடர்ந்துவர, தோன்றினான்-வந்தவனாகிய, வினைமுடித்தவன்-பாவவினைகளை யொழித்த, வெற்றிமாதவன் - வெற்றியினையுடைய வசிட்டன், நெடுங்கொற்ற வேல்-நெடியவெற்றியினையுடைய வேற்படையேந்திய, குமரன்கூடினான் - பரதாழ்வானையடைந்தான் - எ-று. ௧௩௫

மன்னரின்றியே வையம்வைகுதல்
தொன்மையன்றெனத்துணியுநெஞ்சினார்
அன்னமாநிலத்தறிஞர்தம்மொடும்
முன்னைமந்திரக்கிழவர்முந்தினார்.

(இ-ள்.) மன்னர்இன்றி-அரசரின்றி, வையம் - உலகத்தில், வைகல்தான்-இருத்தல், தொன்மைஅன்றுஎன - புராதனவழக்கம் அன்றுஎன்று, துணியும்நெஞ்சினார் - துணிந்தநெஞ்சினையுடையவர்களாகிய, முன்னை - பழைய, மந்திரக்கிழவர்-மந்திராலோசனைக்குரியவர்கள், அன்ன-அந்த, மா-சிறந்த, நிலத்து - கோசலநாட்டிலுள்ள, அறிஞர்தம்மொடும்-விவேகிகளுடன், முந்தினார்-வந்தார்கள்-எ-று.

௩-வது, பள்ளியடைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௬௩.



# ௰வது, ஆற்றுப்படலம்.

வரன்முறைதெரிந்துணர்மறையின்மாதவத்
தருமறைமுனிவனுமாண்டையானென
விரைவின்வந்தீண்டினர்விரகினெய்தினர்
பரதனைவணங்கினர்பரியுநெஞ்சினர்.

(இ-ள்.) வரன்முறை-சம்பிரதாயமாக, தெரிந்துணர் - அறிந்துள்ள, மறையின்மாதவத்து - வேதங்களிலுண்டாக்கப்படுகின்ற சிறந்ததவத்தினையுடைய, அருமறைமுனிவனும்-வசிட்டமுனிவனும், ஆண்டையான்என - அவ்விடத்தில் உள்ளானென்றுகூற, விரகின்எய்தினர்-ஆலோசனையின்பொருட்டு வந்தவர்கள், பரியுநெஞ்சினர் - வருந்துகின்ற மனத்தினையுடையவராய், விரவின்வந்து ஈண்டினர்-விரைந்துவந்து நெருங்கி, பரதனை வணங்கினா-பரதாழ்வானை வணங்கினார்கள்-எ-று. க

மந்திரக்கிழவருநகரமாந்தரும்
தந்திரத்தலைவருந்தரணிபாலரும்
அந்தரமுனிவரோடறிஞர்யாவரும்
சுந்தரக்குரிசிலைமரபிற்சுற்றினார்.

(இ-ள்.) சுந்தரக்குரிசிலை-அழகிய அரசகுமாரனாகிய பரதாழ்வானை, மந்திரக்கிழவரும்-மந்திராலோசனைக்குரியவர்களும், நகரமாந்தரும் - நகரவாசிகளும், தந்திரத்தலைவரும்-சேனாதிபர்களும், தரணிபாலரும் - அரசர்களும், அந்தரமுனிவரோடு - அந்தரசாரிகளான முனிவர்களுடன், அறிஞர்யாவரும் - எல்லாவிவேகிகளும், மரபில்-முறைமையாக, சுற்றினார்-சூழநின்றனர்-எ-று. உ

சுற்றினரிருந்துழிச்சுமந்திரப்பெயர்
பொற்றடந்தேர்வலான்புலமையுள்ளத்தான்
கொற்றவற்குறுபொருள்குறித்தகொள்கையான்
முற்றுணர்முனிவனைமுகத்துநோக்கினன்.

(இ-ள்.) சுற்றினர்இருந்துழி - சூழ்ந்திருந்தவுடனே, பொன்தடந்தேர்வலான்-பொன்னாலாகிய பெரியதேர்வலானும், புலமைஉள்ளத்தான் - நூலுணர்வினையுடைய உள்ளமுடையவனும், கொற்றவற்கு-அரசனுக்கு, உறுபொருள்-உண்டாகும் பொருளை, குறித்தகொள்கையான் - எண்ணியஎண்ணத்தினையுடையவனும்ஆகிய, சுமந்திரப்பெயர் - சுமந்திரனென்னும் பெயருடைய, பொன்தடம்தேர்வலான்-பொன்மயமான பெரியதேரோட்டுதலில் வல்லுனன், முற்றுணர்முனிவனை-எல்லாமுணர்ந்த வசிட்டனுடைய, முகத்துநோக்கினன்-முகத்தைப்பார்த்தான்-எ-று. ௩

நோக்கினாற்சுமந்திரனுவலலுற்றதை
வாக்கினாலன்றியேயுணர்ந்தமாதவன்
காக்குதியுலகுநின்கடனதாமெனக்
கோக்குமரனுக்கதுதெரியக்கூறுவான்.

(இ-ள்.) சுமந்திரன்நோக்கினால் நுவலலுற்றதை - சுமந்திரனாகிய மந்திரி கட்பார்வையினால் கூறியதனை, வாக்கினாலன்றியே யுணர்ந்தமாதவன் - வாக்கிந்திரியத்தாலன்றியுணர்ந்த வசிட்டன், நின்கடனதாம்-உனது கடமையாம், உலகு காக்குதி-இவ்வுலகினைக் காப்பாயாக, என-என்று, அது - அச்சுமந்திரன் அபிப்பிராயத்தினை, கோக்குமரனுக்கு-அரசகுமாரனாகிய பரதாழ்வானுக்கு, தெரியக்கூறுவான்-விளங்க உரைக்கின்றான்-எ-று. ௪

வேதியரருந்தவர்விருத்தர்வேந்தர்கள்
ஆதியர்நின்வயினடைந்தகாரியம்
நீதியுந்தருமமுநிறுவநீயிது
கோதறுகுணத்தினாய்மனத்துட்கோடியால்.

(இ-ள்.) வேதியர்-மறையவர்களும், அருந்தவர்-முனிவர்களும், விருத்தர்-கிழவர்களும், வேந்தர்கள் - அரசர்களும், ஆதியர் - முதலானவர்கள், நின்வயின் அடைந்தகாரியம்-நின்னிடத்துக்கு வந்தகாரியம், நீதியும்-நீதியையும், தருமமும் - தருமத்தையும், நிறுவ-நிலைநாட்டுதற்கேயாம், கோதறுகுணத்தினாய்-குற்றமற்றகுணத்தினையுடைய பரதனே, நீஇது-நீ இதனை, மனத்துள்கோடி - மனத்துள் கொள்வாயாக-எ-று. ரு

தருமமென்றொருபொருடந்துநாட்டுதல்
அருமையென்பதுபெரிதறிதியையநீ
இருமையுந்தருவதற்கியைவதீண்டிது
தெருண்மனத்தார்செயுஞ்செயலிதாகுமால்.

(இ-ள்.) தருமம் என்று-அறம்என, ஒருபொருள்தந்து - ஒருபொருளையுண்டாக்கி, நாட்டுதல் அருமையென்பது - நிலைநாட்டுதல் அருமையானது என்பது, ஐய-ஐயனே, நீபெரிது அறிதி-நீ மிகவும்அறிவாய், இருமையும்-இம்மைமறுமைகளாகிய இரண்டினையும், தருவதற்கு-கொடுப்பதற்கு, இதுஈண்டு-இது இவ்விடத்தில், இயைவது-பொருந்துவது, ஈது - இச்செயல், தெருள்மனத்தார்செயல் ஆதும்-அறிவினையுடைய மனத்தினர்இயற்றும் செய்கையேயாம்-எ-று. சு

ஆல்-அசை.

வள்ளுறுவயிரவாளரசில்வையகம்
நள்ளுறுகதிரிலாப்பகலுநாளொடும்
தெள்ளுறுமதியிலாவிரவுந்தேவுடன்
உள்ளுறையுயிரிலாவுடலுமொக்குமே

(இ-ள்.) வள்உறு-கூர்மைபொருந்திய, வயிரவாள் - வயிரமான வாட்படையினையுடைய, அரசுஇல்லவையகம்-அரசனையில்லாத உலகம், நள்உறுகதிரிலாப்பகலும் - வானத்தினுச்சியை அடைகின்ற சூரியனில்லாத பகற்காலமும், நாள் ஒடும் தெள்உறும்மதிஇலாஇரவும் - நட்சத்திரங்களுடனே தெளிவினையுடைய சந்திரனில்லாதஇராத்திரியும், தேவுடன்உள்ளுறை-கடவுளுடன் உள்ளேஇருக்கின்ற, உயிர்இலா உடலும்ஒக்கும்-பிராணனில்லாதசரீரத்தையும்ஒக்கும்-எ-று.

தேவர்தம்முலகினுந்தீமைசெய்துழல்
மாவலியவுணர்கள்வைகுநாட்டினும்
ஏவெவையுலகமென்றிசைக்குமன்னவை
காவல்செய்தலைவரையின்மைகண்டிலம்.

(இ-ள்.) தேவர்தம்உலகினும் - தேவர்களுடைய உலகத்தும், தீமைசெய்து உழல்-கொடுமைகளைச்செய்துசஞ்சரிக்கின்ற, மாவலி-மிக்கவன்மையினையுடைய, அவுணர்கள்வைகும்-அசுரர்கள்வசிக்கின்ற, நாட்டினும்-இராச்சியத்தினும், ஏவெவை-எவைஎவை, உலகம்என்று இசைக்கும்-உலகம்என்று உரைக்கப்படும், அன்னவை-அவைகளை, காவல்செய்-காக்கின்ற, தலைவரை-அரசர்களை, இன்மைகண்டிலம்-இல்லாமையைக்காணேம்-எ-று. ௮

முறைதெரிந்தொருவகைமுடியநோக்குறின்
மறையவன்வகுத்தனமண்ணில்வானிடை
நிறைபெருந்தன்மையினிற்பசெல்வன
இறைகளையில்லனயாவைகாண்கிலம்.

(இ-ள்.) முறைதெரிந்து-முறைமையையுணர்ந்து, ஒருவகை-ஒருவாறாய் முடியநோக்குறின்-முற்றிலும்பார்த்தால், மறையவன்-பிரமன், வகுத்தன-படைத்த, மண்ணில்-பூமியிலும், வானிடை-ஆகாயத்திலும், நிறை-நிறைந்த, பெருந்தன்மையில்-பெரியதன்மையில், நிற்பசெல்வன-நிற்பனவும்செல்வனவும், இறைகளை-தலைமைகளை, இல்லன-இல்லாதவை, யாவை-எவை, காண்கிலம்-கண்டோமில்லை-எ-று. ௯

பூத்தநாண்மலரயனாதிபுண்ணியர்
ஏத்துவான்புகழினரின்றுகாறுங்கூ
காத்தனர்பின்னொருகளைகணின்மையால்
நீத்தநீருடைகலநீரதாகுமால்.

(இ-ள்) பூத்தநாண்மலர்-அன்றலர்ந்ததாமரைமலரிலிருக்கின்ற, அயன்ஆதி புண்ணியர்-பிரமன்முதலிய தேவர்கள், ஏத்தும்-துதிக்கும், வான்புகழினர்-உயர்ந்தபுகழினையுடையவர்கள், இன்றுகாறும்-இதுவரையும், கூ-காத்தனர்-உலகினைக் காத்தார்கள், பின்-அவர்களுக்குப்பின்னர், களைகண்இன்மையால்-ஆதாரமில்லாமையால், நீத்தநீர்-கடலில், உடைகலம்நீரதாகும்-உடைந்தகப்பலின் தன்மையாகும்-எ-று. ஆல்-அசை.

உந்தையோவிறந்தனனும்முனீத்தனன்
வந்ததுமன்னைதன்வரத்தின்மைந்தநீ
அந்தமில்பேரரசளித்தியன்னது
சிந்தனையெமக்கெனத்தெரிந்துகூறினன்.

(இ-ள்.) உந்தையோ-உனது தந்தையோ, இறந்தனன் - இறந்தான், உன் முன்னீத்தனன்-உன்தமயன் துறந்தனன், வந்ததும்-இவ்வாறுண்டாகியதும், அன்னைதன்வரத்தில்-மாதாவினது வரத்தால், மைந்தா-பரதனே?, நீஅந்தம்இல்பேர் அரசு-நீ அழிவற்ற பெரியஅரசினை, அளித்தி-காப்பாய், அன்னது-அவ்வாறுகாத்தல், எமக்குச்சிந்தனை-எமக்கு எண்ணமாகும், என - என்று, தெரிந்துகூறினன்- உணர்ந்துரைத்தான்-எ-று. கக

தஞ்சமிவ்வுலகநீதாங்குவாயெனச்
செஞ்சவேமுனிவரன்செப்பக்கேட்டலும்
நஞ்சினைநுகரெனநடுங்குவாரினும்
அஞ்சினனயர்ந்தனனருவிக்கண்ணினான்.

(இ-ள்.) தஞ்சம்-அடைக்கலம், இவ்வுலகம்-இவ்வுலகத்தினை, நீ தாங்குவாயென-நீ ஆள்வாயென்று, செஞ்சவே-முறையாக, முனிவரன்-வசிட்டன், செப்பக்கேட்டலும்-கூறக்கேட்டலும், அருவிக்கண்ணினான் - நீரொழுகுங் கண்ணினையுடைய பரதாழ்வான், நஞ்சினைநுகர்என-விடத்தினை உண்ணென்று கூற, நடுங்குவாரினும்-நடுங்குபவரினும், அஞ்சினன் அயர்ந்தனன்-அஞ்சிச்சோர்ந்தான்-எ-

நடுங்கினனாத்தடுமாறினாட்டமும்
இடுங்கினன்மகளிரினிரங்குநெஞ்சினன்
ஒடுங்கியவுயிரினனுணர்வுகைதரத்
தொடங்கினனரசவைக்குள்ளஞ்சொல்லுவான்.

(இ-ள்.) நடுங்கினன்-நடுங்கி, நாதடுமாறி-நாவுந் தடுமாறுற்று, நாட்டமும்- கண்களும், இடுங்கினன்-ஒடுங்கி, மகளிரில் - பெண்களைப்போன்று, இரங்கும்- வருந்துகின்ற, நெஞ்சினன்-மனமுடையனாய், ஒடுங்கிய-அடங்கப்பெற்ற, உயிரினன்-பிராணனையுடைய பரதாழ்வான், உணர்வுகைதர - அறிவு ஆதாரமாகநிற்க, அரசவைக்கு-இராசசபையிலவருக்கு, உள்ளம்சொல்லுவான் - தனதபிப்பிராயத்தினை உரைத்தற்கு, தொடங்கினன்-ஆரம்பித்தான்-எ-று. கங

வசிட்டன்வழியாய் சபையோருரைத்த மொழிகள் தனக்கு வெகு கொடியதாகத்தோன்றினமையால் நடுக்கமும், நாத்தமொற்றமும், மகளிரினிரங்கு நெஞ்சமும் உடையனாகிச் சோர்ந்தானென்றும் பின்னர் அறிவு துணைநிற்கத் தைரியங்கொண்டு பேசத்தொடங்கினான் என்றும் இது குறிப்பித்தல் காண்க.

மூன்றுலகினுக்குமோர்முதல்வனாய்முதல்
தோன்றினனிருக்கயான்மகுடஞ்சூடுதல்
சான்றவருரைசெயத்தருமமாதலால்
ஈன்றவள்செய்கையினிழுக்குண்டாகுமோ.

(இ-ள்.) மூன்றுஉலகினுக்கும் - சுவர்க்கமத்தியபாதாளமென்னும் மூன்றுலோகங்களுக்கும், ஓர்-ஒப்பற்ற, முதல்வன் ஆய்-தலைவன் ஆகி, தோன்றினன்-அவதரித்த ஸ்ரீராமன், இருக்க-இராச்சியபாரத்தினை வகிக்காதிருக்க, யான் மகுடம் சூடுதல் - பின்பிறந்த யான் முடிதரித்துக்கொள்ளுதல், சான்றவர் - உயர்ந்தோர், உரைசெய் - சொல்லியருளிய, அறமும் ஆதலால் - அந்த தருமமுறையினதாதலால், ஈன்றவள்செய்கையின்-பெற்றவள்செய்கையில், இழுக்கு - தாழ்வு, உண்டாகுமோ-உண்டாகுமோ?-எ-று. கச

அடைவருங்கொடுமையென்னன்னைசெய்கையை
நடைவருந்தன்மையீர்நன்றிதென்றிரேல்
இடைவருங்காலமீண்டிரண்டுநீத்தது
கடைவருந்தீநெறிக்கலியினாட்சியோ.

(இ-ள்.) அடைவு அரும் - அடைதற்கரிய, கொடுமை - பொல்லாங்கினையுடைய, என் அன்னைசெய்கையை - என் மாதாவின்செய்கையை, நடைவருந்தன்மையீர்-நன்னடையினையுடைய நீங்கள், நன்று இது என்றிரேல - நல்லது இது என்று கூறுவீர்களானால், இடைவருகாலம் - இடையேவராநின்ற த்ரேதத்துவாபரங்களாகிய நற்காலங்கள், ஈண்டு இரண்டும்நீத்தது - இப்பொழுது அவ்விரண்டும் ஒழிந்தது, உடைவு அரும் தீநெறி-அழிவற்ற கொடியமார்க்கத்தினையுடைய, கலியின்-கலியுகத்தின், ஆட்சியோ-அரசாட்சியோ!-எ-று. கரு

வேத்தவையிருந்தநீர்விமலனுந்தியில்
பூத்தவன்முதலியபுவியுட்டோன்றினோர்
மூத்தவரிருக்கவே முறைமையாளிலம்
காத்தவருளரெனிற்காட்டிக்காண்டிரால்.

(இ-ள்.) வேத்து அவை இருந்தநீர்-அரசசபையிலிருந்த நீங்கள், விமலன்-பரிசுத்தனாகிய நாராயணனது, உந்தியில்பூத்தவன்முதலிய-திருநாபிக்கமலத்தில் அவதரித்த பிரமாமுதலிய, புவியுள்தோன்றினோர்-உலகில் பிறந்தவர்கள், மூத்தவரிருக்கவே-மூதலிற்பிறந்தவர்களிருக்க, முறைமையால்-நியாயப்படி, நிலமகாத்தவர் உளர்எனில்-பூமியை ஆண்டவர்கள் இருந்தால், காட்டிக்காண்டிர்-விளக்கிக் காண்பியுங்கள், ஆல்-அசை-எ-று. கசு

விமலன் உந்தியிற்பூத்தவன்முதலிய என்பதற்கு விமலனது உந்தியிற்றோன்றிய பிரமனால் உண்டாக்கப்பட்ட என்றும் உரைக்கலாம் முதலுதல்-சிருடியில் முற்பட்டு நிற்றல்.

நன்னெறியென்னினுநானிந்நாநில
இன்னுயிர்ப்பொறைசுமந்திருந்துவாழ்கிலேன்
அன்னவன்றனைக்கொணர்குதலங்கன்மாமுடி
தொன்னெறிமுறைமையிற்சூட்டிக்காண்டிரால்.

(இ-ள்.) நல்நெறி என்னினும்-நீங்கள் உரைப்பன நன்மார்க்கங்களேயாயினும், நான் இந்நாநிலத்து - யான் இப்பூமியில், இன்உயிர்பொறைசுமந்து

இனியவுயிராகிய சுமையைச்சுமந்துகொண்டு, இருந்துவாழ்கிலேன்-இருந்துவாழேன், அன்னவன்தனைக்கொணர்ந்து - அவ்விராகவனை அழைத்துக்கொண்டுவந்து, தொல்நெறிமுறைமையில் - புராதனசம்பிரதாயமுறைமையில், அலங்கல்மாமுடி-மாலையொடுகூடின சிறந்த மகுடத்தினை, சூட்டிக்கொண்டிர்-தரித்துக்கொண்டீர்களாக, ஆல்-அசை-எ-று. ௧௭

அன்றெனிலவனொடுமரியகானிடை
நின்றினி திருந்தவநெறியினாற்றுவென்
ஒன்றினியுரைப்பினென்னுயிரைநீக்குவென்
என்றனனென்றபோதிருந்தபேரவை.

(இ-ள்.) அன்றெனில்-அவ்வண்ணமன்றேல், அரியகானிடை-செல்லுதற்கரிய வனத்தில், அவனொடும்நின்று-அவ்விராகவனுடனேகலந்து, இனிது-இனிமையாக, இருந்தவம்-பெரியதவத்தினை, நெறியின்ஆற்றுவென்-முறைப்படிச்செய்வேன், இனி ஒன்று உரைக்கில்-இனி வேறொன்றையுரைத்தால், என்உயிரை-எனது பிராணனை, நீக்குவன் என்றனன் - ஒழிப்பேனென்று கூறினான். என்றபோது-அவனிவ்வாறு கூறியவுடன், இருந்த பேரவை அங்கிருந்த பெரியசபையினர்-எ-று. அவை-அவையிலுள்ளாரைக்குறித்தமையான் ஆகுபெயர். ௧௮

ஆன்றபேரரசனுமிருப்பவையனும்
ஏன்றனன்மணிமுடியேந்தல்வேந்தநீ
வான்றொடர்திருவினைமறுத்தியன்னியந்
தோன்றல்கள்யாருளர்நின்னிற்றோன்றினார்.

(இ-ள்.) ஆன்றபேர் அரசனும் இருப்ப - அகன்ற பெரியஅரசினையுடைய சக்கரவர்த்தியும் உயிருடனிருக்க, ஐயனும் மணிமுடி ஏந்தல்என்றனன்-ஸ்ரீராமபிரானும் மணிமகுடத்தினை சிரமேற்றலையங்கீகரித்தனன், வேந்தநீ - அரசனே நீ, வான்தொடர் திருவினை மறுத்தி - சொர்க்கசம்பந்தமான இவ்வரசினை மறுக்கின்றாய், நின்னிற்றோன்றினார்-உன்னிடத்துப் பிறந்தவர்களாய், மன்இளந்தோன்றல்கள்யார்உளர்-அரசுக்குரிய இளங்குமாரர்கள் எவர்களிருக்கின்றார்கள்-எ-று.

ஆழியையுருட்டியுமறங்கள்போற்றியும்
வேள்வியையியற்றியும்வளர்க்கவேண்டுமோ
ஏழினோடேழெனாவுலகுமெஞ்சினும்
வாழியநின்புகழென்றுவாழ்த்தினார்.

(இ-ள்.) ஆழியையுருட்டியும் - ஆஞ்ஞாசக்கரத்தினை நடத்தியும், அறங்கள் போற்றியும்-தருமங்களைச்செய்தும், வேள்வியை இயற்றியும்-யாகங்களைச்செய்தும், வளர்க்கவேண்டுமோ-வளர்த்தல்வேண்டுமோ, ஏழினோடேழ்எனும்-பதினான்கென்றுரைக்கப்படுகின்ற, உலகும்எஞ்சினும்-உலகங்களும்அழிந்தாலும், நின்

புகழ்வாழிய-நினது கீர்த்தி வாழக்கடவது, என்று வாழ்த்தினர் - என்றுரைத்து வாழ்த்தினார்கள்-எ-று. ௨0

குரிசிலுந்தம்பியைக்கூவிக்கொண்டலின்
முரசறைந்திந்நகர்முறைமைவேந்தனைத்
தருதுமீண்டென்பதுசாற்றித்தானையை
விரைவினிலெழுகெனவியம்புவாயென்றான்.

(இ-ள்.) குரிசிலும்-பரதாழ்வானும், தம்பியைக்கூவி-சத்துருக்கனை அழைத்து, கொண்டலின்-மேகமுழக்கம்போல, முரசு அறைந்து-முரசினை அடித்து, இந்நகர்-இந்த அயோத்திமாநகரத்திற்கு, முறைமைவேந்தனை-நியாயமான அரசனை ஸ்ரீராமபிரானை, தருதும் ஈண்டு என்பதுசாற்றி - அழைத்துத்தருகின்றோம் இவ்விடத்திலென்பதனையுரைத்து, தானையை - சைனியங்களை, விரைவினில்-சீக்கிரமாக, எழுகென - பிரயாணமாகுக என்று, இயம்புவாய் என்றான்-சொல்லுவாய் என்றுகூறினான்-எ-று. ௨௧

நல்லவனுரைசெயநம்பிகூறலும்
அல்லலிலழுங்கியவன்பின்மாநகர்
ஒல்லெனவிளைத்ததானுயிரில்யாக்கையைச்
சொல்லெனுமமிர்தினாற்றுளித்ததென்னவே.

(இ-ள்.) நல்லவன் உரைசெய - பரதாழ்வான் இவ்வாறுரைக்க, நம்பிகூறலும் - சத்துருக்கனன் அவ்வாறேகூறுதலும், அல்லலில் அழுங்கிய - துன்பத்தினால் வருந்திய, அன்பின்மாநகர்-அன்பினையுடைய சிறந்த அயோத்திமாநகரம், உயிர் இல்யாக்கையை-உயிரற்ற உடலானது, சொல்எனும் - நிறைமொழிமாந்தரின் அநுக்கிரகமொழிஎனும், அமிர்தினால்-அமிர்தத்தினால், துளித்ததென்ன-துளித்தாற்போன்று, ஒல்லென இளைத்தது-ஒல்லென ஒலித்தது, ஆல்-அசை-எ

துளித்தல்-ஈண்டு உயிர்பெற்றுக் கண்ணீர்வார்தல், கண்ணீர்வார்தலானந்த மிகுதியால் - துளிர்த்தலென்னும் கிராம்மியமொழி துளித்ததென நின்றது என்றுகொள்ளினும் ஆம், துளிர்த்தல்-உயிர்பெறுதல்.

அவித்தவைம்புலத்தவராதியாயுளப்
புவித்தலையுயிரெலாமிராமன்பொன்முடி
கவிக்குமென்றுரைக்கவேகளித்ததாலது
செவிப்புலநுகர்வதோர்தெய்வத்தேன்கொலாம்.

(இ-ள்.) அவித்த ஐம்புலத்தவர் ஆதி ஆயுள-அவிக்கப்பெற்ற ஐம்புலன்களையுடைய முனிவர்களாதியாயுள்ள, புவிதலை உயிர்எலாம்-பூமியினிடத்துவாழும் உயிர்கள் அனைத்தும், இராமன்-ஸ்ரீராகவன், பொன்முடிகவிக்கும் என்றுரைக்கவே-சுவர்ணகிரீடம்தரிப்பான் என்றுகூறுதலும், களித்தது - சந்தோஷமடைந்

தது, அது-அம்மொழி, செவிபுலம்நுகர்வதலர் - காதின்வழியாக அநுபவிக்கத் தக்க ஒப்பற்ற, தெய்வம்தேன்கொல்ஆம்-தெய்வீகமான தேனாகஇருக்கலாம்-எ-று.

எல்லாருக்கும் ஸ்ரீராமன் பொன்முடிதாங்கி அரசுபுரிதலில் விருப்பமென் பதனை இக்கவி விளக்கிநிற்றல் காண்க.

படுமுரசறைந்தனர்பரதன்றம்முனைக்
கொடிநகர்தருமவற்கொணரச்சேனையை
முடுகுகவென்றசொன்மூரிமாநகர்
உடுபதிவேலையினுதயம்போன்றதே.

(இ-ள்.) படுமுரசு அறைந்தனர் - வாரினாற்கட்டப்பட்ட முரசினை அடிப்பவர்கள், பரதன் தம்முனைகொடிநகர்தரும் - பரதாழ்வான் தனதுமூத்தவனாகிய ஸ்ரீராமபிரானை கொடிகளையுடைய நகரிற்கு அழைத்துவருவான், அவண்கொணர - அவ்விராகவனை அரசுமுறைப்படி அங்கேஅழைத்துவருதற்கு, சேனையை - சைனியங்களை, முடுகுக - செல்லுக, என்றசொல் - என்றவசனம், மூரிமாநகர் - சிறந்த அப்பெரியநகரத்திற்கு, உடுபதி - சந்திரன், வேலையின்உதயம்போன்றது - பாற்கடலில் உதித்ததனையொத்தது -எ-று. ௨௪

சந்திரோதயத்தினைக்கண்ட பாற்கடல் ஆரவாரஞ்செய்யுமாறு அயோத்திமாநகரமும் சந்தோஷஒலிகாட்டிநின்றதென்பது கருத்து.

எழுந்ததுபெரும்படையேழுவேலையின்
மொழிந்தபேரூழியின்முழங்கிமுந்துற
அழிந்ததுகேகயன்மடந்தையாசைபோய்க்
கழிந்ததுதுயர்நெடுங்காதறூண்டவே.

(இ-ள்.) மொழிந்தபேர் ஊழியின் - சொல்லப்பட்ட பெரியவூழிகாலத்தில், எழுவேலையின் - சத்தசாகரங்களைப்போல், முழங்கி - ஆரவாரித்துக்கொண்டு, பெரும்படை - மிகுந்தசைநியங்கள், எழுந்தது - பிரயாணமாகி, முந்துஎழ - முன்னேசெல்ல, கேகயன்மடந்தை ஆசை - கைகேயியின் ஆசையானது, அழிந்தது - கெட்டது, துயர் - பிறருடையதுன்பம், போய்கழிந்தது - சென்றொழிந்தது, நெடுங்காதல் - மிகுந்த ஆசையானது, தூண்ட - தூண்டுதலைச்செய்ய - எ-று. ௨௫

நெடுங்காதல்தூண்ட - எப்பொழுது காண்போமென்னும் பெரியகாதலானது எச்சரிக்க, மொழிந்தபேர் ஊழியின் எழுவேலையின் - நூல்களுரைக்கின்ற பிரளயகாலத்து எழுகடல்களைப்போல, பெரும்படை - பெரியசேனை, முழங்கி - ஆரவாரித்துக்கொண்டு, முந்துஎழ - முன்னேபோதற்கு, எழுந்தது - எழாநின்றது, (உடனே) கேகயன்மடந்தை - கைகேயிக்கு, ஆசை அழிந்தது - பரதனுலகாள்வானென்றிருந்த ஆசையகன்றது, போய்கழிந்தது துயர் - திரும்பவந்துபுகுந்தது துக்கம் என்றுமுரைக்கலாம், போய்கழிதல் - சென்றுமீளுதல்.

பண்ணினபகடுதேர்புரவிபண்டியும்
மண்ணினைமறைத்தனவளர்ந்தமாக்கொடி
விண்ணினைமறைத்தனவிரிந்தபாத்துகள்
கண்ணினைமறைத்தனகமலத்தோனையே.

(இ-ள்.) பண்ணின-அலங்கரிக்கப்பட்ட, பகடு-யானைகளும், தேர்-இரதங்களும், புரவி-குதிரைகளும், பண்டியும்-வண்டிகளும், மண்ணினை - பூமியை, மறைத்தன-மறைத்தன, வளர்ந்தமாகொடி-வளர்ந்த பெரியகொடிகள், விண்ணினைமறைத்தன-ஆகாயத்தினை மறைத்தன, விரிந்தபாதுகள்-அகன்றெழுந்த மிகுந்தபுழுதிகள், கமலத்தோனை-சூரியனது, கண்ணினை-நயனங்களை, மறைத்தன-மறையச்செய்தன-எ-று. ௨௧

கமலத்தோன் என்பதற்கு - தாமரைமலரினையுடைய சூரியனை என்றிது விழுக்காது.

ஈசனிவ்வுலகினையழிக்குநாளெழும்
ஓசையினிமிர்ந்ததொல்லெனும்பேரொலி
காசையில்கரியவற்காணவூன்றெழும்
ஆசையினிமிர்ந்ததவ்வனிகராசியே.

(இ-ள்.) ஈசன் இவ்வுலகினை - ஈசன் இந்த உலகத்தினை, அழிக்கும்நாள்-அழிக்கின்றகாலத்தில், எழும் - உண்டாகின்ற, ஓசையில்-பேரொலியைப்போல, நிமிர்ந்தது-உண்டாகியது, ஒல் எனும்பேர் ஒலி - ஒல்லென்கின்ற பெரிய ஓசை, (அப்பொழுது) காசை இல் - குற்றமில்லாத, கரியவன்காண-ஸ்ரீராமனைத் தரிசித்தற்கு, ஊன்றெழும் - மிகுந்துண்டாகின்ற, ஆசையில்-விருப்பத்துடனே, நிமிர்ந்தது-எழுந்தது, அவ்வனிகராசி-அந்தச்சேனையின் பிரிவுகள்-எ-று. ௨௨

இராசிகளாவன-இரதம், கசம், துரகம், பதாதி என்பனவாகிய இவைகள்.

படியொடுதிருநகர்துறந்துபன்மரம்
செடியொடுகொடுவனநோக்கிச்சீதையாம்
கொடியொடுநடந்தவக்கொண்டலாமெனப்
பிடியொடுநடந்தனபெருங்கைவேழமே.

(இ-ள்.) படிஒடுதிருநகர்துறந்து-இந்தப்பூமியினுடன் அயோத்திநகரத்தினையுந் துறந்து, பல்மரம் செடிஒடு - பலமரங்களையும் செடிகளையும்உடைய, கொடுவனம்நோக்கி-கொடியகாட்டினைக்குறித்து, சீதை ஆம்-சீதைஆகிய, கொடிஒடுநடந்த-பெண்கொடி உடனேசென்ற, கொண்டல் ஆம்என - மேகவண்ணனாகிய ஸ்ரீராமனைப்போல, பிடி ஒடு நடந்தது - பெண்யானையுடனே சென்றது, பெருங்கைவேழம்-துதிக்கையினையுடைய ஆண்யானை-எ-று. ஏகாரம்-ஈற்றசை.

ஆண்யானையை இராகவனாகவும், பெண்யானையை பிராட்டியாகவும் நடைக்கும், தோற்றத்திற்குமாக ஏகதேசவுருவகஞ்செய்தலின்இது ஏகதேசவுருவகவணி, படியைத்துறக்கினும் திருநகரினைத்துறத்தல் அரிதாதலின் படியொடு திருநகர்என்றார். திருநகர்-திருவினையுடைய நகர், திரு-சம்பத்து.

சேற்றிளமரைமலர்சிறந்தவாமெனக்
காற்றளப்பொலிதருகன்னியாரொடும்
ஏற்றிளர்பிடிக்குலமிகலினின்னடை
தோற்றிளங்களிறைச்சுமப்பபோன்றவே.

(இ-ள்.) சேற்று இளம் மரைமலர் - சேற்றினில் இளந்தாமரைமலர், சிறந்த ஆம்என - விளங்கினாற்போல, கால்தளம்பொலிதரு கன்னியார் ஒடு-கால்களில் செம்பஞ்சுக்குழம்பு விளங்குகின்ற பெண்களுடனே, இளம்பிடிக்குலம்-இளமையினையுடைய பெண்யானைக்கூட்டங்கள், இகலின்ஏற்று - பகையுடனெதிர்த்து, இன்நடை-இனியநடையில், தோற்று-தோல்வியுற்று, இளங்களிறை-வென்ற இளம்பெண்களை, சுமப்பபோன்ற-சுமத்தலையொத்தன-எ-று. ௨௯

வேதனைவெயிற்கதிர் தணிக்கமென்மழைச்
சீதநீர்கொடுநெடுங்கொடியுஞ்சென்றன
கோதைவெஞ்சிலையவன்கோலங்காண்கிலா
மாதரினுடங்குவவரம்பில்கோடியே.

(இ-ள்.) வேதனை-உஷ்ணத்தினையுடைய, வெயில்கதிர் - சூரியகிரணத்தினை, தணிக்க-தணிர்த்தற்கு, மென்மழைசீதநீர்கொடு-மெல்லியமழையினது குளிர்ச்சியான சலத்தினைக்கொண்டு, நெடும்கொடியும் சென்றன - பெருங்கொடிகளுஞ்சென்றன, கோதைவெம்சிலையவன்-நாணியினையுடைய வெவ்வியகோதண்டத்தோடுகூடியஸ்ரீராமபிரானது, கோலம்காண்கிலா-திருவுருவக்கோலத்தினைத்தரிசியாத, மாதரின்-பெண்களைப்போல, வரம்புஇல்கோடி நுடங்குவ-அளவற்ற கொடியாடைகள் துவளுகின்றன-எ-று. ௩௦

ஸ்ரீராமபிரானைக்காணவிழைந்து காணாது வருந்துமாதர் துவளுங் கொடியாடைக் கிணையாயினர். இது தொழிலுவமையணி.

வெண்மதிமீச்செலமேகமூர்ந்தென
அண்ணல்வெங்கதிரவனளவின்மூர்த்தியாய்
மண்ணிடையிழிந்தொருவழிக்கொண்டாலென
எண்ணருமன்னவர்களிற்றினேகினார்.

(இ-ள்.) வெண்மதி-வெள்ளியசந்திரன், மீசெல-மேலேசெல்லாநிற்ப, மேகம்-மேகமானது, ஊர்ந்தென-ஊர்ந்தாற்போலவும், அண்ணல்-பெருமைபொருந்திய, வெங்கதிரவன்-வெப்பத்தினையுடைய சூரியன், அளவுஇல் மூர்த்திஆய்-அளவற்ற உருவினனாய், மண்இடைஇழிந்து-பூமியில்இறங்கி, ஒருவழிகொண்

டால்என-ஒரேமார்க்கத்திற்சென்றாற்போல, எண்அரும்மன்னவர்-கணக்கில்லாத அரசர்கள், களிற்றின்-யானையின்மீது, ஏகினர்-சென்றார்கள்-எ-று. ௩௧

வெண்மதிமேற்சேறல் - அரசர்தலைமீது பிடிக்கப்படுகின்ற குடைகட்கும் மேகம் கீழூர்தல் அவர்கள் ஊர்ந்துசெல்லும்யானைகட்கும் உவமையாயினகாண்க.

தேர்மிசைச்சென்றதோர்சிந்துசெம்முகக்
கார்மிசைக்கழிந்ததார்கலியொர்கார்க்கடல்
ஏர்மிசையிவுளிமேலேகிற்றெங்கணும்
பார்மிசைப்படர்ந்ததுபதாதிப்பௌவமே.

(இ-ள்.) ஓர்சிந்து-ஒருகடல், தேர்மிசை-இரதத்தின்மீது, சென்றது-போயது, ஆர்கலி-மற்றொருகடல், செம்முகக்கார்மிசை - செந்நிறமான சிந்தூரமணியப்பெற்ற மேகம்போலும் யானையின்மீது, கழிந்தது - சென்றது, ஓர் - ஒரு, கார்கடல் - கரியகடலானது, ஏர்மிசை இவுளிமேல் - மிக்க அழகினையுடைய குதிரையின்மீது, ஏகிற்று - சென்றது, எங்கணும் - எவ்விடத்திலும், பதாதிபௌவம்-காலாட்படையாகிய சமுத்திரம், பார்மிசைபடர்ந்தது-பூமியின்மீது சென்றது-எ-று. ௩௨

கடல்புரைவன-கடல்போன்ற சதுரங்க சைநியங்கள்.

தாரையுஞ்சங்கமுந்தாளங்கொம்பொடு
வார்மிசைப்பம்பையுந்துடியுமற்றவும்
பேரியுமியம்பலசென்றபேதைமைப்
பூரியர்குழாத்திடையறிஞர்போலவே.

(இ-ள்.) பேதமை-அறியாமையினையுடைய, பூரியர் - கீழ்மக்களின், குழாத்து இடை-கூட்டத்தின் நடுவில், அறிஞர்போல-விவேகிகளைப்போல, தாரையும்-தாரைகளும், சங்கமும்-சங்கங்களும், தாளம்-தாளங்களும், கொம்பொடு-கொம்புடன், வார்மிசைபம்பையும்-வாரினை மேலிட்டுள்ள பம்பையும், துடியும்-உடுக்கையும், மற்றவும்-மற்றுள்ளவைகளும், பேரியும்-பேரிகையும், பலஇயல்-பலவிதமாக, சென்ற-ஒலித்துச்சென்றன-எ-று. ௩௩

பூரியர்குழாத்துட்புக்க வறிஞருக்கொருவழிப்படநிற்குந் தன்மையின் மைபுண்மையின் ஒருவழிப்படா வாச்சியங்கட்கவர்நிறமுவமையாயிற்று.

தாவருநாண்முதலணியலொறறகை
மேவருகலங்களைவெறுத்தமேனியர்
தேவருமருள்கொளத்தெரியுங்காட்சியர்
பூவுதிர்கொம்பெனமகளிர்போயினர்.

(இ-ள்.) தாவரும்நாள்முதல்-கேவெந்தாளுக்கு முதல்நாள்தரித்த, அணி அலால்-ஆபரணமல்லாமல், தகைமேவரும்-தகுதிபொருந்திய, கலங்களை-ஆபரணங்களை, வெறுத்தமேனியர்-வெறுத்த உடலினரும், தேவரும் - தேவர்களும், மருள்கொள-மயக்கும்வண்ணம், தெரியும்காட்சியர் - தெரிகின்ற உருவினரும் ஆகி, பூஉதிர் கொம்புஎன-மலருதிர்ந்த கொம்பைப்போல, மகளிர்-அநேகப்பெண்கள், போயினர்-சென்றார்கள்-எ-று. ௩௪

கேவெந்தநாளுக்கு முதனாளாவது ஸ்ரீராமன் காட்டிற்குச்சென்றநாளுக்கு முதல்நாள்.

அதிர்கடல்வையகமனைத்துங்காத்தவன்
விதிவருந்தனிக்குடைமீதிலாப்படை
பொதிபலகவிகைமீன்பூத்ததாகிறும்
கதிர்மதிநீங்கியகங்குல்போன்றதே.

(இ-ள்.) அதிர்கடல் வையகம் அனைத்தும் காத்தவன் - சத்திக்கின்ற கடல் சூழ்ந்த உலகமுழுமையுங்காத்த சக்கரவர்த்தியின், விதிவரும் - முறைப்படியே உண்டான, தனிக்குடை-ஒப்பற்ற குடையானது, மீது இலா - மேலேகாணப்படாத, படை-சேனையானது, பொதிபலகவிகைமீன்-சூழப்பெற்ற பலகுடைகளாகிய நட்சத்திரங்கள், பூத்தது ஆகிலும்-தோன்றியதாகிலும், கதிர்மதிநீங்கிய-சோடசகலைகளையுடைய சந்திரனில்லாத, கங்குல்போன்றது - இராத்திரியை ஒத்தது-எ-று. ௩௫

விதிவருந் தனிக்குடை என்றது - சூரியவங்கிசத்து முதலரசன் காலந்தொட்டு பட்டாபிஷேகவரசர் தலைமீது பிடிக்கப்பட்டுவருகின்ற ஒப்பற்றகுடையையாம். அது வேதமந்திரவழியாய் புனிதப்படுத்தப்பட்ட இயல்பினையுடையதாதலின் அதற்கு விதிவரும் என்ற சிறப்படை கொடுத்தனர்.

செல்லியசெலவினுந்திறியதிக்கெனச்
சொல்லியசேனையைச்சுமந்ததேயெனில்
ஒல்லியல்வேலைநீருடுத்தபாரையோர்
மெல்லியலென்றவர்மெலியரோகொலாம்.

(இ-ள்.) செல்லிய செலவினால் - போகும்போக்கினால், திக்குசிறியஎன-திக்குச்சிறிதுஎன்று, சொல்லிய - உரைக்கப்பட்ட, சேனையை - சைநியத்தினை, சுமந்ததேஎனில்-சுமந்ததுஆனால், ஒல்இயல் வேலைநீர் - ஒல்லென ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த, பாரை-இந்தபூமியை, ஓர்மெல்இயல்-ஒருபெண்என்று, என்றவர்-கூறினவர்கள், மெலியரோ கொல்ஆம்-மேன்மையானவர்களாக இருக்கலாம்-எ-

பூமி மெல்லியலானால் இத்தனைவல்லியல்பினையுடையசைநியங்களை சுமக்காது என்பது கருத்து.

தங்குசெஞ்சாந்தகில்கலவைசார்கில
குங்குமங்கொட்டிலகோவைமுத்தில
பொங்கிளங்கொங்கைகள்புதுமைவேறில
தெங்கிளநீரெனத்தெரிந்தகாட்சியே.

(இ-ள்.) பொங்குஇளம்கொங்கைகள்-பிரகாசிக்கின்ற இளந்தனங்கள், தங்குசெஞ்சாந்து-பொருந்திய செஞ்சாந்தினையும், அகில்கலவைசார்கில - அகிலின் கூட்டுவெருக்கமும் சேர்கின்றில, குங்குமம் - குங்குமத்தினை, கொட்டில - பூசவில்லை, கோவை-கோத்த, முத்து இல - முத்துமாலையும் இல்லை, புதுமை வேறு இல-வேறேபுதுமையும் இலை, காட்சி-தோற்றத்தில், தெங்கு இளநீர்என-தெங்கிளநீரைப்போல, தெரிந்த-காணப்பட்டன-எ-று. ௰௭

இன்றுணையவர்முலையெழுதுசாந்திலும்
மன்றலந்தாரினுமறைந்திலாமையால்
துன்றிளங்கொடிமுகிற்றூசுநீங்கிய
குன்றெனப்பொலிந்தனகுவவுத்தோள்களே.

(இ-ள்.) இன்துணையவர் - இனியநாயகிகளின், முலைஎழுது சாந்திலும் - தனத்திலெழுதப்பெற்ற சந்தனத்திலும், மன்றல்அம்தாரினும்-மணத்தினையுடைய அழகியபூமாலையினும், மறைந்து இலாமையால் - மூடப்பெறாமையால், துன்று இளங்கொடிமுகில் - நெருங்கிய மேகநலதையளாகிய இளங்கொடி, தூசுநீங்கிய-புழுதியகன்ற, குன்றுஎன - மலைகளைப்போல, பொலிந்தன-விளங்கின, குவவு தோள்கள்-தடித்த புயங்கள்-எ-று. ௰௮

நறையறுகோதையர்நாட்செய்கோலத்தின்
துறையறவஞ்சனந்துறந்தநாட்டங்கள்
குறையறநிகர்த்தனகொற்றமுற்றுவான்
கறையறக்கழுவியகாலவேலையே.

(இ-ள்.) நறையறுகோதையர் - மலர்மணமற்ற கூந்தலினையுடைய பெண்கள், நாள்செய்கோலத்தின் துறைஅற - தினந்தோறும் செய்துகொள்ளுகின்ற அலங்காரமார்க்கமானது கெட, அஞ்சனம்-மையினை, துறந்தநாட்டங்கள் - அகன்றகண்கள், கொற்றம் முற்றுவான் - வெற்றியடைதற்கு, கறைஅறக்கழுவிய-இரத்தக்கறை கெடுமாறு கழுவிய, காலவேலையே-காலவேலினையே, குறைஅற-குற்றம்நீங்க, நிகர்த்தன-ஒப்பாயின-எ-று. ௰௯

விரிமணிமேகலைவிரவியார்க்கில
தெரிவையரல்குறுலொலியிறேறெனப்
பரிபுரமார்க்கிலப்பவளச்சீறடி.
அரிவினமார்க்கிலாக்கமலமன்னவே.

(இ-ள்.) தெரிவையர்-பெண்களின், அல்குல்-நிதம்பம், விரிமணிமேகலை விரவி-ஒளிவிரிந்த மணிமயமான மேகலையொடுகலந்து, ஆர்க்கில-ஆரவாரிக்கின்றில, தார்ஒலிஇல்தேர்என - கிண்கிணிமாலையின் ஓசையில்லாத இரதத்தைப் போல. பரிபுரம் ஆர்க்கில பவளம் சீறு அடி-சிலம்போசைகேட்கின்றில பவளம்போலுஞ் சிறியகால்கள். அரிஇனம் ஆர்த்திலா - வண்டுக்கூட்டங்கள் மொய்த்துமுழங்காத, கமலம்அன்ன-தாமரைமலரை ஒத்தன. எ-று. ஏகாரம்-ஈற்றசை.

மல்கியகேகயன்மடந்தைவாசகம்
நல்கியதரிவையர்நடுவிற்கேகொலாம்
புல்கியமலர்வடம்பூண்கிலாமையால்
ஒல்கியவொருவகைபொறையுயிர்க்கவே.

(இ-ள்.) புல்கிய-நெருங்கிய, மலர்வடம் மலர்மாலையும் முத்துமாலையும், பூண்கிலாமையால்-தரிக்கப்படாமையால், ஒல்கிய-துவண்ட, ஒருவகை-ஒருவாறு. பொறைஉயிர்க்க-சுமைநீங்க, மல்கிய-வளம்மிக்க, கேகயன்மடந்தை-கைகேயியின், வாசகம்-வசனம், அரிவையர்நடுவிற் கேகொல்ஆம்-பெண்களின் இடைக்கே, நல்கியது-நன்மையைக்கொடுத்தது. எ-று. ௪௧

கோமகன்பிரிதலிற்கோலநீத்துஉள
தாமரைச்செல்வியுந்தவந்தமேவினாள்
காமனுமருந்துயர்க்கடலின்மூழ்கினான்
ஆமெனநிகழ்ந்ததவ்வளவில்சேனையே.

(இ-ள்.) அவ்அளவுஇல்சேனை - அந்த அளவற்ற சைநியங்கள், கோமகன் பிரிதலில்-அரசன் பிரிந்துசென்றமையால், கோலம்நீத்துஉள-பொலிவிழந்த, தாமரைச்செல்வியும்-திருமகளும், தவத்தைமேவினாள்-தவத்தையடைந்தாள், காமனும்-மன்மதனும், அருந்துயர்க்கடலின்-அரியதுன்பசமுத்திரத்தில், மூழ்கினான் ஆமென-முழுகினவனைப்போல, நிகழ்ந்தது-காணப்பட்டது. எ-று. ௪௨

மண்ணையும்வானையும்வயங்குதிக்கையும்
உண்ணியநிமிர்கடலொக்குமென்பதென்
கண்ணினுமனத்தினுங்கமலத்தண்ணறன்
எண்ணினுநெடிதவணெழுந்தசேனையே.

(இ-ள்.) மண்ணையும்-பூமியையும், வானையும்-ஆகாசத்தையும், வயங்கு-விளங்குகிற, திக்கையும்-திசைகளையும், உண்ணிய-உண்ண, (அழிக்க) நிமிர் கடல்-மேலெழுகின்ற கடலினை, ஒக்கும்என்பதுஎன்-ஒப்பாகும்என்பதுஎன்னை, கண்ணினும்-நேத்திரத்திலும், மனத்தினும்-மனதிலும், கமலத்து அண்ணல்தன்-தாமரைமலரிலிருக்கின்ற பிரமதேவனது, எண்ணினும்-கணிதத்தினும், நெடிது-அப்பாற்பட்டது, அவண்-அவ்விடத்து, எழுந்தசேனை-எழுந்தசைனியங்கள். எ-

அலைநெடும்புனலறக்குடித்தலாலகம்
நிலைபெறநிலைநெறிநிறுத்தலானெடு
மலைகளைமண்ணுறவழுத்தலாற்றமிழ்த்
தலைவனைநிகர்த்ததத்தயங்குதானையே.

(இ-ள்.) அதயங்குதானை - அங்கு விளங்குகின்ற சேனைகள், அலைநெடும் புனல்-அலையினையுடைய மிகுந்தநீரினை, அறக்குடித்தலால்-முற்றிலுங் குடித்தமையானும், அகம்நிலைபெற-அகத்தில்தங்கும்வண்ணம், நிலைநெறி-நிலையாகமார்க்கத்தில், நிறுத்தலால்-நிறுத்தப்பட்டமையால், நெடுமலைகளை-நெடியமலைகளை, மண்உற அழுத்தலால் - மண்ணில்பொருந்துமாறு அழுத்தலாலும், தமிழ்த்தலைவனை-அகத்தியமுனிவனை, ஒத்தது-ஒப்பாயிற்று. எ-று. ௪௪

அறிஞருஞ்சிறிஞருமாதியந்தமாச்
செறிபெருந்தானையுந்திருவுநீங்கலால்
குறியவன்புனலெலாம்வயிற்றிற்கொண்டநாண்
மறிகடலொத்ததவ்வயோத்திமாநகர்.

(இ-ள்.) அறிஞரும்-விவேகிகளும், சிறிஞரும்-சிறியோர்களும், ஆதிஅந்தமா-முதலுங்கடையுமாக, செறி-நெருங்கிய, பெருந்தானையும்-மிக்கசைநியமும், திருவுநீங்கலால் - திருமகளும் விலகிச்செல்லுதலால், குறியவன் - அகத்தியன், புனல்எலாம்-நீர்முழுமையும், வயிற்றிற்கொண்டநாள்-வயிற்றிலடைத்தநாளில், மறிகடல்-அலைகடலை, ஒத்தது-ஒப்பாயிற்று, அவ்வயோத்திமாநகர்-சிறந்தஅயோத்திமாநகரம். எ-று. ௪௫

பெருந்திரைநதிகளும்வயலும்பெட்புறு
மரங்களுமலைகளுமண்ணுங்கண்ணுறத்
திருந்தலிலயோத்தியாந்தெய்வமாநகர்
அருந்தெருவொத்தப்படைசெல்லாறரோ.

(இ-ள்.) பெருந்திரைநதிகளும்-மிகுந்த அலைகளையுடைய ஆறுகளும், வயலும்-வயல்களும், பெட்புஉறு - விருப்பம்பொருந்திய, மரங்களும் - விருட்சங்களும், மலைகளும்-பருவதங்களும், மண்ணுங்கண்ணுற-பூமியுங்காணும்வண்ணம், திருந்தல்இல்-திருத்தமில்லாத, அயோத்திஆம்-அயோத்திஆகிய, தெய்வமாநகர்-தெய்வீகம்பொருந்திய சிறந்தநகரத்தின், அருந்தெருஒத்தது - அரியதெருவினை ஒத்துவிளங்கியது, படைசெல்ஆறு-சேனைகள்செல்லும்வழி. எ-று. ௪௬

தார்கடாங்கோதைதாந்தாமந்தாங்கதை
ஏர்கடாங்கலவைதாங்கமழ்ந்தின்றென்பரால்
கார்கடாமெனமிகக்கடுத்தகைம்மலை
வார்கடாமல்லதம்மன்னன்சேனையே.

(இ-ள்.) கார்கள்தாம்என-மேகங்களேயென்று கூறத்தக்க, கைம்மலை-யானைகளினின்றும், வார்-ஒழுகுகின்ற, கடாம்அல்லது - மதநீரன்றி, அம்மன்னன்சேனை-அந்தபரதாழ்வானாகிய அரசனுடையசைனியத்தில், தார்கள்தாம்-மாலைகளும், கோதைதாம்-கோதையும், தாமம்தாம் - தாமங்களும், தகை - தகுதியான, ஏர்கள்தாம்-அழகுகளும், கலவைதாம்-கலவைகளும், கமழ்ந்தின்றுஎன்பர்-மணம்வீசவில்லையென்பார்கள். எ-று. ௪௭

ஆளுலாங்கடலினாமகன்றவக்கடல்
தோளுலாங்குண்டலமுதலதொல்லணி
கேளுலாமின்னொளிகிளர்ந்ததில்லையால்
வாளுலாநுதலியர்மருங்குற்போலவே.

(இ-ள்.) வாள்உலாம்-ஒளிபொருந்திய, நுதலியர்-நெற்றியினையுடையபெண்களின், மருங்குல்போல-இடையையொப்ப, ஆள்உலாம் - ஆளுலாவுகின்ற, கடலினும்-சமுத்திரத்தினும், அகன்ற - விசாலமான, அக்கடல் - அந்தசேனையாகிய கடலில், தோள்உலாம்-புயத்தில்நின்றுசொலிக்கின்ற, குண்டலம்முதல்-குண்டலமுதலாகிய, அணி-அழகிய ஆபரணங்கள், கேள்உலாம் - ஒன்றுடனொன்று நெருங்கிவிளங்குகின்ற, மின்ஒளி-மின்னற்பிரகாசம், கிளர்ந்தது இல்லை-விளங்கினதில்லை. எ-று. நூல்-நகை. ௪௮

மத்தளமுதலியவயங்குபல்லியம்
ஒத்தனசேறலினுரையிலாமையில்
சித்திரச்சுவர்நெடுஞ்சேனைதீட்டிய
பத்தியைநிகர்த்ததப்படையினீட்டமே.

(இ-ள்.) மத்தளம்முதலிய-மத்தளமுதலான, வயங்கும் பல்இயம்-விளங்காநின்ற பலவாச்சியங்கள், ஒத்தன-ஒத்தனவாய், சேறலின்-சேருதலினால், உரை இல்லாமையில்-பேச்சுஇன்மையால், சுவர்-சுவரில், தீட்டிய-எழுதிய, சேனை-சேனையின்வடிவமான, சித்திரபத்தியை-சித்திரவரிசையை, நிகர்த்தது-ஒத்தது, அப்படையின்ஈட்டம்-அச்சேனையின்கூட்டம். எ-று. ௪௯

ஏடுறுகோதையர்விழியினெய்தகோல்
ஊடுறவுரந்தொளைத்துயிருணாவகை
ஆடவர்க்கரும்பெருங்கவசமாயது
காடுறைவாழ்க்கையைக்கண்ணனண்ணவே.

(இ-ள்.) காடுறைவாழ்க்கை-வனவாசத்தினை, அக்கண்ணன் நண்ண-அவ்விராகவன் அடையாநிற்ப. ஏடுஉறு-இதழ்கள்பொருந்திய, கோதையர்-மலர்மாலையணிந்த பெண்கள், விழியின்-கண்களால், எய்தகோல்-விட்டபார்வையாகிய அம்பு, உரம் - மார்பினை, தொளைத்து ஊடுற - துவாரஞ்செய்து பின்புறஞ்சென்று, உயிர்-பிராணனை, உணாவகை-அருந்ாதவண்ணம், ஆடவர்க்கு-புருடர்களுக்கு, அரும்பெரும்-அரியபெரியகவசமாயிற்று. எ-று. ௫௦

கனங்குழைக்கைகயன்மகளிற்கண்ணிய
சினங்கிடந்தெரிதலிற்றீய்ந்தவேகொலாம்
அனங்கனைங்கொடுங்கணைகடந்தவாடவர்
மனங்கிடந்துண்கிலமகளிர்கொங்கையே.

(இ-ள்.) கடந்தஆடவர் - அயோத்தியைவிட்டு வனநோக்கிச்செல்லும் புருடர்களின், மனம்-மனத்தில், கனங்குழை-குண்டலமணிந்த காதினளான, கைகயன்மகளில்-கைகேயினிடத்தில், கண்ணியசினம் - அடைந்த கோபம், கிடந்து எரிதலில்-கிடந்து எரிதலால், அனங்கன் - மன்மதனுடைய, ஐங்கொடுங்கணை-ஐந்தாகிய கொடியஅம்புகள், தீய்ந்தகொல்ஆம்-கரிந்தனபோலும், மகளிர்கொங்கையை-அதனாற்றான் மடவார்தனங்களை, கிடந்துஉண்கில - கிடந்து அநுபவிக்கின்றல. எ-று. ௫௧

இன்னணநெடும்படையேகவேந்தனும்
தன்னுடைத்திருவரைச்சீரைசாத்தினன்
பின்னிளையவனொடும்பிறந்ததுன்பொடும்
நன்னெடுந்தேர்மிசைநடத்தன்மேயினன்.

(இ-ள்.) இன்னணம்-இந்தப்பிரகாரம், நெடும்படை-மிகுந்த சைநியங்கள் செல்லாநிற்ப, வேந்தனும்-பரதாழ்வானும், தன்னுடை-தன்னுடைய, நெடுஅரை-நெடியஅரையில், சீரைசாற்றினன் - மரவுரியைத்தரித்தான், பின்இளையவனொடும்-பின்னேவராநின்ற சத்துருக்கனுடனும், பிறந்ததுன்பொடும் - உண்டாகிய விசனத்துடனும், நல்நெடும்தேர்மிசை-நல்லநெடியதேரின்மீது, நடத்தல்மேயினன்-போயினன். எ-று. ௫௨

தாயருமருந்தவத்தவருந்தந்தையின்
ஆயமந்திரியருமளவில்சுற்றமும்
தூயவந்தணர்களுந்தொடர்ந்துசூழ்வரப்
போயினன்றிருநகர்ப்புரிசைவாயிலே.

(இ-ள்.) தாயரும்-அன்னைமார்களும், அருந்தவத்தவரும்-அரியதவத்தினையுடையவர்களும், தந்தையின்ஆய - பிதாவினிடத்திருந்த மந்திரிமார்களும், அளவுஇல்சுற்றமும்-அளவில்லாத சுற்றத்தினரும், தூயஅந்தணர்களும்-பரிசுத்தர்களானமறையவர்களும், தொடர்ந்து-தொடாநின்று, சூழ்வர-சூழ்ந்துவராநிற்ப, திருநகர்-ஸ்ரீஅயோத்தியின், புரிசைவாயில்-கோட்டைவாசலுக்கு, போயினன்-சென்றான். எ-று. ௫௩

மந்தராக்கூற்றமும்வழிச்செல்வாரொடும்
உந்திபோதல்கண்டிளவலோடியார்த்
தந்தரத்தெற்றுவானமுன்றுபற்றலும்
சுந்தரத்தோளவன்விலக்கிச்சொல்லுவான்.

(இ-ள்.) மந்தரை-மந்தரையென்கின்ற, கூற்றமும்-யமனும், வழிசெல்வாரொடும்-வழியேபோகுமவர்களுடன், உந்தியேபோதல்கண்டு - விரைந்துபோதலைப்பார்த்து, இளவல் - சத்துருக்கன், ஆர்த்தோடி - ஆரவாரஞ்செய்துக்கொண்டோடி, அந்தரத்து எற்றுவான் - மேலேதூக்கி எறிதற்கு, அழன்றுபற்றலும்-கோபித்துப்பிடித்தலும், சுந்தரத்தோள்அவன் - அழகியதோளினனான பரதாழ்வான், விலக்கி-தடுத்து, சொல்லுவான்-உரைப்பான். எ-று. ௫௪

முன்னையர்முறைகெடமுடித்தபாவியைச்
சின்னபின்னஞ்செய்தென்சினத்தைத்தீர்வெனேல்
என்னையின்றென்னையன்றுறக்குமென்றலால்
அன்னையென்றுணர்ந்திலெனையநானென்றான்.

(இ-ள்.) முன்னையர்-பூர்வீகர்களின், முறைகெட-முறைமைகெடுதியாக, முடித்தபாவியை-அழித்தபாவியை, சின்னபின்னஞ்செய்து-சின்னபின்னஞ்செய்து, என்சினத்தை - எனது கோபத்தினை, தீர்வெனேல் - நீக்கிக்கொள்ளுவேனானால், என்னை-என்றனை, இன்று-இந்நாளில், என் ஐயன் - எனதுசுவாமி, துறக்கும்என்று அலால்-வெறுக்கும் என்றன்றி, ஐய-ஐயனே, நான் - யான், அன்னை என்று-தாயென, உணர்ந்திலன்-எண்ணுகின்றேனில்லை, என்றான்-என்றுகூறினான். எ-று. ௫௫

ஆதலான்முனியுமென்றையனந்தமில்
வேதனைக்கூனியைவெகுண்டுமென்னினும்
கோதிலாவருமறைகுலவுநூல்வலாய்
போதுநாமென்றுகொண்டரிதிற்போயினான்.

(இ-ள்.) அந்தமில்-அளவற்ற, வேதனை-துன்பத்தினையுண்டாக்கிய, கூனியை - இம்மந்தரையை, வெகுண்டும்என்னினும் - கோபித்தோமானாலும், ஐயன்-ஸ்ரீராமபிரான், முனியும்ஆதலால்-கோபித்துக்கொள்ளுவானாதலின், கோதிலா-குற்றமற்ற, அருமறை-அரியவேதங்கள், குலவும்-விளங்குகின்ற, நூல்வலாய்-வைதிகநூல்களில் வல்லவனே, கொண்டுபோதும் - கொண்டுபோவோம், நாம் அரிதில் என்று-நாமருமையாக என்று, போயினான்-போனான். எ-று. ௫௬

மொய்பெருஞ்சேனையுமூரிஞாலமும்
கய்கலந்தயலொருகடலிற்சுற்றிட
அய்யனுந்தேவியுமிளையவாளியும்
வய்கியசோலையிற்றுனும்வைகினான்.

(இ-ள்.) மொய்பெருஞ்சேனையும் - நெருங்கிய சைந்நியங்களும், மூரிஞாலமும் - உயர்ந்தமந்திரியாதிமனிதர்களும், கய்கலந்து அயல் - பகுதியாகவருதலைவிட்டு, அயலில் ஒருகடலிற்-ஒருசமுத்திரத்தைப்போல, சுற்றிட - சூழாநிற்ப, ஐயனும்-ஸ்ரீராமபிரானும், தேவியும்-சானகியும், இளையஆளியும் - இளஞ்சிங்க

மானஇலக்குமணனும், வைகிய-தங்கிஇருந்த, சோலையில்-பொழிலில், தானும்-பரதாழ்வானும், வைகினன்-தங்கிஇருந்தான். எ-று. ௩௭

அல்லணைநெடுங்கணீ ரருவியாடினன்
கல்லணைகிழங்கொடுகனியுமுண்டிலன்
வில்லணைத்துயர்ந்ததோள்வீரன்வைகிய
புல்லணைமருங்கிற்றான்பொடியின்வைகினன்.

(இ-ள்.) அல்அணை-கருமைபொருந்திய, நெடுங்கணீர்-நீண்டகண்ணினின்றும் ஒழுகுகின்ற நீராகிய, அருவிஆடினன் - அருவியிற்குளித்தான், கல்லணைகிழங்கொடு-கற்களிற்பொருந்திய கிழங்குகளுடன், கனியும்-பழங்களும், உண்டிலன்-அருந்தினானில்லை, வில்லணைத்துயர்ந்த-வில்லேந்தி உயர்ந்த, தோள்வீரன்வைகிய-புயங்களையுடைய ஸ்ரீராமபிரானெழுந்தருளியிருந்த, புல்லணைமருங்கில்-புல்லாசனத்தினருகில், தான்பொடியில் வைகினன்-தான் புழுதியிலிருந்தான். எ-று. ௩௮

ஆண்டுநின்றண்டைகயடியிலேகினான்
ஈண்டியநெறியெனத்தானேகினான்
தூண்டியதேர்களுந்துரகராசியும்
காண்டருகரிகளுந்தொடரக்காலினே.

(இ-ள்.) ஆண்டுநின்று - அவ்விடத்துநின்றும், ஆண்டகை அடியில் ஏகினன் - ஸ்ரீராமபிரான் பாதசாரியாகச்சென்றான், ஈண்டியநெறிஎன-நெருங்கிய வனவழியிலென்று, தூண்டிய-ஓட்டிய, தேர்களும்-இரதங்களும், துரகராசியும்-குதிரைவரிசைகளும், காண்டரு-காணத்தக்க, கரிகளும்-யானைகளும், தொடர-பின்தொடர்ந்துவராநிற்ப, தானும்-பரதாழ்வானும், காலின்ஏகினன்-பாதசாரியாகச்சென்றான். எ-று. ௩௯

௧௦-வது, ஆற்றுப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௧௯.



உ

பரமபதி துணை.

# கம்பராமாயணம்.



இது கம்பரது ராமாயணமெனச் செய்யுட்கிழமைப் பொருட்பிறிதின்கிழமைப்பொருளில் வந்த ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். ராமாயணம் ஸ்ரீராமருடைய புகழைக் கூறுநூல் எனக் காரணம் பற்றிவந்த முதனூற்பெயரே வழிநூலாகிய இந்நூற்குங் காரணக்குறியாய் வந்தது. நிலைமொழியீற்றுயிர் மெய்கெடுதல் "பொதுப்பெயருயர்திணை" என்றசூ—இல் "சிலவிகாரமா முயர்திணை" என்றவிதியால்.

## அயோத்தியாகாண்டம்.

அயோத்திமாநகரத்தில் (நிகழ்ந்தசெய்தியை உணர்த்தும்) பாகமென விரிதலால் உருபும்பயனும் உடன்தொக்க ஏழாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடராய் இருசொல் ஒருசந்தியாய்நின்றன. இவ்வாறு வருதலையெல்லாம் ஒருங்குபலதொகுதல் என்பார் இலக்கணக்கொத்து நூலார். அயோத்தியாகாண்டம் இரண்டும் வடசொற்களாதலால் "இயல்பினும்விதியினும்" என்றசூ—ஆல் உயிரீற்றின் முன்வருமொழிமுதல் வல்லெழுத்துமிகாது "இடையுரிவடசொலின்" என்றசூ—ஆல்வருமுதல் வல்லெழுத்து இயல்பாய்நின்றது. அயோத்தியாயுத்தத்தினின்றுங் கடந்தது.

## குகப்படலம்.

இது இராமமூர்த்தி தமது தந்தைவாக்கியத்தைப் பாதுகாத்தற்பொருட்டு மணிமுடிதுறந்து சடாமுடிபுனைந்து வனத்திற்குச் செல்லுங்கால் அவர்க்கு உயிர்த்தோழனான குகன்கண்டவிடத்து நிகழ்ந்த செய்தியைக் கூறும்படலமாதலால், குகனதுசெய்தியையுணர்த்தியசமூகம் என நிற்றலினால் இருசொல் ஒருசந்தியாயுருபும்பயனுந்தொக்க ஆறாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். இதுவும் உருபும் பொருளும் ஒருங்குபல தொகுதல். படலம்சமூகம். குகப்படலம் "சிலவிகாரமாமுயர்திணை" என்ற சூத்திரத்தால் நிலைமொழியீற்று மெய்கெட்டு விதியீறாய்நின்ற உயிர்முன் "இயல்பினும்விதியினுநின்ற வுயிர்முன் கசதபமிகும்" என்ற சூத்திரத்தால் வருமொழிமுதல் வல்லெழுத்துமிகுந்தது.

தமதுபிதாவினனுஞைப்பால் மூதாதையைக் காணச்சென்ற பரதாழ்வார் கேகயநாட்டிலிருந்தபொழுது கைகேசி சூழ்ச்சியால் இராமமூர்த்தி வனம்புகுந்த செய்தியைச் சுமந்திரன்கூற, உயிர்துறந்த தசரதசக்கரவர்த்தியின் திருமேனியைத் தைலத்திலிட்டு வசிட்டர் முதலியோர் தமக்கு ஒற்றராலுணர்த்த, அங்கு நின்று அயோத்திக்குச் சத்துருக்கப்பெருமானோடு வந்து அங்கு நிகழ்ந்த

தைத்தெரிந்து தமது பிதாவின் கடனைமுடித்து இராமமூர்த்தியைக் கொணர்ந்து அரசியலைத் தருவேனென்று அரசியலைத் துறந்து மரவுரிபுனைந்து தாய்மார் முதலியரோடு சேனைசூழ வனம்புகுந்து.

கலி விருத்தம்.

பூவிரிபொலன்கழற்புனைவிற்றானையான்
காவிரிநாடன்னகழனிநாடொரீஇத்
தாவரசங்கமமென்னுந்தன்மைய
யாவையுமிரங்கிடக்கங்கையெய்தினான்.

(இ-ள்.) பூவிரி பொலன் கழல் புனைவில் தானையான் - பொலிவுமிக்க பொன்னாலாகிய வீரகண்டை கட்டிய வில்லேந்திய சேனையையுடைய பரதாழ்வார், காவிரிநாடு அன்ன கழனிநாடு ஒருவி - காவிரிசூழ்ந்த சோணாட்டை யொத்த வயல்சூழ்ந்த அயோத்திநாட்டினின்று நீங்கி, தாவரசங்கமம் என்னும் தன்மைய யாவை உம் - நிலையியற்பொருளும் இயங்கியற்பொருளுமாகிய தன்மையை யுடைய எல்லாவுயிர்களும், இரங்கிட கங்கை எய்தினான் - வருந்தக் கங்கைக் கரையை யடைந்தார்.

ரதகசதுரகபதாதியென்னு . . . . . . . சேனையாகி வில்லும் வாளும் ஏந்திய இருவகைச்சேனைகளாயு . . . . . . . சேனைகளெனக் கூறுதலால் விற்றானையான் எனவு . . . . . . . . . கடையப்பபயின்னையு மிருந்தநாடு சோணாடாதலால் காவிரிநாடன்ன கழனிநாடு எனவுங் கூறினார். தாவரம் அசரம், சங்கமம் சரம். ஒருவி என்னும் வினையெச்சம் ஈறுதோன்ற ஒரீஇ யென விகாரப்பட்டு நின்றவாய் சொல்லிசை நிறைத்தலில் வந்த வுயிரளபெடை. கங்கைக்கரையை விடாது நிற்றலால் விடாத இலக்கணை. பொன் என்னுஞ் சொல்வருமொழிமுதல் வல்லெழுத்து வர ஈற்றெழுத்துக்கெட்டு லகரமும் மகரமும் தோன்றும், தோன்றியமகரம் னகரமாகத்திரிதல போலி. "பொன்னென்கிளவி யீறுகெட முறையின் - முன்னர்த்தோன்றும் லகாரமகாரம் - செய்யுண் மருங்கிற்றொடரியலான" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால், வன்கணமன்றி யேனைக்கணங்கள் வந்து இவ்வாறு வரும் இடந்தோறும் இவ்விதியேகொள்க.

எண்ணருஞ்சுரும்புதம்மினத்துக்கல்லது
கண்ணகன்பெரும்புனற்கங்கையெங்கணும்
அண்ணல்வெங்கரிமதத்தருவிபாய்தலால்
உண்ணவுங்குடையவுமுரித்தன்றாயதே.

(இ-ள்.) கண் அகன் பெரும்புனல் கங்கை எங்கண் உம் — இடம் (பரந்த) பெரிய நீர்மயமாகிய கங்காநதிமுற்றும், அண்ணல் வெம்கரிமதத்து அருவிபாய்தலால் — பெருமையமைந்த கொடிய யானையின் மதவெள்ளம் பாய்தலால், எண் அருஞ்சுரும்பு தம் இனத்துக்கு அல்லது — அளவிடுதற்கரிய வண்டுகளின் கூட்டத்துக்கன்றி, உண்ண உம் குடைய உம் உரித்து அன்று ஆயது — மற்றையுயிர்கள் பருகவும் மூழ்கவும் (அக்கங்கை) உரிததல்லாததா யிருந்தது.

(இ-ள்.) ஆன்றவர் உணர்த்திய—அறிவிற்பெரியோரானளவறுத்த, மூன்று பத்து ஆயிரத்து இரட்டி அக்குரோணிகள் முற்றும்—அறுபதினாயிரம் அக்குரோணி சேனை முழுதும், காண்தலை நண்ணிய காளை பின்படர் தோன்றலை—காட்டிற்சென்ற இராமமூர்த்தியின் பின்சென்ற பரதாழ்வானை, அவழிதொடர்ந்துசென்றன—அக்காட்டிடத்துப் பின்பற்றிச் சென்றன.

ஆன்றவர் உரிச்சொல்லடியாகப் பிறந்த இறந்தகால வினைமுற்றுப்பெயர் ஆல் (மிகுதி) பகுதி, நகரமெய் இடைநிலை, அ சாரியை, லகரத்திரிபும் வகர தோற்றமும் சந்தி, அர் பலர்பால் விகுதி. நண்ணிய இறந்தகாலத் தன்வினைப் பெயரெச்சம் நண் பகுதி, கடைக்குறையாய் நின்ற இன் இறந்தகாலவிடைநிலை, யகரத்தோற்றம் சந்தி, அ எச்சவிகுதி. உணர்த்திய இறந்தகாலப் பிறவினைப்பெயரெச்சம் உணர்த்து பிறவினைப்பகுதி. ரு

அப்படைகங்கைகயையடைந்தவாயிடைத்
துப்புடைக்கடலினீர்சுமந்தமேகத்தை
ஒப்புடையண்ணலோடுடற்றவேகொலார்
இப்படையெடுத்ததென்றெழுந்தசீற்றத்தான்.

(இ-ள்.) அ படை கங்கையை அடைந்த ஆயிடை—அந்தச்சேனை கங்கைக் கரையையடைந்த அவ்விடத்தில், துப்பு உடைய கடலின் நீர் சுமந்தமேகத்தை ஒப்பு உடைய அண்ணலோடு—பவளங்களையுடைய கடலினீரைப் பருகிச் சூற்கொண்ட மேகத்தினைப்போன்ற இராமமூர்த்தியோடு, உடற்ற ஏ இப்படை எடுத்தது என்று எதிர்த்த [illegible]—போர்செய்யவே இந்தச்சேனையை யெடுத்துவந்ததென்று வந்து மேலெழுந்த கோபத்தை யுடையவனும்.

இதுமுதல் கூபினுன் என்பதுகாறும் ஒருதொடராதலால் குளகம். படை கருவிப்பொருளில்வந்த தொழிற்பெயர் படு பகுதி, உகரக்கேடு சந்தி, ஐ தொழிற்பெயர்விகுதி. ஒப்பு உவம வுருபிடைச்சொல்லடியாகப் பிறந்த தொழிற்பெயர் ஒ இடைச்சொற்பகுதி, பகரமெய் சந்தி, பு விகுதி. உடைய செயப்படுபொருள் குன்றாத தொழிற் பண்படியாகப் பிறந்த குறிப்பு வினைப்பெயரெச்சம் இது ஈறு தொக்கு நின்றது. சு

குகனெனப்பெயரியகூற்றினாற்றலான்
தொகைமுரட்சேனையைத்துகளினோக்குவான்
நகைமிகக்கண்கள்தீநாறநாசியில்
புகையுறக்குனிப்புறும்புருவப்போர்விலான்.

(இ-ள்.) குகன் என்ன பெரிய கூற்றின் ஆற்றலான்—குகனென்னும் பெயரையுடைய இயமனையொத்த வலியையுடையவனும், தொகைமுரண்சேனையை துகளின்நோக்குவான்—முற்கூறிய தொகையையுடைய வலியபரதாழ்வான் சேனையைத் தூளிபோல இலேசாகக் கடைக்கணிப்பவனும், நகைமிக கண்கள் தீநாற நாசியில் புகை உற—பெருஞ்சிரிப்புத்தோன்றவும், கண்களில் கோபாக்கினிபறக்கவும், நாசியிற் புகையெழவும், குனிப்புறும் புருவப்போர்வில்லான் வளைந்த புருவமாகிய போர்த்தொழிற்கமைந்த வில்லையுடையவனும்.

பெயரிய பெயரடியாகப்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம் பெயர்பகுதி, இ சாரியை, யகரமெய் சந்தி, அ எச்சவிகுதி, குனிட்புறம் ஒருசொல். எ

மையுறவுயிரெலாமிறுதிவாங்குவான்
கையுறுகவரயில்பிடித்தகாலன்றான்
ஐயைநூறாயிரமுருவமாயின
மெய்யுறுதானையான்வில்வின்கல்வியான்.

(இ-ள்.) உயிர் எல்லாம் மைஉற இறுதி வாங்குவான்—உயிர்களெல்லாந் தீங்கடைய முடிவுசெய்யும்படி, கைஉறு கவர் அயில்பிடித்த காலன்தான்—கையிற்பொருந்திய சூலத்தைப்பற்றிய இயமனொருவன், நூறு ஐயைஆயிரம் உருவம் ஆயின—கொல்லுதற்கு இருபத்தையாயிரம் உருவெடுத்த தேகத்தையுடைய சேனையையுடையவனும வில்வித்தைபயின்றவனும்.

பிளவுபட்ட வேலாதலாற் சூலத்தைக்கவரயில் என்றார். வாங்குவான் எதிர்காலவினையெச்சம் வாங்கு பகுதி, வான் எச்சவிகுதி. கையுறு என்றது தொழிலடை. கங்கைப்படலத்தில் "ஐயிருபதனைந்தோ டாயிரருளர்" என வருதல்காண்க. அ

கட்டியசுரிகையன்கடித்தவாயினன்
வெட்டியமொழியினன்விழிக்குந்தீயினன்
கொட்டியதுடியினன்குறிக்குங்கொம்பினன்
கிட்டியதமரெனக்கிளர்ந்ததோளினான்.

(இ-ள்.) கட்டிய சுரிகையன்— (வட்டுடையில்) கட்டிய உடைவாளையுடையவனும், கடித்தவாயினன் - மென்ற தாகரும்வாயை யுடையவனும், வெட்டிய மொழியினன் - கத்திவெட்டைப்போலுங் கடுஞ்சொல்லையுடையவனும், விழிக்கும் தீயினன் - தீப்பறக்கப் பார்க்குங் கோபப்பார்வையையுடையவனும், கொட்டியதுடியினன் குறிக்கும் கொம்பினன் - போர்ப்பறை கொட்டுகின்றவனும் சிங்கநாதஞ்செய்கின்றவனும், அமர்கிட்டியது என்ன கிளர்ந்த தோளினான்- போர்வந்ததென்று விளங்குந்தோளையுடையவனுமாகி.

கொட்டிய துடியினன் குறிக்குங்கொம்பினன் என்றது "கொடிச்சேவலான்" என்பதுபோல் நிலைமாறுதலில்வந்த பொருந்தாமில்புணர்ச்சி. துடிகொட்டினன், கொம்புகுறித்தனன் என நிற்றலால். சிங்கநாதம் மிருகத்தின்கொம்பாற் செய்த ஊதுகொம்பில் ஒலியெழுப்புதல். கூ

எலியெலாமிப்படையரவம்யானென
ஒலியுலாஞ்சேனையையுவந்துகூயினான்
வலியுலாமுலகினில்வாழும்வள்ளுகிர்ப்
புலியெலாமொருவழிபுகுந்தபோலவே.

(இ-ள்.) இபடையெல்லாம் எலி—இந்தப்பரதாழ்வான் சேனையெல்லாம் எலி, யான் அரவம் என்ன - நான்பாம்பென்று, ஒலி உலாம் சேனையை உவந்து கூயினான்—ஒலிமிக்க தனது சேனையைச்சந்தோஷித்து விளித்தான், வலி உலாம் உலகினில் வாழும்வள் உகிர்புலி எல்லாம் உலகினில் புகுந்ததுபோல- வலிமைமிகுந்த நிலவுலகில் வாழுங் கூரியநகத்தையுடைய புலிகளெல்லாமோரிடத்தில்வந்து புகுந்தனபோலவும்.

தானையான் முதல்தோன்றினான் என்பதுகாறுமுள்ள குறிப்பு முற்றுகளைச் சினைவினைக் கூயினான் என்னும் வினைமுற்றின் முதனிலையைத் தனித்தனிகொண்டன. கூயினான் இறந்தகாலத்தெரிநிலை வினைமுற்று. கூவு பகுதி, ஈறுகெடுதலும், பகுதியல்லாதன இடைச்சொற்களாதலால் இடையுரி வடசொலான்வந்த யகரத்தோற்றமும் சந்தி, இன் இடைநிலை; ஆன் ஆண்பால் விகுதி உவந்து இறந்தகாலவினையெச்சம் உவ பகுதி இப்படையெல்லாம் எலி யான் அரவம் என்னும் உலக வழக்குச்சொல் படை எளிது, நான்வலியன் என்னுங் கருத்தையுட்கொண்டிருத்தலால்வல்லோர் நவிற்சியணி. இதனைவடநூலார் சேகோத்தியலங்காரம் என்பார். ௧0

மருங்கடைதென்கரைவந்துதோன்றினான்
ஒருங்கடைநெடும்படையொல்லென்னார்ப்பினோ
டருங்கடையுகந்தனிசையனிபாமழை
கருங்கடல்கிளர்ந்தெனக்கலந்துசூழவே.

(இ-ள்.) ஒருங்கு அடைநெடுமபடை ஒல்லென் ஆர்ப்பினோடு—ஒருசேர அடைந்த நெடியசேனையொல்லென்றொலிப்பினோடு, அருங்கடையுகம் தன் இல்—அடைதற்கரிய யுகமுடிவில், அசனி பாமழை கருங்கடல் கிளர்ந்தால் என்ன கலந்து சூழ - இடியேற்றையுடைய கரியமேகமும பெரிய கடலும் நிலைபெயர்ந்து வந்தாற்போலத் தன்னைக்கலந்துசூழ, மருங்கு அடைதென்கரைவந்து தோன்றினான் - கங்கையின் பக்கத்திற்பொருந்திய தென்கரையில்வந்து குகன் தோன்றினான்.

போல, என்ன என்னும் உவம உருபிடைச சொல்லடியாகப்பிறந்த வினையெச்சங்கள் சூழ என்னும் வினையெச்சத்தின் முதனிலையைத் தனித்தனி கொண்டன. அவ்வினையெச்சம் தோன்றினான் என்னும் பிறவினைமுதல் வினைமுற்றுப் பெயரைக்கொண்டது. இதுவுங் குமாகர். இது பலபொருளுவமையணி. ௧௧

தோன்றினபுளிஞரைநோக்கிச்சூழ்ச்சியின்
ஊன்றியசேனையையும்பரேற்றுதற்
கேன்றனனென்னுயிர்த்துணைவற்கீகுவான்
ஆன்றபேராசுநீரமைதிராமென்றான்.

(இ-ள்.) தோன்றின புளிஞரைநோக்கி—வந்தவேடர்களைப்பார்த்து, சூழ்ச்சியின் ஊன்றிய சேனையை - வினையத்தோடு இராமமூர்த்தியினோடு போர் செய்தற்கு வந்திருந்த சேனையினை, உம்பர் ஏற்றுதற்கு ஏன்றனன்—விண்ணுலகத்திலேற்றுதற்குச் சமைந்தேன், என் உயிர் துணைவற்கு ஆன்றபேர் அரசு ஈகுவான் நீர் அமைதிர் என்றான் - எனது உயிர்போன்ற துணைவராகிய இராமமூர்த்திக்கு அமைந்த பெரிய அரசியலைத்தர அமைவீரென்று குகன் கூறினான்.

என்னுயிர் உயிருந்தாலும் வேறன்மையால் ஒற்றுமைக் கிழமைப்பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். ஊன்றிய, ஆன்ற இறந்தகாலப் பெயரெச்சங்கள். ஊன்று, ஆல் பகுதிகள். ஏற்றனென் தன்மை

யொருமை யிறந்தகாலவினைமுற்று எல் பகுதி, லகரத்திரிபு சந்தி, றகரமெய் இடைநிலை, அன் சாரியை, என்விகுதி. அமைதிர் முன்னிலை யேவற்பன்மை யெதிர்காலவினைமுற்று அமைபகுதி, தகரமெய் இடைநிலை, இர்விகுதி. தகர மெய் எதிர்காலத்தில்வந்தது. கஉ

துடியெறிநெறிகளுந்துறையுஞ்சுற்றுற
ஒடியெறியம்பிகள்யாதுமோட்டலிர்
கடியெறிகங்கையின்கரைவந்தோர்களைப்
பிடியெறிபடவெனப்பெயர்த்துங்கூறுவான்.

(இ-ள்.) துடி எறி—பாலைநிலப் பறையையடி, நெறிகள் உம்துறை உம்சு ற்றுற ஒடி எறி - வழிகளிலு நீர்த்துறைகளிலுஞ்சூழ மிருகங்களைப் படுக்கும் வலைகளையெறி, அம்பிகள்யாதும் ஒட்டலிர் - படவுகளிலொன்றையேனு மோ ட்டாதொழிமின், கடிஎறி - காவல்போக்கு, கங்கையின் கரைவந்தோர்களைபிடி படஎறி - கங்கைக்கரையில் வந்தவர்களைப் பிடிபடும்படிகொல்லு, என்றுபெய ர்த்து கூறுவான் - என்றுமுன்புகூறிப் பின்னுங்கூறுவான்.

தன்சேனைகளிலுள்ள வொவ்வொருவருக்கும் பணித்தலால் எறி பிடிஎனத் தொழிற்படுத்திக்கூறினான். றிவை முன்னிலை யொருமையேவல் வினைமுற்று. [illegible]-லிர் எதிர்மறைமுன்னிலைப் பன்மை யேவல்வினைமுற்று. ஒட்பெகுதி, அல் எதிர்மறைவிகுதி, உகரக்கெடுசந்தி. அ[illegible]நம் ஒருபகுதி, இர் விகுதி. கங

கலிநிலைத்துறை.

அஞ்சனவண்ணனென்னுயிர்நாயகனாளாமே
வஞ்சனையாலரசெய்தியமன்னரும்வந்தாரே
செஞ்சரமென்பனதீயுமிழ்கின்றனசெல்லாவோ
உஞ்சிவர்போய்விடினாய்குகனென்றெனையேசாரோ.

(இ-ள்.) அஞ்சனம் வண்ணன்என் ஆர் உயிர் நாயகன் ஆளாமே—கரியநிறத் தையுடையவனும் எனதுஅரிய வுயிர்க்குத் தலைவனுமாகிய இராமமூர்த்தி யரசா ளாமல், வஞ்சனையால் அரசு எய்திய மன்னரும்வந்தார் ஏ—தமது தாய்செய்த வஞ்சனையினா லரசியலடைந்த அரசர்களு மிப்போது போர்க்குவந்தாரே, செ ஞ்சரம் என்பன தீஉமிழ்கின்றன செல்லாவு - எனது கையிலேந்திய வுதிரந் தோய்ந்த அம்புகளென்று சொல்லப்பட்டவை நெருப்பைக்கக்குகின்றன அவை இவர்கண்மேல் சைக்காமற்போகுமா, இவர் உஞ்சுபோய்விடில் - இராமமூர்த்தி யோடு போர்க்குவந்த இவர்கள் என்கையினின்றுந் தப்பிப்போய்விட்டால், குக ன்நாய்என்று என்னை ஏசார் ஓ - குகனென்பவன் ஒரு நாயென்று என்னையிகழ் ந்து பிறர்கூறாரா.

ஆளாமே எதிர்மறைவினையெச்சம் ஆள் பகுதி, ஆ எதிர்மறைவிகுதி, அனை த்தும் ஒருபகுதி, மே எச்சவிகுதி. செஞ்சரம் பகைவ ருதிரந்தோய்ந்த அம்பு என்பார் செஞ்சரம்என்றார் இது குறிப்பு "முன்னத்தினுணருங் கிளவியுமுள வே" என்ற சூத்திரத்தால், ஏகாரம் இழிவின்மேல்நின்றது. ஓகாரம் விளுப்

பொருளன. உய்ந்து உஞ்சபோலி ஒதாரோ எனப்பாடங்கொண்டு சொல்லா ரோ எனவும் பொருள்கூறுதலமையும். கச

ஆழநெடும்புனல்கங்கைகடந்திவர்போவாரோ
வேழநெடும்படைகண்டுவிலங்கிடும்வில்லாளோ
தோழமையென்றவர்சொல்லியசொல்லொருசொல்லன்றோ
ஏழமைவேடனிறந்திலனென்றெனையேசாரோ.

(இ-ள்.) ஆழம்நெடும்புனல் கங்கைகடந்து இவர்போவார் ஒ—ஆழ்ந்தநெடிய நீர்மயமாகிய கங்கையைத்தாண்டி யிவர்களெவ்வாறு போவார்களோ, வேழம் நெடும்படைகண்டு விலங்கிடும் வில்ஆள் ஒ - யானைகள் நெருங்கிய நெடிய சேனையைக்கண்டஞ்சிப்பின் வாங்கும்வில்வீரனே நான், தோழமையென்று அவர் சொல்லியசொல் ஒருசொல்அன்றுஒ - எனக்குநட்பினனீயென்று இராமமூர்த்தி கூறியசொல் ஒப்பில்லாதசொல்லல்லவா, ஏழமைவேடன் இறந்திலன்என்று என்னைஏசார்ஒ - ஏழமைத்தன்மையையுடையவேடன் (அவ்வார்த்தையின் பொருட்டாவது) போரிற்புறங்கொடாது இவர்கள்பொருட்டு உயிர்விட்டிலனென்று என்னைநிந்தியார்களா.

இராமமூர்த்தியால் வேடன் நமக்குத்தோழனென்ற வார்த்தைதனக்கோரடைதற்கரிய செல்வமாதலால் ஒருசொல்லன்றோவெனவும், அப்பெருஞ்செல்வம்பெற்ற யானிவர்களிமித்த முயிர்விடேனாயின் என்னினுங் கடைப்பட்டவரிலையாதலால் என்னையேசாரோ வெனவுங்கூறினன். ஒகாரங்கள் வினாப்பொருளன. கரு

முன்னவனென்றுநினைந்திலன்மொய்புலியன்னானோர்
பின்னவனின்றனனென்றிலனன்னவைபேசானேல்
என்னிவனென்னையிகழ்ந்ததிவ்வெல்லைகடந்தன்றோ
மன்னவர்நெஞ்சினில்வேடர்விடுஞ்சரம்வாயாவோ.

(இ-ள்.) முன்னவன்என்றும் நினைந்திலன்—(இராமமூர்த்தி) தனக்கு முன்பிறந்தவனென்று நினைக்கிலன், மொய்புலிஅன்னான் - நெருங்கிய புலியையொத்த இளையபெருமாள், ஓர்பின்னவன் - தனக்கு இளையவர்களுளொருவன் நின்றனன் என்றிலன் - நிற்கின்றனனென்றும் நினைக்கிலன், அன்னவைபேசானேல் - அவைகளைக் கருதானாகில், என் - இவன் பெருமையென்ன பயன்படும், இவன் என்னைஇகழ்ந்தது இ எல்லைகடந்தால் அன்று ஒ - இப்பரதாழ்வான் தன் மூத்தோனுக்குத்துணைவனாகிய என்னையு மொருபொருளாகக் கருதாதது இந்தக்கங்கையைக்கடந்தாலல்லவா, மன்னவர்நெஞ்சின் இவ்வேடர்விடும்சரம் வாயாஒ - அரசர்களது மார்பில் வேடர்களெய்யும் அம்புதைக்காமற்போமா.

கடந்தால்என்னும் எச்சத்தினீறுதொகுதல் செய்யுள்விகாரம். என்னவனென்றதுகுறிப்புமுற்று இது இடைக்குறையாய்நின்றது. கசு

பாவமுமின்றபெரும்பழியும்பகைகண்போடும்
ஏவமுமென்பவைமண்ணுலகாள்பவரெண்ணுரோ

ஆவதுபோகவென்னாருயிர்த்தோழமைதந்தான்மேல்
போவதுசேனையுமாருயிருங்கொடுபோயன்றோ.

இ-ள். மண்ணுலகு ஆள்பவர்-நிலவுலகையாளுமரசர்கள், பாவம்உம்நின்ற பெரும்பழியும்பகையும் நண்புஉம்எவைஉம்என்பவைஎண்ணார்ஓ-பாவச்செயலும் அதனால் நிலைபெறும் பெரியபழியும் பகையும் நட்பும் பிறர்வருத்தமும் என்று சொல்லப்பட்டவைகளைக் கருதமாட்டாரோ, ஆவதுபோக-அதுகிடக்க, என்ஆர் உயிர் தோழமைதந்தான்மேல்-எனதுபெறுதற்கரிய வுயிரோடு நட்புக்கொண்ட இராமமூர்த்தியோடு, சேனையும்போவது-தானும் சேனையும் போர்க்குச்செல்லு தல், ஆர் உயிரும் கொடுபோய் அன்றுஓ-(எனது கையம்புக்குத்தப்பி) தமதுபெ றுதற்கரிய வுயிர்கொண்டுபோயல்லவா.

ஓடு ஆசைநிறைத்தலில் வரும் இடைச்சொல். என் கையம்புக்குத் தப்பி இசையெச்சம். தாமும் என்றது மண்ணுலகாள்பவரை. பகையென்பதில்-எண் ணும்மை தொகுத்தல். ஆருயிர் அருமையென்னும் பண்புவருமொழிமுதலுயிர் வர ஈறுகெட்டு முதல்நீண்டது. நிறைந்தனைப் பொருள்கொண்டால் வினைத் தொகை நிலைத்தொடர். உயிரும்என்றதில் உம்மை அசைநிலை. ௧௭

அருந்தவமென்றுணையாளவிவன்புவியாள்வானோ
மருந்தெனினன்றுயிர்வண்புகழ்கொண்டுபின்மாயேனோ
பொருந்தியகேண்மையுகந்தவர்தம்மொடுபோகாதே
இருந்ததுநன்றுகழிக்குவெனென்கடனின்றேயே.

இ-ள். என்துணை அருந்தவம்ஆள - எனக்குத்துணைவனான இராமமூர்த்தி செய்தற்கரிய தவத்தையாள, இவன் புவி.ஆள்வான்ஓ-இப்பரதனாழ்வான் உலகா ள்வானோ, உயிர்மருந்து என்னின்அன்று - பிறர்க்குத் தமதுயிர் மருந்தானாலும் எனக்கு மருந்தல்ல, வண்புகழ்கொண்டு பின்மாயேனோ-எப்பொழுதும் நிலைபெ ற்ற புகழுடம்பைக்கொண்டு பூதவுடம்பைப் பின்விடேனோ, பொருந்தியகேண் மை உகந்தவர்தம் ஒடுபோகாது - இசைந்த உறவை விரும்பின இராமமூர்த்தி யோடு பின்செல்லாமல், இருந்ததுநன்று-நானிங்கிருந்தது நல்லகாரியமே, என் கடன் இன்றேயேகழிக்குவென்-இளையோனென்று அவர்கொண்ட என்கடனை இன்றைக்கே கழிப்பேன்.

உயிர்விடுவேன் என்னும் பொருள்மேல் நிற்றலால் குறிப்பு. ௧௮

தம்பியுமாவுமிடைந்தபெரும்படைசூழ்வாரும்
வம்பியலுரிவர்வாள்வலிகங்கைகடந்தன்றோ
வெம்பியவேடருளிர்துறையோடவிலக்கீரோ
நம்பிமுன்னேயினிநம்முயிர்மாய்வதுநன்றன்றோ.

இ-ள். தம்பியும் மாஉம்மிடைந்த பெரும்படைசூழ்வார் - யானையும் குதி ரையும் நெருங்கிய பெரியசேனைகளாற் சூழப்பட்டவராகிய, வம்புஇயல்தார்

இவர்உம்வான்வலி-வாசமமைந்த மாலையையணிந்த வில்லிருவரும்பிடித்த வாள் வீரம், கங்கைகடந்து அன்றஓ-இந்தக்கங்கையைக்கடந்தல்லவா, வெம்பியவே டர்உள்ளீர்-கோபத்தாற்கன்றிய வேடர்களே, துறைஒடம் விலக்கீர் - துறையி னின்றும் ஒடத்தைவிலக்குவீர், நம்பிமுன்ஏஇனி நம்உயிர்மாய்வதுஙன்றுஅன்று ஓ-இராமமூர்த்திக்குமுன்னே யினிப்போர்த்தொழிலில் நாமுயிரிழப்பது நல்ல தல்லவா.

விலக்கீர் முன்னிலைப்பன்மை யுடனபாட்டேவல்வினைமுற்று. ஈர்விகுதி. அதனிறுதியில்நின்ற ஓகாரம் அசைநிலை. மற்றையவை வினப்பொருளன. சூழ் வார்பவிகுதி குன்றிய செயப்பாட்டுவினைமுற்றுப்பெயர். அதனிறுதியில்நின்ற உம்மைபொருத்தமில் புணர்ச்சியாய்நிற்றலால் இவர் என்பதனோடு கூட்டப்பட் டது. "புணரியணிலையிடைக்குறுகலுமுரித்தே" என்பதி னும்மை இடை என் பதனோடு கூட்டுதல்காண்க. ௧௯

போனபடைத்தலைவீரர்தமக்கிளைபோதாவிச்
சேனைகிடக்கிடுதேவர்வரிற்சிலைமாமேகம்
சோனைபடக்குடர்சூறைபடச்சுடர்வாளோடுந்
தானைபடத்தனியானைபடத்திரள்சாயேனோ.

இ-ள். போனபடைத்தலைவீரர்தமக்கு இளைபோதாத இசேனை கிடக்கிடு-தவத்தின்மேற்சென்ற சேனையையுடைய முதன்மையாகிய இராமமூர்த்திக்கும் இளையபெருமாளுக்கும் இணைபற்றாத இந்தச்சேனைகிடக்க, தேவர் வரில்-தேவர் கள் போர்க்குவந்தாலும், சிலைமாமேகம் சோனைபட-என்வில்லாகிய பெரியமே கம் அம்பாகியசோனையைச்சிந்துதலால், குடர்சூறைபட-குடர்களைப்பருந்துகொ ள்ளைகொள்ளவும், சுடர்வாள் ஓடு உம் தானைபட-விளங்கும்வாளோடுஞ்சேனை கள் அழியவும், தனியானைபட-ஒப்பில்லாத யானைகள்சாயவும், திரள்சாயேனோ- அத்தேவர்கூட்டத்தையுஞ் சாய்க்கேனா.

சோனைவிடாமற்சிந்துமழைத்துளி. போதாத புகுதாதஎன்னும் எதிர்மறை ப்பெயரொச்சம் விகாரப்பட்டு ஈறுகெட்டுநின்றது. புகுஎன்னும்பகுதி ஈறுகெ ட்டு உகாம் ஒகாரமாய்த்திரிந்துநின்றபோ பகுதி, த சாரியை, உகரக்கேடுசந்தி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, து சாரியை, உகரக்கேடுசந்தி, அ எச்சவிகுதி. கிடக்கிடு கிடக்கஎன்னும் வியங்கோள்வினைமுற்றின் திரிபு. இடு என்பதே வியங்கோள்விகுதியென்பாரு முளர். பட காரணப்பொருள்மேல்நிற்ற லால் இறந்தகாலவினையெச்சம். ௨0

நின்றகொடைக்கையெனன்பனுடுக்கநெடுஞ்சினை
அன்றுகொடுத்தவண்மைந்தர்பலத்தையெனம்பாலே
கொன்றுகுவித்தநிணங்கொள்பிணக்குவைகொண்டோடித்
துன்றுதிரைக்கடல்கங்கைமடுத்திடுதூராதோ.

இ-ள். நின்றகொடைகைஎன் அன்பன்உடக்க - நிலைபெற்ற வள்ளன்மை யமைந்த கையையுடைய எனதுதோழனாகிய இராமமூர்த்தியிடுக்க, வெஞ்சேனை அன்றுகொடுத்தவள் மைந்தர்பலத்தை-கொடியமாவுரிமைய அந்நாள்கொடுத்த புத்திரர்களுடைய வலிமையை, என் அம்பு ஆல் கொன்று குவித்த நிணம்கொள் பிணக்குவை கங்கைகொண்டு ஓடி-எனது கையம்பால் கொன்று குவியல்செய்த நிணமமைந்த பிணக்குப்பல்களைக் கங்கை வாரிக்கொண்டுசென்று, துன்றுதிரை கடல் மடுத்து இடைதூராதுஒ-நெருங்கிய அலைகளையுடைய கடலிற்பாய்ந்து அக்கடலினிடைவைத் தூர்க்கமாட்டாதோ. உக

ஆடுகொடிப்படைசாடியறத்தவரேயாள
வேடுகொடுத்ததுபாரெனுமிப்புகழ்மேவீரோ
நாடுகொடுத்தவென்நாயகனுக்கிவர்நாமாளுங்
காடுகொடுக்கிலராகியெடுத்ததுகாணீரோ.

இ-ள். ஆடுகொடிபடை சாடி அறத்தவர் ஏ ஆள - ஆடாநின்ற துவசத்தையுடைய இச்சேனையையழித்துத் துறவறத்தையுடைய இராமமூர்த்தியே நாடாள, பார்வேடுகொடுத்தது என்னும் இபுகழ்மேவீர் ஒ-இந்நிலவுலகை வேடர்கள்கொடுத்தார்களென்னும் இந்தக்கீர்த்தியை நீங்களடையமாட்டீர்களோ, நாடுகொடுத்த என் நாயகனுக்கு - தாமாளுநாட்டைக்கொடுத்த வெனதுதலைவர்க்கு, இவர் நாம்ஆளும்காடு கொடுக்கிலர் ஆகிஎடுத்தது காணீர்-இவர்கள் நாம்ஆளும் காட்டையும் கொடுக்காதவராகிப் படையெடுத்துவந்ததையறியீரோ.

காட்டினின்றும் அவர்களையோட்ட இவர்கள் வந்தனர் என்பான் காடுகொடுக்கிலராகி யெடுத்தது காணீரோஎன்றான். காடுகொடுக்கிலராகி யெடுத்தது காணீரோ என்பதற்கு இவர் காடுகொடாதவராக நாமெடுக்கும போர்த்தொழிலை யிப்போது காணமாட்டீரோவெனப் பொருள்கூறினுமமையும். வேடு பொருளா லுயர்திணையாயினும் சொல்லா லஃறிணையாதலால் கொடுத்தது என அஃறிணைமுடிபுதந்தார். வேடுசாதிப்பண்பாதலால்பண்பின்மேல்நின்றது. நாடுகொடுத்த இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடராதலால் நிலைமொழியீற்றுகரமேறிய டகரமெய் "நெடிலோடுயிர்த்தொடர்" என்னுஞ்சூ-இல் "மிக" என்றமையால் இரட்டாதாயிற்று. காடுகொடுக்கிலராகி என்பதற்கும் அதுவே. உஉ

மாமுனிவர்க்குறவாகிவனத்திடையேவாழும்
கோமுனியத்தகுமென்றுமனத்திறைகொள்ளாதே
ஏமுனையுற்றிடிலேழுகடற்படையென்றாலும்
ஆமுனையிற்சிறுகூழெனவிப்பொழுதாகாதோ.

இ-ள். மாமுனிவர்க்கு உறவுஆகிவனத்து இடைஏவாழும்கோ-பெருமையமைந்த முனிவர்களுக்கு உறவாகிக் காட்டில்வாழும் இராமமூர்த்தி, முனியத் தகும் என்று மனத்து இறைகொள்ளாது-வெறுக்கக்கூடுமேயென்று மனத்திலிறையளவுங்கொள்ளாமல், ஏழுகடல் படைஎன்றாலும்-போர்க்குவந்தது ஏழுகடலையொத்த சேனையாயிருந்தாலும், ஏமுனைஉற்றிடில் - எனது கையிலுள்ள

அம்பினுனியுமுதால், ஆம்முன்றில் சிறகூழ் என்ன இப்பொழுது ஆகாதோ-ஈரமமைந்த இடத்திலுள்ள சிறியபயிரைப்போல இப்பொழுதேமுடியாதா.

முன்றில் முன்என்னுமிடப்பெயர் ஐகாரச்சாரியையேற்று ஏழனுருபேற்றது. ஆம் ஈரம். ௨௧

என்பனசொல்லியிரும்பனமேனியரேனோர்முன்
வன்பணைவில்லினன்மல்லுயர்தோளினன்வாள்வீரற்
கன்பனுநின்றனனின்றதுகண்டரியேறென்ன
முன்பனில்வந்துமொழிந்தனன்மூரியதேர்வல்லான்.

இ-ள். என்பனசொல்லி-என்பனவற்றைச்சொல்லி, இரும்பு அன்ன மேனியர் ஏனோர்முன்-இரும்பையொத்த மேனியையுடைய மற்றை வேடர்கள்முன்னே, வன்பணைவில்லினன் மல்உயர்தோளினன் வாள்வீரற்கு அன்பனும் நின்றனன்-வலிய மூங்கிலாலமைந்த வில்லினனும் மற்போராலுயர்ந்த தோளையுடையவனும் வாளேந்திய இராமமூர்த்திக்குந் தோழமையையுடையவனுமாகிய குகனின்றனன், மூரியதேர்வல்லான் நின்றதுகண்டு-பெரியதேர்ச்சேனையையுடைய சத்துருக்கன் அவனின்றதைப்பார்த்து, அரியேறுஎன்ன முன்பனில்வந்து மொழிந்தனன்-சிம்மேற்றைப்போலத் தன் முன்னோனாகிய பரதாழ்வான்முன் வந்து கூறுவான்.

அஞ்சனவண்ணன் என்பதுமுதல் மாமுனிவாக் குறவாகியென்பதுகாறும் வினைப்பொருள்படக்கூறியது பலஆதலால் என்பனஎன்றார். மூரிய பண்படியாகப்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம். மூரி பகுதி, யகரமெய்சந்தி, அ எச்சவிகுதி. எதிர்காலத்தாற் கூறவேண்டுவதை யிறந்தகாலத்தாற் கூறியது இயல்பில் வந்த காலவழுவமைதி. ௨௨

ஒருபோகுகொச்சகக்கலிப்பா.

கங்கையிருகரையுடையான்கணக்கிறந்தநாவாயான்
உங்கள்குலத்தனிநாதற்குயிர்த்துணைவனுயர்தோளான்
வெங்கரியினேறனையான்விற்பிடித்தவேலையினான்
கொங்கலருநறுந்தண்டார்க்குகனென்னுங்குறியுடையான்.

இ-ள். கங்கை இருகரை உடையான்-கங்கையினிரண்டுகரையையுந் தனக்குரிமையாகவுடையவனும், கணக்கு இறந்த நாவாயான்-அளவுகடந்த மரக்கலத்தையுடையவனும், உங்கள்குலம் தனிநாதற்கு உயிர்த்துணைவன் - உங்கள்குலத்திற்றோன்றிய ஒப்பில்லாத இராமமூர்த்திக்கு உயிரையொத்த தோழமையையுடையவனும், உயர்தோளான் - உயர்ந்ததோளையுடையவனும், வெங்கரியின் ஏறு அனையான் வில்பிடித்த வேலையினான் - கொடிய ஆண்யானையையொத்தவனும் வில்லைப்பிடித்த சேனைக்கடலையுடையவனும், கொங்கு அலரும் நறுந்தண் தார் குகன் என்னும் குறி உடையான்-மகரந்தத்தோடு மலர்ந்த நறுமணங்கமழுந் தண்ணியமாலையையுடையவனும் குகனென்னும் பெயரையுடையவனும்.

ஏற்றுதலும் இறக்குதலும் உடைமைபற்றிக் கங்கை யிருகரையுமுடையான் என்றார். ௨௫

கற்காணுந்திண்மையான்கரைகாணுக்காதலான்
அற்காணிற்கண்டனையவழகமைந்தமேனியாய்
மற்காணுநதிரடிண்டோண்மழைகாணுமணிநிறத்தோய்
நிற்காணுமுள்ளத்தானெறியெதிர்நின்றனனென்றான்.

இ-ள். கல் காணும் திண்மையான்-மலையையொத்த கலங்காத திண்மையை யுடையவனும், கரைகாணாத காதலான்-அளவிடுதற்கரிய விருப்பத்தையுடையவனும், அல்காணில் கண்டால் அனைய அழகு அமைந்த மேனியாய்-இருளைக்கண்டாலொத்த அழகுமிகுந்த மேனியையுடையவனும், மல்காணும் திரள் திண் டோள் மழைகாணும் மணிநிறத்தோய் - மற்போரமைந்த திரண்ட திண்ணிய தோளையு மேகத்தையொத்த அழகியநிறத்தையுமுடையோய், நின்காணும் உள்ளத்தான்-உனைக்கண்டு தெரிசிக்குமனத்தையுடையவனுமாய், நெறி எதிர்நின்றனன் என்றான்-நீ வரும்வழிக்கெதிரே நின்றனனென்று கூறினான்.

கரையுடையான் என்பதுமுதல் உள்ளத்தான் என்பதுகாறுமுள்ள குறிப்பு முற்றுகளெச்சமாய்த் தனித்தனி நின்றனன் என்னும் வினைமுற்றின் முதனிலையைக்கொண்டன. நின் மறநிறுதல் "இயல்பின் விகாரமும்" என்ற புறனடைச்சூத்திரத்தால். ௨௬

தன்முன்னேயவன்றன்மைதன்றுணைவன்மொழிந்துரைத்த
சொன்முன்னேயுவக்கின்றதுரிசிலாதிருமனத்தான்
மன்முன்னேதழீஇக்கொண்டமனக்கினியதுணைவனேல்
என்முன்னேயவற்காண்பேன்யானேசென்றெனவெழுந்தான்.

இ-ள். தன்முன்னே-தனக்குமுன்னே, அவன் தன்மை-அக் குகனது தன்மையை, தன் துணைவன் மொழிந்து உரைத்த-தனக்குத துணைவனாகிய சத்துருக்கன் முற்பட்டுக்கூறிய, சொல்முன்னே-சொல்லுக்குமுன்னே, உவக்கின்ற துரிசு இல்லாத திருமனத்தான் - மகிழ்கூர்கின்ற குற்றமில்லாத அழகிய மனத்தையுடைய பரதாழ்வான், மன்முன் தழீஇக்கொண்ட மனக்கு இனிய துணைவனேல்-இராமமூர்த்தி முன்பு உறவுகூர்ந்த அவர்மனத்துக்கினிய துணைவனாகில், யான்சென்று என்முன்னே அவன்காண்பேன் என எழுந்தான்-நானேபோ யெனக்குமுன்னே யவனைக்காண்பேனென்று எழுந்தனன்.

மொழிந்து என்னும் வினைப்பகுதி வினையெச்சத்தின்மேல் நின்றது. துரிசிலாத்திருமனத்தான் "குடிமைநல்ல நம்பி" எனவருதல்போலத் திருமனத்துரிசிலான் எனநிற்றலாய் உயர்திணையைத்தொடர்ந்த பண்பு அவ்வுயர்திணை முடிபேற்று நிற்றலால் திணைவழுவமைதி. "உயர்திணைதொடர்ந்த பொருண்முதலாறும்" என்றரு—ஆல். தழீஇக்கொண்ட தற்பொருட்டுப்பொருளில்வந்த இறந்தகாலப்பெயரெச்சம். தழுவு என்னும்பகுதி இகரச்சாரியை யேற்றுச்சொல்லி

சை நிறைத்தலில்வரும் அளபெடுத்து நின்ற தழீஇ பகுதி, கொள்தற்பொருட் டுப் பொருளில்வந்த விகுதி, ககரத்தோற்றம்சந்தி, அனைத்தும் ஒருபகுதி, டகர மெய் இடைநிலை, எகரத்திரிபு சந்தி, அ எச்சவிகுதி. மனக்கினிய அத்துச்சாரி யை தொகுத்தல்விகாரம். ௨௭

என்றெழுந்ததம்பியொடுமெழுகின்றகாதலொடும்
குன்றெழுந்துசென்றதெனக்குளிர்கங்கைக்கரைகுறுகி
நின்றவனைநோக்கினன்றிருமேனிநிலையுணர்ந்தான்
துன்றுகருநறுங்குஞ்சியெயினர்கோன்றுண்ணென்றான்.

இ-ள். என்று-என்றுகூறி, எழுந்ததம்பியொடும் எழுகின்றகாதலொடும்-தன்முன்னெழுந்த சத்துருக்கனோடும் மேலெழுந்த விருப்பத்தோடும், குன்று எழுந்து சென்றது என்ன குளிர்கங்கை கரைகுறுகி - மலையெழுந்துசென்றது போலக் குளிர்ந்தகங்கையின் கரையையடைந்து, நின்றவனை நோக்கினன் திரு மேனிநிலைஉணர்ந்தான் - தென்கரையில் நின்ற குகனைப்பார்த்த பரதாழ்வானது திருமேனியின் வாட்டத்தையுணர்ந்து, துன்றுகரு நறுங்குஞ்சி எயினர்கோன் துண் என்றான்-நெருங்கிய கரிய நல்ல சிகையையுடைய வேடர்களுக்கு அரச னாகிய குக னடுக்கமடைந்தான்.

உணர்ந்தான் முற்றெச்சம். குன்றெழுந்து சென்றதெனக்குறுகி இல்பொ ருளுவமையணி. ௨௮

வற்கலையினுடையானைமாசடைந்தமெய்யானை
நற்கலையின்மதியென்னநகையிழந்தமுகத்தானை
கற்கனியக்கனிகின்றதுயரானைக்கண்ணுற்றான்
விற்கையினின்றிடைவீழவிம்முற்றுநின்றொழிந்தான்.

இ-ள். வற்கலையின் உடையானை - மரவுரியை யாடையாக வுடுத்தவனும், மாசு அடைந்த மெய்யானை - அழுக்கடைந்த திருமேனியையுடையவனும், நல் கலை இல்மதி என்ன நகை இழந்த முகத்தானை-நல்ல கலையையிழந்த சந்திரனை ப்போல ஒளியிழந்த முகத்தையுடையவனும், கல்கனிய கனிகின்ற துயரானை கண்ணுற்றான் - கல்லுங் கனியக்கனிகின்ற துன்பமுடையவனுமாகிய பரதாழ் வானைப்பார்த்து, வில்கையின் நின்று இடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்- வில் கையினின்றும் வழுவி நிலத்தில்வீழப் பொருமி மெய்ம்மறந்து குகனின்ற னன்.

இது ஒருபொருள்மேல்வந்த பெயர்களாதலால் கண்ணுற்றான் என ஒரு வினைதந்து முடித்தார் "ஒருபொருள்மேற் பலபெயர்வரின்" என்ற சூ—ஆல். நின்றொழிந்தான் துணிவுப்பொருளில்வந்த இறந்தகாலவினைமுற்று நில்பகுதி, து சாரியை, பகுதியொழிந்தன விடைச்சொல் ஆதலால் சாரியையின் தகரமெய் றகரமாகத்திரிய லகரம் னகரமாகத்திரிந்தது சந்தி, ஒழி துணிவுப்பொருளில் வந்த விகுதி, அனைத்தும் ஒரு பகுதி, ககரமெய் சந்தி, தகரமெய் இடைநிலை, ஆன் விகுதி. கண்ணுற்றான் முற்றெச்சம். ௨௯

நம்பியுமென்னாயகனையொக்கின்றானயனின்றான்
தம்பியையுமொக்கின்றான்றவவேடந்தலைநின்றான்
துன்பமொருமுடிவில்லைதிசைநோக்கித்தொழுகின்றான்
எம்பெருமான்பின்பிறந்தாரிழைப்பரோபிழைப்பென்றான்.

இ-ள். நம்பியும் என்நாயகனை ஒக்கின்றான் - இப்பரதாழ்வானும் என்மூத்தோனாகிய இராமமூர்த்தியையொத்துத் தோன்றுகின்றான், அயல்நின்றான் தம்பியையும் ஒக்கின்றான்-பக்கத்தில் நின்ற சத்துருக்கனும் இளையபெருமானையொத்துத்தோன்றுகின்றான், தவவேடம் தலைநின்றான்-தவவேடத்தை மேற்கொண்டிருக்கின்றான், துன்பம் ஒரு முடிவு இல்லை-அவன்கொண்ட துன்பமோ எல்லையில்லை, திசைநோக்கி தொழுகின்றான்-தன்முன்னோன் சென்ற திசையைநோக்கி வணங்குகின்றான், எம்பெருமான் பின்பிறந்தார் பிழைப்பு இழைப்பரோ என்றான்-எமது பெருமானாகிய இராமமூர்த்திக்குப் பின்பிறந்தவர்கள் தீயசெயல்களைச் செய்வாராவென்று குகன் துணிந்தனன்.

வேடத்தலைநின்றான் வேடந்தலைநின்றானென மெலித்தல் விகாரம்பெற்றது இன்னிசையூட்டுதற்பொருட்டென்க. ௧௦

உண்டிடுக்கணொன்றுடையானுலையாதவன்புடையான்
கொண்டதவவேடமேகொண்டிருந்தான்குறிப்பெல்லாம்
கண்டுணர்ந்துபெயர்கின்றேன்காமின்கணெறியென்னாத்
தண்டுறையோர்நாவாயிலொருதனியேதான்வந்தான்.

(இ-ள்.) இடுக்கண் ஒன்று உண்டு உடையான்-துன்பமென்பதொன்றுளது அதனை முற்றுமுடையவனாயிருக்கின்றான், உலையாத அன்பு உடையான்-(தன் மூத்தோனிடத்து) என்றுங் கெடாத முற்றிய அன்புடையவனாயிருக்கின்றான், கொண்ட தவவேடமே தானுங் கொண்டிருந்தான் - தன் மூத்தோன் கொண்ட தவவேடமே தானுங் கொண்டிருக்கின்றான், குறிப்பு எல்லாம் கண்டு உணர்ந்து பெயர்கின்றேன் - அப்பரதாழ்வானது உள்ளக்குறிப்பினையெல்லாந் தெரிந்து வருகின்றேன், நெறிகாமின்கள் என்னா - (அவர்களிங்கு வாராமல்) வழியைப் பாதுகாவுங்களென்று கூறி, தண்துறை ஓர் நாவாயில் ஒருதனியேதான் வந்தான்-குளிர்ந்த நீர்த்துறையினின்று ஒரு மரக்கலத்தின்மேல் துணையின்றித் தான் வந்தனன்.

என்னாசெய்யா என்னும் வாய்பாட்டு இடைச்சொல்லடியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம் என் இடைச்சொற்பகுதி, னகரமெய்சந்தி, ஆ எச்சவிகுதி. காமின்கள் உடன்பாட்டில்வந்த முன்னிலைப்பன்மை யேவல்வினைமுற்று. கா பகுதி, மின்விகுதி, கள்விகுதி மேல்விகுதி. எதிர்மறையில் காவன்மின்என வரும். ௧௧

வந்தெதிரேதொழுதானைவணங்கினான்மலரிருந்த
அந்தணனுந்தனைவணங்குமவனுமவனடிவீழ்ந்தான்

தந்தையினுங்களிகூரத்தழுவினுன்றகவுடையோர்
சிந்தையினுஞ்சென்னியினும்வீற்றிருக்குஞ்சீர்த்தியான்.

(இ-ள்.) வந்து எதிரே தொழுதானை - தன்முன் வந்து எதிரே வணங்கிய குகனை, மலர் இருந்த அந்தணனும் தன்னை வணங்கும் அவன் உம் வணங்கினுன்-தாமரைமலரிலிருந்த பிரமனும் தன்னை வணங்குதற்கெல்லையாகிய அப்பரதாழ்வானும் வணங்கினுன், அவன் அடி வீழ்ந்தான் - அக்குகன் தன் திருவடிக்கீழ் விழுந்தனன், தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான் - பெரியோர்தயநதிலும சிரசிலும் நிகரின்றியிருக்கும் அப்பரதாழ்வான, தந்தையினும் களிகூர தழுவினுன்-பிதாவினுங் களிப்பு மிகப்புல்லினுன்.

தன் புத்திரனிடத்துப் பிதாவுக்கு அன்பு சிறந்திருப்பதால் தந்தையினும் என்ருர். இன்உருபு உயர்வு குறித்தபொருளில்வந்த எல்லைப்பொருட்டு.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தழுவினபுளினர்வேந்தன்றாமரைச்செங்கணுனை
எழுவினுமுயர்ந்ததோளாயெய்தியதென்னையென்ன
முழுதுலகளித்ததந்தைமுந்தையோர்முறையினின்றும்
வழுவினனதனைநீக்கமன்னனைக்கொணர்வான்வந்தேன்.

(இ-ள்.) தழுவினபுளினர்வேந்தன்-பரதாழ்வானுல் தழுவப்பட்ட வேடர்களுக்கு இறைவனுகிய குகன், தாமரை செங்கணுனை-தாமரைமலர்போன்ற சிவந்த கண்களையுடைய பரதாழ்வானை, எழுவினும் உயர்ந்ததோளாய் எய்தியது என்னை என்ன-தூணிலுந் திரண்டுயர்ந்த தோளையுடையாய் இங்குவந்தகாரணம் யாதென்று வினவ, உலகுமுழுது அளித்த தந்தை முந்தையோர் முறையின் நின்று வழுவினன்-உலகமுற்றுமோம்பிய தசரதசக்கரவர்த்தி முன்னுள்ள சக்கரவர்த்திகள் நடத்திய முறையினின்று நீங்கினுன், அதனை நீக்க மன்னனை கொணர்வான்வந்தேன் - அக்குறைபாட்டினை நீக்கும்பொருட்டு இராமமூர்த்தியைக் கொண்டுபோம்படி வந்தனனென்ருன்.

முழுதுலகளித்த தாதை முந்தையோர் முறையினின்று வழுவினன் என்றதற்குத் தசரதன் பெரியோரைப்போல அரசியல்முறையினின்று நீங்கினுன் (இறந்தனன்) எனக்கொள்ளுதலுமொன்று. இன்உருப உயர்வுகுறித்தலில்வந்த எல்லைப்பொருட்டு. கொணர்வான் எதிர்காலவினையெச்சம் கொணுடகுதி, பகுதியீற்றின் ஆகாரம் குறுகுதலும் ரகரமெய் விரிதலும் விகாரம், வான்எச்சவிகுதி. முந்தையோர் முறையாவது மூத்தவனுக்கு முடிசூட்டுதல். ௩௩

கேட்டனன்கிராதர்வேந்தன்கிளர்ந்தெழுமுபிரனுகி
மீட்டுமண்ணதனில்வீழ்ந்தான்விம்மினனுவகைவீங்கத்
தீட்டருமேனிமைந்தன்சேவடிக்கமலப்பூவில்
பூட்டியகையன்பொய்யிலுள்ளத்தான்புகலலுற்ருன்.

(இ-ள்.) கிராதர்வேந்தன் கேட்டனன்-வேடர்களுக்குஅரசனாகியகுகன்கேட்டான், கிளர்ந்துஎழும் உயிரனாகி மீட்டும் மண்ணதனில்வீழ்ந்தான்-சந்தோஷத்திற்பொங்கியெழுந்த வுயிரினையுடையவனாகி மீளவும் நிலவுலகின்மேல் வீழ்ந்து, உவகைவீங்க விம்மினன்-மகிழ்ச்சிமீதூரப்பொருமி, தீட்டு அருமேனிமைந்தன் சேஅடி கமலப்பூவில் பூட்டியகையன் - எழுதுதற்கரிய திருமேனியையுடைய பரதாழ்வானது செவந்ததிருவடித்தாமரையிற் பூட்டிய கையையுடையவனாகி, பொய் இல் உள்ளத்தான் புகலல் உற்றான்-உண்மைவாய்ந்த மனத்தையுடைய குகன் சொல்லத்தொடங்கினான்.

இரண்டாவதுகொண்ட பொருளுக்கேற்பக்கிளர்ந்தெழும் உயிரனாகி மீட்டும் மண்ணதனில்வீழ்ந்தான்-மேலெழுந்த உயிர்ப்பினனாகி மீளவும் நிலவுலகில் வீழ்ந்தனனெனக் கொள்ளலும் ஒன்று. கேட்டனன், வீழ்ந்தான், விம்மினன் தெரிநிலைவினைமுற்றெச்சங்கள். கையன் குறிப்புமுற்றெச்சம். மீட்டும் செயவெனச்சத்திரிபு. சேவடி செம்மையென்னும் பண்பு ஈறுகெட்டு முதனீண்டு வகரவுடம்படு மெய்பெற்றது. சேயடியென யகரவுடம்படு மெய்பெற்றுவரும்.()

தாயுரைகொண்டுதாதையுதவியதரணிதன்னைத்
தீவினையென்னநீத்துச்சிந்தனைமுகத்திற்றேக்கிப்
போயினையென்றபோழ்துபுகழினோய்தன்மைகண்டால்
ஆயிரமிராமர்நின்கேழாவரோதெரியிலம்மா.

(இ-ள்.) தாய் உரைகொண்டு தாதை உதவிய தரணிதன்னை-நின் தாயின் வார்த்தையைக் கைக்கொண்டு பிதாகொடுத்த நிலவுலகை, தீவினை என்ன நீத்து சிந்தனை முகத்திற்தேக்கி-தீச்செயல் விளைப்பதென்று கைக்கொள்ளாது துன்பத்தை முகத்திற் குறிப்பித்து, போயினை என்ற போழ்து-வந்தாயென்றகாலத்தில், புகழினோய் தன்மை கண்டால் தெரியில் ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவர் ஓ-பெரும்புகழ்கொண்ட பரதாழ்வானே உனது தன்மையைப் பார்த்தால் ஆராயில் இராமர் ஆயிரம்பேர் வந்தாலு முனக் கொப்பாவார்களா (இல்லையென்றபடி.)

நீத்து இறந்தகாலவினையெச்சம் நீ பகுதி, போயினை புகு என்னும் பகுதி ஈறுகெட்டு முதல்நீண்டுநின்ற போ பகுதி, முதனிலையல்லாதன இடைச்சொல்லாதலால் யகரமெய்சந்தி, இன் இடைநிலை, ஐ தன்மை யொருமை விகுதி.௩௫

என்புகழ்கின்றதேழையெயினனேனிரவியென்பான்
தன்புகழ்க்கற்றைமற்றையொளிகளைத்தவிர்க்குமாபோல்
மன்புகழ்ப்பெருமைநுங்கண்மரபினோர்புகழ்களெல்லாம்
உன்புகழாக்கிக்கொண்டாயுயர்குணத்துரவுத்தோளாய்.

(இ-ள்.) உயர்குணத்து உரவுதோளாய் - உயர்ந்த குணத்தையும் பெரிய தோளையுமுடையவனே, ஏழை புகழ்கின்றது என்-ஏழையாகிய நான் புகழவிருந்தது என்ன, எயினனேன்-நானோ வேடன். இரவி என்பான் தன்புகழ் கற்

றை மற்றை ஒளிகளை தவிர்க்கும் ஆறுபோல-சூரியனென்பவன் தனது கிரண நெருக்கினால் மற்றைக் கிரணங்களைத் தன்னுளடக்கும் வகைபோல, மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்கள் எல்லாம்-நிலைபெற்ற புகழின் பெருமையையுடைய உங்கள் சூரியன் மரபிற்றோன்றிய அரசர்கள் புகழையெல்லாம், உன் புகழ் ஆக்கிக்கொண்டாய்-உனது புகழாக்கிக்கொண்டனை.

ஆறு ஆ தொகுத்தல் விகாரம். நீர் நும் எனத் திரிந்து கள் என்னும் பகுதிப்பொருள் விகுதி யேற்றது. உன் நின் என்பதன் மரூஉ. இது எடுத்துக் காட்டுவமையணி. இதனை வடநூலார் திர்ஷ்டாந்தாலங்காரம் என்பார். ௩௬

எனையிவையன்னமாற்றமியையனபலவுங்கூறிப்
புனைகழற்புலவுவேற்கைப்புளினர்கோன்பொருவில்காதல்
அனையவற்கமைவிற்செய்தானாரவற்கன்பிலாதார்
நினைவருங்குணங்கொடன்றோவிராமன்மேனிமிர்ந்தகாதல்.

(இ-ள்.) எனை இவை அன்னமாற்றம் பலவும் இயைவன கூறி-மற்ற இவைபோன்ற வார்த்தைகள் பலவற்றையும் பொருந்தச்சொல்லி, புனை கழல் புலவு வேல்கை புளினர்கோன்-கட்டிய வீரகண்டையையும் புலால்நாற்றம்பொருந்திய வேலையேந்திய கையையுமுடைய வேடர்களுக்கு அரசனாகிய குகன், பொருவு இல் காதல் அனையவற்கு அமைவின் செய்தான் - (தன்மேல்) ஒப்பில்லாத விருப்பத்தையுடைய அப்பரதாழ்வானுக்கு அமைந்த வுபசாரங்களைச் செய்தனன், ஆர் அவற்கு அன்பு இல்லாதார்-யார்தான் அப் பரதாழ்வானிடத்தி லன்பில்லாதவர்கள், நினைவருங் குணங்கொடு அன்றோ இராமன்மேல் காதல் நிமிர்ந்தது-இவ்வாறு நினைத்தற்கரிய நற்குணங்களைக் கொண்டல்லவா இராமமூர்த்திமேல் ஆசையெழுந்தது.

நற்குணங்கள் பலவற்றையும் பரதாழ்வானுடையன் என்பார் நினைவருங் குணங்கொடு எனவும், அவற்றை யுடைமையாலல்லவா தனக்குக் கிடைத்த அரசியல்மேல் விருப்பஞ்செய்யாது இராமமூர்த்தியின்மேல் விருப்பஞ்சென்றதென்பார் அன்றோ ராமன்மே னிமிர்ந்த காதலெனவுங் கூறினார். எனை எனை குறுக்கல். நிமிர்ந்தது துவ் விகுதி தொகுத்தல். குணம் சாதியொருமை. ௩௭

அவ்வழியவனைநோக்கியருடருவாரியன்ன
செவ்வழியுள்ளத்தண்ணல்தென்றிசைசெங்கைகூப்பி
எவ்வழியுறைந்தானம்முனென்றலுமெயினர்வேந்தன்
இவ்வழிவீரயானேகாட்டுவலெழுகவென்றான்.

(இ-ள்.) அவழி-தன்னை யுபசரித்த அவ்விடத்தில், அவனைநோக்கி-அக்குகனைப்பார்த்து, அருள்தருவாரி அன்ன செவ்வழி உள்ளத்து அண்ணல்-கருணைக்கடலையொத்த நல்லொழுக்கமமைந்த மனத்தையுடைய இராமமூர்த்தியிருந்த, தென்றிசை செங்கைகூப்பி-தென்றிசையைநோக்கிச் செவந்த கைகளைச் சிரத்தின்மேற் குவித்து, நம்முன் எவழி உறைந்தான் என்றலும் - நமக்கு முன்னோ

னாகிய இராமமூர்த்தி யெவ்விடத்திலிருக்கின்றனென்று வினவ, எயினர் வேந்தன் வீர இளையானே காட்டுவல் எழுக என்றான்-வேடர்களுக்கு அரசனாகிய குகன், வீரனே இவ்விடத்தில் நானே காட்டுவே னீ யெழக்கடவையென்று கூறினான்.

காட்டுவல் தன்மை யொருமை எதிர்காலவினைமுற்று காட்டு பகுதி, வகர மெய் இடைநிலை, அல் தன்மை யொருமை விகுதி. குகனையுந் தன்னோ டொப்ப வைத்தி நம் முன் என்றமையால் வழாநிலை. கூப்பி இறந்தகாலவினையெச்சம் கூப்பு பகுதி. ௩௮

காரெனக்கடிதுசென்றான்கல்லிடைப்படுத்தபுல்லின்
வார்சிலைத்தடக்கைவள்ளல்வைகியபள்ளிகண்டான்
பார்மிசைப்பதைத்துவீழ்ந்தான்பருவரற்பரவைபுக்கான்
வார்மணிப்புனலால்மண்ணைமண்ணுநீராட்டுங்கண்ணான்.

(இ-ள்.) வார்மணி புனலால் மண்ணை மண்ணு நீர் ஆட்டுங் கண்ணான்-சிந்தும் இடையறாத கண்ணீரினால் மண்ணுலகைக் கழுவுதற்கு நீராட்டுங் -கண்களையுடைய பரதாழ்வான், கார் என்ன கடிது சென்றான்-மேகம்போல விரைந்து சென்று, கல் இடைபடுத்த புல் இன்வார் சிலை தடகை வள்ளல் வைகிய பள்ளி கண்டான்-கல்லிற் பரந்த புற்பரப்பில் நீண்ட வில்லினையேந்திய பெரிய கைகளையுடைய இராமமூர்த்தி தங்கிய படுக்கையைப்பார்த்து, பார்மிசை பதைத்து வீழ்ந்தான் பருவரல் பரவைபுக்கான்-நிலவுலகின்மேற் பதைத்து வீழ்ந்து துன்பமாகிய கடலி லழுந்தினான்.

சென்றான், கண்டான், வீழ்ந்தான் முற்றெச்சங்கள். பரவை வினைமுதற் பொருளில்வந்த தொழிற்பெயர் பர பகுதி, ஐ விகுதி, வகரமெய்சந்தி, மண்ணும் என்னும் பெயரெச்சத்தினின்று பிரிந்த தொழிற்பெயர் நான்கனுருபேற்றுநின்றது. வள்ளல் பண் பாகுபெயர் வண்மை பகுதி, ஈறு கெடுதல்சந்தி, அல் பண்புப்பெயர் விகுதி. பார் முதனிலைத்தொழி லாகுபெயரா யுலகின்மேல் நின்றது பா விகுதி, முதனீளுதலும் அகரம் தொகுதலும் விகாரம். தடக்கை உரிச்சொற்றொடர். நிலைமொழியின் ககரமிகுதல் "இயல்பினும் விதியினும்" என்றசூ-ஆல். "மணிநீரும்" என்றதற்கு வற்றாத நீர் எனப் பரிமேலழகர் உரையிற் காண்க. ௩௯

இயன்றதென்பொருட்டினாலிவ்விடருனக்கென்றபோழ்தும்
அயின்றனைகிழங்குங்காயுமமிர்தெனவரியபுல்லில்
துயின்றனையெனவுமாவிதுறந்திலென்சுடருங்காசு
குயின்றுயர்மகுடஞ்சூடுஞ்செல்வமுங்கொள்வென்யானே.

(இ-ள்.) என்பொருட்டினால் இ இடர் உனக்கு இயன்றது என்றபோழ்தும் - என்பொருட்டா லித்துன்ப முனக்கு வந்ததென்றகாலத்திலும், கிழங்கும் காயும் அமிர்து என்ன அயின்றனை-கிழங்கையுங் காயையு மமிர்தத்தைப்போல

நுகர்ந்தாய், அரிய புல் இல் துயின்றனை எனவும் - அடைதற்கரிய புற்பரப்பில் நித்திரைகூர்ந்தாய் என்று கண்டோர் கூறவும், சூடும் காசு குயின்று உயர் மகுடம்சூடும் செல்வம் உம் யான்கொள்வேன்-விளங்கு மிரத்தினமழுத்தி யுயர் ந்த கிரீடஞ்சூடும் செல்வத்தையும் நான் கொள்ளநின்றேன் (ஆதலால்) ஆவிதுற ந்திலென்-உயிர்விடேன்.

அயின்றனை, துயின்றனை முன்னிலையொருமை யிறந்தகாலவினைமுற்று அயில், துயில் பகுதிகள். குயின்று இறந்தகாலவினையெச்சம். குயில் பகுதி. செல்வம் நிலையில் பொருளென்பது தோன்ற எச்சவும்மை தந்து கூறினர். "இனைத்தென் றறிபொருளுலகினிலாப்பொருள்" என்னுஞ் சூ-இல் நில்லாப்பொருள் எனவும் பொருள்படுதலால். ௪0

தூண்டரநிவந்ததோளான்பின்னருஞ்சொல்லுவானந்
நீண்டவன்றுயின்றசூழலிதுவெனினிமிர்ந்தநேயம்
பூண்டவன்றொடர்ந்துபின்னேபோந்தவன்பொழுதுநீத்த [ன்.
தியாண்டெனவினிதுகேட்டானெயினர்கோனிதனைச்சொன்னா

(இ-ள்.) தூண்தர நிவந்த தோளான் பின்னரும் சொல்லுவான்-தூணைப் போலத் திரண்டுயர்ந்த தோளையுடைய பரதாழ்வான் பின்னுங்கூறுவான், அ நீண்டவன் துயின்ற சூழல் இது என்னில்-அந்த இராமமூர்த்தி திருக்கண்வளர்ந் ன்ற இடமிதுவானால், நிமிர்ந்தநேயம் பூண்டவன் தொடர்ந்து பின்னே போந் தவன்-சிரம்பிய அன்புபூண்டவனும் தொடர்ந்து பின்னே போனவனுமாகிய இ ளையபெருமாள், பொழுது நீத்தது யாண்டு என்ன இனிது கேட்டான்-காலங் கழித்தது எவ்விடமென்று வினவினான், எயினர்கோன் இதனை சொன்னான்-வேடர்களுக்கு அரசனாகிய குக னிதனைச்சொல்லுவான்.

பின்னர் காலப்பொருளில்வந்த இடைச்சொல் பின் இடைச்சொற்பகுதி, னகரமெய்சந்தி, அர் பகுதிப்பொருள் விகுதி. நீண்டவன் புகழால் மிக்கவன். தர உவமைவாசகம். ௪௧

அல்லையாண்டமைந்தமேனியழகனுமவளுந்துஞ்ச
வில்லையூன்றியகையோடும்வெய்துயிர்ப்போடும்வீரன்
கல்லையாண்டுயர்ந்ததோளாய்கண்கள்நீர்சொரியக்கங்குல்
எல்லைகாண்பளவுநின்றானிமைப்பிலனயனமென்றான்.

(இ-ள்.) கல்லை ஆண்டு உயர்ந்ததோளாய் - மலையை யடிமைகொண் டுயர் ந்த தோளையுடைய பரதனே, அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவ ளும் துஞ்ச-இருளினைப் புறங்கண்டமைந்த திருமேனியையுடைய இராமமூர் த்தியும் சீதாப்பிராட்டியுந் துயில்கூர, வீரன் வில்லை ஊன்றிய கையோடும் வெ ய்துயிர்ப்போடும்-வீரனாகிய இளையபெருமாள் வில்லூன்றியகையோடும் பெரு மூச்சோடும், கண்கள் நீர்சொரிய கங்குல் எல்லை காண்பு அளவும் - கண்கள் நீர் சிந்த விடியுமளவும், நயனம் இமைப்பு இலன் நின்றான் என்றான்-கண்க ளிமை சேர்ட்டாது நின்றனனென்று கூறினான்.

துஞ்சு நிகழ்காலவினையெச்சம் துஞ்சு பகுதி, உகரத்தோடு சந்தி, அ எச்ச விகுதி. நயனமிமைப்பிலன் முதல்வினைக்கு ஒற்றுமையுண்மையால் சினை வினை முதலொடு முடிந்தது. காண்பு என்னுந் தொழிற்பெயரொச்சத்தில் வந்தது. சஉ

என்பத்தைக்கேட்டமைந்தனிராமனுக்கிளையாரென்று
முன்பொத்ததோற்றத்தேமுள்யானென்றுமுடிவிலாத
துன்பத்துக்கேதுவானேனவனதுதுடைக்கநின்றான்
அன்பத்துக்கெல்லையுண்டேயழகிதென்னடிமையென்றான்.

(இ-ள்.) என்பது ஐ கேட்ட மைந்தன்-என்று கூறியதைக் கேள்வியுற்ற பரதாழ்வான், இராமனுக்கு இளையார் என்று முன்பு ஒத்த தோற்றத்தேமில்-இராமமூர்த்திக்குப் பின்பிறந்தவரொன்று முன்பொத்த பிறப்பினருள், யான் என்று உம் முடிவு இல்லாத துன்பத்துக்கு ஏது ஆனேன்-நானே யெப்பொழுது முடிவில்லாத துன்பத்துக்குக் காரணமாய்நின்றேன், அவன் அது துடைக்க நின்றான்-அவ்விலக்குவ னத்துன்பத்தைப் போக்கநின்றனன், அன்புக்கு எல்லை உண்டே என் அடிமை அழகிது என்றான்-அன்புக்கோ ரளவுண்டா மென்னடிமை அழகாயிருந்ததென்று கூறினான்.

ஒத்த தோற்றமாவது ஓர்காலத்தில் முன்னும் பின்னுமாகப் பிறந்த பிறப்பு. இராமமூர்த்தி யரசியலைவிட்டு வனத்திற்சென்று காய்கிழங்கருந்தி வெற்றுத் தரையிற் பள்ளிகொள்ள நின்றதற்குத்தான் காரணமாதலால் முடிவில்லாத துன்பத்துக் கேதுவானேனென்றான். என்பத்து தகரமெய் விரித்தல் அன்பத்துக்கு அத்துச்சாரியை. சங

அவ்விடையண்ணறானுமன்றரும்பொடியின்வைகித்
தெவ்விடைதரநின்றார்க்குஞ்செறிகழற்புளிஞர்கோமான்
இவ்விடைக்கங்கையாற்றினேற்றினையாயினெம்மை
வெவ்விடர்க்கடனின்றேற்றிவேந்தன்பால்விடுத்ததென்றான்.

(இ-ள்.) அ இடை அண்ணல்தான் உம் - அவ்விடத்தில் பரதாழ்வானும், அன்று அரும்பொடியின் வைகி - அக்காலத்தி லடைதற்கரிய புழுதியிற் றங்கி, தெவ் இடைதர நின்று ஆர்க்கும் செறிகழல் புளிஞர் கோமான்-பகைவர்கள் முதுகிட நின்றொலிக்கும் நெருங்கிய வீரகண்டையையுடைய வேடர்களுக்கு அரசனே, இ இடை கங்கை ஆற்றின் ஏற்றினையாயின்-இந்தவிடத்திற் கங்கையாற்றினின்றுங் கரையேற்றுவையானால், எம்மை வெம் இடர் கடல்நின்று ஏற்றி வேந்தன்பால் விடுத்தது என்றான் - எங்களை கொடிய துன்பக்கடலினின்றுங் கரையேற்றி இராமமூர்த்தியினிடத்து விடுத்ததாமென்று கூறினான்.

கோமான் அண்மை விளி. வெம்மை என்னும் பண்புப்பகுதி ஈறுகெட்டு முன்னின்ற மெய்திரிய வருமொழி முதலுயிர்வரத் தனிக்குறின் முன்னொற்றிரட்டித்து வெவ்விடர் என நின்றது. ஏற்றினையென்னும் வினைமுற்றினின்று பிரிந்த தொழிற்பெயர் விடுத்தது என்னும் பயனிலைகொண்டது. அவ்விடை,

இவ்விடை யகரத்தோற்றம் "எகரவிறு முச்சுட்டின் முன்னர்-உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்" என்ற விதியால். ௯௪

நன்றெனப்புளிஞர்வேந்தனண்ணினன்றமரைநாவாய்
சென்றுநீர்தருதிரென்னவந்தனசிவன்சேர்வெள்ளிக்
குன்றெனக்குனிக்குமம்பொற்குவடெனக்குபேரன்மானம்
ஒன்றெனநாணிப்பல்வேறுருவுகொண்டனையவான.

(இ-ள்.) நன்று என்ன புளிஞர் வேந்தன் தமரை நண்ணினன் - நல்லதென்று வேடர்களுக்கு அரசனாகிய குகன் உறவினரையடைந்து, நீர் சென்று நாவாய் தருதிர் என்ன நீர்போய் மரக்கலங் கொண்டுவருவீரென்று கூற, சிவன் சேர் வெள்ளிக்குன்று-சிவபெருமான் தங்கிய வெள்ளிமலையும், குனிக்கும் அம் பொன்குவடு என - அப் பெருமான் வளைத்த அழகிய பொன்மலையும், குபேரன் மானம் என-குபேரனது புட்பவிமானமும், ஒன்று என நாணி பல்வேறு உருவு கொண்டால் அனைய ஆனவந்தன - ஒன்றென்பதற்கு நாணிப் பலவகைப்பட்ட வெவ்வேறு வடிவைக்கொண்டா லொத்தனவாகிய மரக்கலங்கள் வந்தன.

நண்ணினன் முற்றெச்சம். மானம் என்பத னிறுதியில் எண்ணிடைச்சொல் தொக்குநின்றது. என வென்பது எண்ணிடைச்சொல். வெள்ளிமலையும் பொன்மலையும் புட்பவிமானமுமாகிய உபமானப்பொருள்கள் அப்பொழுது நிகழ்கின்ற செயலிற் பயன்படுதற்கு உபமேயப் பொருளினுருவைக்கொண்டு பரிணமித்ததாகக் கூறுதலால் திரிபணி. இதனை வடநூலார் பரிணாமாலங்காரம் என்பர். தருதிர் முன்னிலைப்பன்மை யேவல் வினைமுற்று. ஒத்தனவான ஒருசொல்லாய் வினைமுற்றுப்பெயராயின. ௯௫

நங்கையர்நடையினன்னம்நாணுறுசெலவினுவாய்
கங்கையுமிடமிலாமைமிடைந்தனகலந்தவெங்கும்
அங்கொடிங்கிழித்தியேற்றுமமைதியினமரர்வையத்
திங்கொடங்கிழித்தியேற்றுமிருவினையென்னலான.

(இ-ள்.) நங்கையர் நடையின் அன்னம் நாணுறு செலவின் - பெண்கள் நடைபோன்ற நடையினாலும் அன்னம் நாணும் செலவினாலும், கங்கையும் இடம் இல்லாமை-கங்காநதியு மிடமல்லாமல், எங்கும் கலந்த மிடைந்தன நாவாய் - எவ்விடத்துங் கலந்தனவாகி நிறைந்த மரக்கலங்கள், அங்கு இங்கு இழித்தி ஏற்றும் அமைதியின்-அவ்விடத்து மிவ்விடத்து மிறக்கியேற்று மமைதியால், அமரர் வையத்து-தேவருலகும் நிலவுலகுமாகிய, இங்கு அங்கு இழித்தி ஏற்றும் இருவினை என்னல் ஆன - இவ்விடத்து மவ்விடத்து மிறக்கியேற்று மிருவினைப்பயன்போலென்று சொல்லவு மமைந்தன.

தன்னாடி நடக்கும் நடையையுடையன வென்பார் நங்கையர் நடையினன்னம் நாணுறுசெலவின் எனவும், இருவினைப்பயனும் தம்மைச் செய்தவரை யின்னுலகேற்றலும் அப்பயன் கழிந்தவழி நிலவுலகி லிறக்கலு முடைமைபோல வடகரையிலேற்றித் தென்கரையி லிறக்குதலால் அங்கொடிங்கிழித்தி

யேற்று மமைதியி னமரர்வையத்-திங்கொடங் கிழித்தியேற்று மிருவினையென் னலான வெனவுங் கூறினர். மிடைக்தன, கலந்தவென்னும் வினைமுற்றுகள் பெயரொச்சமாய்த் தனித்தனி நாவாயென்னும் பெயர்கொண்டன. ஒடு என் னுருபு, அமரர் உலகின்மேல் நிற்றலால் தானியாகுபெயர். இல்லாமை எதிர் மறைக்குறிப்பு வினையெச்சம். இன்மை பகுதி, ஈறுகெடுதலும் லகரத்தோற்ற மும் சந்தி, அ சாரியை, மை எச்சவிகுதி. இழிந்தி பிறவினை வினையெச்சம் இழித்து பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி.

தன் வினையில் இழிந்து எனவரும். இது தெரிதரு தேற்றவுவமையணி.()

வந்தனவரம்பினாவாய்வரிசிலைக்குரிசின்மைந்த
சிந்தனையாவதென்றுசிருங்கிபேரியர்கோன்செப்பச்
சுந்தரவரிவிலானுஞ்சுமந்திரன்றன்னைநோக்கி
எந்தையித்தானைதன்னையேற்றுதிவிரைவினென்றான்.

(இ-ள்.) வரிசிலை குரிசில்மைந்த வரம்பு இல் நாவாய் வந்தன - கட்டமை ந்த வல்வினையேந்திய தசரதன் புந்திரனே கணக்கிறந்த மரக்கலங்கள் வந்தன, சிந்தனையாவது என்று சிருங்கி பேரியர்கோன் செப்ப - கருத்தென்னவென்று சிருங்கி பேரியில் வாழ்வோர்க் கரசனாகிய குகன் வினவ, சுந்தரம் வரிவில்லா னும் சுமந்திரன் வன்னைநோக்கி-அழகிய கட்டமைந்த வில்லையேந்திய பரதாழ் வானும் முதலமைச்சனாகிய சுமந்திரனைப்பார்த்து, எந்தை - என்றந்தைபோல் வாய், இ தானை தன்னை விரைவின் ஏற்றுதி என்றான்-இச்சேனையை விரைவில் மரக்கலத்தி லேற்றுவாயென்று கூறினான்.

ஏற்றுதி முன்னிலையொருமை யெதிர்காலவினைமுற்று ஏற்று பகுதி, து சாரியை, உகரக்கேடுசந்தி, இ விகுதி. விகுதிகாலங் காட்டியது. சஎ

குரிசிலதேவலாலக்குரகதத்தேர்வலானும்
வரிசையின்வழாமைநோக்கிமரபுளிவகையினேற்றக்
கரிபரியிரதங்காலாள்கணக்கறுகரையில்வேலை
எரிமணித்திரையின்வீசுங்கங்கையாறேறிற்றன்றே.

(இ-ள்.) குரிசிலது ஏவலால்-பரதாழ்வானேவலால், அகுரகதம் தேர்வல் லானும் - அந்தக் குதிரைபூட்டிய தேரில்வல்ல சுமந்திரனும், வரிசையின் வழா மைநோக்கி-வரிசையோடு தவறாமற் சேனையைப்பார்த்து, மரபு உளிவகையின் ஏற்ற-கிரமத்தோடு முறைப்படி யேற்ற, கரி பரி இரதம் காலாள்கணக்கு அறு கரை இல் வேலை-யானையுங் குதிரையும் தேரும் காலாளுமாகிய அளவில்லாத கரையில்லாத சமுத்திரமானது, எரிமணிதிரையின் வீசும் கங்கை ஆறு ஏறி ற்று-தீப்போன்ற மாணிக்கங்களை யலையால்வீசும் கங்கையாற்றிற் சென்றது.

வழாமை எதிர்மறைவினையெச்சம் ஈறுகெட்டுநின்ற வழுவு பகுதி, ஆ எதிர் மறைவிகுதி, முற்றுகரக்கேடு சந்தி, அனைத்தும் ஒருபகுதி, மை எச்சவிகுதி.

உடன் மூன்றும்வேற்றுமைச்சொல் லுருபிடைச்சொல். கனையில் வேலை என்றது விலக்குருவகவணியும், கங்கையாற்றில் சேனையாகிய கடல்சென்றது என்றது ஆதாரத்தினும் ஆதேயம் பெரிது என நிற்றலால் பெருமையணியும் கலந்து நிற்றலால் கலவையணி. ௬௮

இடிபடுமுழக்கம்பொங்கவினமழைமகரநீரை
முடிவுறமுகப்பவூழியிறுதியின்மொய்ப்பபோலக்
கொடியொடுவங்கம்வேலைகூம்பொடுபடர்வபோல
நெடியகையெடுத்துநீட்டிநீந்தினநெடுங்கைவேழம்.

(இ-ள்.) இனமழை-மேககூட்டங்கள், படு இடி முழக்கம் பொங்க - ஒலிக்கு மிடிமுழக்க மிக, மகரநீரை-கடலை, முடிவுறமுகப்ப ஊழி இறுதியின் மொய்ப்பபோல - வறக்கும் படி முகக்க ஊழிக்காலத்தின் முடிவில் நெருங்குதல்போலவும், கொடியொடு கூம்பு ஒடு-கொடியோடும் பாய்மரத்தோடும், வங்கம்வேலை படர்வபோல-மரக்கலம் கடலிற்செல்லுதல்போலவும், வேழம் நெடியகை எடுத்துநீட்டி நீந்தின-யானைகள் நீண்டகையை மேலெடுத்து நீந்திக் கங்கையை நீந்தின.

மொய்ப்ப, படர்வ என்னும் நிகழ்காலவினைமுற்றுகள் தொழில்மேல்நிற்றலால் வினைமுற்றுப்பெயர்கள். தொழில்பற்றிவந்த பலபொருளுவமையணி மகரநீர் என்னும் தொகைநிலைப்பொருள் முன்மொழிநிலையால் கடல் என நிற்றலின் மகரநீர் என்றார். "முன்மொழி பின்மொழி" என்னுஞ் சூத்திரத்தாலறிக. ௬௯

சங்கமுமகரமீனுந்தாளமுமணியுந்தள்ளி
வங்கநீர்க்கடலும்வந்துதன்வழிப்படரமானப்
பொங்குவெங்களிறுநூக்கக்கரையொரீஇப்போயிற்றம்மா
கங்கையுமிராமற்காணுங்காதலதென்னமாதோ.

(இ-ள்.) வங்கம் நீர்க்கடலும் சங்கம் உம் மகரமீனும் தாளமும் மணியும் தள்ளிவந்து-மரக்கலந் தவழுநீர் மயமாகிய கடலும் சங்கினையு மகரமீனையு முத்துகளையு மாணிக்கங்களையுங் கொழித்துவந்து, தன்வழிபடரமான - தன்னிடத்துச் செல்லுதலையொக்கவும், இராமன் காணும் காதலது என்ன-இராமமூர்த்தியைக் காணும் விருப்பத்தையுடையதுபோலவும், கங்கையும் பொங்குவெங்களிறு நூக்ககரை ஒருவிபோயிற்று-கங்காநதியும் மதம்வழியும் கொடியயானைகள் நீந்தித்தள்ளக் கரைகடந்துபோனது.

யானைகள் தள்ள மேலேறிய நீர்மீட்டும் கங்கையில்வந்து சேர்தலால் தன் வழிப்படரமான என்றார். படர என்னும் வினையெச்சத்தினின்று பிரிந்ததொழிற்பெயர் இரண்டனுருபு ஏற்று நின்றது. நூக்க நிகழ்காலவினையெச்சம் நூக்கு பகுதி, உகரக்கேடு சந்தி, அ எச்சவிகுதி. இராமற்காணும் உயர்திணைப்பெயர் முன் வருமொழி வல்லெழுத்துவர நிலைமொழியீறியல்பாகாது திரிதல் "இயல்பின் விகாரமும்" என்ற புறனடைச்சூ-ஆல். ௭0

கொடிஞ்சொடுதட்டுமெச்சுமாழியுங்கோத்தமொட்டும்
நெடுஞ்சுவர்கொடியும்யாவும்நெறிவருமுறையினீக்கி
விடுஞ்சுவற்புரவியோடும்வேறுவேறேற்றிச்சென்ற
மடிஞ்சபினுடம்புகூட்டும்வினையெனவயிரத்தேர்கள்.

(இ-ள்.) மடிஞ்சபின் உடம்பு கூட்டும் வினை என்ன வயிரத்தேர்கள்-ஒருடம்பினின்று நீங்கியபின் மற்றையோருடம்பிற்கூட்டும் வினைப்பயனைப் போல வயிரமிழைத்த தேர்களை, கொடிஞ்சு ஒடு தட்டு உம் அச்சம் ஆழியும் கோத்தமொட்டும் - கொடிஞ்சென்னு முறுப்பினேடு தட்டுமச்சும் உருளையுங் கோவைசெய்த மொட்டும், நெடுஞ்சுவர் கொடியும் யாவும் நெறிவரு முறையின்நீக்கி-நெடிய குத்துக்காலாகிய சுவரும் ஆகிய எல்லாவற்றையும் சிற்பநூல் வழியாக வமைந்தனவற்றை முறையாகக்கழற்றி, விடும்சுவல் புரவியோடு உம் வேறுவேறு ஏற்றிசென்ற-பூட்டினின்று நீக்கிய புறமயிரையுடைய குதிரையோடும் வெவ்வேறாக வேற்றி மரக்கலங்கள் சென்றன.

மொட்டு என்றமையால் கொடிஞ்சு என்றதை ஒருறுப்பு என்றும். பலவின்பாற்பொருளில்வந்த யாவென்னும் வினவிடைச்சொல் எல்லாம் என்னும் பொருள்மேல்நின்றது. நீக்கலும் ஏற்றலும் ஒருவினை முதற்றொழில்களாக மரக்கலத்தின்மேலேற்றிக் கூறியது. "நடத்தற் தேர் நடக்கது" என்றாற்போலும். மரக்கலத்திற்சென்ற தேருறுப்புகள் கரையடைந்தபின் கூட்டப்படுதலால் வினையென என்றார் இது தெரிதருதேற்ற வுவமையணி. ருக

நாலிரண்டாயகோடிநவைபிறவாய்கண்பெய்தாச்
சேறிரண்டனையவாயகதியொடும்நதியிற்சென்ற
பாறிரண்டனையமெய்யபயந்திரண்டனையநெஞ்ச
காறிரண்டனையகாலகடுநடைக்கலிமாப்பாய்மா.

(இ-ள்.) பால்திரண்டால் அனைய மெய்ய-பால் திரண்டாலொத்த மேனிகளையுடையனவும், பயம் திரண்டால் அனைய நெஞ்ச - பயந்திரண்டாலொத்த மனங்களையுடையனவும், கால்திரண்டால் அனையகால-காற்றுத்திரண்டாலொத்த கால்களையுடையனவுமாகிய, கடுநடை கலிமம்பாய்மா-விரைந்துசெல்லும் நடையினையும் கடிவாளத்தையுமுடைய குதிரைகள், நாலிரண்டு ஆயகோடி நவை இல் நாவாய்கள் மீது ஆக-எட்டுக்கோடியென்னுங் கணக்கையுடையகுற்றமில்லாத மரக்கலங்களின்மேலாக, சேல் திரண்டால் அனைய ஆயகதி ஒடும் நதியில்சென்ற-சேற்கெண்டைகள் திரண்டுசென்றாலொத்த வேகத்தினோடும் விரைந்துசென்றன.

கடு கடியென்னும் உரிச்சொற்றிரிபு. திரண்டனைய வினையெச்சமே உவமையாய்நிற்றலால் வினையெச்சவுவமம். வெருட்சியையுடைமையால் பயந்திரண்டனைய நெஞ்ச என்றார். மெய்ய, நெஞ்ச, கால என்னும் குறிப்பு வினைமுற்றுகள் எச்சமாய்நின்றன. குதிரைக்கு இயல்பாயுள்ள கதியோடு இவ்விரையு

முடையனவாயின என்பார் சேறிரண்டனையவாய கதியொடும் விளாவிற்சென்ற என்றார். இயல்பாயுள்ள கதி மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி. ௫௨

ஊடுறநெருக்கியோடத்தொருவர்முன்னொருவர்கிட்டிச்
சூடகத்தளிர்க்கைமாதர்குழுமினர்துவன்றித்தோன்றப்
பாடியல்களிநல்யானைப்பந்தியங்கடையிற்குத்தக்
கோடுகண்மிடைந்தவென்னமிடைந்தனகுவவுக்கொங்கை.

(இ-ள்.) ஓடத்து ஊடு உற நெருக்கி ஒருவர் முன் ஒருவர்கிட்டி - ஓடத்தினிடையிற் பொருந்த நெருக்கி ஒருவர்க்குமுன்னே யொருவர் எதிர்ந்து, சூடகம் தளிர்கை மாதர் குழுமினர் துவன்றிதோன்ற-வளையணிந்த தளிர்போன்ற கைகளையுடைய பெண்கள் திரண்டு நெருங்கித் தோன்றுதலால், குவவுகொங்கை - திரண்ட அவர்கள் தனங்கள், பாடு இயல்களி நல்யானைபந்தி கடையில் குத்த கோடுகள்மிடைந்த என்னமிடைந்தன-பெருமையமைந்த மதக்களிப்பையுடைய அரசயானையின் வரிசையில் நுனியாற்குத்தும்படி யவற்றின் கொம்புகள் நெருங்கியிருத்தல்போல நெருங்கின.

சூடகம் வளையலில் ஒருவகை. ஓடம் படவில் ஒருவகை. துவன்றி இறந்தகாலவினையெச்சம் துவன்று பகுதி. மிடைந்தசாரியை பெறுதுவந்த பலவின்பாற்படர்க்கை யிறந்தகாலவினைமுற்று மிடை பகுதி, நகரமெய்சந்தி, தகரமெய் இடைநிலை, அ விகுதி. ௫௩

பாங்கினுத்தரியமானப்படர்திரைதவழப்பாரின்
வீங்குநீரழுவந்தன்னுள்விழுமதக்கலுழிவெள்ளத்
தோங்கல்கடலைகடோன்றவொளித்தவனுயர்ந்தகும்பம்
பூங்குழற்கங்கைநங்கைமுலையெனப்பொலிந்தமாதோ.

(இ-ள்.) பாங்கு இன் உத்தரியம்மான படர்திரைதவழ-பக்கத்தில் உத்தரியத்தையொத்துத் தோன்றப் பரவிய அலைகள் தவழ, பாரின்வீங்குநீர் அழுவம் தன் உள் - மிக்க கங்கைநீர்ப்பரப்பில், விழுமதம் கலுழிவெள்ளத்து ஓங்கல்கள் தலைகள்தோன்ற ஒளித்து அவண் உயர்ந்தகும்பம்-சிந்தாநின்ற மதமாகிய காட்டாற்றின் பெருக்கினையுடைய யானைகளின் றலைகளொளிசெய்து அவ்விடத்திலுயர்ந்த மத்தகங்கள், பூ குழல் கங்கை நங்கை முலை என்ன பொலிந்த-மலரையணிந்த கூந்தலையுடைய கங்கையென்னும் பெண்ணின் தனங்களைப்போலவிளங்கின.

ஒளித்து இறந்தகாலவினையெச்சம் ஒளி பகுதி, தகரமெய்சந்தி, தகரமெய் இடைநிலை, உ எச்சவிகுதி. அலை உத்தரியமாகவும்-மத்தகம் தனங்களாகவுங் கூறுதலால் ஒப்புமைக்கூட்டவுவமையணி. மதக்கலுழிவெள்ளத்து ஓங்கல்களென்றது சிறப்புருவகம். ௫௪

பொலன்குழைமகளிர்காவாய்போக்கினென்றென்றுதாக்க
மலங்கினரிரண்டுபாலுமறுகினர்வெருவிநோக்க
அலங்குநீர்வெள்ளந்தள்ளியழிதரவங்குமிங்கும்
கலங்களின்வெருவிப்பாயுங்கயற்குலம்நிகர்த்தகண்கள்.

(இ-ள்.) பொலன்குழை மகளிர்காவாய் போக்கின் ஒன்று ஒன்றுதாக்க- பொன்னாற்செய்த குண்டலத்தையுடைய பெண்களேறிய மரக்கலங்கள் போதலா லொன்றோடொன்று மோத, மலங்கினர் இரண்டுபாலும் மறுகினர்வெருவி நோக்க-நடுங்கி யிரண்டுபக்கத்திலுஞ் சுழன்று அஞ்சிப்பார்த்தலால், கண்கள்- அப்பெண்களின் கண்கள், அலங்குநீர்வெள்ளம் தள்ளி அழிதர - அசையும் நீர் மயமாகிய அக்கங்காவெள்ளத்தைத் தள்ளியலைக்க, அங்கும் இங்கும் கலங்களின் வெருவிபாயும் கயல்குலம் நிகர்த்த - அவ்விடத்து மிவ்விடத்தும் அசையு மரக்கலங்களின்மே லஞ்சிப்பாயும் சேற்கெண்டையின்கூட்டத்தையொத்திருந்தன.

கலங்கலின் வெருவிப்பாயுங் கயற்குலம் எனப் பாடங்கொண்டு வெள்ளந் தள்ளியலைக்க அங்கு மிங்கும் அந்தக் கலங்கலின்மே லஞ்சிப்பாயுங் கயற்குலம் எனப் பொருள்கூறுதலு மமையும். மரக்கலங்க ளொன்றோடொன்று தாக்க அதனை யஞ்சிக் கண்கள் பார்த்தமையால் வெள்ளத்தள்ளியலைத்தலால் நிலைபெறாது சேற்கெண்டைகள் அம்மரககலத்தின்மேற் பாய்தலையொத்திருந்தன என்பது பொருள். மலங்கினர், மறுகினர் முற்றெச்சங்கள். மலங்கு, மறுகு பகுதிகள். போக்கு இடையிலொற்றிரட்டித்துவந்த தொழிற்பெயர். இது தொழில்பற்றி வந்த வுவமையணி. ௫௫

இயல்வுறுசெலவினாவாயிருகையுமெயினர்தூண்டத்
துயல்வனதுடுப்புவீசுந்துவலைகண்மகளிர்மென்றா
சுயல்வுறுபரவையல்குலொளிப்புறத்தளிர்ப்பவுள்ளத்
தயர்வுறுமதுகைமைந்தர்க்கயர்வுயிர்ப்பளித்தவம்மா.

(இ-ள்.) இயல்வுறு செலவின்காவாய்-செல்லுஞ் செலவினையுடைய ஓடங்களை, இருகையும் எயினர்தூண்ட துயல்வன-இரண்டுபக்கங்களிலும் வேடர்கள் நடத்தத் துழாவும், துடுப்புவீசும் துவலைகள்-துடுப்புகள் வீசாநின்ற நீர்த்துளிகள், மகளிர்மெல் தூசு உயல் உறு பரவை அல்குல் ஒளிப்புறதளிர்ப்ப - பெண்களணிந்த மெல்லிய ஆடை நனைந்து மேம்பாடுற்ற பரந்த அல்குல்மறையத் தோன்றும் அவை, உள்ளத்து அயர்வுறும் மதுகைமைந்தர்க்கு-காமத்தால் வருந்தும் வன்மையையுடைய புருடர்க்கு, அயர்வுயிர்ப்பு அளித்த-அச்சோர்வினின்று நீங்குதலைத் தந்தன.

நனைந்து சொல்லெச்சம். துயல்வன என்னும் பலவின்பாற்படர்க்கை வினைமுற்றுப்பெயரெச்சமாய் நின்றது. தளிர்ப்ப என்பது அல்குலின்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். ௫௬

இக்கரையிணைத்தசேனையெறிகடன்முகந்துவெஃகி
அக்கரையடையவீசிவறியனவணுகும்நாவாய்
புக்கலையாழிநன்னீர்பொறுத்தனபோக்கிப்போக்கி
அக்கணத்துவரிமீளுமகன்மழைநிகர்த்தமாதோ.

(இ-ள்.) இகரை இணைத்த சேனை எறிகடல் முகந்து எஃகி - வடகரையில் ஒலித்து நெருங்கிய சேனையாகிய கரையொடு மோதுங் கடலை மொண்டு ஏற்றி, அகரை அடைய வீசி வறியன அணுகும் நாவாய்-தென்கரையைச் சேரவிறக்கி ஒன்றுமில்லாதனவாய் வரு மரக்கலங்கள், அலை ஆழி புக்கு - அலையையுடைய கடலிற்புகுந்து, ஆழிநல் நீர்பொறுத்தன போக்கிப்போக்கி-கடலில் மிக்க நீரைப் பருகிச் சுமந்துவந்து முற்றுஞ்சொரிந்து, அகணத்து உவரிமீளும் அகல்மழை நிகர்த்த-அந்தக்ஷணத்தில் கடலில் நீர்முகக்கச்செல்லும் பரந்த மேகத்தையொத்தன.

முகந்து இறந்தகாலவினையெச்சம் முக பகுதி. எஃகி முதனிலைதிரியாது வந்த பிறவினை வினையெச்சம் எஃகு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி. பொறுத்தன முற்றெச்சம். உவரி உவர்த்தலாகிய வினைக்கு முதற்பொருளாய் நிற்றலால் வினைமுதற்பொருளில்வந்த தொழிற்பெயர் உவர் பகுதி, இ விகுதி. எறிகடல் என்றதில் எறிதொழிலடை. நிகர்த்தவம்மா எனவும் பாடம். ௬எ

அகிலிடுதூபமன்னவாய்மயிற்பீலியார்த்த
முகுளிடுமுரண்மாத்தண்டுகூம்பெனமுகிலின்வண்ணத்
துகிலொடுதொடுத்தசெப்பொற்றகட்டிடைதொடுத்தமுத்தம்
நகுகொடிநெடியபாயினவ்வெனச்சென்றநாவாய்.

(இ-ள்.) நாவாய் - ஓடமானது, அகில் இடு தூபம் அன்ன ஆய்மயில் பீலி ஆர்த்த-அகிற்கட்டையில் மூட்டிய புகையையொத்த ஆராய்ந்த மயிலிறகு கட்டப்பட்ட, முகுள் இடு முரண் மாதண்டு கூம்பு என்ன-அரும்புபோலுங் குமிழ்செய்த வலிய பெரியதண்டானது பாய்மரமாக, முகிலின்வண்ணம் துகில்தொடுத்த செம்பொன்தகடு இடைதொடுத்த முத்தம் நகுகொடி நெடியபாயின் நவ் என சென்ற - மேகம்போலுங் கரியநிறத்தையுடைய ஆடை விரித்த செவந்த பொன்னாலாகிய தகட்டிற் கோவைசெய்த முத்துகளால் விளங்குங் கொடியோடமைந்த நீண்ட பாயையுடைய மரக்கலத்தைப்போலப் போயின.

மயிற்பீலி துகிற்கொடியாகவும் முரண்மாத்தண்டு கூம்பாகவுங் கூறினமையால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. நவ் மரக்கலம் இது வடசொல். நாவாய் வடசொற்றிரிபு. ௬அ

ஆனனக்கமலத்தன்னமின்னன்னவமிர்தச்செவ்வாய்த்
தேனனைகுழலாரேறுமம்பிகள்சிந்துமுத்தம்
மீனெனவிரிந்தகங்கைவிண்ணெனப்பண்ணைமுற்றி
வானவர்மகளிருமானமேநிகர்த்தமாதோ.

(இ-ள்.) கமலத்து அன்ன ஆனனம்-தாமரைமலரையொத்த முகத்தையும், அமிர்தம் செவ்வாய் - அமிர்தம்போலுஞ் சொற்பொதிந்த செவந்தவாயினையுமுடைய, மின் அன்ன-மின்னலையொத்த, தேன் நனை குழலார் ஏறும் அம்பிகள்-தேனால் நனையுங் கூந்தலையுடைய பெண்களேறிய ஓடங்கள், சித்து முத்தம் மீன் என - கொழிக்கு முத்துகள் நட்சத்திரங்களைப்போலவும், விரித்த கங்கை விண் என்ன - பரவிய கங்கை ஆகாயம்போலவும், பண்ணைமுற்றி வானவர் மகளிர் ஊரும் மானம் ஏ நிகர்த்த-அங்கு விளையாட்டைமுடித்துத் தெய்வப்பெண்களேறிய விமானத்தையொத்திருந்தன. ௫௯

துளிபடத்துழாவுதிண்கோற்றுடுப்பிருகாலிற்றோன்ற
நளிர்புனற்கங்கையாற்றினடந்தெனச்செல்லுநாவாய்
களியுடைமஞ்ஞையன்னகனங்குழைக்கயற்கண்மாதர்
ஒளிரடிக்கமலந்தீண்டவுயிர்படைத்தனவேயொத்த.

(இ-ள்.) துளிபட தழாவு திண்கோல் துடுப்பு இருகாலின் தோன்ற-நீர்த்துளி சிதற இரண்டுபாலுந் துழாவாநின்ற திண்ணியகோலாகிய துடுப்புகளிரண்டு கால்களைப்போலத்தோன்ற, நளிர்புனல் கங்கை ஆற்றில் நடந்தால் என்ன செல்லும் நாவாய்-பெரிய நீர்மயமாகிய கங்கையாற்றில் நடந்தாற்போலச் செல்லும் ஓடங்கள், களி உடை மஞ்ஞை அன்னகனம் குழை கயல்கண்மாதர்-களிப்பையுடைய மயிலையொத்த கனம்பொருந்திய குண்டலத்தையும் கயல்போன்ற கண்களையுமுடைய பெண்களது, ஒளிர் அடி கமலம் தீண்ட உயிர்படைத்தன ஒத்தன-விளங்கும் பாததாமரை தீண்டுதலா லுயிர்படைத்ததையொத்திருந்தன.

கனங்குழைய கயற்கண் குறிப்புவினைப் பெயரெச்சத்தி னிடையில்வந்த இடைப்பிறவால். இது இல் பொருளுவமையணி. ௬0

மையறுவிசும்பின்மண்ணின்மற்றுமோருலகின்முற்றும்
மெய்வினைதவமேயன்றிமேலுமொன்றுளதோகீழோர்
செய்வினைநாவாயேறித்தீண்டலர்மனத்திற்செல்லும்
மொய்விசும்போடமாகத்தேவரின்முனிவர்போனார்.

(இ-ள்.) மை அறு விசும்பு இன் மண் இன் மற்றும் ஒருலகின் முற்றும்-குற்றமற்ற விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலு நாகருலகத்திலு மற்றையெல்லாவுலகத்திலும், மெய்வினை தவம் ஏ அன்றி-உண்மையாகிய தொழில் தவமேயல்லாமல், மேலும் ஒன்று உளது ஒ-அதன்மேல் வேறுண்டோ (இல்லை என்றபடி) கீழோர் செய்வினை நாவாய் ஏறி தீண்டலார் - கீழானவர் செய்யுந் தொழிலிற்பட்ட ஓடத்தின்மே லேறிச்செல்லாமல், மொய் விசும்பு மனத்து இல் செல்லும் ஓடம் ஆக - நெருங்கிய ஆகாயமே மனம்போல விரைந்து செல்லும் ஓடமாகக்கொண்டு, தேவர் இல் முனிவர் போயினார்-தேவரைப்போல முனிவர்கள் சென்றார்கள்.

மற்று பிறிது பொருளில்வந்த இடைச்சொல். கொண்டு சொல்லெச்சம். தீண்டலர் முற்றெச்சம். இல் உருவு ஒப்புப்பொருட்டு. ௬௧

கலிவிருத்தம்.

அறுபதினாயிரமக்குரோணியென்
றிறுதிசெய்சேனையுமெல்லைதீர்நகர்
மறுவறுமாக்களுமகளிர்வெள்ளமும்
செறிதிரைக்கங்கைபின்கிடக்கச்சென்றவே.

(இ-ள்.) அறுபதினாயிரம் அக்குரோணியென்று இறுதிசெய்சேனையும் - அறுபதினாயிரவக்குரோணியென்று முடிவுசெய்த சேனையும், எல்லைதீர் நகர் மறு அறுமாக்களும் மகளிர் வெள்ளமும்-அளவில்லாத அயோத்திநகரில் வசிக்கும் குற்றமற்ற மைந்தரும் பெண்கள்கூட்டமும், திரை செறிகங்கை பின்கிடக்க சென்ற-அலைகள் நெருங்கிய கங்கை பிற்படக் கரையேறிச்சென்றன.

மகளிர் இர் புதியன புகுதலால் வந்த பகர்பால்விகுதி. இது ஒருமை பன்மை மயக்கம். வெள்ளம் பண்பாகுபெயராய்ப் பிரவாகத்தின்மேல் நின்றது வெண்மை பகுதி, ஈறு கெடுதலும் ளகரத்தோற்றமும் சந்தி, அம் பண்புப்பெயர் விகுதி. ௬௨

சுழித்துநீர்வருதுறையாற்றைச்சூழ்படை
கழித்துநீங்கியதெனக்கள்ளவாசையை
அழித்துவேறவனிபண்டாண்டவேந்தரை
இழித்துமேலேறினன்றானுமேறினன்.

(இ-ள்.) சுழித்து வருநீர் துறை ஆற்றை - சுழியெறிந்துவரு நீர்த்துறையையுடைய கங்கையை, சூழ்படை கழித்து நீங்கியது என்ன-தன்னைச் சூழ்ந்த சேனை கடந்துசென்றதென்று. கள்ள ஆசையை அழித்து - பிறரை வஞ்சிக்குமாசையையொழித்து, அவனிபண்டு ஆண்ட வேறுவேந்தரை இழித்து - உலகினை முன்பு ஆண்ட மற்றையரசர்களை தன்னுயர்ச்சியால் இழிவுபடுத்தி, மேல் ஏறினன் தானும் ஏறினன்-அவ் வுயர்நிலையினின்ற பரதாழ்வானும் ஓடத்திலேறினன்.

சுழித்து, இழித்து இறந்தகாலவினையெச்சங்கள் சுழி, இழி பகுதிகள். ()

தன்னனதம்பியுந்தாயர்மூவரும்
சொன்னதேர்வலவனுந்தூயதோழனும்
துன்னினரேறலுந்துழாதுடுப்பெனும்
நன்னயக்காலினனடத்தன்மேயினன்.

(இ-ள்.) தன் அன்ன தம்பியும் தாயர் மூவரும் சொன்ன தேர்வலவனும் தூயதோழனும் துன்னினர் ஏறலும் - தன்னையொத்த சத்துருக்கனும் தாய்மார் மூவரும் புகழ்ந்து சொல்லப்பட்ட தேர்ப்பாகனுங் களங்கமில்லாத தோழமையையுடைய குகனும் நெருங்கித் தானேறிய ஓடத்திலேற, துழா துடுப்பு என்னும் நல்நயம் காலினால் நடத்தல் மேயினன்-துழாவுந் துடுப்பென்னும் நல்ல காலினால் நடக்கத்தொடங்கினன்.

தன்னினர் முற்றெச்சம். ஏறலும் நிகழ்காலவினையெச்சம் ஏறு பகுதி, உகரக்கேடு சந்தி, அல் சாரியை, உம் எச்சவிகுதி. தழா தழைப்பு வினைத்தொகை நிலைத்தொடராதலால் வருமொழிமுதல் வல்லெழுத்து மிகாது இயல்பாதல் "இயல்பினும்" என்ற சூ—இல் "மன்" என்ற மிகையால். ௬௪

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்,

சுற்றத்தார்தேவரொடுந்தொழநின்றகோசலையைத்தொழுதுநோக்கி
வெற்றித்தார்க்குரிசிலிவராரென்றுகுகன்வினவவேந்தர்வைகும்
முற்றத்தான்முதற்றேவிமூன்றுலகமீன்றானைமுன்னீன்றானைப்
பெற்றத்தாற்பெறுஞ்செல்வம்யான்பிறத்தலாற்றுறந்தபெரியாளெ
[ன்றான்.

(இ-ள்.) சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற கோசலையை தொழுது நோக்கி-சுற்றத்தார்கள் தேவரோடும் வணங்குகின்ற கௌசலாதேவியை வணங்கிப்பார்த்து, வெற்றிதார் குரிசில் இவர் ஆர் என்று குகன் வினவ-வெற்றிமாலையைச்சூடிய அரசனே இவர் யாரென்று குகன் வினவ, வேந்தர் வைகும் முற்றத்தான் முதல்தேவி-அரசர்கள் தங்கு முற்றத்தையுடைய தசரதனது முதற்றேவியும், மூன்று உலகம் ஈன்றானை முன் ஈன்றானை பெற்றதால் பெறும் செல்வம்-மூன்றுலகங்களையுஞ் சிருட்டித்த பிரமனை முன்புதந்த திருமாலாகிய இராமமூர்த்தியைப் பெற்றதா லடையுஞ் செல்வத்தை, யான் பிறத்தலால் துறந்த பெரியாள் என்றான் - யானொருவன் பிறத்தலா லச்செல்வத்தை யிழந்தவளுமாகிய கௌசலை யன்னையென்று பரதன் கூறினான்.

பெற்றத்தால் தகர மெய்விரித்தல் விகாரம், குரிசில் அண்மைவிளி. ௬௫

என்றலுமேயடியின்மிசைநெடிதுவீழ்ந்தழுவானையிவன்யாரென்று
கன்றுபிரிகாராவின்றுயருடையகொடிவினவக்கழற்கான்மைந்தன்
இன்றுணைவனிராகவனுக்கிலக்குவற்குமிளையவற்குமெனக்குமூத்தான்
குன்றனையதிருநெடுந்தோட்குகனென்பானிந்நின்றகுரிசிலென்று[ன்
[ன்.

(இ-ள்.) என்றலும்-என்று கூற, அடியின்மிசை நெடிது வீழ்ந்து அழுவானை இவன் யார் என்று - தன் காலின்மேலே நெடிதுநேரம் வீழ்ந்தழுகின்ற குகனைப்பார்த்து, இவன் யார் என்று கன்று பிரி காராவின் துயர் உடைய கொடி வினவ - இவன் யாரென்று கன்றினைப்பிரிந்த பெரிய பசுவைப்போலத் துன்பமுடைய பூங்கொடிபோன்ற கௌசலாதேவி வினவ, கழல்கால் மைந்தன்-வீரகண்டைகட்டிய காலையுடைய பரதாழ்வான், இ நின்ற குரிசில் இராகவனுக்கு இன் துணைவன் - இவ்விடத்துநின்ற பெருமையிற்சிறந்தோன் இராமமூர்த்திக்கு இனியசகோதரன், இலக்குவற்கும் இளையவற்கும் எனக்கும் மூத்தான்-இலக்குவனுக்கும் சத்துருக்னனுக்கு மெனக்கு மூத்தவன், குன்று அனைய

திருமெய்த்தோள் குகன் என்பான் என்றான் - மலையையொத்த அழகிய நெடிய தோளையுடைய குகனென்று சொல்லப்படுவோனென்று கூறினான்.

காரார-கார் கருமை (பெருமை) பகுதி வருமொழிமுதலுயிர்வர ஈறுகெட்டு முதனீண்டது. காரம்பசு எனினும் அமையும். சுசு

கைவீரலீர்மைந்தீரினித்துயராலுடிறந்துகாடுநோக்கி
மெய்வீரர்பெயர்ந்ததுவுநலமாயிற்றுமன்றேவிலங்கற்றிண்டோள்
கைவீரக்களிறனையகாளையிவன்றன்னொடுங்கலந்துநீங்கள்
ஐவீருமொருவீராயகலிடத்தைநெடுங்காலமளித்திரென்றான்.

(இ-ள்.) மைந்தீர் கைவீர் அல்லீர் - புத்திரரோ வருந்துதலொழியும், இனி துயர் ஆல் நாடு இறந்து காடுநோக்கி மெய்வீரர் பெயர்ந்தது உம் நலம் ஆயிற்று - இனித் துன்பத்தால் நாட்டைக்கடந்து காட்டைநோக்கி யுண்மையையுடைய இராமனு மிளையோனுஞ் சென்றது நல்லதாயிற்று, விலங்கல் திண்தோள் கைவீரம் களிறு அனைய காளை இவன் தன்னொடும் கலந்து-மலையையொத்த திண்ணிய தோளையுடைய துதிக்கைவாய்ந்த வீரத்தையுடைய யானையையுடைய இக்குகனொடுங் கலந்து, நீங்கள் ஐ வீரும் ஒருவீராய் அகலிடத்தை நெடுங்காலம் அளித்திர் என்றான்-நீங்களைந்துபேரு மொருவீரா யிந்நிலவுலகை நெடுங்காலம் பாதுகாப்பீரென்று ஆசீர்வதித்தார்.

மைந்தர் மைந்தீர் ! ஈற்றயலகரம் ஈகாரமாய்த்திரிந்துவந்த விளி வேற்றுமை. ஐ வீர், ஒருவீர் முன்னிலைப்பன்மைப் பெயர்ச்சொல். சுஎ

அறந்தானேயென்கின்றவயனின்றாடனைநோக்கியையவன்பின்
நிறைந்தானையுரையென்னநெறிதிறம்பார்த்தன்மெய்யைநிற்பதாக்கி
இறந்தான்றனிளந்தேவியாவர்க்குந்தொழுகுலமாமிராமன்பின்பு[ன்.
பிறந்தானுமுளனென்னப்பிரியாதான்றனைப்பயந்தபெரியாளென்று

(இ-ள்.) அறம் தானே என்கின்ற அயல் நின்றாள் தனை நோக்கி - தருமத்தின் வடிவேயென்று சொல்லப்படுகின்ற கௌசலாதேவியின் பக்கத்துநின்ற சுமித்திராதேவியைப்பார்த்து, ஐய-ஐயனே, அன்பின் நிறைந்தானை உரை என்ன-அன்பால் நிறைந்தவனைக் கூறுயென்று குகன் வினவ, நெறிதிறம் பாத்தன் மெய்யை நிற்பது ஆக்கி இறந்தான் தன் இளந்தேவி-நன்னெறியினின்றுந் திறம்பாத தனதுண்மையை நிலைபெறும்படிசெய்து இறந்த தசரதனது இளைய தேவி, யாவர்க்கும் தொழுகுலம் ஆம் இராமன் பின்பு பிறந்தானும் உளன் என்ன பிரியாதான் தன்னை பயந்த பெரியாள் என்றான் - எவராலும் வணங்கப்படுந் தெய்வமாகிய இராமமூர்த்திக்குப் பின்பிறந்தவனு மொருவனுண்டென்று பலருஞ்சொல்லப் பிரியாதவனாகிய இலக்குவனைப்பெற்ற பெரியவளென்று கூறினான்.

நின்றாள் பெயராய் நிற்றலால் என்கின்ற வென்னும் பெயரெச்சம் குன்றிய செய்ப்பாட்டுவினைப் பெயரெச்சத்தின் முடிபாய்நின்றது. கு உருபுமயக்கம். தொழுகுலம் தெய்வம். சுஅ

சுடுமயானத்திடைதன் றுணையேகத்தோன் றறுயர்க்கடலினேகக்
கடுமையார்கானகத்துக்கருணையார்கலியேகக்கழற்கான்மாயன்
நெடுமையாலன் றளந்தவுலகெல்லாந்தன் மனத்தேநினைந்துசெய்யுங்
கொடுமையாலளந்தாளையாரிவரென் றுரையென்னக்குரிசில்கூறும்.

(இ-ள்.) தன்துணை சுடுமயானத்து இடை ஏக-தனது கணவனுகிய தசர தன் சுடாநின்ற மயானத்திற் செல்லவும், தோன்றல் துயர்கடலின் ஏக - தனது புத்திரன் துன்பக்கடலில் மூழ்கவும், கடுமை ஆர் கானகத்து கருணை ஆர் கலி ஏக-வெப்பம்நிறைந்த காட்டில் கிருபாசமூத்திரமாகிய இராமமூர்த்தி செல்ல வும், கழல் கால் மாயன் நெடுமையால் அன்று அளந்த உலகு எல்லாம்-வீரகண் டைகட்டிய திருவடியையுடைய திருமால் திருவிக்கிரமமூர்த்தங்கொண்டு அக் காலத்தி லளந்த உலகையெல்லாம், தன்மனத்தே நினைந்துசெய்யும் கொடுமை ஆல் அளந்தாளை - தன் மனத்தேநினைந்து செய்யாநின்ற கொடுமையினு லளந்த கைகேசியை, இவர் யார் என்று உரை என்ன-இவர் யார் கூறுமென்று குகன் வினவ, குரிசில் கூறும்-பரதாழ்வான் கூறுவான். ௬௯

படரெல்லாம்படைத்தாளைப் பழிவளர்க்குஞ்செவிலியைத்தன்
பாழ்த்தபாவிக், குடரிலேநெடுங்காலங்கிடந்தேற்குமுயிர்ப்பாரங்கு
றைந்துதேய, உடரெலாமுயிரிலாவெனத்தோன் றுமுலகத்தேயொரு
த்தியன்றே, இடரிலாமுகத்தாளையறிந்திலையேலிந்நின்றுளென்னையீ
ன்றுள்.

(இ-ள்.) படர் எல்லாம் படைத்தாளை-துன்பங்களையெல்லாம் உண்டாக்கி னவளும், பழிவளர்க்கும் செவிலியை-பாவமென்னுங் குழந்தையை வளர்க்குஞ் செவிலித்தாய் போல்பவளும், இடர் இல்லாத முகத்தாளை-துன்பஞ் சிறிதுமில் லாத முகத்தையுடையவளுமாகிய இவள், பாழ்த்தபாவி தன்குடரில் நெடுங்கா லம் கிடந்தேற்கும் உயிர் பாரம் குறைந்துதேய - பாழ்செய்யு மிப்பாவியினது குடலில் நெடுங்கால மூறிக்கிடந்த வெனக்கு முயிர்ச்சுமை குறைந்து தேயும் படி, உலகத்து ஏ உடர் எல்லாம் உயிர் இல்லா என்னதோன்றும் ஒருத்தி அன் று ஏ-உலகத்திலேயுள்ள சரங்களெல்லா முயரில்லாதனவென்று சொல்லத்தோ ன்றுதற்கு எல்லையாகிய ஒருத்தியல்லவா, அறிந்திலையேல் இ நின்றுள் என்னை ஈன்றுள்-(இவளை) நீ யறியாயானுல் இங்கு நின்றவள் என்னைப் பெற்றவளென் று பரதாழ்வான் கூறினன்.

இருவரையுங் கூறி எஞ்சிநின்ற தாயையநோக்கி இப்பாதகி யானன்றி உல கத்தி லுயிர்களிழக்கத்தோன்றிய ஒருத்தியல்லவா நீ யறியாயோ; அறியாயானுல் இங்கு நின்றவள் என்னைப்பெற்றவள் என்று கூறினன். ஏனக் கொள்க. தோ ன்றும் என்னும் பெயரெச்சம் ஒருத்தியென்னும் எல்லைப்பொருள்கொண்டது. குடல், உடல் இறுதிநிலைப்போலியாய்க் குடர், உடர் என நின்றன. ௭0

கலிவிருத்தம்.

என்னக்கேட்டவ்விரக்கமிலாளையுந்
தன்னற்கையின்வணங்கினன்றுயென
அன்னப்பேடைசிறையிலதாய்க்கரை
துன்னிற்றென்னவும்வந்ததுதோணியே.

(இ-ள்.) என்ன கேட்டு-என்று பரதாழ்வா னிகழ்ந்து கூறக்கேட்டு; அ இரக்கம் இல்லாளை உம்-அந்த விரக்கமில்லாத கைகேசியையும், தாய் என்ன தன் நல்கையின் வணங்கினன் - (கொடுமைசெய்தவளாயினும்) தாயல்லவாவென்று தனது நல்ல கையால் வணங்கி நின்றனன், அன்னப்பேடை சிறை இலது ஆய்-பெட்டையன்னஞ் சிறையில்லாமல், கரை துன்னிற்று என்ன தோணிவந்தது-கரையையடைந்ததுபோலத் தோணிவந்தது.

உம்மை இரண்டனுள் முன்னது இழிவு சிறப்புப்பொருட்டு. பின்னது அசைநிலை. ௭௬

இழிந்ததாயர்சிவிகையினேறத்தான்
பொழிந்தகண்ணிற்புதுப்புனல்போயினன்
ஒழிந்திலன்குகனுமுடனேகினன்
கழிந்தனன்பலகாவதங்காலினே.

(இ-ள்.) இழிந்த தாயர் சிவிகையின் ஏற-தோணியினின்று மிறங்கிய தாய்மார்கள் பல்லக்கிலேறிச் செல்ல, தான் கண் இல் பொழிந்த புதுப்புனல் போயினன்-(பரதாழ்வான்) கண்ணினின்றுஞ் சொரிந்த புதுவெள்ளத்திற் சென்றனன், குகனும் ஒழிந்திலன் உடன் ஏகினன்-குகனும் சாயைபோல் நீங்காதுடன்போனான், பலகாவதம் காலின் கழிந்தனன்-பலகாதங் காலாற்சென்றுகழிந்து.

பாரத்தினீங்கும்பரத்துவனென்னும்பேர்
வரத்தின்மிக்குயர்மாதவன்வைகிடம்
அருத்திகூரவணுகினனாண்டவன்
விருத்தவேதியரோடெதிர்மேயினான்.

(இ-ள்.) பாரத்தின் நீங்கும் பரத்துவன் என்னும்பேர் வரத்தின் மிக்கு உயர்மாதவன் வைகு இடம்-பிரபஞ்ச பாரத்தினின்று நீங்கிய பரத்துவனென்னும் பெயரையுடைய வரத்தில் மேம்பட்டுயர்ந்த முனிவர் தங்குமிடத்தை, அருத்தி கூர அணுகினன்-அன்பு மிக்கெழப் பரதாழ்வானடைந்தான், ஆண்டு அவன் விருத்தவேதியர் ஒடு எதிர்மேயினன்-அவ்விடத்தில் அம்முனிவர் தவவொழுக்கத்தையுடைய முனிவர்களோடு எதிர்கொண்டார். ௭௭

குகப்படலமுற்றிற்று. ௮௰ திருவிருத்தம் ௭௭.

# கிளைகண்டு நீங்குபடலம்.

உறவினரைக்கண்டு சித்திரகூடத்தினின்று நீங்கிய சமூகமெனவிரிதலால் நான்குசொல் மூன்றுசந்தியாக்கி முன்னது எய்தப் படுபொருளில்வந்த இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகவும், இடையிலுள்ளது வினையெச்சத்தொகாநிலைத்தொடராகவும், இறுதியிலுள்ளது வினைத்தொகைநிலைத்தொடராகவுங் கொள்க. கிளைகண்டு இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடராதலால் வருமொழிமுதல் வல்லெழுத்து "இயல்பினும் விதியினும்" என்ற சூ—ஆல் மிகாது இயல்பாதல் "இயல்பின் விகாரமும் விகாரத்தியல்பும்" என்ற புறனடைச்சூ—ஆலும், கண்டு நீங்கு "எண்மூவெழுத்து" என்னுஞ் சூ—ஆலும், நீங்குபடலமென்றொடர் குற்றியலுகரமாதலால் "வன்றொடரல்லனமுன்மிகாவல்வழி" என்ற சூ—ஆலும் இயல்பாயின. கிளை ஒன்றினின்றொன்று கிளைத்தலால் உவமையாகுபெயரா யுறவினர்மேல் நின்றது.

வந்தமாதவத்தோனைப் பார்மைந்தனுந்
தந்தையாமெனத்தாழ்ந்து வணங்கினன்
இந்துமௌலியன்னானு மிரங்கினன்
அந்தமில்குணத்தாசிகள் கூறினான்.

(இ-ள்.) வந்த மாதவத்தோனை-முனிவரோ டெதிர்வந்த பரத்துவாசமுனிவனை, அ மைந்தனும் தந்தை ஆம் என்ன தாழ்ந்து வணங்கினன்-அந்தப் பரதாழ்வானுந் தனது பிதாவை பொடப்பவனென்று தாழ்ந்து வணங்க, இந்து மௌலி அன்னானும் இரங்கினன்-சந்திரனையணிந்த சடாமுடியையுடைய சிவபிரானையொத்த அம்முனிவரு மனமிரங்கி, அந்தம் இல் குணத்து ஆசிகள் கூறினான்-அளவில்லாத சாந்துவிதகுணத்தோடு ஆசிவசனங்கூறினார்.

உம்மைகள் உயர்வு சிறப்புப்பொருளன. வணங்கினன், இரங்கினன் முற்றெச்சங்கள். ௧

எடுத்தமாமுடிசூடி நின்பாலியைந்
தடுத்தபேரரசாண்டிலையையநீ
முடித்தவார்சடைக்கற்றையைமூசுதூ
சுடுத்துநண்ணுதற்குற்றதியாதென்றான்.

(இ-ள்.) ஐய-ஐயனே, எடுத்தமா முடிசூடி-உன் தந்தை சூட்டத்தொடங்கிய பெரிய மகுடத்தைச்சூடி, நின்பால் இயைந்து அடுத்தபேர் அரசு ஆண்டிலை-உன்னிடந்துப் பொருந்தி யடுத்த வரசியலை யாளாது, நீ முடித்தவார்சடை கற்றையை-நீ தரித்த நீண்ட சடைநெருக்கத்தையுடையவனாய், மூசு தூசு உடுத்து நண்ணுதற்கு உற்றுள்ளது யாது என்றான்-நெருங்கிய மரவுரியையுடுத்துக் காட்டையடைதற்கு நேரிட்டதென்னவென்று வினவினான்.

ஆண்டிலை எதிர்மறை முற்றெச்சம். கற்றையை முற்றெச்சம். ௨

சினக்கொடுந்திறற்சீற்றவெந்தீயினான்
மனக்கடுப்பினன்மாதவத்தோங்கலை
எனக்கடுத்ததியம்பிலைநீயென்றான்
உனக்கடுத்ததுமன்றரவோயென்றான்.

(இ-ள்.) கொடுந்திறல் சினம் சீற்றம் வெந்தீயினான்-கொடிய மிக்க கோபமாகிய வெய்ய தீயையுடையவனாகி, மனக்கடுப்பினன்-மனங் கொதித்தலைவாய்ந்த பரதாழ்வான், மாதவத்து ஓங்கலை எனக்கு அடுத்தது நீ இயம்பிலையென்றான்-பெரிய தவத்தில் மலைபோல் நிலைகலங்காத தோற்றத்தையுடைய முனிவரை நோக்கி யெனக்கடுத்தகாரியத்தை நீ கூறாதொழிந்தாயென்று பரதாழ்வான் கூறினான், உரவோய் உனக்கு அடுத்ததும் அன்று என்றான்-பெருமையையுடையோ யித்தலைத்தொழி லுனக்கடுத்த தொழிலல்லவென்று முனிவர் கூறினர்.

சினம் சீற்றம் ஒருபொருட் பன்மொழி. ௩

மறையின்கேள்வற்குமன்னிளந்தோன்றல்பின்
முறையினீங்கிமுழுநிலங்கொள்கிலேன்
இறைவன்காக்கிலனாமெனில்யாண்டெலாம்
உறைவன்கானத்தொருங்குடனேயென்றான்.

(இ-ள்.) மறையின் கேள்வற்கு - வேதத்தின் தலைவனாகிய இராமமூர்த்திக்கு, மன் இளந்தோன்றல்-நிலைபெற்ற பின்பிறந்தோன் யான், பின்முறையின் நீங்கி முழுநிலம் கொள்கிலேன்-(ஆதலால்) பின்கொள்ளு முறையினின்றுநீங்கி (அவனுக்குமுன்) உலகமுற்றும் அரசாளுதலைக் கொள்ளேன், இறைவன் காக்கிலன் ஆம் என்னில் - அவ்விராமமூர்த்தி உலகினை யோம்பாரானால், யாண்டு எல்லாம் ஒருங்கு உடனே கானத்து உறைவன் என்றான் - காலமெல்லாம் ஒருசேர அவரோடே காட்டில் வசிப்பேனென்று கூறினான்.

காலமெல்லாம் என்றது பதினான்குவருடமும். ௪

உரைத்தவாசகங்கேட்டலுமுள்ளெழுந்
திரைத்தகாதலிருந்தவத்தோர்க்கெலாம்
குரைத்தமேனியொடுள்ளங்குளிர்ந்ததால்
அரைத்தசாந்துகொண்டப்பியதென்னவே.

(இ-ள்.) உரைத்த வாசகம் கேட்டலும்-சொல்லிய வார்த்தையைக்கேட்டு, உள் எழுந்து இரைத்த காதல் - மனத்துள்ளெழுந்து அதிகரித்த ஆசையால், அரைத்த சாந்துகொண்டு அப்பியது என்ன-அரைத்த சந்தனக்குழம்பைக்கொண்டு மேலே அப்பியதுபோல, இருந்தவத்தோர்க்கு எல்லாம்-பெரிய தவத்தினையுடைய முனிவர்களுக்கெல்லாம், குரைத்த மேனியொடு உள்ளம் குளிர்ந்தது-பூரித்த மேனியோடு மனமுங் குளிர்ந்தது.

இளைத்தல், குளைத்தல் இவ்விரண்டும் ஒலித்தலென்னும் பொருளைத் தாராது பிற பொருள்மேல் நிற்றல் "உண்டற்குரிய அல்லாப்பொருளை - உண்டன போலக் கூறலு மரபே" என்ற தொல்காப்பியம் பொருளதிகாரச் சூத்திரத்தில் "கூறலும்" என வந்த உம்மையால். கேட்டலும் இறந்தகாலத்தில் வந்த வினையெச்சம். கேள் பகுதி, து அல்சாரியை, ளகரமுந் தகரமுந்திரிதலும் உகரக்கேடும் சந்தி, உம் எச்சவிகுதி. ௫

ஆயகாதலொடையனைக்கொண்டுதன்
தூயசாலையுறைவிடந்துன்னினன்
மேயசேனைக்கமைப்பென்விருந்தெனத்
தீயினாவுதிசெங்கையினீக்கினன்.

(இ-ள்.) ஆயகாதலொடு ஐயனை கொண்டு-அமைந்த விருப்பத்தோடு பரதாழ்வானை யழைத்துக்கொண்டு, தன் தூயசாலை உறைவிடம் துன்னினன் - பரத்துவாசமுனிவர் தமது களங்கமில்லாத பன்னசாலையாகிய இருப்பிடத்தையடைந்து, மேயசேனைக்கு விருந்து அமைப்பன் என - அடைந்த சேனைக்கு விருந்து செய்வேனென்று, செங்கையின் தீயின் ஆவுதி நீக்கினன்-தமது செவந்த கைகளால் வேள்வித்தீ வளர்த்து ஆகுதிபெய்து முடித்தார்.

ஆய, மேய ஆ, மே பகுதிகள், யகரம் இறந்தகால விடைநிலை, அ பெயரெச்ச விகுதி. நீக்கினன் இறந்தகாலவினைமுற்று நீக்கு பகுதி, இன் இடைநிலை, உகரக்கேடு சந்தி, அன் விகுதி. ௬

துறந்தசெல்வனினையத்துறக்கந்தான்
பறந்துவந்துபடிந்ததுபல்சனர்
பிறந்துவேறோருலகுபெற்றாரென
மறந்துவைகினர்முன்னைத்தம்வாழ்வெலாம்.

(இ-ள்.) துறந்த செல்வன் நினைய - பந்தத்தினின்று நீங்கிய தவச்செல்வத்தையுடைய பாரத்துவாசமுனிவர் ஆகுதி முடித்து நினைக்க, துறக்கம் தான் பறந்துவந்து படிந்தது-விண்ணுலகமானது அங்குநின்றும் வந்து நிலவுலகிற்படிந்தது, பல்சனர்பிறந்து வேறு ஓர் உலகுபெற்றார் என்ன-பரதாழ்வானோடு வந்த பலரும் மறுபிறப்படைந்து வேறோருலகினைப்பெற்றவரைப்போல, முன்னைதம் வாழ்வு எல்லாம் மறந்து வைகினர் - முன்பு தமக்குரிய வாழ்வினையெல்லா மறந்து தங்கினார்கள்.

வைகினர் பலர்பாற்படர்க்கை யிறந்தகாலவினைமுற்று வைகு பகுதி, உகரக்கேடு சந்தி, இன் இடைநிலை, அர் விகுதி. ௭

நந்தலில்லறம்நந்தினராமென
அந்தரத்தினரம்பையரன்பினர்

வந்துவந்தெதிரேத்தினர்மைந்தரை
இந்துவிற்சுடர்கோயில்கொண்டேகினார்.

(இ-ள்.) நந்தல் இல் அறம் நந்தினர் ஆம் என்ன-கெடுதலில்லாத தரும ப்பயன் விருத்தியடைந்தனராமென்று, மைந்தரை அந்தரத்தின் அரம்பையர் அ ன்பினர் வந்து வந்து எதிர் ஏத்தினர்-பரதாழ்வாரோடுசேர்ந்த புருடர்களை விண் ணுலகிலுள்ள அரம்பையர்க ளன்புடையவராய்வந்து எதிரே வணங்கி, இந்து இல் சுடர் கோயில்கொண்டு ஏகினார்-சந்திரனைப்போல விளங்குங் கோயிலிற் கொண்டு சென்றார்கள்.

நந்தல் கேடு, ஆக்கம் என்னும் பொருள்மேல் நிற்றலால் நந்தலில் லறம் நந்தினராமென்றார். தருமப்பயன் மிகவுமடைந்து போகபூமிக்கு வந்தவர்களை யரம்பையர்க ளுபசரித்தலால் இவ்வாறு கூறினார். ஏத்தினர் முற்றெச்சம். இந்து வடசொல்லாதல் ''உயிர்வரினுக் குறள்'' என்னுஞ் சூ— இல் ''ஓடும்'' என்ற இலேசால் குற்றி லுகரவீறு கெடாது இயல்பாய்நின்றது. அறம் நந்தினர் உயர் திணையொடு சார்ந்த அஃறிணை யுயர்திணை முடிபேற்றல் திணைவழுவமைதி. அ

கானம்நன்குரைத்தார்களிர்வானிடை
ஆனகங்கையருப்புனலாட்டினார்
தானமாமணிக்கற்பகந்தாங்கிய
ஊனமின்மலராடையுடுத்தினார்.

(இ-ள்.) கானம் நன்கு உரைத்தார்-(அரம்பையர்கள்) கஸ்தூரியை நன்றாக உரைத்து, களிர்வான் இடை ஆன கங்கை அரும்புனல் ஆட்டினார்-பெரியஆகா யத்திலமைந்த கங்கையினது பெறுதற்கரிய நீரின் மஞ்சனமாட்டி, தானம்மா மணி கற்பகம் தாங்கிய ஊனம் இல் மலர் ஆடை உடுத்தினார்-ஈகையையுடைய பெருமையமைந்த அழகிய கற்பகந்தந்த குற்றமில்லாத மலரைச்சூட்டி ஆடை யை யுடுத்தினார்கள்.

உரைத்தார், ஆட்டினார் முற்றெச்சங்கள். சூட்டி சொல்லெச்சம். ௬

கொம்பினின்றுநடங்குறுகொள்கையார்
செம்பொனின்கலராசிதிருத்தினார்
அம்பரத்தினரம்பையரன்பொடும்
உம்பர்கோனகரின்னமிர்தூட்டினார்.

(இ-ள்.) அம்பரத்தின் அரம்பையர் - விண்ணுலகிலுள்ள அரம்பையர்கள், கொம்பின் நின்று நடங்குறு கொள்கையார்-பூங்கொம்பைப்போல நின்று துவ ளும் பெண்களுக்கு, செம்பொன் இன் கலராசி திருத்தினார்-செவந்த பொன்னா ற்செய்த ஆபரணக்கூட்டங்களைத் திருத்தி, உம்பர்கோன் நகர் இன் அமிர்து அன்பொடும் ஊட்டினார்-இந்திரனுண்ணு மினிய அமிர்தினை யுண்பித்தார்கள்.

அஞ்சடுத்தவமளியலத்தகப்
பஞ்சடுத்தபரிபுரப்பல்லவ
நஞ்சடுத்தநயனியர்நவ்வியில்
துஞ்சவத்தனைமைந்தருந்துஞ்சினார்.

(இ-ள்.) அஞ்ச அடுத்த அமளி-இலவம்பஞ்சு முதலிய ஐந்தையும் பெய்த மெத்தையில், அலத்தகம் பஞ்சு அடுத்த பரிபுரம் பல்லவம் நஞ்சு அடுத்த நயனியர்-செம்பஞ்சுக்குழம்பூட்டிய சிலம்பையணிந்த தளிர்போன்ற கால்களையுடைய நஞ்சையொத்த கண்களையுடைய பெண்கள், நவ்வியில் துஞ்ச அத்தனை மைந்தரும் துஞ்சினார்-மானைப்போல நித்திரைசெய்ய அவ்வளவு புருடர்களுந் துயில் கூர்ந்தார்கள்.

இலவம்பஞ்சுமுதலிய ஐந்தாவன இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தூவி. பல்லவம் உவமானப்பொருளால் பாதமாகிய உபமேயத்தை இலக்கணையாகக் கூறுதலா லுருவகவுயர்வு நவிற்சியணி. ௧௧

ஏந்துசெல்வத்திமையவராமெனக்
கூந்தறெய்வமகளிர்கொண்டாடினார்
வேந்தராதிசிவிகையின்வீங்குதோண்
மாந்தர்காறும்வரிசைவழாமலே.

(இ-ள்.) வேந்தர் ஆதி சிவிகையின் வீங்குதோள் மாந்தர்காறும் - அரசர் முதல் தண்டிகையைச் சுமக்கும் பருத்ததோளையுடைய புருடர்வரைக்கும், வரிசைவழாமல் - கிரமமாகத் தவறாமல், ஏந்துசெல்வத்து இமையவர் ஆம் என-மிக்க செல்வத்தையுடைய தேவர்களாமென்று அவர்களைக்கருதி, கூந்தல் தெய்வமகளிர் கொண்டாடினார்-கூந்தலையுடைய அரம்பையர்கள் பாராட்டினார்கள்.

மாந்தர் வெகு வசனம். ௧௨

மாதர்யாவரும்வானவர்தேவியர்
கோதில்செல்வத்துவைகினர்கொவ்வைவாய்த்
தீதில்செல்வமடந்தையர்சேடியர்
தாதிமாரெனத்தம்பணிகேட்பவே.

(இ-ள்.) தீது இல் செல்வ மடந்தையர் - குற்றமற்ற செல்வத்தையுடைய பெண்கள், சேடியர் தாதிமார் என்ன தம்பணி கேட்ப-வித்தியாதரப்பெண்கள் தாதிமார்களைப்போலத் தமது குற்றேவல்வழிநிற்க, மாதர் யாவரும் வானவர் தேவியர் கோது இல் செல்வத்து வைகினர்-அப்பெண்களெல்லோரும் தெய்வப்பெண்களது அழிவில்லாத செல்வத்தில் தங்கினார்கள்.

மாதர் என்பதின் முதலில் அகரச்சுட்டுத்தொகுத்தல். தேவியர்விளையாட்டையுடையவர். இது ஒருமை பன்மை மயக்கம் கோதில் செல்வம், தீதில் செல்வம் என்பவற்றிற்கு முன்னர்க்கூறிய விதிகொள்க. ௧௩

நந்தநந்தவனங்களிளுண்மலர்க்
கந்தமூழ்ந்தியகற்பகக்காவினின்
றந்தர்வந்தெனவந்திதன்கைதர
மந்தமந்தமணந்ததுவாடையே.

(இ-ள்.) நந்தவனங்கள் இன் நாள் மலர் கந்தம் மூழ்ந்திய கற்பகக்காவின் நின்று நந்த - இந்திரனது நந்தவனமாகிய இனிய புதிய மலரின் வாசமூழ்ப்பட்ட கற்பகச்சோலைகளினின்று அதிகரிக்க, அந்தர் வந்தால் என்ன - குருடர்வந்தாற் போல, அந்திதன் கைதர - அந்திக்காலமானது தன்கைகொடுக்க, வாடைமந்த மந்தமணந்தது-காற்றானது மெள்ளமெள்ள விருத்தியாக மணம்வீசிவந்தது.

குருடர் வருதற்கு ஒருவன் கைதரல்போல அந்திக்காலத்தில் தென்றல் வருதலால் அந்திதன் கைதர என்றார். நந்த நிகழ்காலவினையெச்சம் நந்து பகுதி. மந்தமந்த வினா வின்மைப்பொருளில்வந்த இடைச்சொ லடுக்குநிலைத்தொடர்.()

மான்றளிக்குலநன்மதம்வந்துணத்
தேன்றளிர்த்தகவளமுஞ்செங்கதிர்
கான்றநெற்றழைக்கற்றையுங்கற்பகம்
ஈன்றளிக்கநுகர்ந்தனயானையே.

(இ-ள்.) அளிக்குலம் மான்று நன்மதம் வந்து உண்ண-வண்டின்கூட்டங்கள் மயங்கி நறுமணங் கமழு மதத்தினை வந்துண்ண, தேன்தளிர்த்த கவளமும்-இனிமை மிக்க கவளத்தையும், செங்கதிர் கான்ற நெல் தழை கற்றை உம்-செங்கதிர்களை வெளிப்படுத்திய வைக்கோற்கற்றைகளையும், கற்பகம் ஈன்று அளிக்க யானை நுகர்ந்தன-கற்பகம் வெளிப்படுத்திக்கொடுக்க யானை உண்டன.

மான்று பெயரடியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம் யால் பகுதி, றகர மெய் இடைநிலை, லகரம் னகரமாகத்திரிதல் சந்தி, உ எச்சவிகுதி, அளிக்குலம் வடசொற்றொடர்முன் வரு மொழிமுதல் வல்லெழுந்து மிகுதல் "இயல்பினும் விதியினும்" என்ற சூ—ஆல். யானைபால்பகா அஃறிணைப்பெயராதலால் அப் பெயரின் பொதுமை நீக்கச் சிறப்புவினை தந்தமையால் யானைகளென்றும். கடு

நரகதர்க்கறம்நல்குநலத்தநீர்
கரசதக்கரிகானிமிர்த்துண்டன
மரகதத்தின்கொழுந்தெனவார்ந்தபுல்
குரகதத்தின்குழாங்களுங்கொண்டவே.

(இ-ள்.) நரகு அகர்க்கு அறம் நல்கும் நலத்த நீர் - நரகவழியினின்று நீக்குதற்குத் தருமப்பயனைக்கொடுக்கும் நன்மையையுடைய கங்கையி னீரினை, கரம் கரி கரம் கால் நிமிர்த்து உண்டன - கோபத்தையுடைய யானைகள் துதிக்கையால் மூச்சடக்கிப்பருகின, மரகதத்தின் கொழுந்து என்ன வார்ந்த புல்-மரகதத்தின் சுடர்க்கொழுந்தைப்போல நீண்டு வளர்ந்த புல்லினை, குரகதத்தின் குழாங்களும் கொண்டன-குதிரையின் கூட்டங்களு முண்டன.

நீர்வேட்கை மிகவு முடைமையால் கால் கிழித்து என்றார், உலந்த டண்பில் வந்த குறிப்புவினைப்பெயரெச்சம். ௧௬

இன்னரின்னணம் யாவருமிந்திரன்
துன்னுபோகந்துய்த்தனர்தோன்றறான்
அன்னகாயுங்கிழங்குமுண்டப்பகல்
பொன்னின்மேனிபொடியுறப்போக்கினான்.

(இ-ள்.) இன்னர்-இவ்விடத்து, இன்னணம் யாவரும் இந்திரன் துன்னு போகங்கள் துய்த்தனர்-இவ்வாறு எவரும் நெருங்கிய இந்திரபோகங்களை நுகர்ந்தனர், தோன்றல் தான் அன்னகாயும் கிழங்கும் உண்டு-பரதாழ்வான் அத்தன்மையையுடைய காயையுங் கிழங்கையும் நுகர்ந்து, அ பகல்-அன்றைத்தினத்தை பொன் இன் மேனி பொடி உற போக்கினான் - பொன்னையொத்த திருமேனி புழுதியிற்படியத் துயில்கூர்ந்து கழித்தான்.

அம்பர், இம்பர் என்னுமிடைச்சொற்பகுபதம்போல இன்னர் எனவந்தது இ இடைச்சொற்பகுதி, னகரமெய்விரித்தல் விகாரம், னகரமெய்சாரி, ஆர் பகுதிப்பொருள் விகுதி. இன்னணம் இதுவும் இடைச்சொற்பகுபதம். இ பகுதி, னகரமெய்விரித்தல் விகாரம், னகரமெய்சாரி, அணம் பகுதிப்பொருள் விகுதி. அன்ன சுட்டடியாகப்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம் அ சுட்டிடைச்சொற்பகுதி, னகரமெய்விரித்தல் விகாரம், னகரமெய்சாரி, அ விகுதி. ௧௭

நீலவல்லிருணீங்கலுநீங்குமம்
மூலமில்கனவிற்றிருமுற்றற
ஏலுநல்வினைதுய்ப்பவர்க்கீறுசெல்
காலமென்னக்கதிரவன்றோன்றினான்.

(இ-ள்.) நீலம் அல் இருள் நீங்கலும் - கரிய இரவினிருள் நீங்க, நீங்கும் அ மூலம் இல் கனவு இல்-நீங்குகின்ற அந்தக்காரணமில்லாத சொற்பனம்போலவும், திருமுற்றுற ஏலும் நல்வினை துய்ப்பவர்க்கு-செல்வம் நிரம்பப்பொருந்திய நல்வினைப்பயனனுபவிப்பவர்க்கு, ஈறு செல்காலம் என்ன - நல்வினைப்பயன் தீரச் செல்வம் நீங்குங்காலத்தைப்போலவும், கதிரவன் தோன்றினான் - சூரியனுதயஞ்செய்தான்.

கனவில் திருமுற்றற நல்வினை துய்ப்பவர்க்கீறு செல்காலம் என்ன ஒருபமானமாகக் கொள்வாருமுண்டு, அவ்வாறு கொள்ளுதற்கு இருள்நீங்கலும் நீங்கும் என்னும் வினையெச்சமுடிபுக்குப் பொருந்தாமை காண்க. இதனுற் சூரியோதயங் கூறினார். துய்ப்பவர் எதிர்காலவினைமுற்றுப்பெயர் துய் பகுதி. அப்பகுதி து என்னும் வினைப்பகுதியின் திரிபெனக்கொள்க. இது பலபொரு[illegible] ௧௮
டனி.

ஆறிநின்றறமாற்றலர்வாழ்வெனப்
பாறிவீந்ததுசெல்வம்பரிந்திலர்
தேறிமுந்தைதஞ்சிந்தையராயினார்
மாறிவந்துபிறந்தன்னமாட்சியார்.

(இ-ள்.) ஆறிநின்று அறம் ஆற்றலர் வாழ்வு என - கேடமாறி நல்லொழுக்கினின்று தருமத்தைச் செய்யாதவர் வாழ்வைப்போல, செல்வம்பாறிவீந்தது- செல்வம் கெட்டழிந்தது, மாறிவந்து பிறந்தால் அன்னமாட்சியார் பரிந்திலர்- சரீரமாறி மற்றொருபிறப்பில்வந்து பிறந்தாலொத்த சேனையிலுள்ளவர் அதற்கு மனம் வருந்தாதவராய், தேறிமுந்தை தம் சிந்தையர் ஆயினார்-தெளிந்து மக்கட் பிறப்பிலுள்ள தமது கருத்தினையுடையவராயினார்கள்.

இந்திரசெல்வத்தை யனுபவித்த சேனைகள் அது நீங்கியகாலத்து வருந்தாது முன்னுள்ள மக்கள்தோற்றத்தின் கருத்தினராயிருந்தமையால் மாறிவந்து பிறந்தன்ன மாட்சியார் என்றார். பாறி இறந்தகாலவினையெச்சம் பாறு பகுதி. வீந்தது ஒன்றன்பாற்படர்க்கை யிறந்தகாலவினைமுற்று வீ பகுதி. ௧௯

கலிவிருத்தம்.

காலையன்றெழுந்ததுகண்டுவானவர்
வேலையன்றனிகமேயென்றுவிம்மறச்
சோலையுங்கிரிகளுஞ்சுண்ணமாயெழப்
பாலைசென்றடைந்ததுபரதன்சேனையே.

(இ-ள்.) காலை அன்று எழுந்தது வானவர் கண்டு-உதயகாலத்தில் அப்போது சேனை போதற் கெழுந்ததைத் தேவர்கள் பார்த்து, வேலை அன்று அனிகமே என்று விம்மற-கடலல்ல இது சேனையேயென்று மனம் விம்முதலொழிய, சோலையும் கிரிகளும் சுண்ணம் ஆய் எழ-சோலைகளு மலைகளுந் துகள்பட்டெழ, பரதன் சேனை பாலைசென்று அடைந்தது-பரதாழ்வான் சேனை பாலைநிலத்தைச்சென்று சேர்ந்தது.

"மகனன்றுகுற்றி" என்றாற்போலச் சேனையைநோக்கிக் கடலோவென்று ஐயுற்று வினவினார்க்கு அஃது இன்மை எனத் தெரிந்தவன் வேலையன்றனிகமென்றான் எனக் கொள்க. மற்றையவறறிற்கு மிவ்வாறுகொள்க. ஒருபொருளை மற்றொருபொருளாகக் கருது மயக்கவணியும், ஒருபொருளை மற்றொருபொருளென்று கருது மயக்கத்தையொழித் துண்மைகூறும் ஒழிப்பணியும் அடங்கிநிற்றலா லிதனைக் கலவையணியென்பார். ௨௦

எழுந்ததுதுகளதினெரியும்வெய்யவன்
அழுந்தினனவிப்பரும்வெம்மையாறினான்
பொழிந்தனகரிமதம்பொடிவெங்கானகம்
இழிந்தனவடிநடந்தேறுனைமையே.

(இ-ள்.) துகள் எழுந்தது - தூளியெழுந்தது, அதின் எரியும் வெய்யவன் அழுந்தினன்-அத்தூளியில் கொதிக்குஞ் சூரியன் மறைந்து, அவிப்பு அரும் வெம்மை ஆறினான்-கெடுதற்கரிய உட்டிணம் நீங்கினான், கரிமதம் பொழிந்தன-யானைகள் மதத்தைச் சொரிதலால், அடி நடந்து ஏற ஒண்ணாமை வெங்கானகம் பொடி இழிந்தன - காலால் நடந்தேறக்கூடாமல் கொடிய பாலைநிலத்திலுள்ள துகள் நனைந்து வழுக்கின.

அழுந்தினன் முற்றெச்சம். இவ்விரண்டுமுடிபும் காரணத்துடன் காரியத்தைச் சேர்த்துச் சொல்லுதலால் ஏதுவணி. ௨௧

வடியுடையயிற்படைமன்னர்வெண்குடை
செடியுடைநெடுநிழல்செய்ததீப்பொதி
படியுடைப்பாறுறைப்பாலைமேலுயர்
கொடியுடைப்பந்தரிற்குளிர்ந்ததெங்குமே.

(இ-ள்.) வடி உடை அயில் படை மன்னர் வெண்குடை-கூர்மைவாய்ந்த வேலாயுதத்தையேந்திய அரசர்களது தவளக்குடை, செடி உடை நெடுநிழல் செய்த-விளக்கத்தையுடைய மிக்க நிழலைச்செய்தலால், தீ பொதிபடி உடைபரல் உறை பாலை-நெருப்புப்பொதிந்த நிலத்திலுள்ள பருக்கைக்கல்லுகளுறைத்தலையுடைய பாலையானது, மேல் உயர்கொடி உடைபந்தரில் எங்கும் குளிர்ந்தது-மேலே யுயர்ந்த கொடிகளையுடைய பந்தலைப்போல எவ்விடத்திலும் குளிர்ந்திருந்தது.

உடைய என்னுஞ் செயப்படுபொருள் குன்றாத குறிப்புவினைப்பெயரொச்சத்தினீறு தொக்கது. பந்தல் பந்தர் இறுதி நிலைப்போலி. இதுவும் அவ்வணி. ()

பெருகியசெல்வம்நீபிடியென்றாள்வயின்
திருகியசீற்றத்தாற்செம்மையாய்நிறங்
கருகியஅண்ணலைக்கண்டுகாதலின்
உருகியதளிர்த்தனவுலவையீட்டமே.

(இ-ள்.) பெருகிய செல்வம் நீ பிடி என்றாள் வயின்-அதிகரித்த அரசச்செல்வத்தை நீ கைக்கொள் என்று கூறிய தன் தாயிடத்தில், திருகிய சீற்றத்தால் செம்மையாய் நிறம் கருகிய அண்ணலை கண்டு-மாறுபட்ட கோபத்தாற் செவந்து நிறங்கறுத்த பரதாழ்வானைப்பார்த்து, உலவை ஈட்டம் காதலின் உருகிய தளிர்த்தன-கரிந்த மரக்கொம்பின் கூட்டங்கள் ஆசையா லுருகித் தளிர்த்தன.

உருகிய செய்து என்னும் வினையெச்சத்திரிபு. "சொற்றிரியினும்" என்றசூ—இல் "வினைக்குறை" எனப்பொதுப்படச்சொன்னதனால், இது தன்குணத்தை யிழந்து மற்றொன்றின் குணத்தைப் பெறுதலால் பிறிதின்குணம் பெறவணி. வடநூலார் இதனைத் தத்குணாலங்காரம் என்பார். ௨௨

வன்றெறுபாலையைமருதமாமெனச்
சென்றதுசித்திரகூடஞ்சேர்ந்ததால்
ஒன்றுரைத்துயிரினுமொழுக்கநன்றெனப்
பொன்றியபுரவலன்பொருவில்சேனையே.

(இ-ள்.) ஒன்று உரைத்து உயிரினும் ஒழுக்கம் நன்று என்ன - ஒரு வார்த்தையைக்கூறி யுயிரினு மவ்வார்த்தையை யோம்பு மொழுக்க நல்லதென்று பொன்றிய புரவலன் பொருவு இல் சேனை-உயிரிழந்த தசரதனது ஒப்பில்லாத சேனையானது, வல்தெறு பாலையை மருதம் ஆம் என சென்றது சித்திரகூடம் சேர்ந்தது-மிகவும் வருத்தும் பாலையை மருதநிலம்போலக் கருதிச்சென்று சித்திரகூடத்தை யடைந்தது.

வன்மையென்னும் பண்பு மிகுதி மேல்நின்றது. பாலையென்பது குறிஞ்சிக்கு முல்லைக்கு மிடையில் பருக்கைக்கல்லுகளால் மூடப்பட்டுயர்ந்த நிலம். ஒன்றுரைத்து என்றது கைகேசிக்கு நீ வினவியவரத்தைத் தருவேன் என்றது. பொன்றிய இறந்தகாலப்பெயரெச்சம். பொன்று பகுதி, கடைக்குறையாய் நின்றது. இன் இடைநிலை, யகரமெய் சந்தி, அ விகுதி. ௨௪

தூளியின்படலையுந்துரகதேரொடு
மூளிருஞ்சினக்கரிமுழங்குமோதையும்
ஆளிருங்குழுவினராரவாரமும்
கோளிரும்படையிதென்றுணரக்கூறவே.

(இ-ள்.) தூளியின் படலையும் - புழுதியின் திரட்சியும், துரகத்தேர் ஒடு மூள் இருஞ்சினம் கரி முழங்கும் ஓதையும - குதிரைபூட்டிய தேரொடு மூண்ட பெரிய கோபத்தையுடைய யானைகள் ஒலிக்கு முழக்கமும், ஆள் இருங்குழுவினர் ஆரவாரம் உம் - வீரராகிய பெரியகூட்டத்தினது ஒலியும், கோள் இரும்படை இது என்று உணர கூற-வலிமையையுடைய பெரியசேனை யிதுவென்று தெரியக்கூறுதலால்.

இது பின்வருஞ்செய்யுளில் எழுந்தனன் என்பதனோடு முடிதலால் குளகம். படலை உம் ஒலியும் எழுதலைச்சேனை யெழுந்ததென் றுணர்த்தியது என தவி கூறுதலால் தற்குறிப்பேற்றவணி. ௨௫

எழுந்தனனிளையவனேறினனிலம்
கொழுந்துயர்ந்தனையதோர்நெடியகுன்றின்மேல்
செழுந்திரைப்பரவையைச்சிறுமைபேசிய
கழுந்துடைவரிசிலைக்கடலைநோக்கினன்.

(இ-ள்.) இளையவன் எழுந்தனன் - இலக்குவனெழுந்து, நிலம்கொழுந்து உயர்ந்தால் அனையது ஓர் குன்றின்மேல் ஏறினன் - நிலவுலகு கொழுந்துவிட்டுயர்ந்தாலொத்த வொரு நீண்ட சித்திரகூடமலையின்மேலேறி, செழுந்திரை

பரவையை சிறுமைபேசிய-செழித்த அலைகளையுடைய கடலைத் தனதுபெருமை யாற் சிறுமைப்படுத்திய, கழுந்து உடை வரிசிலை கடலை நோக்கினன்-கழுத்தோ டிய கட்டமைந்த வில்லையேந்திய சேனசமுத்திரத்தைப் பார்த்தனன்.

கழுத்தோடுதல் கையிலேந்துதலால் தேய்ந்து வழுவழுப்படைதல். எழுந் தனன், எறினன் முற்றெச்சங்கள். கடலாகிய உபமானத்திற்குக் குறைவுதோ ன்ற உபமேயத்தை யுயர்த்திக் கூறுதலால் எதிர்நிலையணி. இதனை வடநூலார் பிரதீபாலங்காரம் என்பார். எழுந்தனன் என்பது முதல், அஞ்சாட என்பது காறும் ஒருதொடர். ௨௬

பரதனிப்படைகொடுப்பார்கொண்டாண்மறம்
கருதியுட்கிடந்ததோர்கறுவுகாதலான்
விரதமுற்றிருந்தவன்மேல்வந்தானிது
சரதமற்றிலதெனத்தழங்குசீற்றத்தான்.

(இ-ள்.) பரதன் இ படை கொடு பார் கொண்டு ஆள் மறம் கருதி-பரதா ழ்வான் இந்தச் சேனையைக்கொண்டு நிலவுலகைத் தனக்காக்கி யாளும் விசயத் தை நினைந்து, உள்கிடந்தது ஓர் கறுவு காதலான்-உள்ளே யடங்கிக்கிடந்த ஒப் பில்லாத சினக்குறிப்பையும் விருப்பத்தையு முடைமையால், விரதம் உற்றிருந் தவன் மேல்வந்தான் - தவத்தைப்பூண்டிருந்த இராமமூர்த்திமேல் போர்க்குவந் தான், இது சரதம்-இது உண்மை, மற்று இலது என தழங்கு சீற்றத்தான். வே றொன்று மில்லையென அதிகயுத்த கோபத்தையுடையவனாகி.

வார்த்தையால் வந்த அரசியல் உரியதன்று. போர்செய்து கொண்டா ளுரி த்தாமென்பது கருதிவந்தான் என்பானிவ்வாறு கூறினன். சீற்றத்தான் குறி ப்பு முற்றெச்சம். ௨௭

குதித்தனன்பாரிடைக்குவடுநீறெழ
மிதித்தனனிராமனைவிரைவினெய்தினன்
மதித்திலன்பரதனின்மேல்வந்தான்மதிற்
பதிப்பெருஞ்சேனையின்பரப்பினனென்றான்.

(இ-ள்.) பார் இடை குதித்தனன் - நிலவுலகிற் குதித்து, குவடு நீறு எழ மிதித்தனன்-சித்திரகூடபருவதம் நீறுபட மிதித்து, இராமனை விரைவின் எய்தி னன்-இராமமூர்த்தியை விரைந்தடைந்து, பரதன் மதித்திலன் - பரதாழ்வான் உன்னை மதிக்காது, மதில் பதிபெருஞ் சேனையின் பரப்பின் ஆன்-மதில்சூழ்ந்த அயோத்தியிலுள்ள சேனையின் பரப்போடு, நின்மேல் வந்தான் என்றான்-உன் மேற் போர்க்குவந்தானென்று கூறி.

சீற்றத்தானென்னுங் குறிப்பு முற்றெச்சம் குதித்தனன் என்னுந் தெரிநிலை வினைமுற்றெச்சத்தோடு முடிந்தது. மிதித்தனன், எய்தினன், மதித்திலன் என் றான் முற்றெச்சங்கள். ஆனுருபு "தூங்குகையா னோங்குநடைய" என்றாற் போல வந்த உடனிகழ்ச்சிப்பொருட்டு. ௨௮

கட்டினன்சரிகையுங்கழலும்பல்கணைப்
புட்டிலும்பொறுத்தனன்கவசம்பூட்டமைத்
திட்டனனெடுத்தனன்வரிவிலேந்தலைத்
தொட்டடிவணங்கினின்றினையசொல்லினான்.

(இ-ள்.) சரிகையும் கழலும் கட்டினன்-உடைவாளையும் வீரகண்டையும் கட்டி, பல்கணை புட்டிலும் பொறுத்தனன் - பல அம்புகளைப்பெய்த அம்பறாத் தூணியையுஞ் சுமந்து, கவசம் பூட்டு அமைத்திட்டனன் - போர்க்கவசத்தைத் திருமேனியிற்பூட்டி, வரிவில் எடுத்தனன்-கட்டமைந்த வில்லினையேந்தி, ஏந் தலை தொட்டு அடிவணங்கி நின்று இனைய சொல்லினான் - இராமமூர்த்தியைக் கையாற் பரிசித்துத் திருவடியை வணங்கிநின் றித்தன்மையுடையவற்றைக் கூறுகின்றனன்.

கட்டினன், பொறுத்தனன், பூட்டமைத்திட்டனன், எடுத்தனன் முற்றெச் சங்கள். அமைத்திட்டனன் அமை பகுதி, து சாரியை, தகரமெய் சந்தி, இடு, இடைச்சொல், உகரக்கேடு சந்தி, அனைத்தும் ஒருபகுதி, முதனிலையெழுத்தா ய்த்தோன்றிய டகரமெய் இடைநிலை, உகரக்கேடு சந்தி, அன் சாரியை, அன் விகுதி. உக

இருமையுமிழந்தவப்பரதனேந்துதோட்
பருமையுமன்னவன்படைத்தசேனையின்
பெருமையுநின்னொடுபின்புவந்தவென்
ஒருமையுங்கண்டினியுவத்தியுள்ளம்நீ.

(இ-ள்.) இருமையும் இழந்த அ பரதன் ஏந்து தோள் பருமையும் - இப் பிறப்பின்பயனையும் வருபிறப்பின் பயனையு மிழந்த அந்தப் பரதனது பூபாரத் தையேந்திய தோளின் பூரிப்பையும், அன்னவன் படைத்த சேனையின் பெரு மை உம்-அப்பரதன் படைத்த சேனையினது பெருமையையும், நின் ஒடு பின் பு வந்த என் ஒருமையும் கண்டு - ஒப்பில்லாத உன் பின்னேவந்த வெனது ஒற்று மையையும்பார்த்து, இனி நீ உள்ளம் உவத்தி-இனி நீ மனமகிழ்வாய்.

உவத்தி எதிர்காலவினையெச்சம் உவ பகுதி, து சாரியை, உகரக்கேடும் தகரத்தோற்றமும் சந்தி, இ விகுதி. உ0.

படரெலாம்படப்படும்பருமயானையின்
திடரெலாமுருட்டினதேருமீர்த்தன
குடரெலாந்திரைத்தனகுருதியாறுகள்
கடலெலாமடுப்பனபலவுங்காண்டியால்.

(இ-ள்.) படர் எல்லாம் பட-பரதன் கருத்தெல்லாமறிய, குருதியாறுகள் படும்பருமம் யானை திடர் எல்லாம் உருட்டின-உதிரவெள்ளங்கள் அழியும் கவ சம்பூண்ட யானையாகிய திடர்களையெல்லா முருட்டிச்செல்லுதலும், தேரும்

ஈர்த்தன-தேர்களை யிழுத்துச்செல்லுதலும், குடர் எல்லாம் திரைத்தன-குடல்களையெல்லா மடக்கி வாரிச்செல்லுதலும், கடர் எல்லாம் மடுப்பன பல உம் காண்டி-கடல்முழுதும் பாய்தலுமாகிய பலவற்றையுங் காண்பாய்.

உருட்டின, ஈர்த்தன, திரைத்தன, மடுப்பன என்னும் வினைமுற்றுப்பெயராய்த் தொழில்மேல்நின்றன. காண்டி தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலத்தில்வந்த காலவழுவமைதி. படர் முதனிலைத்தொழிலாகுபெயராய்க் கருத்தின் மேல் நின்றது. குடல் குடர், கடல் கடர் இறுதிநிலைப்போலி. இன் வேண்டா வழிச்சாரியை. ௩௧

கருவியுங்கைகளுங்கவசமார்பமும்
உருவினவுயிரிளேடுதிரந்தோய்வில
திரிவனசுடர்க்கணைதிசைக்கையானைகள்
வெருவரச்செய்வனகாண்டிவீரநீ.

(இ-ள்.) வீர நீ-வீரனாகிய நீ, சுடர்கணை - ஒளிவாய்ந்த என்னம்பு, கருவி உம் கைகளும் கவசம் மார்பமும் உயிரினேடு உருவின-ஆயுதங்களையும் ஆயுதங்களையேந்திய கைகளையும் கவசம்பூண்ட மார்பினை உயிரினேடும் உருவிச்சென்று, உதிரம் தோய் வில திரிவன - உதிரத்தில் தோயாது திரிந்து, திசைகள் யானைகள் வெருவர செய்வன காண்டி - எட்டுத்திசைகளிலுமுள்ள துதிக்கைகளையுடைய யானைக ளஞ்சச் செய்தலைக்காண்பாய்.

உருவின, தோய்வில, திரிவன முற்றெச்சங்கள், செய்வன தொழில்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். உயிர் அருவப் பொருளாதலால் ஒடுக்கொடுத்துப் பிரித்தார். ௩௨

கோடகத்தேர்படுகுதிரைதாவிய
ஆடகத்தட்டிடையலகையற்றுகு
கேடகத்தடக்கைகள்கவ்விக்கீதத்தின்
நாடகம்நடிப்பனகாண்டிநாதநீ.

(இ-ள்.) நாத நீ-தலைவனே நீ, கோடகம் தேர்படு குதிரை தாவிய - புதிய தேரிற்பூட்டிய குதிரைகள் தாவாநின்ற, ஆடகம் தட்டு இடை-ஆடகத்தாலமைந்த தேர்த்தட்டுகளில், அலகை-பசாசுகள், அற்று உகு கேடகம் தடக்கைகள் கவ்வி-அறுபட்டுச் சிந்தும் கேடகத்தையேந்திய நீண்ட கைகளைக்கவ்வி, கீதத்தின் நாடகம் நடிப்பன காண்டி-கீதத்தோடு நாடகமாடுதலைக் காண்பாய்.

நடிப்பன தொழில்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். ஆடகம் நால்வகைப்பொன்னில் ஒன்று. ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம். ௩௩

பண்முதிர்களிற்றெடுபரதன்சேனையின்
எண்முதலறுத்துநானிமைப்பினீக்கலால்

விண்முதுகுளுக்கவும்வேலையாடையின்
மண்முதுகாற்றவுங்காண்டிவள்ளனீ.

(இ-ள்.) வள்ளல் நீ-வள்ளலே நீ, பண்முதிர் களிறு ஒடு - அலங்காரமிக்க யானையோடு, பரதன் சேனையின் எண்முதல் அறுத்து-பரதனுடைய சேனையி னெண்ணை வேரோடறுத்து, கண் இமைப்பு இல் நீக்கலால்-கா ணிமைகொட் டுதற்குமுன்னே தொலைத்தலால், விண் முதுகு உளுக்க உம்-விண்ணுலகின் முதுகு நெளியவும், வேலை ஆடையின் மண் முதுகு ஆற்றவும் காண்டி - கடலை யாடையாகவுடைய நிலவுலகின் முதுகுசுமை யொழிந்து ஆற்றவுங்காண்பாய்.

சேனையினெண் அறுபதினாயிர மக்குரோணிகள். இமைப்பு அளவின் மேல் நிற்றலால் தொழிலாகுபெயர். உளுக்க நிகழ்காலவினையெச்சம் உளுக்கு பகுதி. வள்ளல் வளையாது கொடுப்போன். ௩௪

நிவந்தவான்குருதியினீத்தநீந்திமெய்
செவந்தசாதகரொடுசிறுகட்கூளியும்
கவந்தமுமுலகநின்கையதாயதென்
றுவந்தனகுனிப்பனகாண்டியும்பர்போல்.

(இ-ள்.) நிவந்த வான் குருதியின் நீத்தம் நீந்தி-நீந்தி வழிந்தோடும் பெரிய வுதிரவெள்ளத்தை நீந்தலால், மெய் செவந்த சாதகர் ஒடு சிறு கண் கூளியும் கவந்தமும் உலகம் நின் கையது ஆயது என்று - உடல் செவந்த பூதகணங்க ளோடு சிறிய கண்ணையுடைய பசாசுகளும் உடற்குறைகளும் நிலவுலகானது உன் கைவசப்பட்டது என்று, உவந்தன குனிப்பன உம்பர் போல் காண்டி-மகி ழ்கூர்ந் தாடுதலைத் தேவர்களைப்போல நின்று காண்பாய்.

நிவந்த, செவந்த இறந்தகாலப்பெயரெச்சங்கள் நிவ, செவ பகுதிகள். உவ ந்தன முற்றெச்சம். உவ பகுதி. குனிப்பன வினைமுற்றுப்பெயர் குனி பகுதி.()

சூழிவெங்கடகரிதுரகராசிகள்
பாழிவன்புயத்திகல்வயவர்பட்டற
வீழிவெங்குருதியாலலைந்தவேலைகள்
ஏழுமொன்றாகிநின்றிரைப்பக்காண்டியால்.

(இ-ள்.) சூழி வெம் கடகரி துரக ராசிகள் - முகபடாத்தையுடைய கொ டிய மதத்தையுடைய யானைக்கூட்டங்களுங் குதிரைக்கூட்டங்களும், பாழிவன் புயத்து இகல்வயவர் பட்டு அற - பருத்த வலிய புயத்தையுடைய காலாட்கள் பட்டழிய, வீழி வெங்குருதியால் அலைந்த வேலைகள் ஏழும் ஒன்று ஆகி நின்று இரைப்ப காண்டி - வீழ்தலாற் பெருகிய மிக்க வுதிரவெள்ள மடுத்தலா லலைமெ றிந்து பொங்கி யெழுந்த ஏழுகடலும் ஒன்றாகி நின்றொலிக்கக் காண்பாய்.

வீழி தொழிற்பெயர் வீழ் பகுதி, இ தொழிற்பெயர் விகுதி. பகுதிப்பொ ருள் விகுதியெனினும் அமையும். கரி துரகங்களின் கூட்டங்களை யுணர்த்தற்

குச் சுருக்கச்சொல்லலென்னும் அழகால் இறுதியில் ராசிகள் என்றார். கடை நிலைத்தீவகவணி யெனினும் ஒக்கும். ௫௬

ஆளறவலங்குதேரழியவாடவர்
வாளறவரிசிலைதுணியமாக்கரி
தாளறத்தலையறப்புரவிதாளொடுந்
தோளறவடிக்கணைதொடுப்பக்காண்டியால்.

(இ-ள்.) ஆள் அற-காலாட்படை யறுபடவும், அலங்கு தேர் அழிய ஆடவர் வாள் அறவரி சிலைதுணிய-விளங்குந் தேரழியவும் அத்தேரிலுள்ள வீரர்களேந்திய வாளறுபடவும் அவர்களது கட்டமைந்த வில்லறுபடவும், மாகரிதாள் அற தலை அற-பெரியயானையின் கால்களறுபடவும் தலையறுபடவும், புரவிதாளொடு உம்தோள் அற - குதிரைகள் காலாளோடும் அக்குதிரைகளின் மேலேறிய வீரர்களது தோளறுபடவும், வடிகணை தொடுப்பது காண்டி-கூரிய அம்பைத் தொடுத்தலைக் காண்பாய்.

தொடுப்பது என்பதில் துவ்விகுதி சொருத்தல். தொடுப்பது எதிர்காலவி டைநிலை பெற்றுவந்த தொழிற்பெயர். ௫௭

தழைத்தவான்சிறையனதசையுங்கவ்வின
அழைத்தவான்பறவைகளலங்குபொன்வடிம்
பிழைத்தவான்பகழிபுக்கிருவர்மார்பிடைப்
புழைத்தவான்பெருவழிபோகக்காண்டியால்.

(இ-ள்.) தழைத்த வான் சிறையன தசையும் கவ்வின-தழைந்துவிரிந்த பெரிய சிறைகளையுடையனவும் மாமிசத்தைக் கவ்வினவுமாகிய, அழைத்த வான்பறவைகள்-கூவிச்செல்லும் பறவைகள், அலங்கு பொன்வடிம்பு இழைத்த வான்பகழி புக்கு-விளங்காநின்ற பொன்னை யோரத்திலிழைத்த எனது பெரியபாணங்கள் புகுந்து, இருவர் மார்பு இடை புழைத்த வான்பெருவழிபோக காண்டி-பரதசத்துருக்களுடைய மார்பிற்செய்துள்ள பெரியவழியிற் போகக்காண்பாய்.

புழைத்த பெயரடியாகப்பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம் புழை பகுதி, தகரமெய்சந்தி, தகரமெய்இடைநிலை, அ எச்சவிகுதி. வான்பெரு ஒருபொருட் பன்மொழி. ௫௮

ஒருமகள்காதலினுலகைநோய்செய்த
பெருமகனேவலிற்பரதன்றுன்பெறும்
இருநிலமாள்கைவிட்டின்றெனேவலால்
அருநரகாள்வதுகாண்டியாழியாய்.

(இ-ள்.) ஆழியாய் - ஆக்கினைசக்கரத்தை யேந்திய இராமமூர்த்தியே, ஒரு மகள்காதலின் உலகைநோய் செய்தபெருமகன் ஏவலில்-கைகேசியின்மேற் கொ

ண்ட விருப்பத்தால் உலகிலுள்ளோரை வருத்திய தசரதனது ஏவலால், பரதன் தான்பெறும் இருநிலம் ஆள்கைவிட்டு - பரதன் தான்பெற்ற பெரிய நிலவுலகை யாளுகைவிட்டு, இன்று என் ஏவலால் அருநரகு ஆள்வதுகாண்டி-இப்பொழுது எனது ஏவலினால் அடைதற்கரிய நரகினையாளுதலைக் காண்பாய். ௩௯

வையகந்துறந்துவந்தடவிவைகுதல்
எய்தியதுனக்கெனநின்னையீன்றவள்
நைதல்கண்டுவந்தவொண்ணகையினோங்கிய
கைகயன்மகள்விழுந்தரற்றக்காண்டியால்.

(இ-ள்.) உனக்கு வையகம் துறந்துவந்து அடவிவந்து வைகுதல் எய்தியது என்ன-உனக்கு நிலவுலகரசுரிமையைக் கைவிட்டுக் காட்டில்வந்து தங்குதல் வந்ததேயென்று, நின்னை ஈன்றவள் நைதல்கண்டு உவந்து-உன்னைப்பெற்ற கௌசலாதேவி வருந்துதலைப்பார்த்து மகிழ்ந்து, அவண் நகையின் ஓங்கியகைகயன்மகள் விழுந்து அரற்றகாண்டி-அவ்விடத்தில் பழியில் மிக்குயர்ந்த கைகேசியின் புத்திரி நிலத்தில்மேல்விழுந்து கதறக்காண்பாய்.

எய்தியது என்னும் இறந்தகாலவினைமுற்றினிறுதியில் தேற்றேகாரந்தொக்கது. அரற்ற நிகழ்காலவினையெச்சம் அரற்று பகுதி. ௪0

அரஞ்சுடவழலுமிழலங்கல்வேலினாய்
விரைந்தொருநொடியிலிவ்வணிகவேலையை
உரஞ்சுடுவடிக்கணையொன்றில்வென்றுமுப்
புரஞ்சுடுமொருவனிற்பொலிவென்யானென்றான்.

(இ-ள்.) அரஞ்சுட அழலுமிழ் அலங்கல்வேலினாய்- அரத்தாலராவ வெம்மைமிக்க மாலையையணிந்த வேலையேந்திய இராமமூர்த்தியே, ஒரு நொடியில் விரைந்து-ஒரு நொடிப்பொழுதில் விரைந்து, இ அணிகவேலையை - இந்தச் சேனாசமுத்திரத்தை, உரம்சுடு வடிகணை ஒன்றின்வென்ற-பகைவர் வலிமையைவாட்டும் கூரிய அம்பொன்றினால் வெற்றிகொண்டு, முப்புரம்சுடும் ஒருவன் இல் யான் பொலிவென் என்றான்-திரிபுரதகனஞ்செய்த உருத்திரமூர்த்தியைப்போல யான் விளங்குவேனென்றிலக்குவன் கூறினான்.

விரைந்து விரைஞ்சு இடைநிலைப்போலி. ௪௧

இலக்குவவுலகமோரேழுமேழும்நீ
கலக்குவனென்பதுகருதினாலது
விலக்குவதரிதது விளம்பல்வேண்டுமோ
புலக்குரித்தொருபொருள்புகலக்கேட்டியால்.

(இ-ள்.) இலக்குவ-இலக்குவனே, உலகம் ஓரேழும் ஏழும் நீ கலக்குவன் என்பது கருதினால் - பதினான் குலகங்களையுங் கலக்குவனென்பதை நீ நினைத்

னால், அது விலக்குவது அரிது-அதனை யிடையிலொருவர் விலக்குதல் முடியாது, அது விளம்பல்வேண்டுமோ-அதனை நீயெடுத்துச் சொல்லவேண்டுமோ, புலத்துக்கு உரித்து ஒருபொருள் புகலகேட்டி-அறிவுவளர்த்தற்குரிய ஒருபொருளை யான் கூறக்கேளாய்.

கேட்டி முன்னிலையொருமை யெதிர்காலவினைமுற்று. கேள் பகுதி, டு சாரியை, ளகரத்திரிபும் உகரக்கேடும் சந்தி, இ விகுதி. விகுதியே காலங்காட்டியது. சஉ

நங்குலத்துதித்தவர் நவையுணீங்கினர்
எங்குலப்புறவர்களெண்ணில்யாவரே
தங்குலத்தொருவருந் தருமநீங்கினர்
பொங்குலத்திரளொடும்பொருததோளினாய்.

(இ-ள்.) பொங்கு உலத்திரளொடும் பொருததோளினாய் - விளங்காநின்ற திரண்ட கல்லோடும் போர்செய்த தோளையுடைய இராமமூர்த்தியே, நம் குலத்து உதித்தவர் நவையுள் நீங்கினர்-நமது குலத்திற்றோன்றிய யாவரும் குற்றத்தினின்று நீங்கினவர்களே, எண்ணில் எங்கு உலப்புறுவர்கள்-நம்மால் அளவிடப்புகுந்தால் எங்கே யளவிலகடபடுவார், தம்குலத்து ஒருவரும் தருமநீங்கினர் யாவர்-(ஆகலால்) நமது குலத்தில் நீங்குதற்கரிய தருமத்தினின்று நீங்கினவரொவர் (ஒருவருமில்லைஎன்றபடி)

நீங்கினர் என்பதனிறுதியில் தேற்ற ஏகாரம் தொகுத்தல். சங

எனைத்துளமறையவையியம்பற்பாலன
பனைத்திரள்கரக்கரிப்பரதன்செய்கையே
அனைத்திறமல்லன வல்லவல்லது
நினைத்திலையென்வயினேயநெஞ்சினால்.

(இ-ள்.) மறைஎனைத்து உள-வேதங்களெவ்வளவுள்ளன, அவை இயம்பற்பாலன-அவ்வேதங்கள் கூறும் பகுதியன, பனைதிரள் கரம்கரி பரதன் செய்கை-பனைமரம்போலத் திரண்ட துதிக்கையையுடைய யானைச்சேனையையுடைய பரதனது செயல்களையே, அனைத்திறம் அல்லன அல்ல-சேனையோடெழுந்த அத்திறம் என்மேற் போர்க்குவந்த அததிறமல்லவேயல்ல, என்வயின்நேயம் நெஞ்சினால் நினைத்திலை-என்னிடத்திலுள்ள அன்புநிறைந்தமனத்தால் நினைவாதொழிந்ததேயன்றி வேறில்லை.

அனை சுட்டுத்திரிபு. எத்தனைத்து எனைத்துதொகுத்தல். இயம்பல் என்னுந் தொழிற்பெயர் பெயரொச்சப்பொருளில்வந்தது. அல்லனவல்ல தேற்றப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். சச

பெருமகனென்வயிற்பிறந்தகாதலின்
வருமெனநினைகையுமண்ணையென்வயின்

தருமெனநினைகையுந்தவிரத்தானையால்
பொருமெனநினைகையும்புலமைப்பாலதோ.

(இ-ள்.) பெருமகன்என்வயின் பிறந்தகாதலின் வரும்என நினைகையும்- பெருமைவாய்ந்த பரதாழ்வான் என்மேல் உண்டான விருப்பத்தால் வந்தானென்று நினைத்தலையும், மண்ணை என்வயின் தரும்என நினைகையும் தவிர-மண்ணுலகை யென்னிடத்துத் தருவானென்று நினைத்தலையுந்தவிர, தானையால் பொரும் எனநினைகையும் புலமைபாலது ஓ-சேனையோடு என்னோடும் போர்செய்ய வருகின்றானென்று நினைத்தலும் அறிவின்தன்மையோ (அல்லவென்றபடி)

வரும், தரும், பொரும்என்றுமுற்று இடமூன்றும் பால்கட்கும் பொதுவாகிய செய்யுமென்னும் வாய்பாட்டுமுற்று. ௬௫

பொன்னொடிர்பொருகழற்பரதன்போந்தனன்
நன்னெடும்பெரும்படைநல்கலன்றியே
யென்னொடும்பொருமெனவியம்பற்பாலதோ
மின்னொடும்பொருவுறவிளங்கும்வேலினாய்.

(இ-ள்) மின்னொடும்பொருவுற விளங்கும்வேலினாய்-மின்னலோடொக்க விளங்காநின்ற வேலையேந்திய இளையோனே, பொன்னொடும்பொருவும் கழல்பரதன் போந்தனன் பொன்னோடொத்த வீரக்கழலைகட்டிய பரதன்வந்தனன், நல்நெடும்பெரும்படை நல்கல்அன்றி (வருகை) நல்ல நெடிய பெரிய சேனையை யெனக்குத் தருதற்கன்றி, என்னொடும் பொரும் எனஇயம்பற்பாலது ஓ-என்னோடும் போர்செய்வதற்கு வந்தானென்று சொல்லுந் தன்மையதோ (அல்லஎன்றபடி)

பொன்னொடும் என்பதில் உம்மை பொருத்தமில் புணர்ச்சியாதலால் பொருஎன்பதனோடு கூட்டப்பட்டது. இயம்பல்என்னுந் தொழிற்பெயர் பெயரெச்சமாய்ப் பாலது என்னுங் குறிப்பு வினைமுற்றின் முதனிலையோடு முடிந்தது. ௬௬

சேணுயர்தருமத்தின்றேவைச்செம்மையின்
ஆணியையன்னதுநினைக்கலாகுமே
பூணியல்மொய்ம்பினாய்போந்ததீண்டெனைக்
காணியவீதுபின்னுங்காண்டியால்.

(இ-ள்.) பூண்இயல்மொய்ம்பினாய்-ஆபரணத்தையணிந்த மார்பையுடைய இளையானே, சேண்உயர் தருமத்தின்தேவை-மிகவுமுயர்ந்த தருமதேவதையின் தெய்வமும், செம்மையின் ஆணியை-நடுநிலைமையென்னும் பொன்னின்மாற்றையறிதற்கமைந்த உரையாணியுமாகிய பரதனை, அன்னது நினைக்கல் ஆகும்ஒ-அத்திறமாக நினைக்கக்கூடுமோ, ஈண்டுபோந்தது எனை காணிய-இவ்விடத்தில் வந்தது என்னைக்காண, நீ இதுபின்னும்காண்டி-நீ இதனைப் பின்புகாண்பாய்.

காணிய செய்யிய என்னும் வாய்பாட்டெச்சம். ஏகாரம் வினப்பொருட்டு.

என்றனனிளவலைநோக்கியேந்தலும்
நின்றனன்பரதனும்நிமிர்ந்தசேனையைப்
பின்றருகென்றுதன்பிரிவில்காதலின்
றன்றுணைத்தம்பியுந்தானுமுந்தினான்.

(இ-ள்.) என்றனன் இளவலைநோக்கி ஏந்தலும் நின்றனன்-என்றுகூறி இலக்குவனைப்பார்த்து இராமமூர்த்தியும் நின்றனர், பரதனும் நிமிர்ந்த சேனையை பின்தருகஎன்று - பரதாழ்வானும் பரந்த சேனையைப் பின்னே நிற்கவென்று, தன் பிரிவு இல்காதலின் தன்றுணைதம்பியும் தானும் முந்தினன் - தன்னினின்றும் பிரியாத விருப்பத்தையுடைய தன்னளவு அன்புள்ள சத்துருக்கனுந்தானும் முற்பட்டுவந்தனன்.

தருக என்னும் வியங்கோள் ஈறு தொகுத்தல். துணை அளவு. இளவல் பண்புப்பெயர் இளமை பகுதி, அல்விகுதி, ஈறு கெடுதலும் வகரந்தோற்றமும் சந்தி. தம்பியும் தானு முந்தினான் விரவாதெண்ணிச் சிறப்பினு லொருமை முடிபெற்றது. என்றனன் முற்றெச்சம். ௪௮

தொழுதுயர்கையினன்றுவண்டமேனியன்
அழுதழிகண்ணினனவலமீதென
எழுதியபடிவமொத்தெய்துவான்றனை
முழுதுணர்சிந்தையான்முடியநோக்கினான்.

(இ-ள்.) தொழுது உயர்கையினன் - தொழுது மேலேகூப்பிய கையையுடையவனும், துவண்ட மேனியன்-துவட்சியுற்ற மேனியையுடையவனும், அழுது அழிகண்ணினன்-அழுதா லழிந்த கண்களையுடையவனுமாய், அவலம் ஈது என எழுதியபடிவம் ஒத்து எய்துவான்றனை-துன்பமென்பது இவ்வடிவுதானென்று எழுதிக்காட்டிய உருவத்தையொத்து வரும் பரதனை, முழுது உணர் சிந்தையான் முடிய நோக்கினான்-முற்றுமுணர்ந்த இதயத்தையுடைய இராமமூர்த்தி அவன்றன்மையை முடியப்பார்த்தனர்.

கையினன், மேனியன் குறிப்புமுற்றெச்சமாய் ஒத்து என்னும் வினையெச்சத்தின் முதனிலையையும் அவ்வெச்சம எய்துவான் என்னும் வினைமுற்றுப்பெயரின் முதனிலையையுங் கொண்டன. முழுதுணர் என்றது திரிகாலங்களு முணர்ந்த என்பது பொருள். ௪௯

கார்ப்பொருமேனியக்கண்ணன்காட்டினான்
ஆர்ப்புறுவரிசிலையிளையவையநீ
தேர்ப்பெருந்தானையாற்பரதன்சீறிய
போர்ப்பெருங்கோலத்தைப்பொருந்தநோக்கென.

(இ-ள்.) ஆர்ப்புறுவரிசிலை இளைய ஐய நீ-ஒலிக்கும் கட்டமைந்த வில்லினையேந்திய இளையோனே நீ, தேர்பெருந்தானையால் பரதன்சீறிய-பெரியதேர்

ச்சேனையால் பரதன் கோபித்துவந்த, பெரும்போர்க்கோலத்தை பொருந்த நோக்கு என்று - பெரிய போர்க்கோலத்தினைப் பொருந்தப் பாரென்று, கார்பொரு மேனி அகண்ணன் காட்டினான்-மேகத்தோடொத்த திருமேனியையுடைய அவ்விராமமூர்த்தி காட்டினார்.

பொருவு என்னும் வினைப்பகுதியி னிறுதிதொக்கது. கிருஷ்ணன் கண்ணன் என வந்தது பிராகிருதச்சிதைவு. என்றுசெய்யாவென்னும் வாய்பாட்டிடைச்சொல்லடியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம். ௫௦

எல்லொடுங்கியமுகத்திளவனின்றனன்
மல்லொடுங்கியபுயத்தவனைவைதெழுஞ்
சொல்லொடுஞ்சினத்தொடுமுணர்வுசோர்தா
வில்லொடுங்கண்ணநீர்நிலத்துவீழவே.

(இ-ள்.) மல் ஒடுங்கிய புயத்தவனைவைது எழும் சொல்லொடும் சினத்தொடும் உணர்வுசோர்தர-(பார்த்து) மற்போரொடுங்கிய புயத்தையுடைய பரதாழ்வானை வைது எழுந்த சொல்லோடும் கோபத்தோடும் அறிவுசோர, வில்லொடும் கண்ணநீர் நிலத்துவீழ-கையிலேந்திய வில்லோடுங் கண்களிலுள்ள நீர் நிலத்திற்சிந்த, எல் ஒடுங்கியமுகத்து இளவல் நின்றனன்-ஒளியிழந்த முகத்தோடு இலக்குவ னின்றான்.

கண்ண சினையடியாகப்பிறந்த குறிப்பு வினைப்பெயரெச்சம். ௫௧

கோதறுந்தவஞ்செய்துகுறிப்பினெய்திய
நாதனைப்பிரிந்தனணலத்துநீங்கினாள்
வேதனைத்திருமகண்மெலிகின்றாள்விடு
தூதெனப்பரதனுந்தொழுதுதோன்றினான்.

(இ-ள்.) கோது அற தவம்செய்து குறிப்பின் எய்திய நாதனை பிரிந்தனள் நலத்து நீங்கினாள் - குற்றமறத் தவத்தைச்செய்து தன் கருத்தின்படி யடைந்த இராமமூர்த்தியைப் பிரிந்து தன் நலத்தினின்று நீங்கி, வேதனை திருமகள் மெலிகின்றாள் விடு தூது என்ன-துன்பமுடைய இலட்சுமி மெலிந்து விடுந் தூதைப்போல, பரதனும் தொழுது தோன்றினான்-பரதாழ்வானும் வணங்கிக் கட்புலங்களுக்கு எதிர்ப்பட்டான்.

பிரிந்தனள், நீங்கினாள், மெலிகின்றனள், முற்றெச்சங்கள். திருமகள் தவஞ்செய்தடைந்த இராமமூர்த்தியை யிடையிற்பிரிந்து துன்பப்படுகின்றவள் விட்ட தூதைப்போலப் பரதன் சென்று இராமமூர்த்திக்கு எதிர்ப்பட்டனனென்பது கருத்து. ௫௨

அறந்தனைநினைந்திலையருளைநீத்தனை
துறந்தனைமுறைமையையென்னுஞ்சொல்லினான்

மறந்தனன்மலரடிவந்துவீழ்ந்தனன்
இறந்தனன்றாதையையெதிர்கண்டென்னவே.

(இ-ள்.) அறந்தனை நினைந்திலை-(உனக்குரிய) தருமத்தை நினையாதொழிந்தாய், அருளை நீத்தனை-(உயிர்கள்மேலுள்ள) கருணையை யொழித்தாய், முறைமையை துறந்தனை என்றும் சொல்லினன்-(மூத்தவற்கு உரித்து அரசென்னும்) முறைமையைத் துறந்தாயென்னுஞ் சொல்லையுடைய பரதாழ்வான், இறந்தனன் தாதை ஐ எதிர்கண்டால் என்ன மறந்தனன் மலர் அடிவந்துவீழ்ந்தனன்-இறந்த தந்தையை யெதிர்கண்டாற்போலத் தேகம் அவசமா யிராமமூர்த்தியின் தாமரைமலர்போன்ற திருவடிமேல்வந்து வீழ்ந்தான்.

மூத்தோன், தனக்கு இளையோர்க்குப் பெரியானைப் பணிந்தொழுகல் முதலிய அறங்களைக் கற்பித்தல் அறம் ஆகலால் அறந்தனை நினைந்திலை என்றான். இறந்தனன் வினைமுற்றுப்பெயரெச்சமாயிற்று. மறந்தனன் முற்றெச்சம். ௫௩

உண்டுகொலுயிரெனவொடுங்கினானுருக்
கண்டனனின்றவன்கண்ணன்கண்ணெனும்
புண்டரிகம்பொழிபுனலவன்சடா
மண்டிலம்நிறைந்துபோய்வழிந்துசோரவே.

(இ-ள்.) உயிர் உண்டுகொல்என ஒடுங்கினான் உருகண்ணன் கண்டனன்-உயிருண்டோ வில்லையோவென்று கருத மெலிந்த பரதன்வடிவை இராமமூர்த்திபார்த்து, கண் என்னும் புண்டரிகம் பொழிபுனல்-தமது கண்களென்னுந் தாமரைசொரியுங் கண்ணீர், அவன் சடாமண்டிலம் நிறைந்துபோய் வழிந்து சோரநின்றனன் - அப்பரதாழ்வானது சடாமுடியிடத்தில் நிறைந்துபோய் வழிந்து சோரநின்றனர்.

ஒடுங்கினன் செய்பவன்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். கண்டனன் முற்றெச்சம். கொல் ஐயப்பொருளில் வந்த இடைச்சொல். ௫௪

அயாவுயிர்த்தழுகணீரருவிமார்பிடை
உயாவுறத்திருவுளமுருகப்புல்லினான்
நியாயமத்தனைக்குமோர்நிலையமாகினான்
தயாமுதலறத்தினைத்தழுவியென்னவே.

(இ-ள்.) நியாயம் அத்தனைக்கு ஓர் நிலையம் ஆகினான் - நியாயமவ்வளவுக்குமோரிருப்பிடமாகிய இராமமூர்த்தி, தயாமுதல் அறந்தினை தழுவி என்ன-கருணையானது தனக்குமுதலாகிய தருமத்தைத் தழுவியதுபோல, அயாஉயிர்த்து-சிறிது துன்பம் நீங்கி, அழுதகண்ணீர் அருவி மார்பு இடை உயாவுற திருஉளம் உருக புல்லினான்-அழாநின்ற கண்களினின்றும் வரும் நீராகிய அருவிவெள்ளம் மார்பத்தில் அசைந்திழியத் தமது திருவுள்ள முருகத்தழுவினர்.

தயா இராமமூர்த்தியும் அறம் பரதாழ்வானுமாகக் கூறினமையால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. தழுவியென்ன தொகுத்தல்விகாரம். ௫௫

புல்லினனின்றவன் புனைந்தவேடத்தைப்
பன்முறைநோக்கினன் பலவுமுன்னினான்
அல்லலினழுங்கினை யையவாளுடை
மல்லுயர்தோளினன் வலியனோவென்றான்.

(இ-ள்.) புல்லினன்-தழுவிய இராமமூர்த்தி, நின்றவன் புனைந்த வேடத்தை பல்முறை நோக்கினன் பலவும் உன்னினான்-வணங்கிநின்ற பரதாழ்வான் தரித்த தவவேடத்தைப் பலமுறைநோக்கி அவனது குணம் பலவற்றையுங் கருதி, ஐய-ஐயனே, அல்லலின் அழுங்கினை-நீ துன்பத்தால் வருந்தினாய், ஆள் உடை மல் உயர் தோளினன் வலியனோ என்றான்-நிலவுலகத்தை யாளுதலுடைய மற்போரா லுயர்ந்த தோளையுடைய நமது பிதா சுகமாவென்று வினவினார்.

நோக்கினன், உன்னினான் முற்றெச்சங்கள். அழுங்கினை முன்னிலை யொருமை யிறந்தகாலவினைமுற்று. அழுங்கு பகுதி, உகரக்கேடு சந்தி, இன் இடைநிலை, ஐ விகுதி. ௫௬

அரியவனுரைசெய்யப்பரதனையநின்
பிரிவெனும்பிணியினாலென்னைப்பெற்றவக்
கரியவள்வரமெனுங்காலனாற்றனக்
குரியமெய்நிறுவிப்போயும்பரானென்றான்.

(இ-ள்.) அரியவன் உரைசெய்ய-அறிதற்கரிய இராமமூர்த்தி வினவ, பரதன்-பரதாழ்வான், ஐய நின் பிரிவு எனும் பிணியினால்-ஐயனே நின்னைப் பிரிதலாகிய நோயால், என்னைப் பெற்ற அக்கரியவள் வரம் எனும் காலனால்-என்னையீன்ற அந்தக் கொடியவளாகிய கைகேசியின் வரம் என்று சொல்லப்பட்ட இயமனால், தனக்கு உரிய மெய்நிறுவிபோய் உம்பரான் என்றான் - தனக்குரிய உண்மையை நிலவுலகில் நிறுத்திச்சென்று பரமபதத்திலிருக்கின்றனனென்று கூறினான்.

நிறுவி இறந்தகாலவினையெச்சம். நிறுவு பகுதி. ௫௭

விண்ணிடையடைந்தனனென்றவெய்யசொல்
புண்ணிடையயிலெனச்செவிபுகாமுனம்
கண்ணொடுமனஞ்சுழல்கறங்குபோலவாய்
மண்ணிடைவிழுந்தனனவானினும்பரான்.

(இ-ள்.) விண் இடை அடைந்தனன் என்ற வெய்யசொல்-பரமபதத்தை யடைந்தானென்ற கொடுஞ்சொல், புண் இடை அயில் என்ன செவிபுகாத முன்னம் - புண்ணில் வேல்நுழைந்தாற்போலக் காதில் நுழைதற்கு முன்னமே,

வானின் உம்பரான் - விண்ணுலகிற்கு மேலுள்ள பரமபதத்திற் கிறைவராகிய இராமமூர்த்தி, கறங்குபோல ஆய் கண்மனம் சுழல் மண் இடைவிழுந்தனன்- காற்றாடிபோலவாகிக் கண்ணுமனமுஞ் சுழன்று நிலவுலகின்மேல்விழுந்தார். ஒடு எண்ணிடைச்சொல். ருஅ

இருநிலஞ்சேர்ந்தனனிறையுயிர்த்திலன்
உருமினையரவெனவுணர்வினீங்கினான்
அருமையினுயிர்வரவயர்வுயிர்த்தகம்
பொருமினன்பன்முறைபுலம்பினனரோ.

(இ-ள்.) இறை இருநிலம் சேர்ந்தனன் உயிர்த்திலன் - இராமமூர்த்தி பெரிய நிலவுலகின்மேல் வீழ்ந்து மூச்சடங்கி, உருமின் னை அரவு என்ன உணர்வின் நீங்கினான்-இடியேற்றுக்குவருந்தும் பாம்பைப்போல அறிவினின்று நீங்கி, அருமையின் உயிர்வர அயர்வுயிர்த்து அகம்பொருமினன் பல்முறை புலம்பினான்- சிறிது உயிர்வர வருத்தஞ் சிறிதொழிந்து மனம்பொருமிப் பலமுறையும் புலம்பினர்.

உயிர்த்திலன், நீங்கினான், பொருமினன் முற்றெச்சங்கள். அகம் பொருமினன் உயர்திணையொடு சார்ந்த அஃறிணை யுயர்திணை முடிபேற்றது திணைவழுவமைதி "உயர்திணைதொடர்ந்த பொருண்முதலாறும்" என்றதூ—ஆல். சேர்தல், உயிர்ப்பொழிதல், நீங்குதல், பொருமுதல், புலம்புதல் என ஒருகாலத்திற் கூடத்தக்க பொருட்கூட்டத்தைக் கூறுதலால் கூட்டவணி. இதனை வடநூலார் சமுச்சாயலங்காரம் என்பர். இதுபோல் வருவனவற்றிற்கெல்லாம் இவ் வலங்காரங்கொள்க. ருகூ

கோச்சகவொருபோது

நந்தாவிளக்கனையநாயகனேநானிலத்தோர்
தந்தாய்தனியறத்தின்றாயேதயாநிதியே
எந்தாயிகல்வேந்தரேறேயிறந்தனையே
அந்தோவினிவாய்மைக்காருளரேமற்றென்றான்.

(இ-ள்.) நந்தாவிளக்கு அனைய நாயகனே-ஒளிகெடாத மாணிக்கவிளக்கினையொத்த எனது தலைவனே, நானிலத்தோர் தந்தாய்-பலவுலகினுள்ளார்க்குந் தந்தைபோல்பவனே, தனி அறத்தின் தாயே தயாநிதியே - ஒப்பற்ற தருமத்திற்கோர்தாயே கருணைச்செல்வமே, எந்தாய்-என்றந்தையே, இகல்வேந்தர் ஏறே- பகையரசர்களாகிய யானைக்கு ஆண்சிங்கம்போன்றவனே, இறந்தனையோ-இறந்தாயோ, அந்தோ-ஐயோ, இனிவாய்மைக்கு மற்று ஆர் உளர் என்றான் - இனியுண்மைக்கு உன்னையன்றி யாருளரென்று கூறினார்.

நான்கு என்பது பன்மைமேல் நிற்றலால் நானிலத்தோர் என்றதற்குப் பலவுலகத்தவர் என்றும். உலகினர் என்று பொருள்கூறின் குறிஞ்சி, முல்லை, மரு

தம், செய்தலென்னும் நான்கு நிலங்களாலமைந்தமையால் நானிலம் என்றார். "நவேணந்திணை நவேணதொழியப்-படுதிணைவையம் பாத்தியபண்பே" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால். தருமத்தினை வளர்த்தலால் அறத்தின்றாய் என்றார். மற்று பிறிதுபொருளில்வந்த இடைச்சொல். சுO

சொற்பெற்றநோன்பின்றுறையோனருள்வேண்டி
நற்பெற்றவேள்விநவைநீங்கநீயியற்றி
எற்பெற்றுநீபெற்றதின்னுயிர்போய்நீங்கவோ
கொற்பெற்றவெற்றிக்கொலைபெற்றகூர்வேலோய்.

(இ-ள்.) கொன்பெற்ற வெற்றி கொலைபெற்ற கூர்வேலோய்-அச்சத்தைத் தரும் வெற்றியுங் கொலையுமமைந்த கூரிய வேலையேந்திய அரசனே, சொல்பெற்ற நோன்பின் துறையோன் அருள்வேண்டி - புகழ்பெற்ற தவத்துறையையுடைய கலைக்கோட்டுமுனிவனது கருணையைப்பெற்று, நல்பெற்ற வேள்விநவை நீங்க நீ இயற்றி-நன்மையமைந்த புத்திரகாமேட்டியாகத்தைக் குற்றம்நீங்க நீசெய்து, என்பெற்று நீபெற்றது இன் உயிர்போய்நீங்க ஓ- என்னைப்பெற்று நீயடைந்த பயன் உனது இனியவுயிர்போய் நீங்குதற்கு ஓ (கூறாய் என்றபடி. ()

மன்னுயிர்க்குநல்குரிமைமண்பாரம்நான்சுமக்கப்
பொன்னுயிர்க்குந்தாரோய்பொறையுயிர்த்தவாறிதுவோ
உன்னுயிர்க்குங்கூற்றாயுலகாளவுற்றேனோ
மின்னுயிர்க்குந்தீவாய்வெயிலுயிர்க்கும்வெள்வேலோய்.

(இ-ள்.) மின் உயிர்க்கும் தீவாய் வெயில் உயிர்க்கும் வெள்வேலோய்-ஒளிவீசுந் தீவாய்ந்த கிரணத்தைவீசும் வெண்தோய்ந்த வேலினையேந்திய அரசனே, பொன் உயிர்க்கும் தாரோய் - பொன்னுலரிந்துசெய்த மாலையையுடையோய், மன் உயிர்க்கு நல்கு உரிமை-நிலைபெற்ற உயிர்களையோம்பும் அரசுரிமைபெற்று, மண்பாரம் நான்சுமக்க - பூபாரத்தை நான் சுமக்க, பொறை உயிர்த்த ஆறு இது ஓ-நீ பூபாரநீங்கி யிளைப்பாறிய விதமிதுவோ, உன் உயிர்க்கும் கூற்று ஆய் உலகு ஆள உற்றேனோ-உனதுயிர்க்கு யமனாயுலகினையாளத் தொடங்கினேனோ (கூறுயென்றபடி) சுஉ

என்பரத்ததாக்கியரசுரிமையிந்தியங்கள்
வெம்பலத்தின்வீயத்தவம்விளைத்தவாறிதுவோ
சம்பரப்பேர்த்தானவனைத்தள்ளிச்சதமகன்றன்
அம்பரத்தினீங்காவரசளித்தவாழியாய்.

(இ-ள்.) சம்பரன் பேர் தானவனை தள்ளி சதமகன்தன்-சம்பரனென்னும் பெயரையுடைய அசுரனைச்சாய்த்து இந்திரனது, அம்பரத்தின் நீங்காத அரசு

அளித்த ஆழியாய்-விண்ணுலகத்தினின்று னீங்காத அரசியலைத்தந்த ஆக்ஞை க்கரத்தையுடைய அரசனே, அரச உரிமை என்பரத்தது ஆக்கி-அரசுரிமையை யென்வசத்தாக்கி, இந்தியங்கள் வெம்பவத்தின் வீய-இந்திரியங்கள் கொடியபிற ப்பின் வருகையினின்று நீங்க, தவம் விளைத்த ஆறு இது ஒ-நீ தவஞ்செய்தவித மிதுதானோ.

இந்திரியங்கள் தத்தமக்குரிய புலன்களிற் செல்லுகையே பிறப்பிற்குக் கா ரணமாதலாலும் தொழிலுந் தொழிலுடைட்பொருளும் ஒற்றுமை யுண்மையின் இந்தியங்கள் வெம்பவத்தின்வீய என்றார். தன்னரசியலுக்குத் தீங்குசெய்து வரும் சம்பரனைத் தான் வெல்லமுடியாது இந்திரன்வந்து குறையிரக்க அவனை, வெற்றிசெய்து அவ்விந்திரனுக்கு அரசியல் தசரதன்தந்தானென்பது வரலாறு

வேண்டுந்திறத்தாருர்வேண்டாவரசாட்சி
பூண்டிவ்வுலகுக்கிடர்கொடுத்தபுல்லனேன்
மாண்டுமுடிவதல்லான்மாயாவுடம்பிதுகொண்
டாண்டுவருவதினியார்முகத்தேநோக்கவே.

(இ-ள்.) வேண்டுதிறத்தார் வேண்டாத அரசாட்சிபூண்டு-தவத்தினை விரும் புந் தன்மையையுடையோர் விரும்பாத அரசியலைப்பூண்டு, இ உலகுக்கு இடர் கொடுத்த புல்லனேன்-இந்த வுலகிற்குத் துன்பங்கொடுத்த அறிவிற்சிறிய நான். மாண்டு முடிவது அல்லால் மாயா-(இத் துக்கசமாச்சாரத்தைப் கேட்டால்) இற ந்து முடிவதன்றி யிறவாமல், இது உடம்புகொண்டு இனி யார்முகத்துநோக்க- இச் சரீரத்தைக்கொண்டு இனி யார்முகத்தைபபார்க்க, ஆண்டுவருவது - அவ் வயோத்திக்கு நான் வருவது.

உம்மை, ஏ அசைநிலை யிடைச்சொற்கள். மாயாமல் எதிர்மறை வினையெ ச்சத்தினீறும் அல்லாமல் என்றும் எதிர்மறைக்குறிப்பு வினையெச்ச மகரமுந் தொக்கு மாயா, அல்லால் எனநின்றன. கூ௪

தேனடைந்தசோலைத்திருநாடுகைவிட்டுக்
கானடைந்தேனென்னத்தரியாதுகாவலநீ
வானடைந்தாயின்னமிருந்தேனான்வாழ்வுகந்தே
ஊனடைந்ததெவ்வருயிரடைந்தவெள்வேலாய்.

(இ-ள்,) தெவ்வர் ஊன் அடைந்த உயிர் அடைந்த ஒள் வேலாய்-பகைவர து சரீரத்திலடைந்த உயிரினை யடைந்த ஒள்ளிய வேலினையேந்திய அரசனே, தேன் அடைந்த சோலை திருநாடு கைவிட்டு - தேனிறைந்த சோலைசூழ்ந்த அழ கிய கோசலநாட்டினைக் கைவிட்டு, கான் அடைந்தேன் என்ன-காட்டினையடை ந்தேனென்று, காவலநீதரியாது வான் அடைந்தாய்-உயிர்களைக் காத்தலில் வல் லோய் நீ யாற்றாமல் பரமபதத்தையடைந்தாய், வாழ்வு உகந்து நான் இன்னம் இருந்தேன் - இவ் வுடம்பொடுகூடி வாழும் வாழ்வினைவிரும்பி யின்னமு முய் ரோடிருந்தனன்.

அருவப்பொருள்மேலும் செல்வதென்பார் உயிரடைந்த வொள் வேலாய் என்றார். இன்னம் இனியென்னும் இடைச்சொற்றிரிபு. இனி இடைச்சொற்றிரிபு பகுதி, ஈறு கெடுதலும் னகரத்தோற்றமும் சந்தி, அம் பகுதிப்பொருள் விகுதி. ஊன் கருவியாகுபெயராய்க் காரியமாகிய உடல்மேல் நின்றது. உகந்து இறந்தகாலவினையெச்சம் உக பகுதி. ௬௫

வண்மையும்மானமுமேல்வானவர்க்கும்போக்கில்லாத்
திண்மையுஞ்செங்கோனெறியுந்திறம்பாத
உண்மையுமெல்லாமுடனேகொண்டேகினையே
தண்மைமிகுதகைமதிக்குமீந்ததனிக்குடையோய்.

(இ-ள்.) தண்மை தகைமதிக்கும் ஈந்த தனி குடையோய் - குளிர்ச்சியை விளக்கத்தையுடைய சந்திரனுக்குக் கொடுத்த ஒப்பில்லாத தவளக்குடையையுடையோய், வண்மையும் மானமும்-ஈகையு மானமும், மேல்வானவர்கும் போக்கில்லாத திண்மையும் - விண்ணுலகிலுள்ள தேவர்களுக்கும் போக்க இயலாத வலிமையும், செங்கோல் நெறியும் - மநுநீதி வழியும், திறம்பாத உண்மையும் எல்லாம் உடனேகொண்டு ஏகினையே-நிலைமாறாத மெய்மையுமாகிய இவைகளெல்லாம் நின்னோடு கொண்டுபோனாயோ (அறியேன் என்றபடி.)

எல்லா உயிர்களுக்கும் தண்ணிழல்செய்தலைச் சந்திர னிதனிடத்துப் பெற்றதென்பார் எச்சவும்மைதொக்க தண்மை தகைமதிக்குமீந்த தனிக்குடையோயெனவும், வண்மை முதலியன இனியொழிந்தவென்பார் உடன்கொண் டேகினையோவெனவுங் கூறினார். மானம் பழிக்கஞ்சுதல், வண்மை இவைமுதலியன இசை கெட்டவழிவந்த வுயிரளம்படை போக்கில்லாத எதிர்மறைப்பிறவினைப் பெயரெச்சம் போர்க்கு பிறவினைப்பகுதி, உகரக்கேடு சந்தி, அ சாரியை, இல் ஆற்றலுணர்த்தும் விகுதி, அினைத்தும் ஒருபகுதி, லகரத்தோற்றம் சந்தி, ஆ எதிர்மறைவிகுதி, அினைத்தும் ஒருபகுதி, து சாரியை, உகரக்கேடு சந்தி, அ எச்ச விகுதி. சந்திரனது தண்மையை யொழித்து வர்ணியமாகிய அரசனது குடையில் ஆரோபித்தலால் ஒழிப்பணி. இதனை வடநூலார் அபநுதியலங்காரம் என்பார். ௬௬

என்றெடுத்துப்பற்பலவும்பன்னியிடருழக்கும்
குன்றெடுத்தவொக்குங்குவவுத்தோட்கோளரியை
வன்றடக்கைத்தம்பியருமற்றுள்ளமன்னவரும்
சென்றெடுத்துத்தாங்கினார்மாவதிட்டன்றேற்றினான்.

(இ-ள்) என்று பற்பலவும் எடுத்து பன்னி இடர் உழக்கும் - என்று இவ்வாறு பற்பலவற்றையு மெடுத்துச்சொல்லித் துன்பத்தால் வருந்தும், குன்று எடுத்த ஒக்கும் குவவுதோள் கோள் அரியை - மலைதிரண் டுருவெடுத்தாலொக்கும் திரண்ட தோளையுடைய சிங்கம்போன்ற இராமமூர்த்தியை, வல்தடக்கை

தம்பியரும் மற்று உள்ள மன்னவர் உம்சென்று எடுத்து தாங்கினர்-வலிய நீண்ட கைகளையுடைய தம்பிமார்களும் வேறுள்ள அரசர்களும் சென்று எடுத்து அணைத்தார்கள், மாவதிட்டன் தேற்றினன்-பெரிய வசிட்டமுனிவர் இனிய சொல்லினால் தெளிவித்தார்.

பன்னி இறந்தகாலவினையெச்சம் பன் பகுதி. கூஎ

பன்னரியநோன்பின்பரத்துவனேயாதியாம்
பின்னுசடையோரும்பேருலகமோரேழின்
மன்னவருமந்திரியரெல்லாரும்வந்தடைந்தார்
தன்னுரிமைச்சேனைத்தலைவோருந்தாமடைந்தார்.

(இ-ள்.) பன் அரிய நோன்பின் பரத்துவனே ஆதி ஆம் பின்னுசடையோரும்-சொல்லுதற்கரிய தவநிலையுடைய பரத்துவன்முதலிய பின்னிய சடாமுடியையுடைய முனிவர்களும், பேர் உலகம் ஓரேழின் மன்னவரும் மந்திரியர் எல்லோரும் வந்து அடைந்தார்-பெரிய ஏழுலகங்களிலுள்ள அரசர்களு மமைச்சரெல்லோரும் வந்தடைந்தனர், தன் உரிமை சேனை தலைவோரும்வந்து அடைந்தார்-தமக்குரிய சேனைத்தலைவர்களாகிய சேனபதிகளும்வந்து சேர்ந்தார்கள்.

உலகம் ஓரேழ் என்றது ஏழுதீவுகளை. ஏழு தீவுகளாவன நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு. தலைவர் ஈற்றயல் அகரம் ஒகாரமாதலை "பெயர்வினையிடத்து" என்னும் சூ-இல் "ஆ ஓ வாகலும்" என்ற ஆக்கவும்மையால். கூஅ

மற்றும்வரற்பாலரெல்லாரும்வந்தடைந்தார்
சுற்றுமிருந்தவமைதியினிற்றுன்புழக்குங்
கொற்றக்குரிசின்முகநோக்கிக்கோமலரோன்
பெற்றபெருமைத்தவமுனிவன்பேசுவான்.

(இ-ள்.) மற்றும் வரற்பாலர் எல்லாரும் வந்து அடைந்தார்-மீளவும் வரும்பகுதியரெல்லாரும் வந்துசேர்ந்து, சுற்றும் இருந்த அமைதியினில் - சூழவுமிருந்த சமையத்தில், துன்பு உழக்கும் கொற்றம் குரிசில் முகம்நோக்கி - துன்பத்தால் வருந்தும் வெற்றிவாய்ந்த இராமமூர்த்தியின் திருமுகத்தைப் பார்த்து, கோமலரோன்பெற்ற பெருமை தவமுனிவன் பேசுவான்-எல்லாமலரினுந் தலைமைவாய்ந்த தாமரைமலரில் வசிக்கும் பிரமன்பெற்ற பெருமையையுந் தபத்தையுமுடைய வசிட்டமுனிவர் கூறுகின்றார்.

பூவினுட் சிறந்தது தாமரையாதலால் கோமலரோன் என்றார் "பூவினுக்கருங்கலம் பொங்குதாமரை" என்றமையால் மற்றுபிறிது பொருளில்வந்த இடைச்சொல். வரல் என்னுந் தொழிற்பெயர் பெயரெச்சமாய்ப் பாலர் என்னுங் குறிப்பு வினைமுற்றுப்பெயரின் முதனிலைகொண்டது. கூகூ

**கலிவிருத்தம்.**

துறத்தலுநல்லறத்துறையுமல்லது
புறத்தொருதுணையிலைபொருந்துமன்னுயிர்க்
கிறத்தலும்பிறத்தலுமியற்கையென்பதை
மறத்தியோமறைகளின்வரம்புகண்டநீ.

(இ-ள்.) பொருந்தும் மன் உயிர்க்கு-நிலவுலகில் பொருந்திய ஆக்கத்தையுடைய வுயிர்களுக்கு, துறத்தலும் நல் அறத்துறையும் அல்லது புறத்து ஒருதுணை இல்லை என்பதை-துறவறவழியும் இல்லறவழியுமன்றி வேறு துணையில்லையென்பதையும், இறத்தலும் பிறத்தலும் இயற்கை என்பதை-அவைகளுக்கு இறப்பும் பிறப்பும் இயல்பென்பதையும், மறைகளின் வரம்புகண்ட நீ மறத்தி ஓ-வேதங்களின் எல்லையைக்கண் டளந்த நீ மறந்தாயோ.

இது முதல் "விண்ணுநீர் மொக்குகளின்" என்பது காறும் ஒருதொடர். இல்லறத்தி னருமைதோன்ற நல்லறம் என்றார். துறை, என்பது இறுதிநிலைத் தீவகவணி. மறத்தி முன்னிலை யொருமை யிறந்தகால வினைமுற்று மற பகுதி, தகரமெய் சந்தி, தகரமெய் இடைநிலை, இ விகுதி. எ௦

உண்மையில்பிறவிகளுலப்பில்கோடிகள்
தண்மையில்வெம்மையிற்றழுவினவ்வெனும்
வண்மையைநோக்கியவறியகூற்றின்பால்
கண்மையுமுளதெனக்கருதலாகுமோ.

(இ-ள்.) உண்மை இல்பிறவிகள் உலபபு இல் கோடிகள்-தோன்றியழியும் பிறப்புக ளளவில்லாத பலகோடிகள், தண்மையில் வெம்மையில் தழுவின என்னும் வண்மையைநோக்கிய (அப் பிறப்புகள்) நன்மையிலும் தீமையிலு மமைந்தனவென்னும் திறத்தை நோக்கிநின்ற, வறியகூற்றின்பால்-கொடிய இயமனிடத்தில், கண்மையும் உளது என்ன கருதல் ஆகும் ஓ-கண்ணோட்ட முண்டென்று நினைக்கவுங்கூடுமோ.

பிரமன் முதல் பிபீலி காந்தங் காறும் என்பார் பிறவிகளுலப்பில் கோடிகள் எனவும், அப் பிறப்புகள் புண்ணிய பாவங்களின் வழிப்பட்டன என்பார் தண்மையில் வெம்மையில் தழுவினவெனவும், எல்லா வுயிர்களிடத்தும் இயமன் ஒருதன்மையன் என்பார் கண்மையுமுளதென எனவும் கூறினார். எ௧

பெறுவதன்முன்னுயிர்பிரிதல்காண்டியால்
மறுவறுகற்பினில்வையம்யாவையும்
அறுபதினுயிரமாண்டுமாண்டவன்
இறுவதுகண்டவற்கிரங்கல்வேண்டுமோ.

(இ-ள்.) பெறுவதன்முன் உயிர்பிரிதல்காண்டி-ஒருடம்பு பெறுதற்குமுன்னே அதினின்று முயிர் பிரிதலைக்காண்கின்றாய், மறு அறு கற்பின் இல்-குற்ற மற்ற கற்பினைக் கற்புடைய பெண்கள் ஓம்புதல்போல, வையம்யாவையும் அறுபதினாயிரம் ஆண்டும் ஆண்டவன் - நிலவுலகமுற்றும் அறுபதினாயிரவருடம் ஓம்பிய அரசன், இறுவதுகண்டு அவற்கு இரங்கல்வேண்டும் ஓ-சாதலைக்கண்டு அவ்வரசன்பொருட்டு வருந்தவேண்டுமோ (வேண்டியதில்லை என்றபடி.)

பிறத்தற்கு முன்னமே யிறந்தலைப் பார்த்துள்ள நீ அறுபதினாயிரவருடம் ஆண்ட அரசன் இறந்ததற்கு இரங்குதல் முறையல்லவென்பது கருத்து. இது உலகவழக்கை யெடுத்துக் கூறுதலால் உலகவழக்கு நவிற்சியணி. ஓகாரம் எதிர் மறைப்பொருட்டு. எஉ

சீலமுந்தருமமுஞ்சிதைவில்செய்கையும்
சூலமுந்திகிரியுஞ்சொல்லுந்தாங்கிய
மூலம்வந்துதவியமூவர்க்காயினும்
காலமென்றொருவலைகடக்கலாகுமோ.

(இ-ள்.) சீலமும் தருமமும் சிதைவு இல் செய்கையும்-நல்லொழுக்கத்தையுந் தருமத்தையும் அழிதலில்லாத செய்கையையும், சூலம் உம் திகிரி உம் சொல் உம் தாங்கிய - சூலத்தையுஞ் சக்கரத்தையுஞ் சொல்லையுந்தாங்கி, மூலம் வந்து உதவிய மூவர்க்கு ஆயினும்-யாவைக்குங் காரணமாய் நின்ற திரிமூர்த்திகளுக்கானாலும், காலம் என்ற ஒருவலை கடக்கல் ஆகும் ஓ-காலமென்று சொல்லப்பட்ட ஒரு வலையினின்று தப்பக்கூடுமோ (கூடாதென்றபடி.)

மூவர் என்றது பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னு மூவரை. தாங்கிய செய்து என்னும் எச்சத்திரிபு. எங

கண்முதல்காட்சியகளையில்நீளத்த
உண்முதற்பொருட்கெலாமூற்றமானவ
மண்முதல்பூதங்கண்மாயுமென்றபோ
தெண்முதலுயிர்க்குநீயிரங்கல்வேண்டுமோ.

(இ-ள்.) கண்முதல் காட்சிய-கண்முதலிய இந்திரியங்களுக்குக் காட்சிதருவனவும், களையில் நீளத்த - அளவில்லாத நீளத்தையுடையனவும், உண்முதல் பொருட்கு எல்லாம் ஊற்றம் ஆவன-உயிர்கள் நுகர்தற்குக் காரணமான பொருள்களுக்கெல்லா மிருப்பிடமாவனவுமாகிய, மண்முதல் பூதங்கள் மாயும் என்றபோது-பிருதுவிமுதலிய பூதங்களு மழியுமென்ற காலத்தில், எண்முதல் உயிர்க்கு நீ இரங்கல்வேண்டும் ஓ - எண்ணுதற்குக் காரணமான உயிர் நீங்குதற்குத் தெரிந்த நீ வருந்துதல் கூடுமோ கூடாது (என்றபடி.)

முன்னுள்ள முதல் என்னும் பகுதி வினைமுற்றின்மேல் நிற்றலாலும், மண்முதல் என்றதில் வினைத்தொகைமேல் நிற்றலாலும் ஈறு திரியாது நின்றது.

புண்ணியநறுநெயிற்பொருவில்காலமாம்
திண்ணியதிரியினில்விதியென்றீயினில்
எண்ணியவிளக்கவையிரண்டுமெஞ்சினல்
அண்ணலேயவிவதற்கையமாவதோ.

(இ-ள்.) அண்ணலே-இராமமூர்த்தியே, புண்ணியம் நறுநெய்யில் - புண்ணியமாகிய நறுமணங்கமழு நெய்யாலும், பொருவு இல் காலம் ஆம் திண்ணிய திரியினில்-ஒப்பில்லாத காலமாகிய வலிய திரியாலும், விதி என் தீயினில் - ஊழென்னுந் தீயினலும் எற்றிய, எண்ணிய விளக்கு - எண்ணப்பட்ட விளக்கு, அவை இரண்டும் எஞ்சினல் - அந்த நெய்யுந் திரியுந் தேய்ந்தால் அவிவதற்கு ஐயம் ஆவது-அவ் விளக் கவிதற்குச் சந்தேகம் யாது.

யாவது என்பதன் முதலில் யகரங்கெடுதல் புணர்ச்சியில் விகாரம். இது மிகை குறைவின்றிச் சமனுக வுருவகஞ் செய்யப்பட்டதனல் அவையவொற்றுமை யுருவகவணி. இதனை வடநூலார் அபேதரூபகாலங்காரம் என்பார். ௬0

இவ்வுலகத்தினுமிடரினேகிடந்
தவ்வுலகத்தினுநரகினுழ்ந்துபின்
வெவ்வினைதுய்ப்பனவிரிந்தயோனிகள்
எவ்வளவிற்செலலெண்ணலாகுமோ.

(இ-ள்.) இ உலகத்தின் உம் இடரின் எ கிடந்து-இந்த உலகத்திலுந் துன்பத்திலே யழுந்தி, அ உலகத்தினும் நரகின் ஆழ்ந்து - மறுமையிலும் நரகத்திலழுந்தி, பின் வெவ்வினை துய்ப்பன-பின்பு கொடிய வினைப்பயனை நுகர்தற்கு, விரிந்த யோனிகள் எ அளவில் செலவு எண்ணல் ஆகும் ஒ - பலவகைப்பட்ட யோனிகள் எவ்வளவு அவ்வளவிலுஞ் சென்று பிறத்தலை நம்மா லளவறுக்கக் கூடுமோ (கூறுதென்றபடி)

துய்ப்பன என்னும் வினைமுன் றினின்று பிரிந்த தொழிற்பெயர் நான்கனுருபேற்றது. ஆன்மாவாகிய கர்த்தாவின் செயலை முறைபிறழாமற சொல்லுதலால் வினைமுதல் விளக்கணி. இதனை வடநூலார் காரகதீபாலங்காரம்என்பார்.

உண்டுகொலிதுவலதுகவிதீசெய்வ
தெண்டகுகுணத்தினய்தாதையென்றலால்
புண்டரிகத்தனிமுதற்குப்போக்கரு
விண்டுவினுலகிடைவிளங்கினனரோ.

(இ-ள்.) எண்தகு குணத்தினய்-யாவரு மெண்ணத்தக்க குணத்தினையுடையாய், தாதை என்றலால்-உன் பிதாவென்று சொல்லபபடுதலினல், புண்டரிகத் தனிமுதற்கும்-தாமரையில் வசிக்கும் ஒப்பில்லாத முதல்வனகிய பிரமனுக்கும் போக்கு அருவிண்டு இன் உலகு இடை விளங்கினன் - அடைதற்கரிய திருமா

வின் பரமபதத்தில் ஒப்பின்றித் தசரதன் வீற்றிருந்து விளங்கினன் (ஆதலால்) இது அல்லது உதவி நீ செய்வது உண்டு கொல் - இதுவன்றி நீ செய்யு முதவி வேறுண்டா.

விண்டு வடசொல்லாதலால் குற்றிய லுகரவீறு வருமொழி முதலுயிர்வரக் கெடாது உடம்படுமெய்பெற்றது. இராமமூர்த்தியைப்பெற்ற தொழிற்குணநன்மையால் தசரதனக் குண நன்மையை யடைதலால் இது அகமலர்ச்சியணி. இதனை வடநூலார் உல்லாசாலங்காரம் என்பர். எ௫

ஐயநீயாதொன்றுமவலிப்பாயலை
உய்திறமவற்கினியதனின்வேறுண்டோ
செய்வனவரன்முறை திருத்திச் சேந்தநின்
கையினாலொருக் தருதிகடனெலாமென்றான்.

(இ-ள்.) ஐய-ஐயனே, நீ யாதொன்றும் அவலிப்பாய் அல்லை - நீ சிறிதுந் துன்புறுதே, அவன் உய் திறம் இனி இதனின் வேறு உண்டோ - அத் தசரதனுக்குப பிழைக்குந் திறம் இனி யிதைப்பார்க்கிலு மிகநன்றுண்டோ, செய்வன கடன் எல்லாம் வரன்முறை திருத்தி - நீ செய்யுங் கடன்களையெல்லாம் நூலில் விதித்த வழியேசெய்து, நின் சேந்தகையிற்றுல் ஒருங்கு தருதியென்றான்-உனது சிவந்த கையினுல் தர்ப்பணஞ்செய்வாயென்று வசிட்டமுனிவர் கூறினுர்.

செய்வன என்றும் வினைமுற்றுப் பெயரெச்சத்தில் வந்தது. சேந்த பண்படியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம். சே பகுதி, நகரமெய்சந்தி, தகரமெய் இடைநிலை, அ விகுதி. செம்மை என்னும் பண்பு ஈறுகெட்டு முதனீண்டு சே என நின்றது. எ௬

விண்ணுறுநீர்மொக்குளின்விளியும்யாக்கையை
எண்ணிநீயழுங்குதலிழுதைப்பாலதால்
கண்ணினீருகுத்தலிற்கண்டதில்லைபோய்
மண்ணுறுநீருகுத்திதாமரைக்கையாலென்றான்.

(இ-ள்.) விண்ணுநீர் மொக்குளின்-மேகம்பொழியு நீரிற்றோன்றி யழியுங் குமிழியைப்போல , விளியும் யாக்கையை எண்ணி-அழியு முடம்பினை யொரு பொருளாகக் கருதி, நீ அழுங்குதல் இழுதை பாலது-நீ வருந்துதல் அறியாமையின் பகுதியதாம், கண்ணின் நீர் உகுத்தலின் கண்டது இல்லை-கண்ணினின்று நீரைச் சிந்துதலா லடையும் பய னொன்றுமில்லை, தாமரை கையால் மண்ணுநீர் உகுத்தி எச்சிறு தாமரைபோன்ற கையினுல் ஈமடநறு மென்னு நீரு மிறைப்பாயென்று வசிட்டமுனிவர் கூறினுர்.

இன் உருபு இரண்டனுருபுள் முன்னது நீக்கப் பொருளிலும் பின்னது ஒப்புப்பொருளிலும் வந்தன. உகுத்தி முன்னிலையொருமை யெதிர்காலவினை

முற்று. உகு பகுதி, து சாரியை, தகரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, இ விகுதி. யாக்கை தோல் முதலிய சந்ததாதுக்களாற் கட்டப்படுவது என்னும் பொருள் மேல் நிற்றலால் செயப்படுபொருளில் வந்த தொழிற்பெயர். யா பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, ஐ விகுதி. கை தொழிற்பெயர் விகுதியாகக்கொண்டால் தொழிலாகுபெயராகக் கொள்க. எகூ

என்றபினேந்தலையேந்திவேந்தரும்
பொன்றிணிந்தனசடைப்புனிதனோடுபோய்ச்
சென்றனர்செறிதிரைப்புனலிற்செய்கென
நின்றனரிராமனுநெறியைநோக்கினான்.

(இ-ள்.) என்றபின்-என்று முனிவர் கூறியபின், வேந்தரும் ஏந்தலை ஏந்தி-அரசர்களும் இராமமூர்த்தியைக் கையிற்றாங்கி, பொன் திணிந்தன சடை புனிதனோடும் போய் சென்றனர்-பொன் விழுதுவிட்டாலொத்த சடையையுடைய வசிட்டமுனிவரோடும் போய்க் கங்கையையடைந்து, செறிதிரை புனலில் செய்க என நின்றனர் - நெருங்கிய அலையையுடைய நீரிற் செய்யுங் கடமைகளைச் செய்யக்கடவாயென்று கரையில் நின்றார்கள், இராமனும் நெறியை நோக்கினான் - இராமனும் பெரியோர் மொழியாற் சிறிது துன்ப நீங்கிச் செய்யு முறையை நினைத்து.

இது ஆனவன் என்னும் செய்யுள்காறும் ஒருதொடர் ஆதலால் நோக்கினான் முற்றெச்சமாயிற்று. சென்றனர் முற்றெச்சம். ஏந்தல் உலகினைத் தாங்குதலுடையோன் மேல்நிற்றலால் தொழிலாகுபெயர். அ0

புக்கனன்புனலினின்முழுகிப்போந்தனன்
தக்கநன்மறையவன்சடங்குகாட்டத்தான்
முக்கையினீர்விதிமுறையினீந்தனன்
ஒக்கநின்றுயிர்தொறுமுணர்வுநல்குவான்.

(இ-ள்.) உயிர்தொறும் ஒக்க நின்று உணர்வு நல்குவான்-உயிர்கள்தோறுங் கலந்துநின்று அறிவூட்டும் இறைவனாகிய இராமமூர்த்தி, புனலின் புக்கனன் முழுகி போந்தனன்-நீரி லிறங்கி நீராடிவந்து, தக்க நன் மறையவன் சடங்கு காட்ட-தகுநிலைமையையுடைய வசிட்டமுனிவர் செய்முறையைக்காட்ட, தான் முக்கையில் நீர் விதிமுறையின் ஈந்தனன்-அவ் விராமமூர்த்தி மூன்றுதரம் தமது திருக்கரத்தால் நீர்முகந்து நூலில் விதித்த முறைப்படி தென்புலத்தார் கடன் கழித்தனர்.

புக்கனன், போந்தனன் முற்றெச்சங்கள். இராமமூர்த்தியின் செய்கைகளை முறைபிறழாமற் கூறுதலால் வினைமுதல் விளக்கணி. அக

ஆனவன்பிறவுளயாவுமாற்றிப்பின்
மானமந்திரத்தவர்மன்னர்மாதவர்
ஏனையர்பிறர்களுஞ்சுற்றவேகினன்
சானகியிருந்தவச்சாலையெய்தினன்.

(இ-ள்.) ஆனவன் பிற உள்ள யாவும் ஆற்றி - அந்த இராமமூர்த்தி மற்றுள்ள எல்லாக் கடன்களையு முடித்து, பின்-பின்பு, மானம் மந்திரத்தவர் மன்னர் மாதவர் ஏனையர் பிறர்களும் சுற்ற ஏகினன்-பெருமையமைந்த மந்திரிகளும் அரசர்களும் பெரிய தபோதனர்களும் மற்றையோரும் பிறரும் சூழச்சென்று, சானகி இருந்த அ சாலை எய்தினன் - சீதாப்பிராட்டியா ரிருந்த அப் பன்னசாலையை யடைந்தார். சனகன் புத்திரி சானகி இது தத்திதாந்த பதம். ௮௨

எய்தியவேலையிற்றமியளெய்திய
தையலைநோக்கினன்சாலைநோக்கினன்
கைகளிற்கண்மலர்புடைத்துக்கான்மிசை
ஐயனப்பரதன்வீழ்ந்தரற்றினனரோ.

(இ-ள்.) எய்திய வேலையில்-அடைந்த காலையில், ஐயன் அ பரதன்-ஐயனாகிய அந்தப் பரதாழ்வான், தமியள் எய்திய தையலை நோக்கினன்-தனியளாய் இருந்த சீதையைப்பார்த்து, சாலை நோக்கினன்-பன்னசாலையைப் பார்த்து, கைகளில் கண்மலர் புடைத்து-தனது கைகளாற் கண்களாகிய தாமரைமலரி லறைந்து, கால்மிசை வீழ்ந்து அரற்றினன்-அச் சீதையின் பாததாமரைமேல் வீழ்ந்து கதறினன். நோக்கினன் முற்றெச்சம். ௮௩

வெந்துயர்தொடர்தரவிம்மல்விம்மநீர்
உந்தியநிரந்தரமூற்றுமாற்றில
சிந்தியகுரிசிலச்செம்மல்சேந்தகண்
இந்தியங்களிலெறிகடலுண்டென்னவே.

(இ-ள்.) குரிசில் அ செம்மல் சேந்தகண் இந்தியங்கள் இல் எறிகடல் உண்டு எனன-பெருமையிற் சிறந்தோனாகிய அப் பரதாழ்வானுஞ் செவந்த கண்களாகிய இந்திரியங்களி லலையெறியுங் கட லுண்டென்று கூறும்படி, வெந்துயர் தொடர்தர விம்மல் விம்ம-கொடிய துன்பந் தொடர்தலால் அழுகை யதிகரிக்க, நீர் உந்திய - அக் கண்கள் நீரைப் பெருக்கி, நிரந்தரம் ஊற்று மாற்றில சிந்திய-எப்பொழுது மாறாது சிந்தின.

தொடர்தர என்னும் வினையெச்சம் காரணப்பொருள்மேல் நிற்றலால் இறந்தகாலத்தில் வந்தது. விம்ம நிகழ்காலவினையெச்சம். உந்திய முற்றெச்சம். ௮௪

அந்நெடுந்துயருறுமரியவீரனைத்
தன்னெடுந்தடக்கையாலிராமன்றாங்கினான்
நன்னெடுங்கூந்தலைநோக்கிநாயகன்
என்னொடும்பிரிவினிலிறந்திட்டானென்றான்.

(இ-ள்.) அ நெடுந்துயர் உறும் அரிய வீரனை - அந்த நெடிய துன்பத்தி லழுந்திய அடைதற்கரிய வீரனாகிய பரதாழ்வானை, இராமன் தன் நெடுந்தடக்கையால் தாங்கினான் - இராமமூர்த்தி தனது நெடிய நீண்ட கையினால் எடுத்தணைத்து, நல்நெடுங் கூந்தலை நோக்கி - கற்பிற் சிறந்த சீதையைப்பார்த்து, நாயகன் என் நெடும்பிரிவினில் இறந்திட்டான் என்றான் - தசரதன் என்னைவிட்டுப் பிரிந்த நெடிய பிரிவினால் இறந்தானென்று கூறினான்.

இறந்திட்டான் இறப்பு, தா சாரியை, நகரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, இடு அசைநிலையிடைச்சொல் இவைகளாலாய ஒருபகுதி, முதனிலை டகர மெய் இரட்டித்தல் இறந்தகாலவிடைநிலை, உகரக்கேடு சந்தி, ஆன் விகுதி. அ௩

துன்னினெற்றினள் துளங்கினாளுலைக்
கண்ணெனுங்கடனெடுங்கலுழிகான்றிட
மண்ணெனுஞ்செவிலிமேல்வைத்தகையினாள்
பண்ணெனுங்கிளவியாள்பன்னியேங்கினாள்.

(இ-ள்.) துன்னினள் நெற்றினள் - நெஞ்சமுற்ற மனத்தையுடையவளாய், துளங்கினாள் - நடுங்கி, கண் எனும் கடல் நெடுங்கலுழி கான்றிட - இரண்டு கண்களென்னுங் கடல் நெடிய காட்டாறுபோல நீரைச்சிந்த, மண் என்னுஞ் செவிலிமேல் வைத்த கையினாள் - மண்ணுலகமென்னுஞ் செவிலித்தாய் மேல்வைத்த கையையுடைய சீதை, பண் என்னும் கிளவியால் பன்னி ஏங்கினாள் - இசையோமென்று கூறுஞ் சொல்லாற் புலம்பியழுதாள்.

கலுழியென்னும் உவமானச் சொல்லால் கண்ணீராகிய உவமேயத்தை யிலக்கணையாகக் கூறுதலால் உருவகவுயர்வு நவிற்சியணி. செவிலி வளர்த்த தாய். கைத்தாயெனவும் பொருந்தும். அகூ

கன்னகுதிரள்புயக்கணவன்பின்செல
நன்னகரொத்ததுநடந்தகானமும்
மன்னவன்றுஞ்சினனென்றமாற்றத்தால்
அன்னமுந்துயர்க்கடலடைவைத்தாளரோ.

(இ-ள்.) கல் நகு திரள்புயம் கணவன் பின்செல நடந்த கானம் உம்-மலையைப்பழிக்குந் திரண்ட புயத்தையுடைய தனது நாயகன் பின்னே செல்ல நடந்த கொடுஞ்சுரமும் நல் நகர் ஒத்தது-(சீதைக்குத் துன்பந்தோன்றாது) நல்லநகரிற் செல்வதை யொத்திருந்தது, மன்னவன் துஞ்சினன் என்ற மாற்றத்து ஆல்-

தசரத னிறந்தானென்று கூறிய வார்த்தையால், அன்னமும் துயர்கடல் அடி வைத்தாள்-அன்னம்போன்ற அச் சீதையுந் துன்பமாகிய கடலிற் கால்வைத்தாள்

சுரத்திற் சென்றபோதுந் துன்பமறியாத சீதை தசரத னிறந்தானென்ற வார்த்தையால் துன்பத்தை யறிந்தாள் என்பது கருத்து. உம்மை இரண்டும் உயர்வு சிறப்புப்பொருளன. ௮௭

ஆயவடன்னைநேர்ந்தங்கையேந்தினர்
தாயரின்முனிவர்தந்தருமப்பன்னியர்
தூயநீராட்டினர்துயரநீக்கினர்
நாயகற்சேர்த்தினர்நவையுணீங்கினர்.

(இ-ள்.) முனிவர் தம் தருமப் பன்னியர்-வானப்பிரத்தநிலையில்நிற்கு முனிவரது தருமத்தை போற்றும் அவர்களது மனைவிமார், தாயரின் - தாய்மாரைப் போல, ஆயவள் தன்னை நேர்ந்து அங்கை யேந்தினர் - அழுது சோர்பவளாகிய சீதையை யெதிர்ப்பட்டு அழகிய கையால் ஏந்தி, தூயநீ ராட்டினர் துயரம் நீக்கினர் - புனிதமாகிய கங்கைநீரில் மூழ்குவித்துத் துன்பம் நீக்கி, நாயகன் சேர்த்தினர் நவையுள் நீங்கினார்-இராமமூர்த்தியோடு கூட்டித் தாமுந் துன்பத்தினின்று நீங்கினார்.

ஏந்தினர், ஆட்டினர், நீக்கினர், சேர்த்தினர் என்னு முற்றுக்கள் எச்சமாய் நின்றன. தாமுந் துன்பத்தினின்று நீங்குதலாவது சீதை படுந் துன்பத்தைநோக்கித் தாமுந் துன்படைதல். நவை குற்றம் இங்கு வருத்தத்தின்மேல் நின்றது. வானப்பிரத்த நிலையாவது மனைவியோடு வனத்தில் தவஞ்செய்தல். இதுவும் வினைமுதல் விளக்கணி. ௮௮

தேன்றருந்தெரியலச்செம்மனால்வரை
ஈன்றவர்மூவரோடிருமைநோக்குறும்
சான்றவர்குழாத்தொடுந்தருமநோக்குறும்
தோன்றல்பாற்சுமந்திரன்றொழுதுதோன்றினான்.

(இ-ள்.) தேன்தருந் தெரியல் அச் செம்மல் நால்வரை ஈன்றவர் மூவரோடு- தேனைச் சிந்து மாலையை யணிந்த அந்த இராமமூர்த்தி முதலிய நால்வரையும் பெற்றவர்களாகிய கௌசலாதேவி முதலிய மூன்றுபேரோடும், இருமை நோக்குறும சான்றவர் குழாத்து ஒடு உம் - இம்மை மறுமைப்பயன்களைச் சீர்தூக்கிப் பார்க்கும் பெரியவர் கூட்டத்தோடும், தருமம் நோக்குறும் தோன்றல்பால் சுமந்திரன் தொழுது தோன்றினான் - தருமநெறியை நோக்கும் இராமமூர்த்தியிடத்துச் சுமந்திரனென்னு முதலமைச்சன் வணங்கி யெதிர்நின்றான்.

செம்மல் பெருமையிற் சிறந்தோன். இருமை இரண்டு என்னுங் குணியைக் குணமாகக்கூறியது மரபு வழுவமைதி. நால்வர், மூவர் என்பதனிறுதியில் இனத்தென அறிபொருளில்வந்த முற்றும்மை தொகுத்தல். குழாத்துகு

ழாம் மகரவீறும் வருமொழிமுதலில் அத்துச்சாரியையின் அகரமுங்கெட்டுக் குழாத்து என நின்றது. அக

இதுவும் அது.

எந்தையாண்டையானியம்புவீரென
வந்ததாயர்தம்வயங்குசேவடிச்
சிந்திநின்றனன்சேந்தகண்ணினீர்
முந்தைநான்முகத்தவற்குமுந்தையான்.

(இ-ள்.) முந்தை நான் முகத்தவற்கும் முந்தை யான் - முற்பட்ட பிரமனுக்கு முற்பட்டு நின்ற முதல்வராகிய இராமமூர்த்தி, எந்தை யாண்டை யான்-என் பிதா எவ்விடத்துள்ளான், இயம்புவீர் என்று-அதனைக் கூறுங்களென்று, வந்த தாயர்தம் வயங்கு சே அடி - வந்த தாய்மாருடைய விளங்குஞ் செவந்த திருவடியில், சேந்த கண்ணின் நீர் சிந்தி நின்றனன் - செவந்த கண்களினின்று நீரைச் சிந்தினர்.

பிரமனை நாபிக்கமலத்தில் தந்தமையால் முந்தை நான் முகத்தவற்கு முந்தை யான் என்றார். முந்தை முந்து பகுதி, உகரங்கெடு சந்தி, ஐ சாரியை கூ0

தாயருந்தலைப்பெய்துதாந்தழீஇ
ஓய்விலன்பினுலறலோங்கினர்
ஆயசேனையுமணங்கனர்களும்
தீயில்வீழ்ந்ததீமெழுகிற்றேம்பினர்.

(இ-ள்.) தாயரும் தலைப்பெய்து தாம் தழுவி - தாய்மாருங் கலந்து தாம் இராமமூர்த்தியைத் தழுவி, ஓய்வு இல் அன்பினுல் உரறல் ஓங்கினர்-நீங்காத அன்பினுல் கதறத்தொடங்கினர்கள், ஆய சேனையும் அணங்கனர் கள் உம்-அமைந்த சேனையிலுள்ளவர்களும் தெய்வப்பெண்களையொத்த பெண்களும், தீயில் வீழ்ந்த தீ மெழுகில் தேம்பினர் - நெருப்பில்வீழ்ந் துருகு மெழுகைப்போல மனமுருகினர்கள். தழீஇ சொல்லிசை நிறைத்தலில் வந்த உயிரளபெடை. கூக

பின்னவ்வீரரைப்பெற்றபெற்றியப்
பொன்னனர்களுஞ்சனகன்பூவையைத்
துன்னிமார்புறத்தொடர்ந்துபுல்லினர்
இன்னல்வேலைபுக்கிழிந்துமுந்துவார்.

(இ-ள்.) பின் அ வீரரை பெற்ற பெற்றி - பின்பு அந்த வீரர்களைப்பெற்ற தன்மையையுடைய, அ பொன் அன்னர்களும் சனகன் பூவையை துன்னி மார்பு உற தொடர்ந்து புல்லினர்-அந்த இலக்குமிதேவியையொத்த தாய்மார்களுஞ் சனகராசன் பெற்ற நாகணவாய்ப்புள்ளையொத்த சொல்லையுடைய சீதையை

நெருங்கி மார்பிற்பொருந்தத் தொடர்ந்து தழுவி, இன்னல் வேலைபுக்கு இழிந்து அழுந்துவார்-துன்பக்கடலிற் புகுந்திறங்கி யழுந்துவாராயினர்.

பூவை உவமையாகுபெயராய்ச் சீதைமேல் நின்றது. புல்லினர் முற்றெச்சம். கஉ

சேனைவீரருந்திருநன்மாநகர்
மானமாந்தருமற்றுளோர்களும்
ஏனைவேந்தரும்பிறரும்யாவரும்
கோனையெய்தினர்குறையுநெஞ்சினதடார்.

(இ-ள்) சேனைவீரரும் - சேனைவீரர்களும், திரு நல் மாநகர் மானம் மாந்தரும் மற்றுளோர்களும்-அழகிய நல்ல பெரிய நகரத்திலுள்ள பெருமையமைந்த புருடர்களும் பெண்களும், ஏனை வேந்தரும் பிறரும் யாவரும் - மற்றை யரசர்களும் பிறரும் இவரொழிந்த எல்லோரும், கோனை எய்தினர் குறையும் நெஞ்சினர்-இராமமூர்த்தியையடைந்து நிலைகெட்ட மனமுடையவராயினர்கள்.

மாந்தர் என்றமையால் மற்றுளோர்கள் என்றதற்குப் பெண்களெனவும் வேந்தர் என்றமையால் பிறர் என்றது அவரவர்க்குரிய அமைச்சர் எனவும், யாவர் என்றமையால் இவரொழிந்த எல்லோரும் எனக்கொள்க. எய்தினர் முற்றெச்சம். கங

படஞ்செய்நாகணைப்பள்ளிநீங்கினன்
இடஞ்செய்தொல்குலத்திறைவனாதலால்
தடஞ்செய்தேரினன்றானுநீரினால்
கடஞ்செய்வானெனக்கடலில்மூழ்கினன்.

(இ-ள்.) படம் செய் நாக அணை பள்ளி நீங்கினன்-படத்தை விரிக்கும் சேஷசயனத்தி லறிதுயி லின்று நீங்கிய இராமமூர்த்தியின், இடம் செய் தொல்குலத்து இறைவன் ஆதலால் - பரந்த தொன்றுதொட்டுள்ள குலத்திற்றோன்றிய முதல்வனாதலால், தடசெய் தேரினன் தானும் - பரந்த தேரினையுடைய சூரியனும், நீரினால் கடம் செய்வான் என்ன கடலில் மூழ்கினன்-(தசரதனுக்கு) நீர்க்கடன் செய்வானைப்போலக் கடலில் வமுழ்கினன்.

இதனாற் சூரிய னத்தமனங்கூறினர். நாகவணை தொகுத்தல்விகாரம். தடஞ்செய் உரிச்சொற்றொடராதலால் வருமொழிக்கு இனவெழுத்து மிகுந்தது "இடையுரி வடசொலின்" என்ற சூ—நூல். கச

அன்றுதீர்ந்தபின்வரசவேலையுந்
துன்றுசெஞ்சடைந்தவருஞ்சுற்றமும்
தன்றுணைத்திருத்தம்பிமார்களும்
சென்றுசூழவாண்டிருந்தசெம்மருன்.

(இ-ள்.) அன்று தீர்ந்தபின்-அந்நாள் கழிந்தபின், அரசவேலையும் துன்று செம் சடை தவரும் சுற்றமும்-அரசர்கூட்டமும் நெருங்கிய செவந்த சடையையுடைய தபோதனர்களும் சுற்றத்தாரும், தன் துணை திரு தம்பிமார்களும் சென்று சூழ-தமக்குத் துணையாகிய அழகிய தம்பிமார்களும் வந்து சூழ, ஆண்டு இருந்த செம்மல் தான்-அவ்விடத்திருந்த இராமமூர்த்தி. கரு

வரதன் றுஞ்சினன் வையம் ஆணையால்
சரதம் நின்னதே மகுடந் தாங்கலாய்
விரதவேடம் நீயென்கொல் வேண்டுவான்
பரதகூறெனுப் பரிந்து கூறினன்.

(இ-ள்.) வரதன் துஞ்சினன் - ஈகையையுடைய நமது பிதா இறந்தனன், வையம் ஆணையால் சரதம் நின்னது எ-நிலவுலகு அவனது ஆணையால உண்மையாக நின்னுடையதே, மகுடம் தாங்கலாய் - முடி சூடாது, நீ விரத வேடம் வேண்டுவான் என்-நீ தவவேடத்தை விரும்பியது யாது, பரத கூறு என்று பரிந்து கூறினன்-பரதனே சொல்லாயென்று அன்புகூர்ந்து வினவினர்.

நின்னது பொருளடியாகப் பிறந்த ஒன்றன்பாற்படர்க்கைக் குறிப்புவினைமுற்று. நீ என்னுஞ் சொல் திரிந்து நின்ற நின் பகுதி. அ சாரியை, னகரத்தோற்றம் சந்தி, து சாரியை. பரிந்து இறந்தகாலவினையெச்சம் பரி பகுதி. கசு

என்றலும் பதைத்தெழுந்து கைதொழா
நின்றுதோன்றலைநெடிதுநோக்கிநீ
அன்றியாவரேயறந்துளோரதர்
பின்றுவாய்கொலாமென்னப்பேசுவான்.

(இ-ள்.) என்றலும்-என்று இராமமூர்த்தி வினவ, பதைத்து எழுந்து தோன்றலை கைதொழா நின்று நெடிது நோக்கி-மனம்பதைத்தெழுந்து இராமமூர்த்தியைக் கைகூப்பி வணங்கிநின்று கூர்ந்து பார்த்து, நீ அன்றி அறத்து உள்ளார் யாவர்-உன்னையன்றித் தருமநெறியில் நிற்பவர் யார், அதர் பின்று வாய் கொல் ஆம் என்ன பேசுவான்-அந் நெறியினின்று பின்னிடுவாயோவென்று பேசத் தொடங்காநின்றான்.

கொல் ஐயப்பொருளில்வந்த இடைச்சொல். ஆம் கட்டுரைச் சுவைப்பொருள் படநின்ற இடைச்சொல். பின்று வாய் முன்னிலையொருமை யெதிர்காலவினைமுற்று. பின்று பகுதி. வகரமெய் இடைநிலை, ஆய் விகுதி. கஎ

மனக்கொன்றுதனவாந்நினின்னையும்
தினக்கொன்றுநிலைதிறவிநேமியான்
தனைக்கொன்றுடரூர்தனைபனுதலால்
எனக்கொன்றுதவபடுப்பதெண்ணினல்.

(இ-ள்.) மனத்துக்கு ஒன்று தன வரத்து இல்-பெரியோர் மனத்துக்குப் பொருந்தாத வரத்தினால், நின்னையும் நினக்கு ஒன்றாத நிலை நிறுவி - உன்னையும் உனக்குத் தகாத நிலையில் நிறுத்தி, நேமியான் தன்னை கொன்றாள் தரும் தனையன் ஆதலால்-ஆக்கினைசக்கரத்தையுடைய தசரதனையுங்கொன்ற கைகேசிபெற்ற புத்திரனாதலால், எண்ணினால்-ஆலோசிக்கில், தவம் அடுப்பது எனக்கு ஒன்று ஆ-தவநெறியி லடுத்தலு மெனக் கொன்று.

நிறுவி இறந்தகாலவினையெச்சம் நிறுவு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்ச விகுதி. மனக்கு அந்துச்சாரியையும், நேமியான் தனை யென்பத னிறுதியிலெ ண்ணும்மையுந் தொகுத்தல். கூ அ

நோவதாகவிவ்வுலகைநோய்செய்த
பாவகாரியிற்பிறந்தபாவியேன்
சாவதோர்கிலேன்றவஞ்செய்வேனலேன்
யாவனாகியிப்பழிநின்றேறுவேன்.

(இ-ள்.) நோவது ஆக இ உலகை நோய் செய்த பாவகாரியில் பிறந்த பாவியேன்-வருந்த இவ் வுலகை வருத்திய பாவியிடத்திற் பிறந்த பாவியேனாதலால், சாவது ஓர்கிலேன் தவம் செய்வேன் அல்லேன்-சாவதறியேன் தவஞ்செய்யப் போகேன், யாவன் ஆகி இ பழி நின்று ஏறுவேன்-எத்தன்மையனாகி யிப் பழிக்கடலினின்று கரையேறப்போகின்றேன்.

என்பொருட்டு உன்னைக் காட்டிற்கனுப்பித் தன் கணவனைக் கொன்றதற்கு நான் காரணனாய் நிற்றலின் நேர்ந்த பழியைப் போக்குதற்குச் சாகவேண்டும் அல்லது அரசு துறந்து தவஞ்செய்யவேண்டும் இவ்விரண்டும் இல்லாதவனாய் நா னிருத்தலால் யாவனாகி யிப் பழியின் றேறுவேன் என்றான். கூகூ

நிறையினீங்கியமகளிர்நீர்மையும்
பொறையினீங்கியதவமும்பொங்கருட்
டுறையினீங்கியவறமுந்தொல்லையோர்
முறையினீங்கியவரசின்முந்துமோ.

(இ-ள்.) நிறையின் நீங்கிய மகளிர் நீர்மையும் - (தமக்குரிய) கற்பினின்று நீங்கிய பெண்களின் குணமும், பொறையின் நீங்கிய தவமும் - (பிறர் செய்யும் அவமதிப்பை பொறுக்கும்) பொறுமையினின்று நீங்கிய தவமும், பொங்கு அருள் துறையின் நீங்கிய அறமும்-(உயிர்களிடத்து) மிக்க கருணையின் வழியினின்று நீங்கிய தருமமும், தொல்லையோர் முறையின் நீங்கிய அரசின் முந்தும் ஓ-பண்டுள்ள சக்கரவர்த்திகள் கொண்ட உரிமையின் முறையினின்று நீங்கிய அரசியலின் கொடுமையினு முற்பட்ட கொடுமை யுடையனவோ.

கற்பில்லாத பெண்கள் குணமும், பொறுமையில்லாத தவமும், ஜீவகருணையில்லாத தவமும் உயிர்களுக்குப் பயன்படாது தீமைவிளைக்கும். அதனினும்

உரிமையின் முறைதப்பிய அரசியல் மிகவுங் கொடியது என்பான் அரசின் மூந்துமோ என்றான். உரிமையாவது 'மூத்தவற்குரித் தரசெனு முறைமையின்" என்பது. ௧00

பிறந்துநீயுடைப்பிரிவிறொல்பதம்
துறந்துமாதவந்தொடங்குவாயென்றால்
மறந்துநீதியிற்றிறம்பிவாளிற்கோன்
றறந்தின்றாலெனவரசதாள்வெனோ.

(இ-ள்.) பிறந்து-அரசகுலத்திற் பிறந்து, நீ உடைய பிரிவு இல் தொல்பதம் துறந்து-நீ பெற்றுடைய நீங்காத தொன்றுள்ள அரசியலைக் கைவிட்டு, மாதவம் தொடங்குவாய் என்றால் - பெரிய தவஞ்செய்யத் தொடங்குவாயானால், மறந்து நீதியில் திறம்பி வாளின் அறம் கொன்று தின்றால் என்ன - எனது தன்மையை மறந்து நீதியினின்று மாறுபட்டு வாளினால் தருமத்தைக் கொன்று தின்றாற் போல, அரசு ஆள் வென் ஒ-அரசியல் செய்வேனோ.

நீ யுடைப்பதம் மூன்று சொல் இரண்டு சந்தியாக்கி முன்னது எழுவாய்த் தொடரும், பின்னது குறிப்புவினையெச்சத் தொடருமாகக் கொள்க. அரசது அது பகுதிப்பொருள் விகுதி. ௧0௧

தொகையிலன்பினுலிறைவன்றுஞ்சநீ
புகையும்வெஞ்சுரம்புகுதப்புந்தியால்
வகையில்வஞ்சனுயரசுவவ்வயான்
பகைவனேகொலாவிறவுபார்க்கின்றேன்.

(இ-ள்.) தொகை இல் அன்பினால் இறைவன் துஞ்ச - எண்ணிலடங்காத அன்பு உன்னிடத் துடைமையால் தசரத னிறக்கவும், நீ புகையும் வெம் சுரம் புகுத - நீ புகைந்தெரியுங் கொடிய பாலைநிலத்திற் புகவும், புந்தியால் வகையில் வஞ்சன் ஆய்-மனத்தால் வகுத்தற்கரிய வஞ்சனையை யுடையவனாய், அரசு வவ்வ யான் பகைவன் ஏ-உன் னரசியலைக் கவர்ந்துகொள்ள நான் பகைவனா, இறவு பார்க்கின்றேன் கொல்-நீ நாட்டினின்று கடத்தலைப் பார்க்கின்றேனா(கூறாய்.)

இவ்வாறு கொள்ளுதல் பகைவர்செய லாதலால் பகைவனே, இறவு பார்க்கின்றேன் கொல் என்றான். செய்யுளாதலால் பின் வரற்குரிய வினாப்பொருளில் வந்த கொல்லென்னு மிடைச்சொல் முதலில் வந்தது. இறவு தொழிற்பெயர். இற பகுதி, உ விகுதி, வகரமெய் சந்தி. தொகை, வகை தொழிற்பெயர்கள் தொகு, வகு பகுதிகள். ௧0௨

உந்தைதீமையுமுலகுறாதநோய்
தந்ததீவினைத்தாய்செய்தீமையும்
எந்தைநீங்கமீண்டரசுசெய்கெனர்
சிந்தையாவதுந்தெரியக்கூறினான்.

(இ-ள்.) எந்தை-என் தந்தாய், உந்தை தீமையும்-உன் தந்தையாகிய தசரதன் கொடுத்த வரத்தின் தீங்கும், உலகு உறாத நோய் தந்த தீவினை தாய் செய் தீமையும்-இவ்வுலகிற்கு அமையாத துன்பந் தந்த தீவினையின் வடிவாகிய வென் தாய் தந்த தீங்கும், நீங்க மீண்டு அரசு செய்கெனா - நீங்கும்படி நீ வந் தரசியல் செய்யக்கடவீரென்று, சிந்தையாவதும் தெரிய கூறினன் - தன் கருத்து முழுமையும் விளங்கும்படி பரதனெடுத்துக் கூறினன்.

உன் தந்தை, என் தந்தை என்பவற்றின் மரூஉ. தை முறைப்பொருள் விகுதிபாகக்கொண்டு உமது தந்தை, எமது தந்தையெனக் கொள்ளலுமொன்று. செய்க என்றும் வியங்கோளீறு தொகுத்தல். ௧0௩

சொற்றவாசகத்துணிவுணர்ந்தபின்
இற்றதோவிவன்மனமென்றெண்ணுவான்
வெற்றிவீரயான்விளம்பக்கேளென
முற்றநோக்கினன்மொழிதன்மேயினன்.

(இ-ள்.) சொற்ற வாசகம் துணிவு உணர்ந்தபின் - கூறிய வார்த்தையின் றுணிவை யறிந்தபின், இவன் மனம் இற்றது ஓ என்று எண்ணுவான் - இவன் மனக்கருத்து இத்தன்மைத்தோவென் றெண்ணு மிராமமூர்த்தி, வெற்றி வீர-வெற்றியையுடைய வீரனே, யான் விளம்ப கேள் என - நான் சொல்லக் கேளாயென்று, முற்ற நோக்கினன் மொழிதல் மேயினன் - முடிவுபெறக் கருதிச் சொல்லத் தொடங்கினன்.

நோக்கினன் முற்றெச்சம். இற்று என்னும் சுட்டிடைச் சொல்லடியாகப் பிறந்த குறிப்புவினைமுற்று அதுவாறைக்கும் ஓர் பகுதியாய் நின்று அதுவென்னும் பகுதிப்பொருள் விகுதி யேற்றதெனக்கொள்க. இ சுட்டிடைச்சொற் பகுதி, றகரமெய் சந்தி, று ஒன்றன்பால் விகுதி. சொற்ற இறந்தகாலப்பெயரொச்சம் சொல் பகுதி. ௧0௪

முறையும்வாய்மையுமுயலுநீதியும்
அறையுமேன்மையோடறனுமாதியாம்
துறையும்யாவையுஞ்சுருதிநூல்விடா
இறைவரேவலாலியையவகாண்டியால்.

(இ-ள்.) முறையும் வாய்மையும் முயலும் நீதியும் - நல்லொழுக்கமு முண்மையு முயன்றடையும் நீதியும், அறையும் மேன்மையோடு அறனும் ஆதி ஆம் துறையும் யாவை உம்-சொல்லு மேன்மையோடு, தருமமும் முதலிய மார்க்கங்களு மற்றையெல்லா நன்மைகளும், சுருதி நூல் விடாத இறைவர் ஏவலால் இயைவ- வேதவொழுக்கத்தைக் கைக்கொண்ட அரசர்களது ஏவலா லுயிர்களுக்கு வருதலை, காண்டி-காண்பாய்.

தெளிவுபற்றி எதிர்காலத்தைக் காண்டி யென இறந்தகாலத்தாற் கூறியது காலவழுவமைதி. இளையவ வினைமுற்றுப்பெயரினின்று பிரிந்த தொழிற்பெயர் இரண்டனுருபேற்றது இறைவர் என அரசர்மேல் வைத்துக் கூறினும் அது தசரதனைத் தழுவி நிற்றலால் தொடர்நிலைச் செய்யுட் பொருட்பேறணி. இளை வகாணையா எனவும் பாடம். க0ரு

பரவுகேள்வியும்பழுதின்ஞானமும்
விரவுசீலமும்வினையின்மேன்மையும்
உரவிலோய்தொழற்குரியதேவரும்
குரவரேயெனப்பெரிதுகோடியால்.

(இ-ள்.) உரம் வில்லோய் - வலிய வில்லையுடையோய், பரவு கேள்வியும் பழுது இல் ஞானமும்-பரந்த நூற்கேள்வியுங் குற்றமில்லாத ஞானமும், விரவு சீலம் உம்-கலந்த நல்லொழுக்கமும், வினையின் மேன்மையும்-மேம்பட்ட தொழிலும், தொழற்கு உரிய தேவரும் - வணங்குதற்குரிய தேவர்களும், குரவர் ஏ என பெரிது கோடி-தமக்கு மூத்தோரேயென்று மிகவுங் கொள்வாய்.

கொள் பகுதி, மூதனீளல் விகாரம், தகரத்திரிபும், ளகரமும் உகரமுங்கெ தேலும் சந்தி, இ விகுதி. இதுவும் அவ்வணி. க0சு

அந்தநற்பெருங்குரவராரெனச்
சிந்தைதேர்வுறத்தெரியநோக்கினல்
தந்தைதாயரென்றிவர்கடாமலால்
எந்தைகூறவேறெவருமில்லையால்.

(இ-ள்.) எந்தை அந்த நல் பெருங் குரவர் ஆர் என்ன-பரதனே அந்த நல்ல பெரிய மூத்தோர் யாரென்று, சிந்தை தேர்வுற தெரிய நோக்கினல் - மனந் தெளியத் தெரிய ஆராயின், தந்தை தாயர் என்ற இவர்கள் தாம் அல்லாமல் - தந்தையுந் தாயுமென்று சொல்லபபட்ட இவர்களன்றி, கூற வேறு எவரும் இல்லை-சொல்ல வே றெவரு மில்லை.

தந்தை தாயர் உயர்திணையில் வந்த வும்மைத்தொகையாதலால் பலர்பா லீறுபெற்றுவந்தது "உயர்திணை யும்மைத்தொகை பலரீறே" என்ற சூ—ஆல்.()

தாய்வரங்கொளத்தந்தையேவலால்
மேயநங்குலத்தருமமேவினேன்
நீவரங்கொளத்தவிர்தனீர்மையோ.
ஆய்வரும்புலத்தறிவுமேவினய்.

(இ-ள்,) ஆய் வரும்-புலத்து அறிவு மேவினய்-ஆராயும் நூற்புலத்தில் நுண்ணறிவு பொருந்திய பரதனே, தாய் வரம் கொள தந்தை ஏவலால்-தாய் கே

ட்ட வரம் பெற நமது பிதாவின் ஏவலால், மேய நம் குலம் தருமம் மேவினேன்- பொருந்திய நமது குலதருமத்தைக் கொண்டேன், நீ வ்ரம் கொள தவிர்தல் நீர் மை ஒ-நீ நிலவுலகை யாளுகையை யவர்களாற் கொள்ள அதினின்று நீங்குதல் நற்குணமா (கூறாய்)

புலம் அறிவு. அது தனக்குக் காரணமாகிய நூல்மேல் நிற்றலால் கருவி யாகுபெயர். மேய இறந்தகாலப்பெயரெச்சம். மே பகுதி, யகரமெய் இடைநிலை அ விகுதி. கoஅ

தனையராயினார்தந்தைதாயரை
வினையினல்லதோரிசையைவேய்தலோ
நினையலோவிடாநெடியவன்பழி
புனைதலோவய்யபுதல்வராதலே.

(இ-ள்.) அய்ய-பரதனே, தனையர் ஆயினார் - புத்திரரானவர்கள், தந்தை தாயரை-தந்தை தாயர்க்கு, வினை இல் நல்லது ஓர் இசையை வேய்தல் ஓ - தீவி னையினின்று நீங்கிய நல்ல ஒப்பில்லாத புகழ்மாலையைச் சூட்டுதற்கோ, நினை யல் ஓ விடாத நெடிய வன்பழி புனைதல் ஓ - நினைத்தலினின்று நீங்காத மிக்க வலிய பழிச்சொல் மாலையைச் சூட்டுதற்கோ, புதல்வராதல் - பிள்ளையாய்ப் பிறத்தல்.

தனையராயினார் ஒரு பொருள்மேல் நின்றது. வேய்தல், புனைதல் முதனி லை திரியாது வந்த பிறவினைத் தொழிற்பெயர்கள். கoக

இம்மைபொய்யுரைத்திவறியெந்தையார்
அம்மைவெம்மைசேர்நரகமாளயான்
கொம்மைவெம்முலைக்குவையின்வைகிவாழ்
செம்மைசேர்நிலத்தரசுசெய்வெனோ.

(இ-ள்.) இம்மை எந்தையார் இவறி பொய் உரைத்து - இப்பிறப்பில் என் பிதாவானவர் உலோபஞ்செய்து பொய்கூறி, அம்மை வெம்மை சேர் நரகம் ஆள-மறுபிறப்பில் கொடுமைமிக்க நரகத்தை யாள, யான்-நான், கொம்மை வெ ம்முலை குவையின் வைகி வாழ் - திரண்ட விருப்பந் தரும் பெண்கள் தனமாகிய உயர்ந்த விடத்திலிருந்து வாழ்ந்து, செம்மை சேர் நிலத்து அரசு செய்வென் ஓ - பொன்னிற மமைந்த நிலவுலகில் அரசியல் செய்வேனோ (செய்யேன் என்றபடி)

நிலவுலகிற்குப் பொன்னிறமுடைமையால் செம்மைசேர் நிலம் என்றார். இம்மை, அம்மை அடையடுத்த இருமடியாகுபெயர். மை கருமை அது பண் பாகுபெயராய் ஆணவமலத்தின்மேலும், அது கருவியாகுபெயராய்ப் பிறப்பின் மேலும் நிற்றலால் இவறி இறந்தகாலவினையெச்சம். இவறு பகுதி, உகரக்கேடு சந்தி, இ எச்சவிகுதி. கசo

வரனிலுந்தைசொன்மரபினுலுடைத்
தரணிநின்னதென்றியைந்ததன்மையால்
உரனினீபிறந்துரிமையாதலால்
அரசுநின்னதேயாள்கவென்னவே.

(இ-ள்.) வரன் நில் உந்தை சொல் மரபின் ஆல்-தான் கொடுத்த வரத்திற் றப்பாது நின்ற உனது பிதா கூறிய முறையாலும், உடை தரணி நின்னது என்று இயைந்த தன்மையால்-அதனுல் கடலையாடையாகவுடைய நிலவுலகு உன்னுடையதென்று பொருந்திய தன்மையாலும், நீ பிறந்து உரன் நில் உரிமை ஆதலால் - நீ பிறத்தலால் உறுதியில் நின்ற அரசிய லுரிமை யுனக்கானது (ஆதலால்) அரசு நின்னது ஏ ஆள்க என்ன - அரசியல் உன்னுடையதே யாளக்கடவாயென்று இராமமூர்த்தி கூற

உன் பிதா கொடுத்த வரத்தால் உலகு உன்னுடையதாயிற்று, அதனுல் அரசுரிமை யுனக்காயிற்று, அதனுல் அரசியல் நின்னதே ஆளக்கடவாய் என்றுர். பிறந்த என்னும் இறந்தகாலப்பெயரெச்சத்தின் அகரவீறு தொகுத்தல். இது பின் வருவனவற்றிற்கு முன் வருவன காரணமாய் நிற்றலால் காரணமாலையணி.

முன்னர்வந்துதித்துலகமூன்றினும்
நின்னையொப்பிலாநீபிறந்தபார்
என்னதாகில்யானின்றுதந்தனென்
மன்னபோந்துநீமகுடஞ்சூடென்று.

இ-ள்.) முன்னர் வந்து உதித்து-நீ முன்பு வந்து பிறந்து, உலகம் மூன்றினும் நின்னை ஒப்பு இல்லாத நீ பிறந்த பார் என்னது ஆகில்-மூன் றுலகத்தினும் தனக்கு ஒப்பில்லாத நீ பிறந்த நிலவுலகு என்னுடையதானுல், யான் இன்று தந்தனென்-நா னின்று கொடுத்தேன், மன்ன நீ போந்து மகுடம் சூடு என்று-அரசனே நீ வந்து முடிசூடாயென்று.

முன் வந்து பிறந்தமையே நிலவுலகுரிமைக் கேதுவாதலால் நீ பிறந்த பார் என்றுன். ககஉ

மலங்கிவையகம்வருந்தவைகல்நீ
உலங்கொடோளுனக்குறுவசெய்தியோ
கலங்குறுவணங்காத்திபோந்தெனப்
பொலங்குலாவுதாள்பூண்டுவேண்டினுன்.

(இ-ள்.) வையகம் மலங்கி வருந்த - நிலவுலகம் வாடி வருந்த, உலம் கொள் தோள் நீ வைகல் உனக்கு உறுவ செய்தி ஒ-திரண்ட கல்லையொத்த தோளை யுடையாய் நீ பதினுன்குவருடமும் உனக்கு அமைந்த தவத்தையா செய்வாய், கலங்குறுத வண்ணம் போந்து காத்தி என்று-உலகு கலங்காதவண்ணம் வந்து

காப்பாயென்று, பொலம் குலாவுதாள் பூண்டு வேண்டினன்-பொன்போல விள ங்கும் திருவடியைப் பரதன் பற்றிக் குறையிரந்தான்.

மலங்கி இறந்தகாலவினையெச்சம். மலங்கு பகுதி. ககரு

பசைந்தசிந்தைநீபரிவின்வையமென்
வசஞ்செய்தாலதுமுறைமையோவசைக்
கசைந்தவெந்தைபாரருளவன்றுநான்
இசைந்தவாண்டெலாமின்றேடேறுமோ.

(இ-ள்.) பசைந்த சிந்தை நீ-ஈரமமைந்த மனத்தையுடைய நீ, பரிவின்-அ ன்போடு, வையம் என் வசம் செய்தால் அது முறைமை ஒ-உனக்குரிய நிலவுல கை யென்வசஞ் செய்தா லது முறைமையா, வசைக்கு அசைந்த எந்தையார் அ ருள - பழி வருதற்கு வருந்திய எனது பிதாவானவர் கருணைசெய்ய, அன்று நான் இசைந்த ஆண்டு எல்லாம் இன்று ஒடு ஏறும் ஒ - அக்காலையில் நா னுடம் பட்ட பதினான்குவருடங்களு மின்றேடு தீருமா (தீரா என்றபடி.) ககசு

வாய்மையென்றுமீதன்றிவையகம்
தூய்மையென்றுமொன்றுண்மைசொல்லுமோ
தீமைதானதிற்றீர்தலன்றியே
ஆய்மெய்யாகவேறறையலாவதே.

(இ-ள்) வையகம் வாய்மை என்றும்-(தந்தை யருளியதைவிட்டு உன் சொ ல்வழி நிற்கில் அதனை) நிலவுலகு உண்மையென்றும், ஈது அன்றி - இதுவல்லா மல், தூய்மை என்றும்-நல்லொழுக்கென்றும், ஒன்று உண்மை சொல்லும் ஒ-ஒ ருண்மையாகக் கூறுமா, தீமைதான்-தீங்குதான் எடுத்துக்கூறும், அதில் தீர்தல் அன்றி-(ஆதலால் அத் தந்தை யருளிய) அந்நிலையினின்று ஆண்டுகள் கழிதலே யல்லாமல், ஆய் மெய் ஆக-ஆராயு முண்மையாக, வேறு அறையல் ஆவது ஏ- வேறு கூறுதல் கூடுமா.

நான் பதினான்குவருடமும் வனத்திலிருந்து வருவேனேயன்றி வேறு கூ றேன் என்பது கருத்து. ஏகாரம் எதிர்மறை. ககரு

எந்தையேவவாண்டேழொடேழனு
வந்தகாலநான்வனத்துள்வைகநீ
தந்தபாரகந்தன்னைமெய்ம்மையால்
அந்தநாளெலாமாளென்னாணையால்.

(இ-ள்.) ஆண்டு ஏழு ஏழு எனு எந்தை ஏவ-வருடம் பதினான்கென்று என் பிதா ஏவ, வந்த காலம் நான் வனத்து உள் வைக-அளவுபட்ட அக்காலங்காறும் காட்டில் நான் வசிக்க, தந்த பாரகம் தன்னை-உன் தந்தையாகிய அவன் தந்த நில வுலகை, மெய்ம்மை ஆல் என் ஆணையால் நீ ஆள் - உண்மையாக எனது ஆணை யால் நீ யாளாய். ககசு

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மன்னவனிருக்கவேயுமணியணிமகுடஞ்சூடு
கென்னயானியைந்ததன்னுனேயதுமறுக்கவஞ்சி
அன்னதுநினைந்துநீயென்னுணையைமறுக்கலாமோ
சொன்னதுசெய்தியையதுயருழந்தயரலென்றான்.

(இ-ள்.) ஐய-பரதனே, மன்னன் இருக்க உம்-அரச னிருக்கவும், மணி அணி மகுடம் சூடுக என்ன - இரத்தினமழுத்திய கிரீடத்தைச் சூடக்கடவாயென்று கூற, யான் இயைந்தது-யானுடன்பட்டது, அன்னான் ஏயது மறுக்க அஞ்சியே-அவனேவியதை மறத்தற்கஞ்சியே, அன்னது நினைந்தும்-அதனை நீ நினைந்திருந்தும், நீ என் ஆணையை மறுக்கலாம் ஒ-நீ யெனது ஆஞையை மறுக்கக்கூடுமோ, சொன்னது செய்தி - நான் சொன்ன காரியத்தைச் செய், துயர் உழந்து அயரல் என்றான்-துன்பத்தில்வருந்திச் சோராதேயென்று இராமமூர்த்திகூறினர்

இருக்கவேயும் ஏகாரம் அசைநிலை. அஞ்சி என்பத னிறுதியில் தேற்றேகாரந் தொகுத்தல். அயரல் முன்னிலையொருமை யெதிர்மறையேவல் வினைமுற்று அயர் பகுதி, அல் எதிர்மறை முன்னிலையொருமை யேவல் விகுதி. வியங்கோளாகக் கொண்டால் சோருத லொழிகவெனப் பொருள்கொண்டு எதிர்மறை வியங்கோள் வினைமுற்றாகக் கொள்க. சூடுக வியங்கோளீறு தொகுத்தல். ககஎ

ஒள்ளியோனினையவெல்லாமுணர்த்தலுமுரைக்கலுற்ற
பள்ளநீர்வெள்ளமன்னபரதனைவிலக்கிப்பண்டு
தெள்ளியோர்குலத்துச்செய்கைசிக்கறச்சிந்தைநோக்கி
வள்ளியோய்கேட்டியென்றுவசிட்டமாமுனிவன்சொன்னான்.

(இ-ள்.) ஒள்ளியோன் இனைய எல்லாம் உணர்த்தலும் - புகழ்விளக்கமுடைய இராமமூர்த்தி இத்தன்மையை யுடையன வெல்லாவற்றையு மெடுத்துக் கூற, உரைக்கலுற்ற பள்ளம் நீர் வெள்ளம் அன்ன பரதனை - மேட்டினின்று பள்ளத்தில் வந்து வீழும் வெள்ளம்போலக் கீழ்மேலாய்த் தமோறும் பரதாழ்வானை விலக்கி, பண்டு தெள்ளியோர் குலத்து செய்கை சிக்கு அற சிந்தை நோக்கி-முன்னுள்ள மநுச்சக்கரவர்த்தி முதலியோரது சூரியகுலத்திலுள்ள செய்கையை யையமறச் சிந்தைசெய்வாய், வள்ளியோய் கேட்டி என்று வசிட்டமாமுனிவன் சொன்னான்-வரையாது கொடுக்குந் தன்மையை யுடைய இராமமூர்த்தியே யதனைக் கேட்பாயென்று வசிட்டமுனிவர் கூறுகின்றார்.

மேட்டினின்று பள்ளத்தில் வீழும் வெள்ளம் கீழ்மேலாதல்போல் அவனிலைதுன்பத்தாற் கீழ்மேலாய் நிற்றலிற் பள்ளநீர் வெள்ள மன்ன பரதன் என்றார். இது தொழில்பற்றிவந்த வுவமையணி. நோக்கி முன்னிலையொருமை யெதிர்காலவினைமுற்று நோக்கு பகுதி, உகரக்கேடு சந்தி, இ விகுதி. ககஅ

**கலி விருத்தம்.**

கிளரகன்புனலுணின்றரியொர்கேழலாய்
இளையெனுந்திருவினையேந்தினனரோ
உளைவரும்பெருமையோரெயிற்றினுட்புரை
வளரிளம்பிறையிடைமறுவிற்றோன்றவே.

(இ-ள்.) உளைவரும் பெருமை ஓர் எயிற்றின் புரை உள்-கெடுதலில்லாத பெருமையமைந்த வொரு வக்கிரதந்தத்திலுள்ள ஒரு புரையில், வளர் இளம்பிறை இடை மறு இல் தோன்ற-வளராநின்ற இளம்பிறையிலுள்ள மறுவைப்போலத் தோன்ற, அரிகிளர் அகன்புனல் உள் நின்று-திருமால் விளங்கு மிடமகன்ற நீருணின்றெடுத்து, ஓர் கேழல் ஆய் இளை என்னும் திருவினை ஏந்தினன் - ஒரு வராகமாய் இளையென்னும் பூப்பிராட்டியை யேந்தி நின்றனன்.

பிறை பிறத்தலென்னுந் தொழில் ஆகுபெயராய்ச் சந்திரன் மேல்நின்றது. இரணியாட்சனால் பாதலத்தி லுலகமுழுதுஞ் சப்பிரமஞ்சியினின்ற திருமால் சுவேத வராகமாய் மேலெழுந்த நீரினின்றெடுத்து ஒர் வக்கிரதந்தத்தி லேந்தினர் என்பது புராணவரலாறு. இதுமுதல் நிதவியல் என்பதுகாறும் ஒருதொடர். ககக

ஆதியஅமைதியினிறுதியைம்பெரும்
பூதமும்வெளியொழித்தெவையும்புக்கபின்
நாதனவ்வகன்புனனல்கிநண்ணருஞ்
சோதியாந்தன்மையிற்றுயிறன்மேயினான்.

(இ-ள்.) ஆதிய அமைதியின் - தோற்றத்திலுள்ள அமைதியைப்போல, இறுதி ஐம்பெரும்பூதமும் வெளி ஒழித்து எவையும் புக்க பின்-முடிவில் பிருதுவிமுதலிய பெரிய பஞ்சபூதமும் ஆகாயத்தி லொடுங்கி யாவும் தன்னிடத் தடங்கினபின், நாதன் - இறைவனாகிய திருமால், அ அகன் புனல் நல்கி நண்ணரும் சோதி ஆம் தன்மையின் துயிறன் மேயினன் - அந்த இடமகன்ற கடலினைப் படைத்து அடைதற்கரிய பிரகாசமாகிய தன்மையோடு யோகநித்திரை கூர்ந் தருளினார்.

தோற்றத்தில் ஆகாயத்தினின்று ஒன்றினொன்று தோன்றுதல்போலப் பிருதுவி முதலிய பூதங்கள் ஒன்றினொன் றொடுங்கிப் பிரகிருதியி லொடுங்க அதுவுந் தன்னிடத்தி லொடுங்குதலால் ஆதிய மைதியின் எவையும் புக்கபின் எனவும், அப்போது பிரளயந் தந்து அந்த ஆலிலையிற் றுயில்கூருதலால் துயிறன் மேயினன் எனவுங் கூறினர். கஉ0

ஏற்றவித்தன்மையினமரர்க்கின்னமு
தூற்றுடைக்கடலவணனுந்தியுந்திய
நூற்றிதழ்க்கமலத்தினெய்தின்யாவையுந்
தோற்றுவித்துதவிடமுதல்வன்றோன்றினான்.

(இ-ள்.) ஏற்ற இ தன்மையின்-யோகநித்திரை பொருந்திய இச் சமையத்தில், அமரர்க்கு இன் அமுது ஊற்று உடைய கடல் வண்ணன் உந்தி உந்திய நூற்றிதழ் கமலத்தின் - தேவர்களுக்கு இனிய அமுது சுரக்கும் கடல்போன்ற நிறத்தையுடைய இறைவனது திருவுந்தி மலர்ந்த நூற்றிதழையுடைய தாமரையில், நொய்தின் யாவையும் தோற்றுவித்து உதவிட முதல்வன் தோன்றினன்-விரைந்து எல்லாப் பொருள்களையும் படைக்கப் பிரமன் உதித்தனன். ()

அன்றவனுலகினையளிக்கவாகிய
துன்றனிக்குலமுதலுள்ளவேந்தர்கள்
இன்றளவிறுமுறையிகந்துளாரிலை
ஒன்றுளதுரையினமுணரக்கேட்டியால்.

(இ-ள்) அன்று அவன் உலகினை அளிக்க - அக்காலையிலப் பிரமனுலகினைச் சிருட்டிக்க, உன் தனி குலம் ஆகியது - உனது ஒப்பில்லாத குலந் தோன்றியது, முதல் உள்ள வேந்தர்கள் இன்று அளவிறும் முறை இகந்துளார் இல்லை-அக் குலத்து அடியாகத் தோன்றிய மநு முதலிய சக்கரவர்த்திகள் இன்றளவுக்காறு மநுநீதியினின்றும் நீங்கினவரில்லை, உரை இன்னம் ஒன்று உள்ளது உணர கேட்டி - நான் கூறும் வார்த்தை யின்னமொன்றுள்ளது நீ தெரியக் கேட்பாய். க௨௨.

இதமியல்பற்றியகுரவர்யாரினும்
மதவியல்களிற்றினாய்மறுவில்விஞ்ஞைகள்
பதவியவிருமையும்பயக்கப்பண்பினால்
உதவியவொருவனேயுயருமென்பரால்.

(இ-ள்.) மத இயல் களிற்றினாய் - மதமைந்த யானைச்சேனையையுடைய இராமமூர்த்தியே, இத இயல் பற்றிய குரவர் யாரினும்-தமக்கு நன்மையைத் தந்த அரசன்முதலிய ஐந்து குரவரினும், மறு இல் விஞ்ஞைகள்-குற்றமற்ற கல்விகளை, பதவிய இருமையும் பயக்க-உயிர்களுக்குப் பதவியாயுள்ள இம்மைப்பயனும் மறுமைப்பயனும் உண்டாக, பண்பினால் உதவிய ஒருவனே உயரும் என்பர்-முகமலர்ச்சியோடு கற்பித்த உபாத்தியாயனே யுயர்ந்தவனென் அறிவுடையோர் கூறுவார்.

பதவிய குறிப்புவினைப்பெயரெச்சம். பதவி பகுதி, யகரமெய் சந்தி, அ விகுதி, பயக்க காரியப்பொருள்மேல் நிற்றலால் எதிர்காலவினையெச்சம். பய பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, அ எச்சவிகுதி. ஆல் உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது. ஐம்பெருங்குரவராவார். அரசன், உபாத்தியாயன், தந்தை, தேசிகன், மூத்தோன். க௨௩

என்றலால்யானுனையெடுத்துவிஞ்ஞைகள்
ஒன்றலாதனபலவுதவிற்றுண்மையால்

அன்றெனாதின்றெனதாணையையநீ
நன்றுபோந்தளியுனக்குரியநாடென்றான்.

(இ-ள்.) என்றலால் - என்று உயர்ந்தோர் கூறுதலால், யான் உன்னை எடுத்து விஞ்சைகள் ஒன்று அல்லாதன பல உதவிற்று உண்மை - நானுன்னை யறியாமையினின் றெடுத்துப் பலநூல்களைக் கற்பித்தது உண்மை, ஐய எனது ஆணை இன்று அன்று என்னாது-(ஆதலால்) ஐயனே யிப்போது எனதாணையை மறுக்காது, நீ நன்று போந்து உனக்கு உரிய நாடு அளி என்றான் - நீ மிகவுங் கருணைகூர்ந்து வனத்தினின்றும் வந்து உனக்குரிய நாட்டினைப் பாதுகாவாயென்று வசிட்டமுனிவர் கூறினார்.

நன்று போந்து உரிச்சொற்றொடராதலால் வருமொழிமுதல் வல்லெழுத் தியல்பாயிற்று "வன்றொடரல்லனமுன் மிகாவல்வழி" என்ற சூ—ஆல். நன்று உரிச்சொல் "நன்று பெரிதாகும்" தொல்காப்பியம் உரிச்சொற் சூ-ஆல் உணர்க.

கூறியமுனிவனைக்குவிந்ததாமரை
சீறியகைகளாற்றொழுதுசெங்கணான்
ஆறியசிந்தையாயறிஞவொன்றுரை
கூறுவதுளதெனக்கூறன்மேயினான்.

(இ-ள்.) கூறிய முனிவனை செங்கண்ணான் குவிந்த தாமரை சீறிய கைகளால் தொழுது - இங்ஙனங் கூறிய வசிட்டமுனிவனைத் தாமரைபோற் சிவந்த கண்களையுடைய இராமமூர்த்தி குவிந்த தாமரைமலரை வென்ற கைகளால் வணங்கி, ஆறிய சிந்தையாய் அறிஞ - கோபத்தினின்று நீங்கிய இதயத்தையுடைய அறிஞனே, உரை கூறுவது ஒன்று உளது என்ன கூறல் மேயினான் - சொல்லுவதொன்றுண்டென்று சொல்லத்தொடங்கினான். ௧௨௫

சான்றவராகதன்குரவராகதாய்ப்
போன்றவராகமெய்ப்புதல்வராகதான்
தேன்றருமலருளான்சிறுவசெய்வனென்
றேன்றபின்னவ்வுரைமறுக்குமீட்டதோ.

(இ-ள்.) தேன் தரும் மலர் உள்ளான் சிறுவ - தேன் சிந்துந் தாமரையலரில் வசிக்கும் பிரமன் புத்திரனாகிய முனிவனே, சான்றவர் ஆக - பெரியோரானாலு மாகுக, தன் குரவர் ஆக - தனது ஐம்பெருங் குரவராயினு மாகுக, தாய் போன்றவர் ஆக - தாய்போலத் தலையளிசெய்வோராயினு மாகுக, மெய் புதல்வர் ஆக - உண்மைவாய்ந்த புத்திரராயினு மாகுக, தான் செய்வென் என்று ஏன்றபின் அவ்வுரை மறுக்கும் ஈட்டது ஓ - தான் ஒன்றைச் செய்வேனென்று கூறி ஒருவன் மேற்கொண்டபின்பு அந்த வார்த்தை மறுக்குந் தன்மையதோ (அல்ல என்றபடி)

என்ற இறந்தகாலப்பெயரெச்சம் ஏல் பகுதி, லகரம் னகரமாகத்தி தி, றகரமெய் இறந்தகாலவிடைநிலை, அ எச்சவிகுதி. என்றால் எனப் கொண்டால் பின் எதிர்காலவினையெச்ச விகுதியாகக்கொள்க.

தாய்பணித்துவந்தனதந்தைசெய்கென
ஏயவெப்பொருள்களுமிறைஞ்சிமேற்கொளாத்
தீயபுலையனிற்செய்கைதேர்கிலா
நாயெனத்திரிவதுநல்லதல்லதோ.

(இ-ள்.) தாய பணித்து உவந்தன-தாயின்னது செய்யென்று கூம்பினவும், தந்தை செய்க என ஏய-பிதா இன்னது செய்யக்கடவாயெனவும், எப்பொருள்களும் இறைஞ்சி மேற்கொளாத தீய அ புலையன வகைப்பட்ட செயல்களாயினும் வணங்கி மேற்கொள்ளாத கொதப் பாதகனைப்போல, செய்கை தேர்கிலாத நாய் என்ன திரிவது நல்லது ஓ-இன்ன செய்கையென்று சிறிது முணராத நாயைப்போலத் திரிவது நல்ல பிறபல்லதா.

தொழிலும் பொருளுள் அடங்குதலால் பொருளெனவும், நல்ல தீய செயலுமடங்க எப்பொருள்களும் என்றார். நல்லது ஒன்றன்பாற்பட குறிப்பு வினைமுற்றாதலால் அவ் வீறுதோன்ற அல்லது என்றார். இல் ழிவு குறித்தற்கு வந்த எல்லைப்பொருட்டு.

முன்னுறப்பணித்தவர்மொழியையானெனச்
சென்னியிற்கொண்டதுசெய்வெனென்றதின்
பின்னுறப்பணித்தனைபெருமையோயெனக்
கென்னினிச்செய்வதையுரைசெய்கென்றான்.

(இ-ள்.) பெருமையோய் - பெருமையையுடைய முனிவரே, மு பணித்தவர் மொழியை - முன்னே பொருந்த ஏவிய குரவரது சொல் ... சென்னியில் கொண்டு அது செய்வென என்றதன்பின்-உயர்ப ... அதனைச் செய்வேனென்றதற்குப் பின், உற பணித்தனை-... எ..., எனக்கு இனி செய்வது என்-என்னு வினிச் செய்வது யா உரை செய் என்றான்-இவ்விடத்துக் கூறுமென்று இராமமூர்த்தி வின

முனிவனுமுரைப்பதோர்முறைமைகண்டிலெம்
இனியெனவிருந்தனனினையமைந்தனும்
..., னையதேவள்பவாள்கநாடுநான்
பணிபடர்காடடன்படர்தன்மெய்யென்றான்.

(இ-ள்.) இனி முனிவனும் உரைப்பது ஓர் முறைமை கண்டிலெ இருந்தனன்-இனி வசிட்டமுனிவருங் கூறும் ஒரு முறையைக் காணே

யாளா விருந்தனர், இளைய மைந்தனும்-பரதாழ்வானும், அனையதேல் நாடு ஆ
ளுபவர் ஆள்க - அத்தன்மையதாயின் நாடாள்வா ராள்க, நான் பனி படர் காடு
உடன் படர்தல் மெய் என்றான்-நான் நடுக்க மிகுந்த காட்டில் நின்னுடன் செல்
லுதல் உண்மையென்று கூறினன். கஉக

அவ்வழியிமையவரறிந்துகூடினர்
இவ்வழியிராமனையிவன்கொண்டேகுமேல்
செய்வழித்தன்றுநஞ்செயலென்றெண்ணினர்
கவ்வையர்விசும்பிடைக்கழறன்மேயினர்.

(இ-ள்) அ வழி இமையவர் அறிந்து விசும்பு இடை கூடினர்-அவ்விடத்
தில் தேவர்களறிந்து ஆகாயத்திற் கூடி, இ வழி இராமனை இவன் கொண்டு
ஏகு மேல்-இவ்விடத்தி லிராமமூர்த்தியை இவன் கொண்டு போனால், நம் செ
யல் செவ்வழித்து அன்று என்று எண்ணினர்-நமது செயல் செம்மைப்படாதெ
ன்றெண்ணி, கவ்வையர்-ஆரவாரமுடையவராகி, கழறல் மேயினர்-உறுதிமொ
ழி சொல்லத்தொடங்கினர்.

கூடினர் எண்ணினர் முற்றெச்சங்கள். கவ்வையர் குறிப்புமுற்றெச்சம்.

எத்தரும்பெருங்குணத்திராமனிவ்வழி
போத்தருந்தாதைசொல்புரக்கும்பூட்சியான்
ஆத்தவாண்டேழிேனாடேழுமாங்கிலம்
காத்தலுன்கடனிவைகடமையென்றனர்.

(இ-ள்.) ஆத்த - உண்மையையுடைய பரதனே, எத்து அரும் - துதித்தற்
கரிய, பெருங் குணத்து இராமன்-பெரிய குணத்தையுடைய இராமமூர்த்தி, இ
வழி போந்து அருந்தாதை சொல் புரக்கும் பூட்சியான் - இவ் வனத்தின் வழி
வந்து பெறுதற்கரிய தந்தையின் சொல்லைப் பாதுகாக்கு முரிமையை யுடை
யார், ஆண்டு எழினோடு எழும்-(ஆதலால்) பதினான்கு வருடமும், அ நிலம் கா
த்தல் உன் கடன் இவை கடமை என்றனர் - அந்த நிலவுலகைக் காத்த லுனது
கடமை, இவைதா னுங்க ளிருவர்க்கு முரிய கடமை யென்று கூறினர்.

தந்தை சொல் வழி இராமமூர்த்தி பதினான்கு வருடம் வனத்தில் வசித்த
லும், அந்த வருடமுற்று முலகினைக் காத்த லுன் கடமையும் என்பார் இவை
கடமை என்றனர் என்றார். பூட்சி பூணுதல் அது உரிமை மேல்நின்றது. போ
த்து வலித்தல் விகாரம். ஓடு எண்ணிடைச்சொல் ஆதலால் எழும் எழும் என்ப
தே பொருள். கஉஉ

வானவருரைத்தலுமறுக்கற்பாலதன்
றியானுனையிரந்தனனினியென்னுனையால்
ஆனதோரமைதியினளித்திபாரெனாத்
தானவன்றுணைமலர்த்தடக்கைபற்றினன்.

